உ

சிவமயம்

# திருமந்திரம்

பாயிரம் முதல் மூன்று தந்திரங்கள்

(பஞ்சாக்ஷரதீப உரையுடன்)



திருவாவடுதுறை ஆதீனம்

1994

வெளியீடு எண் : 420.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருமூலர் திருமந்திரம்

## பாயிரம் முதல் மூன்று தந்திரங்கள்

பஞ்சாக்ஷரதீபம் என்னும் உரையுடன்



இது
திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்து மூன்றாவது குரு மகாசந்நிதானம்
சீர் வளர் சீர் சிவப்பிரகாச பண்டாரச்சந்நிதி அவர்கள்
கட்டளையிட்டருளியபடி
வெளியிடப்பெற்றது,



திருவாவடுதுறை ஆதீனம்
1994

உ

சிவமயம்

திருமந்திரம் அநுபவ ஞானத் திருநூல். திருஞானசம்பந்தசுவாமிகளின் திருவுள்ளத்தையும் கவர்ந்த பெருநூல். நம் செந்தமிழ் சிறக்க எழுந்த ஒரு நூல். மூவாயிரம் பாடல் கொண்டு மக்களை நல்வழிப்படுத்துகின்ற யோக நூல். தமிழ் மக்கள் அனைவருமே உணர்ந்து ஒழுக உயர்வளிக்கும் ஒரு தனி நூல். இந்த நூலை நன்கு ஓதி உணர்ந்து தெளிதல் நம் அனைவரின் கடமை ஆகும் என்பதனைத் திருவுள்ளம் பற்றிய சீர் வளர் சீர் குரு மகாசந்நிதானம் அவர்களின் அருளாணையின்வண்ணம், சீமுக - ஆண்டு மகரத் தலைநாள் குருபூசை வெளியீடாக இந்நூல் பாயிரம் முதல் மூன்று தந்திர உரையுடன் ஸ்ரீ நமசிவாயமூர்த்திகளின் திருவருளால் வெளிவருகின்றது.

# உள்ளுறை







உ

சிவமயம்

# குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

— தவத்திரு மாதவச் சிவஞான யோகிகள்.



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனக்
குருமுதல்வர்

**அருள்திரு நமசிவாய மூர்த்திகள்**

**சிவானந்தப் பேறு: தை – அசுவதி**

# அதிகார அட்டவணை

[ எண் - பக்க எண் ]

## பாயிரம்



## முதல் தந்திரம்

## இரண்டாம் தந்திரம்



## மூன்றாம் தந்திரம்

உ

சிவமயம்

# பதிப்புரை

சைவத் திருமுறைகளுள் பத்தாந் திருமுறையாகப் போற்றப்பெறுவது திருமந்திரம். திருவாவடுதுறைத் திருக்கோயிலில் படரரசின்கீழ் மூவாயிரம் ஆண்டுகள் சிவயோகத்தில் அமர்ந்திருந்த பேரருளாளராகிய திருமூலதேவ நாயனாரால் ஆண்டுக்கு ஒரு திருப்பாடலாக அருளிச் செய்யப்பெற்ற மூவாயிரம் திருப்பாடல்களையுடையது இத்தமிழ் முதல்நூல். என்றுமுள்ள அழியா உண்மை நெறியைக் கூறும் பெருநூல். உலகை உய்விக்கத் தோன்றிய ஞானக் கருவூலம். மக்கள் அனைவருமே ஓதி உணர்ந்து ஒழுகிப் பயன்பெற வேண்டிய ஒருநூல்.

இத்தகு சிறப்பமைந்த திருமந்திர நூலையும் பொருளையும் யாவரும் அறிந்து உயர்நலம் பெறவேண்டும் என இவ்வாதீனத்துக் குரு மகாசந்நிதானங்கள் திருவுளங் கொண்டு இந்நூலைப் பலவழிகளில் பல்லாண்டுகளாகப் பரவச் செய்து வருதலை உலகு நன்கறியும். நூல் முழுவதற்கும் ஆதீனத்துப் "பஞ்சாக்கர தீப உரை" என்னும் விளக்க உரைநூல் இருபதிப்புகள் பெற்று வெளிவந்துள்ளன. அவற்றுள் பாயிரம் முதல் மூன்று தந்திரங்கள் ஆண்டுக்கு ஒரு பகுதியாக 1957 முதல் 1960 வரை முதற்பதிப்பாகவும், பாயிரப்பகுதி 1937 லும், முதல் மூன்று தந்திரங்கள் 1989 லும் இரண்டாம் பதிப்பாகவும் ஆதீன வெளியீடுகளாக அமைந்தன. இப்பகுதிக்கான இரண்டாம் பதிப்பு நூல்கள் முற்றிலும் செலவாகி விட்டமையால் அன்பர்கள் பலரின் நீண்டகாலத் தேவையை நிறைவுசெய்ய இயலாதபடி இருந்தது.

தெய்வத் திருவருள் நிலையமாகத் திகழும் இந்த ஆதீனத்து ஞானபீடத்தில் இருபத்து மூன்ருவது குரு மகா சந்நிதானமாக எழுந்தருளிச் செந்தமிழ்ச் சிவநெறி புரந் தருளும் **சீர்வளர்சீர் சிவப்பிரகாச பண்டாரச் சந்நிதி** அவர்கள் இந்நிலைமையினைத் திருவுளம் கொண்டு பாயிரம் முதல்மூன்று தந்திரப் பகுதிகளை மறுபதிப்பு செய்யு மாறு அருள்கூர்ந்து திருஆணை தந்தருளினுர்கள்.

சீர் வளர் சீர் குரு மகாசந்நிதானம் அவர்கள் அருளாணையின் வண்ணம் திருவள்ளுவர் ஆண்டு 2024 சீமுக ஆண்டு ஆதீனக் குருமுதல்வர் அருள்திரு நமசிவாய மூர்த்திகள் மகரத்தலைநாள் குருபூசை விழாமலராக ஆதீன மகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் வரைந்தருளிய பஞ்சாட்சர தீப உரைநூல் மூன்ரும் பதிப்பு பெற்று வெளியிடப் பெறுகின்றது. அன்பர்கள் இந்நூலினைப் பெற்றுக் குருவருளும் திருவருளும் எய்திச் சிவஞானத்திற் சிறந்து மேன்மைபெற வேண்டுகிறேன்.

ஒன்றுக்கும் பற்ருத அடியேனையும் ஆதீனப் பணிகளில் ஆட்கொண்டு நெறிப்படுத்தி ஆசி யருளும் சீர் வளர் சீர் குரு மகாசந்நிதானம் அவர்கள் பொற்பாத கமலங்களை என்றும் போற்றி வழிபடும் கடப்பாடு உடையேனுதலைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

எளியேனது அறியாமையால் இப்பதிப்பில் நேர்ந்து விட்ட பிழைகளைப் பொறுத்தருள அறிஞருலகை அன்புடன் வேண்டுகிறேன்.

"மெய்கண்ட தேவன் திருமரபு நீடு தழைக" 

**சரசுவதிமகால் நூல்நிலையம்**
**திருவாவடுதுறை ஆதீனம்**
**திருவாவடுதுறை**

**இங்ஙனம்**
புலவர் **பா. மகாலிங்கம்**
**ஆதீன நூலகர்**

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருமூலர் வரலாறு



குடிமன்னு சாத்தனூர்க் கோக்குல
மேய்ப்போன் குரம்பைபுக்கு
முடிமன்னு கூனற் பிறையாளன்
தன்னை முழுத்தமிழின்
படிமன்னு வேதத்தின் சொற்படி
யேபர விட்டென் உச்சி
அடிமன்ன வைத்தபி ரான்மூல
னாகின்ற அங்கணனே.

— நம்பியாண்டார்நம்பிகள்.

தமிழ் நாட்டின் பெருமைகளையும் சிறப்பினையும் அறியத் திருக்கயிலாய மலையில் இருந்த எண்வகைச் சித்தியும் பெற்ற முனிவர் ஒருவர் அகத்திய முனிவரைக் காண பொதியமலையை நோக்கிப் புறப்பட்டார். அம் முனிவரர் நந்தியெம்பெருமானின் நல்லருள் பெற்றவர். அவ்வாறு வருபவர் வழியிடையுள்ள திருக்கேதாரம், பசுபதிநாதம், நேபாளம். காசி, காளத்தி, காஞ்சி முதலாய தலங்களில் உள்ள இறைவனை வணங்கி வரலானார். வருங்கால் காஞ்சியில் யோகியர் சிலரைக் கண்டு உரையாடினார். பின்னர் தில்லையில் திருநடங் கண்டு சிலகாலம் அங்குத் தங்கிக் காவிரியைக் கடந்து

திருவாவடுதுறையை அடைந்து இறைவனைத் தொழுதார். தொழுது மீள எண்ணியவர் மீட்டும் காவிரிக் கரையை அடையலானார், அங்கு ஆநிரைகள் கூட்டமாகக் கூடி அழுது நிற்றலைக் கண்டார்,

சாத்தனூர், அந்தணர்கள் நிறைந்த ஊர். அவ்வூரில் ஆயர் குலத்தில் தோன்றிய மூலன் என்பான் அவ்வூர்ப் பசுக்களை மேய்த்துவந்தான். வழக்கம் போல் பசுக்களை மேய்க்கும்போது அவன் வாழ்நாள் முடிவெய்த நிலத்திடை விழுந்து இறந்தான். மூலனால் மேய்க்கப்பட்ட பசுக்கள் அவன் பிரிவுக்கு ஆற்றாது அவனைச் சுற்றிச்சுற்றிக் கதறி அழுதன. பசுக்களின் அழுகையைச் சிவயோகியார் கண்டார். திருவருளாலே அப்பசிக்களின் துயரை நீக்கத் துணிந்தார். உடன் தம்முடைய உடம்புக்குத் தக்க பாது காப்பினைச் செய்தார்.

சித்தராதலின் தன்பால் உள்ள கூடுவிட்டுக் கூடு பாயும் சித்தியால் மூலன் உடலில் தமது உயிரைப் புகுத்தினார். புகுத்தியபின் திருமூலராய் எழுந்தார். பசுக்கள் எல்லாம் நாத்தழும்ப அவரை நக்கிமோந்தன. அணைந்தன, கனைத்தன, உடன் துள்ளி எழுந்து களிப்பு மிகுதியால் மேயத் தொடங்கின. மாலைப் பொழுது வந்தவுடன் வழக்கம்போல் தத்தம் கன்றுகளை எண்ணிச் சாத்த னூருக்குத் திரும்பித் தத்தம் வீடுகளை அடைந்தன. திருமூலர் எவ்வீட்டிலும் நுழையாமல் வெளியே தனித்து நிற்கலானார்

மூலன் மனைவி அவர் அவ்வாறு நிற்பதைக்கண்டாள், திருமூலரைத் தனது கணவரென்றே எண்ணித் தொட்டு அழைக்க நெருங்கி வந்தாள். ஆனால் மூலரோ அதற்கு

இசையவில்லை, "இங்கு உனக்கு என்னுடன் அணைவு ஒன்றில்லை" யென எதிர்மறுத்து அங்குள்ள ஒருபொது மடத்தையடைந்து சிவயோகத் தமர்ந்தார்.

மூலன் மனைவியோ அன்றிரவைத் தூங்காது துயருடன் கழித்தாள். பொழுது புலர்ந்ததும் நல்லார்பால் சென்று முறையிட்டாள். அவர்கள் அனைவரும் வந்து மூலர் நிட்டையில் இருப்பதைக் கண்டார்கள். கண்டவர்கள் "பித்துற்ற மயலன்று; பிறிதொரு சார்புளதன்று; சித்த விகற்பம் களைந்து தெளிந்த சிவயோகமே" அவர் இருக்கும் நிலையென்பதை யறிந்தார்கள். "பெண்ணே! இனி அவர் இல்வாழ்க்கைக்கு ஏற்றவரொகார்" என்பதை அவளுக்கு எடுத்துக்கூறிச் சென்றார்கள். அவளது ஆற்றொணுத் துயரைக் கண்டசிலர் அவளை அப்பால் அழைத்துச் சென்றார்கள்.

ஊரவர் சென்றபின்னர் திருமூலர் நிட்டை விட்டெழுந்தார். பசுக்கள் வந்தவழியே சென்றார். தாம் அரண்செய்து வைத்ததாகிய தமது உடலைக் காணுது திகைத்தார். மெய்ஞ்ஞானத்தால் சிந்தித்தார். இறைவனால் அருளிச்செய்யப்பட்ட ஆகமப் பொருள்களை மண்ணின் மிசைத் தமது வாக்கினுல் தமிழ் வகுப்பவே இறைவன் திருவுளங்கொண்டு தமது உடலைக் கரப்பித்தார் என்று தெளிந்தார். மூலனுடைய சுற்றத்தார் மீண்டும் தொடர்ந்தார்கள். அவர்கட்குத் தமது தொடர்பின்மையை மனங்கொள எடுத்துவிளக்கினுர். பின் திருவாவடு துறையை அடைந்தார்.

திருவாவடுதுறையை அடைந்தவர் மாசிலாமணி ஈசரை வணங்கி மேற்குப்புறமாகச்சென்று படரரசைக் கண்டார். அதன்கீழ் அமர்ந்து சிவயோகமிருந்தார்.

மூவாயிரம் ஆண்டு அங்கு யோகமிருந்து "ஒன்றவன் தானே" எனத் தொடங்கி ஆண்டுக்கொரு பாடலாக மூவாயிரம் திருமந்திரம் அருளினர். முடிவில் திருக் கயிலையை அடைந்து ஒருகாலும் பிரியாமைத் தாளடைந்தார்.

*ஊனுடம்பிற் பிறவிவிடந்*
*தீர்ந்துலகத் தோருய்ய*
*ஞானமுதல் நான்குமலர்*
*நல்திருமந் திரமாலை*
*பான்மைமுறை ஓராண்டுக்*
*கொன்றாகப் பரம்பொருளாம்*
*ஏனஎயி றணிந்தாரை !*
*ஒன்றவன்றா னெனஎடுத்து.*
*முன்னியஅப் பொருண்மாலைத்*
*தமிழ்மூவா யிரஞ்சாத்தி*
*மன்னிய மூவாயிரத்தாண்*
*டிப்புவிமேல் மகிழ்ந்திருந்து*
*சென்னிமதி யணிந்தார்தம்*
*திருவருளால் திருக்கயிலை*
*தன்னிலணைந் தொருகாலும்*
*பிரியாமைத் தாளடைந்தார்.*

இவ்வரலாறு சேக்கிழார்பெருமான் திருவாக்கால் திருத்தொண்டர் புராணத்துள் கூறப்பட்டுள்ளதாகும். இவ்வரலாற்றுக்கு ஆதரவான குறிப்புகளும் இவ் வரலாற்றிற் காணப்பெறாத செய்திகளைத் தெரிவிக்கும் குறிப்புகளும் திருமந்திரத்தில் காணப்படுகின்றன.

திராவிட மாபாடிய ஆசிரியர் ஸ்ரீ சிவஞானமுனிவர் காலத்திருந்த சாத்திரம் சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகளாற் பாடப்பெற்றதும் திருவாவடுதுறை ஆதீனத்து 12-வது மகாசந்நிதானம் ஸ்ரீ திருச்சிற்றம்பல தேசிக சுவாமிகள் காலத்து அரங்கேறியதும். இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட செய்யுட்களையுடையதும் ஆகிய திருவாவடுதுறைப் புராணத்தில் "திருமூலரைத் தடுத்தாட் கொண்ட சருக்கம்" ஒன்றுளது, அதில் சில மாறுபாடுகளோடு பெரிய புராண வரலாற்றை ஒட்டியே திருமூலர் வரலாறும் கூறப்படுகின்றது.

திருவாவடுதுறைப் புராணத்துள், மூலன் உடலின்புக வேண்டுமென்ற பவவிலை திருமூலருக்குண்மையின் அவர் அவ்வாறு புக நேர்ந்ததென்றும், திருமூலர் அரண்செய்து வைத்த தமது சொந்த உடலைப் போதியின்கீழ் மறையப் பொதிந்து இறைவனே வைத்ததாகவும் கூறப்பட்டுள்ளது.

மேலும் திருமந்திரம் வெளிப்பட்ட தன்மையினையும் அப்புராணம் பின் வருமாறு விளக்குகிறது.

*நெறியா லுணர்ந்து களித்துலக*
*முழுதுமுணர நிரப்பினர்கள்*
*பிறியாச் சிவபோகம் புசிக்கு*
*மூலரின்றும் பிரானடியிற்*
*செறிவா மியோகுற் றிருந்தனர்நீ*
*டூழிபலவும் சென்றனவால்.*

திருமூலர் தம்மை நந்தியருள் பெற்ற மாணவரில் ஒருவர் என்று குறிப்பிடுகிறார். நந்தியருள் பெற்ற மாணவர் எண்மர் எனக்குறிப்பிடுகிறார். அவராவார்.

*நந்தி அருள்பெற்ற நாதரை நாடிடில்*
*நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி*
*மன்று தொழுத பதஞ்சலி வியாக்கிரமர்*
*என்றிவர் என்னோடு எண்மரு மாமே.*

என்பது,

திருமூலர் காலத்தைப்பற்றி ஆராய்ச்சியாளர்கள் பல வேறுபட்ட கருத்துடையவர்களா யுள்ளனர். கி. பி. மூன்றும் நூற்றாண்டுக்குப் பின்னும், கி. பி. ஏழாம் நூற்றாண்டுக்கு முன்னும் திருமூலர்காலமாக அமைதல் கூடுமென அறிஞர்கள் கருதுகின்றனர்.

திருமந்திரம் ஸ்ரீ மந்திரமாலிகா என்ற வடமொழி நூலின்மொழிபெயர்ப் பென்று சிலர் கூறுவர். ஸ்ரீமந்திர மாலிகா என்ற நூல் ஒன்று இருப்பதாகத் தெரியவில்லை. ஆதலின் திருமூலர் கூற்றுப்படி வடமொழி ஆகமப் பொருளை மனத்தில் நன்கு அறிந்து தமிழ் மொழியில் கூறிய முதல் நூலேயாம் எனக். மொழி பெயர்ப்பு என்பார் கூற்றுச் சிறிதும் பொருந்துவதும் அன்று.

திருமந்திரம் மூவாயிரம் பாடற்றொகை என்றே திருமூலர் குறிப்பிடுகிறார். அதிகாரப் பகுப்பு அனைத்தும் பின்வந்த திருமூலரது சீடர்களே செய்திருக்க வேண்டும். சில பாடல்கள் இருமுறை மும்முறை வந்திருப்பதைக் கொண்டு அவ்வாறு முடிவு செய்ய வேண்டி உளது. மேலும் திருமூலர் மூவாயிரந் தமிழ் முந்நூறு மந்திரம் முப்பது உபதேசம் என்று சுட்டு வதையும் நோக்கினோமானால் மூவாயிரம் மந்திரம் என்றே உறுதி செய்ய வேண்டியுளது.

இந்நூல் முழுவதும் சைவசித்தாந்தச் செம் பொருள் களையும். சிறந்த யோகப்பயிற்சியின் நுட்பங்களையுமே விளங்குவதாக அமைந்துள்ளது எனலாம்.

திருமந்திரப் பெருமையை விளக்கும் பழம்பாடல்: -

தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும் - கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருமந்திரக் கருத்து



## பாயிரம்



### விநாயகர் காப்பு

ஐந்து திருக்கரங்கள், யானைமுகம், ஒற்றைக் கொம்பு ஆகிய இவைகளை உடையவரும், சிவபிரான் மூத்த குமாரரும், ஞானத்தின் சிகரமாக விளங்குபவரும் ஆகிய விநாயகப்பெருமானுடைய இரண்டு திருவடிகளையும் மனத்தில் வைத்து வணங்குகின்றேன்.

**கடவுள் வாழ்த்து ;**

ஒன்று : இறைவன் ஒருவனே ; இரண்டு ; இறைவனும் அவனது இன்னருளாகிய சத்தியும் : மூன்று ; அயன் அரி அரன் என்னும் இம்மூவருள்ளும் நிற்கும் நிலை ; நான்கு ; உலகாதீதன், உலககாரணன், உலகிற்கு அந்தர்யாமி (உயிராய் நிற்றல்), உலகரூபி ; ஐந்து : ஐம்பொறிகளை வென்றவன் ; ஆறு : ஆறு ஆதாரங்களாகவும் அவ்வாதாரங்கட்குரிய தேவதைகளாகவும் ஆறு அத்துவாக்களாகவும் விரிந்தவன் ; ஏழு: ஏழாவதான துவாதசாந்தத்தில் இருப்பவன் ; எட்டு : அட்ட மூர்த்தியாக உணரப்பெற்று அவற்றுள்ளே கலந்திருப்பவன் இறைவன்.

அடியார்களின் மனதில் குடிகொள்பவன் ; திசைகளுக்கும் உமாதேவிக்கும் தலைவன் ; இயமனை உதைத்தவன் ; ஆன்மாக்களுடன் கலந்திருப்பவன் ; திருவருள் இல்லாதவரால் அறியப்படாதவன் ; பரந்த உலகில் நிறைந்துள்ள மெய்ப்பொருளானவன் ; அண்டங்களுக்கெல்லாம் வித்தாக இருப்பவன் : நம்மையெல்லாம் மோட்சத்தில் செல்லவிடுபவன் ; எல்லா உலகிற்கும் அப்பாற்பட்டவன் ; அன்பர்களின் இருதய கமலத்தில் குடிகொண்டவன் ; சிவனுக்குச் சமமான தெய்வம் எங்கும் இல்லை ; அவனுக்கு ஒப்பாவாரும் இல்லை ; சிவனையல்லாமல் வேறு எந்தத் தேவரும் இல்லை ; அவனருள் இல்லாமல் எந்தத் தவமும், அயன், அரி, அரன் ஆகிய மூவரால் செய்யப்படும் செயல்களும் இல்லை ; பேரின்ப வீடாகிய மோட்ச நகருள் செல்வதற்கும் அவனருள் வேண்டும்.

மூவருக்கும் மூத்தவன் ; அப்பா ! என்று அழைப்பவர்களுக்கு மாத்திரம் தந்தையாக அவர்களது மனதில் நிலைபெற்றவன் : நெருப்பைக்காட்டிலும் வெப்பம் உடையவன் : தண்ணீரைவிடக் குளிர்ச்சியானவன் ; குழந்தையைவிட நல்லவன் ; அன்புடையாருக்குச் சமீபமாக உள்ளவன் ; தாயினும் இனியவன் ; அவன் பெயர் நந்தி என்பதாம்.

இறைவன் யாவராலும் தொழப்படுபவன் ; அவன் யாரையும் தொழமாட்டான். உலகைத் தாங்கி ஆகாய வடிவமாகவும், அக்கினி, சூரியன், சந்திரன் என்னும் முச்சுடர்களாகவும், மழையைப் பெய்விக்கும் திருவருட் சத்தியாகவும், மலையாகவும், கடலாகவும் இருப்பவன்.

எவ்விடத்தில் தரிசிக்கப்போனாலும் சிவனையன்றி வேறு தலைமைத்தெய்வம் இல்லை ; நமது முயற்சியும் முயற்சியின் பயனும், மழையும், மேகமும், சிவனே யாவன், எப்படிப்பட்டவர்களும் இறைவனை மனத்தால் நினைப்பதில்லை ; ஆனால், அவனே ஆன்மாக்களுடன் கலந்து அருள்செய்கின்றான். அயன் அரி அரன் இம் மூவரையும் கடந்துநிற்கும் இறைவன், பற்றற்ற ஞானி களுக்கு மாத்திரம் வெளிப்பட்டு நிற்கின்றான். தோற்ற மும் ஒடுக்கமும் செய்தருள்பவன் அப்பரமனே ஆவன் ; அவன் சோதிமயமானவன்.

ஆன்மாக்களுக்கு இறைவனோடு உறவுகொள்ளு தலைக் காட்டிலும் சிறந்ததொரு இன்பம் இல்லை. சுடு காட்டையே தனது இருப்பிடமாகக்கொண்ட இறைவன், குபேரனை அளகாபுரிக்கும் நிதிக்கும் தலைவனாக்கியதைக் கண்டு திருமாலும் தனக்கு நிதித்தலைமை வேண்டும் என வேண்ட, அவ்விறைவனும் திருமாலை இலக்குமி நாயகனாக ஆக்கினான். மேலும் பரமசிவன் சந்திரனுக்கு வாழ்வளித்து அவனைத் தன் தலையில் சூடினான்.

பலருடைய பிறவிகளை ஒழிக்கின்றவன் ; தாருகவன ரிஷிகளின் வேள்வியில் தோன்றிய காட்டு யானையைக் கொன்றவன் ; தன்னைத் தோத்தரிப்பவர்களுடன் இரண் டறக்கலந்து நிற்பவன் ; தீக்கடவுளை கடல்நீர் பொங்கி மேலே வராமலிருக்கும்படி, அந்தக் கடலின் நடுவில் நிறுத்திவைத்தவன் ; அறநெறி உடையவன் ; பிறப்பு, இறப்பு இல்லாதவன் ; அஞ்ஞானத்தை நீக்குபவன் ; அழிவில்லாதவன் ; வழிபடுவோரது அறிவினுள் கலந் திருப்பவன் ; கயிலாயத்தில் இருப்பவன் ; தன்னை வணங்குகின்றவர்கட்கு வழித்துணையாக இருப்பவன் ;

ஞானரூபியாய் உள்ளவன் ; தேவாதிதேவன் ; எங்கும் வியாபித்தும் எல்லாவற்றையும் கடந்தும் நிற்பவன் ; ஆயிரம் திருநாமங்களை உடையவன்.

தனக்குத்தானே சமானமானவன் ; ஆன்மாவுக்குள்ளிருந்து பிராணனை இயங்குகின்றவன் ; புண்ணிய மூர்த்தி ; விஷத்தையுண்டவன் ; உலகம் நடைபெறுவதற்கும் நாம் அடையும் இன்பத்திற்கும் அவனது ஆணையே காரணம் ; மெய்யடியார்களால் வணங்கித் துதிக்கப்படுபவன் ; அருட்பெருஞ்சோதி ; பசு பாச ஞானங்களைக் கடந்து பதிஞானத்தை அறிகின்றவர்களுக்கு திருவடிப் பேறாகிய இன்பத்தை அளிப்பவன்.

இப்படிப்பட்ட தன்மைவாய்ந்த இறைவனது திருவடி மலரைத் தலையில் சூடிக்கொண்டும் மனதில் தியானித்தும் – அருச்சித்தும் வணங்குவேன் ; பாடி ஆடுவேன் ; இதுவே நான் (திருமூலர்) அறிந்து பணி செய்வதாகும்.

**வேதச் சிறப்பு :**

அறங்களைகூறும் வேதநூல்களைத் தர்க்கவாதம் செய்யாமல் அறிஞர்கள் ஓதியே முத்தியடைந்தார்கள். மக்கள் ஒழுக்கநெறியில் நிற்கவும், வேதியர்கள் யாகங்களைச் செய்யவும், அனைவரும் உண்மைப்பொருளை அறியவும் இறைவன் வேதத்தை அருளிச்செய்தான். வேதத்தை ஓதுகின்றவன் வேதியனாக மாட்டான். வேதத்திற்குச் சிவபெருமானே மூலகுரு ஆவர்.

அறிவிக்க அறியும் சித்தும், அறிவித்தாலும் அறிய முடியாத அசித்தும் ஆகிய இரண்டும் அல்லாத பேரறி

வுடைய சிவனை அறிவுறுத்துவது திருநெறி என்பதாகும். இது ஆசாரியனால் உணர்த்தப்படும் பெருநெறியாம். இதனையே சிவநெறியென்றும் கூறுவர். வேத முடியில் ஒன்றே என்று கூறுவதெல்லாம் திருநெறி - பெருநெறி குருநெறி என்ற மூன்றினையே ஆகும்.

மேற்சொன்ன மூன்று நெறிகளையும் ஒரேநெறியாக வேதமும் வேதமுடியும் எடுத்துக் கூறினாலும் வேதத்தைத் தெளிவாக அறிந்து ஓதுவதற்காக ஆறு அங்கங்கள் அமைந்தன. இவ்வங்கங்களை - வேதத்தின் பாகுபாடுகளை அறிவிக்கும் கருவிகளாகக் கொண்டு ஒருநெறி இன்னதெனத் தெளிந்து சிவநெறியில் யாரும் பழகாமல் பல பேதங்களைப்பெருகச் செய்துவிட்டார்கள்; இதனால் பயனில்லை. ஒரு நெறிகொண்டு ஒரு பொருள் கொண்டு ஒரேபயனை அடைதலே சிறந்ததாகும்.

வேதாங்கங்களான ஆறனுள் சந்தோபசிதம், நிருத்தம் என்னும் இரண்டிலும் ஆடல் பாடல்களைப்பற்றிக் கூறப்பட்டிருக்கின்றன. அப்படிக் கூறப்பட்டது மக்களுக்குத் தெய்வ உணர்ச்சியை உண்டுபண்ணுவதற்காகவேயாம். உருத்திர கணிகையரும் தங்கள் ஆடல் பாடல்களால் அந்நெறியை விளக்கினர். ஆக, பாமரர்களும் மெய்ந்நெறியை உணர்தற்காகவே பாடலும் ஆடலும் வேதத்தில் இடம்பெற்றுள்ளன. எல்லாக்கிளை நெறிகளும் வேதம் கூறும் ஒரேநெறிக்குத் தக்க கொள்கைகளைக் கொண்டன ஆகும்.

**ஆகமச் சிறப்பு :**

சிவபெருமான் இருபத்தெட்டு ஆகமங்களையும் தனது ஈசானமுகத்திலிருந்து அருளினன். அவற்றை

அறுபதகாறுபேர்கள் கேட்டார்கள். தேவர்கள், இவ் வாகமங்களின் துணைகொண்டே இறைவனுடைய பெருமையினைக் கூறினார்கள். ஆகமங்களின் பாடல் தொகை எழுபதுகோடியே நூறாயிரம் ஆகும். ஞான சொரூபியான இறைவன் ஆகம வடிவமாகவே விளங்கு கின்றவன், சிவபிரானிடமிருந்து சத்தியும், சத்தியிட மிருந்து சதாசிவமும், அவர்பால் உமாமகேசுரரும், அவரிடமிருந்து ஸ்ரீ கண்ட உருத்திரரும், அவர்பால் திருமாலும், திருமாலிடமிருந்து பிரமனும், அவர்பால் உருத்திரரும் உபதேசம்பெற்றனர். இவர்கள் முறையே அடைந்த காரணம் காமிகம், வீரம். சிந்தியம், வாதுளம், வியாமளம், காலோத்தரம், சுப்பிரம், மகுடம் என்னும் ஒன்பது ஆகமங்களையும் நந்திபெற்றார்.

ஆகமங்கள் அனைத்தும் சிவ உணர்வு பெற்றவர் களே அறிந்துகொள்ளமுடியும். ஏரிகளெல்லாம் நீர் வற்றியிருக்கும் சமயமான பனிக்காலத்தில் இறைவன், வடமொழி தென்மொழி என்னும் இருமொழிகளையும் உமையம்மைக்கு அறிவித்துக் கருணைசெய்தான். பதி பசு பாசம் என்னும் முப்பொருள்களை அவ்விருமொழியும் தெரிவிக்கும். இவற்றை நாம் உணர்ந்தால் இறைவனை உணரமுடியும்.

**குருபாரம் பரியம் :**

சனகாதி நால்வர். சிவயோகமுனி, தில்லையில் நடனம் கண்ட பதஞ்சலி, வியாக்கிரமர், திருமூலர் ஆகஎண்மரும் நந்திதேவரின் அருளைப்பெற்ற பரம் பரையினர் ஆவர். இறைவன் அருளாலே “ நாதன் ” என்ற பெயர் பெற்றோம் ; மூலனது உடலைக்கண்டு

அவ்வுடலுள் புகுந்து நிட்டைகூடியிருந்தேன் (என்று திருமூலர் கூறுகின்றார்).

மாலாங்கன், இந்திரன், சோமன். பிரமன், உருத்திரன், காலங்கன், கஞ்சமலையன் என்னும் எழுவரும் திருமூலநாதரது பின்வழி வந்தவர்கள். இவ்வெழுவருள் நால்வர் நான்கு திசைகளில் தங்கி அங்குள்ள மக்களுக்கு உபதேசம் செய்து தலைவரானார்கள். இவ்வெழுவருக்கும் இறைவன் மேலாம்வழியை உபதேசித்ததல்லாமல் சனகாதி நால்வருக்கும் பெருமறையிலும் நியமங்களைத் தவறாமல் செய்யும்படிக்கும் ஆணையிட்டான்.

## திருமூலர் வரலாறு :

குருநாதர், சிவபிரான் ஆகு இருவருடைய திருவடிகளைச் சிரசில் சூடியும் தியானித்தும் திருமந்திர நூலைச் சொல்லத்தொடங்குகிறேன் என்று திருமூலர் திருமந்திர நூலைத் தொடங்குகின்றார்; கோடியுகம் நான் சிவயோகத்தில் இருந்தேன்; புவனேச்வரியை மிக்க பயபக்தியுடன் வழிபட்டுவந்ததால் நான் கோடியுகம் இருந்தேன்: வேதாகமஞானம் என்க்கு உண்டாக அந்த உணவிலேயே யிருந்து உடலையும் மறந்தேன்; இதனால் அனுபவிப்பவனையும் அனுபவிக்கப்படும் பொருளையும் வேறாகக்கொள்ளும் விகற்ப நிலை கெட்டு ஏகனாகி (அவனே தானேயாகி) நின்றேன்; அதன்பின் எல்லாப்பொருள்களும் உணரப் பட்டன; நான் பூமிக்கு வந்தகாரணம் என்னவென்றால், எல்லா ஆகமங்களுக்கும் ஐந்தொழிற்கும் அடிப்படையாவதும் ஆதாரமாவது மானதிருக்கூத்தின் இயல்பைவிளக்கும் வேதத்தைத் தமிழ் வேதமாகச் சொல்லவே வந்தேன்.

மாசிலாமணிப் பெருமானும் ஒப்பிலாமுலையம்மையும் எழுந்தருளியிருக்கும் திருவாவடுதுறையில் சிவமயமான படர் அரசமரத்தின் நிழலிலே பெருமானது திருநாமங்களை உச்சரித்துக் கொண்டிருந்தேன், தமிழ் வேதத்தைச் செய்யும்பொருட்டே இறைவன் என்னைப் படைத் தருளினன். இறைவன் அருளிய வேதத்தில் விளங்கும் மந்திரம் ஸ்ரீ பஞ்சாக்கரமேயாகும். அம்மந்திரத்தையே பற்றுக்கோடாகக் கொண்டேன்; அதனுல் சிவம் வெளிப் பட்டது. நான் இன்பம்பெற்றேன். அவ்வின்பத்தை உலகத்தவர்களும் பெறுவார்களாக.

இறைவன் ஆணையே உலகத்தை நடத்துகிறது. அறியப்படும்போருள், அறிவு, அறிபவன், மாயைகள், பரை முதலிய சத்திகள், சிவம், பீஜங்கள் ஆகிய இவை களையெல்லாம் திருமந்திரத்துள் விளக்கினேன். இறைவன் ஆணையின் வண்ணம் திருக்கயிலை வழியே பரம்பரை யிலே வந்து மூலனுடைய உடலில் புகுந்து உண்மை ஞானம் அடைந்து பல்லாண்டுகள் இருந்தேன்.

**அவையடக்கம் :**

இறைவனுடைய பெருமையினையும் அகலம் நீளம் முதலிய பரந்த எல்லைகளையும் எவராலும் அளந்து அறியமுடியாது. அவன், இணையில்லாதவனும் பெருஞ் சோதியும் ஆவன். மால் அயன் இவர்களால் அறியமுடி யாதவனும் இன்னிசையாயுள்ளவனும் ஆகிய இறை வனை நான் எப்படிப் புகழ்ந்து கூறுவது !

**திருமந்திரத் தொகைச் சிறப்பு :**

திருமந்திரத்திலுள்ள மூவாயிரம் தமிழ் மந்திரங் களையும் மக்கள் காலையில் ஓதினல் இறைவனை

அடைந்து இன்பம் பெறலாம். திருமந்திரம் பொதுவும் சிறப்பும் என இரண்டு பிரிவுகளை உடையது ; முத்தி யாகிய முடிவைக் கூறுவது.

**குருமட வரலாறு :**

தோன்றிய ஏழு மடங்களுள் சிறந்து முன்னே முதலில் தோன்றியது திருமூலர் மடாலயமாகும். காலாங்கர், அகோரர், மாளிகைத்தேவர், நாதாந்தர், பரமானந்தர், போகதேவர், திருமூலர் என்ற எழுவரும் ஏழுமடத்தின் தலைவர்கள் ஆவார்கள்.

**மும்மூர்த்திகளின் முறைமை :**

இறைவன், இளமையையும் அழகையும் உடையவன் ; காலங்கடந்தவன். உருத்திரன், திருமால், அயன் இம்மூவரும் ஒருவரே என்று கருதாமல் தொழில் வகையில் அவர்களை வேறுபடுத்தி மக்கள் பிணங்குகின்றார்கள். அவனே தெய்வம், இவனே தெய்வம் என்பவர்கள் உண்மை ஞானம் இல்லாதவர்கள். உலகிற்கு வித்தாய் இருப்பவன் பரமசிவன். சிவபரம்பொருளே ஒன்றாகியும் பலவாகியும் விரிந்து ஐந்தொழிலையும் ஆற்றி அருள்செய்கின்றது.

அயனும் மாலும் இறைவனது அடியார்களே ஆவர். சிவனருள் ஒன்றினையே தேவர்களும் மக்களும் உணரவேண்டும். சிவம் ஒன்றே நம்மையெல்லாம் படைத்துக் காத்து அழிக்கின்றது ; ஆதலால் மூவரும் ஒன்றே எனக் கொள்ளல்வேண்டும்.



# முதல் தந்திரம்

**உபதேசம் :**

கடவுள் என் களிம்பை அறுத்தான். செம்பில் களிம்பு அநாதி; அதுபோல், உயிருக்கும் ஆணவம் அநாதி; அதைநீக்கி ஆட்கொள்ளத்தான் எனக்கு இறைவன் பிறப்பைக் கொடுத்தான்; ஞானக்கண்ணை விழிக்கச் செய்தான்; பளிங்கில் பவளம் வைத்தது போல் எனக்குள்ளே தன் ஒளியைக் காட்டினன்.

பதி, பசு, பாசம் மூன்றும் அநாதி. பதி கருணையினால் பசுவை அணுகினல், பாசம் பசுவை விட்டு அகலும். சிவன் ஒரு சூரியன், அவன் கருணை என்னும் கடலிலிருந்து மும்மலம் என்ற இருட்டை ஓட்டிக் கொண்டு எழுகிறன்.

பஞ்சும், சூரியகாந்தமும் அடுத்தடுத்து இருந்தாலும் சூரியகாந்தக் கண்ணாடி பஞ்சைச் சுடாது; சூரியனது கிரணங்கள் வேண்டும். உயிரும் மலமும் ஒன்று கூடி இருந்தாலும், உயிர் தானே மலத்தை ஒழித்துவிடமுடியாது; அதற்கு இறைவன் கருணை வேண்டும்.

உடலெடுத்த உயிர்கள் பஞ்சேந்திரியங்களாகிய படுகுழியில் விழுந்து, வழியறியாமல் வருந்துகின்றன. வழியைக் காட்டுபவரே குரு, குருவைப் பார்ப்பதும், குருவின் பெயரைச் சொல்வதும், குருவின் சொற்களைக் கேட்பதும், அவர் உரைகளைச் சிந்திப்பதுமே உயர்ந்த நெறி. அந்த நெறியில் ஒழுகுபவர்கள் சிவயோகி யாவர்.

சிவயோகிகளுக்கு இந்திரியம், உயிர், உடம்பு எல்லாம் ஒன்ருய் அவனிடத்திலே ஒன்றி அசைவில்லாமல் இருக்கும். அவர்களுக்குத்தான். இறைவன் எங்கும் எல்லாமாய் இருக்கும் தன்மை தெரியும். இறைவனை ஆநந்தக் கூத்தை, சிதாகாசப் பெருவெளியில் காண்பவர்களும் அவர்களே, அவர்கள் சிவலோகத்தை இங்கேயே காண்பார்கள். அவர்களே நித்தியர்; முத்தர்; நிமலர். அவர்கள் முப்பத்தாறு தத்துவங்களாகிய ஏணியிலேறி தத்துவாதீதப் பழம் பொருளைக் கண்டவர்கள். அவர்கள் எல்லாவற்றையும் சிவன் செயலாகக் காண்பார்கள். அவர்களுக்கு ஒரு தொழிலும் இல்லை! அதனுல் அவர்களைச் சோம்பர்கள் என்றும் கூறலாம்!

அவர்கள் இருப்பதும் கிடப்பதும் ஞானவெளி. அவர்கள் தூங்கும் தூக்கமெல்லாம் ஞானத் தூக்கம். அவர்கள் தூங்கும்போதுங்கூட எல்லாவற்றையும் தன்னுள்ளே கண்டுகொண்டிருப்பார்கள். அவர்களுடைய இந்திரியங்கள் உலகப்பொருளைச் சென்று பற்ரு; ஆமை போல, அடங்கியிருக்கும். அப்பில் கரைந்த உப்பு அப்பாவதுபோல், சீவன் சிவத்துள் அடங்க திருவடி நிழலில் அடங்கி நிற்பார்கள்.

**யாக்கை நிலையாமை :**

மண் அதிலிருந்து இருவகைப் பாத்திரங்கள் செய்யப்பட்டன. நன்ருகத்தான் இருந்தன. ஏதோ கஷ்டகாலம்; மழைபெய்தது. பாத்திரங்கள் கரைந்து மண்ணேடு மண்ணுய்ப் போயின!

இரண்டு கால் நட்டு, ஒருவளை போட்டு முப்பத்திரண்டு வாரை பாய்ச்சி. மேலே கூரை போட்டு இருந்

தது. அககூரை பழைமையாகிப் பிரிந்து போயிற்று. ஆகையால், குடியிருந்தவன் போய் விட்டான் ; திரும்பி அவ்வீட்டிற்கு வரமாட்டான். ஆனால், அவன் மனைவி மக்கள் அவன்கூடப் போக வில்லை!

சீப்பிடித்தது; மூட்டெல்லாம் விட்டுப்போயின; கட்டவிழ்ந்தது; அலகெல்லாம் உளுத்துப்போயின. மூக்கில் விரலைவைத்துப் பார்த்தார்கள்; மூடி, காக்காய் கழுகு கொத்தப் போட்டுவிட்டு வந்தனர்!

ஒருபெரியவர், சமைக்கச்சொன்னார்; சாப்பிட்டார், சிறிது நேரம் காதலியோடு பேசிக் கொண்டிருந்தார்; "அப்பப்பா! இடப்பக்கம் வலிக்கிறதே" என்றார். இறந்தே போனார்!

ஒரு இளைஞன்; அவனுக்குத் திருமணம் செய்வித் தனர். மணமக்கள் இருவர்க்கும் பிணைந்த காதல்; காதல் வெறுத்தது, அவன்செத்தான். பாடைமீது வைத் துக் கட்டி, சுடுகாட்டில் போட்டு, சுட்டெரித்தனர்!

நலல, அழகிய கட்டுக் கோட்டை. கோட்டையில் தொண்ணூற்றுறு பேர் குடியிருந்தனர்; கோட்டை இடிந்தது; குடியிருந்தவர் ஓடிவிட்டனர்!

ஊருக்குத் தலைவன், எப்பொழுதும் பல்லக்கில் செல்வான். ஆனால், முதலில் போனது நாட்டுச் சிவிகை; முடிவில் சென்றது காட்டுச் சிவிகை, ஊரார் பின்னே சென்றனர்; முன்னே கொட்டு முழக்கு; இப்படியாக யாத்திரை!

" கண்ணே! பொன்னே! " என்ற காதலி. மாடு, மனை எல்லாம் ஊரிலிருக்க பாடையிலே ஏற்றி, பலி யெல்லாம் போட்டு வைத்துக் கொளுத்தி, நீராடி, நினைப்பும் ஒழிந்தார்கள் !

முந்நூறு நாளில் பிறந்த முட்டை, பன்னிரண்டு வயதுக்கு மேலே கல்யாணம் செய்துகொண்டது. எழு பது வயதில் உடைந்து போயிற்று. இது யாருக்குத் தெரியும் ?

அகல் இருக்க விளக்கு அணைந்தது!, அது எப்படிப் போயிற்று என்பதைத் தெரியாதபடி. இருளில் கிடந்து ஏங்குகிறது உலகம் !

மன்னாதி மன்னன். அவனது குடை, குதிரை, வாள் எல்லாம் வைத்த இடத்தில் இருக்கின்றன. அவன் பய ணம் போய்விட்டான ! போனபிறகு, அந்த உடம்பைக் காக்காய் குத்தினால் என்ன ! கண்டவர்கள் பழித்தால் என்ன ! பால் தெளித்தால் என்ன ! பலர் பாராட்டினால் என்ன !

**செல்வ நிலையாமை :**

அரசனாயிருந்தாலும், அவனது யானையையும் தானை யையும் பகைவர் கொண்டு போகக்கூடும், ஆதலால், தெளிந்த, அறிவோடு, சிவனடியைச் சேரவேண்டும். நமது நிழல் நமக்கு உதவாது ; நமது செல்வமும் அப் படியே. உயிர் போனால் ஒன்றும் கூடவராது, வண்டு தேனைச் சேகரித்துவைக்கிறது. அதை வலியவர்கள் அடித்துக் கொண்டுபோய் விடுகிறார்கள். எமன் வந்தால் காசு பயன்படாது. செல்வம் கடல்மேல் செல்லும் கப்பல்

போல, எந்தக் கணத்தில் கப்பல் கவிழுமெனக் கூறமுடியாது, ஆகையால், செல்வத்தை உறுதியென்று எண்ணுமல், சிவன் திருவடியையே சிந்திக்க.

**இளமை நிலையாமை :**

கிழக்கே உதித்த சூரியன் மேற்கே மறைகிருன். கன்று கிழக்காளேயாகிறது. இளமை தேய்ந்து போவதற்குமுன் அருமையான புண்ணியங்களைச் செய்ய வேண்டும் ; இறைவனைத் தியானிக்கவேண்டும். இளமையில் பெண்களுக்குக் கரும்பாக இருந்தவர், கிழப்பருவத்தில காஞ்சிரங்காயாகின்ருர் ! நேற்றுப்பாலனுய், இன்று காளேயாய், நாளை கிழவனுய்க் கழிவதைப் பார்த்தும், உலகினர் உணர்ச்சி யற்றிருக்கின்றனர் ! சூரியன் உலகை அளக்கிருன். அதனுல் காலம் கணிக்கப் படுகிறது. இதனை உணராது இழிமக்கள். காலன் சுருக்குழி வைத்தபின், அதில்போய் விழுகிருர்கள் ! ஆதலால், இளமை கழிவதற்கு முன்பே இறைவனை ஏத்தவேண்டும்.

**உடலுக்குள் உயிர் :**

கொம்பில் தழைக்கின்ற தளிர், பூக்கின்ற பூ, எல்லாம் பழுத்து உதிர்ந்து போகின்றன. அதைப் பார்த்தும் நம்முடைய உயிர் இந்த உடலுக்குள் என்றும் நிற்காது என்பதை மக்கள் அறியவில்லை !

ஐந்து பேருக்கு ஒரு வயல். ஐவரும் அதைக் காத்து வருகின்றனர். இவர்களுக்கும் அவர்கள் தலைவனிடமிருந்து ஓலை வருகின்றது. அவ்வளவுதான் ; காவலை விட்டு ஓடிப் போயினர் !

நம்முடைய கருமயிர் வெண்மையாகிறது. அது போலவே நமது பிறப்பும், இறப்பும். ஆதலால், இவ்வுயிர் உடலைவிட்டுப் போகும் முன்னே விதிப்படி அறங்களைச் செய்யுங்கள் ; புலரிதனைப் போற்றுங்கள் ; பிறருக்குக் கொடுதது உண்ணுங்கள்.

**கொல்லாமையும் புலாலுண்ணாமையும் :**

" கொல்லு ! குத்து ! " என்று சொன்னவர்களைக் கால தூதர்கள், பாசத்தால் கட்டி, நரகத்திலிட்டு, " இங்கேயே நில் " என நிறுத்தி விடுவார்கள். ஆகையால் கொல்லாமையே பூசைக்கேற்ற பூ.

கொலை, களவு, கள், காமம், பொய்கூறல் இவை பஞ்சமாபாதகங்கள். கொலையின் வழியாகிய புலால் உண்டல் இழிந்தவர் செயல், அவர்களுக்குத் துன்பம் பல விளையும்.

**பிறர்மனை நயவாமை :**

வீட்டுத் தோட்டத்தில் பழுத்த பலாப்பழம். அதனை உண்ணமுடியாமல் ஈச்சம்பழத்திற்கு ஏமாந்து நிற்கின்றதே கயவருலகம் ! நாம் வளர்த்த மாவில் பழுத்த பழம். அதை அறையில் வைத்துப் புதைத்து விட்டு புளிமாங் கொம்பேறி, புளித்தமாங்காயை விரும்பலாமா ?

மருள் கொண்டவர்களே மாதர்மயலின் வருந்துவர். காம இன்பம் கனவு போன்றது. இதையே பெரிது என்று எண்ணி, சுவர்க்க இன்பம் எனத் தோத்திரிப்பாருமுண்டு! இவர்கள் நிலை, கருப்பஞ்சாறு வாங்குவதற்காகக் கிடைத்த பாத்திரத்தில் வேப்பஞ்சாறு வாங்கினது போல. இலை

நன்ருக இருந்தாலும், எட்டிக்காயைச் சாப்பிட முடியுமா? அது போல, அவயவங்கள் அழகாக இருந்தாலும், அவர்களை விரும்புதல் கூடாது.

**நல்குரவு :**

நமது வாழ்க்கை கிழிந்த புடவைபோன்றது. பொருளில்லையானுல், உலகில் நமக்கு நண்பர்கள் யார்? நமக்குக் கொண்டாட்டமுமில்லை; நாட்டில் நடப்புமில்லை. பொழுது விடிந்து பொழுது போனுல். வயிற்றுக் குழியைத் தூர்க்க வருந்துகின்றவர்களே! கடவுளைப் பிரார்த்தியுங்கள். எல்லாக் குழிகளும், சுவடும் தெரியாதபடி அடைந்து விடும்; வளமாக வாழலாம்,

**அக்கினிகாரியமும் அந்தணர் ஒழுக்கமும் :**

அந்தணர்கள் அறுதொழில் செய்பவர்கள். அக்னிகாரியம் செய்து, எப்பொழுதும் நல்ல காரியங்களைச் செய்பவர்கள். அவர்களுக்குரிய மந்திரம் காயத்திரியும், சாவித்திரியும். அதலைத் தியானிப்பவர்களே அந்தணர்கள் பிரணவத் தியானம் பண்ணி, குரு உபதேசப் படி கர்மாக்களைச்செய்து, கடவுள் சொரூபமாய் இருப்பவரே குற்றமற்ற பார்ப்பார். வேதாந்தஆராய்ச்சி செய்பவர்களே அந்தணர்கள். இத்தகைய அந்தணர் இருக்கும் நாட்டில் எல்லாவளமும் என்றும் இருக்கும்.

**இராசதோஷம் :**

படிப்பில்லாத அரசனும், யமனும் சரி. சொல்லப் போனுல், கல்லாத அரசனைக் காட்டிலும், காலனே நல்லவன்! காலன் நல்லவர்களை நணுகமாட்டான், கல்லாத அரசன் எல்லாரையும் 'கொல்' என்பான். அரசன்

அநீதி இழைத்தால் நாடு கெடும்; மக்கள் அறிவற்றவர்கள் ஆவார்கள்; வளம் குன்றும், அவரவர்களை, அந்தந்த ஒழுக்கத்தில் நடக்கச் செய்பவன் அரசனே, போலிஞானிகளை அரசன் சோதித்து உண்மைஞானிகளாக்க வேண்டும்; அறவழியில் அரசு செலுத்த வேண்டும், சிவயோக நெறியில் செல்லாத தீயர்களை அவன் தண்டிக்கவேண்டும். அவரவர்கள் சமயநெறியில் ஒழுகாதவரை, மறுமையில் கடவுள் தண்டிப்பார். இம்மையில் அரசன் தண்டிக்கக் கடமைப்பட்டவன்.

**வான் சிறப்பு :**

மழையாலே மரங்கள் பெருகுகின்றன; எட்டியுங் கூட அமுதமாகிறது. உலகில் மழைபெய்து, அருவி பெருகி ஆறுவதுபோல, மனமாகிய மலையில், நுரையில்லாத – அழுக்கு இல்லாத – கரையில்லாத அமுத ஆறு பெருகுகிறது.

**தானம் :**

யாருக்கும் கொடுத்துச் சாப்பிடுங்கள். ஆசையோடு அகப்பட்டதை அப்படியே உண்டு விடாதீர்கள். காக்கைகூட, கரைந்து கரைந்து. பிற காகங்களையும் அழைத்துக் கொடுத்து உண்கிறது.

**அறம் :**

அறம் செய்கிறவர்களுக்கே கடவுள் கருணை செய்வார். ஒரு பத்திரத்தைக்கொண்டு கடவுளைப் பூசிப்பது எல்லோருக்கும் எளிது: பசுவுக்கு ஒரு பிடி புல்; பிச்சைகாரனுக்கு ஒரு பிடி சோறு; யாரிடத்திலும் இனிமையாகப் பேசுதல்; இவை எல்லோருக்கும் சுலபம்.

ஏழைகளுக்குக் கொடுத்தலே அறம். வாய்த்தபோது அறம் செய்யுங்கள். மரணம் வந்தால் விழிப்பீர்கள்; வினைக்கடலை நீந்த, தவமும் அறமுந்தான் தக்க தோணி; உங்களோடு கூடவே வருவது தானத்தின் பயன்ஒன்றே. ஈயாதான் செல்வம், எட்டிமரம் பழுத்ததுபோல, மண்ணோடு மண்ணாக வேண்டியதுதான் ! ஆதலால், குளம் வெட்டுங்கள்; சோலைகள் வையுங்கள்; தர்மம் செய்யுங்கள்; ஏழைக்கு உதவுங்கள்; இறைவனை ஏத்துங்கள்.

**அன்பு :**

அன்பே சிவம் : இது யாருக்கும் தெரியாது. அறிந்தவர்கள், அன்பே சிவமாய் அமர்ந்திருப்பர். எலும்பை விறகாக்கி, இறைச்சியை அறுத்துப் பொசுக்கினாலும் கடவுள் வெளிப்படார்; அன்புடன் உருகி அகங் குளிர்ந்தால் போதும்; கடவுளைக்காணலாம். அன்புடன் ஒருமுறை வழிபட்டாலும் அவன் வழித்துணை யாவான். அன்பர்களுக்கு உள்ளும் புறமும் இருந்து, அவன் அருள் செய்கிறான்.

**கல்வி :**

இறைவன் திருவடியைப்பற்றிப் படிக்கின்ற படிப்பே படிப்பு. அவனைச் சொற்குற்றம் இன்றித் தொழுங்கள். அவனே, தூய கல்வியாக - அதனால் வரும் சொல்லாக பொருளாக - எல்லாமாகவும் இருக்கிறான்.

**கேள்வி ;**

கற்றலைக் காட்டிலும் கேட்டல் சிறந்தது. கேட்பதும் இறைவனைப் பற்றியதாக இருத்தல் மேலானது. என்ன

தான், நாம் அனுபவங்களால் அறிவை அடையலாமாகுலும், சுட்டிக்காட்டாத வித்தை பயன் படாது. ஆகையால், சிவனடியைப்பற்றிக் கேட்கப்படுகின்ற கேள்வியே கேள்வி, அந்தக் கேள்வியை உடையவர்கள் இறைவன் திருவடியை அணுகி, எக்காலும் இன்புறுவார்கள்,

**கல்லாமை ;**

கல்லாதவர்களுக்கு இறைவன் நம்முடன் கலந்துள்ள கலப்புத் தெரியாது, கல்லாதார் கயவர்; இன்பத்திற்கே உழைப்பவர்கள். அவர்களைப் பார்க்கவும் கூடாது; அவர்கள் சொல்லைக் கேட்கவும் கூடாது; அவர்களுக்கு ஒன்றும் சொல்லவுங்கூடாது. சிலர் படித்தும் முட்டாளாயிருப்பார்கள். அவர்களுக்குக் கடவுள் ஞானம் வராது. கற்று, கடவுள் அன்பில் நிற்பவர்களே கணக்கறிந்து கற்றவர்கள்.

**நடுவுநிலைமை :**

நடுவுநிலையுடையவர்களுக்கே ஞானம் உண்டாம். அவர்களே தேவராவார், நம் முன்னோர் நடுவு நிலைமை நின்றே நல்லவரானூர்கள். இறைவன் திருவடியை நினைப்பவர்களே நடுநிலையில் நிற்பவர்கள்.

**கள்ளுண்ணுமை :**

பசு, கழுநீர் கிடைத்தால், குளங்தோறும் தண்ணீர் குடிக்காது. அந்தக் கழுநீரையே நினைத்து உடம்பு, இளைத்துப்போகும். அதுபோல், சிவானந்தத் தேனை உண்டவர்கள் கள்ளுண்ணுர். சுத்த மதுவாகிய சுகானந்

தத்தை உண்டால், என்றும் இருக்கலாம். கீழ் மக்களுக்கே உரியது மது. சத்தி உபாசனை செய்வார்களும் கள்ளுண்டு மயங்குவர். ஞானிகளோ தமக்குள்ளே சிவானந்தத்தேனை உண்பவர்கள். கள்ளுண்பவர்களுக்குச் சிவலோகம், சிவஞானம் இல்லை. கள், கொலை பொய் இவற்றிக்குக் காரணமாக இருப்பது; அறிவை அழிப்பது. ஆதலால் அதனை விடுத்து, உள்ளே ஊறுகின்ற அமுதத்தைஉண்டு, ஆசாரியன் திருவடியைப் பற்றி, சமாதியில் இருந்து, ஆருதார யோகத்தைச் செய்யுவகள்: வழி தோன்றும்.



# இரண்டாம் தந்திரம்

இத்தந்திரம் புராண வரலாறுகளையும், அவற்றின் தத்துவங்களையும் சுருக்கமாகக் கூறுகிறது. அவை வருமாறு :

பார்வதி கல்யாணம் கயிலையில் நடந்தது. கூட்டத்தைத் தாங்கமுடியாமல், பூமி வடபக்கம் சரிந்தது. தென்பக்கம் உயர்ந்தது. அதைச் சமப்படுத்த சிவ பெருமான் அகத்தியரைத் தெற்கே அனுப்பினார். அகத்தியர் மூலாதாரத்திலிருந்து 'குண்டலினியை எழுப்பி பிரமரந்திரம் வரை கொண்டுபோனவர்! அவரைக் கொண்டு தெற்கிலும் சைவ சித்தாந்த ஒளியை விளங்கச் செய்வித்தார் என்பது கருத்து.

பூமியில் எட்டுத் தலங்களில் இறைவன் தனது வீரத்தைக் காட்டினார் என்பது புராணம்.

அந்தகாசுரன் உயிர்களை வருத்தி, தேவர்களையும் துன்புறுத்தினான்; இறைவன் அவனைச் சூலத்தால் குத்திக் கொன்றார் என்பது வரலாறு! (அந்தகாசுரன் - ஒவ்வொருவர் மனதிலும் உள்ள தீயசத்தி, அது தனக்காக, தன் நன்மைக்காக, எல்லோரையும் வாட்டுகிறது. இறைவன் அத்தீமையை அகற்றினார்).

'எனக்கும் ஐந்து தலைகள் உண்டு; நானும் கடவுளே' என்று இறுமாப்பு அடைந்த பிரமனது தலையைக் கிள்ளி, இறைவன் அக் கபாலத்தைக் கையில் ஏந்தினார் என்பது

வரலாறு. (பொருள்; அகங்காரத்தை அடக்கி, உயிர்களை நல்வழியில் திரும்பினார் என்பதே). அந்தக் கபாலத்திலேயே விஷ்ணுவின் புருவ மத்தியிலிருந்து வழிந்த இரத்தத்தை ஏந்தினார் என்பது வரலாறு. இது உயிர்களையும், அவர்களைப் பெரியவர்கள் என்று எண்ணும் ஏனையோர்களையும், உண்மையைக் காட்டி உய்வித்தார் என்பதை விளக்குகிறது.

சலந்தராசுரன். வரம் கொடுத்த இறைவனையே கொல்ல வந்தான், இறைவன் காலால் பூமியில் கீறிய வட்டத்தைக் கொண்டு, அவன் தலையை அறுத்தார். உயிர்கள், அறியாமையால் நன்றி செய்தவர்களுக்கே தீங்கு செய்ய முற்படுமென்பதும், அத்தீமை தன்னளவில் நில்லாது எல்லோரையும் பாதிக்குமாயின் வரங்கொடுத்தவரே அத்தீமையை அழிப்பது கடமையும் கருணையும் ஆகும் என்பதும் இதன் கருத்து.

கமலன், கமலாட்சன், வித்யுன் மாலி என்ற மூன்று அசுரர்கள், பொன் வெள்ளி இரும்பு இவற்றாலாகிய மூன்று கோட்டைகளைத் தங்களுக்கு இருப்பிடமாகக் கொண்டு, பறந்துசென்று, ஊர்களை அழித்து வந்தார்கள். இறைவன் அவர்களுடன் போரிட்டு, அவர்களுடைய கோட்டைகளை அழித்தார். அவர்களைத் திருத்தி, வாயில் காவலராகவும் வைத்துக் கொண்டார். என்பது வரலாறு, முப்புரம் என்பது, ஆணவம் மாயை கன்மம் ஆகிய மும்மலங்களின் காரியம். அம்மலங்களை இடமாகக் கொண்டு அழிவுச் சத்தியைச் செய்தவர்கள் அசுரர்கள். அம்மலங்களை அழித்து, உயிர்களாகிய அவர்களை இறைவன் உய்யக்கொண்டான் என்பதே இவ்வரலாற்றின் தத்துவம்.

தாருகா வனத்திலுள்ள கர்ம பிரம வாதிகளான முனிவர்கள் ஏவிய யானையை உரித்து, அதன் தோலை இறைவன் போர்த்திக்கொண்டார். தீயும், தீயுள் எழு சோதியும், வேள்வியும், வேள்விப் பயனும் ஆகிய இவற்றை உரிமையாக உடையவன் சிவனேயாகலின், உரிமை உடையவனைக் கொல்லாது என்பதை மேற்படி உயிர்கள் அறிந்திலர்; அதனை அறிவித்து ஆட்கொண்டார் என்பதே இதன் கருத்து.

மார்க்கண்டேயருக்காகச் சிவன் யமனை உதைத்தார் என்பது வரலாறு, இது, மூலாதாரத்தில் குண்டலினியில் இருக்கும் பரம்பொருளைப் பிரம்மரந்திரம் வரைகொண்டு போய்ச் சிவயோகத்தில் இருப்பவர்களுக்கு என்றைக்குமே மரணம் கிடையாது என்பதைக் காட்டுகிறது.

இறைவன், தமது நெற்றிக்கண்ணை விழித்து மன்மதனை எரித்தார் என்பது வரலாறு. காமன் ஒவ்வொரு உயிர்களின் உள்ளத்திலும், பருவகாலத்து உண்டாகும் ஆசையை அடிப்படையாகக் கொண்ட இந்திரிய சுகத்தை எதிர்நோக்கிய - ஒரு சக்தி. அது அனைவருக்கும் இடையூறு செய்யும், அந்தச் சக்தியை மனம் நாடாதவாறு யோக நெறியால் அடக்கி ஆண்டு, சுழுமுனையில் யோகாக்கினியைக் கொண்டு நிறுத்தி, ஆசையை அகற்றவேண்டும் என்பதை உணர்த்துவதே இதன் பொதிபொருள்.

கடவுளை நிந்தித்து, தானே கடவுள் என்று எண்ணிய தக்கனை, அவன் யாகம் செய்யும் பொழுதே வீரபத்திரராகச் சென்று, அவன் தலையை வெட்டி, ஆட்டுத் தலையைப் பொருத்தினார் இறைவன் என்பது வரலாறு, உயிர்கள் என்ன தெளிவுடையோராயிருந்தாலும்,

அதிகாரமலம் தாக்க, அதனுல் அறிவு மாறுவார்கள்; "நானே தலைவன்" என்பார்கள்; "தாம் செய்வதெல்லாம் உயர்ந்த காரியம் என்று எண்ணுவார்கள். அவரின் மமதையை அடக்கி அறிவைக் கொடுப்பதே ஆண்டவன் கருணை என்பதைத் தெரிவிப்பது இவ்வீரம்.

இன்னுஞ் சில புராண வரலாறுகள் வருமாறு: பார்வதி இமய அரசன் மகளாகி, இறைவனைப் பூசித்துக் காட்டினுள், (பொருள்: இறைவன் அருமை யானவர் என்று அயரவேண்டாம்; அன்பருக்கு எளியவராய், பிரம்ம விஷ்ணுக்களுக்கு அருமையானவராய். அக்கினி மலையாய் விளங்கியவர்: பிரமனுக்கு அறிவையும், விஷ்ணுவுக்குச் சக்கரத்தையும் கொடுத்தார்).

இராவணன் கயிலை மலையைத் தூக்க முயற்சித்தான்; இறைவன் அவனை மலையின்கீழ் அழுத்தினுர்; இராவணன் அன்பு செய்தான்: இறைவன் அவனுக்கு வாளையும் வரத்தையும் கொடுத்தார்.

சண்டேசுவரர் தகப்பன் காலை வெட்டினுர். கடவுளைப் பூசித்தார். கடவுள் மகிழ்ந்து, அவருக்குத் தான் சூடிய மாலை, நிவேதனம் எல்லாம் தந்தார்.

தேவர்கள் வாடிய முகத்துடன் ஓடிவந்து "சிவாய நம" என்று கும்பிட, அவர்களை "எழுக" என ஆசிர்வதித்து அவர்கள் துன்பத்தை மாற்றினுர் இறைவன். எல்லாராலும் தொழப்படும் தகுதி இறைவன் ஒருவனுக்கே உண்டு என்பதையும் அவனே திருத்தி ஆட்கொள்ளும் அருள் வள்ளல் என்பதையும் இது விளக்குகிறது.

சக்கரம் பெற்றபொது, அதனைத் தாங்கும் ஆற்றல் திருமாலுக்கு இல்லை; அதற்காகச் சிவனைப் பூசித்தார்; சிவன் தனது ஆற்றலைக் கூறுபடுத்தி அளித்தார். அச்சக்கரத்தைத் திருமால் வீரபத்திரர்மீது ஏவினுர்; அது அக்கினியைக் கக்கியதுடன் நின்று விட்டது. இது வரம் தந்த கடவுளே வரத்தைத் தாங்கும் சக்தி தரவேண்டு மென்பதையும், வரத்தைப் பெற்ற பிறகு உயிர்கள் செருக்குற்ருல் அவற்றை அடக்கி ஆட்கொள்வதும் அவனது கருணையின் நோக்கம் என்பதையும் அறிவிக் கின்றது.

திருமால் அடிமுடி தேடியும் அறியப்படாமல் இருந் தது. உயிர்களுக்கு இயற்கையாயுள்ள "நானே தலைவன்" என்ற இறுமாப்பால் அந்த இறுமாப்பு அடங்கிய பொழுது அவர்களுக்கே அருள் செய்வது இறைவன் வழக்கம், இத்தகைய இறைவன் சர்வ சங்கார காலத்து எல்லாம் தன்னுள் ஒடுங்க, தான் ஒருவனேயாகி நிற்கிருன், அங்ஙனம் அழிப்பதற்கு நீரையும்நெருப்பையும் உபயோகப் படுத்துகிருன். திரும்பவும் எல்லாவற்றையும் படைக்கத் தொடங்குகிருன்; அதுவே சர்வே சர்வதிருஷ்டி.

**சர்வசிருஷ்டி :**

சர்வ சிருஷ்டியில்சிவம் தன்னில்இருந்து ஞான சத்தியைப் பிரித்துப் புணர்கிறது; அப்படி புணர்ந்து பின் சத்தியிலிருந்து நாதம் பிறக்கிறது; நாதத்தில்விந்து; நாத - பிந்துக்களில் கிரியையும் ஞானமும் ஒத்திருக்க, சதாசிவம் தோன்றும் சதாசிவம் சத்தியுடன்கூடி சத்தி மானுய், பிரம்மா, விஷ்ணு, ருத்திரர்களை அதிட்டித்து நின்று, படைத்தல் காத்தல் அழித்தல்களைச் செய்யும்,

அவர்கள், பிரமனைக் கொண்டு பார்முதற் பூதங்களையும் உயிர்களுடைய புண்ணிய பாவங்களுக்கேற்ப உடல்களையும், போகப் பொருள்களையும் படைத்துக் கொடுப்பார்.

*திதி :*

திதி என்பது படைக்கப்பட்ட உயிர்கள், தங்களுடைய புண்ணிய பாவங்களுக்கு ஈடாக, இன்பத் துன்பங்களை அனுபவிக்க இடையூறு வாராது காப்பது.

**சம்ஹாரம் :**

சம்ஹாரம் என்பது ஓயாமல் பிறந்து இறந்து உழல்கின்ற ஆன்மாக்கள் ஓய்வடையும் பொருட்டு, எல்லாவற்றையும் தம்முள் அடக்கிக் கொள்ளுதல். அது நித்திய சம்ஹாரம், வைத்த சம்ஹாரம். சுத்த சம்ஹாரம், உய்த்தசஹாரம் என நால்வகைப்படும்; நித்திய சம்ஹாரம், தூலசரீரத்தையும், சூக்குமசரீரத்தையும் விட்டு, உயிர் ஒன்றியிருக்கும் நிலை; சுருங்கச்சொன்னால் உறக்கத்திலுண்டாகும் மூடநிலை எனலாம்; வைத்த சம்ஹாரமாவது மாயையும் ஒடுங்க நிற்பது; அது ஜாக்ராதீத நிலை, சுத்தசம்ஹாரமாவது மனங் கடந்த நிலையில் அழுந்தியிருப்பது; அது தொழிலற்ற கேவல நிலை, உய்த்தசம்ஹாரம் என்பது, சிவனது அருளில் தான் அடங்கியிருத்தல்.

**திரோபவம் :**

திரோபவம் என்பது ஆன்மாவும், இறைவனும் ஒன்றுயிருந்தாலும், ஆன்மா அவனை அறியாத நிலையாகும். மண் ஒன்றே, குடமும் சட்டியும் பானையும் ஆகிறது,

அதுபோல ஒருவனே எல்லாப் பிறவிகளிலும் இருக்கிறான். ஊன் சுவையை நெஞ்சம் அறிந்தும் அது ஊனை மறந்து விடுகிறது; கண், காட்டிய ஒளியை மறந்து விடுகிறது; அதுபோல நமக்குக் காண்பிக்கிற இறைவனை நாம் அறிவதில்லை.

**அனுக்கிரஹம் :**

இறைவன் உயிர்களை உடல் என்னும் பைக்குள்ளே கட்டிக்கட்டி அவிழ்த்துவிடுகிறான், குயவன் சக்கரத்தில் வைத்த மண்ணைத் தன் மனப்போக்கின்படி செய்வது போல், இறைவன் உலகை அது இது என ஆக்கு கின்றான்; இறைவனுக்கு எட்டுக்குணங்கள் உண்டு. அவனே ஆன்மாக்களை அநுக்கிரஹிப்பதற்காக எல்லா வற்றையும் படைத்தான். ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்கிறான்; கண்ணுள் கருமணியாயிருந்தும் காண்கிறான்.

**கர்ப்பக்கிரியை :**

குழந்தையைக் கொண்டாடுகிறோம், ஆனால், அக் குழந்தையைக் கருவுள் ஆக்குபவன் இறைவன் என்பதை அறிவதில்லை. முன்பிறப்பில் நம்மைவிட்டுப் பிரிந்துபோன ஆன்ம தத்துவங்கள் இருபத்தைந்தையும் கூட்டி, இனி வரும் வினைவை எண்ணி கருவுக் குள்ளேயே பல உதவி களைச் செய்கிறான். புணர்ச்சிக் காலத்து, இருபாலாருடைய பாசத்தால், பெண் உதரத்தில் ஆன்மா நுழைகிறான்; அப்போதே. காலமும் வாழ்வும் கணிக்கப்படுகின்றன. அந்தக் கரு சுக்கில சோணிதங்களாக ஓடி விழுந்தனவே. பூவில் தோய்ந்த வாயு பூமணத்தை உலகினருக்கு உதவு வது போல உயிரினிடமாகக் குவிந்து விரியும் தன்மையில் பிராணவாயு தங்குகிறது. ஆண்கரு மிகின் ருத்திரன்;

பெண் கரு மிகின் திருமால்; சமமாகில் பிரமன்; பாய்ந்த கரு உருக்கொள்ளும்பொழுது மனோலயத்தையும் ஒருங்கே பெறுகிறது. விந்து பாய்ந்தபின் தந்தைக்குப் பிராணவாயு ஐந்துமுறை ஓடினால் குழந்தைக்கு வயது நூறு. நான் காணல் எண்பது. இவ்வாறு பகுத்தறிந்து பாய்ச்சக் கூடிய வல்லமை யோகிக்குத்தான் உண்டு. பாய்கின்றபோது பாயும் வேகம் குறைந்தால் குழந்தை குள்ளம்; தடைப் பட்டுப் பாய்ந்தால் முடம்; நடுவிலேயே அற்றுப்போனால் கூனம். பாய்கின்ற வேகம் ஆண்களுக்கே யன்றிப் பெண்களுக்கில்லை.

விந்து பாய்கின்ற காலத்து. பெண்ணின் உதரத்தில் மலம் தங்கியிருந்தால் குழந்தை மண்டு; சிறுநீர் இருந்தால் ஊமை; இரண்டும் இருந்தால் குருடு. விந்து பாயுங் காலத்து பிராணவாயு ஆடவனுக்கு வலது நாசி வழியாகச் சென்றால் ஆண்; இடதானால், பெண்; அபானவாயு எதிர்த்துவந்தால், இரட்டைக் குழந்தை; இடது, வலது, இரு நாசிகளின்வழியே காற்றுவந்தால் அலி; இருவருக்கும் பிராணவாயு ஒத்து இயங்கினால் குழந்தை அழகாக இருக்கும். குழறுமானால் அழகாக இராது. பத்துமாதம் கருவளர்ந்து, பருவமாகிப் பிறக்கும். விதை இட்டவனுக்கும் தெரியாது; ஏற்றவளும் அறியாள்; தட்டானுக்குத்தெரியும்; அவன் ஒருவனுக்கும் சொல்லமாட்டான். அந்தக் கருவினுள் உயிருக்கும் காவலாகப் பிரமன் இருக்கிறன். இந்த விசித்திரம் எப்படி !

**மூவகை உயிர் :**

சத்தியும், சிவமும் விளையாட்டாக உயிரை உடலோடு கூட்டி, மாயையில் பூட்டி சுத்தமாக்கி,

சிவமயமாக்கினர். உயிர்கள் விஞ்ஞானகலர், பிரளயா கலர், சகலர் என மூவகைப்படும்.

விஞ்ஞானகலர், ஆணவமலம் மட்டும் உடையவர்கள். அவர்களுள். இயற்கையிலேயே விஞ்ஞான கலரும், பரிபாகத்தால் விஞ்ஞானகலர், ஆனவர்களும் ஆக இருதிறத்தார். பின் கணடவருள், ஆணவத்தில் கட்டுண்டு, மைபூசிய மணிபோல இருப்பவர்கள் விஞ்ஞான கேவலர்; உடலோடு கூடி அதற்குரிய புவனத்தில் வசிப்பவர்கள் விஞ்ஞான சகலர். உடலெடுத்து, இறைவன் கருணைசெய்ய, ஆணவமலத் தடைப்பு நீங்கப் பெற்றவர்கள் விஞ்ஞானசுத்தர்.

இரண்டாமவரான பிரளயாகலர். ஆணவம் மாயை ஆகிய இருமலமுடையோர். அவர்களுள் மூன்று வகையினர் உளர்; பிரளயகேவலர், பிரளயசகலர், பிரளய சுத்தர் என.

மூன்றுமவரான சகலர், ஆணவம் கன்மம் மாயை ஆகிய மும்மலங்கள் கூடியவர்கள், அவருள்ளும் சகல கேவலர், சகலசகலர், சகலசுத்தர் என மூன்றுவகை யுண்டு.

**பாத்திரம் — அபாத்திரம் :**

நாம் சிவஞானிகளுக்கே தர்மம் செய்யவேண்டும். எவ்வளவு கொடுத்தாலும், சிவஞானிகளுக்கே கொடுத்தல் நல்லது, நிலமளவு கொடுத்தாலும் நிர் மூடர்களுக்குக் கொடுத்தால் இம்மைக்கும் மறுமைக்கும் துன்பமே விளையும். சீலமும் நோன்பும் இல்லாதோருக்குக் கொடுப் பதுவரட்டுப் புல்லிட்டு, புண்ணாக்கிட்டு, பாலைக்கறந்து

குடித்தால் ஒக்கும் ! பருவம் கழிந்து செய்த பயிருமாகும்! அஷ்டாங்கயோக தர்மங்களிலிருந்து, ஞானத்தை அடைந்தவர்களுக்கே யல்லாது மற்றவர்களுக்குக் கொடுப்பது பெரும்பிழையாகும்.

**தீர்த்தம் :**

நமது மனத்திற்குள்ளேயே பல தீர்த்தங்கள் உள்ளன. அவற்றில் முழுகத் தெரியாமல் காடும் மேடும் சுற்றி அலைவர் கள்ளமனதுடையவர்கள்! இறைவனை இடைவிடாது தியானித்தால் கங்கை உள்ளத்துள்ளே பெருகும். கடலில் போட்டதைக் குளத்துக்குள் தேடுவதைப்போல் உடலில் உள்ள பொருளை ஊரூராகத் தேடுகிறார்கள்! அவனது அருள் துணைகொண்டு உடலுக்குள்ளே தேடுக. கருணையால் விளைந்த நீர் உடம்பில் கறுக்கும், சிவக்கும், வெளுக்கும்: நிலம், காற்று எல்லாமாயிருக்கும்!

**திருக்கோவில் :**

கோயில் அவசியம், கோயிலில் சிவலிங்கத்தைப் பெயர்த்தால் அரசு அழியும், கோயில் மதில்கற்களில்ஒன்றை இடித்துத் தள்ளினாலும், அரசரை வெட்டு விக்கும். முனிவராயினும் பிராமணராயினும் அவர்களை அழிக்கும் கோயில் பூஜைமுட்டுப் பட்டால் உலகில் மழை இருக்காது, மன்னர் போர்வலிகுன்றுவார்கள்; களனம், களவு மிகும், ஒழுக்கங் கெட்ட பிராமணன் கோயிலில் பூசித்தால் வேந்தனுக்கு வியாதி; அந்த நாட்டுக்குப் பஞ்சம்; இது சத்தியம்! கடவுள் சொன்ன ஆணைமொழி!

**அதோமுக தரிசனம் :**

தேவர்கள் ஓடிவந்து, "இறைவா! முறையோ!" என்று சூரனது வலியைச் சொல்லிப் புலம்பினார்கள், இறைவன், ஐந்து திரு முகத்தோடு அதோமுகமும் கொண்டு ஆறுமுகமாய் ஆறுமுகக் கடவுளை நல்கி, அவரைப்பார்த்து "சென்று சூரனைக் கொன்றுவா" என ஆணையிட்டார். இவ்வாறு இறைவன் அதோமுகம் கொண்டதும், கண்டம் கறுத்ததும் எதற்காக என்று உலகவர் அறியமாட்டார்கள்! 'நஞ்சுண்டான் கறுத்தது' என்பார்கள், அசுர சக்தியை அழிப்பதற்காக அவனது திருவுள்ளத்தெழுந்த கோபம் அல்லவா அது! பொய் யுரைக்கும் மனிதர் மெய்யுரைத்தால் தேவர் களையும் அவர்கள் காலில் வணங்கச் செய்வான் இறைவன் என்பதல்லவா இதன் உள்ளுறை!

**சிவநிந்தை :**

கடவுளை நிந்திப்பவர்கள் இருவகையர்: கடவுள் ஒருவருண்டு; அவர் நம்மிலும் எளியவர், என இலேசாக நினைத்து இகழுபவர் ஒருவர், மற்றவர். நாமே கடவுள்; நம்மைவிடக் கடவுள்வேறிலர் என்றெண்ணி இகழுபவர். இவர்களில், அறியாமையால் இகழுபவர் பூனையின்வாய் அகப்பட்ட கிளியைப்போல், வாய்க்கு வந்ததைப் புலம்புவர், மற்றவர், அகம்பாவத்தால், 'கடவுளே நாம்' என எண்ணி. கடவுள் நினைப்பே இல்லாதவர், கடவுளிடம் பொய்ப் பகை கொண்டாலும், அது ஒன்று பத்தாய்ப் பெருகித் தீமைசெய்யும்! கடவுளைப் பகைத்த தேவா, அசுரர் எல்லோரும் அழிந்தனர்!

**குரு நிந்தை :**

ஓரெழுத்தையும் – அதன் உண்மைப் பொருளையும் சொல்லிக் கொடுத்தவர் குரு. அவரை நிந்தித்தவர் நூறு பல ஊர் நாயாகப் பிறந்தும், சாக்கடையில் கிருமியாகப் பிறந்தும், ஒருயுகம் வருந்துவர். குருமனம் நோகும் வண்ணம் தீமைகளைச்செய்தவர், கீழ்மக்களாகப் பிறந்து வருந்துவர். குரு நிந்தையிலே இந்திரபீடமும், ஆட்சிபீடமும் அசைந்தன. மகேசுர வடிவமான ஞானிகளை நிந்திப்பவனும் அவ்வாறே வருந்துவான். சிவனடியார்களின் சிந்தை நோகப் பேசியவர். என்றென்றும் துன்பம் அனுபவிப்பார்கள்.

**பொறையுடைமை :**

அடிக்கடி சலனப்படும் சிந்தைக்கு உறுதி யளிப்பது பொறுமை: வீட்டிலும் பொது இடங்களிலும், கொல்லையிலும், பலவகையிலும் பலரோடும் பழகுகின்ற உயிருக்கு எல்லையற்ற லயஸ்தானம் பொறுமையே.

**பெரியாரைத் துணைக்கோடல் :**

எல்லா வகைகளிலும் பெரியார்களைத் துணைக் கொள்ளுதல் நல்லது. நெருப்பிற்பட்ட தளிர்போல மனம் வாடி வதங்கினாலும், பெரியவர்களைத் துணைக் கொண்டால் அது புதுமை அழகு பொருந்தும்; ஆகையால் பெரியோர்களுடன் கூடுவதே பேரின்பம்.

திருமூலர் " அடியாரோடு கூடச் சிவலோகம் சென்றேன். வாயிற்காவலர் அறிவிக்க, இறைவன், "வா!

வா!'' என்றழைத்தான், அங்கிருந்த எல்லோரும் மகிழ்ச்சியால் ஓலம் என்று உரக்கக் கூவினர்! இம்மை மறுமை ஆகிய இரண்டையும் உண்மையாக உணர்ந்த ஞானிகளுடன் உறவாடினோம்; பிறவிச் சுழியை நீந்தினோம்; பேரின்பம் உற்றோம்!'' என்று பெரியாரைத் துணைக் கொண்டதால் விளைந்த பெரும் பயனைப் பேசுகின்றார்கள்.



# மூன்றாம் தந்திரம்

மனிதன் மனத்தால் உயர்கிறான். மனத்தை உயர்த்துவது மனிதன் கடமை. மனமும், அதனைக் கருவியாகக்கொண்டு உணர்ச்சிகளை சேகரித்துக் கொள்ளும் உயிரும், பெண்டு - பிள்ளை, மாடு - கன்று, சண்டை - சந்தோஷம் என்று பள்ளத்தை நோக்கிப் பாயவும் கூடும். மகிழ்ச்சி, கருணை, அன்பு என்கிற கனி மரங்கள் செறிந்திருக்கின்ற இறைவன் திருவடி என்கிற உச்சியில் ஏறவுங்கூடும். பள்ளத்தில் இறங்கினால், பாவமும் துன்பமும் விளைகின்றன; உச்சியில், ஏறினால், என்றும் அழியாத இன்பம் உண்டாகிறது. மனிதன் எதை விரும்புவான்? என்றும் அழியாத இன்பத்தைத் தானே! அதற்குரிய வழி இறைவனோடு உயிரை ஒன்றவைக்கின்ற யோகம் ஒன்றே. இந்தயோகத்திற்கு எட்டு உறுப்புகள் உண்டு. அவையாவன: - இயமம்.. நியமம், ஆசனம், பிராணாயாமம் பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி.

**இயமம்:**

இயமம் என்பது; கொல்லாமை, வாய்மை, கள்ளுண்ணாமை, அடக்கமுடைமை, நடுவுநிலைமை, பகுத்துண்டல், தூய்மை முதலிய கட்டுப்பாடுகளை மேற்கொள்ளுதலாம், எட்டுத் திசையும் மேகங்கள் கூடி மழையைக் கொட்டினாலும், இயமத்தில் தவறக்கூடாது. இயமத்தில் உறுதியாய் நின்றவர்கள் சிவபெருமானுடைய சாலோகத்தை அடைவார்கள். அவர்களுக்கு எது விருப்பமோ அதனை அறிந்து செய்வான் இறைவன்,

**நியமம் :**

தவம், ஜபம், சந்தோஷம், ஆஸ்திகம், தானம், சிவவிரதம், சித்தாந்தக் கேள்வி, சிவபூஜை, மதி, நாணம் இப்பத்தினையும் தவறாது மேற்கொள்ளுதல் நியமம். இவற்றை மேற்கொள்ளும்பொழுது, ஒளியான சிவத்தையும், அதன் ஆற்றலாகிய சத்தியையும் தியானித்தல் அவசியம். நியமத்தில் தவறாதவர், முனிவர்கள் எதிர்கொண்டழைக்கச் சிவபதம் சேர்வர்.

**ஆசனம் :**

ஆசனம் என்றால் "இருப்பு" எனக் கூறலாம். காற்றின் ஒழுங்குக்கும். உடல் நோயற்று நீடு வாழவும், உணர்வு ஒன்றவும் ஆசனங்கள் அவசியம். ஆசனங்கள் பத்மாசனம், பத்திராசனம், குக்குடாசனம், சிம்மாசனம் கோமுகம், சுவஸ்திகாசனம், வீராசனம், சுகாசனம் என எட்டுவகை. இவற்றுள் குக்குடாசனம் ஒழிந்த மற்ற ஏழும் சிறந்தன; உத்தமமாயின; இவையன்றி ஆசனபேதங்கள் பல. ஆசனங்களில் வல்லவர்கள் வானவர் தலைவராய், முழவும் குழலும் ஒலிக்க, இங்கேயே இருந்து தன்னுள்ளே இன்பம் பெறுவர்.

**பிராணாயாமம் :**

பிராண – ஆயாமம்: மூச்சுக் காற்றைக் கட்டுதல. மூச்சை அடக்கினால் மனமும் அடங்கும், அதனை மடை மாறிப் பாய்ச்சிப் பழகினால், மன ஒருமைப்பாடு உண்டாகும்.

ஒரு ஊரில் ஒரு நாட்டாண்மைக்காரன், அவனுக்கு ஐந்து வேலையாட்கள்; அவனுக்கு ஒரு குதிரை: அது உண்மையானவருக்கு உதவும்; பொய்யானவரைக் கீழே விழச்செய்யும்.

சொந்தக்காரன் நல்லவன்; குதிரை இரண்டு. அவற்றை வீசிப்பிடிக்கும் தந்திரத்தை யாரும் அறியார். குருஉபதேசம் கிடைத்தால் பிடித்து விடலாம்; அவை வசப்படும்.

பறவையைக் காட்டிலும் வேகமாய்ச் செல்லும் குதிரை ஒன்று. அதன்மீது ஏறினல் கள்ளுண்ணாமலேயே களிப்புறலாம்; துள்ளிநடக்கலாம்; சோம்பல் இல்லாமல் இருக்கலாம். உணர்ச்சியுள்ளோருக்கு உள்ளதைச் சொன்னேம்.

பிராணயாமத்தில் பூரகம், கும்பகம், ரேசகம் என மூன்று நிலைகள் உண்டு. பூரகம்: இடது நாசி வழியாக 16 மாத்திரை காற்றை உள்ளுக்கு இழுத்தல். கும்பகம் இழுத்த காற்றை 64 மாத்திரை காலம் உள்ளுக்கு இருத்துதல். ரேசகம் ; 32 மாத்திரை காலம் மிக மெதுவாக வெளியேவிடுதல் இப்படி மூச்சுக்காற்றை அடக்கி ஆண்டால், பழுத்த உடல் பிஞ்சாகும்; உறுப்பு சிவக்கும்; நரை கருக்கும்; சாக்காடு இல்லை; கடவுள் அருளைப் பெறலாம். பிராணயாமம் செய்பவர்கள். தேவர் எதிர் கொள்ள, "இவன் எங்கள் தலைவன் ! தலைவன் !" எனப் பாராட்ட, இன்பக் கலவியில் என்றும் இருப்பர்.

**பிரத்தியாகாரம் :**

விஷயங்களை நோக்கி இந்திரியங்கள் வழியாக ஓடும் மனத்தைத் தடுத்து நிறுத்தல் பிரத்தியாகாரம்.

மூலாதாரத்தில் இருக்கும் குண்டலினியில் செஞ்சுடராக இறைவன் எழுந்தருளியிருக்கின்றான். அவனை நாசிக்குப் பன்னிரண்டங்குலம் கீழாகத் தியானத்துப் பழகினால் தேகத்திற்கு அழிவில்லை; கடவுள் தானே வந்து குடியிருப்பார், பிரத்தியாகாரம் பொருந்த ரேகை போல் ஒளி தோன்றினால், அதனைப் பரானந்தம் எனக் கொள்க. கழுத்திடத்தில் நிலவொளி வீசினால் அவனுடைய உடல் அழியாத மயமாகும். விழித்த கண் விழித்தபடியே இருக்க மூலாதாரத்திலுள்ள குண்டலினியை எழுப்பி மேற்கொண்டு சென்று பிரமரந்திரத்தில நிறுத்தினால் காலத்தை வெல்லலாம், இவ்வாறு குண்டலினி நிலையைப் பிரித்து உணரும் பொழுது உண்டாகும் நிலைகளைத் தியானித்தல், அதோடு ஒன்றாதல், உள் அதனை நோக்கல் இவை பிரத்தியாகாரத்தின பெருமைகளாகும். பிரத்தியாகாரம் வல்லவர்களுக்கு உலகெல்லாம் உள்ளேயே தோன்றும். அறியாமை நீங்கி ஆண்டவனை அடையலாம். இவன் மோட்சம் அடையுங்காலத்து தேவரெல்லாரும் '' இவன் யார் ? யார் ?'' எனக்கேட்க, சிவன் '' நாமே இவன் '' என்று சொல்ல, எல்லோரும் எதிர்கொள்ள, இறைவனை உண்மையாகக் காணுவர்.

**தாரணை :**

விஷய சுகத்திலிருந்து மனத்தைத் திருப்புவதோடு சைதன்ய வஸ்துவாதிய கடவுளிடத்து மனத்தை நிறுத்துதல். கோணல் மனத்தை ஒன்றாகக் கட்டி, முதுகந்தண்டோடு பிரம்மரந்திரம் வரை கொண்டுபோய் அதற்கு மேற்பட்ட பெருவெளியில பார்க்கச் செய்து

கண்ணிருந்தும் காணாமல், காதிருந்தும் கேளாமல் இருத்தல் தாரணையாம், இதில் பழகுவது நாளுள் நீடிக்கும் வழி.

உச்சியில், எல்லாவற்றையும் பேதிக்கும் ஒரு பெண் பிள்ளை இருக்கிறாள், மூலத்தில் ஒரு மூர்த்தி இருக்கிறார். அவரைக் கிளப்பி அவளுடன் சேர்த்தால் பாலனாவான்.

காற்றைத் தாரணையில் அபானமாகக் கீழ்நோக்கிப் போகாமல் எழுப்பி இடை பிங்கலைகளுக்கு இடையான சுழுமுனையில் நிறுத்தி மடைவாயில் கொக்குப் போல் இருந்தால் ஓர் ஊழி உயிர் வாழலாம்.

வாயைத் திறவாதவரது மனத்தில் ஒரு மாடு நிற்கிறது. வாயைத் திறப்பவர் காற்றை வெளியிலே பாய்ச்சுவார்கள். வாயைத் திறக்காதவர் சுழுமுனை வரையில் காற்றை ஏற்றுவார்கள். அதனால் நெடுங் காலம் வாழ்வார்கள். அப்படிக் காற்றை வெளிப் படுத்தாதவர்களுக்கு நவத்துவாரங்கள் இருப்பினும், அவர்களுக்கு உடல் பள்ளியறை போல. தாரணையாவது நல்வழிப் படுத்துவது; நமன் வரும் வழியை அடைப்பது.

**தியானம் :**

தியானமாவது இடைவிடாத நினைவு. அது, ஒரு காமி தன்னால் காதலிக்கப்பட்டவளை எப்பொழுதும் எண்ணியிருப்பதைப்போல, இறைவனை எண்ணிக் கொண்டிருப்பதே. காமுகன் அவளை ஆதாரமாகக் கொண்டு நினைவைச் செலுத்துவதைப்போல, இறைவன் திருவடியை ஆதாரமாகக் கொண்டு இவர் மனம் சென்று

**SIDDHIS :**

Siddhis are eight in number - Anima, Lagima, Magima, Prapti, Karima, Prahamiya, Yeesatva and Vasitva The atributes of these siddhis: Anima, flying: Lagima, Magima, expansion and pervasiveness: Prapti, to secure everything without moving: Karima, to reduce the primordial elements within oneself to a point without magnitude as will as to expand: Prahamiya, to penetrate like light rays; Vasithva, to secure any desired object.

It is very necessary to keep the body fit and make it invulnerable to death and decay The physical frame cannot be disregarded with impunity as the soul and the Divine Energy dwell within it. The practices such as sucktug water in for cleansing the bowels and other organs enable the body to acquire lightnes and resilience. The world becomes indesrructible when reduced to an atom· a point with magnitude; likewise, contraction of the body to the point of nothingnes gives it deathlessness; and, such contraction is possible through Pranayama. Longevity can be tested by joining hands over the heads in the the form of anjali. There is no fear of death in the near future if the hands joined as above stay erect; if they slope a little death is not distant; if they surge too much, death is lurking round the corner.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருமூலர் திருமந்திரம்

## ஸ்ரீ பஞ்சாக்ஷரதீபம் என்னும் உரையுடன்

### விநாயகர் காப்பு

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்து இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே

எல்லா நூற்கும் பாயிரம் உரைத்து நூல் உரைக்க எனல் மரபு. 'ஆயிரமுகத்தான் அகன்ற தாயினும் பாயிரம் இல்லது பனுவல் அன்றே'' என்பது விதி. ஆதலால் இந்நூற்கும் பாயிரம் இன்றியமையாதது ஆயிற்று. ஆயின் அவ்வப்போது அநுபவங்கூறுகின்ற திருமூலர் பாயிரம் கூறவேண்டியது எற்றுக்கெனின், அவர் பாயிரம் கூறினர் அல்லர்; அருள்வழி நின்று அவர் கூறிப்போந்த முறை பாயிரமாக அமைந்தது. அவ்வளவே என்பது.

பாயிரமாவது நூலுக்கு வேண்டிய இன்றியமையாத கருத்துக்களை நூற்குப் புறமாக நூற்குத் தந்து உரைப்பது. அப்பாயிரம், பொதுவும் சிறப்பும் என இருவகைத்து. அவற்றுள் இப்பாயிரம் திருமந்திரம்

மூவாயிரத்திற்கேயுரிய சிறப்புப்பாயிரம் என்று உணர்க. என்னை? தெய்வ வணக்கமும், செயப்படு பொருளும் கூறுகின்றது ஆகலின். தெய்வவணக்கமாக ஆசிரியர் சிவயோகியார் கூறுவது என்னையோவெனின், பரசிவ இயல்பும், மூவர் மூர்த்திகளின் முறையும் கூறுகின்றனர். செயப்படு பொருளாகக் கூறுவன யாவையோ எனின், வேதாகமச் சிறப்பும். வழியும், தொகையும் வரலாறும் அவையடக்கமும் முதலிய ஏழுமாம்.

அவற்றுள். இம்முதல் திருமந்திரம் என்னுதலிற்றோ எனின், தெய்வ வணக்கமாக விநாயகர் வணக்கம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : ஐந்து திருக்கரங்களையுடையவரும், யானைமுகத்தை யுடையவரும், இளம்பிறைச் சந்திரனையொத்த ஒற்றைத் தந்தத்தை உடையவரும், பரசிவ மூர்த்தியின் மூத்த குமாரரும், ஞானச் சிகரமாக விளங்குபவரும் ஆகிய விநாயகக் கடவுளது திருவடிகளைச் சித்தத்துள் வைத்துச் சேவிக்கின்றேன் என்றவாறு.

இத்திருமந்திரத்துள் ' ஐந்துகரத்தனை என்பது முதல் 'நந்தி மகன்றனை ' என்பது வரையுள்ள பகுதிகள் விநாயகப் பெருமானுடைய உருவத் திருமேனியைக் குறிப்பன. ஞானத்தின் கொழுந்து என்பது அருவத் திருமேனியைக் குறிப்பது ' அடி , என்பது அருவுருவத் திருமேனியை அறிவிப்பது. எங்ஙனம் எனின், எயிறும் கரமும் முகமும் கூறிச் சிவனுக்கும் இவருக்கும் தந்தை மகன் முறையும்கூறலின் உருவத் திருமேனியின் இயல்பினையும், ஞானத்தின்

கொழுந்து என்பது அறிவே யுருவமாக இருக்கும் நிலையை உணர்த்தலின் அருவ இயல்பினையும், 'அடி' என்பதற்குத் திருவடி திருவருள் என இரண்டாகவும் பொருள் கொள்ளப்படுதலின் அருவுருவ இயல்பினையும் உணர்த்திற்று என்றறிக. இவ்வண்ணம் சதா சிவசிந்தனையிலிருந்து சிவமாம் பெரும்பேறு எய்திய திருமூலதேவ நாயனார், சிவ பெருமானுடைய திருக்குமாரராகிய விநாயகப் பெருமான் சிவத்தின் வேறல்லர் என்பதை அநுபவ ஞான வாயிலாக அறிந்தவர் ஆதலின் சிவத்திற்குள்ள மூன்று திருவடிவங்களும் விநாயகருக்கும் அமைந்துள்ளன என்று விளக்கியருளினார் என்க.

இவற்றுள் உருவத்தை முற்கூறியது எற்றுக்கு எனின், யானையைக் காட்டி அதன் ஒலியைக் கேட்ப்பார்போல பண்டை நற்றவத்தால் தோன்றிப் பரமனைப் பத்திபண்ணும் மரபில்வந்த சகலான்மாக்களுக்கு எளிதில் ஈடுபாடுண்டாகத் திருவுளம் பாலித்து உருவத்தை முற்கூறினர் என்க.

அற்றேல் கரத்தினை முற்கூறியது எற்றுக்கெனின் இறைவர்க்குக் கரம் என்பன யாவும் கிரியா சத்தியைக் குறிப்பனவாகலின் என்க. ஐந்துகரங்களும் படைத்தலாதி ஐந்தொழிலை ஆற்றுவன. எங்ஙனம் எனின், பாசம் தரித்த கரம் படைத்தற்றொழிலைக் குறிப்பது. அங்குசம் ஏந்தியகரம் அழித்தற்றொழிலைச்செய்வது. அபயகரம் அஞ்சாமையளித்துக் காப்பது. மோதகம் ஏந்தியகரம் திரோதானமாகிய மறைத்தலையறிவிப்பது. வரதகரம் அருளலை அறிவிப்பது. இங்ஙனம் விநாயகப் பெருமானுடைய

ஐந்து திருக்கரங்களும் ஐந்தொழில் ஆற்றலை அறிவிப்பன என்க.

யானை முகத்தனை என்றது, யானை நாதத்தில் தோன்றியதாதல்போல விநாயகப் பெருமானும் பரநாதத்திற்றேன்றிப் பிரணவ வடிவினராதலின் கூறினர் என்க. அவருக்குப் பரஞானமும் அபர ஞானமும் கொம்புகளானமையின் ' எயிற்றனை ' என்றார். சிவனே இடையூறுநீக்க எம்மால் ஏத்தப் பெறும் மூத்த பிள்ளையார் ஆயினமையின் நந்தி மகன் எனப்பெற்றார். ' தானே பிள்ளையாகிறான் ' என்பது சுருதியாகலின்.

அருவநிலையில் நந்தி ஞானமே வடிவமாக இருப்பராதலின் அவர் மகன் ஞானத்தின் கொழுந்து எனப் பெறுதல் முறையே. அடி, திருவருளாக என் புந்தியிற்புக, அதனைப் பெயராது நிறுத்திப் போற்றுகின்றேன் என்றார். போற்றுகின்றேன் என்றது மெய்யானும் வாயானும் நிகழ்த்திய வணக்கம் கூறியது. ' புந்தியில் வைத்து ' என்றது மனவணக்கம் கூறிற்று. இங்ஙனம் திரிகரணத் தானும் செய்யப்பெறும் வணக்கத்தைத் தெரிவித் தருளியபடி.

பின்னமறநின்ற பெருமானைப் பார்க்கின்ற சிவ யோகியார், ஆன்மாக்கள் மீதுவைத்த எளிவந்த பெருங்கருணையால் பதிகரணமாக இருந்த நிலை யிலேயே, அவனுரை தனதுரையாக உரைக்கின் றவர், காப்புக் கூறவேண்டுவது எற்றுக்கு எனின், உலகினுக்கு உபதேசிக்கின்றார் ஆதலின், உலகவர் மேற்கொள்ள வேண்டிய வரம்பழியாமைப்

பொருட்டு என்றுணர்க. சிவயோக வாயிலாகச் சிவஞானத்தைத் தெரிவிக்கும் சிவயோகியார் ஆதாரயோகத்தின் அடிநிலையாகிய மூலத்தலத்து முக்கோணச்சக்கரத்து நாலிதழ்த் தாமரையிலே வ ஶ ஷ ஸ என்ற பொன் மயமான எழுத்துக்களோடு கூடிய தாமரைப் பொகுட்டிலே சிசுவடிவப் பிரம மாகிய விநாயகர் எழுந்தருளியிருப்பதை அநுபவத் தால் அறிந்த வராதலின். யோகநூலை உணர்த்த முற்பட்டவர் மூலாதாரக் கணபதியை முதற்கண் வணங்குதல் இன்றியமையாததேயாம் என்க.

இந்து - மதி. பிறை - அதன் ஏகதேசமாகிய பகுதி. இம்மந்திரம் ஓராண்டுயோகிருந்து பகிர்முகப் பட்டபோது பகரப்பெற்றதாதலின் இன்னதற்கு இது பயன் என்று கருதாது போற்றுகின்றேன் எனப் பொதுமையின் புகலப்பெற்றது; ஞானவாயிலின் நிற்பார் நாடவேண்டுவது நிஷ்காமியவினை யாதலின்.

## சிறப்புப்பாயிரம்

### 1. கடவுள் வாழ்த்து

ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந் தான்ஐந்து
வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்
சென்றனன் தானிருந் தானுணர்ந் தெட்டே

இம்மந்திரம் என்னுதலிற்றோ எனின், பரசிவம் எல்லாமாயிருக்கும்என்பது உணர்த்துதல் நுதலிற்று

இ - ள் : பரசிவம் ஒன்றாயும், அவனும் அவனுடைய இன்னருளும் என இரண்டாயும், பிரமா விஷ்ணு ருத்திரன் முப்பொருளினுள்ளும் வீற்று இருக்கும் நிலையில் மூன்றாயும் நான்கு நிலைகளாக உணரப் பெற்றும், ஐம்பொறிகளை வென்றும், அறு வகைச் சமயத்து ஓர்க்கும் அவ்வவர் பொருளாய் ஆறுதாரங்களையும் கடந்தும், ஏழாவதாகிய துவாத சாந்தப் பெருவெளியில் சென்றும் அட்டமூர்த்தி சொரூபமாய் உணரப்பெற்றிருந்தார் என்றவாறு.

ஒன்று என்பது எண்ணுருபெயராய்ச் சிவபரம் பொருளை உணர்த்தி நின்றது. அவன் என்று சுட்டி அறியப்படுந்தன்மை இறைவற்கு இன்றாதலின் அவன் தானே என்றல் எங்ஙனம் இயையுமெனின், 'ஒன்று' என அஃறிணை வாய்பாட்டால் கூறிய திருமூலதேவர் அவன் என உயர்திணை வாய்பாட்டானும் கூறி உயர்திணை அஃறிணைப் பொருள்கள் எல்லாவற்றினும் கலந்தும் கடந்தும் இருக்கும் நிலையை உணர்த்துகின்றாராதலின் உயர்திணைகளோடு கலந்த நிலையில் அவன் எனச் சுட்டியறியப் பெறுதல் தவிர்த்து வேறு எங்ஙனம் வியவகரிக்க இயலும் என்பது நோக்கி அமைக. தானே என்ற ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது. இதனுடன் "ஓருருவாயினை" என்ற திருஞானசம்பந்த சுவாமிகள் திருவெழுகூற்றிருக்கையின் பகுதியையும் இணைத்து நோக்குக. "எல்லாத் தத்துவங்களையும் கடந்து வாக்கு மனாதிகட்கு எட்டாமலிருந்துள்ள தற்சொரூபம்" என்ற அதன் பழைய உரையையும் சிந்திக்க.

இரண்டவன் இன்னருள் என்றது அவனும் அவனுடைய அருளும் என இரண்டு என்றவாறு. சிருட்டி யுன்முகமாக நின்ற சிவம் தன்னினின்றும் அருளைப் பிரித்து அதற்குச் சத்தியெனப் பெயர் அமைத்து இருபொருளாய் எழுந்தருளியிருக்கும் ஆதலின் இங்ஙனம் கூறப்பெற்றதென்க. "மாணுங் காரத்து ஈரியல்பாயினை" என்றதும் இக்கருத்தை விளக்குதல் காண்க. "தற்சத்தியைக் கொண்டு சர்வானுக்கிரகமான பஞ்சகிருத்தியங்களை நடத்த வேண்டிச் சத்தி சிவமாகி இரண்டுருவாயினை" என்ற அதனுரையையும் நன்கு ஓர்க. இஃதறியாதார் அறக் கருணையும் மறக்கருணையும் என அவனருள் இரண்டென உரைப்பர். கயக்கும் மருந்தும் இனிக்கும் மருந்தும் நோய்நீக்கமாகிய ஒரேபயனை அளிக்கின்றமையின் மருந்து என்ற பொதுமையான் ஒன்றுமேயன்றி வேறாகாமைபோல, இருவகைக் கருணையும் ஒரே பயனையளித்தலின் அருளை யிரண்டாக எண்ணுதல் இயைபில் கூற்றாம். அன்றியும் ஒன்றவன் தானே என்றதன்பின் கருணையை இரண்டாக்கித் தொகைதரின் பொருள் மூன்றாமே அன்றி இரண்டாகாமையும் எண்ணி அவனும் அவன் இன்னருளுமாகப் பொருள் இரண்டேயாதல் தெளிக. ஈண்டுச் சிவம் சத்தனும் சத்தியாயும் இருக்கின்ற நிலை உணர்த்தப் பெற்றது. மரமும் காழ்ப்பும்போலச் சத்தி சிவத்தினோடியைந்து நிற்றலைச் சித்தியார் வாக்குக் கொண்டு தெளிக.

"सहैतावानास यथा स्त्रीपुमांसौ संपरिष्वक्तौ स इममेवात्मानं द्वेधा पातयात्ततः पतिश्च पत्नी चाऽभवतां तस्मादिद मर्धबृगलमिव स्व इति हस्माह"

என்பது பிருகதாரண்யகம், இதன் பொருள் அவ்விராட் புருஷன் பெண்ணும் ஆணுமாக ஈருருவாயினன்; தனது உடலை இரண்டாகப் பிரித்துக் கொண்டான்; அதிலிருந்து பதியும் பத்தினியும் உண்டானார்கள்; ஒரு கடலையின் இருபாதி போன்றது அவர்கள் மேனி என்பது. இதுவும் இரண்டவன் இன்னருள் என்பதை நன்கு விளக்கும்.

மூன்றினுள் நின்றனன் என்றது பிரம விஷ்ணு ருத்திரர்கள் அவ்வத்தொழிலைச் செய்ய அவரவர்கள் இடமாகச் சிவம் விளங்கி நின்று அநுக்கிரகிக்கின்றது என்பதை விளக்குகிறது. பிரமன் சிருட்டித் தொழிலைச் செய்யவும். திருமால் திதித்தொழிலை இயற்றவும் உருத்திரன் சங்காரத்தொழிலை நடத்தவும் அதிகார சக்தியை அவர்களுக்கு வழங்கிப் பொருள் மூன்றாய் நிற்கின்றார் என்பது கருத்து. இதனைப் "பவமலி நினைவொடு பதுமநன் மலரது மேவிய பரன்" "உலகுகள் நிலைபெறும்வகை நினைவொடு அலைகடல் நடு அறிதுயில் அமர் அரியுருவியல் பரன்" 'அழிவகை நினைவொடு முதலுருவியல் பரன்" "படைத்தளித் தழிப்ப மும்மூர்த்திகளாயினை" எனவரும் சம்பந்த சுவாமிகள் தேவாரத்தானும், "மூவராய் நின்ற தோரார்" என்ற சித்தித் திருவாக்கானும் தெளிக. சிலர் சாத்துவிகாதி முக்குணங்களோடு இயைதலின் எனப் பொருள் காண்பர். குணங்களைப் பொருந்துதல் இறைவற்கு இயல்பன்றாதலானும், பிரமனாதி மூவர்க்குள்ள முக்குணங்கள் சிவத்திற்கும் சேர்ந்தன எனின், கல்ப்பால் சிவம் விகாரப்படாது ஆகையானும் அவ்வுரை பொருந்தாதென மறுக்க.

நான்கு உணர்ந்தான் என்பதற்கு உலகினை இறந்து நிற்றலும், உலகெலாம் தன்னுருவில் தோன்றி யொடுங்க நிற்றலும், உலகுக்கு உயிராய் நிற்றலும் உலகாய் நிற்றலுமாகிய நான்கு நிலைகளாக உணரப்படுபவர் என்பது பொருள். விசுவாதிகன்; விசுவகாரணன், அந்தர்யாமி, விசுவரூபி என்ற நான்காக உணரப்படுபவர் எனபது கருத்து. இங்ஙனம் அன்றி நான்கு வேதங்களையும் உணர்ந்தவன், நான்கு வேதங்களாலும் உணரப்பட்டவன் எனப் பொருள் உரைக்கின் 'வேதங்கள் ஐயா என ஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே'' ''அருமறைக்கும் எட்டாத தத்துவனை'' என்பன போன்ற அளவற்ற சுருதிகளோடு மாறுபடுதலானும், வேதங்களையுணர்ந்தான் என்றல் இறைவற்கு ஒரு பெருமை யன்றாதலானும் வேதங்களால் உணரப்பட்டவன் எனின் அவனது எல்லையற்ற ஆற்றலுக்கும் இயல்புக்கும் உரைப் பிரமாணத்துள் அடங்கியதான இழுக்காம் ஆதலானும், அங்ஙனம் உரைக்கப்படும் சிற்சில பிரமாணங்களும் உபசாரமாம் ஆதலானும், அவ்வுரை பொருந்தாது என்க.

ஐந்து வென்றனன்: ஐந்து பொறிகளும் தம் புலன்களில் சென்றுபற்றாதே வென்று அடக்கியவன் என்பது. பகைவனை வென்றான் என்புழிப்போல இந்திரியங்களைவென்றான்; அதாவது இந்திரியங்கள் எம்மனோரைப்போன்று இவனுக்கும் சேட்டித்தன; அவற்றை வென்றான் எனக் கருதப்பெற்று இறைமைக்கு இழுக்காமே எனின், ஆகாது; இயல்பே வெல்லுதலும் சேட்டிக்க வெல்லுதலும் என வெல்லுதல் இருவகை. அவற்றுள் இது

இயல்பே வெல்லுதலை உணர்த்திற்று ஆகலின். ஐந்தவத்தைகளை வென்றவன் என்று பொருள் கூறுவாரும் உளர்.

ஆறுவிரிந்தனன்: ஆறு ஆதாரங்களிலும் விளங்குகின்ற விநாயகர் முதலான மூர்த்திகளாக விரிந்தனன் என்பது. மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்கினை என்பன ஆறாதாரம். அவற்றுள் முறையே விநாயகர், பிரமன், திருமால், உருத்திரன், மகேசுரன், சதாசிவன் என்ற மூர்த்திகள் விளங்குகின்றனர். இங்ஙனமன்றிப் பிரத்தி பிரத்யாகாரம், துல்யம். துல்யாதீதம். வித்தை, அவித்தை என்ற ஆறு பதங்களிலும் விரிந்தவன் எனலுமாம். மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்வம், கலை என்ற ஆறு அத்துவாக்களாக விரிந்தவன என்றும் உரை கூறுவர். ஆறத்துவாக்களும் இறைவர்க்குக் குருதியும் முடியும் துவக்கும் முதலியனவாகக் கூறப்படுகின்றனவேயன்றி, திருமேனியாகக் கூறப்படாமை தெளிக. அங்ஙனமாயின் " மந்திரமத்துவாவின் மிகுத்தொரு வடிவமாகத் தந்ததென் அரனுக்கு என்னின் " என்பதனொடு முரணுமன்றோ எனின், அத்துவாவும் வடிவென மறைகளெல்லாம் வைத்தது உபசாரமாதலை நோக்கி அமைக.

ஏழும்பர்ச் சென்றனன்; மேற்கூறிய ஆறாதாரங்களுக்கு மேற்பட்ட ஏழாவதாகிய துவாதசாந்தத்தில் விளங்குபவன் என்பது. ஏழுலகத்தினையும் கடந்தவன் என உரைக்கின் பொருட்சிறப்பின்மை அறிக.

எட்டு உணர்ந்திருந்தான்; மண், புனல், அனல், கால், வெளி, சூரியன், சந்திரன், யமானன் என்கின்ற அட்டமூர்த்தி சொரூபமாக உணரப்பெற்று அவற்றுள் கலந்திருந்தான் என்பது. எட்டு என்னும் எண்ணின் வடிவம் அ என்பது. ஆதலின் அகரமாக உணரப் பெற்றிருந்தான் எனலும் ஆம். "ஆரும் அறிவார் அகரம் அவனென்று" என்பதும் நோக்குக. "எட்டிஞேடு இரண்டும் அறியேன்" என்ற எட்டாம் திருமுறையையும் ஈண்டு எண்ணுக. அகரம் சிவமாதலே "அகர உயிர்போல் அறிவாகி எங்கும், நிகரிலிறை நிற்கும் நிறைந்து" என்ற திருவருட் பயன்கொண்டும் தெளிக. எண்குணங்களையுணர்ந்து இருந்தான் எனப் பொருள் உரைப்பர் சிலர்.

இம்மந்திரம் எண்ணலங்காரம்பட நின்றமை காண்க. இம்மந்திரமே திருமந்திரமூவாயிரத்தின் முதல் மந்திரமாக அமைந்துள்ளது எனச் சேக்கிழார்பெருமான் திருவாக்கு தெரிவிக்கும்.

**போற்றிசைத் தின்னுயிர் மன்னும் புனிதனை**
**நாற்றிசைக் கும்நல்ல மாதுக்கு நாதனை**
**மேற்றிசைக் குள்தென் திசைக்கொரு வேந்தனும்**
**கூற்றுதைத் தானையான் கூறுகின் றேனே** **2**

இம் — எனின், இறையியல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : போற்றி எனக் கூறிய இன்னுயிரை இடமாகக் கொண்டு நிலைபெற்ற புனிதனை, நான்கு திசைகளுக்கும் உமாதேவிக்கும் தலைவனை, மேலாகிய

திசை இரண்டனுள் ஒன்றாகிய தெற்குத்திசைக்கு மன்னனாகிய கூற்றுவனை உதைத்தவனை அடியேன் புகழ்கின்றேன் என்றவாறு.

இம்மந்திரம் இறைவன் அன்பரகத் தாமரையுள் உறைபவன்: உலகங்கட்கெல்லாம் தலைவன்; கால காலன்; உமாபதி என இறையியல்பை விளக்கிற்று. எல்லாம் உயிராயினும் போற்றி இசைத்த உயிரே இறைவன் விளங்கிநிற்கும் இடமாம் ஆதலின் அந்த உயிர் இன்னுயிர் எனப்பட்டது. புனிதன் - இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன். போற்றிசைத்த + உயிர் = போற்றிசைத்துயிர் எனப் பெயரெச்சத்து அகரம் விகாரத்தாற் றொக்கது; ' புகழ்புரிந்தில்லிலோர் '' என்புழிப் போல, நான்கு திசையுள் அடங்கியது உலகமாதலின் நாற்றிசைக்கும் நாதன் உலகநாதன் என இங்ஙனம் கூறப்பெற்றது. அனுக்கிரக சத்தியாக இருந்து ஆன்மாக்களுக்கெல்லாம் அருள்ஞானம் ஊட்டும் தாயாதலின் ' நல்ல மாதுக்கு நாதன் ' என்றார்.

தெற்கும் வடக்கும் பெருந்திசையாதலின் மேற்றிசை எனப்பட்டது. திசையொடு திசை புணருங்கால் தெற்கையும் வடக்கையுமே நிலைமொழியாக நிறுத்திப் புணர்த்தலைத் தொல்காப்பியத்துக் காண்க. கூற்று உதைத்தான் என்றது காலத்தை வென்றவன் என்ற குறிப்பு. கூற்று - ஊனையும் உயிரையும் கூறுசெய்பவன். யான் கூறுகின்றேன் என்றது என்மனத்துத் தியானப்

பொருளாயுள்ள பரம்பொருளை நான் போற்று கிறேன்; நீங்களும் போற்றி உய்யுங்கள் என்னும் கருணைக்குறிப்பு.

**ஒக்கநின் றானை உலப்பிலி தேவர்கள்**
**நக்கனென் றேத்திடு நாதனை நாடொறும்**
**பக்கநின் றார்அறி யாத பரமனைப்**
**புக்குநின் றுன்னியான் போற்றிசெய் வேனே. 3**

இம் – னின், இதுவும் இறையியல்பு உணர்த் துதல் நுதலிற்று.

இ - ள் : ஆன்மாக்களுடன் பிரியாதே உடன் இருப்பவனை, அமரர்களாகிய தேவர்களால் நக்கன் என்று துதிக்கப்படுகின்ற தலைவனை, நாடோறும் அணுக்கத்தி லிருப்பவர்களாலும் அறியப்படாத பரம்பொருளை அடியேன் அணுகிப் பரவுதல் செய் வேன் என்றவாறு.

ஒக்க நின்றான் – உயிர்களுக்கு உடனாய் நின்று உணர்த்துபவன். உலப்பில் இத்தேவர்கள் – அழிவு இல்லாத இந்தத் தேவர்கள். அமரர் என்ற உபசார வழக்குப்பற்றி உலப்பில் என உரைக்கப்பெற்றது என்க. நக்கன் – நிர்வாணி. உலகமே இறைவன் திருமேனி; திக்குகளே அவனது ஆடை. ஆதலின் நக்கன் என்று அருளினார். பக்கம் நின்றார் அறியாத பரமன் என்றது தாமரையோடு உடனிருந்தும் தவளை அதன் மணத்தையும் தேனையும் அறியாத வாறுபோலப் பெருந்தேவர் எல்லாரும் திருவணுக் கன் திருவாயிலிலேயே காத்துக்கிடக்கும் புண்ணி

யத்தை எய்தியும் இறைவனின்சொரூப இலக்கணம் தெரிந்து உய்ய மாட்டாராயினார்கள். என்னே இவர்கள் பேதமை! என்று இரங்கிக்கூறி, பரமனது உயர்வும் தேவர்களது மாட்டாமையும் தெரிவித்தது

புக்கு-அவர் திருமுன் புகுந்து. நின்று-பிரியாதே நின்றுஎன்றுமாம். உன்னி-தியானித்து. புக்கு நின்று என்ற செய்தெனெச்சத்தைப் புக்கு நிற்க எனச் செயவெனெச்சமாக்கி இறைவன் என்மீது வைத்த எளிவந்த கருணையால் என்மனத்தே புக்கு நிற்க. அவரைத் தியானித்துப் போற்றுவேன் எனலுமாம்.

அகலிடத் தார்மெய்யை அண்டத்து வித்தைப்
புகலிடத் தென்றனைப் போதவிட் டானைப்
பகலிடத் தும்இர வும்பணிந் தேத்தி
இகலிடத் தேஇருள் நீங்கிநின் றேனே. 4

இம் - எனின். பயனும் உபாயமும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அகன்றவுலகத்து நிறைந்துள்ள மெய்ப் பொருளை, அண்டங்களுக்கெல்லாம் வித்தாக இருப் பவனை, அடைக்கலமாகப் புகக்கூடிய இடத்திலே அடியேனைச் செல்லவிட்டவனை. பகலிலும் இரவிலும் வணங்கித் தோத்தரித்து மாறுபட்ட இப்பூமியின் கண் இருள்நீங்கப்பெற்று உய்ந்தேன் என்றவாறு.

காணப்படுகின்ற இப்பிரபஞ்சத்துள் அனைத்தும் அழிய, என்றும் நிறைந்த நித்தியப் பொருளா

யுள்ளவன் இறைவன் ஒருவனே என்பார் 'அகலிடத்து ஆர் மெய்யை' என்றருளினர். ஆர்தல் நிறைதல். உலகம் யாவையும் தோன்றிய முறையே மாயையில் ஒடுங்க, மாயையும் சிவசத்தியுள் ஒடுங்க, அதுவும் சிவத்தில் ஒடுங்க, புனருற்பவம் செய்யுங்கால் தோற்றிய திதியே ஒடுங்கியினின்றும் உளதாவது ஆதலின் 'அண்டத்து வித்தை' என்று அருளினர், புகலிடத்து என்றனைப் போத விட்டானை - அல்லற் பிறவிச் சுழிப்பட்டு அலறு வேனுக்கு நல்ல பாதமே புகலிடம் என அறிவித்துத் தடைநீக்கி அங்கே புகுதரும் உபாயத்தையும் உதவி யருளிய தலைவனை.

பகலிடத்து என்பதில் காலம் இடமாயிற்று. பணிபவராகிய பக்குவிகட்குப் பகலும் இரவும் தோன்றுமையின் 'பகலிடத்தும் இரவும் பணிந்து ஏத்தி' என்றார். மாணிக்கவாசகர் பெருந்தகை 'பகல் இரவாவதும் அறியேன்' என்றமையும் காண்க. இகலிடத்தே - பகலும் இரவும், ஒளியும் இருளும் துன்பமும் இன்பமும், வெம்மையும் தண்மையுமாக மாறுபட்டிருக்கின்ற உலகத்தில், இருள் நீங்கி— அறியாமையைப் பயக்கும் ஆணவ இருள் நீங்கப் பெற்று; என்றது ஞான சொரூபியாய் என்பதாம். இறைபணியில் நின்றார்க்கு மலவாதனை தாக்காது ஆதலின் இங்ஙனம் கூறப்பெற்றது என்க நீங்கி நின்றேன் என்பதனை ஒருவினையாகக் கொள்ளாது. நீங்கி அதனால் நிலைபேறுடையன் ஆயினேன் என இருவினையாக்குக.

**சிவனொடொக் கும்தெய்வம் தேடினும் இல்லை**
**அவனொடொப் பார்இங்கு யாவரும் இல்லை**
**புவனம் கடந்தன்று பொன்னொளி மின்னும்**
**தவனச் சடைமுடித் தாமரை யானே.** 5

இம் — எனின். *சிவபரத்துவம் கூறுதல் நுதலிற்று*

இ - ள் : *எல்லாப் புவனங்களையும் கடந்து, அன்று பொன்போல ஒளிவிடுகின்ற சூரியனை ஒத்த சடாமுடியை யுடையவரும் எனது இதயத் தாமரையில் எழுந்தருளி யிருப்பவருமாகிய சிவபெருமானோடு ஒத்த தெய்வம் எங்குத்தேடினும் இல்லை; இங்கும் அவனுக்கு ஒப்பாவார் யாரும் இல்லை என்றவாறு.*

*தேவரில் ஒருவனெனச் சாமானிய இலக்கணம் பற்றிச் சாதிப்பாரை நோக்கிச் சிவத்தோடு ஒத்த தெய்வம்தேடினும் இல்லை என்றுஉறுதி கூறியருளியவாறு. தேடினும் என்ற உம்மை யேற்ற செயின் என்னும் வாய்பாட்டு வினையெச்சம், தேடுதற்கு உரிய திருவருள்ஞானவிலாசம் பெற்றார்க்கே சிவன் மூவரின் ஒருவனல்லன் என்னும் சித்தாந்தம் தோன்றும் என அருமை விளக்கிநின்றது. உம்மை உயர்வுசிறப்பு. இங்கு என்பதற்கு, பிரகிருதி புவனத்து நின்று கூறுவாராதலின் இவ்வண்டத்து என உரை காணப்பெற்றது. இங்ஙனமே ஏனைய மாயாபுவன அண்டங்களிலும் வதிவார் ஆய்ந்து துணிய வேண்டும் என்பார் பொதுமையின் 'ஒப்பார் இங்கு யாவரும் இல்லை' என்றார்.*

புவனம் கடந்து - சுத்தம், அசுத்தம், பிரகிருதி என்ற மூன்று மாயைகளின் காரியமாகிய புவனங்கள் அனைத்திற்கும் அப்பாற்பட்டு. அன்று- அறுதியிட்டுக் கூறமுடியாத மிகத்தொன்மையான அன்று. தவனச் சடை - தவனன்போன்ற சடை. தவனன் - சூரியன். தபனம் - மருக்கொழுந்து என்பாரும் உளர். முன் செய்த புண்ணிய விசேடத்தால் காண்பார் கண்ணை வசித்து நிற்றலின் நிறத்திற்குப் பொன்னொளியையும், வட்ட வடிவிற்குச் சூரியனையும் ஒப்புக்கூறிய நயம் ஓர்க. தாமரையான் - தாமரையை இடமாகக் கொண்டவன். தாமரை என்பது நெஞ்சத்தாமரை. இங்ஙனன்றி தாமரைப்பூவை உடையவன் என்பாரும் உளர்.

தாமரையானாகிய சிவனொடு ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லை; இங்கு ஒப்பார் யாவரும் இல்லை எனக் கூட்டி முடிக்க.

அவனை ஒழிய அமரரும் இல்லை
அவனன்றிச் செய்யும் அருந்தவம் இல்லை
அவனன்றி மூவரால் ஆவதொன் றில்லை
அவனன்றி ஊர்புகு மாறறி யேனே. 6

இம் - எனின், சிவனே எல்லாத் தேவுமாக இருத்தலின் அவனையின்றி யாருக்கும் ஒருசெயலும் இல்லை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: சிவனையன்றித் தேவர்கள் ஒருவரும் இல்லை; அவனையல்லாமல் இயற்றப்படும் தவமும் இல்லை; அவனையன்றிப் பிரமா விஷ்ணு உருத்திரர்

ளாகிய முத்தேவர்களால் முடியக்கூடிய செயல் ஒன்றுமில்லை; அவனை யல்லாமல் வீடாகிய ஊருக்குள் புகுதும் வழியை அறியேன் என்றவாறு.

அவனை ஒழிய அமரரும் இல்லை என்றது அவனே எல்லா அமரர்களுக்குள்ளும் அந்தர் யாமியாய் இருந்து செயற்கண் ஆற்றுப்படுத்து கின்றவன்; அவனை ஒழிந்து தேவர்கள் யாரும் வாழமுடியாது என்பதாம். சிவனை மறந்து, தாமே தேவர், தேவதேவர் என்று தருக்கித் திரிந்தவர்கள் பட்ட துன்பங்களைத் தக்க யாகத்தும், சூரன் அரசியலிலும் காண்கின்றேமன்றே ? அவை கொண்டு தெளிக என்பது.

அவனன்றிச்செய்யும் அருந்தவம் இல்லை என்பது உழைப்பின் அருமையை அறிந்து ஊதியம் அளிக்கும் தலைவன்போலத் தவச் சிறப்பறிந்து பயனளிக்கத் திருவுளம் பற்றுபவர் சிவனொருவரே ஆதலானும், ஏனைய சிறு தெய்வங்கட்கு, பயனளிக்கும் பதவி இன்மையானும், சிறுதேவர்களை நோக்கிச் செய்கின்ற தவங்கட்கும் பயனளிப்பவர் இவரேயெனச் சித்தியார் தெரிவிப்பதாலும் அவனை முன்னிட்டுச் செய்யாத தவங்கள் பயனற்ற செயலாம் என்பது கருத்து.

மூவர் தேவர்க்கும் உடனாய் நின்று அவரவர்களை அந்தந்தப்பதவியில் நிலைபெறுத்தி அவரவர்கள் தொழில்களை ஆற்றச்செய்வார் சிவன் ஒருவனே ஆதலின் மூவரால் ஆவதொரு காரியமும் இல்லை என்றவாறும். மூலனுடம்பிற் புகுந்தசிவயோகியார்

ஆதலின், எடுத்த இடைச்சட்டைக்கேற்ப ஓட்டு வானின்றி ஊர்புகத் தெரியாத பசுப்போல அவனன்றி ஊர்புகும் வழியை அறியேன் என்றார். ஊர் புகுதல் – ஆக்கள் லயமாகும் தானத்தை யடைதல். ஆலயம் – வீடு (முத்தி); திருவடி நெடுங்கரை; அதில் சேர்த்தல் இடையனுகிய ஓட்டு வான் செய்யவேண்டிய பணி. அவனில்லையானல் திருவடியை யடைய அறியேன் என்று தெரிவித்த வாறு.

முன்னையொப் பாயுள்ள மூவர்க்கு மூத்தவன்
தன்னையொப் பாயொன்றும் இல்லாத் தலைமகன்
தன்னைஅப் பாஎனில் அப்பனு மாய்உளன்
பொன்னையொப் பாகின்ற போதகத் தானே. 7

(இ - ள்) ம் – எனின் : நெஞ்சத்தாமரையுள் நிலவும் இறைவன் ஒப்புயர்வற்றவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பழைமையிலேயே பிரம விஷ்ணு உருத்திரர் என்று ஒருங்குவைத்து எண்ணி உரைக்கப்படுகின்ற மூவருக்கும் மூத்தவன்: தனக்கு ஒப்பாக எந்தப்பொருளும் இல்லாமையோடு அப்பொருள்கட்கெல்லாம் தலைவனும் ஆனவன்; யாரேனும் முறுகிய அன்பால் சற்புத்திரமார்க்கத்தில் நின்று அப்பா என்று அழைத்தால் அவர்களுக்குத் தந்தையும் ஆகும் தன்மையியான்; அவன் எங்கு உள்ளவன் எனில் பொன்னுக்கு ஒப்பாகிய நெஞ்சத் தாமரையின் கண் நிலவுபவன் என்றவாறு.

மூவரும்சிவத்தால் அதிகாரம்அளிக்கப்பெற்றுச் சிவஞானவழி நின்று தத்தம் செயலை ஆற்றுவதால் தமக்குள் ஒப்பாகிய பழைமையான் மூவர்க்கும் மூத்தவன் என்பது முதலடியின் கருத்து. ஒப்பாயுள்ள முன்னை மூவர்க்கு மூத்தவன் எனக்கூட்டுக. முன்னை மூவராவார் என்றது பிரகிருதிமாயா புவனத்து நின்று முத்தொழிலைச் செய்வாரையன்று. அவர்கட்கு முன்னோராகிய சுத்தமாயா புவன வாசிகளை என்க.

தன்னை - தனக்கு; வேற்றுமைமயக்கம். ஒன்றும்- உயர்திணை அஃறிணையாகிய இவற்றுள் ஒரு பொருளும். அப்பனுமாய் என்றது. தனயன் தவறு செய்யின் வளார்கொண்டு மெல்ல ஓச்சித் திருத்தி, புகட்டுவ புகட்டி, பூணுவ பூட்டி, உணருவ உணர்த்திப் பாதுகாக்கும் தந்தைபோல அப்பா என்று அழைக்கின் திருத்தி ஆட்கொள்வர் என்பதை விளக்கியது. அப்பனும் என்ற எதிரதுதழீஇய எச்சவும்மை "அம்மை நீ அன்புடைய மாமனும் மாமியும் நீ" என்பார்க்கு அவ்வந் நிலையிலிருந்து அருள் செய்வன் என்பது தந்து நிற்றல் காண்க. பொன்னை யொப்பாகின்ற போது அகத்துளன் - பொன்னிறத் தாமரையின் பொகுட்டினுள்ளவன். இதயகமலம் பொன்னிற மாதலின் இங்ஙனம் கூறினர் என்க.

**தீயினும் வெய்யன் புனலினும் தண்ணியன்**
**ஆயினும் ஈசன் அருள்அறி வார்இல்லை**
**சேயினும் நல்லன் அணியன்நல் லன்பர்க்குத்**
**தாயினும் நல்லன்பின் தாழ்சடை யோனே. 8**

இம் — எனின், இறைவன் எத்துணை எளிவந்தவனாயினும் அவனருளை அறிவார் இல்லையே என்று இரங்குதல் நுதலிற்று.

இ - ள்: பின்தாழும் சடையுடைய பெருமான் தீயினும் வெப்பம் மிகுந்தவன்; நீரினும் தண்ணியன்; குழந்தையைக்காட்டிலும் நல்லவன்; நல்ல அன்பர்கட்கு மிக அணுமையிலுள்ளவன்; தாயினும் நல்லன். ஆயினும் அவனது அருளை அறிகின்ற பக்குவிகள் இல்லையே என்றவாறு.

குற்றம் செய்வார்க்கு அரசன் கொடியன். உபதேசம் கொள்ளமாட்டாத - வைத்தபடியிருக்க மாட்டாத சீடனுக்குக் குரு கொடியன். தகாத செயல் புரியும் தனயனுக்குத் தந்தை கொடியன். அதுபோல சர்வேசுவரன் தத்துவ விசாரமற்று அல்லன புரியும் ஆன்மாக்களுக்குத் தீயைக் காட்டிலும் கொடியன். மரஞ்செடி முதலிய தாவர சாதிகட்கு வெயில் இன்றேல் வளர்ச்சியில்லையாதல் போல, நெறிதவறிச் செல்லுகிற ஆன்மாக்களுக்கு இறைவன் வெய்யனாக வேண்டும். தண்ணீருக்குக் குளிர்மை இயற்கையாயிருந்தும் அது வெந்நீரான போது அவ்வெம்மை ஏறட்டுக் கொண்ட சுபாவமே. அதுபோல இறைனுக்கு வெம்மை உயிர்களை ஈடேற்ற ஏறட்டுக் கொண்ட இயல்பேயாம் என்க. “ மறமலி அகிதம் செய்யின் நிக்கிரகத்தை வைப்பன் ” என்ற சிவஞான சித்தியாரையும் சிந்திக்க. “ தீயினுள் தெறலும் நீ ” என்பது பரிபாடல், இதன் விளக்கத்தை,

" நிக்கிர கங்கள் தானும் நேசத்தால் ஈசன் செய்வது
அக்கிர மத்தால் குற்றம் அடித்துத்தீர்த் தச்சம் பண்ணி
இக்கிர மத்தி னாலே ஈண்டறம் இயற்றி டென்பன்
எக்கிர மத்தி னாலும் இறைசெயல் அருளே என்றும் "

என்னும் சித்தியார் கொண்டு தெளிக.

புனலினும் தண்ணியன் ; இயல்பே தண்மை யான பொருள் நீர்; அதனிலும் அன்பர்க்குத் தண்ணியன் இறைவன் என்பதாம். தண்மை விரும்பற்குரியது. வெப்பம் வெறுத்தற்கு உரியது. ஆயினும் காலவேறு பாட்டானும் அதிகாரி பேதத் தானும் அவை மாறித் துய்க்கப்படுகின்றன; அது போல இறைவன் யாண்டும் தன்னிலை திரியாது வன்பர்க்கு வெய்யனாய் அன்பர்க்குத் தண்ணியனா கவே இருப்பன் என்பதும் ஆம். " அறமலி இதம் செய்வோருக்கு அநுக்கிரகத்தைச் செய்வன் " என்ற சித்தியாரைச் சிந்திக்க.

சேயினும் நல்லன் : சேய் - குழவி. சேய் காமக் குரோதாதிகள் பற்றுதது; ஒன்றிலும் தன்னலங் காரணமாக விருப்பு வெறுப்புக் கொள்ளாதது; விருப்பு வெறுப்புத் தோன்றுமாயினும் அவற்றை வயிரங் கொள்ளவிடாது மறக்கும் தன்மையது. இத்தகைய சேயினும் நல்லவன் சிவன என்கின்றது.

" तदेतत्प्रेयः पुत्रात्प्रेयो वित्तात्प्रेयोऽन्यस्मात्सर्वस्मा-दन्तरतरं यदयमात्मा "

என்பது பிருகதாரண்யகம்.

அணியன்; அணுமையிலிருந்து ஆட்கொள்பவன். "நணியாய்" என்ற மணிவாசகம் ஈண்டுக் கருதுதற்கு உரியது.

தாயினும் நல்லன்; "பால் நினைந்தூட்டும் தாய்" என்பர் மாணிக்கவாசகர். குழவியின் பசியை அறிந்து ஊட்டுபவள் தாய். பால்உண் குழவி பசுங்குடர் பொறுதென நோயுண் மருந்தைத் தானுண்பவள் தாய். அதுபோலப் பரமகருணை நிதியாகிய சிவன் உயிர்களின் பக்குவமறிந்து உதவுகிறார். கரியவிடத்தைக் கண்டத் தடக்கிக் காப்பாற்றியதில் தாய்க்கருணையைக் காண்க. "தாயினும் நல்ல தயாவான தத்துவனே" எனத் திருவாசகம் அருளுவதும் காண்க. இங்ஙனம் இருக்கவும் அவனருளிருந்தபடியை அறிவார் இல்லையே என்று இரங்கிக் கூறியவாறு.

பொன்னால் புரிந்திட்ட பொற்சடை என்னப்
பின்னால் பிறங்க இருந்தவன் பேர்நந்தி
என்னால் தொழப்படும் எம்இறை மற்றவன்
தன்னால் தொழப்படு வார்இல்லை தானே. 9

இம் - எனின், தலைவனுடைய பெயரும் குறியும் பெருமையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அவனுக்கே உரிய சிறப்பான அடையாளம் யாதெனின், பசும்பொன்னாற் செய்து முறுக்கி விடப்பட்ட அழகியசடை முதுகிற்கிடந்து விளங்க இருந்தவன்; அவன் பெயர் யாதோ எனின் நந்தி என்பது; அவனது பரிசு யாதோ எனின்,

என்னால் தொத்தக்கவன்; எமக்குத் தலைவன்; அவனால் தொழத்தக்கவர் யாரும் இல்லாதவன் என்றவாறு.

என்னால் என ஒருமையும் எம் இறை எனப் பன்மையும் இயையக்கூறியது அவனியல்பு அறிந்து வணங்குவேன் யான்; நீவிர் வாளா இருப்பீரல்லீர்; நுமக்கும் தலைவன் அவனே என உலகவரையும் உளப்படுத்திக் கூறிய கருணைத் திருவாக்காம் என உணர்க. அவனே முழுமுதற்கடவுளாதலின் அவனால் தொழப்படுவார் யாருமே இல்லை என்க "சேர்ந்து. அறியாக் கையானை" என்ற திருவாசகமும் காண்க. மற்று என்பது வினைமாற்றின்கண் வந்தது.

தானே இருநிலம் தாங்கிவிண் ணாய்நிற்கும்
தானே சுடும்அங்கி ஞாயிறும் திங்களும்
தானே மழைபொழி தையலு மாய்நிற்கும்
தானே தடவரைத் தண்கடல் ஆமே. 10

இம் - எனின். சிவமே எல்லாமாக விளங்குவது என்பதை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் சிவமாகிய தானே இந்தப் பெரிய நிலத்தைத் தாங்கிக் கொண்டு ஆகாசவடிவாக இருக்கும்; தன்னகப்பட்ட பொருளைச் சுட்டு ஒன்றுவிக்கிற அங்கியும், ஞாயிறும், திங்களும் ஆகிய மூன்று ஒளிப் பொருளுமாயிருக்கும்; தானே மழையைப் பொழிவிக்கின்ற திருவருட் சத்தியாகவும் இருக்கும்; தானே தடங்கிரியும், குளிர்கடலுமாக இருக்கும் என்றவாறு.

இருநிலந்தாங்கி விண்ணாய் நிற்கும் என ஐம்பூதங்களுள் முதலும் கடையும் கூறவே இடைப்பட்ட புனல் கால் இவற்றிற்கும் விரிந்து இடங்கொடுத்து நிற்றல் குறிக்கப்பெற்றமை காண்க. அடுத்து அங்கியும் ஞாயிறும் திங்களுமாகிய ஒளிப்பொருள்கள் மூன்றும்தாமே என்பது விளக்கியவாறு மழைமொழிதையல் - பராசத்தி. "முன் இக்கடலைச் சுருக்கி" என்ற திருவெம்பாவையில் மழை பராசத்தியின் அருளாகவே அறிவிக்கப் பெற்றமை கருதுக. அன்றியும் மழைமொழி தையல்—சுக்கிரன்; களத்ர காரகனாகிய பெண்தெய்வம் அவன் ஆதலின் இங்ஙனம் கூறினார் என்பர். அவ்வுரை ஈண்டு இயைபுடைய தாகாமையும் ஏற்புடையதாகாமையும் நோக்கித் தெளிக.

அயலும் புடையும்எம் ஆதியை நோக்கில்
இயலும் பெருந்தெய்வம் யாதுமொன் றில்லை
முயலும் முயலில் முடிவுமற் றங்கே
பெயலும் மழைமுகில் பேர்நந்தி தானே. 11

இம் - என்னின், எங்குத்தேடினும் இவரன்றித் தேவதேவன் இல்லை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அயலிலும் ஏனைய பக்கங்களிலும் எம் முதல்வனாகிய பரமசிவனைத் தரிசிப்பதால் அவனைக் காட்டிலும் தெய்வத்தலைவன் வேறொருவரும் இல்லை; உயிர்கள் செய்யும் முயற்சியும் அவன்; அம்முயற்சியின் முடிவாகிய பயனும் அவன்; பெய்கின்ற மழை நீரும் அவன்; மழையையுடைய மேகமும் அவன்; அவன்பேர் நந்தி என்பது என்றவாறு.

அயல்-பக்கம், இது தத்தம் இருக்கைக்கு இரு மருங்கும் அடுத்துள்ளது. புடை – அதற்கு அடுத்து உள்ளது. பக்கங்களில் பரமன் விளங்குவதைக் கண்டு இவனைக் காட்டிலும் பெருந்தெய்வம் உண்டோ என விதர்க்கித்து நோக்கியபோது எங்கும் வேறொன்று காணப்படாமையால் உறுதிப் பட்டுக் கூறியது இது. பார்க்குமிடம் எங்கும் அவனே காணப்படுகின்றான் என்பது. பார்க்கும் இடம் எங்குமொரு நீக்கமற நிற்கின்றநிலை வேறு யாருக்கும் இல்லை என்றவாறு.

அயல் என்றது சித்தாந்தசைவர் ஒழிந்த அகச் சமயங்களையும், புடை என்றது அகப்புறச் சமயங் களையும். இவற்றில் எல்லாம் எம்முடைய ஆதியே முதற்கடவுளாக விளங்குதலும், வேற்றுச் சமயங் களில் விளங்கும் தெய்வங்களும், இவர் ஏவல்வழி நின்று இயங்குவர் ஆதலின் பெருந்தெய்வம் ஆகாமையும் ஆய்ந்து துணிந்து எல்லாச் சமயங் களுக்கும் பரம காரணனை காருண்யமூர்த்தி சிவனே என்று அருளப் பெற்றது எனலுமாம்.

முயற்சி – உழைப்பு. முயன்றால் முடியாப் பொருளுளவோ ஆதலின் சீவமுயற்சியே எல்லாம் பயக்கும் என்ற உலகாயதர்க்கு உண்மை உணர்த்த முயற்சியும் அவனே என்றது. சிறுமுயற்சி செய்தவன் பெரும்பயனையும் பெருமுயற்சி செய்தவன் சிறுபயனையும் பலநாள் முயன்றும் பயனின்மையும் எய்துவதை உலகில் காண்கின்றோம் ஆதலால் அவரவர் செய்யும் முயற்சிக்கு ஏற்ப வினைப்போகமாகிய பயனை அளந்தூட்டுவான்.

இறைவனுதலின் பயனும் அவனே என்று கூறப்பட்டது. மலையால் நீரும் மேகத்தால் மழையும் எய்தக் காண்கின்றோம் ஆதலின் எந்தக் காரியமும் ஒரு காரணத்தை உடையதாகி, அந்தக் காரணங்கள் யாவும் ஒரு பரமகாரணனிடத்துண்டாம்; அப்பரம காரணனே பரசிவன் என்றவாறு.

கண்ணுத லான்ஒரு காதலின் நிற்கவும்
எண்ணிலி தேவர் இறந்தார் எனப்பலர்
மண்ணுறு வார்களும் வானுறு வார்களும்
அண்ணல் இவன்என் றறியகி லார்களே. 12

இ-ம் - எனின், சிவத்தின் கருணையும் உயிர்களின் அறியாமையும் இத்தகைத்து என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : காக்கும் காதலோடு சிவன் இருக்கவும் எண்ணற்ற தேவர்கள் இறந்தவர்களாக, மக்கள் பலரும் தேவர்கள் பலரும் 'சிவனே எமக்கெல்லாம் தலைவன்' என்று அறியும் ஆற்றல் அற்றிருக்கின்றார்களே! இவர்களுடைய அறியாமை இருந்தபடி என்னே! என்றவாறு.

கண்ணுதலான் நிற்கவும், தேவர் இறந்தார் என மண்ணுறுவார்கள் பலரும், வானுறுவார்கள் பலரும் இவன் அண்ணல் என்று அறியகில்லார்களே எனக் கூட்டி முடிவு காண்க.

மும்மலச்சேற்றில் அழுந்தி வீடு காணாது தவிக்கும் ஆன்மாக்கள், இம்மலச்சேற்றில் யாம் அழுந்துவது மல நீக்கம்பெற்றுக் கரையேற

என்பதுணர்ந்து நெறி நின்று ஈடேறத் தாகங் கொண்டு 'எப்போது வருவர்; அருள் நீர் உதவிக் காப்போம்' என்ற காதலுடன் பரசிவன் கங்கணங் கட்டி நிற்கின்றான். அங்ஙனம் இருந்தும் எண்ணிலி தேவர்கள் புண்ணியப் பயனாகிய போகத்தை நுகருகின்றகாலத்திலே இந்தப் போகமாகிய பொன் தோணிகொண்டு கரையேறமாட்டாமல் மீட்டும் பிறவியும் பாவமும் நிறைந்த சேற்றுநீர்க் கடலுக்கே சென்று அழுந்த வாளா இறந்து போகின்றனரே; அவர்கள் அங்ஙனம் வாளா இறந்தது சிவனே பதி என்று உணரமாட்டாமையாலன்றோ! அங்ஙனமாகவும் மண்ணுளாரும் விண்ணுளாரும் இன்னமும் அறியகில்லாரே; என்னே இவர் மடமை! என்றபடி. விண்ணுளார் சிவனையுணர்ந்து பொருந்தப் பிறந்தவர்கள். மண்ணுளார் கருமபூமியினின்று குருவழி நின்று கேட்டுத் தெளிந்து வீடுபொருந்தத் தோன்றியவர்கள்; இவ் இருவகையினரும் பிறந்த தன் காரணத்தினை மறந்தனர் என்பதாம்.

**மண்ணளந் தான்மல ரோன்முதல் தேவர்கள்**
**எண்ணளந் தின்னம் நினைக்கிலார் ஈசனை**
**விண்ணளந் தான்தன்னை மேலளந் தாரில்லை**
**கண்ணளந் தெங்கும் கடந்துநின் றானே** 13

இ - ம் — எனின், பதவிகளின் நிற்பார் பரமனை அறிந்திலர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள் : படைத்தலாதி தொழில் மேற்கொண்டு பதவிகளில் நிற்கும் திருமாலும் பிரமனும் முதலாகிய தேவர்கள் எத்தனையோ எண்ணங்களை அளந்து

கொட்டிக்கொண்டு, ஈசனை நினைக்கின்றார்களல்லர்; சூரியனைப்போல உடனின்று காட்டும் உபகாரம் செய்யும் சிவத்தை மேலும் கலந்து நின்றாரில்லை; இறைவன் இவர்கள் கண்ணிற் கலந்தும் கடந்தும் நிற்கின்றான் என்றவாறு.

மண் அளந்தான் - மூவுலகை ஈரடியால் அளந்த திருமால். இங்ஙனம் அளந்து மாவலியை அடக்கிய பெருமையினால் செருக்குற்று என்னென்னவோ எண்பது கோடி எண்ணங்களை எண்ணிக்கொண் டிருக்கின்றான். மலரோன் - உந்தியந்தாமரைப் போதில் உள்ள பிரமன். அவன் எஞ்ஞான்றும் மென்மையை விரும்புபவனாக எண்ணமிட்டுக் கொண்டிருக்கிறான்; இருவர்களுமே ஈசனை மறந்தனர். இவர்கள் நிலையே இவ்வாறாக, இவர்களை முதல்வராகக்கொண்ட ஏனைய தேவர் களும் அங்ஙனமேயாயினர். எண் - எண்ணம். அளந்து - மிகுதிப்படுத்தி.

விண் அளந்தான் எனறது சூரியனை. சூரியன் கண்ணொளிக்கு உபகாரமாய்க்கலந்து பொருள்களை யறியத் துணை செய்யுமாறு போல இறைவன் உயிர்களைக் கலந்து நின்று அறியச் செய்கின்றான். காணும் கண்ணுக்குக் காட்டும் உளத்தை எங்ஙனம் கண் அறிவதில்லையோ அதுபோல உபகாரப்பட்டு நிற்கும் சூரியனைப் போன்ற சிவத்தையும் உயிர்கள் அறிவதில்லை என்பது விளங்க 'விண் அளந்தான் தன்னை மேலளந்தார் இல்லை' என்று அருளினார். அளத்தல்—மூவகைப் பிரமாணங்களுள் ஈண்டுப் பொருந்துமாற்றான் ஆராய்ந்து அறிதல். ஆகவே

சூரியனைப்போலக் கலந்துநின்று காட்டும் சிவத்தை மேலும் பிரமாணங்களால் ஒருவகையான் அளந்து, அநுபவித்தார்கள் இல்லை என்பது கருத்து.

இறைவனே இவர்கள் கண்ணொளியோடு கலந்தும், காணப்படு பொருளாய் எங்குமாயும், அவ்விரண்டு நிலையையும் கடந்து வேறாய் அப்பாற்பட்டும் நின்றான் என்பார் 'கண்ணளந்து நின்றான்' 'எங்கும் நின்றான்' 'கடந்து நின்றான்' என்றருளினார். அளந்து - அளாவி (கலந்து). இதற்குப்பொருந்தாவுரைதோன்ற உரைத்து இடர்ப்படுவார் பலர். அதனை எடுத்தாய்ந்து மறுத்தலும் மரபுவழுவாம் என மறந்தாம்.

கடந்துநின் றான்கம லம்மல ராதி
கடந்துநின் றான்கடல் வண்ணன்எம் மாயன்
கடந்துநின் றான்அவர்க் கப்புறம் ஈசன்
கடந்துநின் றான்எங்கும் கண்டுநின் றானே 14

இம் — எனின், சிவஞானிகளால் தெளிவாகக் காணப்படுகின்ற ஈசன் அரிபிரமாதிகளால் காணப்படாதவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : இருவகைப்பற்றையும் கடந்து நிற்கும் பரம ஞானிகளால் எவ்விடத்தும் காணப்பெற்று நிற்கும் சருவேசுவரன் தாமரைமலரில் எழுந்தருளியுள்ள முதலாவதாகிய படைத்தற்றொழிலைச் செய்யும் பிரமனுக்கு அப்பாற்பட்டவனாயினன்; அங்ஙனமே எம்முது மாயனாகிய கடல்வண்ணனுக்கும் அப்பாற்பட்டவனாயினன்; அவ்விருவர்க்கும் அப்புற

முள்ள சங்காரகிருத்தியம் செய்யும் ஈசனாகிய உருத்திரனையும் கடந்து நின்றான் என்றவாறு.

கமலம்மலர் என்பது விரித்தல் விகாரம். ஆதி என்றது ஆதித்தொழிலாகிய படைத்தலைச்செய்கின்றமையின். உருத்திரன் சாரூபம்பெற்ற பக்குவான்மா ஆதலின் ஈசன் எனப்பட்டார். ஆகவே மும்மூர்த்திகளும் பதவிகளில் நிற்பவர்களாதலின் இறைவன் அவர்களுக்கும் அப்பாற்பட்டவன் ஆயினன். இருவகைப்பற்றையும் கடந்து நின்றபரம ஞானியர்க்கு எங்கும் காணப்பெற்று நிற்பவன் சிவனே என்பது கருத்தாதல் காண்க.

ஆதியு மாய்அர னாய்உட லுள்நின்ற
வேதியு மாய்விரிந் தார்ந்திருந் தான்அருட்
சோதியு மாய்ச்சுருங் காததோர் தன்மையுள்
நீதியு மாய்நித்த மாகிநின் றானே. 15

இ-ம்-எனின். சொரூபசிவம். லய போக அதிகார நிலைகளை மேற்கொண்டு எமக்கு அருள் செய்யும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : திருவருட் சோதியாயும் என்றும் குவியாத இயல்போடு விளங்குகின்ற நீதியாயும் நித்திய வஸ்துவாயும் நின்ற சிவம், முதலாவதான் லய சிவமாயும், போக சிவமாயும், திருமேனி தாங்கி நிற்கின்ற அதிகாரசிவமாயும் விரிந்து ஆன்மாக்களின் பக்குவ நிலைகட்கு ஏற்ப நிறைந்திருந்தான் என்றவாறு.

"சூர்யகோடி ஸமப்பிரபம்" என்பது ஆகமம் ஆதலின் கோடி சூரியர்களைப்போன்ற சோதியாய் இருப்பது சொரூபசிவம். ஒளியுண்டாயின் சூடும் உண்டென்பது நியாயமாதலின் அது அருட்சோதி யாய் அபின்னமாகி நிற்கிறது என்பது, "அலகில் சோதியன்" என்னும் இலக்கண இலக்கியத்து முதற்செய்யுட் பகுதியையும் முன்னுக நீதிக்குக் குவிதல் விரிதல் ஒன்றுமில்லை. "மலர்தலும் கூம்பலும் இல்லது அறிவு" என்கின்றது திருக்குறள். அக்குறள் கூறும் அறிவு பசுஞானமும், பாசஞானமுமாகிய அறிவு. அவற்றிற்கே அந்நிலை எய்துமாயின் நித்தியமாகிய நீதிக்குச் சுருக்கம் ஏது என்க. ஆதலின் 'சுருங்காததோர் தன்மையுள் நீதி' என்று அருளினர். இவ்வண்ணம் சோதியும் நீதியும் நித்தமுமாக நிற்கும் சொரூபசிவம் லய போக அதிகார நிலைகளை எமக்காக எய்தி அருள் வழங்கு கிறது என்பதாம்.

ஆதி - முதலான லயநிலை. இந்நிலை சூக்கும லயமும் தூல லயமும் என இருவகைப்படுமன்றோ? அவற்றுள் ஆதி என்றது எந்த லயத்தையோ எனின் சூக்குமமான இச்சாஞானக் கிரியை என்னும் மூவகை சத்திகளோடு புணர்ந்து விந்துவிற் பதிந்து தூல ஐந்தொழிற்கு ஏதுவான சூக்கும ஐந்தொழில் செய்து நிற்கும் அவதரமாகிய தூலலயத்தையேயாம் ஏனெனில்? சுருங்காததோர் தன்மையுள் அருட் சோதியும் ஆய் என்றபோதே இருவகை மாயை களிலும் ஒடுங்கிய இருவகைப் பிரபஞ்சமும் மீளத் தோன்றுமாறு குறித்து ஞானசத்தி மாத்திரையான் நோக்கிநின்ற நிலையாகிய சூக்குமலயம் முன்பு

கூறப்பட்டமையின் என்க. அன்றியும் ஆண்டே, ஞானசத்திமாத்திரையாய் நோக்குதலாகிய பக்ஷபாதமுமின்றி அனைத்தினையும் பொதுமையின் நோக்கி நிற்கும் சூக்குமலயநிலை 'நீதியுமாய்' என்பதால் குறிக்கப்பெற்றமையும் கண்டுணர்க.

அரனாய்—போகசிவமாய். அரன் என்பது போக சிவத்தை உணர்த்துமாறு யாங்ஙனம் எனின், அரன் என்பது எல்லாவற்றையும் தன்னுள் அடக்குபவன் எனப் பொருள்படும். அவன் அங்ஙனம் அடக்குதல் ஆன்மாக்கள் இளைப்பாறற்பொருட்டே ஆதலின்; எல்லாவற்றையும் தன்னுள் அடக்கி இளைப்பாற்றி மேலும் தூய்மையுறுத்தற்பொருட்டு புனருற்பவஞ் செய்தற்குத் தூல இச்சா ஞானக் கிரியைகளோடு மணந்து நிற்கும் நிலையும் அவனுக்கேயுண்டு என்க. போகசிவம் சகள நிஷ்களத் திருமேனிகொண்டு ஆதி நிலையாகிய நிஷ்கள நிலைக்கும். பின்வரும் நிலையாகிய சகளநிலைக்கும் இடைப்பட்டதான சகளநிஷ்களத் திருமேனி தாங்கிச் சதாசிவம் என்ற பெயருடன் விளங்கும்.

உடலுள் நின்ற வேதியுமாய்; சகளத்திருமேனியைத் தாங்கி நின்று அறிபொருளுமாய்; என்றது அதிகார சிவமாகிய மகேசுரனை என அறிக. இந்நிலையில் சிவன் விந்துவினின்றும் சுத்தப் பிரபஞ்சங்களை சந்நிதிமாத்திரையில் தோற்றுவித்துத் தொழிலாற்றி நிற்பன். இது சூக்கும அதிகாரம் என அறிக.

விரிந்து – அநந்தேசர், உருத்திரன் மால் பிரமன் முதலியவர்களில் விரிந்து, இஃது என் சொல்லியவாறோ எனின், அதிகாரசிவம் அநந்தேசா தியர்களை அதிட்டித்து நின்று மோகினிமான்களி லின்று மிசிரப் பிரபஞ்சமும் அசுத்தப்பிரபஞ்சமும் தோற்றுவித்துத் தொழில் செய்யும் அவதரமாகிய தூல ஐந்தொழிலைச் செய்து ஆர்ந்திருந்தான்; பரசிவம் முதல் பிரமனீறுகச் சொன்னவர்களிடத் தும், அவர்களால் ஐந்தொழில் ஆற்றப்பெறுகின்ற பிரபஞ்சங்களிடத்தும் நிறைந்திருந்தான் என்பது. பிரபஞ்சம் என்னும் சொல்லே விரிந்தது என்னும் பொருளதாதல் காண்க.

நின்றான், ஆதியுமாய் வேதியுமாய், விரிந்து ஆர்ந்து இருந்தான் என முடிக்க.

கோது குலாவிய கொன்றைக் குழற்சடை
மாது குலாவிய வாள்நுதல் பாகனை
யாது குலாவி அமரரும் தேவரும்
கோது குலாவிக் குணம்பயில் வாரே. 16

இம் – எனின், பரிபாகம் இல்லாதார் பரமன் திருமுன் பழகியும் பயனில்லை என்பது உணர்த் துதல் நுதலிற்று.

இ – ள் : நரம்போடு விளங்குகின்ற கொன்றைப் பூவையுடைய குழன்ற சடையை உடையவரும் அழகு நிறைந்த ஒளிபொருந்திய நெற்றியினை யுடைய உமாதேவியாரை ஒருபாதியாகக் கொண்ட வரும் ஆகிய சிவபெருமானை, குற்றத்திற் கலந்து

குணத்திற் பழகுகின்றவர்களாகிய அமரர்களும் தேவர்களும் குலாவி யாதுபயன் என்றவாறு.

சடையையுடைய வாள்நுதல் பாகனைக் கோது குலாவிக் குணம் பயில்வாராகிய அமரரும் தேவரும் குலாவி யாது ? எனக் கூட்டுக.

கோது குலாவிய கொன்றை – பூநரம்போடு கூடிய கொன்றை. குழல் சடை-சுருண்ட சடை; வினைத்தொகை. வாள்நுதல் பாகன் என்று அருளுகின்றார் ஆதலின் கூந்தலையும் சடையையும் உடையவன் என்றார். மாது – அழகு; “ மாதர் காதல் ” ஆதலின். சிவகாமியாகிய வாணுதல் என்றும் ஆம். அமரர் – மரணம் இல்லாதவர் என்ற சிறப்பை உபசாரமாகப் பெற்ற பசு புண்ணியவான்கள். தேவர்கள் – சிவன் அதிட்டித்து நின்று செயற்படுத்தலால் ஒளி மேனி படைத்த உருத்திரர். கோது குலாவி – மல வாசனையோடுகூடி நின்று. உருத்திரன் பிரளயாகலருட் பக்குவனாய் முத்திபெற்றுத் தூல மலவாசனை யுடையவன்; மாலும் அயனும் சகலான்மாக்களுள் புண்ணிய மிகுதிப்பாட்டால் அதிகாரசத்தி பெற்று மும்மல பந்தம் நீங்காதவர்கள் ஆதலால் கோது குலாவி எனப்பெற்றது.

குணம் பயில்வார் என்றது இறைவன் அளித்த அதிகார குணத்தினின்று பழகுபவர்கள் என்பதாம். இவர்கள் மலவாசனையும் மலமுமற்றுப் பரமஞானிகளாய்ப் பக்குவம் எய்தாமையின் சிவத்தோடு குலாவி யாதுபயன் ? திராமஸ்ரயின் மணத்தையறிய

மாட்டாத மண்டூகம் அதனோடு பழகி என்னபயன் என்றார் என்க.

காயம் இரண்டும் கலந்து கொதிக்கினும்
ஆயம் கத்தூரி அதுமிகும் அவ்வழி
தேசம் கலந்தொரு தேவனென் றெண்ணினும்
ஈசன் உறவுக் கெதிரில்லை தானே 17

இம் — எனின், ஆன்மாக்களுக்கு ஈசனோடு உறவு கொள்ளுதலைக் காட்டிலும் சிறந்ததொரு இன்பம் இல்லை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் ; பரசரீரமும் அபரசரீரமுமாகிய இருவகைக் காயங்களும் கலந்து கொதித்தாலும் அவத்தைகளின் அனுபவமாகிய மணம் மிகும்; அவ்விடத்து ஆன்மா ஒளியோடு ஒன்றித் தன்னைத் தேவனாக எண்ணும்; ஆயினும், உடலுறவைக் காட்டிலும் ஈசனுறவுக்கு ஈடானது ஒன்றில்லை என்றவாறு.

காயமிரண்டு - இருவகைக் காயம், அது பரகாயமும். அபரகாயமுமாம். அவற்றுள் பரகாயம் என்பது காரணசரீரமும் கஞ்சுகசரீரமும் குணசரீரமுமாகிய மூன்றுமாம். அபரகாயம் என்பது சூக்கும சரீரமும், தூலசரீரமுமாகிய இரண்டும் ஆம். இவ்விருவகைக் காயத்தும் ஆன்மா கலந்து கொதித்தலாவது, கேவலாவத்தையில் நின்ற உயிர் அசுத்த மாயையில் கலக்குண்ட பாகமாகிய காரணசரீரத்தைப் பொருந்தி அறிவிச்சை செயல்கள் சமஷ்டிரூபமாய் விளங்கப்பெற்று விருப்பு வெறுப்பின்றித் தெளிவு பெற்றதுபோன்ற நிலையும்; கலை முதலிய

கஞ்சுக சரீரத்தைப் பொருந்தி வியஷ்டி ரூபமாகிய அறிவிச்சை செயல்களைப் பெற்றுநிற்கும் நிலையும், சாத்விக இராசத தாமதமாகிய குணசரீரத்தைப் பொருந்தி அக்குணங்களுள் அடங்கி நிற்கும் நிலையும், மனம் முதலிய சூக்குமசரீரத்தைப் பொருந்தும் நிலையும், தூலசரீரத்தைப் பொருந்தும் நிலையும் முதலியன.

கத்தூரி அதுமிகும்; மணமும் மதமுமாகிய இரண்டையும் தருவது கத்தூரி. அதற்கு மான் மதம் என்றும் ஒரு பெயர் உண்டு. பஞ்சகோசஸ் தனை ஆன்மாவுக்கும் மான் என்னும் பெயருண்மை ஓர்க. ஆதலால் 'கத்தூரியதுமிகும்' என்றது காரண சரீரத்தில் ஓர் ஆனந்தம் பெற்று அம்மயமாய் நிற்றலும், கஞ்சுகசரீரத்தில் அவற்றைச் சிறப்பு வகையாற்பெற்று அம்மயமாய் நிற்றலும், குண சரீரத்தில் மனோமயமாய் நிற்றலும், சூக்குமசரீரத்தில் பிராணமயமாய் நிற்றலும் தூலசரீரத்தில் அன்னமயமாய் நிற்றலும் ஆகிய இவை என்க.

அவ்வழி தேசங்கலந்தொரு தேவன் என்று எண்ணினும் என்றது முற்கூறியவண்ணம் ஆன்மா பஞ்ச கஞ்சுகத்தனாய் நிற்கும்போது தன்னை ஒளி யுடையவனாக எண்ணிக்கொண்டாலும் என்றவாறு. கேவல நிலையிலிருந்து சிறிதுசிறிதாக ஒளிகலந்த நிலையில் தன்னைத் தேவனாக எண்ணிக் கொள்ளு கின்ற தன்மை ஆன்மாவோடுடனுள்ள ஆணவத் தின் காரியமாதலின் நோயால்விளைந்த இன்பம் நோயாமேயன்றி உண்மை இன்பம் ஆகாதவாறு போல, பஞ்சகஞ்சுகனாய் ஐந்து அவத்தைப்படும்

ஆன்மா அறிவுவிளக்கத்தால் முறையாக எய்துகிற ஆனந்தம்உண்மையானந்தமாக முடியாது; உயர்ந்த தாக முடியாது. ஆதலால் ஈசன் உறவுக்கு எதிர் இல்லை ' என்று உண்மை உணர்த்தி எம்மையெல் லாம் ஈடேறவைத்தார் என்க.

இம்மந்திரத்து, வெண்காயமும் பெருங்காய மும் ஆகிய இரண்டும் கலந்துகொதித்தாலும் கத்தூரி மணம் மிகுகின்றது; அதுதான் லாயம். இம்மணம் தேசமெல்லாம் கலக்கக் கொதிக்கவைத் தவனை ஒருதேவன் என்று எண்ணினாலும் ஈசன் உறவுக்கு இவனுறவு எதிரில்லை என்று வேறும் ஒரு பொருள் தொனித்தல் காண்க: சித்தர்வாக்கு ஆதலின்.

அதிபதி செய்து அளகை வேந்தனை
நிதிபதி செய்த நிறைதவம் நோக்கி
யதுபதி யாதரித் தாக்கம தாக்கென
இதுபதி கொள்என்ற எம்பெரு மானே. 18

இம் – னின், நிறைசெல்வத் தியாகனைத் திருமால் வேண்டிக்கொண்டமை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : அளகாபுரிக்குத் தலைவனாகிய குபேரனை வடதிசைக்கு அதிபதியாக்கி, நிதிகளுக்கெல்லாம் பதியாகவும் செய்த நிறைந்த தவத்தை நோக்கி, யாதவ குலத் தலைவனாகிய திருமால் அன்புசெய்து பூசித்து ' அடியேனுக்கும் ஆக்கம் அளிக்க ' என்று வேண்டிக் கொள்ள 'இதுதான் வழி ஏற்றுக்கொள்' என்றருளிய எம்பெருமான் இவன் என்றவாறு.

அதிபதி செய்து - வடதிசைக்கு அதிபதியாகச் செய்து; என்றது திசைகாப்பாளருள் ஒருவனாகச் செய்து என்றவாறு. நிதிபதிசெய்த நிறைதவம் நோக்கி என்றது சங்கநிதி பதுமநிதி ஆகிய இரண்டு வகை நிதிகட்கும் அவனைத் தலைவனாக்கிய அவனுடைய நிறைந்த தவத்தைப் பார்த்து என்றவாறு. யதுபதி - யதுகுலத்தவர் தலைவன்; கண்ணன். ஆக்கமது ஆக்கு என - அடியேனையும் நிறைசெல்வனாக்கு என்று வேண்டிக் கொள்ள, திருமால் திருவுக்கெல்லாம் அதி தெய்வமாகிய திருமகளை மனைவியாகப் பெற்றிருந்தும் சிவகிருபையின்றிச் செல்வனாக முடியாது என்று எண்ணிச் சிவனை வேண்டிக் கொண்டான்; பொன்னும் மெய்ப் பொருளும் தருவான் அவனாதலின்.

இது பதி - இதுதான் வழி. பதி - வழி. கொள் - தெரிந்துகொள். முன்னர், நிறைதவம் என்றமையால் ஈண்டு இது என்று சுட்டப்பட்டது. அத்தகைய நிறைந்த தவத்தையே என்க. என்ற எம்பெருமான் இவனவன் என்று பெயரும் வினையும் வருவித்து முடிக்க.

இதுபதி ஏலம் கமழ்பொழில் ஏழும்
புதுபதி செய்தவன் மூதறி வாளன்
விதுபதி செய்தவன் மெய்த்தவம் நோக்கி
அதுபதி யாக அமருகின் றானே 19

இம் - எனின், சந்திரனுக்கு அருள் வழங்கியதை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மணம் கமழுகின்ற நல்ல நகரமாகிய உலகம் ஏழையும் இடுகாடாகச் செய்தவனும், உணர்த்தாமலே உணரும் மூதறிவாளனும் ஆகிய இறைவன், சந்திரன் செய்த வலிய உண்மையான தவத்தை நோக்கி, அத்தவத்தையே இடமாகக் கொண்டு எழுந்தருளியிருக்கின்றான் என்றவாறு.

சர்வ சங்காரகாலத்து இறைவன் உலகேழையும் அழித்து இடுகாடாக்கிய பழமைக்கெல்லாம் பழமை யாகிய ஞானசொரூபி. விதுபதி - சந்திரன். அவன் செய்த மெய்த்தவமாவது, தன் தவறை உணர்ந்து இறைவனையே புகலிடமாகப் புகுந்து உற்றுநோக்கி அவனையே உணர்ந்திருந்தது.

ஏலம் கமழ் பொழில் - மணம் வீசுகின்ற உலகு ஏழும். பொழில் - உலகு. முதுபதி - சுடுகாடு. ஏலம் என்பது மணம் என்ற பொதுமையினின்றது.

**முடிவும் பிறப்பையும் முன்னே படைத்த**
**அடிகள் உறையும் அறநெறி நாடில்**
**இடியும் முழக்கமும் ஈசர் உருவம்**
**கடிமலர்க் குன்றம் மலையது தானே. 20**

இம் - எனின், வேதாகமங்களை ஆராயின் இடி மலை முதலிய எல்லாம் அவனது வடிவே என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இறப்பையும் பிறப்பையும் தொன்று தொட்டே உயிர்களாகிய நமக்கென்று தோற்று வித்த அடிகளாகிய பரமேசுவரன் உறையும் வேதாக

மங்களை ஆராயின், இடியும் அதன் முழக்கமும் அவருடைய உருவங்கள்; மணமுள்ள மலர்கள் நிறைந்த குன்றுகளும் மலைகளும் அவருடைய வடிவேயாகும் என்றவாறு.

உயிர்களுடைய மலத்தை வாட்டிக் கன்மங்களையும் நுகரச்செய்து ஒழித்துக் கரையேற்றுகைக்காக அழித்தும், மீட்டும் பிறப்பித்தும் வினையல் வினை செய்கின்றாராதலின் 'முடிவும் பிறப்பையும் முன்னே படைத்த அடிகள்' என்று அருளிச் செய்தார்.

முடிவும் - எல்லாவற்றையும் தன்னகத்து ஒடுக்கிக் கொள்ளுதலையும், பிறப்பையும் - மீளத் தன்னிடத்து நின்று தோன்றச்செய்தலையும், படைத்த அடிகள்-உண்டாக்கிய முதல்வன் என்பது பொருள். பிறப்பையும் என்பதற்கு ஏற்ப முடிவும் என்றவிடத்து இரண்டாம் உருபு விரித்துக்கொள்க. முடிவின்பின் சத்தியையும் தன்னுள் அடக்கித் தாமொருவனே நிற்றலின் அடிகள் எனப்பெற்றது.

அறன்நெறி – விதிமார்க்கம் கூறுகிற வேதமும், சரியையாதி உபாயங்களை அறிவிக்கும் ஆகமமுமாம் இவையே ஞானசொரூபியாகிய இறைவன் உறையும் இடங்கள். இறைவன் நூலாதலின் இங்ஙனம் உபசரிக்கப் பெற்றது. இடியும் முழக்கமும் ஈசர் உருவம் - வானிலுண்டாகும் இடியும் முழக்கமும் ஈசர்உருவம்; அதாவது சிவசூரியனுடைய கதிர் மாயையின் வந்து பொருந்தியவுடன் உண்டாகிற தொனியும், அங்ஙனம் பொருந்துகிற கதிருமாம்.

வேதாகமங்களில் சொல்லப்பெறுகின்ற அறிவுருவே யன்றி இவையும் அவன் உருவே என்றவாறு. இடிக்கும் முழக்கத்திற்கும் உள்ள வேறுபாடு யாதோ எனின், இடி உண்டான போது நம்மறிவிற்கு ஒளியாகவும் ஒலியாகவும் புலனாகின்றது; ஆதலின், ஒலியாகிய முழக்கத்தைப் பின் கூறவே இடி என்றது மின்னலாகிய ஒளியை உணர்த்திற்று என்பது வெளி. ஆகவே இடி மின்னொளியும் முழக்கம் அதன் ஓசையுமாம் என்க.

**द्यावा पृथिवी अन्तरेव समाहिते उभावग्निश्च वायुश्च सूर्या चन्द्रमसावुभौ विद्युन्नक्षत्राणि यच्चास्येहास्ति सर्वं तदस्मिन् समाहितमिति ॥ २ - ३ ॥**

'அக்கினியும், வாயுவும், சூரியனும், சந்திரனும் மின்னலும், நட்சத்திரங்களும், இன்னும் உள்ளனவும் இருந்தில்லனவும் எல்லாம் இதனுள் அடங்கும்' என்ற சாந்தோக்கியசுருதியும் ஈண்டு நினைத்தற்குரியது.

கடிமலர்க்குன்றம் மலை அதுதானே; அது — அந்த உருவம். திருட்டி கோசரமான குன்றமும், மலையுமாகும். மூக்கிந்திரியத்திற்கு மணமாதலும் உடையது என்பார். குன்றத்திற்கு அடையாக்கிக் கடிமலர்க் குன்றம் என்றார். தான் ஏ அசை. தான் என்பதை மட்டும் அசையாக்கி அதுவே எனத் தேற்றப்பொருளில் வந்ததாகவும் கொள்க.

இம்மந்திரம், ஈசனுருவம் வேதாகமங்களாகிய ஞானசொரூபம் எனவும், இடியும் மின்னலும்

மலர்க் குன்றமும் மலையுமாக இந்திரியகோசரமு மாக இருத்தலின் இவற்றையெல்லாம் மாயாகாரி யமாகிய பூதமாக உணராமல், மாயாதீதமாகிய மகேஸ்வர வடிவாகக், காண்டலே ஞானியின் செயல் எனவும் உணர்த்துகின்றது.

வானப் பெருங்கொண்டல் மாலயன் வானவர்
ஊனப் பிறவி ஒழிக்கும் ஒருவனைக்
கானக் களிறு கதறப் பிளந்தஎம்
கோனைப் புகழுமின் கூடலும் ஆமே. 21

இ-ம் — எனின், இறைவனைக் கூடும் உபாயம் இது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : வானில் வரும் பெருங்கொண்டலாய், மால் அயன் முதலிய தேவர்களின் இழிந்த பிறவியை ஒழித்து ஈடேற்றும் முதல்வனாய் காட்டு யானை யைக் கதறப் பிளந்த பெருவீரனாய் உள்ள எம் தலை வனைத் தோத்தரியுங்கள்; அவனை அணைந்து உய்யலாம் என்றவாறு.

வானப் பெருங்கொண்டல் — வானில் இயங்கும் பெரியமேகம். மேகமானது மழையை எதிர்நோக்கும் நன்செய் புன்செய், எதிர்நோக்காத கடல். பாலை இவற்றில் நியதிதவறாமல் பெய்யும். பெய்யினும் பாலை பயன்படுத்திக்கொள்ளாது; கடல் உவராக்கும் செய்யிடம் ஏற்று உணவாயும், நீராயும் உதவும் அது போல எதிர்நோக்கும் அன்பருளத்தும், எதிர் நோக்கா வன்பருளத்தும் இறைவன் ஒப்ப வீற்றிருந்து ஆன்மா என்ற பொதுமையின் அருள்

வழங்குவர். ஆறுலும் அடைந்து உய்வது அன்பருளமே என்பதை விளக்கக் கொண்டலாக உருவகித்தது என்க

மால் அயன் வானவர் ஊனப்பிறவி ஒழிக்கும் ஒருவனை; புண்ணியமேலீட்டால் பதவிகளை ஏற்று நிற்கும் மாலும் அயனும், போகநுகர்ச்சி ஒன்றே பெற்றுநிற்கின்ற வானவர்களும், தமது பதவியும் போகமுமே பெரிது என்று எண்ணிப் பேரின்பம் விரும்பாதவர்களாக இருக்கவும், அவர்களைத் தடுத் தாட்கொண்டு, இழிபிறவியை நீக்கி எடுத்துய்யக் கொள்ளும் முதற்பெருங் கடவுளாகிய பரம கருணை மூர்த்தியை என்றவாறு.

கானக்களிறு கதறப்பிளந்த எங்கோனை — தாருகா வனத்துக் கன்மப் பிரமவாதிகளான எண்ணாயிரவர் முனிவர்கள் யாககுண்டத்தினின்றும் எழுப்பி ஏவிய காட்டு யானையைக் கதறும்படி பிளந்து அதனது தோலைப் போர்த்துக்கொண்ட எமது தலைவனை.

யானை யாககுண்டத்தில் பிறந்ததாயினும் யானை என்றது யானை என்ற பொதுமைநோக்கிக் கூறிய சாதியடை என்க. கதறப்பிளந்தான் என்றது இறைவன் கருணைக்கு இழுக்கு அன்றோ எனின்? அன்று; யானை மந்திர பலத்தால் யாகத்தீயினின் றும் எழுந்ததொன்றுதலானும், அழிப்பு இளைப் பாற்றலாதலானும் கருணைச் செய்தியேயாம் என்க. பெருமான் யானைத்தோலைப் போர்த்தும் பொலி வோடு விளங்குதல் வேறு எவரானும் இயலாத

செய்தி என்பதனைத் தக்கயாகப்பரணி யுரை யானுணர்க. யானையைப் பிளந்தார் என்றல் யாக கன்மத்தின் விளைவே முத்தியின்பம் தாராது; முதல் வனுபகாரம் வேண்டும் என்பதை அம்முனிவர்கள் உணரச்செய்த கருணை என்க.

புகழுமின் கூடலும் ஆம் என்றது இல்லாத குணத்தை ஏற்றிப் புகழ்தலும், இருப்பனவற்றைப் புகழ்தலும், இருப்பனவற்றுள்ளும் முற்றும் மொழிய மாட்டாமையின் திருவருள் காட்டியவரை புகழ்ந்து அமைதலும் எனப் புகழ்ச்சி மூவகை, அவற்றுள் சர்வசங்காரகாரணனான பரமேசுவரனைப் புகழ்தல் நம் பரிபாகத்திற்குத்தக அவனருள்வழி நின்று அது காட்டிய அளவு கண்டு புகழ்தல். அங்ஙனம் புகழ மனம் கனியும்: மலவாதனை குன்றும்; சிவவிளக்கம் உண்டாம்; சிவம் விளங்க இடையீடில்லாக் காட்சி யுண்டாம். அக்காட்சி அவனணைப்பிலேயே இருக்கும் இன்பப்பேற்றை நல்கும் என்பதாம்.

**மனத்தில் எழுகின்ற மாயநன் ஞுடன்**
**நினைத்த தறிவன் எனில்தான் நினைக்கிலர்**
**எனக்கிறை அன்பிலன் என்பர் இறைவன்**
**பிழைக்கநின் ருர்பக்கம் பேணிநின் ருனே. 22**

இம் - எனின். இறைவனின் கருணையிருந்தபடி இது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: தியானப் பொருளாக மனத்து எழு கின்ற மாய நாடனுகிய இறைவன் ஆன்மாக்களாகிய நாம் நினைத்ததை அறிந்து அருள்செய்வன்

ஆயினும் உயிர்கள் இறைவனை நினைக்கின்றார்கள் இலர். கடவுளுக்கு என்னிடத்துக் கருணையில்லை என்பார்கள். அவனோ தம் கருணைக்கு இலக்காகாது தப்பநிற்பவர்களுக்கும் அருள்வழங்கி நிற்கிறான்; என்னை அவன் கருணையிருந்தபடி என்றவாறு.

மனத்தில் எழுகின்ற மாயநன்னாடன் என்பது நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன் என்றது. எழுகின்ற நாடன் என இயைக்க. மாய நன்னாடன் என்பது சுத்தமாயையின் காரியமாகிய, முன் 'இடியும் முழக்கமும்' என்பதற்கு உரைத்த வண்ணமான நாத தத்துவத்திற்குச் சிவன் அதிபதி என்றவாறு.

நினைத்தது அறிவன் எனில்; யாம் அவரை நினைத்ததை அறிவார் என்றும் எம் எண்ணங்களை அறிவார் என்றும் இருவகையால் பொருள் கோடலும் ஆம். இறைவன் உயிருக்குயிராய் ஒன்றி நிற்கின்றானாதலின் 'நினைத்தது அறிவன்' என்று அருளினார். கணப் பொழுதும் • கடிகைநேரமும். கணக்கற்ற காலமும் அவனையே ஆன்மாக்கள் தியானிப்பதை அவனறிந்து அருள் செய்யினும் ஆன்மாக்கள் அவனை நினைப்பது இல்லை என இரங்குவார் 'தான் நினைக்கிலர்' என்றும் அருளினார்.

எனக்கு இறை அன்பிலன் என்பது தம்கடமையில் தாம் தவறியும் தாம்செய்த வினைப்பயத்தால் தாம் துன்புறுதலை மறந்தும் இறை அன்பிலன் என்பர். அது, காலங்கடந்துவிட்டது என்பது.

போலத் தன் தவறைப் பிறிதொன்றின்மேல் ஏற்றிக் கூறுவது. அருள் இறைவனுக்கும் அன்பு தமக்குமாக இருப்பதை மறந்த இவர்களது நிலை என்னே! என்றவாறு. அன்பைக் கொடுத்து அருளைப் பெறவேண்டிய இவர்கள் தமது அன்பில் லாமையை இறைவன் மேலேற்றித் தமது அறியாமையை அறிவித்தார்கள் என்றவாறும்.

பிழைக்க நின்றார்பக்கம் பேணி நின்றானே என்பது கடவுளுக்கு என்மேல் கருணை இல்லை எனச் சொல்லிக்கொண்டு தப்பி ஓட முயன்றவர் களிடத்தும் பாதுகாத்து நின்றான் எனவும், திருவடித்துணைபற்றி உய்ய நின்றாரிடம் அவர் களுக்கு யாதொரு தீங்கும் நேராமல் பாதுகாத்து நின்றான் எனவும் இருபொருள் காண்க.

பிழைக்க - தப்பியோட; உய்ய. பேணினான் என்றொழியாது 'பேணி நின்றான்' என்றது எஞ் ஞான்றும் எவ்விடத்தும் ஆன்மாக்கள் அவலம் புகாமே பாதுகாத்து நின்றான் என்பதை விளக்கிய வாறு. பிரபஞ்சநிலையில் பற்றுவையாது தப்பு கின்றவர்கள் என உரைப்பாரும் உளர்.

வல்லவன் வன்னிக் கிறைஇடை வாரணம்
நில்என நிற்பித்த நீதியுள் ஈசனை
இல்என வேண்டா இறையவர் தம்முதல்
அல்லும் பகலும் அருளுகின் றானே. 23

இம்-என்னின், கடவுள் இல்லை என்பார்க்கு ஏதுக் காட்டி விளக்குதல் நுதலிற்று.

இ - ள் : வல்லவனும், அங்கியைக் கடலிடை நிற்க என நிலைக்கச்செய்தநீதியை உடையவனு மாகிய ஈசனை இல்லை என்று சொல்லற்க: இறைவர்க் கெல்லாம் முதல்வனாய், அல்லும் பகலும் ஆன்மாக் களுக்கு அருளுகின்றான் என்றவாறு.

வல்லவன் - வலிமையையுடையவன்: என்றது முக்கரணத்தாலும் முக்காலத்திலும் முன்னியது முடிக்கின்ற ஆற்றலையும் விச்சதின்றியே வினைவு செய்யும் வன்மையையும் உடையவன் என்பதாம்.

வன்னிக்கு இறை - அக்கினிதேவன், ஆகவனீ யம் முதலிய அக்கினிகளுக்கும் சாடராக்கினி முதலிய உடலங்கிக்கும் அங்கி இறைவனாக இருத்தலின் இங்ஙனம் கூறப்பெற்றது. இடைவாரணம் என்பதை வாரணம் இடை என்று மாற்றுக. வாரணம் இடை-கடலுக்கு நடுவில்.

நில் என நிற்பித்த ஈசனை - அங்கியைக் கடலுக்குள் நிற்க எனக்கட்டளையிட்ட ஈசனை; என்பது நீரும் நெருப்பும் தம்முள் மாறுபட்டன வாக, அவிப்பனவும் அவிவனவுமாக இருந்தும் கடலுக்குள் கனன்று கொண்டே இருக்க என்று நிற்பித்தமையினாலேயே அவனாணைவழி அனைத்தும் நடப்பன என்பது அறியக்கிடக்கின்றது. உள் ஈசனை- நீதியால் உள்ளப்படுகின்ற கடவுளை. நீதியால் என்ப தற்கு நித்தியவஸ்து வாகிய ஈசனை எனவும் ஆம். கடல் தமது எல்லை கடவாது நிற்கப் பெண்குதிரை யின் முகமுள்ள அங்கி ஒன்று கடவுளருளால்,

கடலுக்குள் இருந்து காத்து வருகின்றதென்பது வரலாறு. எத்தனையோ ஆறுகள் எண்ணிலி யாண்டுகள் இடையறாது ஒழுகியும் கடல் எல்லை கடவாமைக்குக் காரணம், கடவுள் ஆணை என்பது தானே போதரவும் இல்லெலன்பார் இல்லென வேண்டா என்றவாறு.

படைத்தும் காத்தும் தொழிலாற்றுவார் இறைவராக, அவர்கள் அனைவரும் இவன் ஆணைவழி நிற்பார் என்பார் ' இறையவர் தம்முதல் ' என்றார். முதல் பண்பாகுபெயராகமுதல்வனை உணர்த்திற்று.

அல்லும் பகலும் அருளுகின்றான்; அவனியை அலைகடல் அழிக்காதவாறு அங்கியை நிறுவித் தன் இருப்பை உணர்த்தியதோடன்றி, ஆன்மாக்களா கிய நமக்கும் எப்போதும் அருள் செய்கின்றான் அதனைக் கொண்டேனும் அறியலாமே என்றது.

போற்றிசைத் தும்புகழ்ந் தும்புனி தன்னடி
தேற்றுமின் என்றும் சிவனடிக் கேசெல்வம்
ஆற்றிய தென்று மயலுற்ற சிந்தையை
மாற்றிநின் றார்வழி மன்னிநின் றானே. 24

இம் - எனின், மயக்கந் தீர்ந்தாரது மனத்திலே இறைவன் எழுந்தருளியிருப்பன் என்பது உணர்த் துதல் நுதலிற்று.

இ - ள் : போற்றி எனக் கூறியும் புகழ்ந்தும் புனிதனாகிய இறைவன் அடியே எமக்குறுதியாவது என்று தெளியுங்கள்; யாம் செல்வம் படைத்தது சிவபெருமான் திருவடிக்கே என்று எண்ணி, புறப்

பொருளிலே மயங்கிக்கிடக்கின்ற மனத்தை மாற்ற முயற்சிப்பவர்களிடத்தில் சிவன் நிலைபெற்று நின்றான் என்றவாறு.

இசைத்தும் புகழ்ந்தும் அடி என்றும் தேற்றுமின்; செல்வம் ஆற்றியது அடிக்கேஎன்று, மயலுற்ற சிந்தையை மாற்றிநின்றார்வழி சிவன் மன்னி நின்றான் எனக் கூட்டிப் பொருள் கொள்க.

போற்றிசைத்தும்: இசைத்தல் முதலாயின சொல்லுதற்குப் பொதுப்பெயராயினும் புகழை இசையோடு சொல்லுதற்கே பகுதிப்பொருளாய் அமையுமாதலின் இறைவனின் எல்லையில்லாத ஆற்றலை இசையோடு கூட்டிப் போற்றி என உரைத்தும், புகழ்ந்தும் – பாநலம்படவும் உரை நலம்படவும் உரைத்தும்.

புனிதன் அடி : எல்லாவற்றையும் தான் புனிதமுறுத்தித் தன்னைப் புனிதமுறுத்தும் பொருள் வேறு ஒன்று இல்லாமையானும், புனிதமுறுத்தவேண்டிய மல சம்பந்தம் அறுதியே இன்மையானும் அறுதியே புனிதமானவன்; அவனுடைய திருவடி என்றவாறு.

இடையீடுபடின் புறச்சார்பு ஏதுவாக இருவகைப் பற்றும் இயையுமாகையாலே இடையீடு இன்றிப் பற்றுக என்பார் ‘என்றும் தேற்றுமின்’ என்று அருளினார்.

வினைக்கு ஈடாக யாம் பொருளைப் படைத்தது போகங்களைப் பொருந்தவே என்று மயங்கிப் பொருளை ஈட்டவும் போற்றவுமாகப் போகத்துள்

அழுந்தி அனுபவிக்கும் மனத்தை செல்வம் படைத்தது சிவனடிக்குப் பணிசெய்யவே என்று மாற்றியமைக்க முயலுகின்றவர்களின் முன்னே சிவன் பொருந்தி நின்றான் என்பதாம். மாற்றினார் எனக்கூறாது மாற்றி நின்றார் என்றது இறைவனது எளிவந்த கருணையை விளக்கியவாறு.

பிறப்பிலி பிஞ்ஞகன் பேரரு ளாளன்
இறப்பிலி யாவர்க்கும் இன்பம் அருளும்
துறப்பிலி தன்னைத் தொழுமின் தொழுதால்
மறப்பிலி மாயா விருத்தமும் ஆமே. 25

இம் - எனின், இறைவன் அஞ்ஞானந் தன்னை அகல்விக்கும் நல்லறிவு என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பிறப்பு இறப்பு இல்லாதவரும், மயிற் பீலியை அணிந்தவரும், பேரருளாளரும், அனைவர்க்கும் இன்பம் அருளுவதில் இடையீடு படாதவருமாகிய இறைவனைத் தொழுங்கள்; தொழுதால் நீங்கள் அவனடியை மறக்காதவர்களாய், அஞ்ஞானத்தை அகற்றி ஞானப்பேறு அடையலாம் என்றவாறு

யாவர்க்கும் இன்பம் அருளும் துறப்பிலி என்றது இன்னார்க்கு இஞ்ஞான்று இத்துணை இன்பம் அருளினான் என்று ஒழியாது எஞ்ஞான்றும் இன்பம் அருளுவதில் துறப்பில்லாதவன் என்றவாறு.

மறப்பிலி – என்றும் இறைவன் திருவடியை மறக்காதவனாய்; இதனை 'மறவாமை வேண்டும்" என்னும் அம்மையார் வாக்காலும் அறிக. மாயை – அஞ்ஞானம். விருத்தம் – ஞானம். மாயா என்பது உலகம் தோன்றி ஒடுங்குதற்கு இடனாய் மூவகை ஆன்மாக்களிடத்தும் உள்ளதாய்ச் சகலரை மிகவும் பந்திப்பதாயுள்ளது. அதற்கு விருத்தமாவது என்றும் நிலைபேறுடையதாய் இன்பமயமாய் விடுதி பெற்ற நிலை; ஆதலின் மாயைக்கு விருத்தமாகிய இன்பநிலை விளையும் என்பதாம்.

தொடர்ந்துநின் றானைத் தொழுமின் தொழுதால்
படர்ந்துநின் றான்பரி பாரகம் முற்றும்
கடந்துநின் றான்கம லம்மலர் மேலே
உடந்திருந் தானடிப் புண்ணியம் ஆமே. 26

இம் – எனின், இறைவன் திருவடியைத் தொழுதலே புண்ணியம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஆன்மாக்களை என்றும் தொடர்ந்து நிற்பவனைத் தொழுங்கள்; அவன் உலகம் முழுவதும் வியாபித்தவன்; கடந்துநிற்பவன்; இதயத் தாமரையில் எழுந்தருளி யிருப்பவன்; அவன் திருவடியைத் தொழுதலே புண்ணியமாம் என்றவாறு.

தொடர்ந்து நின்றான்; பறித்து வைத்த தாமரைப் பூவையும் பரிதியின் கிரணம் அலர்த்துவதுபோலப் பல பிறவியிலும் கிடந்து உழல்கின்ற

ஆன்மாக்களை ஈடேற்ற இறைவன் என்றும் எங்கும் தொடர்ந்து நிற்கின்றான் என்பதாம்.

பரி பாரகம் முற்றும் படர்ந்து நின்றான் - எல்லாவற்றையும் தாங்கிநிற்கின்ற இப்பூமியில் உள்ளும் முற்றும் பரவியிருந்தான்; அதாவது பூமி வியாப்பியமாய்த் தான் வியாபகப் பொருளாயிருந் தான் என்றது. அகம் - உள்ளிடம், முற்றும் - புறம்பும்.

கடந்து நின்றான்; பிரபஞ்சத்துள் அங்ஙனம் உள்ளும்புறமுமாய் வியாபித்திருந்தவன் அவற்றைக் கடந்து வேறாயும் நின்றான் என்பதாம். கமலம் மலர் - தாமரைமலர்; விரித்தல் விகாரம். இது ஈண்டு இதயத் தாமரையை உணர்த்திற்று. உடந் திருந்தான் - ஒன்றாய் இருந்தவன். இது உடங்கியை வதே போன்றதோர் வழக்கு. அடி தொழுதால் புண்ணியம் ஆம் எனக் கூட்டிப் பொருள்காண்க.

**சந்தி எனத்தக்க தாமரை வாண்முகத்(து)**
**அந்தமில் ஈசன் அருள்நமக் கேஎன்று**
**நந்தியை நாளும் வணங்கப் படும்அவர்**
**புந்தியின் உள்ளே புகுந்துநின் றானே. 27**

இ-னின், வணங்குவார் நெஞ்சில் நிற்பவன் ஈசன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : அந்திக்காலம் போலும் சிவந்த தாமரை யாகிய ஒளிபொருந்திய முகத்தினை உடைய வரும், இறுதி இல்லாதவருமான இறைவனுடைய

திருவருள் நமக்கே உடைமையாவது என்று அவனைத் தினந்தோறும் வழிபடுவாரது புத்தியுள் தாமே புகுந்து பெயராது நின்றான் என்றவாறு.

முகத்து ஈசன், அந்தமில் ஈசன் எனத்தனித் தனிக் கூட்டுக. சந்தி - பகலும் இரவும் கூடும் வேளையாகிய காலை மாலை செவ்வந்திவானம் மாலைக்கே சிறந்தது என அறிக. சந்தி எனத்தக்க தாமரை வாண்முகம் ' இதில் முன்னது உவமையும் பின்னது உருவகமும் ஆம். அந்தமில் ஈசன் - தான் யாவற்றிற்கும் ஈறுதலையன்றித் தனக்கு ஈறு இல்லாதவன். வணங்கப்படும் அவர்—வணங்குதலைச் செய்யும் அவர்.

புகுந்து நின்றான்; " மனத்து உன்னை வைத்தாய் " " உள்ளத்து மன்னிய மன்னே " என்பன போலக் கருணையால் தானேவந்து எனது புத்தியில் புகுந்து நின்றான் என்பதாம். வணங்கப்படும் என்பது செய்வினை செயப்பாட்டு வினையாற்று.

ஈசன் அருள் நமக்கே என்று நாளும் நந்தியை வணங்கப்படும் அவர் புந்தியினுள் புகுந்து நின்றான் என வினைமுடிவு செய்க.

**இணங்கிநின் றான்எங்கு மாகிநின் றானும்**
**பிணங்கிநின் றான்பின்முன் னாகிநின் றானும்**
**உணங்கிநின் றான்அம ராபதி நாதன்**
**வணங்கிநின் றார்க்கே வழித்துணை யாமே. 28**

இ-ள் - எனின், சிவம் வணங்குவார்க்கு வழித்துணையாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : கலந்து நின்றவனும்' எங்கும் சர்வ வியாபியாய் நின்றவனும் மாறுபட்டு நின்றவனும் பின்னாகியும் முன்னாகியும் நின்றவனும், உலர்ந்து நின்றவனும் ஆகிய தேவதேவன், தன்னை வணங்கி நின்றார்க்கு நெறிகள்தோறும் துணையாவன் எ – று.

இணங்கி நின்றானும் எங்கும் ஆகி நின்றானும் " ஏழிசையாய் இசைப்பயனாய் யான் செய்யும் துரிசுகளுக்கு உடனாகி " என்றாற்போலச் சிவபோத மிகுந்தார் செய்யும் செயல்கள் அனைத்தினும் ஒப்பி நின்றானும், சிவபோதமிகுந்த ஆன்மாவினிடமாக பாலில் நெய்போலக் கலந்து நின்றானும் என்க.

பிணங்கி நின்றான் பின் முன் ஆகி நின்றானும் — காலத்தானும் இடத்தானும் பின்னாகியும் முன்னாகியும் நின்றானும், தயிரும் பாலும் போலத் தம்முள் மாறுபட்டு நின்றானும், " முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே, பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனே, சோதியனே, துன் இருளே, தோன்றாப் பெருமையனே, ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே " என்றவாறு பின்னாகி முன்னாகிப் பிணங்கி நிற்பவன் என்பதாம்.

உணங்கி நின்றான் அமராபதி நாதன் என்றது காய்ந்து நின்றவன்; அமராபதியாகிய இந்திரனுக்கும் தலைவன் என்றவாறு. காய்ந்தவெண்ணெய் நீர் நீங்கி நெய்யாகி நுகர்ச்சிக்குரியதாக வெளிப்பட்டு நிற்றல் போல, இந்திரன் முதலிய தேவர்கட்கு எல்லாம் தேவனாய் மகாதேவனாய் வெளிப்பட்டு நின்றவன் என்பது கருத்து.

வணங்கி நின்றார்க்கே வழித்துணையாம்; அந்தியும் நண்பகலும் அஞ்சுபதஞ்சொல்லி வணங்கி நின்றவர்களுக்கு, அவர்கள் செல்லும் நெறிகளில் எல்லாம் துணையாக இருந்து பாதுகாப்பவன் என்றவாறு. வழி-சிவபுண்ணியநெறி, வழித்துணையாதல்-வழிகாட்டும் வள்ளலாக, மார்க்கசகாயராக விளங்குதல். வழி நடப் பார்க்குக் கள்வராலும் விலங்குகளாலும் நீர் அனல் முதலிய பூதங்களாலும் இடையூறு புகுதாமே பாதுகாக்கின்ற வழித்துணை போல, ஐம்பொறிகளாலும் மனத்தாலும் அடியார்களின் சிவகதிச் செலவிற்கு இடையூறு உண்டாகாத வண்ணம் பாதுகாத்தல். இதனை, அப்பருக்குப் பொதிசோறு அளித்தும், திருஞானசம்பந்த சுவாமிகளுக்குச் சிவிகையும் குடையும் படிக்காசும் பாலித்தும், ஆலாலசுந்தரரைத் தடுத்தாட் கொண்டும் அருளிய நிகழ்ச்சிகளிலிருந்து அறிக.

**காணநில் லாய்அடி யேற்குற வாருளர்**
**நாணநில் லேன்உன்னை நான்தழு விக்கொளக்**
**கோணநில் லாத குணத்தடி யார்மனத்(து)**
**ஆணியன் ஆகி அமர்ந்துநின் றானே** 29

இம் - எனின், கலந்த இன்பாகிக் களித்திருக்க விரும்புதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மாறுபாடற்ற குணம் எல்லாம் கூடிய அடியார்கள் மனத்தில் உரையாணியைப்போன்றவனாகி விரும்பி எழுந்தருளியிருப்பவனே! அடியேனுக்கு உறவு ஆவார் யாரும் இலர்; ஆகையால் இறைவனே அடியேனுடைய ஞானகோசரப்பொருளாகி

நிற்க வேண்டும். உன்னைக் கட்டித்தழுவிக் கலக்க நான் ஒருபோதும் நாணத்தில் நிலைபெற்று நிற்க மாட்டேன் என்றவாறு.

அமர்ந்து நின்றனே, உறவு ஆர் உளர் காண நில்லாய், தழுவிக்கொள்ள நாணம் நில்லேன் எனக் கூட்டி முடிக்க.

காண நில்லாய் - பன்னெடுங்காலம் தலைவனைப் பிரிந்த தலைவியின் நிலையில்நின்று 'அடியேன் கண் காண வெளிப்பட்டு நிற்பாயாக' என்ற பிரார்த்தனையை முதற்கண் விண்ணப்பித்து, அதற்கு உரிய ஏதுவைப் பின்னர் விதக்கின்றார்; அடியேற்கு உறவு யாருளர் என்று, அடியேற்குக் களைகணுவார் பிறர் யாரும் இல்லாமையால் "உறவு எனக்கு ஆர் அமரர்கள் ஏறே" "குற்றாலத்துறையும் கூத்தனல்லால் உற்றார் யாருளரோ" எனத் திருவுளத் தடைத்து, 'சேவற்புள் அயலிருக்கவும்' இருள் மறைக்க அறியாது அரற்றும் அன்றில்போலான தன்னிலையை அறிவித்து' தடை நீங்கித் தலைவனைக் காணும் விருப்பால் தவிக்கின்றேன் வெளிப்பட்டு அருளவேண்டும் என்று விண்ணப்பித்தவாறு.

தழுவிக்கொள்ள நாண நில்லேன் என்பது அடியேன் வேண்டுகோளுக்கு இரங்கித் தேவரீர் வெளிப்படின் கரைகடந்த காதல் நாணத்தடையை உடைத்தெறியும்; ஆதலால் ஓடிவந்து தழுவிக்கொள்வேன் தேவரீருக்கு வலிய அணைத்த சுகம் வரும் என்பதாம்.

கோண நில்லாத குணத்து அடியார் - "மீளா அடிமை உமக்கே ஆள்" என்றமுறையில் சிறந்தும் கோணுத குணமே வடிவான அன்பர்கள். மனத்து ஆணியன் ஆகி - அவ்வடியார்களின் மனமாகின்ற சந்தனக்கட்டையில் பதித்த பொன்னுணியனே யனுகி சந்தனக்கட்டையில் பொன்னுணிகள் பல வற்றைப் பதித்து உரைத்த கலவையை அணிவது மரபாதல் அறிக, உரைத்த நிலையில் சந்தனமும் ஆணிப்பொன்னும் கலந்து நிற்றல் போல, அடியே னும் தேவரீருடன் கலந்து பிரிப்பற்ற நிலையில் பொருந்துவேன் என்று விண்ணப்பித்தவாறும். இங்ஙனம் அன்றி அடியார்கள் மனமாகிய பசுமரத் தில் புதைத்த ஆணியை ஒத்தவனுகி எனலுமாம். அமர்ந்து-விரும்பி. இதனுலும் அடியேன் பிரிவற்ற பெருநிலை எய்த விரும்புகிறேன் என்ற கருத்தே புலப்படுதல் காண்க.

வானின் றழைக்கும் மழைபோல் இறைவனும்
தானின் றழைக்குங்கொல் என்று தயங்குவார்
ஆனின் றழைக்கும் அதுபோல்என் நந்தியை
நானின் றழைப்பது ஞானம் கருதியே. 30

இம் - எனின், இறைவன் கருணைக்கடலாயினும் நாமும் பரிபாகமுறுதல் இன்றியமையாதது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: வானத்து நின்றழைக்கும் மேகத்தைப் போலே இறைவனும் அழைப்பரோ என்று தயக்கம் அடைவர் சிலர். பசு பாலையூட்டத் தனது கன்றை அழைப்பதுபோல, அருளைத்தர அழைக்கும் எம் தலை

வணுகிய சிவத்தை அடியேன் கன்றைப்போல நின்று அழைப்பது அவன் தரும் ஞானம் கருதியே என்றவாறு.

உயர்ந்த வானத்தினின்று ஒலிக்கும் மழைபோல இறைவன் அழைப்பரோ என்றது. மழை இடித்து மின்னித் தனது வரவைக் குறிப்பிட்டு, உழவர்களே நீங்கள் புலத்தைப் பண்படுத்தி வித்தி எதிர்நோக்கி இருங்கள்; பெய்த மழை பரந்து ஓடி வழிக் கொள்ளாதவாறு வளமுறுத்துங்கள் என்கின்றது. அது போல இறைவனும் அருண் மழை பெய்தற்கு அழைப்பர்; ஆனால் வான்போல அன்று. பின் எங்ஙனம் என்னில்? ஆன்போல. ஆன் தன் கன்றின் பசியறிந்து ஊட்டும்; கன்றும் தாயைக் கூவியழைக்கும்; இரண்டும் ஈயவும், ஏற்கவும் ஒத்து இருக்கும். அவற்றைப்போல நம் இறைவனும் இருப்பர்; நாமும் கன்றுபோல அழைக்கவேண்டும் என்பதாம். ஆனால் கன்றழைப்பது பால் கருதி: நான் அழைப்பது ஞானங்கருதி என்றவாறு.

மண்ணகத் தான்ஒக்கும் வானகத் தான்ஒக்கும்
விண்ணகத் தான்ஒக்கும் வேதகத் தான்ஒக்கும்
பண்ணகத் தின்னிசை பாடலுற் றுனுக்கே
கண்ணகத் தேநின்று காதலித் தேனே 31

இம் - எனின், இறைவனின் நிலை பிறர்க்கும். தமக்கும் இத்தன்மைத்து என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இறைவன், மண்வாழ் மக்களுக்கு மக்களே போல்வன் வானிடமுள்ள தாராகணத்த

வர்க்கு அவர்களே போல்வன்; சுவர்க்கவாசிகளாகிய தேவர்க்கும் அவர்களே போல்வன்; சித்திகளின் நிற்பார்க்கு இரசவாத குளிகையையுடைய சித்தரை ஒப்பன்; அங்ஙனம் அவரவர்களும் எண்ண, யான் பாடற் பண்ணின்கண் இசைபோல விரவியுள்ளவனை, அறிவுக்கு அறிவாகத் தியானித்துக் காதலித்தேன் என்றவாறு.

மண்ணிலுள்ளாரும், வானிலுள்ளாரும் அவர் அவர்கள் நிலையில் வைத்து வழிபட்டுய்ய அவ்வவர் நிலையில் இருக்கும் இறைவனை யான் பாடலில் இசைபோல உயிருக்குயிராக இருப்பவன் என்று காதலிக்கின்றேன் என்பதாம்.

"வானத்தான் என்பாரும் என்கமற் றும்பர்கோன்
தானத்தான் என்பாரும் தாமென்க - ஞானத்தான்
முன்நஞ்சத்தால் இருண்ட மொய்யொளிசேர் கண்டத்தான்
என்நெஞ்சத் தான்என்பன் யான்"

என்ற அற்புதத்திருவந்தாதியும் சிந்திக்க.

இனி, ஒக்கும் என்பவற்றை வினாக்குறிப்பாகக் கொண்டு, ஒக்குமோ? ஒவ்வாது; ஆனால் பாடலில் பண்ணும் இசையும்போல உள்ளவன்; அவனை என் அறிவினிடமாகக் கண்டு காதலிக்கின்றேன் எனவும் உரைக்கலாம். இறைவன் பண்ணும் இசையும் போலக் கலந்திருத்தலைப் "பண்ணிடைத் தமிழ் ஒப்பாய்" "பண்ணையும் ஓசையும் போல" என்பன கொண்டும் தெளியலாம். 'கண்ணகத்தே நின்று' என்பதற்குக் கண்ணில் மணியாக, மணியாடு

பாவையாக அவன் நிற்க எனினும் அமையும். இப்பொருளில் நின்று என்பதைச் செயவெனெச்ச மாக்கிப் பொருள்கொள்க. இது காணும் காட்சியும், உண்ணும் உணவும். குடிக்கும் நீரும் அவனேயாக இருத்தலைக் குறித்தது.

தேவர் பிரான்நம் பிரான்திசை பத்தையும்
மேவு பிரான்விரி நீர்உல கேழையும்
தாவு பிரான்தன்மை தானறி வார்இல்லை
பாவு பிரான் அருள் பாடலும் ஆமே. 32

இ-ம் — எனின், இறைவனருள் எம்மறிவின் எல்லையைக் கடந்தது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தேவர்கள் அனைவருக்கும் முதல்வன்; நமக்குந்தலைவன்; பத்துத்திசைகளிலும் வியாபித்தவன்; கடல்சூழ்ந்த ஏழுலகையும் கடந்த தலைவன்; இவன் தன்மையை அறிவார் யாரும் இல்லை. இவ்வண்ணம் எங்கும் வியாபித்துள்ள இறைவனது அருளை எம்மால் பாடலும் ஆமே! ஆகாது என்பது என்றவாறு.

திசை பத்து — நேர்த்திசை நான்கும், கோணத்திசை நான்கும், விண்ணும் மண்ணும் ஆகிய பத்து. விரி நீர் உலகு ஏழு — கடல் சூழ்ந்த பூமி முதலாகிய மேலேழுலகங்கள். ஆமே என்றதில் ஏகாரம் எதிர்மறைக்கண்ணது. " உலகேழெனத் திசைபத்தெனத் தான் ஒருவனுமே பலவாகி நின்றவா தேணோக்கம் ஆடாமோ " என்ற திருவாசகம் நோக்குக.

பதிபல ஆயது பண்டிவ் உலகம்
வீதிபல செய்தொன்று மெய்ம்மை உணரார்
துதிபல தோத்திரம் சொல்லவல் லாரும்
மதியிலர் நெஞ்சுள் வாடுகின் றாரே. 33

இம் — எனின், விதிவழிநிற்பாரும் துதிவழிநிற்பாரும் துன்புறுகின்றார்கள் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : தொன்றுதொட்டே இவ்வுலகம் பல தலைவர்களையுடையது; அவர்கள் இவ்வுலகிற்குப் பலப் பல விதிகளைச் செய்து கலங்கிய அறிவினராய் உம்மை ஒன்றும் உணராராயினர். துதித்துப் பல தோத்திரங்களைச் சொல்லவல்ல அன்பு நெறியில் நிற்பாரும் அறிவற்றவர்களாக மனத்தில் அமைதியின்றி வாடுகின்றார்களே; இது என்ன பரிதாபம்! என்றவாறு.

ஈற்று ஏகாரம் இரக்கக்குறிப்பு. உலகம் இடவாகு பெயராக மக்கட்டொகுதியை உணர்த்திற்று.

பண்டு இவ்வுலகம் பதிபல ஆயது; ஆன்மாக்களின் பரிபாக விசேடத்திற்கு ஏற்ப அறுவகைச் சமயத்துள் நின்று ஆன்மாக்கள் பதிகளை வேறு வேறு கொண்டனர் ஆதலின் இங்ஙனம் அருளியது.

விதி பல செய்து மெய்ம்மை ஒன்றும் உணரார்; பல பதிகள் ஆணைக்கு ஏற்ப அவ்வச் சமயங்கட்கு நெறிகளையும் பல படைத்து, உண்மை உணரமாட்டாராய் யானைகண்ட குருடர்போலாயினர். இப்

பகுதி விதிமுறையில் நிற்பாரும் உண்மையுணர மாட்டாமை உணர்த்திற்று.

துதி பல தோத்திரம் சொல்லவல்லாரும் மதியிலர் என்றது துதியாகிய பல தோத்திரங்களை இசையுடன் சொல்லவல்லாரும் வெறும் வாயளவில் சொல்லுகின்றனரே யன்றித் தோய்ந்து சொல்ல மாட்டாமையின் அமைதி அடைகின்றார்கள் அல்லர் ஆதலால் அவர்கள் மதியிலர் ஆயினர். "புத்தி கெட்டவனுக்கே தத்தும் பித்தும்" என்பது பழமொழியாதலின் அவர்கள் வாடுகின்றார்கள் என்பதாம். துதி பல தோத்திரம் என்பது இரு பெயரொட்டுப் பண்புத்தொகை. துதிக்கின்ற தோத்திரம் எனலுமாம்.

சாந்து கமழும் கவரியின் கந்தம்போல்
வேந்தன் அமரர்க் கருளிய மெய்ந்நெறி
ஆர்ந்த சுடரன்ன ஆயிரம் நாமமும்
போந்தும் இருந்தும் புகழுகின் றேனே. 34

இ-ர் - எனின். இறைவன் அருளிய உபாயத்தைக் கடைப்பிடித்து உய்யலானேன் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: சந்தனத்தோடு கலந்து மணக்கின்ற கத்தூரியைப்போல சிவன் நமக்கு அருளிய உண்மை உபாயமாகிற நிறைந்த கிரணங்களைப் போன்ற ஆயிரந் திருநாமங்களையும் நடந்தும் இருந்தும் புகழ்கிறேன் என்றவாறு

கவரியின் கந்தம் – கத்தூரி. கத்தூரிமான் வேறு. கவரிமான் வேறு. ஆயினும் மான் என்ற பொதுமை நோக்கிக் கவரியின் கந்தம் எனப்பெற்றது. வேந்தன் – தலைவன்; இறைவன். "வேகங் கெடுத்து ஆண்ட வேந்தன் அடி வெல்க" என்ற திருவாசகத்திலும் காண்க. கந்தம்போல் அருளிய மெய்ந்நெறி என்றது சாந்து மணங்கமழக் கத்தூரி கலத்தல் போல ஆன்மாக்கள் தன்மணங்கெட்டுச் (பசுபோதம் தவிர்த்து) சிவ மணங்கமழ ஆயிரம் திருநாமங்களையும் உபாயமாக உதவினர் என்பது. ஒவ்வொரு நாமங்களும் நிறைந்த கிரணங்களையுடைய ஒவ்வொரு சூரியனைப்போல அறிவொளி வழங்குவன என்றவாறு. போந்தும் இருந்தும் புகழ்கின்றேன் என்பது, நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் நினைப்பதுன்னை என்று பிறரைச் சொல்விக்கின்றமை காண்க.

ஆற்றுகி லாவழி யாகும் இறைவனைப்
போற்றுமின் போற்றிப் புகழ்மின் புகழ்ந்திடில்
மேற்றிசைக் கும்கிழக் குத்திசை எட்டொடு
மாற்றுவன் அப்படி ஆட்டவும் ஆமே. 35

இம் - எனின், இறைவனைப் புகழின் முற்றறிவும் பெறலாம் என்று உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: பிறர் யாரும் சாதிக்க இயலாத சிவோகம் பாவனையாகிய நெறியால் இறைவனைப் போற்றுங்கள்; புகழுங்கள்; அங்ஙனம் புகழின் மேற்றிசையும் கிழக்குத்திசை முதலான எட்டுத் திசைகளையும் மாற்றி அமைக்கும் இறைவன்போல நீங்களும் ஆட்டிவைக்கலாம் என்றவாறு.

ஆற்றுகிலாவழி ஆகும் இறைவன்-பிறர் சாதிக்க இயலாத சிவோகம் பாவனையில் நிற்பார்க்கு உதவி புரியும் இறைவன். மேற்றிசைக்கும்-மேற்றிசையை யும் உருபுமயக்கம். மேல்திசை - ஆகாயம். மேல் திசையும் எட்டுத்திசையும் கூறவே பாரிசேடத்தால் பூமியும் பெற்றும். மாற்றுவன் என்பது முருகன் திரு விளையாடலில் மாற்றிவைத்ததுபோல மாற்றுவன் என்பதாம். சிவோகம்பாவனை செய்வோன் ஏகதேச மாய் நின்று அறிவதாய சிற்றறிவின் நீங்கி முழுதும் வியாபகமாய் நின்றறிவதாகிய முற்றுணர்வுபெறு வன் என்னும் சர்வஞானோத்தராகமக் கருத்தும் சிந்திக்க.

**அப்பனை நந்தியை ஆரா அமுதினை**
**ஒப்பிலி வள்ளலை ஊழி முதல்வனை**
**எப்பரி சாயினும் ஏத்துமின் ஏத்தினால்**
**அப்பரி சீசன் அருள்பெற லாமே.** 36

இம் - எனின். எங்ஙனம் ஏத்தினும் ஈசன் அருள் பெறலாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: உயிர்த் தந்தையை, இறைவனை. உண்டு தெவிட்டாத அமுதம் போல்பவனை. தன்னொப்பார் இல்லாத வள்ளலை, ஊழிகட்கெல்லாம் அப்பாற் பட்ட முதற்பொருளானவனை எத்தன்மையிலாயி னும் ஏத்துமின்: ஏத்தினால் அத்தன்மையால் அவன் அருளை எய்தலாம் என்றவாறு.

அப்பனை: மகனைக் குற்றந்திருத்திக் குணம் புகட்டி வளர்க்கும் உடல் தந்தைபோல உயிர்க்குற்

றங்களாகிய மலமறைப்பை நீக்கி ஞானவொளி நல்கித் திருவடியிற் சேர்ப்பிக்கும் உயிர்த்தந்தையை என்பதாம். நந்தி என்பது சிவபெருமானுடைய மற்றொரு திருநாமம். ஆர்தல்-உண்டு அமைதல். ஆரா அமுதினை-உண்டு, அமையும் என்ற ஆசையின் முடிவை உண்டாக்காத அமுதம்போல்வானை, ஊழி முதல்வன்-இறுதியைச் செய்யும் முதல்வன்; சங்கார காரணன் என்றவாறு.

எப்பரிசாயினும் ஏத்துமின் - கண்ணப்பர் போன்று அன்புநெறிப்பட்டோ, சிவகோசரியாரைப் போன்று ஆகம நெறிநின்றோ, சாக்கியர் போன்று மறைந்த அன்புகொண்டோ, மா விரதியாகவோ, பாசுபதராகவோ எம்முறைபற்றியேனும் ஏத்துமின். இங்ஙனம் கூறியது யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வம் ஆகி ஆங்கே மாதொருபாகனார் தாம் வந்து அருள்செய்வர் என்னும் துணிவு புலப்படுத்த என்க. அப்பரிசு ஈசன் அருள் பெறலாம் என்பதில் அத்தன்மையால் அவன் அருளைப் பெறலாம் என மூன்றுவதுருபு விரித்துப் பொருள் கொள்க.

**நானும்நின் றேத்துவன் நாடொறும் நந்தியைத்**
**தானும்நின் றன்தழல் தானொக்கும் மேனியன்**
**வானில்நின் றார்மதி போல்உடல் உள்உவந்(து)**
**ஊனில்நின் றாங்கே உயிர்க்கின்ற வாறே. 37**

இம்-எனின் காட்சியருளிய கண்ணுதற்கடவுள் அறிவையும் அருளுவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : நாள்தோறும் இறைவனை நானும் நிலை பெற்று நின்று ஏத்துவேன், இறைவனும் செந்தழல் போலும் செம்மேனியனாக வெளிப்பட்டு நின்றான். அவன் வானத்தில் உள்ள சந்திரனைப்போல, அடியேன் உடலிடமாக மகிழ்ந்து எழுந்தருளி ஊனில் நிலை பெற்று நின்று பிராணனாக உயிர்க்கின்ற விதம் இதுவாம் என்றவாறு.

நாள்தோறும் பூக்கைக்கொண்டு பொன்னடி போற்றுவார்க்கு இறைவன் வெளிப்பட்டு அருள் செய்கின்றானாதலின், நானும் நாடோறும் ஏத்துவன் என்றருளினார். நாள்தோறும் ஏத்துதல் தம் மன பரிபாகத்தின் பொருட்டேயன்றி எப்போதும் கருணையால் கனிந்துள்ள இறைவன் திருவுள்ளக் கனிவிற்கு அன்று எனத் தெளிக. பரிபாகமுற்ற மனத்தில் இறைவன் எழுந்தருளிக் காட்சி வழங்குவனாதலின் தானும் நின்றான் என்றார். கண்ணொளிக்கு உபகாரப்பட்டு பொருளுண்மையைப் புலப்படுத்தும் செந்தழல் போல ஆன்மாக்களுக்கு அடிஞானத்தையுதவி உணர்வரிய மெய்ஞ் ஞானத்தை நல்கும் ஞானத்திரு மேனியன் என்றவாறும். வானில் ஏகதேசமாய் நின்றும் தன்கதிர்களால் வான் முழுதும் வியாபித்திருக்கும் மதியைப் போல உடலுள் இதயத் தாமரையிலுள்ள சிதாகாசப் பெருவெளியில் எழுந்தருளியிருந்து உடலுக்குள்ளும் புறம்பும் தம் அருள் நோக்கால் விரவி என்பதாம்

ஊனில் நின்று — அவ்வுடம்பில் நின்றே. ஊன் — ஆகுபெயராக உடலையுணர்த்திற்று. உயிர்க்கின்ற வாறு (இதுவாம்)-பிராணனாக இயங்குகிறவிதம் இது

வாம். ஊனுக்குப் பிராணன் இன்றேல் இயக்க மின்று. பிராணனுண்மையை உயிர்த்தலாகிய மூச்சுக்காற்றால் அறிகிறோம். அதுவாக நின்று இறைவன் தான் கலந்திருத்தலை உணர்த்துகின்றான். இக்கருத்தேபற்றி "என்னுளே உயிர்ப்பாய்ப் புறம் போந்து புக்கு. என்னுளே நிற்கும் இன்னம்ப ரீசனே" என்று அப்பரடிகள் அருள்வது காண்க.

பிதற்றொழி யேன்பெரி யான்அரி யானைப்
பிதற்றொழி யேன்பிற வாஉரு வானைப்
பிதற்றொழி யேன்எங்கள் பேர்நந்தி தன்னைப்
பிதற்றொழி யேன்பெரு மைத்தவன் நானே. 38

இம் – எனின், அவனைப் பிதற்றித் திரிவேன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : பெரியவனும் அரியவனும், பிறவாமலே பெற்ற உருவத்தை உடையவனும் எங்களது பெரிய நந்தியும், பெரிய தவத்தினையுடையவனு மாகிய அவனைப் பிதற்றுதலிலிருந்து நான் ஒரு போதும் ஒழியேன். எப்போதும் அவனையேபற்றிப் பிதற்றித் திரிவேன் என்றவாறு.

பெரியான்–உலகில் பெரியவாகவுள்ள பொருள் களிலும் பெரியவன்; பெருமையுடைய அனைத்தினும் பெருமையை யுடையவன் எனலுமாம். அரியானை - அரியவற்றுள் அரியவனை, பிறவா உருவான் – எம் முறையிலும் வினைக்கீடாகப் பிறவாத திருமேனியை உடையவன்; எனவே அநாதி முத்த சித்துருவாகிய சிவன் உபாதிகளொன்றும் உறாமையின் தான்

நினைந்த மேனியைத் தனதாகக் கொண்டருளுவன் என்பது விளங்கும். இதனை,

'குறித்த தொன்றுக மாட்டாக் குறைவிலன் ஆத
லானும்
நெறிப்பட நிறைந்த ஞானத் தொழிலுடை நிலைமை
யானும்
வெறுப்பொடு விருப்புத் தன்பால் மேவுதல் இலாமை
யானும்
நிறுத்திடும் நினைந்த மேனி நின்மலன் அருளி னலே'

என்னும் சிவஞானசித்தியார்கொண்டு தெளியலாம்.

எங்கள் நந்தி பேர்நந்தி எனக் கூட்டி, எங்களை அநாதியே ஆண்ட தலைவனுகிய நந்தியை நந்தியென்னும் பேருடையானை எனினும் ஆம்.

பெருமைத்தவன் பிதற்று ஒழியேன் நான் என்பது பெருமையோடு கூடிய தவத்தினை உடையவனுகிய அவனைப் பிதற்றுதலிலிருந்து விலகேன் நான் என்றவாறு. தவஞ்செய்வார் பிறர்க்குத் தன்னையன்றிக் குறிக்கோள் வேறின்றுகவும் அவன் தவஞ்செய்தல் ஆன்மாக்கள்மீது வைத்த அருளாதலின் பெருமைத் தவன் என்று பேசப்பெற்றது.

பிதற்றுதல் — வாய்க்கு வந்தவற்றைத் தொடர்பின்றிச் சொல்லுதல். மதிமயங்கினுரும் கள்ளுண்டு களித்தாரும் நோய்வாய்ப்பட்டாரும் அங்ஙனம் பிதற்றுவர்; அதுபோன்று. இறைவன் அன்புவயப்பட்டமையால் நானும் பிதற்றுகின்றேன் என்பதாம்.

பிதற்று ஒழியேன் என்பது பிதற்றுதலைக் கண்டு பிறர் ஏளனம் செய்வர்; அதுகண்டு பிதற்றுதலை ஒழிதல் நாணமுடையார்செயல்; அந்த நாணமும் கழன்றமையால் நாடவர் நந்தம்மை யார்க்கினும் பிதற்று ஒழியேன் என்றவாறும், பிதற்று முதனிலைத் தொழிற்பெயர்.

வாழ்த்தவல் லார்மனத் துள்ளுறு சோதியைத்
தீர்த்தனை அங்கே திளைக்கின்ற தேவனை
ஏத்தியும் எம்பெரு மான்என் றிறைஞ்சியும்
ஆத்தம்செய் தீசன் அருள்பெற லாமே. 39

இம் – எனின், ஈசன் அருள்பெறுதற்காம் உபாயம் இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : இறைவனுடைய எல்லையற்ற குணங்களில் இயன்றவற்றை எடுத்துக்கூறி வாழ்த்தவல்ல பூர்வபுண்ணியம் உடையவர்கள் மனத்துள் விளங்கும் சோதிப்பொருளை, நிர்மலசொரூபியை, செம்மனத்துள் இருந்து திளைக்கின்ற தேவனைத் தோத்தரித்தும் எம் தலைவன் என்று வீழ்ந்து வணங்கியும் அன்பு செய்தும்வரின் அவனருளைப் பெறலாம் என்றவாறு.

வல்லார் என்பது இறைவனின் புகழனைத்தையும் அறிந்து வாழ்த்துதல் எவர்க்கும் இயலாத தொன்று ஆதலின் இயன்றவரை வல்லார் என்பதை விளக்கி நின்றது. மனத்துள் உறுசோதி என்பதனோடு " நல்லக விளக்கது " " தூண்டாவிளக்கனைய சோதிகண்டாய் " " சோதியே சுடரே சூழ்

ஒளி விளக்கே" என்பன முதலிய திருமுறைகளை யும் ஒப்புநோக்குக. அங்கே என்ற இடச்சுட்டு, சோதி விளங்குவதற்குரியதாகிய செம்மனத்து என்னும் பொருளைத்தந்து நின்றது. திளைத்தல் - கலந்து ஆழ்தல். ஆத்தம் செய்தும் என்ற எண்ணும்மை விகாரத்தால் தொக்கது. வரின் என வினையெச்சத்தை வருவித்துப் பெறலாம் என்ப தனோடு முடிக்க. ஈசன் அருள் பெறுதற்கு அமைந்த உபாயம் ஏத்துதலும் இறைஞ்சுதலுமாகிய இரண்டுமே என்பது உணர்த்தப்பெற்றது.

குறைந்தடைந் தீசன் குரைகழல் நாடும்
நிறைந்தடை செம்பொனின் நேரொளி ஒக்கும்
மறைஞ்சடம் செய்யாது வாழ்த்தவல் லார்க்குப்
புறஞ்சடம் செய்வான் புகுந்து நின் றனே. 40

இ·ம் - எனின், உடலைத் தானென்றிருக்கின்ற அறியாமையை அகற்றி ஆட்கொள்வன் ஈசன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: ஒளியால் நிறைந்து அடைந்த செம் பொன்னுக்கு ஒப்பான ஈசனது ஒலிக்கின்ற கழல் அணிந்த திருவடியில் நும் குறைகளைச் சொல்லி அடைக்கலம் புகுந்து நாடுங்கள்; மலத்தில் மறைந்து நின்று அடம்பிடிக்காமல் அவனை வாழ்த்த வல்லவர் கட்கு, உள்ளத்துப் புகுந்து நின்ற அவன் உடம் பினைப் புறமாகச் செய்வன் என்றவாறு.

ஒளியால், செம்பொனின் நேர் ஒக்கும் ஈசன் குரை கழல் குறைந்து அடைந்து நாடும்; மறைஞ்சு

அடம் செய்யாது வாழ்த்தவல்லார்க்குப் புகுந்து நின்றான் சடம் புறம் செய்வான் எனக் கொண்டு கூட்டுக.

குறைந்து அடைந்து - தமக்குற்ற குறைகளைத் தெரிவித்துக் கொண்டு அடைக்கலத்தானமாவது அரன் கழலே என்று புகுந்து. குரை கழல் - ஒலிக்கின்ற வீரக்கழல்; இது ஆகுபெயராகத் திருவடியை உணர்த்திற்று. நாடும் - முன்னிலை ஏவல் வினை முற்று. நிறைந்து அடை செம்பொன் - உருக்கி போடவிட்டு அச்சில் நிறைந்து இறுகியமாற்றுயர்ந்த பொன். திருமேனிக்குப் பொன் ஒப்பு. மறைஞ்சு - ஆணவமலத்துள் மறைந்து. மறைந்து என்பதன் போலி. அடம்செய்யாது - அடம் பிடிக்காதபடி; என்றது ஆணவத்துள் மறைந்து கிடக்கும் ஆன்மாக்களாகிய நம்மைத் திருவடிக்கரை சேர்ப்பிக்க, நடுக்கடலில் தோணியில் செல்வார்க்குத் துடுப்பு உதவினாற் போலச் சிவபெருமான் கலையாதி தத்துவங்களை உதவிச் சிறிது அறிவுவிளக்கம் தர அதனைக்கொண்டு முழுதும் மறைப்பிலே கிடந்து மடிவேனேயன்றிக் கரையேற மாட்டேன் என்று பிடிவாதம் பிடித்துத் தவிர்வனவற்றைச் செய்து மேலும் வினைகளை ஈட்டிக்கொள்ளாமல் என்பதாம்.

வாழ்த்த வல்லார்க்கு - பெருமானுடைய வார் கழலை வாழ்த்தவல்லார்க்கு. வல்லார்க்கு என்றது, மலத்துள் அழுந்திக்கிடக்கும் ஆன்மா இறைவன் உதவிய சிறுதுணை கொண்டு இருவினைப் பற்றும் நீங்கித் திருவடியை வாழ்த்துதல் ஒரு பெரிய

சாதனை என்பது தோன்றக் கூறியதாம். பின் வருவனவற்றிற்கும் இவ்வாறே கொள்க.

சடம் புறம் செய்வான்: சடப் பொருள்களாகிய தனுகரணங்களினின்றும் நீ வேறானவன். உணர்த்த உணரும்சித்து நீ என்று உணர்த்தியருள்பவன்.

புகுந்து நின்றான் • நம்மீது வைத்த கருணையால் நம்மனத்து வலிய வந்து புகுந்து பிரியாதே இருப்பன். " என் மனத்திடை மன்னிய மன்னே " என்றமை காண்க. புறம் சடம் செய்வான் நின்றான் என வானீற்று வினையெச்சமாகக் கொண்டு முடித்தலுமாம்.

சினம்செய்த நஞ்சுண்ட தேவர் பிரானைப்
புனம்செய்த நெஞ்சிடைப் போற்றவல் லார்க்குக்
கனம்செய்த வாள்நுதல் பாகனும் அங்கே
இனம்செய்த மான்போல் இணங்கிநின் றானே 41

இம் - எனின், தியானசீலர்களான அடியார்களது நெஞ்சில் அரன் இணங்கி நிற்பன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பாற்கடலிலிருந்து சீறி எழுந்த நஞ்சைத் திருவமுதுசெய்தருளிய தேவதேவனைக் காடுபோன்ற நெஞ்சில் வைத்து வணங்கவல்லவர்க்கு, மேகத்தில் நிற்கும் மின்னொளி போலும் ஒளியினையுடைய நெற்றியோடுகூடிய உமாதேவியாரை ஒரு பாகத்தில் உடைய பெருமான், போற்றுகின்ற அவர்கள் மனத்தில் பெண்மானைக்கண்ட ஆண்மானைப்போலக் கூடி நின்றான் என்றவாறு.

சினம் செய்த நஞ்சு - பாற்கடலிலிருந்து உண்டான காலத்திலேயே திருமால் முதலிய தேவர்கள் மேனியும் கருகும்வண்ணம் சீறியெழுந்த ஆலகால விடம். உண்ட – அமுது செய்தும் தான் சாவாமல் சாவாரைக் காத்த. பிரான்-வள்ளன்மையுடையான். தேவர்களுக்குப் பிராண தானம் செய்தமையின் தேவர்பிரான் என்றருளியது.

புனம் செய்த நெஞ்சு - காமக்குரோதாதி புனம் அடர்ந்த மனம். அன்றி அங்ஙனம் காடாக இருந்த நிலையினின்றும் பண்படுத்திய மனம் என்பதும் ஆம். நெஞ்சிடைப் போற்றுதல் - தியானித்தல். கனம் செய்த வாள் நுதல்-மேகத்திலுண்டான மின்னொளி போன்ற ஒளியினையுடைய நெற்றி. உமாதேவியின் கூந்தலும், திருமேனியும் கருமையாதலின் அதில் தோன்றுகின்ற நெற்றி மின்னொத்து ஒளிசெய்கின்றதாதலின் இங்ஙனம் அருளினார். இதற்கு வேறு பாடம்கொண்டு இடர்ப்படுவாரும் உளர்.

இனம் செய்த மான்போல் அங்கே இணங்கி நின்றான் : அழகான புனத்தில் பிணையோடு புகுந்த மான் பிரியாது அங்கேயே உண்டு களித்து உலாவுவதுபோல, வாள்நுதல் பாகன் தானும் தையலுமாகக் கூடி நித்தியவாசம் செய்வான் என்றபடி.

**போயரன் தன்னைப் புகழ்வார் பெறுவது**
**நாயகன் நான்முடி செய்தது வேநல்கு**
**மாயகம் சூழ்ந்து வரவல்ல ராகிலும்**
**வேயன தோளிக்கு வேந்தொன்றும் தானே. 42**

இ-ர்—எனின். அரனைப் புகழ்வார் அடையும் பயன் இது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: படைத்தபடியே மீள மீளப் படைக்கின்ற நான்கு திருமுடிகளையுடைய பிரமனாகிய தலைவன் சிருட்டித்த மாயா காரியமாகிய உலகையே சுற்றித் திரிய வல்லவராகிலும் உமாபதியானவர் அவரை வந்து பொருந்துவர்; இதுவே அரனைப் புகழ்வார் எய்தும் பேறு என்றவாறு.

செய்ததுவே நல்கும் நான்முடி நாயகன் மாயகம் சூழ்ந்துவர வல்லராகிலும் வேந்து ஒன்றும்; அரன் தன்னைப் புகழ்வார் போய்ப் பெறுவது இதுவே எனக் கூட்டிப் பொருள்கொள்க.

செய்ததுவே நல்கும் - முன் படைத்தபடியே மீளவும் படைக்கும்; என்றது விசித்திரப் படைப்பும் விசேடப் படைப்பும் புரியப் பிரமனுக்கு ஆற்றலின்று; வினைக்கீடாகக் கட்டளைப் படி இயற்றும் ஆற்றலே அவனுக்கு உண்டு என்று உணர்த்தியவாறு.

நான்முடி நாயகன் - நான்கு முடிகளையுடைய தலைவன்; என்றது பிரமனை. மாயகம் - மாயையின் காரியமான பிரபஞ்சம். அதனைச் சூழ்ந்து வரலாவது உலக இன்பத்தையே பெரிதென்று கருதிச் செக்குச் சுற்றிய மாடுபோலப் பிரிந்துபோக வன்மை யிருந்தும் விடாது சுழலுதல். வேயன தோளிக்கு வேந்து - மூங்கிலையொத்த தோளையுடைய உமா தேவிக்குத் தலைவன்; என்றது ஆன்மாக்களுக்கு அருள் வழங்கத் தானும் தையலுமாக எழுந்தருளு தலைக் குறிப்பது.

ஒன்றும் - வந்து பொருந்தும் தான் ஏ என்பன அசைகள். இதுவே என ஒருசொல் வருவித்துப் பெறுவது இதுவே என முடிக்க.

அரனடி சொல்லி அரற்றி அழுது
பரனடி நாடியே பாவிப்ப நாளும்
உரனடி செய்தங் கொதுங்கவல் லார்க்கு
நிரனடி செய்து நிறைந்துநின் ருனே. 43

இம் — எனின், பாடியும் பாவித்தும் ஒன்றவல் லார்க்கு இறைவன் அருளும்முறை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : இறைவனது திருவடியைப் புகழ்ந்து சொல்லி, காதலால் கதறியழுது, எப்பொருள் களிலும் மேலானவனுகிய அவனடியை ஆய்ந்த நுபவிப்பதற்காகத் தினமும் ஞானத்திற்கு அடி கோலி அந்த ஞானநிழலில் ஒதுங்கவல்லார்க்கு, கருணையாளனுகிய கண்ணுதற்பெருமான் தானும் திருவடியை வைத்து அவ்வான்மாவினிடம் பரி பூரணமாக நிறைந்துநிற்பன் என்றவாறு.

சொல்லி, அரற்றி, அழுது, நாடி, பாவிப்ப, அடிசெய்து ஒதுங்கவல்லார்க்கு நிரன் அடிசெய்து நிறைந்து நின்ருன் என முடிக்க.

எல்லையற்ற கருணையையும் வீரத்தையும் உபகாரத்தையும் எண்ணி அரற்றுதலும் அழுதலும் செய்பவர்களின் தகுதிக்கு ஏற்பச் சங்கார காரணனுகிய அரன்என்றும், அய்ந்து தெளிந்து

பாவிப்பதற்கேற்ப பரன் என்றும் இறைவனைக் குறிப்பித்தருளியமைகாண்க.

பாவிப்ப-தியானிக்க; சிவோகம்பாவனை செய்ய எனலுமாம். உரன் - ஞானம். அடிசெய்தல் - கால் கொள்ளச்செய்தல். ஒதுங்க வல்லார்க்கு - ஞானமே தாரகமாகப் பிரியாது நிலைத்திருக்க வல்லவர்க்கு. வெயிலுக்கு அஞ்சி நிழலில்ஒதுங்குவார் பிரிவின்றி யிருத்தல்போலப் பிறவிவெப்பிற்கு அஞ்சி ஞானமே பற்றுக்கோடாகப் பிரியாது ஒதுங்கி இருப்பார்க்கு என்பதாம்.

நிரன் என்பது நீரன் என்பதன் குறுக்கல் விகாரம். நீரன் - நீரைப்போலத் தண்ணியன்; கருணையாளன் என்பதாம். அடி செய்து - திருவடி பதித்து. நிறைந்து நின்றான் - கிஞ்சித்ஞனாகிய ஆன்மாவைப் பூரணம் ஆக்கினான் என்பதாம்.

**போற்றிஎன் பார்அம ரர்புனி தன்அடி**
**போற்றிஎன் பார்அசு ரர்புனி தன்அடி**
**போற்றிஎன் பார்மனி தர்புனி தன்அடி**
**போற்றிஎன் அன்புள் பொலியவைத் தேனே. 44**

இ—ள்; அனைவரும் அரனடியைப் போற்றி என்பர்; அடியேன் அன்பால் பொலியவைத்தேன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்; நிர்மல சிவத்தின் திருவடியை அமரரும் அசுரரும், மனிதரும் போற்றி என்பாராயினர்: அடியேன் போற்றி எனது அன்புள் அதனை விளங்க வைத்தேன் என்றவாறு.

'அமர் முதலாயினூர் திருவடியை நுகரும் உபாய மறியாதே போற்றியென்று வாயுபசாரம் வழங்குவதில் அமைவாராயினூர்கள்; நான் அன்புள் அடியை விளங்கவைத்தேன்' என்று சிவஞானியின் அநுபவமானது தேவர் முதலாயினூர் அநுபவத்திலும் ஆயிர மடங்கு அதிகம் என்றும், அந்த அநுபவமே பரிபாக விசேடமுற்றூர் அடையத் தகும் நெறி என்றும் அறிவித்தருளியது.

விதிவழி அல்லதில் வேலை உலகம்
விதிவழி இன்பம் விருத்தமும் இல்லை
துதிவழி நித்தலும் சோதிப் பிரானும்
பதிவழி காட்டும் பகலவன் ஆமே 45

இம் - எனின். இறைவன் நெறிகாட்டும் வள்ளலாவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : கடல் சூழ்ந்த இவ்வுலகம் இறைவன் விதித்த விதியின் வழியே நடப்பதன்றி வேறுவழியால் இல்லை; நாம் அடையும் போகமும் அங்ஙனமே. இதற்கு விரோதமில்லை. ஆதலால் சோதிவடிவினனை நாள்தோறும் துதித்தால் அத்துதிவழியாக அவன் வீட்டு நெறியைக் காட்டும் சூரியன் ஆவன் என்றவாறு.

உலகம் விதிவழியல்லது இல்; இன்பம் விதி வழி; விருத்தமும் இல்லை; நித்தலும் (செய்யும்) துதிவழி பிரானும் பதிவழிகாட்டும் பகலவன் ஆம் என முடிக்க.

விதிவழி அல்லது இல் - வினைக்கு ஈடாக விதிக்கப்பெற்ற ஆணையின் வழியே அல்லது இல்லை; என்றது உலகம் என்றும் சுதந்திரமுடையதன்று; இறைவன் ஆணையின் வழியே நடப்பது என்றவாறு. புவனம் இங்ஙனமாகவே ஆன்மாக்கள் அடையும் போகமும் இங்ஙனமே என்பார் 'விதிவழி இன்பம்' என்றார்.

'உலகுடல் கரணம் காலம் உறுபலம் நியதி செய்தி
பலவிவை கொண்டு கன்மம் பண்ணுவ துண்ப தானல்
நிலவிடா திவைதாம்சென்று நினைந்துயிர் நிறுத்திக் கொள்ளா
தலகிலா அறிவன் ஆணை அணைத்திடும் அருளி னாலே

என்பது விதியாதலின் இங்ஙனம் கூறினார் என்க.

அந்திவண் ணாஅர னேசிவ னேஎன்று
சிந்தைசெய் வண்ணம் திருந்தடி யார்தொழ
முந்திவண் ணாமுதல் வாபர னேஎன்று
புந்தி வண்ணன்எம் மனம்புகுந் தானே. 46

இ் - ளின், அடியார்கள் தொழ மனத்துள் புகுந்தருளுவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அகத்துறவு பூண்டு, அன்புநெறியில் நின்ற அடியார்கள், அந்தி வானம் போலும் சிவந்த வண்ணத்தை உடையவனே! அரனே! சிவனே! என்று தொழ. முதலிற் கொண்ட உருவத்தை உடையவனே! முதல்வா! பரனே! என்று அடியேன் தொழ இறைவன் ஞான சொரூபியாய் எமது மனத்திற்புகுந்து எழுந்தருளியிருந்தான் என்றவாறு.

அந்தி வண்ணன்-மாலைக்காலத்துச் செவ்வானம் போன்ற திருமேனியையுடையவன். அரன்-சங்காரத் தொழில் புரிபவன். சிவன் - மங்களங்களைச் செய்பவன். இங்ஙனம் துதித்தல் சகளத் திருமேனியை மட்டும் உணர்ந்து வழிபடும் அடியார்கள் உரைப்பன. சிவயோக வாயிலாகச் சிவஞானம் பெற்றவர்கள். முதன்மையாகச் சொல்லப்பெற்ற உருவத்தையுடையவனே! முதல்வா! பரனே! என்பர் என அநுபவ வேறுபாடு அறிவித்தருளியபடி. முந்தி வண்ணு - வண்ணங்களுள் முந்தியது வெண்மை; அதுவே நிஷ்களத் திருமேனி கொண்ட சிவத்தின் நிறம். 'சுத்தப் படிகம் போன்ற நிறம்' என்று ஆகமங்கள் அறிவிக்கும். 'முதல்வன்' 'பரன்' என்று உறுதியையும் உறுதியுண்டாவதற்கு ஏதுவையும் உணர்த்தியவாறு. அங்ஙனம் தோத்தரித்த அடியேற்கு ஞானசொரூபியாய் என் மனத்து எழுந்தருளினான் என்று சிவத்தைச் சிந்தைசெய்யும் உபாயம் உரைத்தருளினமை காண்க.

மனையுள் இருந்தவர் மாதவர் ஒப்பர்
நினைவுள் இருந்தவர் நேசத்துள் நிற்பர்
பனையுள் இருந்த பருந்தது போல
நினையாத வர்க்கில்லை நின்இன்பம் தானே. 47

இ-ள் இறைவனை, எண்ணுதார்க்கு இன்பமில்லை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இல்லறத்தினின்று இறைபணிபுரிவார். பெரிய தவத்தையுடையார்க்கு ஒப்பாவர்; இடைவிடாத் தியானத்திலிருப்பவர். இறைவனுடைய

நேசபாவத்துள் இருப்பார்கள்; பனை மரத்தில் இருந்த பருந்தைப்போல நினைக்காதவர்களுக்குத் தேவரீர் இன்பம் சித்தியாது என்றவாறு.

மனையுள் இருந்தவர் மாதவர் ஒப்பர்: இல்லறத்திற்குரிய எல்லா அங்கங்களோடும் இருந்து இறைவனையும் இடைவிடாது தியானித்துத் தான் செய்கின்ற பணிகள் அனைத்தையும் சிவப்பணியாகவே செய்பவர், தவத்திற்சிறந்தோர்க்கு ஒப்பாவர். மாதவத்தர் என்னது ஒப்பர் என்றது ஐம்புல இன்பங்களையும் ஆரத் துய்த்துக்கொண்டே அரன் பணியும் ஆற்றுதலின் புலன்களை வென்ற தவத்தவரோடு ஒப்பாவர் என்றதாம். இதற்கு உடம்பில் இருந்த ஆன்மாக்கள் மாதவர்க்கு ஒப்பாவர் என உரைகூறுவாரும் உளர்: அது சிறப்பும் இயைபும் இன்மை உற்று நோக்குக.

நினைவுள் இருந்தவர் நேசத்துள் நிற்பர் என்றது எண்ணெய் ஒழுக்குப்போல இடைவிடாத தியானமாகிய யோக நெறியிலே நின்றார் இறைவனோடு இடைவிடாத புணர்ச்சியும் பழகுதல் உடைமையான் இறைவனுக்கு நேசர் ஆவர் என்பதாம். ஆலாலசுந்தரர் இங்ஙனம் நின்று தம்பிரான்தோழர் ஆயினமையை வரலாறுகொண்டு துணிக.

பனையுள் இருந்த பருந்ததுபோல நினையாதவர்க்கு: பனைமரத்தில் கூடுகட்டி வசிக்கும் பருந்து எங்குச் சுற்றினும் பனைமரத்தை அடைந்து அடைந்து மீளுவதுபோல மனம் உலகியலில் இறங்கி எடுத்த உடலின் உயர்திகளான் உண்வுக்கும்

உடைக்கும் ஊறுக்குமாகச் சுற்றினும், இறைவனை வந்து இயைந்து இருத்தலே மேற்கொள்ள வேண்டியது என்பதாம். எக்கணத்தும் பனையை விட்டுப் பருந்து பறந்து விண்ணை அடையும்; அதுபோல என்றும் இவ்வுலக நிலையை உதறி இறைவனையடையும் வகையில் நினைப்பவர்க்கு என்றுமாம்.

**तद्यथास्मिन्नाकासे स्येनो वा सुपर्णोवा विपरिपत्य श्रान्तः संहत्य पक्षौ संलयायैव व्रियत एवमेवायं पुरुष एतस्या अन्ताय धावति यत्र सुप्तो न कंचन कामं कामयते नकंचन स्वप्नं पश्यति ॥**

என்பது பிரகதாரண்யகம். அதாவது, எங்ஙனம் ஒரு பருந்தோ கருடனோ வானவெளியில் பறந்து களைத்துப் போய்ச் சிறகுகளை அசையாமல் பரப்பிக் கொண்டு கூட்டை நோக்கிச் செல்லுமோ அங்ஙனமே, இப்புருஷன் ஆழ்ந்து உறங்கும் நிலையில் ஒரு ஆசைக்கும் ஆசைப்படுவதில்லையோ ஒரு கனவையும் காண்பதில்லையோ அந்நிலையை நோக்கி ஆர்வத்துடன் செல்கின்றான் என்பது

கருக்குமட்டைகளில் நடுவில் இருந்த பருந்து போலக் கஷ்டங்களுக்கு இடையில் நினையாதவர்களுக்கு இன்பமில்லை என்று உரைப்பாரும் உளர்.

**அடியார் பரவும் அமரர் பிரானை**
**முடியால் வணங்கி முதல்வனை முன்னிப்**
**படியார் அருளும் பரம்பரன் எந்தை**
**விடியா விளக்கென்று மேவிநின் றேனே** 48

இம் - எனின், இறைவனை விடியா விளக்குப் போல என்றும் மேவி நிற்கவேண்டும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அடியார்கள் வணங்குகின்ற தேவதேவனாகிய முதல்வன்; ஞானபூமியிலிருப்பார்க்கு அருள் செய்யும் மேலான பொருள்கள் எல்லாவற்றிற்கும் மேலானவன்; என் தந்தை போல்வான்; அணையாத விளக்கு என்று தலைவணங்கித் தியானித்து அவனைப் பொருந்தி நின்றேன் என்றவாறு.

அமரர் பிரானை, முதல்வனை, பரம்பரன், எந்தை விடியா விளக்கு என்று வணங்கி முன்னி மேவி நின்றேன் எனக் கொண்டு கூட்டுக.

அடியார் பரவும் அமரர் பிரானை என்றது அமரர்க்குத் தலைவனாய் அரியனாய் இருக்கும் இறைவன், அடியார்கள் இடைவிடாது காலம் நோக்காது புகுந்து பரவுதற்கு ஏற்றவண்ணம் எளியனாயும் உள்ளான் என்பது குறித்தவாறு

முதல்வனை - விரிந்து நிற்கின்ற அனைத்திற்கும் வித்தாக உள்ளவனை. படியார் அருளும் என்பது நான்காம் வேற்றுமைத் தொகை. படி என்றது ஈண்டு ஞானபூமியை, பரம்பரன் - மேலானவற்றிற்கெல்லாம் மேலானவன்; முழுமுதல் என்றவாறு. விடியா விளக்கு - அணையாத இரத்தினதீபம், 'பரம்பரன்', 'எந்தை', 'விளக்கு', என்று முறையே கூறியது. பரம்பரனாய்க் கடந்து நிற்பினும் என்னைத் திருத்த எளிவந்த எந்தையாயினன்;

உண்மையை விளக்க ஒரு தீபமாயினன் என்பது உணர்த்த என்க.

பரைபசு பாசத்து நாதனை உள்ளி
உரைபசு பாசத் தொருங்கவல் லார்க்குத்
திரைபசு பாவச் செழுங்கடல் நீந்திக்
கரைபசு பாசம் கடந்தெய்த லாமே. 49

இம் - எனின், ஆன்மாக்கள் பாசத்தளைகளைக் கடந்து கரைசேர்தற்கு உரிய உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: பரை பசு பாசம் இம்மூன்றின் தலைவனாகிய சிவனை இடைவிடாமல் தியானித்து, சொல்லப்படுகின்ற பசு பாசங்களின் ஞானத்தை ஒருசேர உணரவல்லார்க்கு, அலைபோல் வருகின்ற ஆன்மாக்களின் பாவக்கடலை நீந்திப் பசுத்துவமும் பாசத்துவமும் ஆகிய தளைகளைக் கடந்து திருவடிக் கரையைச் சேரலாம் என்றவாறு.

உள்ளி ஒருங்கவல்லார்க்கு நீந்தி கடந்து கரை எய்தலாம் என வினைமுடிக்க. பரைநாதன், பசு நாதன், பாசத்து நாதனை எனக்கூட்டுக.

பரை நாதன் - உயிர்களுக்கு அனுக்கிரகம் மாத்திரம் குறித்துப் பொதுவகையான் அறிந்தும் அறிவித்தும் நிற்பதாகிய ஞானசொரூபமான பராசத்திக்குத் தலைவன். பசு நாதன் - மலத்தாற் கட்டுண்டு நிற்கும் நிலையில் ஆன்மாக்கள் பசு என்கின்ற பெயரைப் பொருந்தும்; அவற்றிற்குத் தலைவனாகிய பதி, பாச நாதன் - ஆன்மாக்களைப்

பந்தித்து நிற்பதாகிய பாசங்களை வலிஒடுக்கியும் அகற்றியும் ஆளுதலின் பாசத்தை ஆளுபவன். குடத்தை ஆள்பவன் குவளையை ஆள்பவன் என்றாற் போலச் சடமாகிய பாசத்தை ஆன்மாக்களைப் பொருந்தாதவாறு பிரித்து ஆள்பவன் என்றவாறு.

பசு பாசத்து உரை ஒருங்க வல்லார்க்கு; பசு பாசங்களுடைய ஞானங்களைக்கடந்து பதி ஞானத்தோடு ஒருமிக்க வல்லார்க்கு என்பதாம். உரை என்பது ஆகுபெயராக ஞானத்தைக் காட்டிற்று. பாச பசு ஞானங்களின் இயல்பை,

"இருவகையாம் மாயையிலுண் டானஞானம்
எவ்வளவுண் டவ்வளவும் பாசஞானம்
மருவியதற் போதத்தாற் சித்திமுத்தி
மதித்தழுந்து நிட்டைபசு ஞானமாகும்
பரவுமிவை அஞ்ஞானம் பாசஞானம்
பசுஞானம் சுதந்தரஹீ னன்றுனென்றே
இருவகைஞா னமும்நீங்கி அருளாலாவி
ஈசனடி கூடிறை ஞானமாமே"

என்னும் சிவஞானதீபச்செய்யுளால் அறியலாம்.

திரை பசு பாவச்செழுங்கடல் நீந்தி என்றது நீர்த் தரங்கம்போல இடையறுதுவருகிற ஆன்மாக்களின் பாவமாகிய கடலை நீந்தி என்றவாறு. பாவத்தைச் செழுங்கடல் என்றது கடுவிடத்த நாகம் நல்லபாம்பு என்னும் பெயரானும் ஒளியானும் தோற்றத்தானும் கவர்வதுபோலப் பாவம் தற்செய்தாரை மயக்கலின் செழுங்கடல் எனப் பெற்றது. பாசமா ஞானத்தாலும், பசு ஞானத்

தாலும் எய்தமுடியாது கரை ஆதலின் இவற்றைக் கடந்து கரைசேரலாம் என்றருளினர்.

சூடுவன் நெஞ்சிடை வைப்பன் பிரான்என்று
பாடுவன் பன்மலர் தூவிப் பணிந்துநின்(று)
ஆடுவன் ஆடி அமரர்பி ரான்என்று
நாடுவன் நானின் றறிவது தானே. 50

இ-ம் — எனின், ஆனந்த மேலீட்டால் அடியேன் ஆற்றுவன இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : தலையிலே சூட்டிக்கொள்வேன்; மனத்தில் வைத்துப் பாதுகாப்பேன்; என் தலைவன் என்று பாடுவேன்; பல பூக்களைக் கொண்டு அர்ச்சித்து வணங்கி ஆடுவேன்; அங்ஙனம் ஆடி இவரே தேவதேவன் என்று விரும்புவேன்; இன்று நான் அறிந்து கொள்வது இவ்வளவுதான் என்றவாறு.

நெஞ்சிடைவைப்பன்-தியானிப்பேன். சூடுவன் என்றதால் இறைவனது திருவடியை மலர் என்று கொள்க. இதுவே என ஒருசொல் வருவித்து முடிக்க.

## உ. வேதச் சிறப்பு

வேதத்தை விட்ட அறம்இல்லை வேதத்தின்
ஓதத் தகும்அறம் எல்லாம் உளதர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை ஓதியே வீடுபெற் றார்களே. 51

இ-ம் — எனின், வேதமே நமக்கு உபாயங்களை அறிவிக்கும் சாத்திரமாகும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : வேதத்தை ஒழித்து வேறே அறம் இல்லை; நாம் ஓதத்தக்க அறங்கள் எல்லாம் வேதத்தில் உள்ளன; ஆதலால் அறிஞர்கள் வீணான தர்க்க வாதத்தை விட்டு வளமான வேதத்தை ஓதியே முத்தி பெற்றார்கள் என்றவாறு.

இது செய் இது செய்யற்க என விதியானும் மறையானும் அறங்களை விதிப்பன வேதங்களாதலின் வேதத்தை விட்ட அறம் இல்லை என்றார்.

நாம் பலகாலும் ஓதி உணரத்தக்க அறங்கள் அத்தனையும் வேதங்களிலேயே இருக்கின்றன; ஆதலால் பயனற்ற தர்க்கவாதத்தை விட்டு வேதத்தை ஓதுதல் வேண்டும்; முத்தியை எய்தவேண்டும் என விளக்குகின்றது இம்மந்திரம்.

வேதம் உரைத்தானும் வேதியன் ஆகிலன்
வேதம் உரைத்தானும் வேதா விளங்கிட
வேதம் உரைத்தானும் வேதியர் வேள்விக்காய்
வேதம் உரைத்தானும் மெய்ப்பொருள் காட்டவே 52

இம் - எனின், வேதம் உரைப்பவனே வேதியன்; வேதா; மெய்ப்பொருள்; எல்லாம் அவனே என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : வேதங்களைச் சொல்லுகின்றவன் எல்லாரும் வேதியன் ஆகமாட்டான். பிரமன் விளங்கவும், வேதியர்கள் செய்யும் யாகங்களுக்காகவும், உண்மைப் பொருளைக் காட்டி உய்விக்கவும் வேதம் உரைத்தவன் இறைவன் என்றவாறு.

பொருளுணர்ச்சி இல்லாமல் ஒலிக்கூட்டமாக ஓதுகின்றவன் வேதியன் ஆகமாட்டான் என்பதை விளக்கிற்று முதற்பகுதி. ஆனால் வேதம் உரைத்தது எற்றுக்கோ எனின், ஒழுக்க நெறியினின்று உலகம் விளங்கவும், உண்மைப் பொருளைக் காணவும், வேள்விகளைச் செய்யவுமே என்பது கருத்து.

மெய்ப்பொருள் — சிவஞானம்; "பொன்னும் மெய்ப்பொருளும் தருவானை" என்பதில் காண்க. விளங்கிட உரைத்தானும், வேள்விக்காய் உரைத்தானும், காட்ட உரைத்தானும் இறைவன் என முடிக்க.

இருக்குரு வாம்எழில் வேதத்தின் உள்ளே
உருக்குணர் வாயுணர் வேதத்துள் ஓங்கி
வெருக்குரு வாகிய வேதியர் சொல்லும்
கருக்குரு வாய்நின்ற கண்ணனும் ஆமே. 53

இம் - எனின், வேதம் மந்திர வடிவானது; ஞான வடிவானது; வேதமூலம் இறைவனே என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: மந்திர வடிவான அழகிய வேதத்துள்— மனத்தை உருக்கும் உணர்ச்சி வடிவாக உணரப்படுகின்ற வேதத்துள் ஓங்கி, பூனைபோன்ற உருவினையுடைய வேதியர்கள் உரத்துச் சொல்லும் மூலமாகிய குருவாக எழுந்தருளிய முக்கண்ணனே என்றவாறு.

இருக்கு உருவாம் எழில் வேதத்தின் உள்ளே; வேதம், மந்திரம் பிராமணம் என்ற இரண்டு பகுதிகளை உடையது. அவற்றுள்; இருக்கு மந்திரவடி

வானது. மந்திரமாவது. வேள்வியின் வடிவத்தை அதாவது வேள்விக்கு உரிய பொருள் தேவதை என்னும் இரண்டையும் அறிவுறுத்துவது. ஆதலால் எழில் வேதம் எனப்பெற்றது.

உருக்கு உணர்வாய் - மனத்தை உருக்குகின்ற உணர்ச்சியாய்; என்றது கானரூபமான மந்திரங்களை ஓதும்போது இசை எழுச்சியும், பொருள் உணர்ச்சியும் இருகியமனத்தை இளகச்செய்கின்றன என்பதாம். அவ்வேதத்தைப் பொருளுணர்ந்து ஓதி உள்ளத்தை உருக்கும் கருவியாகக் கொள்ளவேண்டியிருக்க, சிலர் ஓங்கிச் சொல்லுகின்றனர்; அங்ஙனம் அவர்கள் ஓங்கிச் சொன்னாலும், வேதத்தின் மூலம் பரமேசுவரனே வேதமூலமாய் இருந்து வேதத்தை உணர்த்துதல் •குருவின் செயல் ஆதலின் அவனே குரு என்பதும் அறிவிக்கப்பெற்றது.

ஒருறுப்பிற் சிறப்புடையாரை அப்பெயரிட்டு வழங்கல் உலகியலாதலின் கண்ணிற் சிறப்புடைய முக்கண்ணனைக் கண்ணன் என்ற பெயரால் குறிக்கப்பட்டது. வெருக்கு - பூனை; " வெருக்குக்கண் வெங் கருனை " என்பதும் காண்க.

திருநெறி யாவது சித்தசித் தன்றிப்
பெருநெறி யாய பிரானை நினைந்து
குருநெறி யாம்சிவ மாநெறி கூடும்
ஒருநெறி ஒன்றாக வேதாந்தம் ஓதுமே. 54

இ-ள் — எனின், திருநெறியே சிவநெறி என்பது வேத முடிபு என உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: திருநெறியாவது சித்தும் அசித்தும் ஆகிய இரண்டும் இன்றி, எல்லா நெறிகளும் வந்து ஒன்று கூடுதற்கு ஏற்றதான பெருநெறியாகிய - இறைவனைத் தியானித்துக் குருவால் உணர்த்தப்பெறும் நெறியாகிய சிவநெறியைச் சென்று சேரும் ஒரு நெறி; இந்நெறி இரண்டற்றது என்று வேதத்தின் முடிபு கூறும் என்றவாறு.

திருநெறியாவது அன்றி நினைந்து கூடும் ஒரு நெறி ஒன்றாக வேதாந்தம் ஓதும் எனமுடிக்க.

திருநெறி: இறை உண்மையையும் இறை இயல்பையும் காட்டும் நெறி. இதனைத் "திருநெறிய தமிழ்" என்னும் திருஞானசம்பந்த சுவாமிகளது திருவாக்கானும் அறிக. சித்தசித்தன்றி: சதசித்தாயிருப்பவன் பிரான் என்றவாறு. நினைந்து - தியானித்து. மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொழுதவர்க்கு வார்த்தை சொலச் சற்குருவும் வாய்த்திடும் ஆதலின், நினைந்து குருநெறியாம் சிவமாநெறி என்று அடுத்து அருளப் பெறுகிறது.

சிவநெறி குருவுபதேசத்தானன்றி வேறு எவ்வகையானும் எய்துதற்கரியது என்பது, இதனோடு ஒருங்குவைத்து எண்ணத்தக்க நெறி வேறொன்றும் இன்மையின் வேதாந்தம் ஒன்றாக ஓதும் என மேற்கோள் காட்டப்பெற்றது.

**ஆறங்க மாய்வரு மாமறை ஓதியைக்**
**கூறங்க மாகக் குணம்பயில் வார்இல்லை**
**வேறங்க மாக விளைவுசெய் தப்புறம்**
**பேறங்க மாகப் பெருக்குகின் றாரே** 55

இம் - எனின், வேதமுதல்வனை வேருகவைத்துப் பெருக்கி எண்ணுதல் கூடாது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஆறு அங்கங்களால் ஆராயப்பட்டுவருகின்ற வேதத்தை அருளிச்செய்த இறைவனை, ஆகமங்களால் கூறப்பட்ட அங்கமாகக்கொண்டு அவன் குணத்தோடு பழகுகின்றவர்கள் இல்லை. தன்னின் வேருகிய அங்கமாக எண்ணி விளைத்துப் பின்பு பெறும் பயனும் ஒருறுப்பாகவே கொண்டு பெருக்கிக் கொண்டே செல்கின்ருர்கள்: அறியாமை இருந்தபடி என்னே! என்றவாறு.

ஆறு அங்கமாய் வருமாமறை - சிட்சை, கற்பம் வியாகரணம். சந்தோபிசிதம், சோதிடம், நிருத்தம் என்ற ஆறு அங்கங்களால் ஆய்தலைப் பொருந்திய வேதங்கள். ஓதி – ஓதியவன்; இகரம் வினைமுதற் பொருளில்வந்த விகுதி, கூறு அங்கமாக - இறைவன் சித்தத்துள்ளிருக்கும் செழுஞ் சோதியாதலின் அவனை மனத்து உள்ளுறுப்பாகக் கொண்டு என்றவாறு.

குணம் பயில்வார் இல்லை – அப்பரம்பொருளின் குணங்களோடு பழகுவாரில்லை; என்றது சிவகுணம். தொலையச் சிவகுணத்தோடு இடைவிடாது பழக வேண்டும் என வற்புறுத்தியவாறு.

வேறு அங்கமாக விளைவு செய்து – உபாங்கமாக விளைவித்து; என்றது அப்பரம் பொருளைப் புறத்துறுப்பாகப் பாவித்து என்றவாறு.

அப்புறம் பேறு அங்கமாகப் பெருக்குகின்றாரே என்றது பின்பு அடையக்கூடிய பேறுகளையும் பல உறுப்புக்களாகப் பெருக்கிக்கொண்டே செல்கின்றார் என்பதாம். வேதாந்தம் ஒன்றாக ஓதியிருக்க இவர்கள் பலவாகப் பெருக்கிப் பயன்காணாராயினார் என்று எண்ணி இரங்கிக் கூறியவாறு.

பாட்டும் ஒலியும் பரக்கும் கணிகையர்
ஆட்டும் அறாத அவனியில் மாட்டாதார்
மேட்டு விருப்பார் விரதம்இல் லாதவர்
ஈட்டும் இடம்சென் றிகலலுற் றாரே. 56

இ — னின், மக்கள் உயர்ந்தநிலையை விரும்பி இழிசெயலைச் செய்து பொருது ஒழிகின்றனர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பாட்டும் அதன் இசையும் பரவியுள்ள பூமியிலே - ஆடல் மகளிரின் ஆடலுமறாத பூமியிலே நெறிநிற்கமாட்டாதவர்கள், போக மோட்சங்களை விரும்புகின்றவர்களாகக் கன்மபூமியிலே சென்று பகைத்து ஒழிந்தனர் என்றவாறு.

பரக்கும் அவனி, அறாத அவனி எனத் தனித் தனிக் கூட்டுக.

பாட்டும் ஒலியும் பரக்கும் அவனி — பொருள் பொதிந்தபாட்டும் பொருளிலா இசையும் பரவிய பூமி. பாட்டும் ஒலியுமாகிய இவைகளுள் தெய்வ இசையாய்ச் சித்தத்தைப் பண்படுத்துவனவும் காம இசையாய்க் கருத்தைத் திரிப்பனவும் உள.

கணிகையர் ஆட்டத்திலும் அங்ஙனமே. மக்களிலும் மோட்சத்தை விரும்புகின்றவர்களும். போகத்தை விரும்புகின்றவர்களுமாக இருதிறத்தார் உளர். அவ்விருதிறத்தாரும் புண்ணிய பாவங்களை ஈட்டும் இடமாகிய இங்கே வந்து பாட்டும் ஒலியும் ஆட்டுமாகிய முத்திநெறி போக நெறிகட்குப் பொதுவாகிய இவற்றை நுகரும் வகையில் மாறுபட்டார்கள் என்பது கருத்து.

மேட்டு விருப்பார் - உயர்ந்த நிலமாகிய முத்தியை விரும்புகின்றவர். விரதம் இல்லாதவர் — அம்முத்திக்குரிய தவவொழுக்கம் இல்லாத போககாமிகள். ஈட்டுமிடம் என்றது கன்மபூமியை.

இது வேதச்சிறப்புள் இடம் பெற்றது என்னையோ எனின், வேதாங்கத்துள் ஒன்றாகிய சந்தோபிசிதமும் நிருத்தமும் கொண்டு வேத மெய்ப்பொருளை யுணர்ந்து விரதங்கொண்டு பகையற்ற முத்தியை விரும்பார்களாய் மாறுபட்டார்கள் என்பதால் வேதச்சிறப்பு விளக்கியவாறு.

## 3. ஆகமச் சிறப்பு

அஞ்சன மேனி அரிவையோர் பாகத்தன்
அஞ்சொ டிருபத்து மூன்றுள ஆகமம்
அஞ்சலி கூப்பி அறுபத் தறுவரும்
அஞ்சா முகத்தில் அரும்பொருள் கேட்டதே. 57

இம் - என்னின், ஆகமங்களின் தொகையும் கேட்டோரும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நீலமேனி வாலிழைபாகத்தொருவனது உச்சிமுகத்திலிருந்து அறுபத்தாறு பேர்கள் அஞ்சலி கூப்பிக் கேட்ட அரும் பொருளாகிய ஆகமங்கள் இருபத்தெட்டு உள்ளன என்றவாறு.

பாகத்தன் அஞ்சாமுகத்தில் அறுபத்தறுவரும் அஞ்சலிகூப்பிக் கேட்டது ஆகமம் அஞ்சொடு இருபத்துமூன்று உள என முடிக்க.

இருபத்தெட்டு ஆகமங்களும், அவை கேட்ட அறுபத்து அறுவர் பெயரும், கேட்ட முறையும் வருமாறு.

| | | |
|---|---|---|
| 1 | காமிகம் | பிரணவர் — திரிகலர் - ஹரர். |
| 2 | யோகஜம் | சுதா — பஸ்மர் — விபு. |
| 3 | சிந்தியம் | சுதீப்தர் — கோபதி - அம்பிகை. |
| 4 | காரணம் | காரணர் - சர்வருத்ரர் - பிரஜா |
| 5 | அஜிதம் | சுசிவர் — சிவர் - அச்சுதர். [பதி. |
| 6 | தீப்தம் | ஈசர் - ஈசானர் - ஹரிதாசனர். |
| 7 | சூட்சுமம் | சூட்சுமர் - வைஸ்சிரவணர் - பிரபஞ்சனர். |
| 8 | சகஸ்ரம் | காலர் - பீமர் — தருமர். |
| 9 | அம்சுமான் | அம்புசம்யமர், அர்க்கர் - ரவி. |
| 10 | சுப்ரபேதம் | தசேசர் — விக்னேசர் — சசி. |
| 11 | விஜயம் | அணுதிருத்ரர் - பரமேசுவரர் |
| 12 | நிஸ்வாசம் | தசாரணர் - சைலசர். |
| 13 | சுவாயம்புவம் | நிதனேசர் - பிரமர். |
| 14 | அனலம் | வியோமர் — அக்கினி. |

| | | |
|---|---|---|
| 15 | வீரம் | தேஜஸ் - பிரஜாபதி. |
| 16 | ரௌரவம் | பிரம்மேசர் - நந்திகேசர். |
| 17 | மகுடம் | சிவர் - மகாதேவர். |
| 18 | விமலம் | சர்வாத்மகர் - வீரபத்திரர். |
| 19 | சந்திரஞானம் | அனந்தர் - கிருஹஸ்பதி. |
| 20 | பிம்பம் | பிரசாந்தர் - ததீசி. |
| 21 | புரோத்கீதம் | சூலி — கவசர். |
| 22 | லளிதம் | லயர் - ஆலயர் |
| 23 | சித்தம் | பிந்து - சண்டேசுவரர். |
| 24 | சந்தானம் | சிவநிஷ்டர் - வாயு. |
| 25 | சர்வோக்தம் | சோமதேவர் - நிருசிம்மர். |
| 26 | பாரமேசுரம் | ஸ்ரீதேவி - உசனஸ். |
| 27 | கிரணம் | தேவவிபவர் - சம்வர்த்தகர். |
| 28 | வாதுளம் | சிவர் — மகாகாளர். |

இவற்றின் கிரந்தத் தொகையும், உபாகமங்களும் ஆகியவற்றின் விரிவைக் காமிகம் தந்திராவதாரப் படலத்தும், காரணம் தந்திராவதாரப் படலத்தும் சைவபூஷணத்தும் காண்க.

அண்ணல் அருளால் அருளும் சிவாகமம்
எண்ணில் இருபத்தெண் கோடிநூ றாயிரம்
விண்ணவர் ஈசன் விழுப்பம் உரைத்தனர்
எண்ணிநின் றப்பொருள் ஏத்துவன் நானே. 58

இ-ள், ஆகமங்களின் கிரந்தத்தொகை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இறைவன் ஆன்மாக்கள்மீது வைத்த கருணையால் அருளிச்செய்த சிவாகமங்கள். இருபத்தெட்டு கோடியே நூறுயிரங்கள். இவைகளைத் துணையாகக்கொண்டே தேவர்கள் சர்வேசுவரனுடைய பெருமையைச் சொன்னார்கள். அடியேனும் அவற்றை ஆராய்ந்து அப்பரம்பொருளைத் தோத்தரிக்கின்றேன் என்றவாறு.

இருபத்தெண்கோடி நூறுயிரம் என்பது எல்லையற்றது என்னும் பொருளில் பன்மைகுறித்து நின்றது. இவ்வாகமங்களே இறைவனுடைய பெருமையை உணர்த்தும் சாதனங்கள் என்பதாம்.

ஆகமங்களின் கிரந்தத்தொகை ஒரு பரார்த்தத்து ஒருசங்க ஒருபதும எட்டு அற்புத பத்தொன்பது கோடியே முப்பத்து மூன்றுலட்சத்து நாற்பத்து நான்காயிரம் எனக் காமிகம் தந்திராவதாரப் படலம் கூறுகிறது. காரணம் முதலிய ஆகமங்கள் வேறு கூறும். இத்திருமந்திரத்துள் 60-ம் மந்திரம் 'எண்ணில் எழுபது கோடிநூறுயிரம்' என்கிறது. சைவபூஷணம் பரார்த்தத்தின் மேல் பதினொரு லட்சம் கோடியே முப்பது கோடி ஐம்பத்தொரு லட்சத்து ஐம்பத்து நான்காயிரம் என்கின்றது.

பண்டிதர் ஆவார் பதினெட்டுப் பாடையும்
கண்டவர் கூறும் கருத்தறிவார் என்க
பண்டிதர் தங்கள் பதினெட்டுப் பாடையும்
அண்ட முதலான் அரன்சொன்ன வாறே. 59

இ-ளின், இம்மந்திரம் பண்டித இலக்கணமும், பதினெட்டு மொழிகளின் ஆசிரியனும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அறிஞராவார் பதினெட்டு மொழியையும் ஆராய்ந்தவர்கள்; அவைகூறும் கருத்தினை அறிந்தவர்கள். அப்பதினெட்டு மொழிகளும் அண்டங்கட்கு முதல்வனாகிய அரனால் சொல்லப் பெற்றவை என்றவாறு.

பதினெட்டு மொழிகட்கும் பரசிவம் காரணமாய வாறு யாங்ஙனம் எனின், சிவம் சுத்தமாயையைக் கொண்டு சத்தப்பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தலின் என்க. அண்டமுதலான் என்றது அவனே அர்த்தப் பிரபஞ்சத்திற்கும் பரமகாரணனென அறிவித்த வாறு.

அண்ணல் அருளால் அருளும்திவ் யாகமம்
விண்ணில் அமரர் தமக்கும் விளங்கரி (து)
எண்ணில் எழுபது கோடிநூ றாயிரம்
எண்ணிலும் நீர்மேல் எழுத்தது ஆகுமே. 60

இ-ளின், இம்மந்திரம் ஆகமங்களின் கிரந்த எண் கிளத்துதல் நுதலிற்று.

இ-ள்: இறைவன் ஆன்மாக்கள்மீது வைத்த கருணையால் அருளிய தெய்வத்தன்மை பொருந்திய ஆகமங்கள் தேவர்களுக்கும் விளங்க முடியாதன; அவற்றின் கிரந்தத்தொகையை எண்ணில் எழுபது கோடியே நூறாயிரம். எழுத்துக்களை எண்ணில் வெள்ளம் என்ற எண்ணையும் விஞ்சும் என்றவாறு.

எழுத்தது எண்ணிலும் நீர்மேல் ஆகும் எனக் கூட்டுக. நீர் - வெள்ளம்; ஈண்டுப் பல என்னும் பொருட்டாய் நின்றது.

பரனாய்ப் பராபரம் காட்டி உலகில்
தரனாய்ச் சிவதன்மம் தானேசொல் காலத்(து)
அரனாய் அமரர்கள் அர்ச்சிக்கு நந்தி
உரனாகி ஆகமம் ஓங்கிநின் றானே. 61

இம் - எனின், இறைவனே ஆகமமாகி நின்றான் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பரம்பொருளாகியும் பராபரப் பொருளாகியும் தன்னை அறிவித்து உலகைத் தாங்குபவனாய்ச் சிவதருமங்களைத் தானே அருளிச்செய்யுங் காலத்து அரனாய்,தேவர்களால் அர்ச்சிக்கப்படுகின்ற சிவபெருமான் அறிவாகி ஆகமமாகி ஓங்கிநின்றான் என்றவாறு. பரனாய் தரனாய் அரனாய் உரனாகி என்று ஆக்கச் சொல் புணர்த்துக் கூறினும் அவை அவர்க்கு இயல்பேயாம் என்க.

பராத்பரம் என்பது பராபரம் என ஆயிற்று எனக்கொண்டு மேலானவற்றிற்கெல்லாம் மேலான பொருள் என்பாரும் உளர். பராபரம் காட்டி - பரஞானம் அபரஞானம் என்ற இரண்டையும் அறிவித்து. சிவதன்மம் — ஆகமங்கள்; சிவபுண்ணியங்கள் எனினுமாம். உரனாகி — ஞானசொரூபியாய்.

ஆகமம் ஓங்கி நின்றானே என்றது காமிகம் இரண்டு திருவடிகளாகவும், யோகஜம் இரண்டு

கணைக்கால்களாகவும், சிந்தியம் திருவடிகளின் விரல்களாகவும், காரணம் தண்டைக் கால்களாகவும், அஜிதம் முழந்தாள்களாகவும், தீப்தம் தொடைகளாகவும், சூக்ஷ்மம் குய்யமாகவும், சகஸ்ரம் இடுப்பாகவும். அம்சுமான் முதுகாகவும், சுப்ரபேதம் கொப்பூழாகவும், விஜயம் வயிருகவும் நிஸ்வாசம் மூக்காகவும்,சுவாயம்புவம் தனங்களாகவும்,அனலம் கண்களாகவும், வீரம் கழுததாகவும், ரௌரவம் செவிகளாகவும், மகுடம் திருமுடியாகவும், விமலம் கைகளாகவும், சந்திரஞானம் மார்பாகவும், பிம்பம் திருமுகமாகவும், புரோத்கீதம் நாக்காகவும், லளிதம் கன்னங்களாகவும், சித்தம் நெற்றியாகவும், சந்தானம் குண்டலங்களாகவும், சர்வோக்தம் பூணூலாகவும், பாரமேசுரம் முத்துமாலையாகவும், கிரணம் திருவாபரணமாகவும், வாதுளம் பரிவட்டமாகவும், ஏனைய உபாகமங்கள் திருமேனிப்பூச்சு பரிமளத் திரவியங்கள் புஷ்பங்கள் இவைகளாகவும், எல்லா ஆகமங்களின் ஞானபாதமாகிய சைவ சித்தாந்தம் நைவேத்தியமாகவும் இறைவற்கு அமைந்திருத்தலின் என்க. இவ்வாறு மகுடாகமத்துக் கூறப்பெற்றுள்ளது.

சிவமாம் பரத்தினில் சத்தி சதாசிவம்
உவமா மகேசர் உருத்திர தேவர்
தவமால் பிரமீசர் தம்மில்தாம் பெற்ற
நவஆ கமம்எங்கள் நந்திபெற் றனே. 62

இம் - எனின், ஆகமம் வந்த மரபு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பரசிவத்தினிடமிருந்து சத்தியும் சதாசிவமும், உமாமகேசரும், சீகண்டருத்திரரும், திருமாலும், பிரமனும், ருத்திரரும் ஆகிய இவர்கள் முறையே அடைந்த ஒன்பது ஆகமங்களையும் எங்கள் குருநாதன் அடைந்தார் என்றவாறு.

சிவமாம் பரத்தினில்; ஆகமங்கள் அனைத்திற்கும் பிறப்பிடம் பரசிவமாதலின் அதனிடத்திருந்து சத்தியும் சதாசிவம் முதலியோரும் கேட்டு நந்திமரபில் இடையீடின்றியே வருகின்றது என்று நூல் வந்தவழி உணர்த்தியவாறு. உமாமகேசர் என்பது எதுகை நோக்கி ஆகரம் விரிந்து உமாமகேசர் என்றாயிற்று.

தவம் மால் - தவத்தைச்செய்து உபமன்யு முனிவரிடம் சிவஞானோபதேசம் கேட்ட திருமால்.

பிரமன் ஈசன் - பிரமீசன்; உம்மைத்தொகை பன்மை விகுதி ஏற்று வந்தது. ஈசன் - உருத்திரன்.

**பெற்றநல் ஆகமம் காரணம் காமிகம்**
**உற்றநல் வீரம் உயர்சிந்தம் வாதுளம்**
**மற்றவ் வியாமள மாகுங்கா லோத்தரம்**
**துற்றநற் சுப்பிரம் சொல்லும் மகுடமே. 63**

இம் - எனின், நவ ஆகமங்கள் இவை என உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : குருபரம்பரையிற் பெற்ற நல்ல ஆகமங்கள் காரணம், காமிகம், வீரம், சிந்தியம், வாதுளம், யாமளம், காலோத்தரம், சுப்ரம், மகுடம் என்னும் ஒன்பதும் ஆம் என்றவாறு.

ஆகமங்கள் இருபத்தெட்டும் சிவபேதமெனவும், ருத்ரபேதம் எனவும் இருவகைப்படும். சிவபேதம் ஒன்பதும் ருத்ரபேதம் பத்தொன்பதும் ஆம். சிவ யோகிகள் கூறும் இந்த ஒன்பது ஆகமங்களுள் சிவ பேதத்திலகப்பட்டன காரணம், காமிகம், சிந்தியம், சுப்ரம் என்பன. ருத்ரபேதத்தில் அடங்கியன வீரம் வாதுளம், காலோத்ரம் மகுடம் என்பன. யாமளம்• ருத்ரயாமளம். ஆகத் திருமூலதேவர் மூலாகமங்கள் இருபத்தெட்டே யன்றித் தந்திர சாரத்தையும் தமிழித் திருமந்திரத்தை அருளிச்செய்தார் என்பது தெளிவு.

அண்ணல் அருளால் அருளும் சிவாகமம்
எண்ணிலி கோடி தொகுத்திடு மாயினும்
அண்ணல் அறைந்த அறிவறி யாவிடின்
எண்ணிலி கோடியும் நீர்மேல் எழுத்தே 64

இ‌ம் - எனின், சிவனருளிய ஆகமங்களை அவன் அருளிய அறிவின் துணைகொண்டு அறியவேண்டும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இறைவன் அருளால் வந்த சிவாகமங்கள் கணக்கற்ற கோடிகளாகத் தொகுக்கப்படுமாயினும், இறைவன் சொன்ன ஞானத்தைக் கொண்டு அறியா விடின் அவைகள் அனைத்தும் நீர்மேல் எழுதிய எழுத்துப்போல உடனே மறையும் என்றவாறு.

மாரியும் கோடையும் வார்பனி தூங்கநின்(று)
ஏரியும் நின்றங் கிளக்கின்ற காலத்து
ஆரிய மும்தமி ழும்உட னேசொல்லிக்
காரிகை யார்க்குக் கருணைசெய் தானே. 65

இ-ள்—எனின், இறைவன் ஆரியமும் தமிழும் அம்மைக்கு அருளினர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்; மழைக்காலமும், கோடைக்காலமும் மாறி, ஒழுகுகின்ற பனி எப்போதும் மிகுந்த கால மாகிய ஏரிகள்நீர்வற்றி இளைத்திருக்கின்ற காலத்தே ஆரிய மொழியையும் தமிழையும் விரைந்து அறி வித்து உமாதேவியாருக்குக் கருணை செய்தான் இறைவன் என்றவாறு.

கோடையும் மாரியும் மாறி எப்போதும் பனி பெய்யுமாயின் மழையின்மையை அறிவிப்பதாம். எல்லாம் வறண்ட காலமாகிய ஊழிக்காலத்தில் இரு மொழிகளையும் உணர்த்தி நாட்டை வளப் படுத்தினன் இறைவன்.

இவனல் இருமொழியும் ஒத்த பெருமையுடை யன; ஒரு முதல்வன் வழிவந்தன என்பது வலியுறுத் தப்பெற்றமை காண்க.

அவிழ்க்கின்ற வாறும் அதுகட்டு மாறும்
சிமிட்டலைப் பட்டுயிர் போகின்ற வாறும்
தமிழ்ச்சொல் வடசொல் எனும்இவ் விரண்டும்
உணர்த்தும் அவனை உணர்தலும் ஆமே. 66

இம் - எனின், இருமொழிகளாலும் முப்பொரு ளுண்மையை அறிவிப்பவன் முதல்வன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : தமிழ்ச்சொல்லும் வடசொல்லும் ஆகிய இவ்விரண்டாலும் ஆன்மாக்களுக்குப் பந்த

மோட்சம் இவற்றுட்படுதலையும், பிணிக்கப்பெற்ற உயிர் உடலை விட்டுப் பிரிவதையும் தெரிவிக்கும் இறைவனை நாம் உணர்தலும் ஆமே! ஆகாது என்றவாறு.

உணர்தல் என்பது மறப்பின்வழி நிகழ் வதாகலின் உணர்தலாகிய தொழில் நிகழ்ச்சிக்கு இடமேயின்று என்றுணர்த்தியவாறு. இங்ஙனமன்றி உணர்தலுமாம் எனக்கொண்டு உணர்தலே கடமையெனப் பொருள் உரைத்து ஏகாரத்தை அசையாக்கு வாரும் உளர். சிமிழ்த்தல் சிமிட்டல் ஆயிற்று. "புட்சிமிழ்த்தற்று" என்னும் குறள்நோக்கிப் பொருள்கொள்க.

இங்ஙனம் அன்றிச் சிமிட்டல் ஐப்பாட்டு எனப் பிரித்து, கண்ணிமைப்பில் கோழையில் பொருந்தி எனப் பொருள் கூறுவாரும் உளர். பாசத்தாற் கட்டுண்டு என்ற பொருளே நேரிதாதல் தெளிக.

## 4. குருபாரம்பரியம்

நந்தி அருள்பெற்ற நாதரை நாடிடின்
நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி
மன்று தொழுத பதஞ்சலி வியாக்ரமர்
என்றிவர் என்னோ டெண்மரும் ஆமே. 67

இ-ள்: இனின், திருமூலரது ஞானபரம்பரையை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: திருநந்திதேவர் அருளைப்பெற்ற குருநாதர்களை ஆராயின் சனகர், சனந்தனர், சனாதனர்,

சனற்குமாரர் என்ற ஆசாரியர்கள் நால்வரும். சிவ யோக முனிவரும், மன்று தொழுத பதஞ்சலியும் வியாக்ரபாதரும், யானும் ஆக எண்மர் என்ற வாறு.

நந்தி அருளாலே நாதனும் பேர்பெற்றேம்
நந்தி அருளாலே மூலனை நாடினேம்
நந்தி அருளாவ தென்செயும் நாட்டினில்
நந்தி வழிகாட்ட நானிருந் தேனே. 68

இம் — எனின். இறைவன் அருள் வழியே தமிழ் நாட்டில் இருந்தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இறைவனினருளால் நாதன் என்னும் சிறப்புப் பெயர் பெற்றேம்; மூலன் என்னும் இடைக் குலமகன் உடலைத் தேடிக் கண்டோம். நாட்டில் இறைவனருள்பெறுத ஒருபொருள் என்ன செய்யும்? ஆகையால் அவனருளே வழி காட்ட நான் மூலனது உடலுக்குள் சிவானந்த நிட்டை கூடியிருந்தேன் என்றவாறு.

நாட்டினில், நந்தி அருளா அது என்செயும் எனப் பிரித்துப் பொருள் கொள்க. யோக சித்தியுடையார் நாதன் என வழங்கப்படுதலைப் போகநாதர், சட்டை நாதர் என்ற வழக்கு களாலறிக; அதனைக் குறிப்பது நாதனும் பேர் பெற்றேம் என்பது. மூலனை நாடினேம் என்பதற்குச் சிவனை அடைந்தோம் என்பாரும் உளர். அது வரலாற்றெடு பொருந்தாமை தெளிக.

மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்கன்
இந்திரன் சோமன் பிரமன் உருத்திரன்
கந்துருக் காலாங்கி கஞ்ச மலையனோ(டு)
இந்த எழுவரும் என்வழி யாமே. 69

இம் – எனின், தமக்குப் பின்னுள்ள சந்ததியைப் பேசுதல் நுதலிற்று.

இ - ள் : திருமந்திர உபதேசம்பெற்ற வழிமுறை யாவது மாலாங்கன், இந்திரன், சோமன், பிரமன், உருத்திரன், காலாங்கி, கஞ்சமலையன், ஆகிய எழு வரும் எனது வழியிற் பின்வந்தவர்கள் என்றவாறு.

கந்துருக்காலாங்கி என்பதற்குக் கட்டுத்தறி போல உருவம் படைத்த காலாங்கி என்பார் சிலர். பின் மாலாங்கனே எனவும், இந்திரனே எனவும் வருதலின் இங்குக்கூறப்பட்ட எழுவரும் இவர் வழிவந்தவர்கள் என்பது தெளிவு.

நால்வரும் நாலு திசைக்கொன்று நாதர்கள்
நால்வரும் நானா விதப்பொருள் கைக்கொண்டு
நால்வரும் நான்பெற்ற தெல்லாம் பெறுகென
நால்வரும் தேவராய் நாதரா னார்களே. 70

இம் - எனின், சந்தானம், பரவியதை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : முற்கூறிய எழுவருள் முதல் நால்வரும் நாலுதிசைக்கும் நாதர்களாய், பலவேறு அனுபவப் பொருள்களைக் கைக்கொண்டு தாம்பெற்றதை

உலக மெலாம் பெறுக என்று தெய்வத்தன்மை பெற்றவர்களாய்த் தலைவரும் ஆனூர்கள்என்றவாறு.

நால்வராவார் யாவர் எனத் தெளிவாகக் கூற இயலாதாயினும் நாலுதிசைக்கொன்று நாதர்கள் என்ற குறிப்பால் இந்திரன், சோமன், பிரமன் உருத்திரன் எனக்கூறலாம்.

நாலுவிதப்பொருள் கைக்கொண்டு என்பது குரு உபதேச முறையோடு தங்கள் தங்கள் அனுபவங்களையும் சேர்த்துத் தனித்தனியாக யோக நெறியைப் பரப்பினர் என்று கருத இடமுண்டு; குரு உபதேசம் ஒன்றேயாதலும், பரிபாக விசேடமும், அனுபவமும் நாலுவிதமாதலும் இயல்பாதலின்,

மொழிந்தது மூவர்க்கும் நால்வர்க்கும்
ஒழிந்த பெருமை இறப்பும் பிறப்பும்
செழுஞ்சுடர் முன்னொளி யாகிய தேவன்
கழிந்த பெருமையைக் காட்டகி லானே. 71

இ‌ம் - எனின், யோகியாயிருந்து உயிர்க்கு யோக நெறி காட்டுபவர் இறைவன் ஒருவனே என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : இறைவன் எழுவருக்கும் மொழிந்தது இறப்பும் பிறப்பும் இல்லாத பெருமையையுடைய யோகநெறி. சூரியன்முன் பிற ஒளிபோன்ற தேவன் மிக்க பெருமையினை யுடைய யோகநெறியைக் காட்டும் ஆற்றலற்றவன் என்றவாறு.

ஈசன் மூவர்க்கும் நால்வர்க்கும் மொழிந்தது இறப்பும் பிறப்பும் ஒழிந்த பெருமை; சுடர்முன் ஒளியாகிய தேவன் கழிந்த பெருமையைக் காட்ட கிலான் என முடிக்க.

இம்மந்திரத்துள் மூவர்க்கும் நால்வர்க்கும் என இருவகையாய்ப் பிரித்தோதினமை நன்கு சிந்தித்தற்கு உரியது. நால்வர் என்ற தொகைக்குறிப்புச் சொல் நந்திகள் நால்வராகிய சனகாதியரையும். மூவர் என்ற தொகைக்குக் குறிப்புச்சொல் சிவ யோகமா முனி. பதஞ்சலி, வியாக்கிரபாதர் என்ற மூவரையும் குறிப்பது ஆகலாம்.

செழுஞ்சுடர்முன் ஒளியாகிய தேவன்; சூரியன் முன் மின்மினிபோல என்ற தொரு வழக்கத்தைத் தழுவியெழுந்த உவமை. தேவன் என ஒருமையாற் கூறியது யோகநெறியைக் காட்டும் ஆற்றல், பிற தேவர்களில் யார்க்கும் இன்மையின் என்க. தான் யோகு இருந்த யோக நரசிம்மனும் அதனைப் பிறருக்குபதேசியாமை உணர்க. செழுஞ்சுடர் மூன்றொளியாகிய எனப் பாடங்கொண்டு சோம சூரியாக்கினிகளைக் கண்களாகக் கொண்ட இறைவன் என்றும் மிக்க பெருமையுடையதாகிய சிவானுபவத்தை அவர்களுக்குக் காட்டகில்லான் என உரை கூறுவதும் உண்டு.

இங்ஙனம் கொள்ளாது பொருந்தா உரை வேறுகூறியும் இடர்ப்படுபவர் பலர்; எண்ணித் துணிக.

எழுந்துநீர் பெய்யினும் எட்டுத் திசையும்
செழுந்தண் நியமங்கள் செய்மினென் றண்ணல்
கொழுந்தண் பவளக் குளிர்சடை யோடே
அழுந்திய நால்வர்க் கருள்புரிந் தானே. 72

இ-ள் - எனின், நியமங்களில் தவறுதல் கூடாது என்று இறைவன் அறிவித்தான் என உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: சப்தமேகங்களும் எழுந்து எட்டுத் திசையும் நடுங்க எங்கும் மழை பெய்தாலும், செழுமையைத் தருகின்ற தண்மைவாய்ந்த நியமங்களைத் தவருது செய்யுங்கள் என்று, வளம் பொருந்திய தண்ணிய பவளம் போன்ற குளிர்ந்த சடையோடு தமது திருவடியிலேயே அழுந்திய மனத்தையுடைய சனகாதி நால்வருக்கும் சிவபெருமான் அருள்புரிந்தான் என்றவாறு.

நீர் பெய்யினும் என்ற குறிப்பான் எழுந்து என்னும் வினையெச்சத்திற்கு மேகம் என்னும் வினைமுதல் வருவித்துரைக்கப்பட்டது. கொழுமையும் தண்மையும் பவளத்திற்கு அடை.

## 5. திருமூலர் வரலாறு

நந்தி இணையடி நான்தலை மேற்கொண்டு
புந்தியின் உள்ளே புகப்பெய்து போற்றிசெய்(து)
அந்தி மதிபுனை அரனடி நாடொறும்
சிந்தைசெய் தாகமம் செப்பலுற் றேனே. 73

இ-ள் - எனின், ஆசிரியர் தெய்வவணக்கம் செய்து நுதலிப்புகுந்ததை அறிவித்தல் நுதலிற்று.

இ-ள்: எனது குருநாதனின் இரண்டு திருவடிகளையும் சிரமேற்கொண்டு மனத்துள்ளும் இருத்தி வணங்கி, அந்திப்பிறையையணிந்த அரன் அடியைத் தினந்தோறும் தியானித்து ஆகமங்களைச் சொல்லலுற்றேன் என்றவாறு.

ஆகமம் செப்பலுற்றேன் என்பது நுதலிப் புகுதல். அரனடி சிந்தை செய்து நந்தி இணையடி தலைமேற்கொண்டு என்பன குருதெய்வ வணக்கம்.

செப்பும் சிவாகமம் என்னும்அப் பேர்பெற்றும்
அப்படி நல்கும் அருள்நந்தி தாள்பெற்றுத்
தப்பிலா மன்றில் தனிக்கூத்துக் கண்டபின்
ஒப்பிலி கோடி யுகம்இருந் தேனே. 74

இம்—எனின், தாம் யோகிருந்தமையைத் தெரிவித்தல் நுதலிற்று.

இ-ள்: இறைவனால் சொல்லப்பெற்ற சிவாகமம் எனும் அப் பெருமையைப் பெற்று அத்தன்மையை அடியேற்கு நல்கிய அருள்வடிவான ஆசாரியன் திருவடிகளைப் பெற்று பிழைபாடில்லாத சித்சபையில் ஒப்பற்ற ஆனந்ததாண்டவ தரிசனம் பெற்ற பிறகு ஒப்பிலாதவனுய்க் கோடியுகம் நான் இருந்தேன் என்றவாறு.

பேர்-பெருமை; சிறப்புமாம். பெற்றும் என்னும் உம்மை எதிரதுதழீஇய உயர்வு சிறப்பு. நூலறிவு ஒன்றே கொண்டு நுவன்றேன் அல்லேன்; ஆசிரியன் அருளும், ஆனந்தக்கூத்துத் தரிசனமும் கண்டபின்பு நான் கோடியுகம் இருந்து, எண்ணி இயம்பினேன்

என்பதாம். ஒப்பிலி கோடியுகம் இருந்தேனே என்பதற்கு இணையிலிபெருமானே! என்னை ஏற்றுக்கொள் என்று ஒரு யுகம் தவம் இருந்தேன் எனலும் ஆம். இப் பொருளில் கோடி முன்னிலை ஏவல் ஒருமை வினை முற்று.

இருந்தவக் காரணம் கேளிந் திரனே
பொருந்திய செல்வப் புவனா பதியாம்
அருந்தவச் செல்வியைச் சேவித் தடியேன்
பரிந்துடன் வந்தனன் பத்தியி னாலே. 75

இம் - எனின், கோடியுகம் இருந்த காரணம் இதுவென உணர்த்துதல் நுதலிற்று

இ - ள்: இந்திரனே! யான் அங்ஙனம் ஒரு கோடி யுகம் இருந்த காரணத்தைக் கேட்பாயாக; நிறைந்த செல்வத்தினை உடைய புவனாபதியாகிய, அரிய தவத்தோரடையும் செல்வியைப் பக்தியினாலே சேவித்து அடியேன் கனிந்து வந்தேன் என்றவாறு.

பரிந்து-அவளன்றி வேறு துணையில்லை என்று ஆர்வங்கொண்டு, தாண்டவ தரிசனம் கண்டபின்பு புவனாபதியைப் போற்றிப் பல ஆண்டுகள் இருந்தேன் என்பதாம். இந்திரன் அமரர்பதி அல்லன்; இவருடைய மாணாக்கருள் ஒருவன்.

சதாசிவம் தத்துவம் முத்தமிழ் வேதம்
மிதாசனி யாதிருந் தேனின்ற காலம்
இதாசனி யாதிருந் தேன்மனம் நீங்கி
உதாசனி யாதுட னேயுணர்ந் தோமால். 76

இம் - எனின், இருந்த நிலை இத்தன்மைத்து என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சதாசிவமான அருவுருவத்திருமேனி கொண்ட இறைவனையும், சிவதத்துவம் வித்தியா தத்துவம் ஆன்மதத்துவம் என முற்கூறப்பட்ட தத்துவங்களையும். முத்தமிழையும், வேதங்களையும் சிறிதாக உண்ணுமல் (பெரிது உண்டு) இருந்தேன். அங்ஙனம் இருந்த காலமுழுவதும் உடலுக்கு இதமானவற்றையும் நுகராதிருந்தேன். அதனுல், மனம் நீங்க, வெறுக்காமல் உடனே, சதாசிவம் முதலாக முற்கூறியவற்றை உணர்ந்துகொண்டேன் என்றவாறு.

மிதாசனியாது : இது மிதாசனம் என்னும் தொழிற் பெயரடியாகப் பிறந்த எதிர்மறை வினையெச்சம். மிதாசனம் - அளவோடு உண்டல். சதாசிவம் முதலியவற்றை மிதாசனியாது என்றது நிரம்ப நுகர்ந்து என்றவாறும். " அருளாரமுதத்தை வாரிக்கொண்டு விழுங்குகின்றேன் விக்கினேன் " என்புழிப்போல அளவில்லாமல் அனுபவித்திருந் தேன் என்பதாம்.

இதாசனியாது இருந்தேன் : இத அசனம் - இனிமையான நுகர்ச்சி. இதன் எதிர்மறை வினை யெச்சம் இதாசனியாது என்பது மனம் அடங்க வேண்டுமாயின் இறைவனையும் இறைவனருளிய நூலினையும் தத்துவங்களையும் இடையீடின்றி ஆய்தலும், பொறி உணர்ச்சியில் ஈடுபடாமையும் சாதனங்களாம் என்பது. உண்டி சுருங்க உணர்வு

பெருகும் என்ற முதுமொழியும் ஈண்டுச் சிந்தித்தற் குரியது. அங்ஙனம், மிதாசனியாதும் இதாசனி யாதும் இருந்தும் நுகர்வானும் நுகர்ச்சிப் பொருளும் வேறாக இருக்கச்செய்து வந்த மனம் நீங்கியதும், அவனே தானேயாகிய அந்நெறி கிட்டிற்று; அதனை உதாசனிக்காமல் உடனே உணர்ந் தோம் என்பது கருத்து. முற்கூறியவற்றை ஒட்டி உணர்ந்தேன் என்னது உணர்ந்தோம் என்றது ஏகனாகிநிற்கும் உயர்ந்தநிலையிற் கூறிய வாசகம்.

மாலாங்க னேஇங்கு யான்வந்த காரணம்
நீலாங்க மேனியள் நேரிழை யாளொடு
மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்
சீலாங்க வேதத்தைச் செப்பவந் தேனே 77

இம் - எனின், அடியேன் வந்தது வேதத்தை அறிவிக்க என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: மாலாங்கனே! இப்பூமிக்கு யான் வந்த காரணம் என்னை எனின், நீல நிறமான திருமேனி யையும் நேரிய அணிகளையும் உடைய சிவகாமித் தாயோடு பஞ்சகிருத்தியங்களுக்கும் அடிப்படை அங்கமாக மொழியப் பெற்ற ஆனந்தக்கூத்தினது இயல்பினை விளக்கும் வேதத்தைச் சொல்லவந்தேன் என்றவாறு.

மாலாங்கன் என்பார் மூலர்மரபில் வந்த சீடர் களுள் ஒருவர். சீலாங்கவேதம் - ஒழுகலாறுன விதியை உறுப்பாகக்கொண்டுள்ள வேதம்.

நேரிழை யாவாள் நிரதிச யானந்தப்
பேருடை யாளென் பிறப்பறுத் தாண்டவள்
சீருடை யாள்சிவன் ஆவடு தண்டுறை
சீருடை யாள்பதம் சேர்ந்திருந் தேனே. 78

இம்-னின், சிவசத்தியின் திருவடியைத்தியானித் திருந்தேன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: நேர்மையான ஆபரணங்களை உடைய பராசக்தி வியப்பிற்கெல்லாம்வியப்பாகிய ஆனந்தம் என்ற பெயருடையவள்; என்னுடைய பிறவியை வேரோடு அறுத்து ஆட்கொண்டவள்; புகழ்மிக்க வள்; மாசிலாமணிப்பெருமான் எழுந்தருளியுள்ள திருவாவடுதுறையை இடமாகக் கொண்டு சேர்ந்த வள்: அவள் திருவடியை நான் இடைவிடாது தியா னித்திருந்தேன் என்றவாறு.

சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச்
சேர்ந்திருந் தேன்சிவன் ஆவடு தண்டுறை
சேர்ந்திருந் தேன்சிவ போதியின் நீழலில்
சேர்ந்திருந் தேன்சிவன் நாமங்கள் ஓதியே. 79

இம் — எனின், திருவாவடுதுறையில் சேர்ந்திருந் தேன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: உமையொருபாகனாகிய இறைவனைத் தியானித்துக்கொண்டு கோமுத்திநாதர் எழுந்தருளி யுள்ள திருவாவடுதுறையிலே சிவமயமான படர் அரசின் கீழே அவன் திருநாமங்களை ஓதிக்கொண்டு இருந்தேன் என்றவாறு.

இருந்தேன் இக்காயத்தே எண்ணிலி கோடி
இருந்தேன் இராப்பகல் அற்ற இடத்தே
இருந்தேன் இமையவர் ஏத்தும் பதத்தே
இருந்தேன் என்நந்தி இணையடிக் கீழே. 80

இ - ள்: இவ்வுடலில் கணக்கற்ற கோடிகாலம் இருந்தேன்; தேவர்களனைவரும் துதிக்கும் இடமானதும் இரவும் பகலும் இல்லாததும் ஆகிய கயிலையிலே என்னாசிரியன் திருவடிநிழலில் இருந்தேன் என்றவாறு.

இம் - எனின், ஞானாசாரியனது திருவடிக்கீழ் இருந்ததை உணர்த்துதல் நுதலிற்று.

இராப்பகல் அற்ற இடம் - ஒளியும் இருளும் கலவாமல் என்றும் ஒளிமயமான இடம்.

பின்னைநின் றென்னே பிறவி பெறுவது
முன்னைநன் றாக முயல்தவம் செய்கிலர்
என்னைநன் றாக இறைவன் படைத்தனன்
தன்னைநன் றாகத் தமிழ்செய்யு மாறே. 81

இம் - எனின், இறைவன் தம்மைத் தமிழ் செய்யுமாறு படைத்தார் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: முற்பிறவிகளில் நன்றாக முயன்று தவம் செய்யமாட்டார்கள்; பின் மயங்கிநின்று என்ன பயன்? பெறுவது பிறவிதான்; தன்னை ஏத்தி நன்முறையில் தமிழைச் செய்யுமாறு என்னைப் பெருமான் படைத்தான் என்றவாறு.

சம்பந்த சுவாமிகளை வண்தமிழ்செய் தவம் நிரம்பப் படைத்தாற்போல, நாவுக்கரசுசுவாமிகளை அலகில் கலைத் துறை தழைப்ப அருந்தவத்தோர் நெறிவாழப் படைத்தாற்போல, ஆலாலசுந்தரரைத் தீதிலாத் திருத்தொண்டத்தொகைதரப் படைத் தாற்போல, திருமூலர் தமிழைச் செய்யுமாறு இறைவனால் படைக்கப்பட்டார் என்பதாம்.

ஞானத் தலைவிதன் நந்தி நகர்புக்கு
ஊனமில் ஒன்பது கோடி யுகந்தனுள்
ஞானப்பால் ஆட்டி நாதனை அர்ச்சித்து
நானும் இருந்தேன்நற் போதியின் கீழே. 82

இம் – எனின், அரசடியில் ஞானப்பாலாட்டி நாதனை அருச்சித்திருந்தேன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: ஞானத்தலைவியாகிய பராசத்திநாதன் நகரில் புகுந்து. இடையூறு ஒன்றும் இன்றி, ஒன்பது கோடியுகம் அவற்கு ஞானமாகிய பாலால் அபிடேகித்து, அருச்சித்து, அரசடியில் நானும் இருந்தேன் என்றவாறு

ஞானத்தலைவி – ஞானசத்தி. ஊனம் – யோகத்திற்கு வரும் இடையூறுகள். ஞானப்பால் என்பது உருவகம்: அன்றி; சகஸ்த்திராரத்திலிருந்து பெறுகிற அமுதமும் ஆம். நானும் இருந்தேன் என்றதில் உம்மை தியானப்பொருளாகிய சிவம் ஒன்று இருந்ததென்பதை உணர்த்துகிறது.

செல்கின்ற வாறறி சிவமுனி சித்தசன்
வெல்கின்ற ஞானத்து மிக்கோர் முனிவராய்ப்
பல்கின்ற தேவர் அசுரர் நரர்தம்பால்
ஒல்கின்ற வான்வழி யூடுவந் தேனே. 83

இ-ம் - எனின், கயிலையிலிருந்து தான் வந்த வாற்றை அறிவித்தல் நுதலிற்று.

இ-ள் : சிவமுனியாகிய யான், போகிறவழியில் மன்மதனை வெல்லுகின்ற ஞானத்தால் மிகுந்து ஓர் முனிவராக, முப்பத்துமுக்கோடி என்று எண்ணுற் பெருகிய தேவர்களும் அசுரர்களும் மனிதர்களும் ஆகியோர்கள் தம்மிடம் பொருந்தப் பெறும் வானத்தை வழியாகக் கொண்டு வந்தேன் என்றவாறு.

சித்தசன்-மனத்தில் பிறப்பவனாகிய மன்மதன்.

சித்தத்தின் உள்ளே சிறக்கின்ற நூல்களில்
உத்தம மாகவே ஓதிய வேதத்தின்
ஒத்த உடலையும் உள்நின்ற உற்பத்தி
அத்தன் எனக்கிங் கருளால் அளித்ததே. 84

இ-ம் - எனின், வேதப்பொருளை இறைவனின் அருளால் அடைந்தேன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : மனத்துள் சிறந்து விளங்குகிற நூல்கள் பலவற்றுள்ளும் மிகச்சிறந்ததாக ஓதப்பெற்ற வேதத்தின் உடலாகிய சொல்லையும் அந்த

உடலுள்ளிருந்து உற்பத்தியாகின்ற பொருளையும் இறைவன் எனக்கு அருளால் அளித்தான் என்றவாறு.

சிறந்த நூல்கள் எல்லாவற்றுள்ளும் மிகச் சிறந்து விளங்குவன இறைவன் நூல்களேயாதலின் ' நூல்களில் உத்தமமாகவே ஓதிய வேதம் ' என்றார். உடல் என்றது பொருளாகிய உயிர் இருத்தற்கு இடமான சொல்லை. உள் நின்ற உற்பத்தி - சொல்லுள் நின்ற தோற்றமாகிய பொருள்.

நான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்
தான்பற்றப் பற்றத் தலைப்படும் தானே. 85

இம் - எனின், உயிரிடமாக இறைவன் எழுந்தருளி இன்பம் பயக்கு முறையை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஞானகாயத்தில் பற்றி நிற்கின்ற வேதங்களின் உள்ளுறு பொருளைச்சொன்னால், அது உடலைப் பற்றியிருப்பதாகிய உயிரினிடம் நீங்காது நிலைபெற்ற உணர்ச்சியைப் பொருந்திய மந்திரம் ஆகும். அதனை ஆன்மாவாகிய நான் விடாது பிடிக்க மறைப்பொருளாகிய சிவம் வெளிப்படும். அடியேன் பெற்றதான இந்த நிரதிசயானந்த இன்பத்தை உலகம் முழுவதும் பெறுவதாகுக என்றவாறு.

வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின், ஊன் பற்றி நின்ற உணர்வுறு மந்திரம் (ஆம்);

தான் பற்றப்பற்றத் தலைப்படும், நான்பெற்ற இன்பம் இவ் வையகம் பெறுக என முடிக்க.

வான்பற்றி நின்ற மறைப் பொருள்- சிதாகாச சொரூபமாகிய பரசிவத்தைப் பற்றி நிற்கின்ற வேதங்களின் பொருள். மறைப்பொருளே மந்திரமா மென்க. ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம் - உடலைப் பற்றியதாகிய உயிர்க்கண் நிலைபெற்ற ஞானத்தில் பொருந்திய மந்திரம்; என்றது ஸ்ரீ பஞ் சாக்ஷரத்தை. ஊன் ஆகுபெயராய் உடலை உணர்த் திற்று. ஊன்பற்றி—உயிர்; இகரம் வினைமுதற் பொருளில் வந்தது; "மலத்தைப் பற்றி" என்புழிப் போல. பற்றப்பற்ற என்ற அடுக்கு இடைவிடா மைப்பொருட்டு. தலைப்படுதல்-மாமணிச் சோதியா னுக உயிரில் வெளிப்பட்டு நின்றருளல்.

இனி இம் மந்திரத்திற்கு, பரமாகாசத்தைச் சரீரமாகப் பொருந்திநின்ற இரகசியப் பொருள் ஒன்றுளது. அதுவே இச் சரீரத்தைப் பொருந்தி நின்ற ஆன்மாவால் அறியப்படும் இரகசியப்பொரு ளாம்; அதனை ஆசிரியனருளின்படி அத்துவித பாவனையாகச் சிந்திக்கச் சிந்திக்கத் தானே கிட்டும்; இதுவே யான்பெற்ற பேறு; இவ்வுலகத்தாரும் இதனைப் பெறக்கடவராக என உரைப்பாரும் உளர்.

பிறப்பிலி நாதனைப் பேர்நந்தி தன்னைச்
சிறப்போடு வானவர் சென்றுகை கூப்பி
மறப்பிலர் நெஞ்சினுள் மந்திர மாலை
உறைப்பொடுங் கூடிநின் றோதலும் ஆமே. 86

இ-ம் – எனின், தேவரும் வணங்கும் இறைவனை மந்திரமாலை ஓதிப் பெறலாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அநாதி நித்தியனாகிய தலைவனை, நந்தி எனும் திருநாமம் உடையவனைத் தேவர்கள், எல்லாச் சிறப்புக்களோடும் சென்று கைகூப்பி வணங்கி மறவாமல் தியானிப்பவர்களானார்கள். அக்கடவுள் திருமந்திரமாலையை மன உறுதியோடு திருவருளில் ஒன்றிநின்று ஓதியவுடன் நமது நெஞ்சினுள் ஆவார் என்றவாறு.

மாலை ஓதலும் நெஞ்சினுள் ஆம் எனக்கூட்டுக. சிறப்பொடு - நைமித்திகத்திற்குரிய சாதனங்களோடு. மந்திரமாலை - சீபஞ்சாக்கரம். இறைவன் ஆம் என ஒருசொல் வருவிக்க.

அங்கிமி காமைவைத் தானுல கேழையும்
எங்குமி காமைவைத் தானுடல் வைத்தான்
தங்கிமி காமைவைத் தான்தமிழ்ச் சாத்திரம்
பொங்கிமி காமைவைத் தான்பொருள் தானுமே. 87

இ-ம் – எனின், இவ்வுலகத்துப் பூதங்கள், தம்முள் விஞ்சி ஒன்றையொன்று மேவாதபடி ஆட்கொள்ளும் அருமையை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: விஞ்சி மற்றவற்றை எரிக்காதபடி பூதாக்கினியை அடக்கிவைத்தான்; ஏழு உலகையும் படைத்து, எங்கும் மிகுந்துவிடாதபடி உடலையும் படைத்தான்; தமிழ்ச்சாத்திரங்களின் நெறியிலே

தங்கி, ஆன்மாக்கள் குற்றஞ்செய்யாதபடி அறிவு அருளிக் காத்தான்; அச்சாத்திர அர்த்தங்களேயும், வெளிப்பட்டு மிகுந்து விடாமல் அநுபவப் பொருளாக இருக்கும்படி வைத்தான் என்றவாறு.

அங்கி சங்காரம் செய்வதாதலின் அதனே அடக்கி மக்கட்கு உபகாரப்படுகிற நிலேயில் வைத்த மையை அங்கி மிகாமை வைத்தான் என்றருளிச் செய்கிருர்.

இப்பிருதிவி யண்டத்துள் ஏழு உலகங்களேயும் வைத்தது போலவே எல்லா அண்டத்தும் எவ்வேழு உலகங்களாக அமைத்து. அவை ஒன்றற்கு ஒன்று வன்மை விஞ்சி இழுப்புண்டு தம்மில்மோதி அழியாதபடி தத்தம் நிலேயில் நிற்கவைத்தமையை வெளிப்படுப்பது ‘ஏங்கு மிகாமைவைத்தான் உலகேழையும்’ என்பது.

உடல் வைத்தான் என்பது ஏழுவகையான எல்லா உலகங்களிலும் உள்ள போகத்தைப் பொருந்த விணக்கு ஈடாகத் தனுவைத் தந்தவன் என்றதாம். தமிழ்ச் சாத்திரம் தங்கி மிகாமை வைத் தான் என்பது தமிழ்ச்சாத்திரங்களில் உயிர்கள் நிலே பெற்று, குற்றம்செய்யாதபடி வைத்தான் என்பதை விளக்கிற்று. சாத்திரங்களின் வழியே உயிர்களே ஒழுகவைத்தான் 'என்பது கருத்து.

பொருள் தானும் பொங்கி மிகாமை வைத்தான் என்பது அச்சாத்திரங்களில் சொல்லப்பட்ட பொருள்களே ஆன்மாக்கள் வாசாஞானமாகப்

பொங்கி வழிய விட்டுப் பயனற்றவை ஆகாத வண்ணம், அநுபவப் பொருளாகக் கொள்ள வைத்தான் என்றபடி.

அடிமுடி காண்பார் அயன்மால் இருவர்
படிகண் டிலர்மீண்டும் பார்மிசைக் கூடி
அடிகண் டிலேன்என் றச்சுதன் சொல்ல
முடிகண்டன் என்றயன் பொய்மொழிந் தானே. 88

இம் – எனின், அயனும் மாலும் அறியாப்பெருமையன் இறைவன் என்பது அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: அடியையும் முடியையும் காண்பேம் என்று கருதி முயன்ற அயனும் மாலும் ஆகிய இருவரும், கருதியபடி அவை இரண்டையும் காண்கிலராய் மீண்டும் பூமியில்கூடி, திருமால் திருவடியைக் கண்டிலேன் என்ன, பிரமன் முடியைக் கண்டேன் என்று பொய்யை உரைத்தான் என்றவாறு.

படி-இருவரும் சூளுற்றபடி. அவர் இருவரும் காணாத அடிமுடிகளை அவனருளாலே அடியேன் கண்டேன் என்பது கருத்து.

பெற்றமும் மானும் மழுவும் பிறிவற்ற
தற்பரன் கற்பனை யாகும் சராசரத்(து)
அற்றமும் நல்கி அடியேன் சிரத்தினில்
நற்பத மும்அளித் தான்எங்கள் நந்தியே. 89

இம் - எனின், இறைவன் தமக்கு அருளிச்செய்த முறையை அறிவித்தல் நுதலிற்று.

இ-ள் இடபம். மான், மழு ஆகிய இவைகளைப் பிரி வில்லாமல் ஊர்தியாக அணியாக ஏற்றுக்கொண்ட இறைவனுடைய நினைவுமாத்திரையால் எழுகிற இயங்கியற்பொருளும் நிலையியற்பொருளும் ஆகிய இரண்டையுடைய உலகத்திலே இருப்பைக் கொடுத்து அடியேன் சிரசில் திருவடியையும் சூட்டி னன் எமது குருநாதனுக வந்த இறைவன் என்றவாறு.

மலமாயைகளைக்கெடுத்து முத்தியின்பம் நல்கும் திருவடியாதலின் 'நற்பதம்'என்றார். கற்பனையாகும் சராசரம் என்றது இறைவன் பிரமனுதியரைப்போ லத் தொழிலால் விகாரப்பட்டுப் பொருள்களைப் படைப்பானல்லன்;அவனுடைய சங்கற்பமாத்திரை யானே இவ்வுலகம் உண்டாகின்றது என்றவாறும்.

அடியேன் சிரத்தினில் நற்பதமும் அளித்தான் என்பது "நினைந்தனைய திருவடி என் தலைமேல் வைத்தான்" என்பதை நினைவூட்டுகிறது.

ஞேயத்தைத் ஞானத்தை ஞாதுரு வத்தினை
மாயத்தை மாமாயை தன்னில் வரும்பரை
ஆயத்தை அச்சிவன் தன்னை யகோசர
வீயத்தை முற்றும் விளக்கியிட் டேனே. 90

இம்-எனின், இத்திருமந்திர மாலையுள் விளக்கப் பட்டன இவ்வ என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அறியப்படும் பொருளும், அறிவும், அறிப வனும், மாயைகளும், சுத்தமாயையில் வசிக்கும்

பரைஆதிய சத்திகளும், சிவமும், புலஞ்காத பீஜங்களும் ஆகிய இவற்றை விளக்கினேன் என்றவாறு.

மாயம்-உலகத்தோற்றத்தினுக்கு முதற்காரணமாகிய சுத்தம், அசுத்தம், பிரகிருதி என்னும் மாயைகள். மாமாயைதன்னில் வரும் பரை ஆயம் என்றது சுத்தமாயையில் வசிக்கின்ற பரை, ஆதி, திரோதாயி இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி முதலிய சத்திகளின் கூட்டம். ஆயம்—கூட்டம்.

வீயம் என்பது பீஜம். "இடையில் மூன்றும் அவ்வம் முதலும் எட்டேயவ்வும்" என்னும் விதிக்ளைப் பெற்றுப் பீயமாகி வ்கரத்தோடு பகரம் ஒத்து நடத்தலின் பீயம் வீயம் ஆயிற்று.

விளக்கிப் பரமாகும் மெய்ஞ்ஞானச் சோதி
அளப்பில் பெருமையன் ஆனந்த நந்தி
துளக்கறும் ஆனந்தக் கூத்தன்சொற் போந்து
வளப்பின் கயிலை வழியில்வந் தேனே. 91

இம் - எனின், இறைவன் ஆணையின்வண்ணம் திருக்கயிலாய மரபில் வந்தமையை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : திரிபுடிஞானம் முதல் பீஜம் வரையில் அடியேனுக்கு விளக்கிப் பரம்பொருளாக விளங்குகின்ற, உண்மை அறிவு ஒளிமயமான். எல்லையற்ற பெருமையினை உடைய, ஆனந்த வடிவினனாகிய ஆனந்தக்கூத்தன் ஆணைப்படியே வந்து வளப்பத்தை உடைய திருக்கயிலை வழியே வந்தேன் என்றவாறு.

இதனுல் இறைவன் உண்மையறிவு ஆனந்த ஒளிவடிவினன் என்பதும், அவனே ஆசிரியனுகவும் ஆனந்தக்கூத்தனுகவும் உள்ளான் என்பதும், திருமூலர் அவன் ஆணையின்வழியே கயிலையிலிருந்து தெற்கே போந்தருளினுர் என்பதும் உணர்த்தப் பெறுகின்றன.

துளக்கரும் ஆனந்தக்கூத்தன் என்பது இடையீடின்றிப் பஞ்சகிருத்தியங்களையும் ஒருங்கே யாற்றும் ஆனந்தக்கூத்தன் என்றவாறு.

வளப்பின் கயிலை - வளப்பம் உடைய கயிலை. உலகம் என்பது அம்கெட்டு உலகு என வருதல் போல. வளப்பம் என்பது வளப்பு என வந்தது. வளப்பில் கயிலை எனப் பிரித்துத் தகுதியில் பொருள் கோலிவைப்பார் பலர்.

**நந்தி அருளாலே மூலனை நாடிப்பின்**
**நந்தி அருளாலே சதாசிவன் ஆயினேன்**
**நந்தி அருளால்மெய்ஞ் ஞானத்துள் நண்ணினேன்**
**நந்தி அருளாலே நானிருந் தேனே.** 92

இம் - எனின், மூலனுடலில்புகுந்து சிவயோகத்திருந்து சிவஞானம் எய்தியமையைத் தெரிவித்தல் நுதலிற்று.

இ - ள் : இறைவன் திருவருளால் (சாத்தனூர்ப் போந்து) மூலன் எனும் இடையர்குலமகனை நாடிப் புகுந்து. சதா சிவசிந்தனையோ டிருந்தேன்; உண்மை ஞானம் கைவரப் பெற்றேன்; பல ஆண்டுகள் இருக்கப் பெற்றேன் என்றவாறு.

மூலனை நாடி - மூலனுடலை விரும்பி: என்றது மூலனுடலில் சிவயோகியார் புகுந்த வரலாற்றைத் தெரிவிப்பது. சதாசிவன் - எப்பொழுதும் சிவத்தோடு ஒன்றியவன்; சிவம் அன் எனப் பிரித்துச் சிவத்தோடு ஒன்றியவன் எனப் பொருள் காண்க. பொன்னன் என்புழிப்போல.

இருக்கில் இருக்கும் எண்ணிலி கோடி
அருக்கின்ற மூலத்துள் அங்கே இருக்கும்
அருக்கனும் சோமனும் ஆரழல் வீச
உருக்கிய ரோமம் ஒளிவிடுந் தானே. 93

இம் - எனின், மயிர்க்கால்தோறும் ஒளிவீச இருக்கும் உபாயத்தை உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : இருக்குவேதத்தில் பலகோடி மந்திரங்கள் உள்ளன. மிக அருகிய மூலமாகிய பிரணவத்துள் வீற்றிருக்கின்ற சூரியனும் சந்திரனும் அரிய அழலை வீச உயிர் உருக்கப்பெற்று, மயிர்க்கால் தோறும் ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் என்றவாறு.

இருக்கு முழுதும் மந்திரவடிவானது, மந்திரங்கள் பல, அதனைப் பன்மைபற்றி 'எண்ணிலி' என்று அருளிச்செய்தார். எல்லாமந்திரங்கட்கும் மூலமான அருகியஒலி ஓங்காரம். அருக்கன் என்றது சூரியனாகிய சிவத்தை. சோமன் என்றது சத்தியை; சோமன் சத்தியம்சம் நிறைந்தவனாதலின் என்க. மூலமாகிய பிரணவம் அகார உகாரங்களின் இணைப்பாகிய ஓகாரமாதலின் சிவசத்திகளிரண்டும் உயிருள் இருந்து ஒளிசெய்யச்செய்ய உயிரானது உருகி மலம்

நீங்கி உரோமத் துவாரத்தாலும் ஒளி வெளிப்பட தேஜோ மயமாய்த் திகழும் என்பதைக் குறிப்பித்த வாறு.

இதனை 'எவன் இந்த சூரியனுக்குள் பொன்மய மானவனாகக் காணப்படுகின்றானோ அவன் கண்கள் இரண்டும் தாமரை. எல்லாப் பாபங்களையும் கடந்தவன்; உயர்ந்தவன்'' (சாந்தோக் 167) என வரும் உபநிடதத்தானும் தெளிக. இங்ஙனம் அன்றி, ஆசன பேதங்களை ஆராயின் பலகோடி வகைகள் உள்ளன. அவற்றுள் பொருந்திய மூலாதாரத்துள் இருக்கின்ற இடைகலையும் பிங்கலையுமாக ஒளிவீச, பிரமரந்திரம் வரையிற்சென்று மூலக்கனலான் உருக்க உரோமத் துவாரங்கள் எல்லாம் ஒளிவீச இருப்பன் என்றுரைத்தலும் ஆம். இப்பொருளில் 'இருக்கில்' என்பதில் 'இருக்கு' 'கு' விகுதி பெற்ற தொழிற்பெயர். இருத்தலாகிய ஆசன பேதங்களில் என்பது பொருள்.

பிதற்றுகின் றேன்என்றும் பேர்நந்தி தன்னை
இயற்றுவன் நெஞ்சத் திரவும் பகலும்
முயற்றுவன் ஓங்கொளி வண்ணன்எம் மானை
இயற்றிகழ் சோதி இறைவனும் ஆமே 94

இ-ள். இறைவனை எப்பொழுதும் ஏத்திப் போற்றி வணங்குவேன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் நந்தி என்னும் நாமம் உடையவனை எப்பொழுதும் பிதற்றுகின்றேன்; இரவும் பகலும்

என் மனத்துள் வைத்துத் தியானிப்பேன்: சுயம்பிர காசமாய் இருக்கின்ற இறைவனும், ஒருகாலைக் கொருகால் மிக்கு விளங்குகின்ற ஒளிவண்ணனும் ஆகிய எனது தலைவனை அடைய முயற்சிப்பேன் என்றவாறு.

பிதற்றுகின்றேன் - ஆன்மபோதம் கழன்ற நிலையில் பரவசப்பட்டு, பித்தர் பேயரைப்போலப் பிதற்றுகின்றேன். நெஞ்சத்து இயற்றுவன் - தியானிப்பேன். இரவும் பகலும் என்றதற்கு அஞ்ஞானமும் ஞானமும் மிக்கிருக்கின்ற காலத்து எனலும் ஆம். இயல்திகழ் சோதி - இயல்பாகவே விளங்குகின்ற ஒளிப் பொருள். சுயம்பிரகாச சொரூபன் என்றவாறு.

இறைவனும் ஒளிவண்ணன் ஆம் எனக்கூட்டுக.

## 6. அவையடக்கம்

ஆரறி வார்எங்கள் அண்ணல் பெருமையை
ஆரறி வார்இந்த அகலமும் நீளமும்
பேரறி யாத பெருஞ்சுடர் ஒன்றதின்
வேரறி யாமை விளம்புகின் றேனே

95

இ-ள் - எனின், அவையடக்கம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : எமது சிவபெருமானது பெருமையை அறிவார் யார் ? அவனது அகலமும் நீளமும் ஆகிய பரப்பினை அறிவார் யார் ? அது பெயரறியப்படாத பெருஞ்சுடர்; இணையற்றது; அதனது மூலம்

அறியாமலேயே அடியேன் அதைப்பற்றிச் சொல்லு கின்றேன் என்றவாறு.

உலகில் யாவரும் அறியார்கள்; அடியேனும் அங்ஙனமே என்று தமது மாட்டாமையைக் கூறுவ தால் இறைவனுடைய எல்லையற்ற பெருமையை எமக்கு உணர்த்தியவாறு.

பாடவல் லார்நெறி பாட அறிகிலேன்
ஆடவல் லார்நெறி ஆட அறிகிலேன்
நாடவல் லார்நெறி நாட அறிகிலேன்
தேடவல் லார்நெறி தேடகில் லேனே. 96

இம் - எனின், இதுவும் அது.

இ - ள் : இறைவனைப்பற்றிப் புகழ்ந்து பாட வும், அவனருளில் ஈடுபட்டு மெய்ம்மறந்து ஆனந்தக் கூத்தாடுவார் நெறியில் நின்று ஆடவும், அன்புசெய்வார் நெறியில் நின்று அன்புசெய்யவும் தேடுவார் நெறியில் நின்று தேடவும் அறிகிலேன். என்றவாறு.

அங்ஙனம் அறியவும் தேடவும் மாட்டாத யான் சொல்லத் தொடங்கியது எவ்வாறு என எனக்கே நகைதரும் என்று அவையடக்கம் கூறியவாறு.

மன்னிய வாய்மொழி யாலும் மதித்தவர்
இன்னிசை உள்ளே எழுகின்ற ஈசனைப்
பின்னை உலகம் படைத்த பிரமனும்
முன்னும் அவனை உணரலும் ஆமே. 97

இம் - எனின், இதுவும் அது.

இ - ள் : உறுதிகொண்ட அன்பர்களது இனிய இசையில் எழுகின்ற ஈசனை உலகம்படைத்த பிரமனும். அவனது முன்னோனாகிய திருமாலாலும், நிலைபெற்ற வேதங்களாலும் உணர்வதற்கு ஒண்ணுமோ? என்றவாறு.

ஈசனை அவனை, பிரமனும் முன்னும் வாய்மொழியும் உணரலும் ஆமே எனக்கூட்டுக.

வேதம் என்றுமே அழியாததொன்று ஆதலின் 'மன்னிய வாய்மொழி' எனப்பட்டது. பிரமனும் உன்னும் அவனை எனப் பிரித்து, பிரமனும் தியானிக்கின்ற பரம்பொருளை என உரைப்பாரும் உளர்.

வேதங்களாலும் மாலயனாலும் உணரப்படாத பரம்பொருளை, இன்னிசையாய் உள்ள பெருமானை யான் எங்ஙனம் உரைப்பது என்று அவையடக்கம் கூறியவாறு.

தத்துவ ஞானம் உரைத்தது தாழ்வரை
முத்திக் கிருந்த முனிவரும் தேவரும்
ஒத்துடன் வேறாய் இருந்து துதிசெயும்
பத்திமை யால்இப் பயனறி யாரே. 98

இம் - எனின், இதுவும் அது.

இ - ள் : கயிலையங்கிரியின் தாழ்வரையிலிருந்து உண்மை ஞானத்தை உரைத்ததாகும். ஆதலால்

முத்தியைப் பெறுதற்காக இருத்த முனிவர்களும் தேவர்களும் ஒத்து உடனுயிருந்தும் வேருயிருந்தும் தோத்தரிக்கும் அன்பு மிகுதியான் இதன் பயனை அறியார் என்றவாறு.

முனிவர்கள் முத்தான்மாக்களாய் இருத்தலின் அறியார்; தேவர்கள் வேருயிருத்தலின் அறியார்; ஆனாலும் இருவரும் ஒத்துத் துதிசெய்யும் பத்திமை யுடையார் என்பது விளக்கியவாறு.

## 7. திருமந்திரத் தொகைச் சிறப்பு

மூலன் உரைசெய்த மூவா யிரந்தமிழ்
ஞாலம் அறியவே நந்தி அருளது
காலை எழுந்து கருத்தறிந் தோதிடின்
ஞாலத் தலைவனை நண்ணுவர் அன்றே. 99

இம் - எனின், மூவாயிரமும் ஓதுவார் எய்தும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : உலகமெல்லாம் அறிந்து ஈடேறச் சிவபெருமான் திருவருளால் திருமூலர் உரைத்தது மூவாயிரம் தமிழ் மந்திரங்கள்; மக்கள் காலையில் எழுந்து அவற்றைத் தூய மனத்தோடு பொருள் உணர்ந்து சொன்னல் உலகநாயகனை உற்று இன் புறலாம் என்றவாறு.

ஞாலம் அறியவே என்றது 'நான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற கருணை நோக்கால் கூறியது.

வைத்த பரிசே வகைவகை நன்னூலின்
முத்தி முடிவிது மூவா யிரத்திலே
புத்திசெய் பூர்வத்து மூவா யிரம்பொது
வைத்த சிறப்புத் தருமிவை தானே. 100

இம் – எனின், இதுவும் அது.

இ–ள் : திருமந்திரமாலையாகிய நல்ல நூலில் வைத்த தன்மை இருவகையாம்: இம்மூவாயிரமும் முத்தியாகிய முடிவைக் கூறும்; அறிவானமைந்து முதற்கட் செய்யப்பட்ட இம் மூவாயிரமும் பொது வாம். பின்னதாக வைக்கப்பெற்ற மூவாயிரம் சிறப்பாம் என்றவாறு.

நன்னூலின் வைத்த பரிசு வகை வகை; மூவாயி ரத்திலே முத்தி முடிவு இது; வைத்த இவைதானே சிறப்புத்தரும்; புத்திசெய் பூர்வத்து மூவாயிரம் பொது என முடிக்க.

## 8. குருமட வரலாறு

வந்த மடமேழும் மன்னும்சன் மார்க்கத்தின்
முந்தி உதிக்கின்ற மூலன் மடவரை
தந்திரம் ஒன்பது சார்வுமூ வாயிரம்
சுந்தர ஆகமச் சொல்மொழிந் தானே 101

இம்–எனின், திருமூலர் திருமடம், திருமந்திரம் இவற்றின் வரலாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நிலைபெற்ற சன்மார்க்கமாகிய ஞான மார்க்கத்தில் வந்த மடங்கள் ஏழு; அவற்றுள் முன்னே தோன்றிய மடத்தின் தலைவராகிய திருமூலர் ஒன்பது தந்திரமாக அவற்றைச் சார்ந்த மூவாயிரம் மந்திரமாக அழகிய ஆகமச் சொல்லை மொழிந்தார் என்றவாறு.

கலந்தருள் காலாங்கர் தம்பால் அகோரர்
நலந்தரு மாளிகைத் தேவர்நா தாந்தர்
புலங்கொள் பரமானந் தர்போக தேவர்
நிலந்திகழ் மூலர் நிராமயத் தோரே. 102

இம் - எனின், ஏழு திருமடத்தலைவர் இவரென உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மடங்களின் தலைவர் எழுவர் ஆவர், காலாங்கர், அகோரர். மாளிகைத்தேவர், நாதாந்தர், பரமானந்தர், போகதேவர். திருமூலர் என்ற பாசத் துன்பம் அற்றவர்களாகிய இவர்கள் என்றவாறு.

கலந்தருள் காலாங்கர் என்றது ஆன்மாக் களோடு ஒன்றிநின்று அருள்செய்யும் காலாங்கர் என்பதாம்,

திருவிசைப்பா அருளிச்செய்து, நரசிங்கன் என்பவனுக்காக மதில் நந்திகளையெல்லாம் ஏவிச் சித்த நாதராய்த் திருவாவடுதுறையில் எழுந்தருளி யிருந்து என்றும் நலந்தருவதால் 'நலந்தரு மாளிகைத்தேவர்' என்றருளப்பெற்றார்.

புலம் கொள் பரமானந்தர் – ஞானியாகிய பரமானந்தர். நிலம் திகழ் – இந்நிலவுலகத்து விளங்குகின்ற.

## 9. மும்மூர்த்திகளின் முறைமை

அளவில் இளமையும் அந்தமும் ஈறும்
அளவியல் காலமும் நாலும் உணரில்
தளர்விலன் சங்கரன் தன்னடி யார்சொல்
அளவில் பெருமை அறியயற் காமே. 103

இம் – எனின் சிவபரத்துவம்கூறுதல் நுதலிற்று.

இ – ள் : எல்லையற்ற இளமையும் அழகும் முடிவும் அளவுக்குட்பட்டு இயங்குகின்ற காலமும் ஆகிய நான்கையும்பற்றி ஆராயின், சங்கரன் ஒருவாற்ருனும் தளர்வில்லாதவன்; அடியார்களால் தோத்தரிக்கப்படும் அவனது அளவற்ற பெருமையை அறிந்துகொள்ளப் பிரமனுக்கும் முடியுமோ! என்றவாறு.

'அரியயர்க்கு ஆமே' எனப் பாடங்கொண்டு பெருமையை யுணர மால் அயன் என்ற இருவர்களாலும் ஆகுமோ என உரைத்தலும் ஆம்.

ஆதிப் பிரானும் அணிமணி வண்ணனும்
ஆதிக் கமலத் தலர்மிசை யானும்
சோதிக்கில் மூன்றும் தொடர்ச்சியில் ஒன்றெனர்
பேதித் துலகம் பிணங்குகின் ருர்களே. 104

இம் – எனின், இதுவும் அது.

இ – ள் : உருத்திரனும், அழகிய நீலமணி போன்ற நிறத்தையுடைய திருமாலும் ஆதிமூல மாகிய திருமாலின் உந்திக்கமலத்திலுள்ள பிரமனும் ஆராயுமிடத்து இம்மூவரும் தொடர்பால் ஒருவர் என்று துணியாராய் தொழில்வகையில் வேறு படுத்தி உலகத்தவர் மாறுபடுகின்றூர்கள் என்றவாறு.

உருத்திரன் முதலிய மூவரும் தத்தம் பதவி களினின்று ஒருமுதல்வன் ஆணையைச் சிரமேல் தாங்கித் தொழிலாற்றுகின்றூர்கள் ஆதலின் அவர் களுக்குள்ளிருந்து இயக்கும் இறைவன் ஒருவனே என்றுணராது உலகம் பேதித்துப் பிணங்குகின்றது என்பது கருத்து.

ஈசன் இருக்கும் இருவினைக் கப்புறம்
பீசம் உலகில் பெருந்தெய்வ மானது
ஈசன் அதுஇது என்பார் நினைப்பிலார்
தூசு பிடித்தவர் தூரறித் தார்களே. 105

இம் – எனின், இதுவும் அது.

இ – ள் : நல்வினை தீவினையாகிய இருவினைகளைக் கடந்த இறைவனாகிய பெருந்தெய்வமே உலகிற்கு வித்து. ‘அவன்தான் இறைவன்; இவன்தான் இறைவன்’ என்று வாதாடுபவர்கள் உண்மையான நினைப்பற்றவர்களே என்றவாறு.

மலமாசு கழுவித் தூய்மையுற்றவர்களே பிறவி யின்வேரை அறுத்தவர்களாவார்கள் என்பதாம்.

இதனால், இருவினைகளில் கட்டுண்ணாது கடந்து உலகிற்கு வித்தாய் இருக்கின்ற ஒன்றே முழுமுதல் தெய்வம்; இஃதறியாது இது தெய்வம் அது தெய்வம் என்பார் நினைப்பற்றவர்கள்; உண்மை யுணர்ந்து மலபரிபாகம் உற்றவரே பிறவித்தூரை அறிந்தவர்கள் என்பது உணர்த்தப்பெற்றமை காண்க.

சிவன்முதல் மூவரோ டைவர் சிறந்த
அவைமுதல் ஆறிரண் டொன்றென்றொன் றாகும்
அவைமுதல் விந்துவும் நாதமும் ஓங்கச்
சவைமுதற் சங்கரன் தன்பெயர் தானே. 106

இம் - இனின், பரசிவம், மூவராயும் ஐவராயும் நவந்தருபேதங்களாயும் இருக்ும்நிலை உணர்த்து தல் நுதலிற்று.

இ - ள்: சிவமாகிய முதற்பொருள், பரசிவன் சதாசிவன் மகேச்சுரன் என்னும் மூவரோடு, பர சிவன் திரோபவன் ஞாதா இச்சிதா கர்த்தா என்னும் ஐவரும், முற்கூறிய ஐந்தும், மூன்றும் ஆகிய நிலைகளுக்கு முதலாகிய சிவத்தோடு, பத்தா கிய நிலைகளையும் பொருந்திநிற்கும், அவைகளுக் கெல்லாம் முதலாகிய அச்சிவம் விந்து ஓங்கச் சிவமாகவும், நாதம் ஓங்க மகேச்சுரமாகவும் அமை

யும்; இவையனைத்தும் மன்றுறை முதல்வனாகிய சங்கரன் திருநாமங்களாகவே விளங்கும் என்றவாறு.

இம்மந்திரம் நாலாந் தந்திரத்தில் திருவம்பலச் சக்கரம் என்ற பகுதியின் எழுபத்தேழாம் மந்திரமாகவும் அமைந்துள்ளது. அதற்குப் பொருள் வேறு என்று அமைக.

சிவமுதல் மூவர், லயம் போகம் அதிகாரம் என்ற மூன்று நிலையில், முற்கூறிய மூவராதலின் இங்ஙனம் அருளப்பெற்றது.

ஐவர் : பராசத்தி வியாபார பேதத்தான் பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி என்ற நாமபேதத்தை அடையும் போது இச்சத்திகளை அதிட்டித்து நிற்கின்ற சிவமும், பரசிவம் முதலான முற்கூறிய ஐவகை நாமபேதங்களை எய்துகின்றமையின் ஐவர் எனப் பெற்றது.

அவைமுதல் - முற்கூறிய நிலைகட்கு முதல். முதல் என்றது சிவம். மூவர் ஐவர் என எண்ணடியாகப் பிறந்த பலர்பாற் பெயராக ஆண்ட சிவயோகியார், பின்னர் அவர்முதல் என்னாது. அவைமுதல் எனப் பலவின்பால் வாய்பாட்டான் சுட்டியருளினமை எங்ஙனம் இயையும் எனின் அக்கினியின் வெப்பசத்தி ஒன்றாயினும், இரும்பு விறகு உப்பு அரிசி முதலியவற்றில், உருக்குதல் கொளுத்துதல் வெடித்தல் சமைத்தல் முதலான பல

பெயரடைதல்போல, சிவம் ஒன்றாயினும், லய போக அதிகாரபேதத்தான் மூவராயும், சத்தியை அதிட்டித்து நிற்கின்ற நிலையில் ஐவராயும் நாமந் தாங்கச்செய்தன. அவ்வந் நிலைகளே என்பார் அவை முதல் என்று சுட்டியுணர்த்தியருளிய அருமை ஆழ்ந்து இன்புறுக.

ஆறு இரண்டு ஒன்றோடு ஒன்று-பத்து. சிவமாகிய தனிநிலையும் நவந்தரு பேதங்களும் இணைந்த தான பத்து. நவந்தரு பேதங்களாவன: சிவம் சத்தி நாதம் பிந்து என்னும் அருவம் நான்கும், சதாசிவன் என்னும் அருவுருவம் ஒன்றும், மகேச்சுரன் உருத்திரன் விஷ்ணு பிரமன் என்னும் உருவம் நான்குமாம். எழுவாயுருபு ஏற்ற பெயர்ச்சொல்லும், தனிப்பெயர்ச்சொல்லும் பெயரான் ஒன்றாயினும் கர்த்தாவாதலும் பொதுமையின் நிற்றலும் ஆகிய நிலையான் வேறாதல்போல; பொதுமையினிற்கும் சிவமாகிய தனிநிலையும் ஆன்மாக்களை இரட்சிக்கத் திருவுளங்கொண்ட நிலையும் வேறாம் என்க. இங்ஙனமே பரசிவம் என்பதற்கும் கொள்க.

அவை முதல் விந்துவும் நாதமும் ஓங்க என்றது முற்கூறிய பேதங்களுக்கெல்லாம் முதலாகிய சிவம் விந்து ஓங்கச் சிவமாயும், நாதம் ஓங்க மகேச்சுரமாயும் விளங்க என்பதாம். விந்து-ஞானசத்தி. நாதம்-கிரியை. விந்துவும் நாதமும் ஓங்க – இரண்டும் தம்முள் சமமாய் ஓங்கச் சதாசிவமாய் என்பது. பிரித்துக் கூறினுல் என்னும் நூற்புணர்ப்பால் விந்து ஓங்க, நாதம் ஓங்க விந்துவும் நாதமும் ஓங்க என இவ்வாறு கூட்டிப் பொருள் கொள்க.

*சவை முதல் சங்கரன் – மன்ற முதல்வராகிய சிபரமேசுவரன், சங்கரன் தன்பெயர் தானே என்றது இவைகள் தத்துவங்களுக்கும் பெயராக இருத்தலைத் திருவுளத்தடைத்து. இவை இறைவன் பெயர்கள் என ஐயமகற்றியவாறு,*

**பயன்அறிந் தவ்வழி எண்ணும் அளவில்**
**அயனொடு மால்நமக் கன்னியம் இல்லை**
**நயனங்கள் மூன்றுடை நந்தி தமராம்**
**வயனம் பெறுவீர் அவ்வானவ ராலே. 107**

இம் – எனின், *அயன் அரி இருவர் நிலை இஃது என உணர்த்தி ஐயமறுத்துல் நுதலிற்று.*

இ – ள் : *பயனை உணர்ந்து ஆராய்கின்றபோது பிரமனும் திருமாலும் நமக்குப் புறம்பானவர்கள் அல்லர்; முக்கண்ணராகிய சிபரமேசுவரனது அடியார்களே. ஆதலால் அவர்களால் நன்மை அடையுங்கள் என்றவாறு.*

*பயன் அறிந்து-அயனும் மாலும் படைத்தலும் காத்தலும் செய்யும் பயனையும், அவற்றிற்கு ஆகிய காரணங்களையும் நன்கு உணர்ந்து ஆயின்-இவர்கள் இங்ஙனம் செய்வது சகலான்மாக்களில் பரிபாக விசேடமுற்றுப் பதவிகளையெய்தி இறைவனருளால் இத் தொழில்களை இயற்றுகின்றனர் என உணரப் படுதலின் அன்னியமாகார்; இறைவன் அடியார்களே ஆவர் என்பதாம்.*

ஓலக்கம் சூழ்ந்த உலப்பிலி தேவர்கள்
பாலொத்த மேனி பணிந்தடி யேன்தொழ
மாலுக்கும் ஆதிப் பிரமற்கும் ஒப்புநீ
ஞாலத்து நம்மடி நல்கிடென் றனே. 108

இ - ளின், பிரமனுதியர் சகலான்மாக்களில் பரிபாக முற்றவர்களே என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: திருவோலக்கத்திலே தேவர்களால் சூழப் பெற்ற நித்தியப்பொருளாகிய எம் சுவாமியின் பாலை யொத்த வெள்ளிய திருமேனியை அடியேன் வணங்க, பெருமானுகிய அவர் 'நீ திருமாலுக்கும் பிரமற்கும் ஒப்பாவாய்; பூவுலகத்தில் திருவடி ஞானத்தைக் கொடுத்தருள்க' என ஆணை வழங்கினுன் என்றவாறு.

ஓலக்கத்துத் தேவர்கள் சூழ்ந்த உலப்பிலியின் பாலொத்த மேனியை அடியேன் பணிந்து தொழ, (அவர்) 'மாலுக்கும் பிரமற்கும் நீ ஒப்பு; ஞானத்து நம்மடி நல்கிடு' என்றுன் எனக் கூட்டி உருபு விரித்துப் பொருள் காண்க.

ஓலக்கம் - திருக்கயிலையில் அத்தாணிமண்டபத்தில் அரியாசனத்து அரசுவீற்றிருக்கும் நிலை. சூழ்ந்த; சூழப்பெற்ற எனச் செயப்பாட்டுவினையாகக் கொள்க. உலப்பிலி – அநாதி நித்யன்; அழிவற்றவன் என்பதாம். ஆதிப்பிரமன் – முதற்றெழிலைச் செய்கின்ற பிரமன். அடி என்றது அடிசேர் ஞானமாகிய சிவஞானத்தை உணர்த்

திற்று. நல்குதலாவது பரப்புதல். மாலுக்கும் பிரமற்கும் ஒப்பென்றது, அவர்களும் சகலான்மாக் களாக இருந்து பரிபாக விசேடத்தால் பதவி எய்தின வர்கள்; அவர்கட்கில்லாததும் அடியேற்குள்ளது மான தனிச்சிறப்பு நம்மடியை ஞாலத்து நல்குக என்பது.

வானவர் என்றும் மனிதர்இவர் என்றும்
தேனமர் கொன்றைச் சிவனருள் அல்லது
தானமர்ந் தோரும் தனித்தெய்வம் மற்றில்லை
ஊனமர்ந் தோரை உணர்வது தானே. 109

இ-ம் - எனின், சிவனே பரம்பொருள் என்பது விளக்குதல் நுதலிற்று.

இ-ள்: தேவர்கள் என்றும் மக்கள் என்றும் உடலையிடமாகக்கொண்டு விரும்பி யிருப்போர் உணர வேண்டுவது, தேன்மிகுந்த கொன்றைமலர் மாலையை யணிந்த சிவபெருமானுடைய அருளையே யன்றி, ஒவ்வொருவரும் மனம் ஒருமித்து ஆராயும் தெய்வம் வேறொன்றும் இல்லை என்றவாறு.

வானவரென்றும், மனிதர் இவரென்றும் ஊன் அமர்ந்தோர் உணர்வது சிவன் அருளல்லது ஒருந் தெய்வம் மற்றில்லை எனக் கூட்டிப் பொருள் காண்க.

எடுத்த யாதனாசரீரத்திற்கு ஏற்பத் தேவர் என்றும், பூதசரீரத்திற்கு ஏற்ப மனிதர் என்றும் பெயர்தாங்கி இருப்பவர்கள் உணரவேண்டியது

சிவனருள் ஒன்றே; சிவத்தையன்றித் தியானிக்கும் தெய்வம் பிறிதில்லை என்பது கருத்து. ஊன் என்பது ஆகுபெயராய் உடலை உணர்த்திற்று. அமர்ந்தோரை என்பதில் ஐ சாரியை

சோதித்த பேரொளி மூன்றைந் தெனநின்ற
ஆதிக்கண் ஆவ தறிகிலர் ஆதர்கள்
நீதிக்கண் ஈசன் நெடுமால் அயன்என்று
பேதித் தவரைப் பிதற்றுகின் றாரே. 110

இ-ள் — எனின், மூவரைப் பேதித்துப் பேசுபவர் மூடர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஒளிவிடுகின்ற பேரொளிப் பிழம்பாகிய சிவம், பிரமன் விஷ்ணு உருத்திரன் என மூன்றாயும் அவற்றுடன் சதாசிவன் மகேசன் கூட ஐந்தாகவும் நின்ற தொன்னிலைக்கண் அவரால் அடையும் பயனை அறியமாட்டாதவர்களாகிய மூடர்கள், முறையாக உருத்திரன் திருமால் பிரமன் என்று வேறுபடுத்திப் பிதற்றுகின்றனரே அவரறிவு இருந்தபடி என்னே! என்பது என்றவாறு.

சோதித்த என்பது ஒளியென்னும் பொருளைத் தருகின்ற சோதியென்னும் பெயர்ச்சொல்லடியாகப் பிறந்த பெயரெச்சம்; ஒளியை உடைய என்பது பொருள். ஆராய்ந்த எனப்பொருள்செய்யின் இறைவனுடைய வரம்பிலறிவுடைமைக்கு இழுக்காதலேயன்றி ஆன்றோர் மரபுமன்றாம். இறைவனே மூன்றாயும், ஐந்தாயும் நிற்கின்றான் என்றெண்ணுவதே முறை என்பது கருத்து.

பரத்திலே ஒன்றாய்உள் ளாய்ப்புற மாகி
வரத்தினுள மாயவ ளாய்அயன் ஆகித்
தரத்தினுள் தான்பல தன்மையன் ஆகிக்
கரத்தினுள் நின்று கழிவுசெய் தானே. 111

இ-ம் - எனின், சிவபரம்பொருளே ஒன்றாய்ப் பல வாய் விரிந்து ஐந்தொழிலையும் ஆற்றி அருள்செய் கின்றது என்று 'ஒன்றவன்றானே' என்று முதற்கண் நுதலியதைக் கூட்டி முடித்தல் நுதலிற்று.

இ-ள்: ஒன்றிலும் பற்றாது தற்சொரூபமாய் இருக்கும் நிலையில் பரசிவம் என்ற ஒரேபொருளாகி, இயங்கியற்பொருள் நிலையியற்பொருளாகிய இவற் றின் உள்ளும் புறம்புமாய், சிருஷ்டியிலும் வர மளித்துக் காப்பதிலும் மாலும் அயனுமாகி சங்கார கிருத்தியத்திலும் நின்று அழித்தலையும் செய்தான் என்றவாறு.

பரத்தில் - தற்சொரூபநிலையாகிய உயர்ந்த நிலையில் உள்ளாய் - ஒன்றாயும் உடனாயும். புறம் பாய் - வேறாயும், வரத்து - பிறவி; போக்கு வரத்து என்னும் வழக்காறும் காண்க. வரம் அத்து வரத்து; வரம் கொடுக்கின்றபோது அதாவது திதித்தொழில் செய்யும்போது, தரத்தினுள் தான் பல தன்மையன் ஆகி - அவரவர்களுடைய பரிபாகநிலைக்கு ஏற்ப நின்று அருள் வழங்கு நிலையில் போகமும் வேகமும் யோகமும் சாந்தமும் ஆகிய மூர்த்திபேதங்கள் பல வாய்; கரத்தினுள் - எல்லாவற்றையும் ஒடுக்குகின்ற காலத்தில்; கரத்தலினுள் என்பது எதுகைநோக்கி,

கரத்தினுள் எனத்தொழிற்பெயர்விகுதி கெட்டு வந்தது. கழிவு செய்தல் - சங்கரித்தல். இது சிவனே முத்தொழில் செய்வான் என்பதாம்.

தாஞெரு கூறு சதாசிவன் எம்இறை
வாஞெரு கூறு மருவியும் அங்குளன்
கோஞெரு கூறுடல் உள்நின் றுயிர்க்கின்ற
தாஞெரு கூறு சலமயன் ஆமே. 112

இம் - எனின், சகள நிஷ்களத் திருமேனி தாங்கிய சதாசிவனையும், வாயுவையும், அப்புவையும் ஒரு கூருக மருவியுள்ளான் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : எமது தலைவனுகிய பரமசிவன் ஞான சத்தியை ஒருகூருச் சேர்ந்து சதாசிவனுக உளன்; ஆகாயத்தை ஒருகூருக மருவிப் பராகாயத்து உளன்; உடலுள்நின்று உயிர்க்கின்ற பிராண ஞகவும் உளன்; தனது ஒரு கூறு அப்புமயனுகவும் ஆவன் என்றவாறு.

தான் ஒரு கூறு சதாசிவன்; சதாசிவமூர்த்தி சக்திகலை உண்மையான் சகளமாதலும். மாயாகலை யின்மையான் நிஷ்களமாதலும் உடைமையின் 'ஒரு கூறு சதாசிவன்' என்று அருளியது. வாஞெரு கூறு மருவியும் அங்குளன் - அஷ்டமூர்த்தி சொருபராத லின், வானத்தைத் தமது திருமேனியில் ஏகதேச மாக மருவியும் எழுந்தருளியுள்ளார். இது அண்டம் பிண்டமாகிய இரண்டிடத்தும் வான் வியாப்பிய மாக இறை வியாபகமாக இருத்தலை உணர்த் திற்று.

உடலுள் நின்று உயிர்க்கின்ற கோன் : ஒருகூறு என்றது பிண்டத்து உயிர்ப்பாய்ப் புறம்போந்து புக்கு உடலுள் இருக்கும் நிலையுணர்த்திற்று. புறம் போந்து புகும்போது அண்டாகாயத்து வாயுவும் கலத்தலின் அண்டபிண்ட வாயுக்களைத் தம் ஒரு கூறுகக் கொண்டு உள்ளமை தெளிவிக்கப்பெற்றதாம். அங்ஙனமே ஒரு கூறு சலமயன் ஆம் என்றதும். சலமயன் ஆம் என்பதற்குத் தண்ணியன் என உரைப்பாரும் உளர். ஐம்பூதத்துள் வானும், காலும், அப்பும் முறையே கூறி ஏனையவற்றையும் உடன் கொள்ள வைத்தமையான் இதனைமட்டும் தண்ணியன் எனப் பண்பாக்க முடியாமை கருதுக.

பாயிரம் முற்றிற்று.



# முதல் தந்திரம்

## 1. உபதேசம்

விண்ணின் றிழிந்து வினைக்கீடாய் மெய்கொண்டு
தண்ணின்ற தாளைத் தலைக்காவல் முன்வைத்து
உண்ணின் றுருக்கியொ ரொப்பிலா ஆனந்தக்
கண்ணின்று காட்டிக் களிம்பறுத் தானே. 113

அரும்பிற்குக் காலமும் கதிரும் துணையாக நின்று அவ்வரும்பை முறுக்கவிழ்த்தல் போல் ஆன்மாக்களுக்கு மலக்கட்டை நீக்கவும், ஞான மணங்கமழச் செய்யவும் திருவருளுக்கும் வீழக் கூடிய காலமும் உபதேச கிரணமும் இன்றியமை யாதனவாதலின், சிவயோகியர் பெருமானாகிய திருமூலதேவநாயனார் உபதேசத்தை முதற்கண் எடுத்துக்கொண்டார்கள்.

உபதேசமாவது கூட இருந்துகாட்டுவது என்னும் பொருளதாம். குழவியின் கூட இருந்து தந்தையை யுணர்த்தும் தாய்போல, ஆசாரியன் ஞானதாகங்கொண்ட சீடனுடனிருந்து சிவனைக் காட்டும் உபகாரமே உபதேசம் என்பது கருத்து. அங்ஙனம் குரு, உபதேசிக்கும்போது தன்னநு பவமும், குருபரம்பரை மரபும்பற்றி உபதேசிப்பர். அவற்றுள் இப்பெருமானார் இரண்டும் கலந்துகூறி முப்பது மந்திரங்களால் அந்தாதித் தொடையாக மொழிந்தருளுகின்றார்.

இம்மந்திரம் என்னுதலிற்றோ எனின், இறைவன் செய்த பரமோபகாரத்தை விளக்குதல் நுதலிற்று.

இதன் பொருள் : துறக்கம் மேகமண்டலம் இவற்றினின்றும் இறங்குவித்து, தத்தம் வினைகளுக்கு ஈடாக உடல்தாங்குவித்து, தண்ணிய திருவடியை முதற் காவலாகக் கேவலநிலை முதற்கொண்டே வைத்தருளி, உயிருக்குயிராய் நின்று கனிவித்து, ஈடற்ற ஒன்றான ஆனந்தத் தேறு கண்ணில் நின்று காட்டி, அநாதியே பற்றிநின்ற ஆணவக் களிம்பினை நீக்கி யருளினன் என்றவாறு.

இழிந்து, கொண்டு, வைத்து, உருக்கி, காட்டி அறுத்தான் எனக் கூட்டுக. இழிந்து, கொண்டு முதலிய தன்வினையெச்சங்களை இழித்து, கொள்வித்து எனப்பிறவினை எச்சங்களாக மாற்றிப் பொருள் கொள்க. ஆன்மாக்கள் என்றும் சுதந்திர மற்றன வாகலின்.

இங்ஙனமன்றி, இழிந்து முதலிய வினை எச்சங்களை இறைவற்கேயாக்கி, சிவபெருமான் குருவாக வந்து ஆட்கொண்டு களிம்பு அறுத்தான் என உரைப்பர். அவ்வுரையில், விண் என்பதற்குச் சிவலோகம் என்றும் வினைக்கீடாய் என்பதற்கு அருள் வினைக்கு ஈடாக என்றும் பொருள் காண்பர். இறைவன் திருமேனி தாங்குதல் வினைக்கீடாக என்றல் ஏலாமை சிந்திக்கத் தக்கது.

விண்ணின்று இழிந்து வினைக்கீடாய் மெய் கொண்டு என்பது பஞ்சாக்கினி வித்தை கூறியருளி

யது. விண் - சுவர்க்கமும், மேகமும். மேகத்தை உணர்த்தும்போது இடவாகு பெயர். பஞ்சாக்கினி வித்தையாவது நல்வினைசெய்த உயிர்கள் அந்நல் வினைப் பயனை நுகர்தற்பொருட்டுச் சுவர்க்கம் சென்று அவ் வினையுலந்த வழி பூதசார உடம்பு நீங்கச் சூக்கும உடம்போடு மேக மண்டலத்தை எய்தி, ஆண்டு நின்று, மழைத்தாரையினோடுகூடி நிலத்தினையடைந்து. நெல் முதலிய பைங்கூழில் விரவிநின்று, அவை உணவாய்ப் பரிணமித்த வழி அவற்றோடுகூடி, தந்தை வயிற்றிற்சென்று. ஆண்டுச் சுக்கிலமாய்ப் பரிணமித்து, தாய் வயிற்றுட்சென்று கருவாய்ப் பரிணமித்து, தூல தேகத்தோடு நிலத்துத் தோன்றுதலாகிய ஐந்து நிலைகளை எய்துதலின். நிலைகள் ஐந்தும் அங்கியாகவும், ஆன்மா ஆகுதியாகவும் தியானிக்கப்படுவதொரு சாதகம் என்க. ஆன்மாக்கள் உடலை மேற்கொள்வது தாமாகவன்று. இறைவன் அந்தந்த ஆன்மாக்கள் செய்த புண்ணிய பாவங்களுக்கீடாக உடலொடு கூட்டுகின்றார்: உயிர்கள் கொள்கின்றன. இவற்றின் விரிவை, மெய் கண்டதேவநாயனார் அருளிச்செய்த,

''கண்ட நனவைக் கனவுணர்விற் றன்மறந்து
விண்படர்ந் தத்தூடு வினையினாற்—கண் செவிகெட்(டு)
உள்ளதே தோற்றம் உளமணுவாய்ச் சென்றுமனம்
தள்ள விழுங்கருவிற் றான்''

என்னும் சிவஞானபோத வெண்பாவனும், மாதவச் சிவஞான சுவாமிகளின் மாபாடியக் குறிப்புக்களானும் நன்கறிக.

தண் நின்ற தாள் – பிறவி நோயிற் பட்டு வெதும்பி வருவார்கட்குக் குளிர்மை தருதலின் தண்மை நிலை பெற்ற திருவடி.

தலைக்காவல் முன்வைத்து – பயிர்நட்டவன், வேலியுங்கட்டிக் காவலும் அமைப்பதுபோல, ஆன்மாக்களின் மலவாதனை நீக்க விளைக்கிடாக உடம்பொடு கூட்டிய முதல்வன் வேதாகமங்களாகிய வேலியையும் கட்டி, பஞ்சேந்திரியக் காலைகள் புலன்களைப் பற்றி மேயாதவாறு திருவருளாகிய காவலையும் அநாதியே அமைத்து.

உள் நின்று உருக்கி – இறைவன் செய்த உபகாரத்தை உணர்கின்ற உயிர்களின் உயிருக்கு உயிராகத் தானிருத்தலைக் காட்டி, வெளிப்பட்டு நின்று, கனிவித்து.

ஆனந்தக்கண் நின்று காட்டி-ஞானக் கண்ணுள் மணியாக, மணியாடு பாவையாக நின்று காட்டும் உபகாரத்தையும் செய்து. " காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்காலே " என்ற அநுபூதித்திருவாக்கையும் உன்னுக.

களிம்பு அறுத்தான் – நிகழ்செம்பிற் களிம்பு போல அநாதியே பற்றிநின்ற ஆணவத்தை வாட்டி, சொக்கத் தங்கமாக உய்யக் கொண்டான் என்பதாம்.

**களிம்பறுத் தான்எங்கள் கண்ணுதல் நந்தி**
**களிம்பறுத் தான்அருட் கண்விழிப் பித்துக்**
**களிம்பணு கார்த கதிரொளி காட்டிப்**
**பளிங்கிற் பவழம் பதித்தான் பதியே. 114**

இம் — எனின், களிம்பறுத்த உபாயம் இது என உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : எங்கள் சிவபெருமானாகிய குருநாதன் ஆணவமலத்தைப் போக்கி யாட்கொண்டான். அஃது எப்படியோ எனில், ஞானக்கண் விழிக்கச் செய்து ஆணவத்தை அகற்றினான்; அம்மட்டோ! மேலும் ஆணவ இருள் அடியேனை அணுகாத வண்ணம் ஞானவொளியினைக் காண்பித்து தூய்மையான வெண்பளிங்கில் செம்பவளத்தைப் பதிய வைத்தான் என்றவாறு.

கண்ணுதல் நந்தி — இருபெயரொட்டு; ஆசாரியனும் சிவனும் ஒருவரே என்பார் இங்ஙனம் கூறினார். அருட்கண் விழிப்பித்து — திருவருட்பதிவால் விளைவதாகிய ஞானக்கண்ணைத் திறக்கச்செய்து. ஞானம் பெற்றார்க்கு மலவிருள் மறையாது அகலுமாதலின் 'விழிப்பித்து அறுத்தான்' என்றார். அகன்ற களிம்பு நாட்பட நாட்படச் செம்பினிடமாக வெளிப்படுதல் போல ஆணவமலமும், சிவபூசையும், சிவனடியார் வழிபாடும், சிவாலயதரிசனமும், ஸ்ரீ பஞ்சாட்சர ஜபமும் இல்லாதார்க்கு வாசனை வழியே மீளவும் வந்து தாக்குமாதலின் அங்ஙனம் தாக்காதவண்ணம் தனது அநந்தங் கதிர்களில் ஏகதேசமான ஒளியை உதவினான் சிவன் என்பதாம். மேலும் வெண்மைப் பளிங்கில் செம்பவளத்தைப் பதித்துவைத்தாற்போல் மலமற்ற தூய்மையான மனத்தில் திருவருட் சத்தியாகிய செம்பவளத்தைப் பதித்துவைத்தான் என்பதாம். திருவருட்சத்தி செம்மைநிறம் என்பதைச் சிதம்பரத் திரையைக் கொண்டும் தெளியலாம்.

பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போல்பசு பாசம் அநாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கில்பசு பாசம் நிலாவே. 115

இம் - எனின், முப்பொருள் உண்மையையும் அவற்றின் இயல்பையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: பதி பசு பாசம் என்று சொல்லப்பெற்ற மூன்றனுள் பதிப்பொருளைப் போலவே பாசமும் பசுவும் அநாதி நித்தியப் பொருள்கள். பசுக்களும் பாசமும் பதியைச் சென்றணுகமாட்டாவாம். பதி பசுவை யணுகில் பாசம் பசுவைப்பற்றி நில்லாது விலகும் என்றவாறு.

பதியினைப்போற் பசு பாசம் அநாதி - பதி அநாதி நித்தியப்பொருள் என்பது எல்லாப் பிரமாணங்களாலும் தாமே போந்த தொன்றாத லானும், அதிற் சிறிதும் ஆய்வு வேண்டாமை யானும் பதியைப்போல் என உவம வாசகத்தால் நித்யத்வம் தோன்ற வைத்தார். பசு நித்யம் என்பதை, **अनादित्वं पशुत्वंच प्रोच्य शिव शासने** என்னும் காரணாகம ஞானபாத பசுபடல வாக்கியங் கொண்டும் அறியலாம். பசு என்பது பாசத்தாற் பந்திக்கப்பட்டமையால் விளையும் பெயராதலின் பசு உள்ளபோதே பாசவுண்மையும் தாமே போதரும்; ஆதலின் அதுவும் நித்தியப் பொருளே யாகும்.

பசு பாசம் பதியினைச் சென்றணுகா - பசு உணர்த்த உணரும் சித்து. ஆதலின் ஒருவன் உணர்த்

தச்சென்று சிவத்தை அணுகுமேயன்றித் தாமே அணுகாது. பாசமோ என்றும் அசித்து. சித்தைச் சாரந்தன்றிப் புடைபெயராது. ஆதலின் பசு பாசம் அணுகா என்றருளியது.

முற்றுமுணர்ந்த பதி கைம்மாறில்லாத கருணையால் இவ்வான்மாக்கள் இங்ஙனம் மலத்துள் அழுந்திக் கிடந்து மயங்குகின்றனவே என்று இரங்கித் தாமே உணர்த்த உணருஞ் சித்தாகிய பசுவைச் சென்றணுக, சடமாகிய பாசம், விளக்குப் புக இருள் மாய்ந்தாங்கு மறைதல்போலக் கழலும் ஆதலின் 'பதியணுகிற் பசு பாசம் நில்லா' என்றருளிச் செய்யப்பெற்றது.

வேயின் எழுங்கனல் போலேஇம் மெய்யெனும்
கோயி லிருந்து குடிகொண்ட கோன்நந்தி
தாயினும் மும்மலம் மாற்றித் தயாஎன்னும்
தோயம தாய்எழும் சூரிய னாமே. 116

இம் - எனின், சிவம் உடலிடங் கொண்டிருக்கும் உண்மையை உவமைமுகத்தாற் சாதித்து. அவன் வெளிப்பட்டருளும் இயல்பையும் விளக்குதல் நுதலிற்று.

இ - ள் : மூங்கிலினுள்ளிருந்து, உராயவெளிப் படும் நெருப்புப்போல, இவ்வுடல் என்ற கோயிலுள் குடியிருக்கின்ற தலைவனாகிய நந்தியானவர், தாயினும் சாலப்பரிந்து, மும்மலங்களாகிய நோயைப்போக்கி, கருணைக் கடலினின்றும் உதிக்கின்ற சூரியன் ஆம் என்றவாறு.

நந்தி மாற்றி எழும் சூரியன் ஆம் எனக் கூட்டுக,

வேயின் எழுங்கனல்போல - மூங்கிலுள் மறைந்துள்ள நெருப்பு மூங்கில் ஒன்றோடொன்று உராய்கின்றகாலத்து வெளிப்படுதல்போல, சிவமும் உடலிலே குடிகொண்டுள்ளான்; முறுகக் கடைய முன் நிற்பன் என்பதாம்.

தாயினும் மும்மலம் மாற்றி என்பது ஆன்மாக்களுக்குள்ளது மும்மலப்பிணி. ஒருதாய், குழந்தை வாத பித்த சிலேட்டுமங்களால் அலைதிப்படுகின்ற காலத்து அக்குழந்தை யுண்ணும் மருந்தைத் தான் உண்டும், குழந்தை வருந்தத் தான்வருந்தியும் தொடக் குண்ணுதல்போலத் தொடக்குண்ணுது. நோயை மட்டும் மாற்றிக் காத்தலின் தாயினும் என் உறழ் பொருளமைய ஓதப்பெற்றமை காண்க.

தயா என்னும் தோயமதுஆய் - கருணையென்னுங் கடலுள்ளதாய் என்று கருணையைக் கடலாக உருவகித்தவாறு. தோயம் – நீர், ஆகுபெயராகக் கடலையுணர்த்திற்று.

சூரிய காந்தமும் சூழ்பஞ்சும் போலவே
சூரிய காந்தம் சூழ்பஞ்சைச் சுட்டிடா
சூரியன் சந்நிதி யிற்சுடு மாறுபோல்
ஆரியன் தோற்றமுன் அற்றம லங்களே. 117

இ-ள்: இறைவன் சந்நிதியில் மலம் நீங்கியதை உவமைகாட்டி விளக்குதல் நுதலிற்று.

இ - ள் : சூரியகாந்தமும் அதனைச் சுற்றியுள்ள பஞ்சும்போல உயிரும், உயிரை மறைத்துள்ள மலங்களும். சூரியகாந்தம் சூழ்ந்துள்ள பஞ்சைச் சுடாது; சூரியன் சந்நிதியில் சுடும். அதுபோலவே எனது நந்தி குருநாதன் தோற்ற, மலங்கள் வலியொடுங்கின என்றவாறு.

சூரியகாந்தம் - சூரியன் கதிர்பட்டவுடன் நெருப்பு உண்டாக்கும் ஒருவகைக் கண்ணுடிக்கல். அதன் கீழ்ப் பஞ்சைவைத்துச் சூரிய காந்தக்கல்லின் வழியாகச் சூரியன் கதிர்விழச்செய்யின் பஞ்சு தீப்பற்றி எரியும். சூரியகாந்தக் கல்லுக்குத் தீ வெளிப்படுக்குந் தன்மை இயல்பு எனினும், பஞ்சு எளிதில் தீப்பற்றக் கூடியது எனினும் இவையிரண்டும் தம்முள் மிக அணுக்கத்திருப்பினும் சூரியகாந்தம் பஞ்சை எரிக்காது; சூரியன் சந்நிதியில் தான் எரிக்கும். அதுபோல ஆன்மாவும் ஆணவம் முதலிய மலங்களும் தொடர்புடைய வாயினும் ஆன்மா தானே மலங்களை நீக்கிக் கொள்ளாது. சிவகருணை வேண்டும் என்பதாம்; சிவகருணையே ஆசிரியன்வழி அடையப்படுவது.

இம்மந்திரத்தால் ஆன்மா, குருவருள் பெற்று மலப் நீக்கி வீடுபெறற்கும். மலத்தில் அழுந்தி அறிவிச்சை செயல்கள் மழுங்கிக் கிடத்தற்கும் உரியன்; குருவாகிய சூரியன், அருளாகிய கதிரை ஆன்மாவாகிய சூரிய காந்தக்கல்லின்வழிச் செலுத்த, மலங்களாகிய பஞ்சு சுட்டெரிக்கப்படும் என்பது உணர்த்தப்பெற்றமை காண்க.

சூரியகாந்தமும் சூழ்பஞ்சும் போலவே என்று உவமைக்கு ஏற்ற பொருள் வருவித்து உரைக்கப்

பட்டன. ஆரியன் தோற்ற முன் அற்ற மலங்களே என்பதால் சூரியன் சந்நிதியிற் சூரிய காந்தக்கல் தீ வெளிப்படுத்துங் காலங்கூடமிகை. சூரியன்தோன்ற இருள் மாய்ந்தாற்போல ஆரியன் தோன்ற மலங்கள் அற்றன என்ற விரைவுதோன்ற நிற்றல் காண்க.

மலங்களைந் தாமென மாற்றி அருளித்
தலங்களைந் தானற் சதாசிவ மான
புலங்களைந் தானப் பொதுவினுள் நந்தி
நலங்களைந் தானுள் நயந்தான் அறிந்தே. 118

இ-ம் - எனின், முற்கூறிய மலங்கள் இத்துணைய என்பதும், அவற்றைக் களைந்து இறைவன் செய்த உபகாரம் இவை என்பதும் உணர்த்துதல், நுதலிற்று.

இ-ள் : சதாசிவத்தை முதலாகக்கொண்டு, சிவசாதாக்கிய முதலான ஐந்துதலங்களின் அதிபதி யானவரும், இந்திரியங்கள் தத்தம் புலன்களிற் சென்று பற்றுதவாறு களைந்தவரும், அந்தச் சிதா காசப் பெருமன்றுள் எழுந்தருளி யிருப்பவருமாகிய எமது குருநாதன், மலங்கள் ஐந்தையும் நீரைப் போலக் கழுவி, விருப்பற்ற பரிபாகியான ஆன்மா வின் உள்ளத்தை அறிந்து விரும்பியாட்கொண்டான் என்றவாறு.

சதாசிவமான தலங்கள் ஐந்தான் புலங் களைந்தான் அப்பொதுவினுள் நந்தி மலங்கள் ஐந்து ஆம் என மாற்றியருளி, நலங்களைந்தான் உள் அறிந்து நயந்தான் எனப் பிரித்தியைத்துப் பொருள் காண்க.

தலங்கள் ஐந்து - சிவசாதாக்யம், அமூர்த்தி சாதாக்யம், மூர்த்திசாதாக்யம், கர்த்திருசாதாக்யம், கருமசாதாக்யம் என்ற ஐந்து நிலைகளுமாம். இவற் றிற்குமுறையே சதாசிவன், ஈசன், பிரமன், ஈச்சுரன் ஈசானன் என்ற ஐவரும் அதிபர்கள் ஆவார்கள். இதனை உணர்த்தவே திருமூலதேவநாயனார் நல் சதாசிவமான தலங்கள் ஐந்தான் என்றருளிச் செய் தார். நல்ல சதாசிவ முதலான ஐவரையும் அதி பராகக் கொண்ட ஐந்து தலங்களையுடையவர் என்பது பொருளாம்.

புலம் களைந்தான் - பரிபாகமுற்ற ஆன்மாக் களுக்கு விஷயசுகம் பற்றுதே களைந்தவன். சிதா காசம் ஆகிய மன்று அநாதி நித்யமாதலின் 'அப் பொது' என நெஞ்சறி சேய்மைச் சுட்டேற்று வந்தது.

மலங்கள் ஐந்து - ஆணவம், கன்மம் மாயை, திரோதாயி, மாயேயம் என்பன. அழுக்கை நீராற் கழுவுதல் போல, மலங்களை அருள்நீராற் கழுவி மாற்றி. மாற்றுதலாவது ஆணவத்தை மீட்டும் அங்குரிக் காதவாறு வலியொடுக்கியும், கன்மத்தை உயிர்களைப் பற்றுதவண்ணம் தடுக்கத்தக்கவை யாகிய ஆகாமிய சஞ்சிதங்களை அருளால் தடுத்தும், பிராரத்தத்தை யூட்டிக் கழித்தும், மாயையை, மயக்காத வண்ணம் கெடுத்தும், திரோதாயியை, கன்மவொப்பில் அறக்கருணை கொண்டு சிவனை என்றும் தெரியும்படிச் செய்தும், ஆன்மாக்களின் அறிவிச்சை செயல்களை ஏகதேசம் விளக்கும் தன்மை யுடைய மாயேயத்தை அழித்தும் ஆட்கொள்ளுதல்.

இவையைந்தும் தடையாகாது அருளாகவே இருக்கச் செய்தல் என்பதை விளக்க 'அருளி' என்றமை காண்க. இம்மலங்களின் இயல்பை சிவப் பிரகாசம், தத்துவப் பிரகாசம், ஞானசாகர வெண்பா முதலியகொண்டு தெளிக.

நலம் களைந்தான் உள் அறிந்து நயந்தான் - பற்று அற்ற பரிபாகியின் உள்ளத்தையறிந்து விரும்பியாட் கொண்டான் என்பதாம். நலம் - இன்பம். நலர் களைந்தான் - இன்பப்பற்றை அறுத் தவன். சுக இச்சை மீட்டும் பிறவிக்கு ஏதுவாகலின் அவற்றையறுத்த உண்மை யடியாருடைய மனமே இறைவன் விரும்பி அமர்தற்குரிய இடமாம் என்பது. அறிந்து என்பது வாசனை பற்ற மீட்டும் பற்றுள்ளம் பிறவாமையைப் பல்லாற்றானும் ஆராய்ந்து; சிறுத்தொண்டரைப் பிள்ளைக்கறி கேட்டும், இயற்பகையாரை இல்லாளைக் கேட்டும், மானக்கஞ்சாறரை மகள்முடி கேட்டும் அறிவித்தமை காண்க.

அறிவைம் புலனுட னேநான்ற தாகி
நெறியறி யாதுற்ற நீராழம் போல
அறிவறி வுள்ளே அழிந்தது போல
குறியறி விப்பான் குருபர னுமே. 119

இம் - எனின். அறிவானும் அறிபொருளும் அற்றிருக்கும் நிலையை உணர்த்துபவனே குருபரன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: அறிவு ஐந்து புலன்களோடும் அழிந்து, ஒருவன் வழியறியாமல் நீராழத்தில் அகப்பட்டுக்

கொண்டதைப்போல, அறிவு அறிவினுள் மறைந்த தைப்போல இருப்பதொரு குறிப்பை உணர்த்து பவனே குருபரன் என்றவாறு.

நீர்ாழம்போல் அறிவிப்பான், அழிந்ததுபோல அறிவிப்பான் எனத் தனித்தனிக் கூட்டுக.

அறிவு ஐம்புலன் உடனே நான்றதாகி - பொறிகள் வாயிலாகப் புலன்களைச் சென்று பற்றி ஆன்மாவிற்கு உணர்த்துவதாகிய அறிவு புலன் களோடு கெட. என்றது அறிவு புறப்பற்றைவிட என்றவாறு. நான்றது - அழிந்தது. நான்று கொண்டான் என்பது தொங்கியழிந்தான் எனப் பொருள்படுதல் போலக் கொள்க.

நெறி அறியாது உற்ற நீராழம்போல - வழி தெரியாமல் அடைந்த நீராழத்தைப்போல, என்றது நீராழம், வந்தவனை அமிழ்த்தி மறைத்தல்போல என்பதாம். வழியறிந்து வருபவன் தான்தப்பும் உபாயம் தெரிந்து அழுந்தான் ஆதலின் வழியறி யாதுற்ற நீராழம் ஒப்பாயிற்று; ஒருவன் உற்ற என எழுவாய் வருவித்து முடிக்க.

அறிவு அறிவுள்ளே யழிந்ததுபோல - நீரும் நீரும் சேர்ந்தாற்போல அறிவு அறிவினுள் மறைந்ததுபோல: குறியறிவிப்பவனே குருபரன் என்பதாம். இங்ஙனம் ஈருவமை கொடுத்தது எற்றுக்கு எனின், நீராழம் உள்ளே அகப்பட்ட பொருளை அடக்கித் தான் வியாபகமாய், அகப் பட்டதை வியாப்பியமாய் இரு பொருளாய் வைத்

திருக்கும் தன்மைபோல, குருபரன், திருவருளுப தேசமாய வெள்ளத்தில் சீடன் வியாப்பியமாக ஆழ்ந்துஇருக்கச் செய்தலும், அங்ஙனம் ஆழ்ந்த நிலையில் அநுபவமிக. யாற்றுநீர் கடல்நீரிற் கலந்தது போல ஆன்மாவின் உணர்த்த உணரும் சிற்றறிவு இயற்கையே யுணரும் பேரறிவில் கலந்து ஒன்றாய் ஞாதாஞேயம் என்ற இருவகையான ஞானமுமின்றி மறைய இருக்கும் பெருநிலையை அறிவிப்பவனே குருபரன் என்பது உணர்த்துதற் கென்க. இதற்கு இங்ஙனமன்றி வேறுகூறிக் கருத்து விளக்கமின்றி யிடர்ப்படுவாரும் உளர் என்க.

ஆமேவு பால்நீர் பிறிக்கின்ற அன்னம்போல்
தாமே தனிமன்றில் தன்னம் தனிநித்தம்
தீமேவு பல்கர ணங்களுள் உற்றன
தாமேழ் பிறப்பெரி சார்ந்தவித் தாமே. 120

இம் - னின், பிறவியறுத்தற்கு உரிய உபாயம் நிருத்த தரிசனம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஒப்பற்ற சிற்சபையில் நின்று பரசிவம் இயற்றுகின்ற ஒப்பற்ற நிருத்தமானது பசுவின் பாலில் பாலையும் நீரையும் பிரிக்கின்ற அன்னம் போல் ஆகும்; இக்கூத்தைக் காணின் தீமை பொருந்திய பல செயல்களுட்பட்டு வருவனவாகிய ஏழுபிறப்பும் தீயிற்பட்டு வறுக்கப்பட்ட விதை போலாகும் என்றவாறு.

தனிமன்றில் தன்னந்தனி நித்தம் தாமே ஆமேவு பால் பிறிக்கின்ற அன்னம்போல் (ஆகும்)

தீமேவு பல்கரணங்களுள் உற்றன ஏழ்பிறப்பு எரி சார்ந்த வித்தாம் எனக் கூட்டுக.

ஆமேவு பால் - பசுவினிடமிருந்து பெற்ற பால், நித்தம் - நிருத்தம். அருத்தம் அத்தமென்புழிப் போல விகாரப்பட்டது, நித்தம் அன்னம்போலாம் என்றது நிருத்ததரிசனம் ஆன்மாவினுடைய பாவங்களைக் கெடுத்துப் பதிபுண்ணியத்தையே மிகுவிக்கும் என்பதாம். ஆதலாலேயே, தீமை காரணமாகவரும் ஏழ் பிறப்பும் வறுத்த வித்தாயின என்பது உணரத்தக்கது.

உற்றன ஏழ்பிறப்பு-உற்றனவாகிய ஏழ்பிறப்பு என விரிக்க.

தீமேவு பல்கரணங்கள் - தீமையுட்பட்ட பல வாகிய செயல்கள். தீயசெயலுட்பட்ட அந்தக் கரணங்களுமாம். பிறவி, நெறிதவறிச்சென்ற கரணங்க ளீட்டிய கன்மங்களின்வழி வருவதாகலின் கரணங்களுள் உற்றன ஏழ்பிறப்பு என அருளினர். தாம் அசை, எரிசார்ந்த வித்தாதலாவது மீண்டும் அங்குரியாது கெடுதல்.

வித்தைக் கெடுத்து வியாக்கிரத் தேமிகச்
சுத்தத் துரியம் பிறந்து துடக்கற
ஒத்துப் புலனுயிர் ஒன்றும் உடம்பொடு
செத்திட் டிருப்பர் சிவயோகி யார்களே. 121

இ-ள் - எனின், சிவயோகியரது இயல்பு இது என்றல் நுதலிற்று.

இ - ள் : முன்மந்திரத்தில் கூறியவாறு. பிறவி மூலமாகிய கன்மத்தை அழித்து, உச்சியாகிய சகச் சிராரத்திற் சுத்தத்துரிய நிலைபிறந்து, பற்றற்று, உணர்வும்உயிரும் ஒன்றி,உடம்போடு கூடியிருந்தும் செத்தவர்களே சிவயோகியர்கள் என்றவாறு.

வித்தைக்கெடுத்து-வித்தென்றது பிறவிக்கேது வாகிய வினைகளை. அதனைக்கெடுத்தலாவது இந்த ஆன்மாவைச் சாராதவாறு அருளால் தடுத்தல்.

வியாக்கிரத்தே மிகச்சுத்தத்துரியம் பிறந்து- ஆஞ்ஞைத் தலத்திலே நின்மலத்துரிய நிலை உண்டாகி

உடம்பொடு செத்திட்டிருப்பர் - வினைப்போகத் திற்காகக் கொடுத்த உடம்பிருந்தும் செத்தவர் களைப்போல் பிரபஞ்சவாதனை பற்றாது நிற்பர் என்பதாம்.

சிவயோக மாவது சித்தசித் தென்று
தவயோகத் துள்புக்குத் தன்னொளி தானாய்
அவயோகம் சாரா தவன்பதி போக
நவயோக நந்தி நமக்களித் தானே. 122

இம் — எனின், சிவயோகமாவது இத்தன்மைத்து என்றலும், இறைவன் நமக்களித்த இனியசாதனம் என்பதும் உணர்த்துதல் நுதலிற்று

இ - ள் : சிவயோகமாவது சித்துப்பொருள்கள் இவை, சடப்பொருள்கள் இவை என்று விவேகித்து அறிந்து, இயம நியமாதி தவத்தால் இயற்கையான

சித்துப்பொருளோடு, உணர்த்த உணருஞ்சித்தாகிய ஆன்மா சென்று கூடுதலாகிய யோகத்தின் வாயிலாகச் சிவமாகிய ஒளியோடு கலத்திருப்பதேயாம். இத்தகையதொரு புதிய சிவ ராசயோகத்தை, நமதாசாரியனாகிய திருநந்திதேவர் நாம் வீணான நெறிகளிலே சென்று பொருந்தாது சிவ பெருமானுடைய திருவடிக்கரையைச் சேர நமக்கு அளித்தான் என்றவாறு.

ஹடயோகம், சிவயோகமாகிய யோக வகைகளுள் சிவயோகம் பிருதிவிமுதல் சிவதத்வம் ஈறான முப்பத்தாறு தத்துவங்களையும், இவை சடப் பொருள்கள் எனக்கண்டு, இங்ஙனம் காணுகின்ற தன்னைக் காட்டுகின்ற சித்துப் பொருளாகிய சிவத்தோடு என்றும் பிறிவறச் சேர்த்துத் தியானிக்க இமய நியமாதிகளை மேற்கொண்டு, பிறப்பற்ற நிலையில் இருக்க எங்கும் சிவஒளி பரக்கத் தான் அப்பேரொளியில் லயித்த சிற்றொளியாய் இருத்தலேயாம் என்பது விளக்கியவாறு. அவயோகம் என்றது முற்கூறிய நிலையை எய்துவியாத சித்திகளைத் தந்து பொன் விலங்கு பூட்டும் யோகங்களை.

**அளித்தான் உலகெங்கும் தானான உண்மை**
**அளித்தான் அமரர் அறியா உலகம்**
**அளித்தான் திருமன்றுள் ஆடுந் திருத்தாள்**
**அளித்தான் பேரின்பத் தருள்வெளி தானே. 123**

இ-ள்: – எனின், அங்ஙனம் சிவயோகவாயிலாக எமது குருநாதன் எமக்களித்த பேறுகள் இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : உலகமெல்லாம் சிவமாகவேயிருக்கின்ற உண்மையை உணர்த்தியருளினான். தேவர்களும் அறியமுடியாத இன்ப உலகை எமக்கு வழங்கினான். பொற்சபையில் திருநடம் புரிகின்ற திருவடியை எமக்குப் புகலிடம் இதுவேயெனச் சுட்டியும் காட்டியும் வழங்கினான். சித்கருணை வடிவான ஞானாகாசமாகிற பேரின்பவீட்டை எமக்கு வழங்கினான் என்றவாறு.

எங்குந்தானான உண்மை – விசுவரூபியா யிருக்கை, பசுபுண்ணியங்கள் பல செய்து அமரர் பதம் அடைந்த சகலான்மாக்களால் அறிய முடியாத பெருநிலை சிவஞான மாதலின் அதனை அளித்தான். பஞ்சகிருத்தியங்களையும் ஒருசேர நிகழ்த்தி எல்லாம் திருவடியிலே ஒடுங்கும்நிலையினை உணர்த்தும் சிகுஞ்சித பாதத்தைச் சேரிடமறிந்துசேர் என எமக்கறிவித்து அளித்தான். அங்ஙனம் அடியடைந் தார் என்றும் இன்பம் பெருகுமியல்பினால், ஒன்று காதலித்து உள்ளமும் ஓங்கிட இருப்பராதலின் பேரின்பத்து அருள்வெளி யளித்தான் என்று இங்ஙனம் எல்லாம் அருளிச்செய்தமை உணர்த்திய வாறு காண்க.

வெளியில் வெளிபோய் விரவிய வாறும்
அளியில் அளிபோய் அடங்கிய வாறும்
ஒளியில் ஒளிபோய் ஒடுங்கிய வாறும்
தெளியும் அவரே சிவசித்தர் தாமே. 124

இ - ன்னின், அங்ஙனம் கூறிய சிவயோகவழி நின்று சித்திபெற்றார்து இயல்பு இதுவென உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : வானும் நெருப்பும் நீரும் தம்முள் தாம் ஒடுங்கிய திறத்தை உணர்பவர்களே சிவசித்தர்கள் என்றவாறு.

வெளியில் – ஆகாசவடிவினராகிய சிவத்திடத்தில், "எவர் பராசத்தியைத் தேவியாக உடையவரோ அவர் ஆகாயம்; எவருடைய சத்தி ஆகாயம் எனப் பெயர் உடையதாக விளங்குகிறதோ அவரும் ஆகாயம்" என்று உபபிருங்கணங்களும்; "ஆகாசத்திலிருந்து எல்லாப் பொருள்களும் உண்டாகின்றன; முடியும் போதும் ஆகாசத்திலே முடிகின்றன; ஆகாசமே பெரியது; ஆகாசமே முடிவான உறைவிடம்" என்று சாந்தோக்கியமும் கூறுதலின் ஆகாசம் என்பது சிவத்தினையுணர்த்தும்; ஆதலின், சிவத்திடத்தில் என்பது பொருளாம். வெளி – 'யோகிகளின் நித்தியத் தானமாகிய வியோமம்' என்று சுருதிகள் கூறுகின்றன; ஆகவே வெளியில் வெளிபோய் விரவுதலாவது பரம வியோமத்தில் வியோமம் கலத்தல் என்பது பொருள்.

ஒளியில் ஒளிபோய் ஒடுங்கியவாறும் – சிவசூரியனது ஞான இச்சாக்கிரியா சத்தியாகிற ஒளியில் ஆன்மாவின் ஞான இச்சாக்கிரியா சத்திகளாகிற ஒளிகள் சென்று ஒடுங்கியவாறும் என்பது; எங்ஙனம் எனின், ஆன்மாவின் சத்திகள் தொழிற்படுவது சிவசூரியனின் சத்திகளாலாதலின் ஒடுங்கும் போதும் [illegible] தான் [illegible] றியதில் சென்றொடுங்குதல் [illegible]பார்தல் காண்க. [illegible]

அளியில் அளிபோய் அடங்கியவாறும் - அருளில் அன்பு சென்று ஒடுங்கியவாறும் என்பது, இறைவன் கருணை எல்லையற்றது. எல்லாவற்றையும் ஒப்ப வியாபித்திருப்பது. அன்பு உயிர்க்குணமாக அருளின் குழந்தையாக ஆன்மாவினிடம் அமர்ந்திருப்பது. அது முறுகி வளர்ந்து முதல்வனைப் பற்றிநின்று பரம காரணனுடைய திருவருளில் ஒடுங்குகின்றது. அருளைவிட அதற்கு லயத்தானம் வேறின்றாதலின், இங்ஙனம் எம்மிடம் காணப்படும் சத்தியாகிய ஒளியும். வெளியும், அளியும் எல்லாம் அவனிடமே ஒடுங்குகின்றன என்று அநுபவத்தான் அறிபவரே சிவசித்தர் அங்ஙனமின்றி அணிமாதிகளின் மட்டும் நிற்பார் அவசித்தர் எனத் தெளிக.

இச்செய்யுட்கு இறைவனுக்குரிய பெருவெளி, பெருநீதி, பேரறிவு இவற்றில் மனத்தின் இம்முத் தன்மைகளும் சென்று அடங்கின என்று மரபுவழி வாரா உரைகூறுவாருமுளர். அளி முதலியவற்றிற்கு நீதி முதலிய பொருள்கள் அவர்கள் கருத்தாக அமைந்தனவன்றித் தொன்மையவல்ல என்றுணர்க.

**சித்தர் சிவலோகம் இங்கே தெரிசித்தோர்**
**சத்தமும் சத்த முடிவும்தம் முள்கொண்டோர்**
**நித்தர் நிமலர் நிராமயர் நீள்பர**
**மூத்தர்தம் முத்தி முதல்முப்பத் தாறே. 125**

**இம் - எனின், இதுவுமது**

**இ - ள் : சித்தர்கள் இங்கேயே சிவலோகத்தைக் கண்டவர்கள்; நாதத்தையும் நாதாந்தத்தையும் தம்முட் கொண்டவர்கள்; அழியாதவர்கள்; மல**

மற்றவர்கள்; உருவற்றவர்கள்: மிக உயர்ந்த பரமுத்தியை அடைவார்கள்; அவர்கள் அடையும் முத்திக்கு முதலாகிய கருவி முப்பத்தாறு தத்துவங்களாம் என்றவாறு.

சிவலோகம் இங்கே தெரிசித்தோர் என்றது எடுத்த தேகத்தைப் பற்றியிருக்கும் இருவினைகளும் தம்மை வருத்தாவாறு என்றும் சிவனடிக்கீழ் ஒன்றி நிற்கின்ற நிலையில் கரும்பைத் தேனைப் பாலை ஒத்துச் சீவன் முத்தனாக இங்கே இருத்தலின் கூறிய தாம்.

சத்தம் – நாதம். சத்தமுடிவு – நாதாந்தம். நாதம் என்றது. சர்வான்மாக்களுக்கும் அறிவை எழுப்புவித்து நிற்கின்ற ஞானம். இந்தநாத தத்துவத்தை மனத்தத்துவத்தாலே தியானித்துக் காணும் முறைமையுடையவர்கள் (சிவப்பிரகாசம் – 21 – ஞானாமிர்தம் – அகவல் 71 – உரை) இவர்கள் சித்தர்கள் ஆவார்கள் என்பது. இவர்க்கு என்றும் அழிவில்லை யாதலின் நித்தர் என்றும், மலம் கெட்டொழிதலின் நிமலர் என்றும், ஒன்றிலும் பற்றுத உள்ளத்தான் நிராமயர் என்றும், அவர்கள் அடையவிருக்கும் பெருநிலை பரமுத்தியாதலின் நீள்பரர் என்றும் கூறியருளினார் திருமூலநாதர்.

முத்திமுதல் முப்பத்தாறே – முத்திக்கு முதலாகப் பிரளயகாலம் வரை உடனிற்கும் உள் நிலைக் கருவிகளாகிய முப்பத்தாறுமாம். அவை ஆன்மதத்துவம் இருபத்து நான்கும். வித்தியா தத்துவம் ஏழும் சிவதத்துவம் ஐந்தும் ஆக முப்பத்தாறுமாம்.

முப்பதும் ஆறும் படிமுத்தி ஏணியாய்
ஒப்பிலா ஆனந்தத் துள்ளொளி புக்குச்
செப்ப அரிய சிவங்கண்டு தான்தெளிந்து
அப்பரி சாக அமர்ந்திருந் தாரே. 126

இ-ம் — எனின், தத்துவங்களைக் கடந்து தத்துவாதீதப் பொருளைச்சார்ந்து அதுவாக இருத்தலை அறிவித்தல் நுதலிற்று.

இ-ள்: முப்பத்தாறு தத்துவங்களையும் முத்தி மாளிகையின் ஏணிப்படியாகக்கொண்டு ஏறி, ஒப்பு அற்ற சிவானந்தமாகிய ஒளியுட்கலந்து, சொல்லுதற்கரிய சிவத்தைத் தரிசித்துத் தெளிந்து சிவமேயாக இருந்தார் என்றவாறு.

முப்பதும் ஆறும் படிமுத்தி ஏணியாய் என்றது பிருதுவி தத்துவமுதல் சிவதத்துவம் ஈறுகச் சொல்லப்பட்ட பிரபஞ்சத்தை ஒவ்வொன்றுக அறிந்து, அசத்தென்று கண்டு கழித்தால், சத்தாகிய சிவம் தோன்றும். இதனைச் சேக்கிழார் சுவாமிகள்,

" நாணனும் அன்பும் முன்பு நளிர்வரை ஏறத் தாமும்
பேணுதத் துவங்க ளென்னும் பெருகுசோ பானம் ஏறி
ஆணையாம் சிவத்தைச் சார அணைபவர் போல ஐயர்
நீணிலை மலையை ஏறி நேர்படச் செல்லும் போதில் "

எனக் கண்ணப்ப நாயனுர் புராணத்து அருளுமாற்ருன் தத்துவங்களைப் படியாகக் கொண்டு

கண்டு கழித்து. ஒப்பிலா ஆனந்தத்து உள்ளொளி யாகிய சிவத்தைக் காணுதல் அருளப்பட்டமை காண்க.

ஒப்பிலா ஆனந்தத்து உள்ளொளிபுக்குஎன்றது "உள்ளொளி பெருக்கி உலப்பிலா ஆனந்தமாய தேனினைச் சொரிந்து" என்பதை நினைவூட்டுகிறது.

தான் தெளிந்து என்றது ஆன்மாவும் சிவமும் வேறு என்னும் இரண்டான நிலையை விடுத்து அப் பரிசாக அத்துவித பாவனையில் தெளிந்து என்ற வாறு.

இருந்தார் சிவமாகி எங்குந்தா மாகி
இருந்தார் சிவன்செயல் யாவையும் நோக்கி
இருந்தார் முக்காலத் தியல்பைக் குறித்தங்கு
இருந்தார் இழவுவந் தெய்திய சோம்பே. 127

இம் - எனின், சித்தர்கள் சிவமாகிச் செயலாற்றி யிருக்கும் நிலையை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: சிவசித்தர்கள் சிவமாகியும், எங்குந் தாமாகியும் சிவன்செயல் அனைத்தையும் தெரி சித்துக்கொண்டு திரிகாலஞானிகளாய், தற்போதம் கழன்ற செயலற்ற நிலையில் இருந்தார்கள் என்ற வாறு.

சிவமாகி இருத்தலாவது. ஒருபொருள் மற் றொரு பொருளாதல்போல ஆன்மா சிவமாகி யிருத் தலன்று; பின் என்னையோவெனின், பண்ணும் ஓசையும் பழமும் சுவையும்போலக் கலந்து நிற்ற லாகிய அவ்வளவே.

எங்கும் தாமாகி என்றது முத்தான்மா மல மறைப்பு நீங்கியவனுகவே எல்லாப் பொருள் களையும் தம்முட் காண்பானுதலின் இங்ஙனம் கூறப் பெற்றது. அன்றிச் சிவம்போல வியாபகமாய் எல்லாவற்றினும் தாமாகி நிற்றல் அன்று என்க.

சிவன் செயல் யாவையும் நோக்கி இருந்தார் என்றது அவன் உள்நின்றுணர்த்த அவன் ஐந் தொழிலையும் தரிசித்து நின்ருர் என்றபடி. நோக்கி என்ற குறிப்பு அத்துவித நிலையிலும் ஆன்மா ஐந்தொழி லாற்றும் வன்மை அற்றது என்பதை விளக்கி நின்றது.

முக்காலத்தில்லைக் குறித்து அங்கு இருந்தார் என்றது அருவமாகிய காலம். சார்த்தி அளத்தலான், இறப்பென்றும் எதிர்வென்றும் நிகழ்வென்றும் அறியப்படும் இயல்பினை ஆராய்ந்து, தாம் ஒன்றினும் சாராதே முக்காலத்தும் நித்தியப் பொருளாகிய சிவத்தைச் சார்ந்து அங்கிருந்தார் என்பதாம்.

இழவு வந்தெய்திய சோம்பிருந்தார் - என் வினையிலிருந்து ஒழிந்திருத்தலாகிய செயலிழத் தலால் வந்து எய்திய தொழிலற்ற நிலையில் இருந்தார் என்றவாறு. அதாவது சிவத்தைச் சார்ந் திருக்கின்ற நிலையில், சார்ந்திருக்கின்ருேம் என்ற உணர்ச்சியும் அற்றுப்போக ஆனந்த வடிவமாக யமர்ந்திருந்தார் என்பதாம்.

சோம்பர் இருப்பது சுத்த வெளியிலே
சோம்பர் கிடப்பது சுத்த வெளியிலே
சோம்பர் உணர்வு சுருதி முடிந்திடஞ்
சோம்பர் கண்டாரச் சுருதிக்கண் தூக்கமே. 128

இ-ம் -- எனின், செயலற்ற சிவயோகியார் இருப்பதும் கிடப்பதும் தூங்குவதும் இங்கு என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பராகாசமாகிய சுத்தவெளியிலேதான் செயலற்றவர்கள் இருப்பதும் கிடப்பதும் செய்வர். அவர்களுடைய உணர்ச்சி வியாபிக்குமிடம் வேதங்களின் முடிந்த இடமாகிய நாதாந்தமாகும். அவர்கள் அந்த வேத முடிபின்கண்ணே சுவாநுபூதியாகிய தூக்கத்தைக் கண்டவர்கள் என்றவாறு.

சுத்தவெளி – ஞானகாசம். சுருதி நாதமாலின், சுருதிமுடிந்த இடம் நாத அந்தமாயிற்று. சுருதி முடிந்த இடமாகிய நாதத்தை முன்னுணர்த்தி மீட்டும் அச்சுருதிக்கண் எனச்சுட்டினும் நாதாந்தமெனவே அதற்குப் பொருள் கொள்க.

உலகியலை ஒட்டிய சோம்பேறிகள் இருப்பதும் கிடப்பதும் வெட்ட வெளியிலே. அவர்கள் உணர்ச்சிகளெல்லாம் வேதம் முடிந்த இடத்தில், அதாவது வேத ஒழுக்கத்தைக் கடந்த இடத்தில் என்பதாம். அவர்கள் அங்குத் தூக்கத்தையும் கண்டார்கள் என்று வேறும் ஒருபொருள் தொனித்தல் காண்க.

தூங்கிக்கண் டார்சிவ லோகமும் தம்உள்ளே
தூங்கிக்கண் டார்சிவ யோகமும் தம்உள்ளே
தூங்கிக்கண் டார்சிவ போகமும் தம்உள்ளே
தூங்கிக்கண் டார்நிலை சொல்வதெவ் வாறே. 129

இம் - எனின், அங்ஙனம் தூங்கிக்கண்டவர்கள் காண்பன இவையென உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அங்ஙனம், உறங்காதே யுறங்கியிருந்து உணர்வு மடங்கிக் கண்டவர்களே சிவலோகத்தையும் சிவயோகத்தையும், சிவபோகத்தையும் கண்டவர்கள். அவர்கள் நிலையை நாம் சொல்வதெப்படி என்றவாறு.

தூங்குதலாவது, சிதாகாசப் பெருவெளியாகிய புருவமத்தியில் சோதியோடொன்றி ஏனையவற்றையெல்லாம் மறந்திருத்தல் எனவும், நிட்டைகூடுதல் எனவும் உரைப்பர். " தேங்கிய ஆனந்தத் தேனூறலுண்டு சிதம்பரத்தே தூங்கியிராய் மனமே பஞ்சபூதத் துவக்கறவே " எனவும், ஓங்காரத்து உள்ளொளிக்குள்ளே உருவங்கண்டு தூங்கார் தொழும்பு செய்தார் என்செய்வார் எமதூதருக்கே " எனவும், " தூங்காமல் தூங்கிச் சுகம்பெறுவது எக்காலம் " எனவும் வரும் மேற்கோள்களான் விழித்தகண் குருடாய் நினைப்பும் மறப்புமற்று ஒன்றியிருத்தல் என்பது பொருளாம். அங்ஙனம் இருப்பவரே சிவலோகம், சிவயோகம், சிவபோகம் எல்லாவற்றையும் தம்முள்ளே காண்பவர். சிவலோகம் காணுதலாவது மலவாதனையற சிவசாமீப்பியத் தியானமுறல். சிவயோகம் காணுத

லாவது சாரூபநிலையில் தியானம் செய்தல். சிவ போகங் காணுதலாவது ஞானத்துளழுந்தி அநந்நிய மாய் அநுபவித்தல்.

எவ்வாறு காண்பான் அறிவு தனக்கெல்லை
அவ்வா றருட்செய்வன் ஆதி பரன்தானும்
ஒவ்வாத மன்றுள் உமைகாண ஆடிடும்
செவ்வானிற் செய்ய செழுஞ்சுடர் மாணிக்கமே. 130

இம் - எனின், சிவயோகியர் எங்ஙனம் தியானிக் கின்றார்களோ அங்ஙனமே வந்து அருள்புரிபவன் இறைவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: தனக்கு ஒருவாற்றானும் பிறிதொன்றும் ஒப்பாகாத சிற்சபையுள் சிவகாமித்தாய் கண்டு மகிழ ஆனந்தக் கூத்தாடும். செவ்வானத்தைக் காட் டிலும் மிகச்சிவந்த ஒளி விடுகின்ற மாணிக்கம் போலும் ஞானமா நடராசப்பெருமானாகிய ஆதிபர மேஸ்வரன், தம்மைக் காண்பவனாகிய சிவயோகியின் அறிவு வரம்பு எவ்வளவோ! எவ்வாறோ! அவ்வளவு அவ்வாறு வந்து அருள் வழங்கும் என்றவாறு.

ஆடிடும், செய்ய மாணிக்கம், ஆதிபரன், காண்பான் அறிவுதனக்கெல்லை எவ்வாறு அவ்வாறு அருள் செய்வன் என முடிக்க.

ஒவ்வாத மன்று - எவ்வாற்றானும் தமக்கு யாதொன்றும் ஒப்பாகாத ஞானசபை ; புருவமத்தி யாகிய சுழிமுனை என்பர் யோகியர். இருதயாகாச மாகிய தகராகாசம் என்பர் ஞானியர்.

உமை காண ஆடிடும்—பஞ்சகிருத்ய பரமானந்தத் தாண்டவத்தைப் பிரமன் மால் முதலியோர் காண்பார்களாயினும் அவர் காட்சி சிருட்டியும் திதியும் முதலிய அவரவர் தொழில் அளவாக, அவர்கள் அறிவினெல்லைக்குத் தகவே அமைவதாக, பஞ்சக்கிருத்தியங்களேயும், பரிபாகமுற்ற ஆன்மாக்கள் அடையவிருக்கிற ஆனந்தத்தையும் ஒருசேர உணர்ந்து உணர்த்துபவள் சிவகாமித் தாயாதலின் உமைகாண ஆடும் என்றருளப்பெற்றது.

செவ்வானிற் செய்ய செழுஞ்சுடர் மாணிக்கம்-செவ்வானின் இயற்கை செம்மையானது; எங்கும் பரந்தது ; எல்லையற்றது ; ஆயினும் மாலையிற் காணப்பட்டு மறைவதாகலின் அதனை விஞ்சிய என்றும் ஒளிவிடுகின்ற சோதியாகிய மாணிக்கம் என்றும் அருளினர். ஆதிபரன் - ஆதிசத்தியாகிய உமாதேவியாரோடு கூடிய பரன், முதற்கடவுள் என்றுமாம்.

காண்பான் அறிவு தனக்கு எல்லை எவ்வாறு அவ்வாறு அருள் செய்வன் - தம்முள்ளே காண்பவனாகிய சிவயோகியின் பரிபாகவிசேடமும், சிவஞான முதிர்ச்சியும் எவ்வாறோ அவ்வாறு எழுந்தருளி அருள் வழங்குவன் என்பதாம்.

**மாணிக்கத் துள்ளே மரகதச் சோதியாய்**
**மாணிக்கத் துள்ளே மரகத மாடமாய்**
**ஆணிப்பொன் மன்றினில் ஆடுந் திருக்கூத்தைப்**
**பேணித் தொழுதென்ன பேறுபெற் றாரே.** 131

இ-ர் - எனின், ஆனந்தக்கூத்தைக்கண்டு தொழு தவர்கள் அடைந்த பேற்றின் பெருமையை வியந்தல் நுதலிற்று.

இ-ள் : செந்நிறமான மாணிக்கத்துள் மரக தத்தின் ஒளியாக, மரகத மாடமாக எழுந்தருளி மாற்றுயர்ந்த பொன்னாற் செய்யப்பெற்ற ஞான சபையில் ஆடுகின்ற ஆனந்தக்கூத்தனை விரும்பித் தொழுது எத்தகையதொரு பேற்றினைப் பெற்றார் கள் சிவயோகியர்கள் என்றவாறு.

மாணிக்கம் – செந்நிற இரத்தினம். உருவகமாகச் சிவத்தையுணர்த்திற்று. மரகதம் – பச்சைநிற இரத்தின மாகிய உமாதேவி. 'மாணிக்கத்துள்ளே மரகதச் சோதியாய்' என்றது, சிவத்துள் சத்தி விளங்குகிற நிலை. "உடையாள் உன்றன் நடு விருக்கும்" என்றதைக் கொண்டு எண்ணுக. மரகதம் என்னாது மரகதச் சோதியாய் என்றதால் ஞானசத்தி மாத்திரையாய் இருக்கும்நிலையை நினைப்பித்தவாறு. அடுத்து 'மரகத மாடமாய்' என்றது சிவம் சத்திதன்னினின்று பிரிந்து உருத் தாங்கி நின்ற நிலையை உணர்த்திற்று.

'மன்றினில் ஆடும் திருக்கூத்தை' என்றது கிரியை மிக்கு உருமேனி தாங்கி ஐந்தொழிலாற்றும் அருளிப் பாட்டையறிவித்தவாறு. திருக்கூத்து என்றது, தொழிலாகுபெயராகக் கூத்தப்பெருமானை உணர்த்திற்று. பேணுதல் மனவணக்கம்; தொழு தல் மெய் வணக்கம்.

என்ன பேறு பெற்றார் - எத்தகையதொரு பேற்றினைப் பெற்றார்கள் என்றவாறு. இவர்கள் அடைந்த பேறு அரிபிரமனாதியரும் அடைய இயலாத ஒன்று என்பதாம்.

பெற்றார் உலகிற் பிரியாப் பெருநேறி
பெற்றார் உலகிற் பிறவாப் பெரும்பயன்
பெற்றார்அம் மன்றிற் பிரியாப் பெரும்பேறு
பெற்றார் உலகுடன் பேசாப் பெருமையே 132

இம் - எனின், அங்ஙனம் பெற்றபேறு இன்ன தன்மைத்தென்பது உணர்த்துதல் நுதலிற்று

இ - ள் : முன் திருமந்திரத்திற் கூறியாங்கு வியக்கத்தக்க நிலையிலே பேறுபெற்றார் இவ்வுலகினின்றும் பிரியாத பெருநெறியைப் பெற்றார்கள்; இவ்வுலகில் மீட்டும் பிறவாமையாகிய பெரும் பயனைப் பெற்றார்கள்; சித்சபையை விட்டுப்பிரியாத பெரும் பேற்றினைப் பெற்றார்கள்: உலகத்துடன் பேசாப் பெருமையைப் பெற்றார்கள் என்றவாறு.

உலகில் பிரியாப் பெருநெறி - ஆனந்தக் கூத்தைத் தொழும்பேறு பெற்றவர்கள் உலகை விட்டுப் பிரியாத பெருநெறியாகிய பல்லாண்டு வாழ்தலைப் பெற்றவர்கள் ஆவார்கள். மரணமில்லையர்தலின் இங்ஙனம் அருளிச்செய்யப்பட்டது.

உலகில் பிறவாப் பெரும்பயன் பெற்றார் - பிறத்தற்கேதுவாகிய வினைகள் கெட்டமையானும், மலவலி குன்றியமையானும், மாயாகாரியமாகிய உலகில் பிறவாமையாகிய பெரும் பயனைப்

பெற்றார்கள். அம்மட்டோ ! ஞானசபையை விட்டுப் பிரியாத பெரும் பேற்றையும் பெற்றார்கள். இப் பேறுதான் " அறவா நீ ஆடும்போது நின்னடியின் கீழிருக்க என்றார் " என்று அம்மையார் வேண்டிப் பெற்ற பேறு. உலகுடன் பேசாப் பெருமையாவது உலகு பித்தாகலின் என்றும் எக்கணமும் சிவத்தோடு ஒன்றி அநுபவிக்கு நிலைமையால் உலகுடன் பேசாத பெருமையைப் பெற்றார் என்றவாறு.

பெருமை சிறுமை அறிந்தெம் பிரான்போல்
அருமை எளிமை அறிந்தறி வாரார்
ஒருமையுள் ஆமைபோல் உள்ளைந் தடக்கி
இருமையுங் கேட்டிருந் தார்புரை அற்றே. 133

இம் - னின், இறைவனது அருமை எளிமைகள் அறிதற்கரியன என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : எம் தலைவனாகிய இறைவனது பெருமைகளையும் சிறுமைகளையும் அறிந்தும் அவருடைய அருமையையும் எளிமையையும் அறிந்தும் ஞானம் கைவரப்பெறாதவர்களாய், ஐந்தடக்கியாகிய ஆமையைப்போல இம்மை மறுமை இன்பங்களையும் அவற்றிற்கு உளதாம் தடையையும் கேட்டுப் பொறிகளையடக்கி உயர்வு அடையாமல் பண்டைய நிலையிலே இருந்தார்கள், என்னே உலகவரின் இயற்கை ! என்றவாறு.

எம்பிரான் பெருமை சிறுமை அறிந்து -ஆன்ம நாதனாகிய சிவபெருமானுடைய பெரியவற்றிற் கெல்லாம் பெரிதாய் இருக்கும் தன்மையினையும் சிறியவற்றிற்கெல்லாம் சிறியனாயிருக்குந் தன்மையினையும் அறிந்து என்றவாறு. பெருமையாவது

உருவாலும் தன்மையாலும் ஆற்றலாலும் உண்டானவை. சிறுமையாவது நுணுகியபொருள் அனைத்தினும் நுண்ணிதா யிருக்கை. அதனை அறிதலாவது அணுவிலும் அண்டத்திலும் சிவம் குறைவறச் செறிந்துள்ள தன்மையை உணர்தல். போல் என்பது ஒப்பில் போலி.

அருமை எளிமை அறிந்து - சகலான்மாக்களில் பரிபாகமற்றவர்கட்கும் அதிகார மலத்தால் அலைதிப் படுகின்ற அமரர்கட்கும் அரியனாய் " காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்காலே " " நுகருமா நுகரே " என்று அவன் இயக்க இயங்குகின்றோம் என்றுணர்ந்து சீவபோதத்தை அடக்கிச் சிவ போதம் விஞ்ச இருக்குமடியார்கட்கு எளியனா யிருத்தலை என்றவாறு.

அருமையாய் இருத்தலை " அரியானை அந்தணர் தம் சிந்தையானை " " நாரணனும் நான்முகனும் காணாத புண்டரிகம் " " திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடி " முதலிய அருணெறித் திருவாக்குகளைக் கொண்டு அறிக. எளிமையா யிருத்தலை, கழுதுகண்ணுறங்கும் பாணர் தூது சென்றதும், சூலைநோயைக் கொடுத்துத் தடுத்தாட் கொண்டதும், வந்திக்கு வேலையாளாய் வந்து அக்கோவால் மொத்துண்டதும், பரிப் பாகனாய் வந்ததும் முதலிய நிகழ்ச்சிகளில் காண்க.

அறிவு ஆரார் - உண்மை ஞானம் நிரம்பப் பெறுதவர்களாய். என்றது சிவனே முழுமுதற் கடவுள் என்று தேறிய சித்தம் இலராய் என்றவாறு.

ஒருமையுள் ஆமைபோல் உள் ஐந்து அடக்கி என்பதை ஆமைபோல் ஒருமையுள் உள்ளைந்தடக்கி என மாற்றிப் பொருள் காண்க. தனக்கு ஊறுவந்த காலத்துத் தலையையும் நான்கு காலையும் ஓட்டினுள் அடக்கிக்கொள்ளும் ஆமைபோல ஐம்பொறிகளையும் தம் விருப்பப்படி புறஞ்செல்லவிடாது ஒருமைப்பாட்டிலேயே அடக்கி. இதற்கு இவ்வாறன்றி எடுத்த இப்பிறவியாகிய ஒரு பிறவியிலேயே ஐந்துறுப்புக்களை அடக்கிக்கொள்ளும் ஆமைபோல் பொறிகளைந்தையும் புறஞ்செல்ல விடாது அடக்கி என்பாருமுளர். "ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கலாற்றின், ஒருவற்கு எழுமையும் ஏமாப்புடைத்து" என்ற திருக்குறட்குப் பரிமேலழகரும் பிறரும் எழுதிய உரைகளும் இக்கருத்தே பற்றியன. ஐந்து என்பது எண்ணுகு பெயராய் ஐம்பொறிகளை உணர்த்திற்று.

இருமையும் கேட்டு – இப்பிறவி எய்திய வாற்றையும் மறுபிறவி வருவாயையும், அறிவன் நூலும் ஆசானுபதேசமுமாகிய இரண்டாலும் கேட்டு.

புரையற்றிருந்தார் – உயர்ச்சி அற்றிருந்தார்கள். என்றது இறைவன் குணங்களாகிய உபாயத்தைப்பெற்றும், இருமை நெறிகளை இனிது கேட்டும், பொறியடக்கி உயரவேண்டியவர்கள் உணர்ச்சியற்றிருந்தார்கள் என்றவாறு.

புரையற்று என்பதற்குப் பொள்ளலற்று என்று உரைகண்டு கேள்வியால் தோட்கப்படாத செவியராயிருந்தார் என்பாரும் உளர்.

புரையற்ற பாலினுள் நெய்கலந் தாற்போல்
திரையற்ற சிந்தைநல் ஆரியன் செப்பும்
உரையற் றுணர்வோர் உடம்பிங் கொழிந்தால்
கரையற்ற சோதி கலந்தசத் தாமே. 134

இ-ம் - எனின், குரு உபதேசங்களைச் சொல்லிறந் துணர்வோர்கள் சோதியிற் கலப்பர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: குற்றமற்ற பாலில் நெய் கலந் திருப்பது போல அலைதலற்ற மனத்தால் நல்ல குரு நாதன் சொல்லியருளிய உபதேசங்களைப் பசுகரணம் நீங்கி உணர்பவர்கள் உடம்பானது இங்கு விழுந்தக் கால் எல்லையற்ற திருவருட்சோதியிற் கலந்த நித்தியப் பொருளாவார்கள் என்றவாறு.

புரை அற்ற பாலினுள் நெய் கலந்தாற்போல் - குற்றமுள்ளபால் திரிந்து நெய்யுங்கெட்டுவிடு மாதலின் நெய் எங்கும் ஒப்பப் பரந்திருக்கின்ற நிலைக்கு ஏற்பப் புரையற்ற பால் என்றார். பாலினுள் நெய்கலந்தாற் போல என்ற பகுதி " பாலிற்படு நெய்போல் மறைய நின்றுளன் " என்றதை நினைக்கச் செய்கின்றது. பாலின் கட்சுவை மணியின் கண் ஒளிபோல இறைவன் எங்குமா யிருக்கின்றான் என்றவாறு.

நல்லாரியன் செப்புமுரை திரையற்ற சிந்தை யற்று உணர்வோர் எனக்கூட்டுக.

தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டலாத வின் ஆரியன் செப்பும் உரை அமைதிக்கு ஏது வாயிற்று என்பதாம்.

திரையற்ற சிந்தையற்றுணர்வோர் - மேலும் மேலும் எழும்பிக் கடலையும் கலங்கச் செய்கின்ற அலைகளைப்போல மனத்தை மயங்கச் செய்கின்ற ஐயந் திரிபுகளாகிய திரைதலற்ற சிந்தையினாலே பசுகரணங் கெட்டு உணர்வோர், உணர்ந்து அனுபவிப்பார்கள்.

உடம்பு இங்கு ஒழிந்தால் - வினைப்போகத்தின் சேடத்திற்காகக் காலம் வருந்துணையும் தாங்கியிருக்கின்ற இந்த உடம்பும் வீழ்ந்தால்.

கரையற்ற சோதி கலந்த சத்து ஆம் - உலப்பிலா ஆனந்தமாய, ஒளி வடிவாகிய சிவத்தோடு கூடிய சத்துப்பொருளாம். உணர்வோர் சத்து ஆம் என முடிக்க. ஆம் என்பது ஆகும் என்னும் செய்யுமென் வினைமுற்று உயிர்மெய் கெட்டு வந்தது. உணர்வோர் ஆம் எனப் பலர்பால் எழுவாய் செய்யுமென் முற்றைக் கொண்டு முடிதல் எவ்வாறெனின், உயிரும் உடலும் ஒன்றிய நிலையில் உணர்வோர் என உயர்திணைப் பலர்பால் வாய்பாட்டால் கூறிய ஆசிரியர், உடம்பு இங்கு ஒழிந்தபோது தனித்து நின்ற உயிரை ஆம் என்னும் செய்யுமென் முற்றோடு முடித்தலே சாலச் சிறப்புடைத்தென்க.

**சத்த முதலைந்தும் தன்வழித் தான்சாரில்**
**சித்துக்குச் சித்தன்றிச் சேர்விடம் வேறுண்டோ**
**சுத்த வெளியில் சுடரில் சுடர்சேரும்**
**அத்தம் இதுகுறித் தாண்டுகொள் அப்பிலே. 135**

இ-ம் - எனின், ஒடுங்கும் முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : சத்தம் முதலான ஐந்து தன்மாத்திரைகளும் தத்தம் முதலில் தான்தான் சார்ந்தால் சித்துப் பொருளுக்குச் சித்தல்லாமல் சேரக்கூடிய இடம் வேறு ஏது ? நிர்மலமாகிய ஆகாயத்தில் உள்ள ஒளிப்பொருளோடு ஒளிப்பொருள் ஒன்றும். இப்பொருளை நன்ருக ஆராய்ந்து தெளிந்த நீரைப் போல அநுபவத்திலிருந்துபார் என்றவாறு.

சத்தமுதலைந்து - சத்தம், பரிசம், ரூபம், ரஸம், கந்தம் என்ற தன்மாத்திரைகளைந்தும். இவை தன் வழிச்சார்தலாவது பூதாதி யகங்காரத்துள் ஒடுங்குதல்.

எது எதினின்று தோன்றியதோ, அது அதனுள் ஒடுங்கல் மரபாகலின், "ஓசைநற் பரிசரூப இரதகந் தங்களென்று, பேசுமாத்திரைகள் ஐந்து பிறக்கும் பூதாதிகத்தின்" எனத் தோற்றம் கூறப்படுதலின் சத்தாதிகள் பூதாதி யகங்காரத்துள் ஒடுங்கும் என்று உரைக்கப்பெற்றது.

சித்துக்குச் சித்தன்றி சேர்விடம் வேறுண்டோ- சித்துப்பொருள் சடத்தோடு ஒன்ருது ஆதலின் இங்ஙனம் அருளப்பெற்றது. ஆதலால் உணர்த்த உணரும் சித்தாகிய ஆன்மாவுக்குச் சிவத் தோடன்றிச் சேருமிடம் வேறு யாது என்றவாறு.

இதற்கு எடுத்துக்காட்டாக நிர்மலமான ஆகா யத்தில் உள்ள சூரியன் முதலான சுடர்களோடு

விளக்குச் சுடர் ஒன்றுதல் போல என்று உரைத் தருளினர். இதில் சூரிய ஒளியில் விளக்கொளி கலந்தாலும் விளக்கின் ஒளியும் சூரிய ஒளியும் தனித்தே நிற்கும்; ஆயினும் சூரிய ஒளியின் பெருமையில் விளக்கொளி தோன்ருது நிற்கும். அதுபோல இறைவனுடைய வியாபகத்தில் ஆன்மா வியாப்பியமாய் அடங்குமேயன்றிப் பாலும் பாலும் சேர்ந்தாற் போல ஒன்ருன கலப்பு இல்லை யாதலை அறிவித்தவாறு.

அப்பிலிற் கூர்மை ஆதித்தன் வெம்மையால்
உப்பெனப் பேர்பெற் றுருச்செய்த அவ்வுரு
அப்பினிற் கூடிய தொன்ருகு மாறுபோல்
செப்பினிற் சீவன் சிவத்துள் அடங்குமே. 136

இ-ம் — எனின், சீவன் சிவத்துள் அடங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: கடல் நீரிலுள்ள மிக்க உவர்ப்பானது சூரியவெப்பத்தால் உப்பெனப் பேர்பெற்று, உருக் கொண்ட அது, மீட்டும் நீரிற்கலந்த போது நீரே யாகுமாறு போல, சொல்லுமிடத்து ஆன்மா சிவத்துள் அடங்கும் என்றவாறு.

அப்பினில் கூர்மை — நீரில் உள்ள கரிப்பு உப்பு, அவ்வாறு உருக்கொண்ட அது பிரிந்த அப்போடு சேரின், மீண்டும் நீரேயாகும். அதுபோலச் சங்கார காலத்துத் தத்தம் கன்மங்கள் சூக்கும கன்மமாய்த் தன்னுள் அடங்க, ஆன்மாக்கள் அனைத்தும் சிவத் துள் அடங்கிநின்று சிவம் உயிர்களை மீட்டும் பிறப்

பிக்கத் திருவுளம் பற்றியபோது தத்தம் வினைக் கீடாக மேனியிலடங்கி, உலகத்துலாவி முத்தான்மா வாகச் சிவத்துள் அடங்கும் என்பது கருத்து, இதனை "நசித்துமலம் அப்பணைந்த உப்பின் உள மணைந்து சேடமாம் கப்பின்றும் ஈசன் கழல்" என்ற சிவஞான போத வெண்பாவான் உணர்க.

அடங்குபே ரண்டத் தணுஅண்டம் சென்றங்
கிடங்கொண்ட தில்லை இதுவன்றி வேறுண்டோ
கடந்தொறும் நின்ற உயிர்கரை காணில்
திடம்பெற நின்றான் திருவடி தானே. 137

இம் - எனின், உயிர்கள் திருவடியைச் சேர்வ தற்குத் திடஞானம் வேண்டும் என்பது உணர்த் துதல் நுதலிற்று.

இ - ள் : எல்லாப்பொருளும் சென்றடங்கு கின்ற பெரிய அண்டத்திலே அணு அண்டங்கள் சென்று அடங்கிற்றில்லை; அணுவுள் அண்டங்கள் அடங்கின. இதுவன்றி வேறு உண்டோ? உடம் புகள் தோறும் நின்ற உயிர்கள் தாம் எய்தும் இடத்தை ஆராயின், தாணுவாய் நின்ற இறைவன் திருவடியே என்றவாறு

அடங்கு பேரண்டத்து – மலையும், கடலும், மரமும் உயிரினங்களும் ஆகிய யாவும் அடங்கி யிருக்கின்ற பிரமாண்டத்திலே.

அணு அண்டம் சென்று இடங்கொண்டதில்லை - பரமாணுக்களாகிய அண்டங்கள் போய் அடங்கிற்

றில்லை; என்றது பிரமாண்டங்கள் அண்டவடிவான அணுவுள் அடங்குமேயன்றி, அணுக்கள் அண்டங்களில் அடங்கா என்பதை விளக்கிற்று. காரியம் காரணத்து ளடங்குதலன்றிக் காரணம் காரியத்துள் அடங்குத லன்முகலின் என்க.

கடந்தொறும் நின்ற உயிர் — குடம்போலும் நிலைக்களனாகிய உடல்தோறும் நின்ற உயிர் இறுதியாகச் சென்றடையுமிடம் எதுவென்று ஆராயின், ஆன்மாக்கள் பக்தி ஞான வைராக்கியத்தில் திடம்பெற நின்றருள் செய்பவனாகிய இறைவனது திருவடியே என்று தெரிவித்தவாறு.

திருவடி யேசிவ மாவது தேரில்
திருவடி யேசிவ லோகம்சிந் திக்கில்
திருவடி யேசெல் கதியது செப்பில்
திருவடி யேதஞ்சம் உள்தெளி வார்க்கே. 138

இ-ம் — எனின், திருவடியே யனைத்துமாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: சிந்தித்து ஆராய்ந்து மனந்தெளிந்தவர்கட்குச் சிவமாவதும், சிவலோகமாவதும், செல்கதியாவதும், அடைக்கலத்தான மாவதும் திருவடியே என்றவாறு.

திருவடி சத்தியின்வேறன்று ஆதலானும். சத்தி சிவம் இரண்டற்கும் வேறுபாடு இன்மையானும் திருவடியே சிவம் என்றருளப் பெற்றது. அங்காங்களில் வேறுபாடு இன்மையான் எனலும் ஆம்.

பதிபுண்ணியம் கைவரப்பெற்ரூர் சென்று அடையும் இடம் சிவலோகம்; அதுவே திருவடி, செல்கதி – மறுபிறவியில் சென்று அடையக்கூடிய இடம். தஞ்சம் – பற்றுக்கோடு.

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே. 139

இ-ம் – எனின், காண்பன முதலிய எல்லாம் குருத் தொடர்புடையனவாக இருத்தலே ஞானம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: குருவின் திருமேனியைத் தரிசிப்பதும் அவருடைய திருநாமத்தைச் சொல்லுவதும், அவருடைய உபதேச மொழிகளைக் கேட்பதும், அவருடைய திருவுருவைத் தியானிப்பதும் அனைத்தும் தெளிந்த ஞானத்தைப் பயப்பனவாம் என்றவாறு.

காண்டல், கேட்டல், சிந்தித்தல், செப்பல் ஆகிய நான்கு தொழிலும் நமக்குக் காட்டியும், கேட்பித்தும், சிந்திக்கச் செய்தும், செப்புவித்தும் பழக்கி ஒரு நிலையில் நிறுத்திய உபகாரியாகிய, உபதேச குருவின் திருமேனியும் பெயரும் உருவமுமாகவே இருத்தல் வேண்டும் என்பது கருத்து.

தானே புலனைந்தும் தன்வச மாயிடும்
தானே புலனைந்தும் தன்வசம் போயிடும்
தானே புலனைந்தும் தன்னில் மடைமாறும்
தானே தனித்தெம் பிரான்தனைச் சந்தித்தே. 140

இம் – எனின், இறைவனைக்கூடின் இன்னபயன் விளையும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : மலபரிபாகமுற்ற ஆன்மாவாகிய தானே மலமாயை கன்மங்களோடு கூடாது பிரிந்து எமது தலைவனாகிய இறைவனைச் சந்தித்ததாயின், தானாகவே ஐம்புலன்களும் ஆன்மாவாகிய தனக்கு வசமாகி விடும், பின்பு இறைவன் வசமாகும்; பின்பு மடை மாறி இறைவனிடத்திலே நிலைத்திருக்கும் என்றவாறு.

புலன் ஐந்து என்றது விஷய சுகங்களை. பொறிகளை ஈர்த்துச் செல்லும் புலன்கள், பதி ஞானம் நண்ணிய ஆன்மாவின் வசப்பட்டு, மீட்டும் வினைக் கேதுவான காரியங்களில் பற்ருது. பாகன் வழி நிற்கும் களிறுபோல ஆகிவிடும் என்பார். ‘புலன் ஐந்தும் தன்வசமாயிடும்’ என்றருளிச் செய்தார்.

தன்வசம் போயிடும் என்றது அங்ஙனம் ஆன்மாவின் வசப்பட்ட ஐம்புலன்களும் அங்குசத்துக்கு அஞ்சிய யானைபோல ஆன்மாவின் வசமாயிருப்பினும் மீட்டும் வாசனை தாக்க, கட்டறுந்தயானை காடுபுகுமாப் போல, விஷய சுகக்காட்டிலே புகுந்து அலையு மன்றோ ? அங்ஙனம் அலையாது, என்றும் பிறிவற நிற்கின்ற இறைவனிடத்துச் சென்று, அவனே கண்டும். கேட்டும் உண்டும், உயிர்த்தும் உற்றும் அறியக்கூடிய பொருளாய் இருக்கின்ருன் என்று அனுபவித்து அறிந்து. ஆள்வாரிலி மாடாகாமல், அங்கேயே அடங்கிக்கிடக்கும் என்பதாம்.

தன்னில் மடைமாறும் என்றது இதுவரை தனு கரண புவன போகங்களில் 'அதுவே அனைத்தும் ஆம்' என அழுந்தியிருந்த விஷயஞானம் மடைமாறிப் பாய்ந்தது போல, இறைவன் விஷயமாக எல்லாப் புலனும் சென்றுபற்ற இருக்கும் என்றவாறு.

இதனுல் இறைவனே இந்திரியங்கள் எல்லாவற்றிற்கும் இன்பம் ஊட்டக்கூடியவன் ஆவன் என்பது கருத்து. ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த எல்லையில், வந்த பேரின்ப வெள்ளத்துள் திளைத்து, உலகையே மறந்திருந்த நிலை இங்கு விவரிக்கப் பெற்றது.

தனித்துச் சந்தித்து என்றது அனுதியே துணையாகவந்த ஆணவ மலத்தையும், அதனைப் பரிபாக முறுத்தவந்த மாயாமலத்தையும், அதற்குரிய கருவிகளான தனு கரண புவனபோகங்களையும் விடுத்துத்தான் ஒருவனேயாய்த் தலைவனைக் கூடி என்றவாறு.

ஒருதலைவி தனித்துத் தலைவனைச் சந்திந்துப் பிரிவினுல் தன்வசமற்றிருந்த கருவி கரணங்களைத் தன் வசமாக்கிப் பின்பு தலைவனைத் தலைப்பெய்த காலத்து தன்வசமழிந்து அவன் வசமாய், பசுகரணமெல்லாம் சிவகரணமாக, நுகர்ச்சி எல்லாம் சிவபோகமாக இருக்கின்ருள் என்ற வேறுபொருளும் தோன்ற நிற்றல் காண்க.

சந்திப் பதுநந்தி தன்திருத் தாளிணை
சிந்திப் பதுநந்தி செய்ய திருமேனி
வந்திப் பதுநந்தி நாமம்என் வாய்மையால்
புந்திக்குள் நிற்பது நந்திபொற் போதமே. 141

இ-ம் - எனின், சந்திப்பதுமுதல் அனைத்தும் சிவ சம்பந்தம் உடையனவே என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இடைவிடாமல் கூடுவது சிவபெருமான் திருவடி; சிந்திப்பது அவன் திருமேனி. வாயின் செயலாகப் புகழ்வது அவன் திருநாமம்; எனது மனத்தினுள் நிலைபெற்று நிற்பது சிவஞானமே என்றவாறு.

சந்திப்பது - சிவயோகநெறியில் நின்று கூடுவது. "வார்கழல்வாய் வாழ்த்த வைத்து" என்பதன் விரிவு 'வாய்மையால் வந்திப்பது நந்தி நாமம்' என்பது.

புந்திக்குள் நிற்பது - துரியசாக்கிரத்துள் அறிய நிற்பது இறைவன் நமக்கு அருளிச்செய்த பொன்னனை ஞானம் என்றவாறு.

போதந் தரும்எங்கள் புண்ணிய நந்தியைப்
போதந் தனில்வைத்துப் புண்ணிய ராயினர்
நாதன் நடத்தால் நயனம் களிகூர
வேதம் துதித்திடப் போயடைந்தார் விண்ணே. 142

இ-ம் - எனின், ஞானத் தியாகரை ஞானத்தில் வைத்துப் போற்றினோர் எய்தும் பயன் இது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பரஞானத்தை அருளிய எமது புண்ணியமே வடிவான சிவபெருமானை ஞானசனம், ஞானமூர்த்தி, ஞானம் என்ற மூன்றுமாகத் தமது இதயத்தாமரையிலே எழுந்தருளவைத்துச் சிவ புண்ணிய சீலர் ஆனார். ஆனந்த தாண்டவ தரிசனத்தால் கண்கள் மகிழ, வேதங்கள் தோத்திரிக்க, ஞானாகாசத்தை நணுகினார் என்றவாறு.

தன்னைக் கட்டும் சங்கிலியைத் தானே கொடுக்கும் யானையைப்போலத் தான் எழுந்தருளி யிருப்பதற்கு இடமான ஞானத்தைத் தானே தந்து தானே அதில் ஏறியிருந்து அருள்வழங்க, அதனால் புண்ணியர்கள் ஆனவர்கள் என்றவாறு. அத்தகைய பெரியோர்கள் பஞ்சகிருத்திய பரமானந்தத் தாண்டவத்தைக் கண்குளிரக்கண்டு ஞானாகாசத்தை நணுகினர்; ஆதலின் இவர்களை வேதங்களும் துதிப்பவாயின.

## உ. யாக்கை நிலையாமை

யாக்கை நிலையாமையாவது உடலினது நிலையாமையைக் கூறுதல் என்பதாம். மேல் விதந்து ஓதிய உபதேசங்கள் அநுபவ வாயிலாக அமைய வேண்டுமாயின், தாம், நிலையாயின என்று மயங்கியுணரும் சிலவற்றின் நிலையாமையை உணர்ந்தாலன்றி நிலையுதலுடைய வீட்டின்பத்தின்கண் உள்ளம் விழையாதாதலின்; முதற்கண் யாக்கையினது நிலையாமையை இருபத்தைந்து மந்திரங்களால் உணர்த்துகின்றார்.

மண்ணொன்று கண்டீர் இருவகைப் பாத்திரம்
திண்ணென் றிருந்தது தீவினை சேர்ந்தது
விண்ணின்று நீர்விழின் மீண்டுமண் ணானாற்போல்
எண்ணின்றி மாந்தர் இறக்கின்ற வாறே. 143

இ - ன்: உடலின் தோற்றமும், விரைந்து அழியும் விதமும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: ஒரேமண் இதனைக்கொண்டு எழுந்த உடலாகிய பாத்திரம் இருவகையானது; உறுதி யானது; தீவினை வந்து சேர்ந்தது; வானிலிருந்து நீர்வீழ்ந்தால் மண்குடம் மீண்டும் மண்ணானாற் போலக் கணக்கற்ற மக்கள் இறக்கின்றவாறு இது என்றவாறு.

மண் ஒன்று - இறைவன் ஆன்மாக்களுடைய வினைக்கீடாகச் சிருட்டித்தற்கு முதற்காரணமாகிய மாயையாகிய மண் ஒன்றே. "தேரின் மண் மாயையாக' என்பது சித்தித் திருவாக்கு.

கண்டீர் என்றது, மாயைதான் படைப்பிற்கு முதற்காரணம் என்பதை யறியாது அணுகாரண வாதம் புரியும் தார்க்கீகர். சவுத்திராந்திகர், ஆசீவகர் முதலாயினார் மதம்பற்றி மயங்கி நிற் பாரைத் தெருட்டக் கூறியது.

இருவகைப் பாத்திரம் - ஆணும், பெண்ணு மாகிய இருவகையான உடல். அலியை விதந்திலர்: மிகுந்த குணத்தின் பாற்பட்டு அவ்விரண்டுள் ஒன்றாய் அடங்கி நிற்றலின்.

திண்ணென்று இருந்தது - இதற்கும் அழி வென்பது ஒன்று உண்டு என்று அறிய இயலாத வாறு உறுதியாக இருந்தது.

தீவினை சேர்ந்தது - அழிவிற்கேதுவாகிய பிராரத்த வினைப்போக நுகர்ச்சியின் முடிவு வந்தது. பிராரத்தக் கழிவையே ஈண்டுத் தீவினை யென்று உலகவர் நிலையில் வைத்து ஓதியது.

பச்சை மண்குடம், மழைபெய்யின் கரைந்து மீட்டும் மண்ணுற்போல மக்கள் இறந்தனர் என்று விரைவுதோன்றக் கூறி யருளியவாறு காண்க.

இது குயக்கலத்தில்வைத்து யாக்கையின் நிலை யாமையை உருவகித்து உணர்த்தியவாறு.

பண்டம்பெய் கூரை பழகி விழுந்தக்கால்
உண்டஅப் பெண்டிரும் மக்களும் பின்செலார்
கொண்ட விரதமும் ஞானமும் அல்லது
மண்டி அவருடன் வழிநட வாதே 144

இம் — எனின், உடல் அழியின் உடன் வருவன இவையென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : வினைப்பண்டங்களைப் பெய்து வைத்த ஒரு கூரை நெடுநாளாகப் பழகிப் பழையதாயிற்று. அது விழுந்து போனவிடத்து, அக்கூரையை ஆதார மாக வைத்து உண்டு கொண்டிருந்த மனைவி மக்களும் உடன் வரமாட்டார்கள்; மேற்கொண்ட விரதமும் ஞானமும் அன்றி வேறு எவையும் கூட வரப்போவதில்லை என்றவாறு.

பண்டம்பெய் கூரை - பல பிறவிகளில் ஈட்டிப் பழுத்த வினைகளாகிய பிராரத்த வினைகளை இட்டு வைத்த உடல்; உடலைக் கூரையென்ற இயைபைப் பின்வரும் 'காலும் இரண்டு' என்னும் திருமந்திரத்தால் உணர்க.

பழகி விழுந்தக்கால் - வரையறுத்த காலம் வரை வினைப்போகங்களை நுகர்ந்து அடிப்பட்டுப் பழையதாகி அழிந்த பிறகு (பழுதுபட்டு) கூரையின் கால் உளுத்து, கழி கலகலத்து, கீற்று மக்கிப்போதல் போலக் கெட்டுச் சாயின் என்பதாம்.

உண்ட அப்பெண்டிரும் மக்களும் பின்செலார் - இவனது வினைப்போகத்திற்குச் சாதனமாய் இவனை வந்தடைந்து இவனுக்குப் போகம் ஊட்டுவார் போல இருந்து தாம் உண்ட பெண்டிரும் மக்களும், இவன் வினையுலந்தால். தம் வினை நுகர்ச்சியைத் தாரகமாகக் கொண்டு தம்மைப் பிறர்சாரத் தம் பிராரத்தம் கழியும் வரை இருப்பராதலின் பின் செலார் என்றருளினார்.

அங்ஙனமாயின் பின் உடன்வருவன யாவையோ எனின், வாழ்நாளிலே சிவகருணை கண்காட்ட உணர்ந்து மேற்கொண்ட விரதமும், அதன் வாயிலாகப் பெற்ற சிவஞானமுமே என்பது தெளிவிக்கக் கொண்ட விரதமும் ஞானமும் அல்லது என்றருளியது.

விரதமாவது தாதமார்க்கத்திலே நின்று மேற்கொள்ளப் பெறுவனவாகிய சங்கரன்றன் கோயி...

அலகிடுதலும் திருமெழுக்கிடுதலும் முதலாயினவும், சற்புத்திரமார்க்க மாகிய சிவபூசை அக்கினி காரியம் முதலாயினவும், சகமார்க்கமாகிய சிவயோக நெறி நிற்றலுமாம். ஞானமாவது பதி பசு பாசந் தெரிந்து, புறத்தொழிலும் அகத்தொழிம் அகன்று. அறிவுத் தொழில்மாத்திரையான் சச்சிதானந்தப் பிழம்பாய் எழுந்தருளியிருக்கும் சிவபிரானிடத்திற் செய்யப்படும் வழிபாடாம். இதனைச் சிவஞான சித்தியார் எட்டாஞ் சூத்திரத்து இரண்டாம் அதிகரணத்தான் உணர்க.

மண்டி அவருடன் வழிநடவாதே என்றது மிக நெருங்கிச் சூழ்ந்து உடலைப் பிரிந்த ஆன்மாவாகிய அவருடன், அவ்வான்மா இருவினைக் கீடாகச் செல்லும் உலகிற்குத் துணைபோகாது என்பதாம். விரத ஞானங்களே மெய்காப்பாளர் போல் செல் கதிக்குத் துணையாய், இடையில் இடையூறு புகாதே காத்துச் செல்வன என்பதையுணர்த்த 'மண்டி' என்றார்.

ஊரெலாம் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே. 145

இ-ள் - எனின், உடல் நிலையாமையை உணர்த்தும் வாயிலாக உற்றார் உறவினர்களின் அன்பின் நிலையா மையையும் உடனுணர்த்துகல் நுதலிற்று

இ-ள் : உடல் விழுந்த பின் ஊரார் எல்லோரும் ஒன்று கூடி ஓலமிட்டு அழுது, அதுவரையிலிருந்த

பேரைமாற்றி, பிணம் என்று பேர்சூட்டி, சூரைமுள் நிறைந்த சுடுகாட்டிலே கொண்டு போய்க் கொளுத்தி விட்டு, நீராடி, இவ்வண்ணம் ஒருவரிருந் தார் என்ற நினைப்பையும் நீங்கினார்கள்; இவ்வளவே இவர்கள் நிலை என்றவாறு.

ஒலிக்க அழுதிட்டு - என்னே இவர்மாட்டு இவர் களுக்கு இருந்த அன்பு என்று உலகம் மெச்ச உரக்க அழுதிட்டு.

பேரினை நீக்கி - இதுவரை உயர்திணைப்பலர் பால் வாய்பாட்டால் வழங்கி வந்த வழக்கு நீக்கி.

பிணம் என்று பேர் இட்டு - பிணம் கிடந்தது போயிற்று என அஃறிணை ஒன்றன்பால் வாய் பாட்டால் வழங்கி.

சூரையங்காட்டிடை என்பதை "எட்டியிலவம் ஈகை சூரை காரை படர்ந்து எங்கும் சுட்ட சுடலை" என்ற அம்மையார் திருவாக்கினும் ஒப்புநோக்குக.

நீரினில் மூழ்கி நினைப்பொழிந்தார்களே என்பது தம்முடலைக் கழுவுவார்போல உள்ளத்தை யுங்கழுவி நினைப்பையும் துடைத்தார்கள் என்று உறவின் வரம்பு உணர்த்தியவாறு.

காலும் இரண்டு முகட்டல கொன்றுள
பாலுள் பருங்கழி முப்பத் திரண்டுள
மேலுள கூரை பிரியும் பிரிந்தால்முன்
போலுயிர் மீளப் புகஅறி யாதே. 146

இம் - எனின் உடலினமைப்பை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : உடலாகிய வீட்டிற்கு இரண்டு கால்கள் உள்ளன; உச்சியில் போடப்பட்ட அலக்கு ஒன்று; இரண்டு பக்கங்களிலும் போடப்பட்ட சாற்றுக் கழிகள் முப்பத்திரண்டு உள்ளன; இத்தகைய கூரை வீடு ஒருகாலத்துப் பிரியும்; பிரிந்தால், முன்போல உயிர் அதனுள் புக அறியாது என்றவாறு.

காலிரண்டு - வலது காலும் இடதுகாலும், முகட்டலகு - முதுகந்தண்டு. பருங்கழி—விலா எலும்புகள். கூரைமேல் போடப்பட்ட தோல், மச்சை முதலியன. பிரிதலாவது உடல் வலி கெட்டு வீழ்தல்.

இம்மந்திரம் உடல் ஒரு கூரைபோன்றது என்று உருவகித்து, உடல் வீழ்ந்தால் இதுவரை உள்ளிருந்த உயிர் வெளிப்படும்; வெளிப்பட்டால், மீண்டும் அதனுட் புகாது என்பதை விளக்கிற்று.

சீக்கை விளைந்தது செய்வினை மூட்டற்ற
ஆக்கை பிரிந்த தலகு பழுத்தது
மூக்கினிற் கைவைத்து மூடிட்டுக் கொண்டுபோய்க்
காக்கைக் குப்பலி காட்டிய வாறே. 147

இம் - எனின், இந்த உடலானது அழிந்த பிறகு காக்கைக்குப் பலியாய்க் கழிகின்றமை உணத்துதல் நுதலிற்று.

இ - ள் : சிலேட்டுமம் மிக்கது; பலபிறவி களில் செய்யப்பட்டு பரிபாகமுற்ற பிராரத்த வினையின் தொடர்புகள் ஒழிந்தன; உடல் பிரிந்தது; கைமரங்கள் பழுத்தன. மூக்கில் கைவைத்துப்

பார்த்து, உயிரியக்கமில்லாமையை உணர்ந்து, மூடிக் கொண்டுபோய் காக்கைக்குப் பலியாகக் காண்பிக்கும் வகை இனி நிகழ்வது ஒன்றும் என்றவாறு.

சீழ்க்கை சீக்கையென்றாயிற்று. சிலேஷ்மம், சிலேட்டுமம் காணுதலே உயிர்நீக்கத்தின் அறிகுறி.

வினைமூட்டு-வினைத்தொடர்பு. வினைத்தொடர்பு அறுதலாவது கால எல்லை கடத்தல்.

ஆக்கை, யாக்கை என்பதன் மரூஉ. கட்டப் பட்டது என்பது பொருள். ஆக்கை பிரிதலாவது நாடி தளர்தல். ஆக்கை கயிறும் ஆம். இப்பொருள் நரம்புத் தளர்ச்சியைக் குறிப்பதாம். அலகு பழுத்தல்—பழுவெலும்புகள் வலிகெடுதல்.

மூக்கினில் கைவைத்து என்பது உயிர்ப்பின் இயக்கத்தை, மூக்கில் கைவைத்துப் பார்த்து உயிர்ப்பு இல்லையாயின் முழுதும் மூடிக்கொண்டு போய் இடுகாட்டில் இடும் மரபை விளக்கியவாறு.

அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டார்
இடப்பக்க மேஇறை நொந்தது என்றார்
கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே. 148

இ-ளின், யாக்கையின் நிலையாமையை அன்றாட நிகழ்ச்சி கொண்டு அறிவித்தல் நுதலிற்று.

இ-ள்; சமைக்கச்சொன்னார்; சோற்றை உண்டார். இளமையான கொடி போன்ற மனைவியாரோடு

தனித்து உரையாடினார்; ஐயோ! இடதுபக்கத்திலே சிறிது வலித்தது என்றார்; கீழே படுத்தார். இறந்து ஒழிந்தார் என்றவாறு.

அடப்பண்ணி வைத்தார் - தனக்கு விருப்பமான கறியும், துவையும், தின்றியும், உணவும் சமைக்கச் சொன்னார்.

அடிசில் என்பது அடப்பட்டது அனைத்தையும் உணர்த்துமாயினும் இங்கே சோற்றைமட்டும் காட்டிற்று. வச்சபொருள் நமக்காகுமென்று அறுசுவையோடு அடப்பண்ணிவைத்தார் ஆயினும் முழுதும் உண்ண ஊழில்லாமையினால், சோற்றைமட்டுமே உண்டார் என்பதாம்.

மடக்கொடியாரொடு மந்தணங்கொண்டார் — உடல் தளர்ந்து உணவுதட்டி உயிர் ஊசலாடுகிற காலத்தும் காமந் தளராமையின் மனைவியோடு தனித்துறைந்தார். மடக்கொடியார் என்றது அவர்களுடைய இளமையும் உடலமைப்பும் அத்தகைய காலத்தும் ஆசையை எழுப்பிற்று என்பதை விளக்கியவாறு. மந்தணங் கொண்டார் என்பது இடக்கரடக்கல்.

இடப்பக்கமே இறை நொந்தது — நெஞ்சு வலி கண்டது என்பதாம். குருதியைத் தூய்மையுறுத்தி உடலுக்கு உதவும் இதயம் நொந்தது என்பதாம். இத்துணை விரைவில் இறப்பு வருமென உணர்த்தியவாறு.

மன்றத்தே நம்பி மாடம் எடுத்தது
மன்றத்தே நம்பி சிவிகைபெற் றேறினான்
மன்றந்தே நம்பி முக்கோடி வழங்கினான்
சென்றத்தா வென்னத் திரிந்திலன் தானே. 149

இம்-எனின், உடலோடு கூடிய உயிர் உலகத்துச் செய்த உதவிகளை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள், நம்பி மாளிகை கட்டியது பலர் வழங்கு மிடத்தில், பலரறியப் பல்லக்கில் ஊர்ந்தான்; பல கோடிகளைப் பலருக்கு வழங்கினான். அத்தகைய வன் இறக்க, மக்கள் அப்பா! என்று அழைக்க, மீண்டிலன் என்றவாறு.

மன்றம் என்பது பலர்வழங்கும் பொதுவிடம். அங்கே மாளிகை கட்டியும் சிவிகை ஏறியும் பல கோடி பொருள்களைப் பலருக்கு வரையாது வழங்கியும் வாழ்ந்தான்: இறந்தான்; அப்பா! அப்பா! என்றழைக்கத் திரும்பினானல்லன் நம்பி என்பது கருத்து.

நம்பி என்பது ஆண்பாற் சிறப்புப் பெயர். முக்கோடி என்பது ஈண்டுப் பலகோடி என்னும் பொருளில் வந்தது.

வாசந்தி பேசி மணம்புணர்ந் தப்பதி
நேசம் தெவிட்டி நினைப்பொழி வார்பின்னை
ஆசந்தி மேல்வைத் தமைய அழுதிட்டுப்
பாசந்திச் சுட்டுப் பலியட்டி னார்களே. 150

இம் - எனின், மணந்தவரது அன்பும் சுடுகாட்டு அளவிலேதான் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: சடங்கு பேசி, மணம் செய்து, அந் நாயகனிடத்துவைத்த காதலும் கசந்து, நினைப்பும் ஒழிந்து போவார்கள். பிறகு பாடையில் வைத்துக் கட்டி. பொருத்தமாக அழுதுபுலர்பி, உள்ளபாசத்தையும் தீயினாலே சுட்டெரித்து விட்டு, பிண்டம் போட்டு முழுகினார்கள் என்றவாறு.

வாசந்தி – திருமணத்திற்குமுன் செய்யப்படும் சடங்கு. அப்பதிநேசம் தெவிட்டி - அத்தகைய கணவனின் காதலில் உவர்ப்புக்கண்டு; என்றது. காளைப் பருவத்துக் கடிமணத் தலைநாளில் கனியாய்க் கரும்பாய்க் கட்டியாய் இருந்த கணவன், தலை நான்று பல்கழன்று தசை மெலிந்து கோழை வழிந்து உடல் குனிந்து தண்டூன்றித் தடுமாறுங் காலத்து, கணவன் என்ற காதன்மை இல்லையாயினும் பொதுவகையில் செலுத்தப்படுகிற நேசமும் இன்றாய்ப் பின் நினைப்பும் ஒழிவாராயினர் என்பதை விளக்கியவாறு.

ஆசந்தி - பாடை, அமைய அழுதல் - ஊரார் மெச்ச ஓலமிட்டு உண்மைக்காதல் உரையில் வெளிப்பட அழுதல்; உள்ளத்தில் அன்பு இல்லை என்றபடி. பாசம் தீச்சுட்டு - இருக்கும் பாசத்தையும் உடலைத் தீயாற் சுடுதலால் ஒழித்து.

பலி அட்டினார்கள் - பலியை உண்பித்தார்கள்; என்றது பிண்டம்போட்டார்கள் என்றபடி.

கைவிட்டு நாடிக் கருத்தழிந் தச்சற
நெய்யட்டிச் சோறுண்ணும் ஐவரும் போயினர்
மையிட்ட கண்ணாளும் மாடும் இருக்கவே
மெய்விட்டுப் போக விடைகொள்ளு மாறே. 151

இம் - எனின், இதுவுமது.

இ - ள்: நாடி பார்ப்பவர்கள், நாடியைப் பார்த்துக் கைவிட்டு, உணர்ச்சியற்று, உடல்சோர நெய் இட்டுப் பிசைந்த சோற்றை உண்கின்ற நா முதலாகிய பஞ்சேந்திரியக் கூட்டாளிகள் சென்றார். மைபூசிய கண்ணை உடைய மனைவியும் செல்வமும் இவ்வுலகத்திலே இருக்க. உடலைவிட்டு உயிர் விடைகொள்ளும் முறை இதுவாம் என்றவாறு.

நாடி கைவிட்டு—நாடி பார்க்கும் வைத்தியர்கள். ஏது இனித் தாங்காது என்று கையை உதறிவிட்டு.

கருத்தழிந்து - நினைவு கெட்டு. வைத்தது கொடுத்தது வாங்கியது இயற்றவேண்டியது எல்லாவற்றையும் சொல்ல எண்ணியும் நினைவு வராமல் தடுமாறி.

அச்சற – உயிர்ப்பியக்கம் நீங்க. நெய்யட்டிச் சோறுண்ணும் ஐவர் – வாய் முதலிய ஐவர், சோறுண்ணும் வாயென விதந்து. முதற்கண் கூறியது, உடலைப் பேணும் உரிமைபற்றி. மையிட்ட கண்ணாளும் – பிரியேன் பிரியிற்றரியேன் என்று

சூளுற்றுப் புணர்ந்த மனைவியும். மாடும் - காலிற் சென்றும், கலத்திற் சென்றும் போற்றியும் பொருதும் உழைத்தும் பிழைத்தும் ஈட்டிய செல்வம்.

இருக்கவே என்றது பிரியமுடியாத நிலைமையை உணர்த்தியவாறு.

பந்தல் பிரிந்தது பண்டாரங் கட்டற்ற
ஒன்பது வாசலும் ஒக்க அடைத்தன
துன்புறு காலந் துரிசுவர மேன்மேல்
அன்புடை யார்கள் அழுதகன் றார்களே. 152

இம் - எனின், இதுவும் அன்புடையார்களை அறிவித்தல் வாயிலாக நிலையாமை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: உடலாகிய பந்தல் பிரிந்தது; உயிர் நிலையாகிய களஞ்சியம் கட்டுவிட்டுப் போயிற்று; ஒன்பது வாசல்களும் ஒருசேர அடைபட்டன; வருந்துங்காலமானது விரைந்துவர அன்புடையவர்கள் மேலும் மேலும் அழுது நம்மை விட்டகன்றார்கள் என்றவாறு.

பந்தல் - உடலின் மேற்போர்வை. அது பிரிதலாவது மூட்டு நழுவுதல். ஒன்பது வாயில்கள்-கண்ணிரண்டு, காதிரண்டு, மூக்கிரண்டு, வாய் ஒன்று, குதம் குய்யம் என்பன, துரிசு – விரைவு; இது துரிதம் என்பதன் சிதைவு. மேன்மேலழுதகன்றார்கள் எனக் கூட்டுக.

நாட்டுக்கு நாயகன் நம்மூர்த் தலைமகன்
காட்டுச் சிவிகையொன் றேறிக் கடைமுறை
நாட்டார்கள் பின்செல்ல முன்னே பறைகொட்ட
நாட்டுக்கு நம்பி நடக்கின்ற வாறே. 153

இ - ளினின், இறந்தவன் இடுகாட்டுக்கு ஏகும் வகை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: நாட்டுக்குத் தலைவனும் நம் ஊருக்குத் தலைவனுமாக உள்ளவன். பாடையிலேறிக்கொண்டு கடைசியாக மக்கள் பின்னே தொடர்ந்து வர, முன்னே பறைகொட்டிச் செல்ல, நாட்டுக்குத் தலைவன் காட்டுக்கு நடக்கின்ற முறை இதுவாம் என்றவாறு.

நாட்டுக்கு நாயகன் நம்மூர்த்தலைமகன் என்றது மன்னனும் பெருந்தனக் காரனுமாக உள்ளவன் தலைவன் என்றவாறு.

இதுவரை நாட்டுச் சிவிகையில் ஏறி நடமாடிக் கொண்டிருந்தவர்கள் இறுதிவந்த இப்போது காட்டுச் சிவிகை ஏறிச் செல்கின்றார்கள் என்பதாம். இங்ஙன மன்றி, நாட்டுக்கு நாயகன் என்பதற்கு, சரீரத்திற்குத் தலைவன் என்று பொருள் கூறல் பொருந்தாமை அறிக.

ஏற்றி யெனற்பாலதை ஏறியெனத் தன்வினையாகக் கூறியது உயிருடனிருந்த பண்டைய நிலையை நோக்கி யென்க.

முப்பதும் முப்பதும் முப்பத் தறுவரும்
செப்ப மதிளுடைக் கோயிலுள் வாழ்பவர்
செப்ப மதிளுடைக் கோயில் சிதைந்தபின்
ஒப்ப அனைவரும் ஓட்டெடுத் தார்களே. 154

இ-ம் — எனின், உடலை ஒரு கோயிலாக உருவகித்தல் நுதலிற்று.

இ-ள்: செப்பமாகிய மதில் சூழ்ந்த கோயிலுக்குள் தொண்ணூற்றாறுபேரும் வாழ்ந்தார்கள். அக்கோயில் உடைந்த பின்னர் அனைவரும் ஒருசேர ஓட்டம் பிடித்தார்கள் என்றவாறு.

உடலழிந்தவுடன் இத்தத்துவங்களும் தாத்துவீகங்களும் விரைந்து நீங்குதலின் ஓட்டெடுத்தார்களே என்று உருவகித்தார்.

தொண்ணூற்று அறுவர் என்றது தொண்ணூற்றாறு தத்துவங்கள். அவை வருமாறு; சிவதத்துவம் ஐந்தும், வித்தியாதத்துவம் ஏழும், ஆன்ம தத்துவம் இருபத்துநான்கும் என்னும் முப்பத்தாறும், பஞ்சபூதங்களின் காரியம் இருபத்தைந்தும் வசனாதி ஐந்தும் வாயு பத்தும் நாடி பத்தும் வாக்கு நான்கும் ஏடணை மூன்றும் குணம் மூன்றும் ஆகிய அறுபதும் ஆக தொண்ணூற்றுறு மாம்.

இவற்றைத் தொண்ணூற்றாறென்று ஒருசேரக் கூறாது முப்பது முப்பது முப்பத்தாறு என்று பகுத்து ஓதியது எற்றுக்கோ எனின், முற்கூறிய

முப்பத்தாறும் அகக்கருவி எனவும் பிற்கூறிய அறுபதும் புறக்கருவி எனவும் வழங்குதற் சிறப்பு நோக்கி என்க.

இக்கருத்தின் விளக்கத்தைப் * 'பூதிநிறமே' என்ற திருமந்திரத்தாலும் அறிக.

மதுவூர் குழலியும் மாடும் மனையும்
இதுவூர் ஒழிய இதணமை தேறிப்
பொதுவூர் புறஞ்சுடு காடது நோக்கி
மதுவூர வாங்கியே வைத்தகன் ருர்களே. 155

இ-ம் - எனின், தேடிய யாவும் வீட்டகத் திருக்க இவன்மட்டும் காட்டில் எரிக்கப்படுவான் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தேன்சொட்டும் மலரணிந்த கூந்தலை யுடைய மனைவியும், செல்வமும், வீடும் ஊரின் கண்ணே தங்கிவிட, பாடையிலே ஏற்றிக்கொண்டு ஊருக்குப் பொதுவாகிய புறத்தேயுள்ள சுடு காட்டை நோக்கி எடுத்துச்சென்று, அன்பு ஒழுகப் பாடையிலிருந்து வாங்கிச் சிதையில்வைத்து அனைவரும் நீங்கினுர்கள் என்றவாறு.

---

* '' பூதி நிறமே புறநிலை யைங்கோசம்
வாதமு மீரேழ் தன்னிலை மன்னையைந்து
ஓது மலங்குணம் ஆரு தாரத்தோடு
ஆதி அவத்தைக் கருவி தொண்ணூற்ருறே ''

இது அச்சுப்பதிப்பில் இல்லாதபாடல் ஞானவரண - பக் 74

மதுவூர் குழலி என்றது நறுமணமலர் மாலை சூடிக் கணவன் விரும்ப இருக்கும் தன்மைநோக்கி. இவையூர் ஒழிய என்று இருக்வேண்டியது, இது ஊர் ஒழிய என எதுகைநோக்கி ஒருமை வாய்பாடு பெற்றது; ஆரிடமாதலின். குழலி என்ற உயர் திணை, மிகுதிபற்றி இது என்னும் அஃறிணைமுடிபு ஏற்றது, ஆரிடம் எனலுமாம்.

இதணம்-பரண்; ஈண்டுப் பாடையை உணர்த் திற்று, ஏற்றி எனும் பிறவினை ஏறி எனத் தன் வினை வாய்பாட்டான் நின்றது. செய்யுள் ஆதலின், இடுகாடு ஊர்க்குப் பொதுவாதல் என்றுமுள வழக்கு. மதுவூரவாங்கி - அன்பொழுக அரற்று தலோடு எடுத்து. மது - இனிமை; ஈண்டு அன்பு.

**வைச்சகல் வுற்றது கண்டு மனிதர்கள்**
**அச்சக லாதென நாடும் அரும்பொருள்**
**பிச்சது வாய்ப்பின் தொடர்வுறு மற்றவர்**
**எச்சக லாநின் றிளைக்கின்ற வாறே. 156**

இம் - எனின், இங்ஙனம் உடலது நிலையாமை கண்டும் மக்கட்கு உணர்வில்லையே என்று இரங்கிக் கூறுதல் நுதலிற்று.

இ - ள் : இவ்வாறு இடுகாட்டில் வைத்து எல்லாரும் நீங்கியதைக்கண்டும், மக்கள், உயிர் இந்த உடலை விட்டு என்றும் நீங்காது என எண்ணி, தாம் தேடும் அருமையான பொருள்களில் பித்தேறி, அதனையே பின்பற்றித் தொடர்கின்ற அவர்களுக்கு, வினைச் சேடம் சிறிதும் விலகாமல் நின்று இளைக் கின்றபடி என்னே என்றவாறு.

உலகவர், இறந்தவர்களை இடுகாட்டில்வைத்து நீங்குவதைப் பார்த்தும், 'இவ்வுயிர் என்றைக்குமே உடலைவிட்டு நீங்காது' என உறுதிகொண்டு, பொருள் தேடுவதிலேயே பித்துப் பிடித்து அலைகின்றார்களே; அவர்களின் கன்மம் இருந்தபடி இது என்பதாம். வைத்து என்பது வைச்சு என்றும், பித்து என்பது பிச்சுஎன்றும் போலியாயின, அகல்வுற்றது கண்டும் என்ற உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை, அச்சு - உயிர். அரும்பொரு ளென்றது கூடவே வராத பொருள் என இகழ்ச்சிக் குறிப்புத் தோன்றநின்றது. தொடர்வுறும் மற்றவர் - தொடர்வுறுமவர். மற்று; அசை, எச்சு: எச்சம் என்பதன் கடைக்குறை. எச்சு - வினைச் சேடம். என்னே என ஒருசொல் வருவித்து முடிக்க.

ஆர்த்தெழு சுற்றமும் பெண்டிரும் மக்களும்
ஊர்த்துறைக் காலே ஒழிவர் ஒழிந்தபின்
வேர்த்தலைப் போக்கி விறகிட் டெரிமூட்டி
நீர்த்தலை மூழ்குவர் நீதியில் லோரே. 157

இம் - னின், உறவினரின் உறவு ஊர்த்துறை வரையில் என்று அவர் அன்பினளவுகூறி நிலையாமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: ஆரவாரித்து எழுகின்ற சுற்றத்தாரும் காதற்பெண்டிரும், பெற்ற மக்களும், ஊர்க்குப் புறம்பேயுள்ள நீர்த்துறை வரையில் வந்து நீங்குவர். அங்ஙனம் நீங்கியபின் நேர்மையற்றவர்கள் வேர்வையைத் துடைத்துக்கொண்டே,

விறகுவைத்துத் தீ மூட்டிவிட்டுத் தண்ணீரில் மூழ்குவார்கள் என்றவாறு.

ஆர்த்தெழுசுற்றம் - தர்மன்பு இத்தகைத்தென்று உலகு அறிய ஆரவாரிக்கும் சுற்றம். ஆர்த்தெழுதலை பெண்டிர் மக்கள் அனைவருக்கும் கூட்டுக. ஊர்த்துறைக்கால் - ஊர்க்கால் துறை. ஊர்க்குப் புறம்பான வாயக்கால் துறை, வேர்த்தலை போக்கி - ஊர்க்கால் துறைவரையில் வந்தமையாலும், ஆர்த்ததாலும், துன்பாலும் விளைந்த வேர்வையைத் துடைத்துக் கொண்டு. தமகுகு வோர்தலைக்கண்டும். தமக்கு உறுதுணையாய் இருந்தாரது உடலைத் தீ மூட்டுகிறூர்களே; இவர்களின் அன்பு இவ்வளவு தான் என்று இகழ்ந்தவாறு. நீதியிலார் என்பது தமக்கு ஒன்றும் பிறர்க்கொன்றுமாக இருப்பவர்கள் என்பதாம்.

வளத்திடை முற்றத்தோர் மாநிலம் முற்றும்
குளத்தின் மண்கொண்டு குயவன் வனைந்தான்
குடமுடைந் தால்அவை ஓடென்று வைப்பர்
உடலுடைந் தால்இறைப் போதும்வை யாரே. 158

இம் - எனின், உடலுண்டாகிய முறையும், அழிந்தாலுளதாம் நிலையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இவ்வுலக முழுவதையும் ஒரு குயவன் வளப்பமான இடைவாசலில் உள்ள குளத்திலிருந்து மண் எடுத்துப்படைத்தான். மட்குடம் உடைந்தால் ஓடென்று வீட்டில் சிலநாட்களாவது வைத்திருப்பார்கள் உடலாகிய கலம் உடைந்தால் ஒருகணப் போதும் வைத்திருக்கமாட்டார்களே என்றவாறு.

குயவன், ஓர் மாநில முற்றும் வளத்திடை முற்றத்துக் குளத்தின் மண்கொண்டு வனைந்தான்; குடம் உடைந்தால் அவை ஓடென்று வைப்பர். உடல் உடைந்தால் இறைப்போதும் வையார் எனக் கூட்டுக.

வளத்து இடைமுற்றத்து-வளப்பமான இடையாகிய முற்றத்திலுள்ள; என்றது மாதாவின் இடுப்பு ஆகிற முற்றம் என்றபடி. குளத்தின் மண் கொண்டு-குளம்போன்ற நிதம்பத்தின் சுரோணிதமாகிய மண்ணைக்கொண்டு, குயவன் என்றது பிரமனை. மாதாவின் இடையைச் சார்ந்த அல்குலிலிருந்து உண்டாகிய சுரோணிதமாகிய மண்ணைக் கொண்டு பிரமன் உடலைப் படைத்தான் என்பதாம். இறைப்போதும்-கணப்போதும்.

ஐந்து தலைப்பறி யாறு சடையுள
சந்தவை முப்பது சார்வு பதினெட்டுப்
பந்தலும் ஒன்பது பந்தி பதினைந்து
வெந்து கிடந்தது மேலறி யோமே. 159

இம் — எனின், உடல் வெந்து அழியின், மேல் விளைவது இன்னதென்று அறிய இயலாது என்பதை உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள்: ஐந்து பொறிகளும், நரம்பின் பின்னலாகிய ஆருதாரங்களும் உள்ளன. முதுகெலும்போடு பொருத்தப்பட்ட இணைப்புகள் முப்பது. அவற்றைச் சார்ந்துள்ள மண்டையோட்டுப் பொருத்துக்கள் பதினெட்டு. இவற்றின் மீது

போர்த்தப்பெற்ற பந்தர்கள் ஒன்பது. என்பு வரிசைகள் பதினைந்து. இவற்றின் கூட்டாகிய உடல் உயிர் நீங்கித் தீயில் வெந்துகிடந்தது. அதன்மேல் உள்ள நிலையை நாம் அறியோம் என்றவாறு.

தலைப்பறி ஐந்து-சிறந்த பொறிகள் ஐந்து; என்றது ஞானேந்திரியங்கள் ஐந்தையும். பறி-அகப் பட்டவற்றை அடக்கிக்கொள்ளும் மீன்பறி; ஈண்டு அதுபோன்ற புலன்களைப் பிடித்துப் போட்டுக் கொள்ளும் இந்திரியங்களை உணர்த்திற்று.

சடை-பின்னிக்கிடப்பன. இடை பிங்கலை நாடி களாகிய இரண்டோடும் பின்னிக்கிடப்பனவாகிய மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்கள்.

சந்தவை முப்பது-பழு எலும்பு பதினாறும், பதினான்குமாகிய இவற்றின் இணைப்பு முப்பது.

சார்வு பதினெட்டு – ஒன்பது துண்டுகள் ஒன்றோடொன்று இணைதலால் உண்டாகிய பொருத் துக்கள் பதினெட்டு.

பந்தலும் ஒன்பது - மேற்பரப்பாகிய மீந்தோ லும் அதனுள் அமைந்த நிறத்தோலும், அதனுள் அமைந்த உணர்ச்சி மயிர் நிணம் இவற்றின் பரப்பு மூன்றும். நரம்புக்கட்டும், சூழ்ப்பரப்பும், சந்து களின் இணைப்பில் அமைக்கப்பெற்றுள்ள தசைப் பொருத்துக்கள் இருவகையும் ஆக ஒன்பது.

பந்தி பதினைந்து - மண்டையெலும்பு, தாடை எலும்பு, கழுத்தெலும்பு, மார்பெலும்பு, முது

கெலும்பு முதலாகிய எலும்பு வரிகள் பதினைந்து; ஆகிய இவற்றால் வேயப்பட்ட உடல் நைந்துகிடந்தது என்பதாம்.

இங்ஙனமன்றி, சூக்குமதேகம் எட்டு, வாயு பத்து ஆகிய பதினெட்டும், ஒன்பது தொளைகளும் பூதம் ஐந்து கன்மேந்திரியம் ஐந்து அன்னமய கோசம் முதலிய உடம்பு ஐந்து ஆகிய பதினைந்தும் என்பாரும் உளர். இவற்றுள் வாயுபத்தும், தொளைகள் ஒன்பதும் வெந்தழியாமை நோக்கி வேறு பொருள் இருத்தல் வேண்டும் என்பது ஊகிக்கப்பட்டது. மீட்டும் மீட்டும் ஆராய்ந்து உரை காணவேண்டிய பாடல்களில் இது ஒன்று.

> அத்திப் பழமும் அரைக்கீரை நல்வித்தும்
> கொத்தி உலைப்பெய்து கூழட்டு வைத்தனர்
> அத்திப் பழத்தை அரைக்கீரை வித்துண்ணக்
> கத்தி எடுத்தவர் காடுபுக் காரே. 160

இ-ம் – எனின், கருவாய், குழவியாய், பின் வளர்ந்தவர் இறந்துபட்டார் என நிலையாமை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : அத்திப்பழமும் அரைக்கீரை விதையும் கொத்தி உலையிலிட்டுக் கூழாக்கிச் சமைத்து வைத்தார்கள்; அத்திப்பழத்தை அரைக்கீரை விதை உண்டு விட்டது; பின் கத்தி எடுக்கப்பெற்ற அவர் காட்டில் புக்கார் என்றவாறு.

அத்திப்பழம் செந்நிறமாய்ப் பல வித்துக்களை உடையதாய் இருப்பது; அதுபோலச் சுரோணித்

மும் செந்நிறமாய்ப் பல அணுக்களையுடைய தாயிருப்பது. ஆகவே அத்திப்பழம் என்று உருவகித்தது சுரோணிதத்தை என்க. அரைக்கீரை வித்து - அரையாகிய உறுப்பிடத்திலுள்ள பால்போன்ற மூளைக்குந்தன்மைவாய்ந்த பொருள் என்று. குறிப்பித்தது சுக்கிலத்தை என்க.

கீர் ; இது கீரம் என்பதன் கடைக்குறை: பால் என்னும் பொருட்டு. அரை - இடுப்பு. அரையிலிருந்து பெறுகிற கீரையாகிய வித்து சுக்கிலம், கொத்தி - புணர்ச்சியில் முயன்று. உலைப்பெய்து - கருப்பாசயமாகிய உலையில் நிறைத்து. கூழட்டு - இரண்டுங்கலந்த குழம்பாக்கி. இதுவரை கலவியிலீடுபட்ட காதலர் செயல், சுரோணித அணுக்களைச் சுக்கில அணுக்கள் உண்ண என்றது சுக்கில அணு சுரோணித அணுவைக் கலந்து தன்மயமாக்க என்றவாறு.

கத்தி எடுத்தவர்-குழம்பி வளர்ந்தபின் குழந்தையாகிய பருவமுதிர்ந்து வெளிவருகிற காலத்துக் கத்த எடுக்கப்பெற்றவர். கத்தி என்னும் செய்தென் எச்சத்தைச் செயவெனெச்சமாகவும், எடுத்தவர் என்னும் செய்வினையை எடுக்கப்பெற்றவர் எனச் செயப்பாட்டு வினையாகவும் கொண்டு உரைக்க. கருப்புகுந்து குழம்பிருந்து கருவாகி உருப்பெற்றுக் கத்திக்கொண்டே வர எடுக்கப் பெற்றவர் இன்று இறந்து காடுபுக்கார் என்பது கருத்து. இம் மந்திரத்திற்கு

அத்திப் பழமும் அரைக்கீரை நல்வித்தும்
கொத்திக் குதறிக் கூட்டி லடைத்தது
அத்திப் பழத்தி னமுத மறிந்தபின்
கத்திக்கொண் டைவருங் காடுபுக் காரே.

எனப் பாடங்கொண்டு 'கொத்திக் குதறி அத்திப் பழமும் அரைக்கீரை நல்விதையும் கூட்டிலடைத்தது அத்திப்பழத்தின் அமுதம் அறிந்தபின் கத்திக் கொண்டு ஐவரும் காடுபுக்கார்' எனக் கொண்டு கூட்டி, பெண்ணும் ஆணும் சையோகஞ் செய்து கருப்பையைக் கிளர்த்தித் தம் சுரோணித சுக்கிலங் களை வெளிப்படச்செய்து, கருப்பாசயக் கூட்டில் அடைத்தனர்; அதன்பின்னர் அத்திப்பழம்போன்ற சரீரத்தின் அமுதநிலையை அறிந்தபின் பஞ்சேந்திரியங்களாகிய ஐவரும் கத்திக்கொண்டே காட்டுக்கு ஓடினார்கள், என்று உரைசெய்வாரும் உளர். அத்திப் பழம் முன்னர் சுரோணிதத்தையும், பின்னர் சரீரத்தையும் உணர்த்திற்றென்றல் மயங்கவைத்தலின் அது பொருளன்மை அறிக. அன்றியும் யாக்கை நிலையாமை அதிகாரப்பட்டு நிற்க அதில், அமுத மறிந்தபின் என முத்திக்கு வாயில் உணர்த்தவேண்டாமையும் ஓர்க. வேறும் உரைப்பாரும் உளர்.

மேலும் முகடில்லை கீழும் வடிம்பில்லை
காலும் இரண்டு முகட்டலக் கொன்றுண்டு
ஓலையான் மேய்ந்தவ ரூடு வரியாமை
வேலையான் மேய்ந்ததோர் வெள்ளித் தளிகையே 161

இ-ள் – எனின், இதுவுமது.

இ—ள்: மேல் உச்சி முகடு இல்லை. கீழும் குறடு இல்லை. காலோ இரண்டுதான். முகட்டலக்கு ஒன்று. ஓலையால் இதனை மேய்ந்தவரால் இடையிலே வரிச்சற்கழி இடாமல் வினையினாலேயே வேயப்பட்டதொரு வெண்மாடக் கோயிலாம் இந்த உடல் என்றவாறு.

மேலும் முகடு இல்லை – அலக்கும், பழுவும், காலும் இடப்பட்டாலும் மேலே முகடுபோடாத வீடு என்பதாம். வீடு என்றது உடலை. முகடு-உச்சிக் கூரை. வடிம்பு-கீழுள்ள குறடு. ஓலையால் மேய்ந்து ஊடு வரியாமை அவர் – ஓலையால் கூரைவேய்ந்து இடையிலே வரிச்சற் கழியிடாத அவர் எனப் பொருள்கொள்க; என்றது கால்நட்டு அலகுகட்டினரேயன்றிக் கூரையும் வரிச்சலும் போடாத பிரமன் என்றவாறு. வேலையால் மேய்ந்ததோர் வெள்ளிக் கோயில் என்றது இருவினையால் முகடு மூடப் பெற்ற சுக்கில பரிணாமத்தாலான உடல் என்பதாம்.

கூடம் கிடந்தது கோலங்கள் இங்கில்லை
ஆடும் இலையமும் அற்ற தறுதலும்
பாடுகின் றார்சிலர் பண்ணில் அழுதிட்டுத்
தேடிய தீயினில் தீயவைத் தார்களே. 162

இம் – எனின்; வாழ்வை ஒரு நாட்டியமாக உருவகித்து நிலையாமை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: நாட்டியம் ஆடும் கூடம் அப்படியே இருக்கின்றது; அலங்காரங்கள்மட்டும் இல்லை, நாட்டியத்தின் லயமும் இல்லையாயிற்று. அங்ஙனம் அறுதலும் இசையோடு அழுது பாடுகின்றார்கள்.

சிலர், பின்பு தேடிய தீயில் சுட்டு ஒழித்தார்கள் என்றவாறு.

கூடம் - நடனம் ஆடிய அரங்கு, கிடந்தது - அழிவின்றி அங்ஙனே கிடந்தது. கோலங்கள் இங்கு இல்லை - நடனத்திற்குச் செய்த ஒப்பனைகள் மட்டும் இல்லை. ஒப்பனைசெய்ய உருவமாகிய உடலும்இல்லை என்பது கருத்து. ஆடும் லயமும் அற்றது - லயத்தோடு ஆடுகின்ற ஆட்டமும் நின்றது. ஆடு: முதனிலைத் தொழிற்பெயர்; ஆட்டம் என்பது பொருள்.

கோலமுங்கெட்டு ஆட்டம் நின்றதும் பண்ணோடு பாடுவார் சிலர் என்பது ஒப்பாரி சொல்லி அழுகின்றனர் என்பதாம். தேடிய தீ - அந்தியேட்டி முதலிய கன்மங்களுக்காகத் தேடிய தீ.

முட்டை பிறந்தது முந்நூறு நாளினில்
இட்டது தானிலை ஏதேனும் ஏழைகாள்
பட்டது பார்மணம் பன்னிரண் டாண்டினில்
கெட்ட தெழுபதிற் கேடறி யீரே. 163

இம் - எனின், முட்டையாக உருவகித்து, நிலையாமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: முந்நூறு நாட்களில் ஒரு முட்டை தோன்றியது. அது ஒன்றாலும் இடப்பட்டதன்று. பூமியிற் பொருந்தியது: பன்னிரண்டு ஆண்டில் மணம் செய்துகொண்டது; எழுபதிலழிந்தது; இக்கேட்டினை அறிவிலிகளே! அறிந்து கொள்ளுங்கள் என்றவாறு.

முட்டை பிறந்தது முந்நூறு நாளினில் என்பது கருப்பையிற் புகுந்த கரு பத்துமாதம் மாதாவின் உதரத்திலிருந்து முதிர்ந்து மக்களாய்த் தோன்றியதை அறிவிப்பதாம், கரு கருப்பையில் மீன் முட்டைபோல் புகுதலின் முட்டை எனப்பட்டது.

ஏதேனும் இட்டதுதான் இலை - இம் முட்டையையிட்ட பறவை முதலியன உண்டோ எனின் இல்லை. அஃதாவது தாய் தந்தையர் விருப்பின்படி இவ்வுயிர் இவ்வுடலைப் பொருந்திப் பிறக்க என்று பிறக்கச் செய்ததில்லை. தான்செய்த வினையால் இறைவன் அருளிருந்து இயக்கப் பூமியிற் பிறந்தது; பூமியில்வந்த பன்னிரண்டு ஆண்டிற்கெல்லாம் மணம் செய்து கொண்டது; எழுபது வயதானதும் இறந்தொழிந்தது: அறிவிலிகளே ! இவ்வண்ணமே எல்லாவுடலும் அழியும் என்பதை நீங்கள் அறிந்து கொள்ளுங்கள் என்பதாம்.

இங்ஙனம் அன்றி, இட்டது ஏதேனும் இல்லை என்பதற்கு உயிர் தேடிவைத்த பொருள் ஒன்றும் இல்லை எனவும், பன்னிரண்டில் பார்மணம் பட்டது என்பதற்குப் பன்னிரண்டாண்டில் உலக வாசனையை உணர்ந்துகொண்டது எனவும் உரைப்பாரும் உளர்.

**இடிஞ்சில் இருக்க விளக்கெரி கொண்டான்**
**முடிஞ்ச தறியார் முழுங்குவர் மூடர் ,**
**விடிஞ்சிரு ளாவ தறியா உலகம்**
**படிஞ்சு கிடந்து பதைக்கின்ற வாறே. 164**

இ-ள் - எனின்; உடல் நிலையாதென்று என்ன அறிந்தும் உணர்ச்சியற் றிருக்கின்றதே உலகம் என்று இரங்கியுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்; அகலிருக்க விளக்கை காலன்கொண்டான். மூடர்கள் விளக்கிற்கு நெய்வற்றிப் போனதையறியாமல் வீண் ஆரவாரஞ் செய்வார்கள். பேதமை நிரம்பிய இவ்வுலகம் பொழுது விடிந்தும் இருளாக இருப்பதையறியாது தடுமாறி, அந்த இருளிலேயே தோய்ந்துகிடந்து துடிக்கின்றதே என்னே அறியாமை என்றவாறு.

விளக்கெரி-விளக்காகிய தீப்பிழம்பு இடிஞ்சில் என்றது உடலையும், விளக்கு என்றது உயிரையும் உணர்த்திற்று. உடலிருக்க உயிரைக் காலன்கொண்டு போனான் என்பது கருத்து. காலன் அங்ஙனம் கொண்டுபோனது ஆன்மாவின்மீதுள்ள வெறுப்புக் காரணமன்று. பின்னை என்னையோவெனில்? ஆன் மாக்கள் செய்த பிராரத்த கன்மமாகிய நெய்வற்றியது; நெய் வற்றியவுடன் விளக்கு அவியத்தானே செய்யும். காலன் (காற்றுன்) கவர்தல் இயைபுடைத்தொன்றன்றே; அவன் கவர்ந்தான் என்பதாம்.

மூடர் முழங்குவர்-இங்ஙனிருந்தார் வாழ்ந்தார் இறந்தார் என்று புலம்புவார்கள் மூடர்கள் சிவ சூரியன் ஞானக்கதிரைப் பரப்பி விடிந்தும், இருளில் மூழ்கி இருளாய், ஒளியையறிந்துகொள்ளாத உலகம் அவ்விருளிலேயே படிந்துகிடந்து மலத்துள் புழு நெளியுமாப்போலே துடிக்கின்றது என்பதாம்

**மடல்விரி கொன்றையன் மாயன் படைத்த**
**உடலும் உயிரும் உருவந் தொழாமல்**
**இடர்படர்ந் தேழா நரகிற் கிடப்பர்**
**குடர்பட வெந்தமர் கூப்பிடு மாறே.** **165**

இ-ம் — எனின், இறைவனைத் தொழாமையால் உயிர்கள் நரகினையடைய உடலைவிட்டுப் பிரிகின்றன என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: மாயையைத் தொழிற் படுத்துகின்ற இறைவனால் படைக்கப்பட்ட உடலோடு கூடிய உயிர் இதழ்கள் விரிந்த கொன்றை மாலையை அணிந்த இறைவனது திருவுருவத்தைத் தொழாமல் இன்பத்தையே தேடி, குடல் ஒட்டும்படி விரும் பத்தக்க உறவினர்கள் கதறும்படியாக, ஏழாகிய நரகிற்கிடந்து வருந்துவார்கள் என்றவாறு.

உடலும் உயிரும், கொன்றையன் உருவம் தொழாமல் இடர்படர்ந்து தமர் கூப்பிடுமாறு ஏழாம் நரகில் கிடப்பர் எனக் கொண்டு கூட்டுக.

மடல் விரி கொன்றையன் உருவம் தொழாமல் என்பது கொன்றை மலரின் உள்ளே பிரணவ வடிவான கேசரங்கள் தோன்றநிற்கும்; அக்கொன் றையை அணிந்தவன் இறைவன் என ஈண்டுச் சிறப்பித்த அதனால், ஆன்மாக்கள் கடைத்தேறத் திருவுள்ளங் கொண்டு, சிவமணம் கமழ, தன் னுடைய பரநாத வடிவை விளக்கி நிற்கின்றான். இருந்தும் அவனுடைய உண்மை வடிவை உணர்ந்து தொழாமல் என்றவாறு.

மாயன் படைத்த உடலும் உயிரும் – மாயன் படைத்த என்ற அடைமொழி உடலைமட்டும் விசேடிக்கும். உடலும் உயிரும் என்பது உடலுடன் கூடிய உயிரெனப் பொருள்படும்; மாயனாற்படைக் கப்படுதல் நித்திய வஸ்துவாகிய உயிருக்கு இன்மை யின் என்க, மாயன் – மாயையை முதற்காரணமாகக் கொண்டு உடலைப் படைக்கத் திருவுளம்பற்றிய நிமித்த காரணனாகிய இறைவன். ஆன்மாக்கள் பலவாய் பரிபாக விசேடம் உள்ளனவாய் இருத் தலின், மாயையும் அவரவர்கட்குத்தக தனுகரணாதி களைத் தர, சுத்தம் அசுத்தம் பிரகிருதி என மூவகைப்பட்டது; அம்மூன்றையும் அடக்கி மாயன் என்றார்.

இடர் படர்ந்து – துன்பத்துள் பரவி அல்லது துன்பம் படரப்பெற்று என்றது, தீவினைகளைச் செய்து என்றவாறு.

ஏழாம் நரகிற்கிடப்பர் - நரகு ஏழாவன – அள்ளல், ரௌரவம், கும்பீபாகம், கூடசாலம், செந்துத்தானம், பூதி, மாபூதி என்பன.

வெந்தமர் குடர்படக் கூப்பிடுமாறு – விரும்பத் தக்க மனைவியும் மக்களும் தாயுந் தந்தையும் முதலான சுற்றத்தார்கள் குடரோடு குடர் ஒட்டக் கத்தும்படி, உரக்கக் கூவுகிறபோது வயிற்றை எக்கிக்கூவுதல் இயல்பாதலின் குடரோடு குடர் பொருந்துவதாயிற்று.

குடையும் குதிரையும் கொற்றவா ளும்கொண்டு
இடையுமக் காலம் இருந்து நடுவே
புடையு மனிதனுர் போகும்அப் போதே
அடையும் இடம்வலம் ஆருயி ராமே. 166

இ - எனின், முடிமன்னராயினும் இறப்பின் அவர்கட்கும் உயிரியக்கம் இல்லை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : குடை, குதிரை, கொற்றவாள் இவற்றைக்கொண்டு, பக்கங்களில் மனிதர்கள் சூழ நடுவே செல்கிற அப்பொழுதே, இடமும் வலமுமாக இயங்குகின்ற பிராணன், வருந்தும் காலத்தை அடையும் என்றவாறு.

குடையும் குதிரையும் கொற்றவாளுங் கொண்டு, புடையும் மனிதனுர் இருந்து நடுவே போகும் அப்போசே, இடம் வலம் ஆருயிர் இடையும் அக்காலம் அடையும் ஆம் எனக்கூட்டுக.

நாற்படைகளும் புடைசூழ நடுவேபோகும் அக்காலத்தே; உயிர் நீங்கும்; தடுப்பார் யாரும் இலர் என்பது கருத்து.

குடையும் குதிரையும் கொற்றவாளும் கொண்டு - குடை முதலியவைகளைத் தனது வெற்றிக்கும் பாதுகாப்புக்குமாக ஏந்திக்கொண்டு.

புடையும் மனிதனுர் இருந்து நடுவே போகும் அப்போதே - நாற்புறமும் மக்கள் பாதுகாக்க நடுவில் போகின்ற காலத்திலேயே. மக்கள் குடை

கொண்டு வந்தது விண்ணிலிருந்து தீங்குவராமல் தடுக்கவும், குதிரை கொண்டுவந்தது தீமை செய்வாரை விரைந்து சென்று பற்றவும், வாள்கொண்டு வந்தது அவர்களைக் வெட்டி வீழ்த்தவும் ஆம் என்க. அங்ஙனமிருந்தும் இடமும் வலமும் மாறி மாறி இயங்கிக்கொண்டிருந்த உயிருக்கு அழிவுகாலம் வந்தேதீரும் என்பதாம். இடையும் அக்காலம்-அழிவுகாலம். உயிர் என்றது ஈண்டு உயிரின் உயிர்ப்பினை என்க.

காக்கை கவரிலென் கண்டார் பழிக்கிலென்
பாற்றுளிப் பெய்யிலென் பல்லோர் பழிச்சிலென்
தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டும்
கூத்தன் புறப்பட்டுப் போனஇக் கூட்டையே. 167

இ-ளின், உயிர் பிரிந்தபின்பு இயற்றப்படும் உடலுக்குச் சடங்குகளால் பயன் இல்லை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தோற்பையாக உடலினின்று கன்மங்களை மிகச்செய்து வினை ஆக்கிக்கொள்ளுகின்ற உயிராகிய கூத்தன் வெளிப்பட்ட பின்னர், அவன் இருந்த கூடாகிய இந்த உடலைக் காக்கை கொத்தினால் என்ன? கண்டவர்கள் பழித்தால் என்ன? பால் தெளித்தால் என்ன? பலர் பாராட்டினால் என்ன? என்றவாறு.

உயிரைக் கூத்தன் என்றது உடலுள் புகுந்து உலகத்து ஆடுதலின். தொழில் அறச்செய்து-கன்மங்களை மிகுதியாகச் செய்து. அற-மிகுதியாக.

ஈட்டுதலாவது வினைப் போகங்களை உண்ணவந்த உயிர் உண்ணும்போதே தன்முனைப்போடு உண்ண ஆகாமிய சஞ்சித வினைகள் குவியுமாதலின் இங்ஙனம் கூறப்பட்டது.

தொழிலறச் செய்து ஊட்டும் எனப் பாடம் கொண்டு பிராரத்த வினை தொலைய நுகர்ந்து ஊட்டுகின்ற எனப் பொருள் கூறுவாருமுளர். உண்ணுதல் உயிரின் தொழிலாமேயன்றி. ஊட்டுதல் உயிரின் தொழில் ஆகாமை, ஆன்மா என்றும் சுதந்திர ஹீனன் என்னும் மரபுபற்றி உணர்க.

பாற்றுளி பெய்யிலென்-உடலைச் சுட்டெரித்த பிறகு பால் தெளித்து என்பையும் அள்ளிப் புண்ணிய தீர்த்தத்தில் கொட்டுதல் மரபாதலின் அதனால் உடலுக்கோ உயிருக்கோ ஆவதோர் பயனில்லையென்பார் என் என்றார்.

பல்லோர் பழிச்சிலென்-பிணத்தின் முன்னிலையில் இறந்தவருடைய பீடும் பாடும் பேசிப் பாராட்டுதலாலும் பயனில்லை என்றவாறு. 'பார்த்துழிப் பெய்யிலென் பல்லோர் பழிக்கிலென்' எனப் பாடங் கொண்டு வேறு உரை கூறுவாருமுளர். பார்த்துழிப் பெய்தல் காக்கை கவர்தலினும், பல்லோர் பழித்தல் கண்டார் பழித்தலினும் அடங்குதலின் அவர் கொண்ட பாடம் தவறென்க. அவர்கள் இங்ஙனம் பாடங் கொள்ளுதற்கு ஏது "நார்த்தொடுத் தீர்க்கிலென் நன்றாய்ந் தடக்கிலென், பார்த்துழிப் பெய்யிலென் பல்லோர் பழிக்கிலென் தோற்பையுள் நின்ற தொழிலறச் செய்தூட்டும், கூத்தன் புறப்பட்டக்கால்" என்னும் கருவி நூற்காட்சியாம்.

## 3. செல்வ நிலையாமை

*அஃதாவது, உடலைச் சதமென்று உன்னிய உயிர், அதன் நிலையாமையை அறிந்து அது நீங்கு முன்பு செல்வத்துணைகொண்டு சிந்தித்த எவற்றை யும் செய்து முடிக்கலாம் என்று இறுமாந்திருக்கு மன்றே; அப் புறப்பற்றையும் அகற்றச் செல்வத் தின் நிலையாமையைக் கூறுகின்றார்.*

**அருளும் அரசனும் ஆனையும் தேரும்**
**பொருளும் பிறர்கொள்ளப் போவதன் முன்னம்**
**தெருளும் உயிரொடும் செல்வனைச் சேரின்**
**மருளும் பினையவன் மாதவ மன்றே. 168**

இ - எனின், *அரச போகமும் நிலையற்றது என்பது அறிவித்தல் நுதலிற்று.*

இ - ள் : *அருளும், அரசரும், ஆனையும், தேரும், பொருளுமாகிய இவற்றைப் பிறர் பிடுங்கிக் கொண்டு போவதன் முன்னமே தெளிந்த உணர் வோடு, சிவபெருமான் திருவடியைச்சாரின், பிறகு அவன் சார்தற்குரிய மருட்சியைத் தரும் மாதவங்கள் ஒன்றும் இல்லை என்றவாறு.*

*அருள் - அரசபோகத்திருப்பார் குடிகள் அனைவ ரிடத்தும் செலுத்துவதாகிய உரிமை பற்றிய கருணை. அரசுமாற அருளும் மாறுமாகலின் 'பிறர் கொள்ளப் போவதன் முன்னம்' என்றார்*

*அரசர் - குறுநில மன்னர்கள். தெருளும் உயிர் தெளிந்த உணர்வு. உயிர் அதன் குணமாகிய உணர்*

வைக் காட்டிற்று; ஒற்றுமை நயம்பற்றி. சிவனைச் செல்வன் என்றது சென்றடையாத் திருவுடையான் ஆதலின்.

பின்னை அவன் மருளும் மாதவம் அன்று எனக் கூட்டிப் பின்பு அவ்வுயிர் மருளுதற்கு ஏதுவாக இயற்றப்படும் பெரியதவம் அன்று எனப் பொருள் கொள்க. செல்வனைச் சேர்தல் ஒன்றே அமையும்; மாதவம் வேண்டாம் என்பது கருத்து

இயக்குறு திங்கள் இருட்பிழம் பொக்கும்
துயக்குறு செல்வத்தைச் சொல்லவும் வேண்டா
மயக்கற நாடுமின் வானவர் கோனைப்
பெயற்கொண்டல் போலப் பெருஞ்செல்வ மாமே.169

இ - ளின் சிவபெருமானைச் சிந்திக்கின் பெருஞ்செல்வம் ஆம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: வானில் இயங்குகின்ற மதியையும் இருட்கூட்டத்தையும் ஒப்பதாகிய தளர்ச்சியுற்ற செல்வத்தைப்பற்றச் சொல்லவே வேண்டாம். தேவ தேவனாகிய சிவபெருமானை மயக்கம், நீங்க விரும்புங்கள்; மேகம் பெய்த மழைபோலப் பெருஞ் செல்வம் உங்களுக்கு உளதாகும் என்றவாறு.

இயக்குறு திங்கள் - எதுகைநோக்கி வலித்தல் விகாரம் பெற்றது. இருளும் மதியும் ஏறிக்குறைந்து வருதல்போலச் செல்வமும் தேய்ந்தும் பெருகியும் வரும்; அதைப்பற்றிச் சொல்லவும் வேண்டாம் என்பது கருத்து. ஒக்கும் செல்வம், துயக்குறு செல்வம் எனத் தனித்தனிக் கூட்டுக.

மயக்கற நாடுமின் – நிலையாதவற்றை நிலையின் என்றுணரும் மயக்கம் நீங்கப் பற்றற்றான் பற்றினைப் பற்றின் பற்றுவிடும் என்பர் ஆதலின்; மயக்கற வானவர் கோனாகிய மருந்தை நாடுமின் என்றவாறு.

பெயல் – மழை. கொண்டல் - பெருமழை பெய்யும் மேகம். பெருஞ்செல்வம் ஆம் என்றது முயற்சியின்றித் தானே பெருகும் என்றதாம்.

தன்னது சாயை தனக்குத வாதுகண்
டென்னது மாடென் றிருப்பர்கள் ஏழைகள்
உன்னுயிர் போம்உடல் ஒக்கப் பிறந்தது
கண்ணது காணொளி கண்டுகொ ளீரே. 170

இம் - எனின், தம் செல்வம் தனக்குதவாமைக்கு உவமைகாட்டி உண்மை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: தன்நிழல் தனக்கு உதவாதது கண்டும் என்னுடைய செல்வம் என்று இருக்கின்றார்கள் அறிவிலிகள். உடலோடுஒக்கப் பிறந்ததாகிய உன்னுடைய உயிர்போகிறதே. ஆகையால் உங்களுக்கு என்றும் உதவுகிற பொருள் ஒளியாய் உங்களுடனேயே உடனுறைந்து கண்டு காட்டுகிறது. இதனைக் கண்டு தெளியுங்கள் என்றவாறு.

தன்னிழல் தன்னின் வீயாது அடியுறைவதாயிருந்தும் தனக்கு நிழலாகாமைபோலே உங்களின் வேறாய் உழைப்பால் ஒன்றிய உங்கள் செல்வம் உங்களுக்கு உதவாது; அங்ஙனமிருந்தும் வச்சபொருள் நமக்காகும் என்றிருப்போர் அறிவிலிகள் என்றவாறு. மேலும் ஓர் உவமைகாட்டி விளக்கு

கின்றார்; உயிரும் உடலும் ஒக்கப் பிறந்தனவே ஆயினும் உங்களுயிர் உங்கள் உடலைவிட்டுப் போகிறதே; ஆதலால் எனது என்னும் புறப்பற்றை ஒழித்து, காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போ லிருக்கின்ற இறைவனைத் தரிசியுங்கள் என்று அறிவுறுத்தியவாறு.

ஈட்டிய தேன்பூ மணங்கண் டிரதமும்
கூட்டிக் கொணர்ந்தொரு கொம்பிடை வைத்திடும்
ஓட்டித் துரத்திட் டதுவலி யார்கொளக்
காட்டிக் கொடுத்தது கைவிட்ட வாறே 71

இ-ம்-எனின், ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்; வண்டுகள் ஈட்டிய தேனைப் பூவின் மணத்தோடு சேர்த்துச் சுவையுங்கூட்டிக் கொண்டு வந்து ஒருகொம்பில் அடையாகவைக்கும், அவற்றை வலியுள்ளவர்கள் ஓட்டித் துரத்திவிட்டு, தேன் அடையைக் கொள்ள. தேனிருந்த விடத்தைக் காட்டிக் கொடுத்த வண்டுகள் கைவிட்டுச் சென்றதை ஒக்கும் என்றவாறு.

வண்டு என்று ஒரு எழுவாய் வருவித்துரைக்க. ஈட்டியதேன்-பூக்கள்தோறும் சென்று அணுவணு வாகத் திரட்டிய தேன்.

பூமணம் கண்டு - பூவிலுள்ள மகரந்தப்பொடி களையும் கொண்டுவந்து. வண்டுகள் தேன் அடை கட்டுவதற்கு மகரந்தப் பொடிகளைக் கொண்டுவரு தல் இயல்பாதலின் இங்ஙனங் கூறினார்.

இரதமும் கூட்டி-எடுத்த தேனில் நீர்த்தன்மை மிக்கு, சுவை குன்றியிருக்குமாதலின் வண்டுகள் நீர் வற்றிச் சுவைமிக, தன்கொடுக்கிலுள்ள தேன்விஷத்தைத் தேன் அடையிலுள்ள ஒவ்வொரு அறையிலும் குத்திச் செலுத்துமாதலின் இங்ஙனம் கூறினார்.

ஓட்டித் துரத்திட்டு - தேனடையில் தீப்பந்தம் காட்டி, புகைத்து, துளசியும் புகையிலையும் வாயிலிட்டு ஊதி ஓட்டிவிட்டு,

தேற்றத் தெளிமின் தெளிந்தீர் கலங்கன்மின்
ஆற்றுப் பெருக்கிற் கலக்கி மலக்காதே
மாற்றிக் களைவீர் மறித்துங்கள் செல்வத்தைக்
கூற்றன் வருங்கால் குதிக்கலு மாமே. 172

இம் – எனின், இந்தச் செல்வத்தைக் கொண்டு காலனைக் கடக்க முடியாது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ- ள் : தெளிய உணராதோர் யாம் தெளிவிக்கத் தெளியுங்கள் : 'இயற்கையே தெளிந்த அறிவு உடையவர்காள்! எம் உபதேசத்தால் மீட்டும் கலங்காதீர்கள் ; ஆற்றுப் பெருக்கைப் போல, உங்கள் அறிவைக் கலக்கி மயங்காத வண்ணம் உங்கள் செல்வப்பற்றை மாற்றிக் களையுங்கள்; காலன் உங்களை அழைக்கவருகின்ற போது இச் செல்வத்தைக் கொண்டு அவனை வெல்லமுடியுமோ என்றவாறு.

குதிக்கலும் ஆமே என்பது "கூற்றம் குதித்தலும் கைகூடும்" என்புழிப்போலக் கடத்தல் என்னும் பொருளில் வந்தது.

உங்கள் செல்வத்தை மறித்து மாற்றிக் களைவீர் என்றது உங்கள் செல்வம் உங்கள் சுகபோகத்திற்கே உரியது என்ற எண்ணத்தை மறித்துப் பிறர் நலத்துக்காக என மாற்றி அதன்மேலுள்ள இவறன்மையாகிய பற்றுள்ளத்தை விடுங்கள் என்பதாம்.

**மகிழ்கின்ற செல்வமும் மாடும் உடனே**
**கவிழ்கின்ற நீர்மிசைச் செல்லும் கலம்போல்**
**அவிழ்கின்ற ஆக்கைக்கோர் வீடுபே ருகச்**
**சிமிழொன்று வைத்தமை தேர்ந்தறி யாரே. 173**

இம் - ஏனின், செல்வமெல்லாம் உடலுக்கு ஓர் ஏமமாக உதவப்பட்டனவன்றி உறுதியல்ல என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: மகிழ்தற்கு ஏதுவாகிய செல்வமும் பொன்னும், நீரின்மேற் செல்லுகிற கவிழ்ந்து போகிற மரக்கலம் போல என்றும் எக்கணத்தும் உடைந்துபோகின்ற இவ்வுடலுக்கு ஒரு இன்ப வாயிலாகச் சிமிழ் ஒன்று உதவியது போலாம்; இதனை உலக மக்கள் உணரார்கள் என்றவாறு.

செல்வமும் மாடும், நீர்மிசைச் செல்லும் உடனே கவிழ்கின்ற கலம்போல அவிழ்கின்ற ஆக்கைக்கு ஓர் வீடுபேருகச் சிமிழொன்றுவைத்தமை, போலாம்; (உலகவர்) தேர்ந்தறியாரே என்று கூட்டிப் பொருள் காண்க.

செல்வம் - மணியும், நெல்லும் முதலாயின. மாடு - பொன். "தேடியமாடு நீடுசெல்வமும்" என்ற பெரியபுராணத்தானும் ஓர்க. மாடு -

பசுக்கள் என்பாரும் உளர். உடனே அழிய இருக்கின்ற உடலுக்கு ஓர் களிப்பூட்டுங் கருவியாக உதவப்பெற்றன பொருளும் பொன்னும். அவை செப்பொன்று உதவியதுபோலாம் என்பது கருத்து. சிமிழ் எங்ஙனம் பரந்துபட்ட தன்மையைத் தடுக்கின்றதோ அங்ஙனமே செல்வங்கள் ஆன்மாவின் ஏகதேச வியாபகத்திற்கும் தடையாயிருக்கின்றன என்றவாறும். அவிழ்கின்ற ஆக்கை – கட்டு அவிழ்கின்ற உடல்; மூட்டு விட்டுப்போகின்ற உடல் என்பதாம். மரணகாலத்து நரம்புகளின் முருக்கவிழ்தலும் மூட்டு நழுவலும் இயல்பு. வீடுபேறு என்பது இன்பவாயில் என்ற அளவில் நின்றது.

வாழ்வு மனைவியும் மக்கள் உடன்பிறந்
தாரு மளவே தெமக்கென்பர் ஒண்பொருள்
மேவு மதனை விரிவுசெய் வார்கட்குக்
கூவுந் துணையொன்று கூடலு மாமே. 174

இ-னின், மனைவி மக்கள் முதலானோர் எமக்கு எவ்வளவு என்று வாதிடுவரேயன்றிக் கூவுந் துணையாகார் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தம்முடன் பங்குகொண்டு வாழ்வுநடத்தும் மனைவியும், மக்களும், உடன் பிறந்தார்களும், நீர் வைத்திருக்கிற ஒள்ளிய பொருளில் எமக்குரிய பங்கினளவு எவ்வளவு என்று வாதிடுவார், அதற்காக எல்லோரும் விரும்புகின்ற அச்செல்வத்தை விரிவுசெய்பவர்கள், அழைத்த குரலுக்கு ஏனென்று கேட்குந் துணையொன்று உண்டாகுமோ, இல்லை என்றவாறு.

வாழ்வு மனைவியும், மக்களும். உடன்பிறந் தாரும் ஒண்பொருள் எமக்கு அளவு ஏது என்பர்; மேவும் அதனை விரிவு செய்வார்கட்குக் கூவும் துணை ஒன்று கூடலும் ஆம் எனக் கூட்டுக.

வாழ்வு மனைவியும்-இல்லற வாழ்விற்கு இன்றியமையாத மனைவி. இல்லாளகத்திருக்க இல்லாத தொன்றில்லை ஆதலின் வாழ்வுமனைவி என்றருளப் பெற்றது. மக்களும் உடன்பிறந்தாரும் என எண்ணும்மை விரித்துக்கொள்க. கூவும் துணை-உயிர் பிரிகின்ற காலத்துக் கூப்பிடுந் துணை. இவன் இறந்துகிடந்ததும் பொருளைப் பங்குபிரிப்பதில் பொட்டியிடுவாரேயன்றி இவனுக்குக் கூப்பிடுந் துணையாகார் என்பதாம். இம்மந்திரத்திற்கு அதிகாரத்திற் கியைபில்லாத வேறு உரை கூறி இடர்ப் படுவாரும் உளர்.

**வேட்கை மிகுத்தது மெய்கோள்வார் இங்கில்லை**
**பூட்டுந் தறியொன்று போம்வழி ஒன்பது**
**நாட்டிய தாய்தமர் வந்து வணங்கிப்பின்**
**காட்டிக் கொடுத்தவர் கைவிட்ட வாறே. 175**

இ-ம்-எனின், யாக்கை நிலையற்றதாதலின் பொருளாசையைக் குறைத்து உண்மையை உணர வேண்டும் என வற்புறுத்தல் நுதலிற்று.

இ-ள்: உயிரைப் பந்தித்துவைக்கும் கட்டுத்தறி ஒன்றேயாம். ஆனால் பந்தித்த உயிர் போம் வழிகளோ ஒன்பது. அவ்வழிகளின் வாயிலாக உயிர் போனபின் நம்மை யீன்ற தாயும், உறவினரும் பின்னால் சிறிது தூரம் வந்து வீழ்ந்தும் வணங்கியும்

காட்டிக்கொடுத்துவிட்டு அவர்கள் கைவிட்டுச் செல்லும்விதம் இதுவாம். மிகுதிப்படுத்தியது ஆசையாகும். அதன் உண்மை உணர்ந்து கொள்பவர் இங்கு ஒருவரும் இல்லையாம் என்றவாறு.

பூட்டுந்தறி ஒன்று-பற்றுக்கோடாக உயிரைக் கட்டும் தடி ஒன்றும். தறி என்றது உடலை. போம் வழி ஒன்பது-உயிர் வெளிப்பட்டுப் போகும் வழிகள் ஒன்பதாகும். அவ்வழிகள் ஒன்பதாவன; கண் இரண்டு, காது இரண்டு, மூக்கு இரண்டு, வாய் ஒன்று, குதம் குய்யம் ஆம்.

நாட்டிய-உலகில் தோற்றுவித்து நிலைபெறுத்திய; பெற்ற என்பது கருத்து. வணங்கி – கீழே விழுந்து நமஸ்கரித்து. தாய் நமஸ்கரித்தல் மரபு அன்மையின் தாய் கீழே விழுந்து என்றும், தமர் வணங்கி என்றும் பொருள் கொள்க.

காட்டிக்கொடுத்து அவர் கைவிட்டவாறு – சுடுவார்க்கும் இடுவார்க்கும் உடலைக் காட்டிக்கொடுத்து விட்டு, தாயுந்தமரும் கைவிட்டபடி இதுவாமாதலின் ஆசையைப் பெருக்கிக்கொண்டே சென்று அதன் உண்மைத்தன்மையை அறிபவர் இங்கில்லை என்று கூறியவாறு.

**உடம்பொ டுயிரிடை விட்டோடும் போது**
**அடும்பரி சொன்றில்லை அண்ணலை எண்ணும்**
**விடும்பரி சாய்நின்ற மெய்நமன் தூதர்**
**சுடும்பரி சத்தையும் சூழகி லாரே. 176**

இ-ள் – எனின், பிராரத்தம்கழியின் நமன்தூதர் தாமதியார் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : உடலைவிட்டு உயிர் நீங்குந்தன்மையை ஆராய்ந்துகொண்டு நின்ற நமனது உண்மைத் தூதர்கள், சுடும் ஊறுணர்ச்சியையும் ஆராய மாட்டார்கள். ஆதலால், உடம்பைவிட்டு உயிர் ஓடுகின்றபோது தடுக்கும் உபாயம் ஒன்றுமில்லை; ஆகவே இறைவனை எண்ணுங்கள் என்றவாறு.

விடும்பரிசு ஆய் நின்ற மெய் நமன் தூதர் சூழ கிலார்; ( ஆதலின் ) உயிர் உடம்பொடு இடைவிட்டு ஓடும்போது அடும்பரிசு ஒன்று இல்லை; அண்ணலை எண்ணும் என முடிக்க,

உடம்பொடுயிரிடை என்றது, " உடம்பொடு உயிரிடை நட்பு " என்னும் திருக்குறளை நினைவூட்டு கிறது.

விடும்பரிசு ஆய்நின்ற மெய் நமன் தூதர் – பிராரத்தகன்மம் உண்டு கழியும்வரை உடனிருந்த உயிர் உண்டு கழிந்தபின்பு, அவ்வுடம்பை விட்டு விடும் உபாயத்தை ஆராய்ந்து எதன்வழியாகச் சென்று இவ்வுயிரைக் கவர்வோம் என்றிருக்கின்ற எமதூதர்கள்.

சுடும் பரிசத்தையும் - அவர்கள் அங்ஙனம் கவராதவாறு தடுத்தற்கு இயற்றப்படுகிற மந்திரமும் தந்திரமும் மருந்துமாகிய இவற்றால் சுடுகின்ற உணர்ச்சியையும்,

சூழகில்லார் - ஆராய்ந்து இவர்களைக் கவராது விட்டுவிடுவோம் என்று எண்ணார்.

## 4. இளமை நிலையாமை

அஃதாவது, செல்வத்தின் பயனைத் துய்ப்பதற்கு ஏற்ற இவ்விளமையும் நிலையாது என்பதாம்.

கிழக்கெழுந் தோடிய ஞாயிறு மேற்கே
விழக்கண்டும் தேறார் விழியிலா மாந்தர்
குழக்கன்று மூத்தெரு தாய்ச்சில நாளில்
விழக்கண்டும் தேறார் வியனுல கோரே. 177

இம் - எனின், எடுத்துக்காட்டுக்களான் இளமை நிலையாமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : கிழக்கே உதித்து வானமண்டலத்தில் ஓடிய சூரியன் மேற்கில் மறைதலைக்கண்டும் கண்ணற்ற மக்கள் இதனைத் தெளியார் ஆயினார். இளங்கன்று காளையாய், மூத்து எருதாய், சின்னாட்களில் இறப்பதைக் கண்டும் அகன்ற உலகிலுள்ள மக்கள் தெளியாராயினார். என்னே! இவர்களின் அறிவு என்றவாறு.

உதித்த சூரியனைக்கொண்டும், குழக்கன்றைக் கொண்டும் இளமை நிலையாமையை உணர்த்தியவாறு.

ஆண்டு பலவும் கழிந்தன அப்பனைப்
பூண்டுகொண் டாரும் புகுந்தறிவா ரில்லை
நீண்டன் காலங்கள் நீண்டு கொடுக்கினும்
தூண்டு விளக்கின் சுடரறி யாரே. 178

இம் - எனின், வாழ்வின் வகை அறியாத மக்களின் இயல்பை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் ; பல ஆண்டுகள் கழிந்தன ஆயினும் தந்தையாகிய இறைவனைத் தியானித்து அவன் பக்கல் அணுகி அனுபவிப்பவர்கள் யாரும் இல்லை. அளவில் அடங்காத இயல்பையுடைய காலங்கள் மேலும் நீண்டு கொடுத்தாலும், தூண்டப்பட்ட விளக்கின் சுடரைப்போன்றது அது என்று யாரும் அறியமாட்டார்கள் என்றவாறு.

ஆண்டு பலவும் கழிந்தன - பிறந்து பதினாறு ஆண்டுகள் நிரம்பின. அங்ஙனம் அறிவறிந்த பருவம் கிடைத்துப், உயிர்த் தந்தையாகிய இறைவனைப்பற்றி, அவனருகிலே புகுந்து, அவனருளாகிய எல்லையற்ற இன்பத்தை அனுபவிப்பார் ஒருவரும் இல்லை என்பது உணர்த்தியவாறு.

காலம் அடியும் முடிவும் அறியப்படாத எல்லையற்ற பொருளாதலின் 'நீண்டன காலங்கள்' எனப் பட்டது. நீண்டு கொடுக்கினும் - இவனுடைய வாழ்நாள் நீண்டாலும். தூண்டு விளக்கின் சுடர்- தூண்டப்பட்ட விளக்கின் ஒளி சிறிது நேரம் நீண்டு எரிந்து பின் சுடர்தட்டச் சுருங்குமாறுபோல, இளமையும் நிலைத்ததுபோலக் காணப்படினும் நில்லாது அழியும் தன்மையது; இதனை அறியார் மூடர்கள் என்றவாறு.

**தேய்ந்தற் றொழிந்த இளமை கடைமுறை**
**ஆய்ந்தற்ற பின்னை அரிய கருமங்கள்**
**பாய்ந்தற்ற கங்கைப் படர்சடை நந்தியை**
**ஓர்ந்துற்றுக் கொள்ளும் உயிருள்ள போதே. 179**

இம் - எனின், இளமை நிலையாதது ஆதலின் உள்ளபோதே இறைவனைத் தியானிக்க என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: இளமையானது நாள்தோறும் தேய்ந்து சிறிது சிறிதாக அற்றுக் கடைசியில் ஒழிந்தன ஆம். பின்னர், அருமையான காரியங்களை ஆற்றுவோம் எனின், அவையும் ஒழிந்தனவாம். ஆதலால் உயிருள்ள காலத்திலேயே கங்கையாறு பாய்ந்து மறைந்த பரவிய சடையினையுடைய சிவபெருமானை ஆராய்ந்து பொருந்துங்கள் என்றவாறு.

இளமை தேய்ந்து அற்றுக் கடைமுறை ஒழிந்த; பின்னை அரிய கருமங்கள் ஆய்ந்து அற்ற; (ஆதலின்) உயிருள்ளபோதே கங்கை பாய்ந்து அற்ற படர்சடை நந்தியை ஓர்ந்து உற்றுக்கொள்ளும் என முடிக்க.

தேய்தல்—மெலிதல். அறுதல்—சிறிது சிறிதாக இற்றுப்போதல். ஒழிதல்-இல்லையாதல்.

பின்னை அரிய கருமங்கள் ஆய்ந்து அற்ற — இளமை கழிந்த பிறகு அருமையான காரியங்கள் ஆராய்ந்து செய்யமுடியாதன ஆயின.

பாய்ந்து அற்ற — பாய்ந்து மறைந்த. பகீரதன் பன்னீராயிரம் ஆண்டுகள் தவம் செய்து கொணர, அதிவேகமாகப் பாய்ந்து இறைவன் திருச்சடையின் ஒரு மயிர்க்காம்பினடிக்கும் போதாதவாறு மறைந்த என்பதாம்.

ஓர்ந்து உற்றுக்கொள்ளும் – மனத்தைப் புறஞ் செல்லாவாறு தடுத்து, ஒருமுகப்படுத்தி, சிவயோகத்தால் அவன் திருவடியையே பொருந்தி, தம் மனத்தை விட்டுப் பிரியாதபடி பற்றிக் கொள்ளுங்கள் என்று இளமை கழியுமுன்பு இயற்ற வேண்டிய பணிகளை அறிவித்தவாறு.

விரும்புவர் முன்னென்னை மெல்லியன் மாதர்
கரும்பு தகர்த்துக் கடைக்கொண்ட நீர்போல்
அரும்பொத்த மென்முலை ஆயிழை யார்க்குக்
கரும்பொத்துக் காஞ்சிரங் காயும் ஒத்தேனே. 180

இம் – எனின், மாதர் விரும்பிய இளமை எஞ்ஞான்று இவ்வண்ணம் ஆயிற்று என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: மென்மைத் தன்மையை யுடைய மாதர்கள். கரும்பை உடைத்துக் கடைவாயிற் கொள்ளப்பட்ட சாற்றினைப் போல, இளமையுள்ள காலத்தில் என்னை விரும்புவார்கள்; அத்தகைய யான் தாமரையரும்பை யொத்த மெல்லிய முலையினையும், ஆராய்ந்த இழையினையும் உடைய பெண்களுக்கு இளமையில் கரும்பை ஒத்தும் இப்பொழுது காஞ்சிரங்காயை ஒத்தும் இருந்தேன் என்றவாறு.

மெல்லியல்மாதர் முன் என்னை கரும்பு தகர்த்துக் கடைக்கொண்ட நீர்போல் விரும்புவர்; ஆயிழை யார்க்குக் கரும்பொத்துக் காஞ்சிரங்காயும் ஒத்தேன் என முடிக்க.

கரும்பை மென்று கடைக்கொண்ட சாற்றை, சிறிதும் நழுவிவிடாதபடி சுவைத்துச் சுவைத்து

விழுங்குமாறுபோல, நான் கட்டழகனாய் இருந்த காளைப் பருவத்து காணக் கேட்க உண்ண உயிர்க்க உற விரும்புவர்; அங்ஙனம், கரும்பொத் திருந்த நான், இளமை கழிந்து பல் கழன்று தசை திரங்கிக் குழி விழுந்த இக்காலை, எட்டிக்காயைப் போலக் கசந்தேன் என்று இளமை நிலையாமை யையும் அதன் பயனையும் அறிவித்தவாறு.

**பாலன் இளையன் விருத்தன் எனநின்ற**
**காலம் கழிவன கண்டும் அறிகிலார்**
**ஞாலம் கடந்தண்டம் ஊடறுத் தானடி**
**மேலும் கிடந்து விரும்புவன் நானே.** 181

இம் – எனின், காலத்தின் அருமையை உணரார் மூடர்; நான் நாதற்கு அன்பு செய்வேன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: நமக்கென பால்வரை தெய்வத்தாற் பகுக்கப்பட்டுநின்ற காலம் பாலன் என்றும், காளை என்றும், கிழவன் என்றும் கழிவதைக் கண்டும் இளமை நிலையாதென்பதை மக்கள் அறியகில்லார். அவர்கள் அங்ஙனமாக நான், இவ்வுலகைக் கடந்து அண்டங்களை ஊடறுத்துநிற்கின்ற இறைவ னுடைய திருவடியை மேன்மேலும் கிடந்து அன்பு செய்வேன் என்றவாறு.

நின்ற காலம் பாலன் என இளையன் என விருத்தன் எனக்கழிவன கண்டும் (உலகவர்) நான் ஞாலங்கடந்து அண்டம் ஊடறுத்தானடி மேலுங் கிடந்து விரும்புவன் என முடிக்க.

நின்ற காலம் – வினைப் பொசிப்பிற்காக வரையறுக்கப்பெற்று அந்தந்த ஆன்மாக்கட்கு என நின்ற காலம். மேலுங்கிடந்து - மேன்மேலும் பசு போதமற்று, பதி வசமாய்க்கிடந்து விரும்புவேன் என்றவாறு.

காலை எழுந்தவர் நித்தலும் நித்தலும்
மாலை படுவதும் வாணாள் கழிவதும்
சாலுமவ் வீசன் சலவிய னாகிலும்
ஏல நினைப்பவர்க் கின்பஞ்செய் தானே. 182

இ - னின், வாணாளை வீணாள் ஆக்கியது போதும் என எண்ணுவார்க்கு இன்பம் நல்குவன் ஈசன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: நாடோறும் காலை எழுந்த கதிரவன் மாலையில் அத்தமிப்பதும், அதனால் நமது வாழ்நாள் கழிவதும் போதும். அந்த இறைவன் கோபத்தோடு கூடியவன் ஆயினும் பொருந்த நினைப்பவர்கட்கு இன்பம் செய்தானவான் என்றவாறு.

காலை எழுந்தவர்-சூரியன். வாணாள் கழிவதும் என்பது "நாளென ஒன்றுபோற் காட்டி உயிரீரும் வாள்" என்றதை அடியொற்றி எழுந்தது. சலவியன்-கோபத்தையுடையவன். ஏல நினைப்பவர்க்கு-தத்தம் பக்குவங்கட்குப் பொருந்த நினைப்பவர்களுக்கு

பருவூசி ஐந்துமோர் பையினுள் வாழும்
பருவூசி ஐந்தும் பரக்கும் விருகம்
பருவூசி ஐந்தும் பனித்தலைப் பட்டால்
பருவூசிப் பையும் பறக்கின்ற வாறே. 183

இ-ம் — எனின், இந்திரியங்களும் இளமையும் நில்லா என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பருத்த ஊசிகள் ஐந்தும் ஓர் பையில் வாழ்கின்றன. அவை ஐந்தும் பறக்குங் காகமாகும். அவ்வூசிகள் ஐந்தும் நடுக்கங் கண்டால், அவ்வூசிகள் வழும் பையும் பறந்துபோம் என்றவாறு.

பருவூசி ஐந்து - ஐம்பொறிகள். பருவூசி—ஸ்தூல இந்திரியங்கள். இந்திரியங்கள் ஊசிபோலச் சென்று பொருட்களைப் பற்றுதலின் பருவூசி எனக் குறிப்பித்தவாறு. பை-உடல். இந்திரியங்கள் தம் இஷ்டப்படி பறந்து சென்று நல்லவற்றிலும், தீயவற்றிலும் படிதலின் 'பறக்குங்காகம்' என்றார். விருகம் - காகம்.

பனித்தலைப்பட்டால்-நடுக்கம் கண்டால். இந்திரியங்கள் நடுக்கங் கண்டால் உடலழியும் என்றவாறு.

" புலன் ஐந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி அறிவு அழிந்திட்டு ஐமேல் உந்தி அலமந்த போதாக அஞ்சேல் என்றருள் செய்வான் " என்று ஞானசம்பந்தர் அருளுவதுங் காண்க.

**கண்ணதும் காய்கதி ரோனும் உலகினை**
**உண்ணின் றளக்கின்ற தொன்றும் அறிகிலார்**
**விண்ணுறு வாரையும் வினையுறு வாரையும்**
**எண்ணுறும் முப்பதில் ஈர்ந்தொழிந் தாரே. 184**

இம் - எனின், எல்லாமாக இருக்கின்ற இறைவனை அறியாதவர்களாய், இளமையிலேயே செய்த

வினைக்கீடாகத் தேவரும் நரகரும் ஆயினரே என்று இரங்குதல் நுதலிற்று.

இ – ள் : கண்ணொளியும், சூரியனொளியும் இவ் வுலகத்தை உள்நின்று கலந்திருப்பதாகிய ஒப்பற்ற பொருளுமாக இருக்கும் இறைவனை அறியமாட்டா தாராய் சுவர்க்கம் எய்துவாரும், நரகம் எய்து வாரும் எண்ணப்படுகின்ற முப்பது ஆண்டில், அறு பட்டு அழிந்தார்கள் என்றவாறு.

கண்ணது – கண்ணின் கண்ணதாகிய ஒளி. காய் கதிரோன் என்பது ஆகுபெயராகச் சூரிய னொளியை உணர்த்திற்று. இறைவன், கண்ணொளி யாயிருந்து காணுமுபகாரமும் அருக்கனொளியா யிருந்து காட்டு முபகாரமும் புரிகின்றார் என்பது. உலகினை உள்நின்று அளக்கின்ற தொன்று – விசுவ அந்தர்யாமியாய் நின்று தமது அளவற்ற பெருமையில் உலகம் ஏகதேசமாக இருத்தலை அளந்துகாட்டுகின்ற தலைவனை அறிகிலாராய் என்பது.

விண்ணுறுவாரையும் வினையுறுவாரையும்என்ப வற்றுள் ஐகாரம் சாரியை, தத்தம் வினைகட்கு ஏற்பச் சுவர்க்க நரகங்களை அடைபவர்களாக என்பது பொருள்.

ஒன்றிய ஈரெண் கலையும் உடன்றன
நின்றது கண்டு நினைக்கிலர் நீதர்கள்
கன்றிய காலன் கருக்குழி வைத்தபின்
சென்றதில் வீழ்வர் திகைப்பொழி யாரே. 185

இம் - எனின், உபாயம் தந்தும் உயிர்கள் உணராமையை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பொருந்திய பதினாறு கலைகளும் நம்மோடு உடனுறைந்து நிற்பதைக்கண்டும் அக்கலைகளினிடமாக இறைவன் விளங்கி நிற்றலை நினைக்கின்றிலர் இழிகுண மக்கள். சினந்த காலன் என்னும் காலதேவதை, பிறவிக்கு ஏதுவாகிய கருப்பாசயத்திற் புதைத்த பின் அதிலேபோய் வீழ்கின்றார்களே; மல மயக்கம் ஒழியாதவர்களாக உள்ளனரே, என்றவாறு.

பதினாறு கலைகளாவன உன்மனைமுதல் பதினாறு. இதனைச் சோடசகலாப்பிராசாதத்துள் காண்க.

இறைவன் பதினாறு கலைகளுடன் உடனுற நிற்றலாவது அங்கங்கே கலைக்கு அதிபதியாய் நிற்றல்.

எய்திய நாளில் இளமை கழியாமை
எய்திய நாளில் இசையினால் ஏத்துமின்
எய்திய நாளில் எறிவ தறியாமல்
எய்திய நாளில் இருந்துகண் டேனே. 186

இம் - எனின், வாணாளை வீணாளாக்கலாகாது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : பிராரத்த வினைகட்கீடாக, வரையறுக்கப்பட்ட வாழ்நாளில், இளமை நீங்காத வண்ணம். இறைவனை, அவனுக்கே உரிய தோத்திரங்களால் ஏத்துங்கள் அங்ஙனம் வரையறுக்கப்பட்ட நாளிலே,

பிராணவாயு வெளிப்படுவதை அறியாதபடி, அடைந்த அந்நாளிலே யோகிருந்து நான் கண்டேன், அதனை நீங்களும் ஏத்துமின்கள் என்றவாறு.

எய்தியநாள் - பிராரத்த வினையின் நுகர்ச்சிக்காக எடுத்த உடம்பிலே இவ்வளவுநாள் இருக்க என்று வரையறுக்கப்பட்ட நாள்

இளமை கழியாமை-பாலகனுய்க் கழிந்த நாள் போக, பண்பட்ட அறிவைப் பயன்படுத்தும் நெறி அறிந்திருந்தும் காளைப்பருவமும் கன்னிப்பருவமும் கழியாமை; இங்ஙனம் கூறியது இறைவன் புகழை உணர்ந்து ஓதுதற்கு உரிய பருவத்திலேயே என்றவாறு.

இசையினுல் ஏத்துமின்-இசையோடு தோத்திரியுங்கள். எறிவது அறியாமல்-ரேசகமாக வெளியில் தள்ளப் பெறுகின்ற பிராணவாயுவை அறியாதபடி; என்றது பூரக கும்பக நிலையிலேயேயிருந்து ஏத்துங்கள் என்றவாறு.

இருந்து கண்டேன் - யோகிருந்து அறிந்து அநுபவித்தேன் என்பதாம்.

## 5. உயிர் நிலையாமை

அஃதாவது உயிரினது நிலையாமை என்றவாறும்; உயிர், அநாதி நித்தியமன்றே? "என்று நீ அன்று நான்" என்பது சிவானுபூதிச் செல்வர்கள் திருவாக்கன்றே? அங்ஙனமாக, உயிரினது நிலையாமை என்றது எங்ஙனம் பொருந்துமெனின்

உடலின்கண் உயிரினது நிலையாமை என இடப் பெயர்ச்சொல் வருவித்து முடிக்கின், அவ்வையம் எழுதற்கு இடனின்றுமென்க. ஆசிரியர் வள்ளுவனார் கல்வியின் இன்றியமையாமையைக் கல்வி கல்லாமை யென இரண்டதிகாரங்களால் விளக்கினாற்போல, யாக்கை நிலையாமை, யாக்கையின்கண் உயிர் நிலையாமை என்ற இருபகுதியான் எடுத்தோதினார் திருமூலரும் என்க.

தழைக்கின்ற செந்தளிர்த் தண்மலர்க் கொம்பில்
இழைக்கின்ற வெல்லாம் இறக்கின்ற கண்டும்
பிழைப்பின்றி எம்பெரு மானடி யேத்தார்
அழைக்கின்ற போதறி யாரவர் தாமே. 187

இம்–எனின், தோன்றுவ யாவும் இறக்கக்கண்டும் உலகவர் இறைவனடி ஏத்துகின்றிலரே! என்று இரங்கிக் கூறுதல் நுதலிற்று.

இ - ள் : தழைத்து வளர்ந்திருக்கின்ற செம்மை யாகிய தளிரையும் குளிர்ந்த மலரையும் உடைய பூங் கொம்பிலே உண்டாக்கப்பட்ட பொருள்கள் யாவும் இறக்கின்றனவாக இருப்பதைக் கண்டும், தவறாமல் எம்பெருமானின் திருவடியை ஏத்தாதவ ராய் இருக்கின்ற அவர்கள் எமன்வந்து அழைக்கின்ற காலத்தை அறியாதவர் ஆவர் என்றவாறு.

கொம்பில் இழைக்கின்றவெல்லாம் இறக்கின்ற கண்டும், அடியேத்தார் அவர் போது அறியார் எனக் கூட்டுக.

தழைக்கின்ற செந்தளிர்த் தண்மலர்க்கொம்பு - ஒருகாலைக்கொருகால் பொலிந்து விளங்குகின்ற செந்தளிர் போன்ற பாதங்களையும், நிறத்தை யுடைய மேனியையும், தண்மலர்போன்ற கை கண் முகம் இவைகளையுமுடைய பூங்கொம்பு போன்ற பெண்கள்.

இழைக்கின்றவெல்லாம் - கருவாக உண்டாக்கப் படுகின்ற உயிர்கள் எல்லாம்; என்றது மாதா வயிற்றிலிருந்து பிறந்த எல்லாம் என்றவாறு.

இறக்கின்ற கண்டும் – தத்தம் கால எல்லையில் பிறந்த உயிர்கள், உடலைவிட்டுக் கடந்து செல் வதைக் கண்டும். இறத்தல் – கடத்தல்.

பிழைப்பின்றி - பேசாத நாளெல்லாம் பிறவா நாள் ஆதலின் வாழ்நாளை வீழ்நாளாக்கும் தவறின்றி எம்பெருமான் எமக்கெல்லாம் தலைவன் என்று திருவடி ஏத்துவாரையும். ஏத்தாதாரையும் தம்மொடு படுத்திக் கூறியது " அடி ஏத்தாதாரும் கவலற்க; எம்பெருமான் அடியை அடைய யாம் துணையிருக் கின்றோம்! உடன் வருக" என உணர்த்திய குறிப்புமாம். கற்றறிந்த மகனுக்கும் கல்லாத மூடனுக்கும் தாயாகியாள் ஒருத்தி அவ்விருவரானும் எந்தாய் எனப் பாராட்டப் பெறுதல் போல அனைத்து மக்களுக்கும் கருணையிற் குறைவின்றி அவரவரும் எம்பெருமான் எம்பெரு மான் என்று பாராட்டப் பொதுமையின் நிற்கின்றான் என்றவாறு.

அழைக்கின்றபோது – வினைப்போகம் முற்றுப் பெற்றகாலத்து. அஃதாவது உடலையும் உயிரையும்

கூறுசெய்கிற கூற்றுவன் வந்து உயிரை அழைக் கின்ற காலத்து என்பதாம்.

எமன் வந்து அழைக்கின்ற காலத்தை அறியார் என்றது உயிரும் உடலும் கூடியிருக்கின்ற காலத்தி லேயே இறைவனடியை ஏத்தி உய்க என்று பணித்த குறப்பாம்.

ஐவர்க் கொருசெய் விளைந்து கிடந்தது
ஐவரும் அச்செய்யைக் காத்து வருவார்கள்
ஐவர்க்கு நாயகன் ஓலை வருதலால்
ஐவரும் அச்செய்யைக் காவல்விட் டாரே. 188

இம் - னில், இறுதிக் காலத்தில் கருவிகரணங் கள் காரியப்படா என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: ஐந்து இந்திரியங்களாகிய ஐந்து பேருக்கும் பொதுவாய் ஒரேவயலாகிய தேகம் வினைப் போகங்கள் விளைந்துகிடந்தது. முற்கூறிய பஞ்சேந்திரியங்களாகிய ஐந்துபேரும், வினைப் போகம் விளைந்திருக்கின்ற உடற்புலத்தைக் காத்து வருவார்கள். அப் பஞ்சேந்திரியங்களாகிய ஐவரையும் கொண்டு செலுத்தும் தலைவனாகிய உயிருக்கு எமனிடமிருந்து ஓலை வருவதால் முற்கூறிய ஐவரும் காவலை விட்டு விட்டார்கள் என்றவாறு.

வினைமுடிபு வெளி. உருவக அணிபற்றி வந்தது இது.

பஞ்சேந்திரியக்களுக்குப் பொதுவாகஇவ்வுடற் புலம் வினைப்போகங்களை விளைவித்துக கிடக்

கின்றது; அப்போகங்களைப் பருவகாலம் வரையில் பாதுகாத்து வருபவை பஞ்சேந்திரியங்களே. அப்போது உயிருக்கு ஓலை வந்துவிட்டது; தலைவன் கழிந்தான் என்ற உடனே பொறிக்காவல் போய் விட்டது; செய் பாழ்பட்டுக் கிடந்தது என்றவாறு.

இம்மந்திரத்திற்கு இவ்வாறன்றி, பஞ்சேந்திரியங்கட்கும் வினைப்பயன் நுகரக்கிடந்தது; அவ்வினையைப் பிறர் நுகராத வண்ணம் பஞ்சேந்திரியங்கள் பாதுகாத்தன; பதியினிடமிருந்து ஓலை வந்தது; எல்லாரும் வினையாகிய அச்செய்யைக் காவல் விட்டனர் என்று உரைப்பாருமுளர். அவ்வுரை பொருந்தாமை ஆழ்ந்துணர்க. "வினைப்போகமே ஒருதேகங் கண்டாய், வினைதான் ஒழிந்தால் தினைப் போதளவும் நில்லாது" என்பர் ஆதலின் உடல் உள்ளபோது திருவடி சம்பந்தம் பெறவேண்டும் என்பதாம்.

இங்ஙனமன்றி, உயிராகிய ஒருநிலம் பொறியாகிய ஐவர்க்கும் உரியதாக விளைந்து கிடந்தது; ஐவரும் நிலத்தைத் தம்வசப்படுத்திக் காத்தனர்; இறைவன், ஆருயிர்கள் நல்வழிப்படுத்தற்பொருட்டு ஐவர்க்கு ஒற்றிவைத்தனன்; அவன் ஆணைவழிக் கூற்றுவன் ஓலைவந்தது; ஐவரும் காவல் கைவிட்டனர் என உரைகூறுவாரும் உளர். இப்பொருளும் வலிந்து கோடலியல்பிற்றுதல் காண்க.

**மத்தளி ஒன்றுள தாளம் இரண்டுள**
**அத்துள்ளே வாழும் அரசரும் அஞ்சுள்ள**
**அத்துள்ளே வாழும் அரசனும் அங்குளன்**
**மத்தளி மண்ணாய் மயங்கிய வாறே. 189**

இம் - எனின், உயிர் நீங்கின் உடல் மண்ணோடு மண்ணாம் என்கின்றது.

இ - ள் : மண்ணாலாகிய கோயில் ஒன்று உண்டு அதில் ரேசக பூரகங்களாகிய தாளங்கள் இரண்டுள்ளன; மத்தளியில் வாழும் சிற்றரசர்கள் ஐவர் உளர்; அங்கேயே முடிமன்னன் ஒருவனும் வாழ்கின்றான்; அவன் போய்விட்டபின், அக்கோயில் மண்ணாயிற்று என்றவாறு.

மத்தளி - மண் + தளி என்பதன் சிதைவு. தளி - கோயில்.

மத்தளி ஒன்றுள - உடல் மாயையின் காரியமாதலின் மண் தளி எனப்பெற்றது "தேரின் மண் மாயையாக" என்ற சித்தித் திருவாக்கும் சிந்திக்க. ஒன்று என்றதற்கு ஏற்ப உண்டு என முடிதல் வேண்டும். மத்தளி என்பது பால்பகா அஃறிணைப் பெயராதலானும் ஒன்று என்றது ஈண்டு எண் குறித்து நில்லாது ஒருகாரியங் கூறுவன் என்புழிப் போல உரை நடைச் சுவைதர நின்றது ஒன்றாதலானும் உள எனப்பன்மை முடிபேற்றது.

தாளம் இரண்டு உள - மூச்சுக்காற்றை உள்ளுக் கிழுத்தலாகிய பூரகமும், வெளிவிடுதலாகிய இரேசகமும் எனத் தாளங்கள் இரண்டுள்ளன. ரேசக பூரகங்களைத் தாளம் என்றது, பூரிக்குங்கால் மார்பு வீங்கி உயர்ந்தும், இரேசிக்குங்கால் ஒட்டித் தாழ்ந்தும் இயங்குதலின். தாளமிடுங்கால் கை யுயர்ந்தும், ஒற்றுங்கால் கைதாழ்ந்தும் வருதல் இயல்பு. உடலை மத்தளி (மத்தளம்) என்றமைக்கு ஏற்பத் தாளம் இரண்டு என்றார்.

அத்துள்ளே வாழும் அரசரும் அஞ்சுள — உடலில் வாழும் அரசர் ஐவர். மெய் வாய் கண் மூக்குச் செவியென்னும் ஐந்திடங்களைத் தமக்குரிய தலைநகராகக் கொண்டு வாழும் சிற்றரசர்களாகிய புலனுடையார் ஐவர் உளர். அரசரும் ஐவருளர் என முடிபேற்க வேண்டியது அஞ்சுள என்ற அஃறிணை முடிபேற்றது அரசாக உருவகிக்கப் பெற்றவை அஞ்சு புலன்களுமே என்பது தெரிவிக்க.

அத்துள்ளே வாழும் அரசனும் அங்குளன் — மேற்குறித்த சிற்றரசர்களை அடக்கியாளும் பேரரசாகிய ஆன்மாவும் உளன் என்பதாம். அங்குளன் என்றது சிற்றரசர்கள் ஆளுமிடங்களிலும் பேரரசன் ஆணை செல்லுமாதலின் அங்ஙனம் கூறியது. 'காலன் ஓலை வர' என்றது அதிகார இயைபு நோக்கி வருவிக்கப்பட்டது.

மத்தளி மண்ணாய் மயங்கியவாறு — மாயையாகிய மண்ணின் காரியமாய்ப் பரிணமப்பட்டு நின்றவுடல் மீட்டும் தங்காரணமாகிய மாயையாய்க் கழிந்தது என்பதாம்.

வேங்கட நாதனை வேதாந்தக் கூத்தனை
வேங்கடத் துள்ளே விளையாடு நந்தியை
வேங்கடம் என்றே விரகறி யாதவர்
தாங்கவல் லாருயிர் தாமறி யாரே. 190

இம் — எனின், உடலின் நிலையாமையை அறிவித்து. இறைவனை உணர்ந்து உய்யவேண்டுதலின் இன்றியமையாமையை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: உயிரைத் தாங்க வல்லவர்கள், இந்த உடல் வெந்து ஒழியும் என்று எண்ணி வேங்கட நாதனை, உபநிடத முடிவில் ஆனந்தக் கூத்து ஆடுபவனை, அனைத்தும் அழிந்து ஒழிதற்கிடமாகியுள்ள ஞானமயமாகிய இடுகாட்டுள்ளே விளையாடுகின்ற எமது ஆசாரியமூர்த்தியாகிய சிவனை, அறிந்து உய்ய வேண்டிய வழியில் நின்று அறியாதவர்கள், ஒன்றும் அறியாதவர்களே என்றவாறு.

ஆர் உயிர் தாங்கவல்லார் கடம் வேம் என்று (உணர்ந்து) நாதனை, கூத்தனை, நந்தியை (உணரும்) விரகு அறியாதவர் தாம் அறியார் என இயைக்க.

வேங்கடநாதனை-தமிழ் வரைப்பாகிய திருவேங்கடத்து எழுந்தருளியிருக்கும் தலைவனாகிய சிவனை என்றதை "அரியுரு அரன்" என்னும் சிவபுரம் தேவாரத்தான் உணர்க. அன்றி, வேம் கட நாதன் என்று பிரித்து வெந்து ஒழியும் உடலுக்குத் தலைவன் எனப் பொருள் காண்பாரும் உளர். உணர்த்த உணரும் சித்தாகிய உயிர்த்தலைவனைச் சடமாகிய உடம்புக்கு நாதனென்பதனால் போந்த பயனின்மையானும், மூன்றாவது அடிக்கண் உள்ள 'வேங்கடம்' என்பதற்கு உடலழியும் என்றே பொருள் காண வேண்டியிருத்தலானும் ஈண்டுங்கூறல் ஏற்புடைத் தன்மையறிக.

வேதாந்தக் கூத்தனை - வேதத்தின் முடிவு ஞான பாகமாகிய உபநிடதம்; அதன்கண் இறைவன் என்றும் நடமாடுபவராதலின் இங்ஙனங் கூறினார்.

வேங்கடத்துள்ளே விளையாடு நந்தியை – வேம் கடம் - தோன்றிய அனைத்தும் வெந்து ஒழிதற்கு இடமாகிய சுடுகாடு அதுவே இறைவன் இனிது றையுமிடம். "கோயில் சுடுகாடு" என்னும் திரு வாசகமும் சிந்திக்க. நந்தியை என்றது பேரூழிக் காலத்துப் பெருநடம் புரியும் பெருமானை எமக்கு ஆசான்மூர்த்தமாக எழுந்தருளினன் என்னும் இயைபு விளக்கியவாறு.

வேம் கடம் - கடம் வேம் என மாறுக. கடம் - குடம்; ஈண்டு உடல். "குளத்தின் மண்கொண்டு குயவன் வனைந்தான்" என்ற திருமந்திரமும் ஈண்டு இணைத்து எண்ணுதற்குரியது.

விரகு அறியாதவர் – பேரூழிக்காலத்து நட மாடும் பெருமானாக. ஞானவெளியில் ஆனந்தக் கூத்தனாக, வேங்கடநாதனாக இருப்பவனே, அடி யேனை ஆட்கொளற்பொருட்டு ஆசான் மூர்த்தியாக எழுந்தருளினன் என்று, உபாயம் அறிந்து உணரா தார். உபாயங்களாவன கண்டும், கேட்டும், சிந்தித் தும் தெளிந்து உணர்தல். இதனைத் 'தெளிவு குரு வின்' என்னும் திருமந்திரத்தான் உணர்க.

உயிர் தாங்க வல்லார் – பிராரத்த வினைகளா கிற சுமையோடு கூடிய உயிரைப் பெருஞ்சுமையாக நினைத்துத் தாங்குகின்றவர்கள் உயிரைத் தாங்கி நிற்கிற பயனை எய்த இங்ஙனங் கூறினர் என்று உணர்க.

சென்றுணர் வான்திசை பத்தும் திவாகரன்
அன்றுணர் வாலளக் கின்ற தறிகிலர்
நின்றுண ரார்இந் நிலத்தின் மனிதர்கள்
பொன்றுணர் வாரிற் புணர்க்கின்ற மாயமே. 191

இம் – எனின், இருந்தபடியிருந்தே எல்லாவற்றை யும் அளந்தறியும் ஆற்றலை மக்கள் அடைந்திலரே என இரங்குதல் நுதலிற்று.

இ – ள் : சூரியன், திசைகள் பத்தையும் சென்றே அறிவன்; இந்நிலத்து வாழ்கின்ற மக்கள் அன்று முதல் (என்றும்) உணர்வாலேயே அளந்தறிதலை அறியகில்லார். வீணே நின்று இறந்து ஒழிபவர்களைப் போலக் கலக்கின்ற மாயத்தை ஒன்றி நின்று உணரமாட்டார்கள் என்றவாறு.

திவாகரன், திசை பத்தும் சென்றுணர்வான்; மனிதர்கள் உணர்வால் அளக்கின்றது அறிகிலர் பொன்று உணர்வாரிற் புணர்க்கின்ற மாயம் நின்று உணரார்; என்னே ! என இயைக்க.

எல்லாப் பொருள்களையும் விளக்கும் சூரியனும் தனது கிரணங்களால் சென்றுணர வேண்டியிருக்க, மக்கள் இருந்தநிலையில் நின்று உணருகிற ஆற்றலைப் பெற்றிருந்தும் அதனால் பயன்கொண்டு அழிவின்றி வாழாமல் அழிவார் கூட்டத்துள் கலக்கின்றனரே என்னே ! இவர்கள் அறியாமை என்பது கருத்து.

திசை பத்து – நேர்த்திசை நான்கும், கோணத் திசை நான்கும் மேலும் கீழுமாகிய பத்து. திவா

கரன்- பகல்செய்வோன். சென்றுணர்வான் - தனது ஆயிரங் கிரணங்களையும் அங்கங்கே நீட்டி அறிபவன்.

உணர்வால் அளத்தலாவது விசுவரூபியான இறைவனோடு ஒன்றி நின்று யாண்டும் என்றும் நிகழ்வனவற்றை அறிதல்.

நின்றுணர்தலாவது, இறைவன் திருவடியிலே ஒன்றிநின்று உணர்தல்.

பொன்றுணர்வாரில் - இறத்தலை மட்டும் அறிகிற மக்களைப் போல; என்றது இறத்தல் பிறத்தலாகிய இரண்டில், பிறத்தல் இவர்களை அறியாமலே நிகழ்வ தொன்றுதலான் இங்ஙனம் கூறப்பட்டது.

மாறு திருத்தி வரம்பிட்ட பட்டிகை
பீறு மதனைப் பெரிதுணர்ந் தாரில்லை
கூறுங் கருமயிர் வெண்மயி ராவதும்
ஈறும் பிறப்புமொ ராண்டெனும் நீரே. 192

இம் - எனின், சில எடுத்துக் காட்டுக்களான் நிலையாமையை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: சிக்கலறுத்து ஒழுங்குபடுத்தி நெய்யப் பெற்ற பட்டாடையும் கிழிந்து ஒழியும்; அதனை உணர்ந்தார் யாவருமிலர்; அங்ஙனமே கருமயிர் வெண்மயிர் ஆகும். அதனையும் உணர்ந்திலர்; சூரியன் மேடராசியில் புகுதலும் மீனத்தில் முடிதலும் ஆகிய இரண்டையும் ஓராண்டு என்று உரைக்கும் தன்மை போன்றது இது என்றவாறு.

மாறு திருத்தி - பூச்சிக் கூட்டிலிருந்து எடுத்த பட்டை, சிக்கல் அறுத்து ஒழுங்காக்கி வரம்பிட்ட பட்டிகை – கரைவரம்பும், நெசவு ஒழுங்கும் விலை வரம்பும் அமைத்த பட்டாடை. பீறும் - கிழியும். ‘ நூற்றுப் பத்தாயிரம் பொன்பெறினும் நூற்சேலை, நாற்றிங்கள் நாளுக்குள் நைந்துவிடு ’ மாதலின் இங்ஙனங் கூறினார். பட்டாடை வாங்குவோர் என்றும் இருக்கும் என்றே எண்ணுவர் ஆதலின் உணர்ந்தாரில்லை என்று அருளினார்.

கூறும் கருமயிர் - காமுகராலும். கவிஞராலும் அறல் என்றும் மழை என்றும் புகழ்ந்து கூறப்படுகிற கருமயிர். வெண்மயிர் - நரைத்து வெளுத்த மயிர்.

சூரியன் மேடராசியில் புகுந்து மீனராசியில் முடிதலை ஓராண்டு என்று மகிழ்கின்றனர்; அதனைத் தம் வாழ்நாளை அறுக்கும் வாளாக மதிக்கின்றிலர் என்பது விளக்க ஈறும் பிறப்பும் ஓர் ஆண்டெனும் நீரே ’ என்றார்.

துடுப்பிடு பானைக்கும் ஒன்றே அரிசி
அடுப்பிடு மூன்றிற்கும் அஞ்செரி கொள்ளி
அடுத்தெரி யாமற் கொடுமின் அரிசி
விடுத்தன நாள்களும் மேற்சென் றனவே. 193

இம் - எனின், வரையறுத்த நாட்களுக்குள் வழி காணுக என்று உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அடுப்பில் ஏற்றித் துடுப்பிடப் பெற்ற பானையில் சமைத்தற்காக இடப்பட்ட அரிசி ஒன்றே. அங்ஙனம் அடுப்பிலிடப் பெற்ற துடுப்பு,

பானை, அரிசி ஆகிய மூன்றிற்கும் இடப்பட்ட எரிகொள்ளி ஐந்தாம்; அவ்வெரிகொள்ளி வீணாக எரிந்துபோகா வண்ணம், சமைக்கத்தக்க அரிசியைக் கொடுத்துக் கொண்டே இருங்கள். பிராரத்த பொசிப்புக்காக வரையறுக்கப்பட்ட ஆயுட் காலங்கள் கழிந்தன என்றவாறு

அடுக்களையிலுள்ள அடுப்பும் துடுப்பும் பானையும் அரிசியும் எரிகொள்ளியும் இவற்றை உவமையாகக் கொண்டு, எடுத்த உடம்பும், அதனை இயக்குகின்ற இடை பிங்கலையாகிற காற்றை இயக்கும் வலமூக்கும் இடமூக்குமாகிய துடுப்பும், பரை யமுதமாகிய அரிசியும், உடம்பும், பிராணன் அபானன் முதலான எரி கொள்ளிகளும் தோன்ற அமைத்து, அடுப்பில் அரிசியாக்குதல்போல உடம்பில் இடைபிங்கலை வழியாக உயிர்ப்பினை ஒழுங்குசெய்து, ஆயிரம் இதழ்த் தாமரையில் அமுதம் சமைப்பிக்கின்ற அருமையை எடுத்துக் காட்டியவாறு.

துடுப்பிடு பானைக்கும் அரிசி ஒன்றே என உலகியலில் அட்டிற்சாலையில் அமைக்கப்படும் உலைப் பானையையும், அகப்பையையும். அரிசியையும் உணர்த்திற்று.

அடுப்பிடு மூன்றுவன், அடுப்பிலே இடம்பெற்ற ஞாயிறும், திங்களும், தீயுமாகிய மண்டலங்கள் மூன்றுமாம். எரிகொள்ளி-நெருப்பு எரிகிற விறகு. அஞ்சாவன – பிராணன், அபானன், சமானன், உதானன். வியானன் என்பன.

அடுத்து எரியாமல் அரிசி கொடுமின் என்றது அவ்வெரிகொள்ளிகள் ஐந்தும் அடுப்பிலே அடுத்து வீணாக எரியாமல் பிராணாயாமமாகிய முயற்சியால் அமுதை அளியுங்கள் என்பதாம்.

நாள்களும் மேற்சென்றன என்பது பால்வரை தெய்வத்தால் வரையறுக்கப்பட்ட நாட்கள் கழிந்து அளவிற்குமேல் ஆயின என்பதாம். இதனால், உடல் உள்ளபோதே சிவயோகத்தில் செறிந்து சிவாமுதம் உண்ணுக என்பது கருத்து.

இன்புறு வண்டடங் கினமலர் மேற்போய்
உண்பது வாசம் அதுபோல் உயிர்நிலை
இன்புற நாடி நினைக்கிலும் மூன்றொளி
கண்புற நின்ற கருத்துள்நில் லானே. 194

இம் - எனின், இறைவன் புறக்காட்சிக்குப் புலப் படான்; அக்காட்சியுள் நின்று அருளுவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: களித்த வண்டுகள், கூட்டமாகிய மலரிற் சென்று உண்பது அந்தப் பூக்களில் உள்ள மணம் பொருந்திய தேனையே. அதுபோல, உயிர்கள் தாம் என்றும் பெயராது நிற்கும் நிலைக்களனாகிய திரு வடியை இன்பம் பொருந்தத் தேடித் தியானித் தாலும் சோம சூரியாக்கினி வடிவாகிய இறைவன் கருத்துள் நிற்பதன்றி, புறக் கண்ணுக்குப் புலப்படான் என்றவாறு.

இம்மந்திரத்தையொட்டிய கருத்து உடையது, "தினைத்தனை உள்ளதோர் பூவினிற்றேற னுண்ணாதே

நினைத்தொறும் காண்டொறும் பேசுந்தொறும் எப்போதும், அனைத்தெலும்பு உள்நெக ஆனந்தத்தேன் சொரியும், குனிப்புடையானுக்கே சென்றூதாய்க் கோத்தும்பீ'' என்னும் திருக்கோத்தும்பிச் செய்யுள் வண்டுபோல உயிர்கள் நிலையான திருவடிமலரில் சென்று தோயக்கருதினும் சிவன் புறக்காட்சிக்குப் புலப்படான்; அகக்காட்சிக்கே அகப்படுவன் என்பது கருத்து.

மூன்றொளி கண் - மூன்றொளிகளையும் கண்ணுக் உடைய இறைவன், புறம் நின்ற கருத்துள்-பொறி வழியாகப் புறஞ்சென்ற கருத்தில்; அகமுகமாகப் பாரப்பார்க்கன்றி எம்பொல்லாமணியைப் புறத்தே அறியவொண்ணாது என்றவாறு.

ஆம்விதி நாடி அறஞ்செய்மின் அந்நிலம்
போம்விதி நாடிப் புனிதனைப் போற்றுமின்
நாம்விதி வேண்டும தென்சொலின் மானிடர்
ஆம்விதி பெற்ற அருமைவல் லார்க்கே. 195

இ-ம் - எனின்; மக்கட்குரியன விதித்தல் நுதலிற்று.

இ-ள்; சொல்லுமிடத்து, மக்களாகப் பிறக்கும் விதியைப்பெற்ற உரனுடை உள்ளத்தார்க்கு நாம் விதிக்க வேண்டுவது என்ன? எடுத்த பிறவியில் இன்பம் விளைக்கக்கூடிய வழிகளை நாடி அறங்களைச் செய்யுங்கள்: வீட்டு நிலத்தை அடைகின்ற வழிகளை ஆராய்ந்து இறைவனைப் போற்றுங்கள்; இவ்வளவே நீங்கள் இயற்றவேண்டுவன என்றவாறு.

ஆம் விதி - எடுத்த இப் பிறவியிலேயே இடர் மெலிந்து இன்பம் பெருக்கக்கூடிய விதிகள், அவை யாவன ஆலய வழிபாடு, அருமறையோதல், அறஞ் செய்தல் முதலியன,

அந்நிலம் - உரை மனம் கடந்துநின்ற வீட்டு நிலம் அதனை அடையக்கூடிய வழியாவது ஞான நெறி நிற்றல், அங்ஙனம் நிற்பினும், மனம் சலியாமைப்பொருட்டும்,வாதனை தாக்காமைப்பொருட்டும் புறம்பேயும் பூசனை புரிக என்பார் 'புனிதனைப் போற்றுமின்' என்றருளினர்.

மானிடராம் விதிபெற்ற அருமை வல்லார்க்கே என்றது புல்லாய்ப் பூடாய் எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்து, மக்கட்பிறவி எடுத்தல் அருமையில் அருமை என்பதை விளக்கியவாறு அத்தகைய மக்கட் பிறவியெடுத்தார் தாமே அறிய வேண்டுவ அறிந்து தெளிவாராதலின் 'நாம் விதி வேண்டுமது என்' என்றருளினர்.

அவ்வியம் பேசி அறங்கெட நில்லன்மின்
வெவ்விய னாகிப் பிறர்பொருள் வவ்வன்மின்
செவ்விய னாகிச் சிறந்துண்ணும் போதொரு
தவ்விக்கொ டுண்மின் தலைப்பட்ட போதே. 196

இ - னின், தவிர்வனவும் செய்வனவும் சாற்றுதல் நுதலிற்று

இ - ள் : வஞ்சனைபேசி அறம் அழிய நடவாதீர்கள்; கொடியோராகி பிறர்பொருளைக் கவராதீர்கள்; செம்மை உடையராகிச் சிறக்கவாழ்ந்து உணணுந்

போது யாரேனும் எதிர்ப்படின், ஒரகப்பையாவது அவர்களுக்குக் கொடுத்துண்ணுங்கள் என்றவாறு.

சொல்லால் வருங் குற்றமே எல்லாக் குற்றங்களுக்கும் அரண் செய்வதாகவின், அக்குற்றத்தை முதற்கண் கடிவாராய் 'அவ்வியம் பேசி நில்லன்மின்' என்றார். "அவ்வியம் பேசேல்" என்ற ஔவை சுருதியும் ஈண்டு இணைத்தற்குரியது. பிறர் பொருளைக் 'கள்ளத்தாற் கவர உள்ளம் இறுக வேண்டுதலின் வெவ்வியனுகி' என்றார்.

பழிபட்டார் உணவை அறவோர் மறந்தும் ஏலாராதலின், முதற்கண் செவ்வியன் ஆகுக; அதன் பின் இட்டு உண்க என்று அருளினர்.

## 6. கொல்லாமை

அஃதாவது, உடலொடுகூடிய உயிர்கள் பிராரத்தத்தை உண்டு கழிப்பதற்குமுன், தன்னலம்பற்றியாதல், சினத்தானுதல், அறியாமையானுதல் அவற்றை உடலினின்றும் பிரியாமை. இஃதன்றி வருத்தாமையும் ஆம் நிலையாமையைப் பல்லாற்றானும் உணர்ந்த உயிர், பிறிதோருயிரை அதனுடம்பினின்றும் பிரித்தல் சிறிதும் சாலாதாதலின் நிலையாமையின் பின் கொல்லாமை இடம் பெற்றது.

பற்றுய நற்குரு பூசைக்கும் பன்மலர்
மற்றேர் அணுக்களைக் கொல்லாமை ஒண்மலர்
நற்றூர் நடுக்கற்ற தீபமும் சித்தமும்
உற்றுரும் ஆவி அமர்ந்திடம் உச்சியே. 197

இ-ம் - எனின், கொல்லார் வீடடைவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: நமக்குப் பற்றுக்கோடாய் இருக்கிற சிவ உருவைப் பூசித்தற்கும் பல மலர்கள் வேண்டப் படுவன; அம்மலர்களுட் சிறந்த மலர் பிற உயிர் களைக் கொல்லாமையே ஆகும், திருவடித்தியானம் நல்ல மாலையாகும். அசைவற்ற தீபம் அசைவற்ற மனமாகும். இவையனைத்தையும் உற்றுப் பூரண மான உயிர் விரும்பி உறையும் இடம் எல்லா உலகிற்கும் மேலான வீட்டுலகமாகும் என்றவாறு.

'பன்மலர் வேண்டும்' எனவும், 'ஒண்மலர் ஆம்' எனவும், 'நற்றார் தியானம்' எனவும் வினைகள் வருவித்து முடிக்க.

பற்றாய நற்குரு - அலைந்த மனத்திற்கு அடைக் கலத்தானமாகிய சிவகுரு. குருபூசைக்கும் என்ற உம்மை சிவபூசைக்கும் என்பதனைத் தழுவி நின்றது. பன்மலர் என்றது புறம்பே யுள்ள பன்னிறப் பூக்களை.

கொல்லாமை, பொறியடக்கம், பொறுமை, இரக்கம், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்பன அகமலர்கள். அவற்றுள் தலையாய சிறந்த மலர் கொல்லாமையே என்பார் 'கொல்லாமை ஒண் மலர்' என்று அருளினார்.

நற்றார் - பன்மலர் விரவுதலுற்ற மாலை. ஈண்டுக் கொல்லாமை முதலிய பண்பாடுகள் பல விரவிய பழுத்த மனம் என்பதாம்.

நடுக்கற்ற தீபம் – காற்றால் அசையாத, ஆடாத விளக்கு. இது ஐம்பொறி வயப்பட்டு உலகவாதனை தாக்காத உள்ளத்திற்கு உவமையாயிற்று.

ஆரும் ஆவி; பெயரெச்சத் தொடர். ஆவி - ஆன்மா, அணு - உயிர். அமர்ந்திடம் உச்சியே என்பதற்கு, அகமலரைக்கொண்டு அகப்பூசை செய்யும் ஆன்மா ( ஆவி ) விரும்பி உறையுமிடம் பிரமரந்திரமாகிய பெருவெளி என்று யோக நெறி பற்றி உரை கொள்ளுக.

கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை
வல்லடிக் காரர் வலிக்கயிற் றாற் கட்டிச்
செல்லிடு நில்லென்று தீவாய் நரகிடை
நில்லிடும் என்று நிறுத்துவர் தாமே. 198

இம் - எனின், கொலைசெய்வார் உறும் பயன் அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : ' கொல்லு ' ' குத்து ' என்று சொன்ன மக்களைக் காலன் ஏவலர்கள் வன்மையுள்ள கயிற்றாற் கட்டி, ' ஓடு ' ' நில் ' என்று உரப்பி, எரிவாய் நரகத்து நெடுங்காலம் நிற்க என்று பணிப்பர் என்றவாறு.

' கொல்லிடு என்பதனை இரண்டாக்கி, கொல் எறி எனப் பொருள்கோடலும் ஆம். மாக்கள் என்றார் அருள் என்னும் உயிர்ப்பண்பு தொலைந்து விலங்கறிவு விளங்கித் தோன்றலின். தாம், ஏ : அசைகள்.

வல்லடிக்காரர் - குறும்பாக வழக்காடுபவர்கள். இற்றைஞான்றும் வல்லடிவழக்குக்காரன் என்ற வழக்குண்மை ஓர்க.

செல்லிடு நில் என்று - போ, நில் என்று ஒரு பயனும் கருதாதே அவமதிக்காக ஏவிப் பணி கோடல்.

## 7. புலான் மறுத்தல்

அஃதாவது, கொன்றதால் வந்த ஊன் உண்டலைத் தவிர்த்தல்; ஆதலின், இது கொல்லாமையின் பின் வைக்கப்பட்டது.

பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாரும் காண இயமன்றன் தூதுவர்
செல்லாகப் பற்றித் தீவாய் நரகத்தின்
மல்லாக்கத் தள்ளி மறித்துவைப் பாரே. 199

இம் - எனின், புலால் நுகர்வார் நிரயத்தழுந்துவர் என்றல் நுதலிற்று.

இ - ள் : மிகத் தீய ஊனை உண்ணும் இழிசனரை இயமதூதர்கள், எல்லாரும் காண, செல்லுப்போல வலிந்து பற்றி. எரிவாய் நரகத்தில் மல்லாக்கத்தள்ளி, வெளிப்போதரா வண்ணம் தடுப்பர் என்றவாறு.

உள்ளத்தைக் கெடுத்து விலங்குத் தன்மையை விளைவித்தலின் புலால் பொல்லாததாயிற்று. நுகர்தல் - விரும்பி உண்டல். புலாலுண்டலாலேயே

புலையராவர் என்பது கருத்து. எல்லாருங்காண என்றது யாரும் இனி இங்ஙனம் உண்டு வருந்தாமலிருக்க வேண்டும் என்ற குறிப்பு. செல் - கறையான்; பற்றிக் கொண்டால் விடாதது; அரித்தே அழிப்பது ஆகலின் செல்லைப் போலப் பற்றி என்றார். தீவாய் நரகம் - கும்பீபாகம் என்னும் தீநரகு, மல்லாக்கத்தள்ளி - நெருப்பிற் பட்டு எய்தும் துன்பத்தை எல்லாரும் காணவேண்டி முக மேலாகத்தள்ளி. மறிந்து - சூடுபொறாது எழுந்தோட நினையின் அதனைத் தடுத்து' வைப்பார் - மீளாமே கிடத்துவர்.

கொலையே களவுகள் காமம் பொய்கூறல்
மலைவான பாதக மாம்அவை நீக்கித்
தலையாஞ் சிவனடி சார்ந்தின்பஞ் சார்ந்தோர்க்
கிலையாம் இவைஞான னந்தத் திருத்தலே.* 200

இம் - எனின், ஐம்பெரும் பாவங்களினின்று நீங்கினோர் சிவனடி சேர்வர் என்றல் நுதலிற்று.

இ - ள் : கொலையும், கள்ளும், களவும், காமமும், பொய்கூறலும் ஆகிய ஐந்தும் அனைவரும்

* இச்செய்யுள் சிலபதிப்புக்களில் கொல்லாமையில் சேர்க்கப் பெற்று, ஈண்டு,

கொன்றி லாரைக் கொலச்சொலிக் கூறினோர்
தின்றி லாரைத் தினச்சொலித் தெண்டித்தார்
பன்றி யாய்ப்படி யிற்பிறந் தேழ்நரகு
ஒன்றுவார் அரன் ஆணையி துண்மையே.

என்ற திருமந்திரம் மிகையாகக் காணப்படுகிறது.

மலைக்கத் தக்க பெரும்பாவங்களாம். ஆதலின் அவற்றை நீக்கி, தேவதேவனுன சிவனடி சேர்ந்து இன்பம் மருவினூர்க்குத் துன்பமேயில்லை. இங்ஙனம் துன்பினறி என்றும் இன்பத்திலிருத்தலே ஞானக் களிப்பில் இருத்தலாம் என்றவாறு.

இலை என்பதற்குச் செயப்படுபொருள் வருவித்து உரைக்கப்பட்டது இவை என்று சுட்டு இன்பம் சார்ந்திருத்தலாகிய தொழிலையுணர்த் திற்று. உயர்சிவ ஞானத்தால் விளைவதே உண்மை யானந்தம் ஆதலின் இவை ஞானனந்தத் திருத்தலாம் என்றருளப் பட்டது.

## ௬ பிறர்மனை நயவாமை

அஃதாவது, காமநூலார் பரகீயம் என்று சிற்றின்பம் மிகுவாயிலாகக் கொண்ட பிறர்மனை யாளை விரும்புதலும் செய்யாமை. முன்னர் பெரும் பாவங்கள் ஐந்தென் வகுத்தவற்றுள் கொல்லாமை, புலான் மறுத்தல் என்ற இரண்டானும் கொலையைக் கடிந்தவன், மிகு காமம் காரணமாக நிகழும் பிறர்மனை நயத்தலும் கூடாது ஆகலின் இதனைப் புலால் மறுத்தலின் பின் வைத்தருளினர்.

ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே
காத்த மனையாளைக் காமுறும் காளையர்
காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக் கிடருற்ற வாறே. 201

இம் – எனின், பிறர்மனை நயப்பார் பேதைமை இவ்வண்ணம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : கட்டிய மனைவி வீட்டில் இருக்கப் பிறரால் பாதுகாக்கப்படுகின்ற மனையாளை விரும்புங் காளைகள் வீட்டுக்கொல்லையில் காய்த்துள்ள பலாப் பழத்தை உண்ணமாட்டாமல், காட்டில் பழுத்துள்ள ஈச்சம்பழத்தை அடைதற்குத் துன்பம் அடைந்தாற் போலும் என்றவாறு.

ஆத்த – யாத்த என்பதன் மரூஉ. தம்மோடு விதி கூட்ட, அன்பு பிணைப்ப, பலரறியத் தாலி கட்டிய மனையாள் ஆத்த மனையாள். முன்னர் " ஆத்தமானோர் அனைவரும் கூடி " என்றதும் காண்க.

அகத்தில் இருக்க என்றது ஐம்புல இன்பமும் ஆரத்துய்க்கும் நிலையில் இடையூறு சிறிதும் இன்றி எளிமையில் இருக்கவும் என்பது கருத்து.

காத்த மனையாள் – மதிற்காவல் வாயிற்காவல் முதலிய புறக்காவலானும், கற்பு நிறைமுதலிய அகக்காவலானும் 'காக்கப்பெற்ற பிறன்மனையாள்.

காய்ச்ச பலா என்று வாளாகூறினும் பொருளுக்கு ஏற்ப வீட்டின் கொல்லையில் காய்த்த பலா எனக்கொள்க. இது அடைதற்கு எளிமையும், இன்ப மிகுதியும் தோன்றநின்றது.

ஈச்சம்பழம், அடர்ந்தபுதரில் முட்களுக்கிடையே இருப்பதால் எவ்வளவு பாதுகாப்பாகப் பறிக்க முற்படினும் முட்குத்துதல் போலப் பிறர் மனையாளை எத்துணை எளிதிலடையலாமாயினும், புக்கவிடத்து அச்சம், போதரும்போது அச்சம்,

துய்க்கும் இடத்து அச்சம், தோன்றுமற் காப்பச்சம், எக்காலும் அச்சம் எய்துதலின் காமுறற்க என்றதாம்.

திருத்தி வளர்த்ததோர் தேமாங் கனியை
அருத்தமென் றெண்ணி அறையில் புதைத்துப்
பொருத்த மிலாத புளிமாங்கொம் பேறிக்
கருத்தறி யாதவர் காலற்ற வாறே. 202

இம் - எனின், பிறர்மனை நயப்பார் காலற்றுப் போவார் என்று உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: ஒழுங்குபடுத்தி வளர்க்கப்பெற்ற தேமாவின் கனியை, தமக்குப் பொருளாவது என்று எண்ணி (உண்ணாதே) அறையில் புதைத்து வைத்துவிட்டு, தமக்குச் சிறிதும் பொருந்துவதல்லாத புளிமாமரத்தின் சிறுகிளையில் ஏறி ஒழுக்கத்தின் உண்மைக்கருத்து இன்னதென்றறியாது மயங்கினோர் வழியற்று விழிப்பர் என்றவாறு.

காலற்றவாறு இதுவாம் என ஒருசொல் வருவித்து முடிக்க.

திருத்தி வளர்த்ததோர் தேமாங்கனி - பண்பட்ட நிலத்தில், வழிவழியாகச் சுவைதரும் மரபில் வந்து, கொத்தியும் வெட்டியும். எருவும் நீரும் இனியன பெய்தும் வளர்க்கப்பெற்ற தேமாவின் கனிபோன்ற நற்குடிப் பிறப்பும் பொற்பும் கற்பும் நற்குணமும் வாயந்த மனையாள் என்பது குறிப்பு.

அருத்தம் என்று எண்ணி - என்றும் தம்முடைய பொருளாம்; வேண்டுகாலத்துத் துய்க்கலாம் என்று எண்ணி.

அறையில் புதைத்து - எழுச்சியும், இன்புமின்றி அவிந்துபோக அறையில் மூடிவைத்துவிட்டு, புறகாவலும் இட்டு.

கனியைக் காற்றோட்டம் இல்லாத அறையில் புதைத்துவைத்தால் அழுகிப் போதல்போல, கற்புடை மனைவியும் மூத்து ஒழிவர்: அதனால் குடும்ப விளக்கமாகிய சந்ததி யற்றுப்போகும் என்பதாம்.

புளிமா என்றது சுவையின்மை மாத்திரமின்றி உறுதியும் இல்லை என்பது விளக்கியவாறு.

காலறுதலாவது காலொடிதலும், சந்ததி யற்றுப் போதலும். புறத்தொழுக்கம் உடையார்க்குச் சந்ததியற்றுப்போதல் இயல்பு.

பொருள்கொண்ட கண்டனும் போதத்தை யாளும்
இருள்கொண்ட மின்வெளி கொண்டுநின் றோரும்
மருள்கொண்ட மாதர் மயலுறு வார்கள்
மருள்கொண்ட சிந்தையை மாற்றகில் லாரே 203

இ-ள்; மாதர்மயலுறுவார் இருவகையர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்; பொருளை மிக ஈட்டிய கொடாக் கண்டனும், அறிவை மறைத்துத் தன்வயப்படுத்தி ஆளுகிற அறியாமை என்கின்ற ஆணவ இருளிலே தோன்றிய மின்வெளிபோன்ற அறிவைப் பெரிதென்று மதித்திருப்பவனும் மயங்கி அம்மாதர்கள்மேல் மயக்க முறுவார்கள்; மயங்கிய

சிந்தையை ஒருபோதும் மாற்ற ஆற்றலற்றவர் ஆவர் என்றவாறு.

பொருள்கொண்ட கண்டன் - விடாக்கண்டன் என்பனபோல ஒரு வழக்கு. கண்டன் - கீழ்மகன்.

போதத்தையாளும் இருள் - ஆன்மாவின் அறிவை விளங்கவொட்டாது தடுத்துநிறுத்தும் ஆணவமலம்.

இருள்கொண்ட மின் வெளி - அவ்வாணவமல மறைப்பில்தோன்றும் ஏகதேசஞானம். மின்வெளி என்றூர் கல்லெறிதலால் பாசி விலகிய நீர்போலத் தோன்றிமறைதலின். தோன்றிமறையும் புல்லறி வரும் மாதர்மயலில் மயங்குவர் என்பதாம்.

## ௯. மகளிரிழிவு

அஃதாவது, உடல்நலத்தால் உள்ளம் கவரும் பொதுமகளிர் எவ்வகையினும் இழிந்தவர் என்ப தாம். பிறர்மனை நயபபார், அதன்கண் இடையூறு தோன்றுதலை உணர்ந்து, பொதுமகளைப்புணர்வரா தலின் அதுவும் கூடாது என்பார் பிறர்மனை நயவாமையின் பின் இதனை வைத்தார்.

இலைநல வாயினும் எட்டி பழுத்தால்
குலைநல வாங்கனி கொண்டுண லாகா
முலைநலங் கொண்டு முறுவல்செய் வார்மேல்
விலகுறு நெஞ்சினை வெய்துகொள் வீரே. 204

இம் - எனின், மகளிர் புறவழகால் நம் புந்திகவர் வார்; அவரைப் பொருந்தற்க என்பது உணர்த் துதல் நுதலிற்று.

இ - ள் : எட்டி, இலை முதலியவற்றால் அழகிதாய் இருப்பினும் குலையாகக்காய்த்திருக்கின்ற நல்ல அதன் பழத்தை யாரும் உண்ணக்கூடாது. அது போல முலையழகைக் கொண்டு புன்முறுவல் பூக்கின்ற மகளிர் மேல் செல்லும் நெஞ்சை விலக்குங்கள்: அவ்வெண்ணம் கொடிது என்று எண்ணுங்கள் என்றவாறு.

எட்டிக்கனி செம்மையாய், அழகாயிருப்பினும் நச்சுத்தன்மையுடையது; பொதுமகளிரும் எல்லா வகையினும் இனியராயினும் கொடியர் ; ஆதலால் அவர்களை விரும்புதலொழிக என்பதாம். இம் மந்திரம் எடுத்துக்காட்டுவமையணி.

மனைபுகு வார்கள் மனைவியை நாடில்
சுனைபுகு நீர்போல் சுழித்துடன் வாங்கும்
சுனவது போலக் கசிந்தெழும் அன்பை
நனவது போலவும் நாடவொண் ணாதே. 205

இம் - எனின், 'இழிந்த மாதரிணைப்பு எண்ண வுங் கூடாத ஒன்று' என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : பிறர்மனை புகுவார், பிறர் மனைவியை விரும்பின், அச்செயல் மலைச்சுனையில் புகுகிற நீர் போல, இவனைச் சுழிப்படுத்து இழுத்துக்கொண்டு செல்லும், ஆதலால் கனவுபோல அவர்கள் மாட்டுச் சிறிது சுரக்கின்ற அன்பினை நனவுபோல உண்மை யான தென்று விரும்புதல் ஒண்ணாது என்றவாறு.

இதற்கு வேறுரை கூறுவாருமுளர்; அது பொருந்தாமை அவ்வுரையை ஊன்றி நோக்கி அறிக

கனவில் உண்டவன் கருத்து நிரம்பினும் வயிறு நிரம்பாதது போல, அவர்களது அன்பு உண்மையன் பிற்கு உறுதுணையாகாது என்பதாம்.

இயலுறும் வாழ்க்கை இளம்பிடி மாதர்
புயலுறும் புல்லின் புணர்ந்தவ ரேயினும்
மயலுறும் வானவர் சாரவிரும் என்பார்
அயலுறப் பேசி அகன்றெழிந் தாரே, 206

இம் – எனின், மகளிர் அயலுறப் பேசும் இயல் பினர் என்று உணர்த்துதல் நுதலிற்று,

இ – ள் : அழகனைத்தும் அமைந்த வாழ்க் கையினை உடைய இளைய பெண்யானை போன்ற மதர்த்த மங்கையர். மழையைப் பெற்ற புல்லைப் போலத் தம்மை விரும்பிப் புணர்ந்த காதலராயிருப் பினும், மயங்கிய தேவரை யொப்பார் வந்து பொருந்த, இரு என்று சொல்வர். பழைய காதலரை அயற்பட மொழிந்து அகன்று போவார்கள் என்றவாறு.

இயல் - அழகு. இளம்பிடிமாதர் என்றது காதன்மையால் களிற்றைப் பிணிக்கும் இயல்பு நோக்கி.

புயலுறும் புல்லின் புணர்ந்தவரேயினும் - தலைப்பெயல் பெற்ற புல்லைப்போலப் பசந்துகூடிய

காதலராயினும்; என்றது பரத்தையர் வறுமைக் காலத்தில் ஊமுறுத்திப் புணர்ந்த வள்ளன்மை உடையராயினும் என்பது விளக்கிற்று.

மயலுறும் வானவர் சார இரும் என்பார் - உடலின் அழகாலும் உறுபொருள் அளித்தலாலும் சிறந்த தம் அழகில் மயங்கிய வானவரையொப்பார் வரின் முதற்காதலரை. பழமை பாராட்டாது, நன்றி மறந்து சிறிது வெளியிலிருங்கள் என்பார்கள் என்பதாம்.

அயலுறப் பேசி - குதிரை கீழே தள்ளியது மட்டுமன்றிக் குழியும் பறித்ததுபோல அக்கணமே தம்மை மறந்துசெல்லும் வகை அயற்பட மொழிந்து.

அகன்று ஒழிந்தார் - மீளவும் கூட விருப்பின்றிப் புறம் போக்கினார்கள் என்றவாறு.

இம்மந்திரத்திற்குப் 'புயனுற புல்லிப் புணர்ந்தவர் எய்தும். மயலுறும் வானவர் சார்விது என்பார்' எனப் பாடங்கொண்டு பலசொல் வருவித்து இடர்ப் பட்டுப்பொருள் காண்பாருமுளர் அவை ஏலுமேற் கொள்க.

வையகத் தேமட வாரொடும் கூடியென்
மெய்யகத் தோருளம் வைத்த விதியது
கையகத் தேகரும் பாலையின் சாறுகொள்
மெய்யகத் தேபெறு வேம்பது வாமே 207

இம் - எனின், மடவார் கூட்டத்தினால் மாண் பயன் இல்லை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : உலகத்தில் பெண்களோடு கூடுவதாற் பெரும்பயன் ஒருசிறிதுமில்லை. இது உண்மை ஞானிகள் கண்ட ஒரு முடிபாகும். கையில் பொருள் பெறும்பொழுதே கருப்பாலையிற்பெற்ற சாறு போல இனிக்கப்பேசி, மனத்துள் வேம்புபோலக் கசக்க நினைப்பர் என்றவாறு.

என் என்பது என்ன பயன் தருவது என்னும் பொருளதாய வினாவினைக் குறிப்புமுற்று.

மெய் அகத்தோர் - உண்மை ஞானிகள். இது என்னும் எழுவாய் வருவித்து விதியது என்பதோடு முடிக்க. விதியது - விதியினை உடையது; குறிப்பு முற்று.

கையகத்தே - கொடுத்தபொருள் கையகத்த தாக இருக்கும்போதே, கரும்பாலையின்சாறு கொள் மெய் - எனக்கு நீ கரும்பாலையில் பெறுகின்ற சாறு போல் இனியை; இதனை உறுதியென்று கொள்வா யாக; நான் உரைப்பனமெய் (என்றுகூறி), அகத்தே- மனத்துள் பெறு வேம்பதுவாமே - பெற்ற வேம்பு போலக் கசப்பது இதுவாம் என்பர்; இருமனப் பெண்டிராதலின் இங்ஙனம் கூறுவர் என்க.

இதற்குப் பொருந்தா உரைகண்டு வேண்டி யாங்குச் சொல் விரித்து எழுதும் உரையும் உள.

**கோழை ஒழுக்கம் குளஞ்ஞ்டு பாசியில்**
**ஆழ நடுவார் அளப்புறு வார்களைத்**
**தாழத் துடக்கித் தடுக்கில் லாவிடில்**
**பூழை நுழைந்தவர் போகின்ற வாறே. 208**

இம் – எனின், பரத்தையைப் புணர்வாரைத் தடுப்பதே நல்லோர்கடன் என்றல் நுதலிற்று.

இ – ள் : விந்தினைப் பரத்தையின் மாசுபடிந்த கருக்குழியில் ஆழநட்டுக் காமவின்பத்தை ஆராய் பவர்களை இடையூறுண்டாக்கிப் பிணித்துத் தடுக் காவிடின், நுழைவழியில் நுழைந்தாவது அவர்கள் அடிக்கடிச் சென்று அழிவர் என்றவாறு

கோழையொழுக்கம் – சுக்கிலத்தின் பெருக்கு. குளம் மூடு பாசியில் ஆழ நடுவார் என்றது நோயும் பிறவுமாகிய பாசிமூடிய கருக்குழியில் காமமிகுதி யால் ஆழ நடுவார் என்று இழித்துக் கூறியவாறு.

அளப்புறுவார் - முழுகிப் புரண்டு ஆராய்கின்ற வர்கள். தாழத்துடக்கி - போகாமல் தடைபடப் பிணித்து. பரத்தமை மிக்காரை எவ்வகையினும் தடுத்தல் இயலாதாகலின் கயிற்றாற் கட்டிப் போட்டுத் தடுக்க வேண்டும் என்கின்றார். அங்ஙன மன்றி அன்பாலும். உபதேசத்தாலும். உரையாலும் தடுக்கின் ஏற்று இருப்பவர்போல இருந்து இடங் கண்டவழி ஏய்த்து நேர்வாயில் மூடியிருந்தாலும் நுழைவாயில் புகுந்து போய்விடுவார் என்பதை விளக்க ‘ பூழை நுழைந்தவர் போகின்றவாறே ’ என்றார்.

## 10. நல்குரவு

அஃதாவது, நல்கூர்ந்தாரது இயல்பு; குன்றன்ன செல்வராயினும் பரத்தமை முதலிய தீய ஒழுக்கம் பட்டத்தார் பொருளாற் சிறுமை

யுறுவராதலின் இது மகளிரிழிவின் பின்பு வைக்கப் பட்டது. " இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும். திருநீக்கப்பட்டார் தொடர்பு " என்ற தமிழ் மறையும் எண்ணுதற் குரியது.

புடவை கிழிந்தது போயிற்று வாழ்க்கை
அடையப்பட் டார்களும் அன்பில ரானூர்
கொடையில்லை கோளில்லை கொண்டாட்ட மில்லை
நடையில்லை நாட்டில் இயங்குகின் றூர்கட்கே, 209

இம் - எனின், பொருளிலார்க்கு ஒன்றும் இல்லை என்பது, உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: உடுத்திய ஆடை கிழிந்து பயனற்றுப் போனதைப்போல நம் வாழ்க்கையும் பயனற்றது. நம்மால் விரும்பி அடையப்பெற்ற பெண்டிரும் மக்களும் ஏவலரும் நம்மாட்டு அன்பிலராயினர்: ஆதலின் கொடுப்பதில்லை; வாங்குவ தில்லை; கொண்டாட்டம் இல்லை; நாட்டில் நடப்பில்லை என்றவாறு.

வாழ்க்கை கிழிந்தது; போயிற்று: அடையப் பட்டார்களும் அன்பிலரானூர்; கொடை முதலிய இல்லை என இயைக்க.

அற்றங்காக்கும் சுற்றுடைப் பூந்துகில் கிழிந்து பயனற்றாற்போல வறியவர் வாழ்க்கையும் பயனற்றது என்பது கருத்து. கொண்டாட்டம் - மணமும் விழவும் பண்டிகையும் முதலியன.

பொய்க்குழி தூர்ப்பான் புலரி புலருதென்
றக்குழி தூர்க்கும் அரும்பண்டந் தேடுவீர்
எக்குழி தூர்த்தும் இறைவனை எத்துமின்
அக்குழி தூரும் அழுக்கற்ற போதே. 210

இ-ஃ - எனின், வறுமையால் வாடுவார்க்கு ஓர் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் ; பொழுது விடிகின்றது என்று வயிற்றுக்குழியை நிரப்ப அதற்குரிய அரும்பண்டங்களைத் தேடுகின்ற மக்களே ! எத்தகைய குழிகளைத் தூர்த்தாவது இறைவனையேத்துங்கள் ; உங்களுடைய கன்மமலமாகிய அழுக்கு நீங்கியபோது உங்கள் வயிற்றுக்குழி தூர்ந்துவிடும் என்றவாறு.

இறைவனை ஏத்தினால் வறுமை தொலையும் என்பது கருத்து.

பொய்க்குழி தூர்ப்பான் - நாடொறும் எத்தனை முறை உண்டாலும் நிரம்பியதுபோல இருந்து மீளவும் பசித்தலின் வயிறு பொய்க்குழியாயிற்று.

புலரி புலருது என்று - பொழுது விடிந்துவிட்டதே என்று. " இன்றும் வருவது கொல்லோ நெருநலும், கொன்றதுபோலும் நிரப்பு " என்பர் வள்ளுவராகலின் இங்ஙனம் கூறினார். அழுக்கு - நல்குரவிற்கு ஏதுவாகிய வினைச்சேடம். இதற்குப் பிறவுரைப்பாருமுளர். அது வறுமைக்கு மூலமன்மையின், ஈண்டைக்கு ஏலாது.

கற்குழி தூரக் கனகமும் தேடுவார்
அக்குழி தூர்க்கை யாவர்க்கும் அரியது
அக்குழி தூர்க்கும் அறிவை அறிந்தபின்
அக்குழி தூரும் அழுக்கற்ற வாறே, 211

இம் - ளின் இதுவும் குழிதூரும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : கல்லிலுண்டான குழியைத் தூர்க்கப் பொன்னைத் தேடுவர். அக்குழி யாராலும் தூர்க்க முடியாதது. அக்குழியைத் தூர்க்கும் ஞானத்தை அடைந்தால், மலமற்று அக்குழி தானே தூர்ந்து விடும் என்றவாறு.

குழி என்றது வயிற்றை. கற்குழி என்றார் ஒன்றாலும் தூர்க்க முடியாமையின். வறுக்க முடியாததை 'கல்வரல்' என்றும், அறுக்கமுடியாத வடுக்களைக் 'கல்வடு' என்றும் சொல்வது போலத் தூர்க்க முடியாத குழியைக் 'கற்குழி' என்றார்.

அக்குழி தூர்க்கும் அறிவாவது, இறைவன் திருவடிக்கண்ணேயே ஒன்றியிருக்கும் திருவடி ஞானம். திருவடிஞானம் பெற்றார்க்குப் பசி பிணி முதலியன இல்லை. அழுக்கென்றதற்கு மேலுரைத் தாங்கு உரைத்துக்கொள்க.

தொடர்ந்தெழும் சுற்றம் வினையினும் தீய
கடந்ததோர் ஆவி கழிவதன் முன்னே
உடந்தொரு காலத் துணர்விளக் கேற்றித்
தொடர்ந்துநின் றவ்வழி தூர்க்கலு மாமே, 212

இம் - ஏனின், இதுவுமது.

இ - ள் : நம்மைத்தொடர்ந்து எழூம் சுற்றங்கள் நம்மை வருத்தும் வினையினுந்தீயன; ஆதலால் ஒப்பற்ற நம்முடைய ஆவி தமக்குரிய நாள்கள் கடந்து கழிவதற்கு முன்பு, சுற்றம் சென்றவழியே செல்லாமல் அதனோடு மாறுபட்டு, நல்லக விளக்கதை யேற்றி அவ்விளக்காகிய ஸ்ரீ பஞ்சாக்கரத்தையே தொடர்ந்து நின்றவிடத்து, நாம் பிறத்தற்கு ஏதுவாய வயிற்றுக் குழி தூரும் என்றவாறு.

தொடர்ந்தெழும் சுற்றம் - மனைவி என்றும், மனைவியின் தாய்தந்தை என்றும், அவர்களின் தமையன் தங்கை என்றும் ஒன்றேடொன்று தொடர்ந்து எழுகின்ற சுற்றம்.

வினையினும் தீய என்றது வினைபோலப்பரிபாக முற்றகாலத்து வருத்தாமல் என்றும் நின்று வருத்துதலின்.

கடந்தது - தமக்கென்று ஊழாக வரையறுக்கப் பட்ட நாட்கள் உலர்ந்ததாகிய ஆவியென்க.

உடந்து - உடன்று என்பதன் மரூஉ ; மாறுபட்டு, உணர்விளக்கு - ஞானதீபம் ; என்றது இருள் கெடுக்கும் இல்லகவிளக்காகிய திருவைந்தெழுத்து. அதனை ஏற்றுதலாவது இடைவிடாது தியானித்தல்.

தொடர்ந்து நின்றவழி - இடைவிடாது பற்றிநின்ற விடத்து. நின்றவழி எனற்பாலது ஓசை நயத்திற்காக விரித்தல்விகாரம் பெற்றது. தூர்க்கலும் ஆம் என்ற பயனிலைக்கு ஏற்ப அதிகாரத்தான் குழியை எனச் செயப்படுபொருள் வருவிக்க. இப்பகுதிக்கும் வேறுரைப்பாரும் உளர்

அறுத்தன ஆறினும் ஆனினம் மேவி
அறுத்தனர் ஐவரும் எண்ணிலி துன்பம்
ஒறுத்தன வல்வினை ஒன்றல்ல வாழ்வை
வெறுத்தனன் ஈசனை வேண்டிநின் றானே 213

இம் - எனின் வறிஞனொருவன் வறுமையால் வாடி வாழ்வை வெறுத்து ஈசனை வேண்டி நின்றான் என்று அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : சுவையாறன்கண்ணும் உள்ள (ஆசை) அறுபட்டன; பசுக்கூட்டத்தைப் போலப் பொறிகளாகிய ஐவரும் (புலன்கள்மேல் வேட்கைகொண்டு) உயிரை அறுத்துக்கொண்டே இருந்தனர்: பலவாகிய வலிய வினைகள் எண்ணற்ற துன்பத்தைக் கொடுத்து வருத்தின; ஆதலால் வறிஞன் வாழ்வை வெறுத்தான்; (வேறுகதியின்மையான்) இறைவனை வேண்டி நின்றான் என்றவாறு.

அறுத்தன ஆறினும் - எல்லாக் காமத்தையும் இன்மையால் தடுத்தாலும் உணவுவேட்கைமட்டும் தடுக்கவொண்ணாதது ஆகலின் அறுவகைச் சுவையிலுமுள்ள ஆசை அறுத்துக்கொண்டேயிருந்தன என்றருளினார்

ஆனினம் மேவி ஐவரும் அறுத்தனர் - பசுக்கூட்டங்கள் தன் விருப்பம்போல நாற்புறமும் சென்று அயற்புலமென்றும் ஆராயாது மேய்ந்து, உண்ணுதல் உறங்குதல் புணர்தல் புரிவதுபோல ஐம்பொறிகளும் புலன்களைப்பற்ற முயன்று, வறுமை காரணமாக அஃதியலாமையின், கவலையாக உயிரை அறுத்துக் கொண்டேயிருந்தனர். அறுத்தன

என்பதற்கு "உயிரீரும் வாள்" என்றதற்கு உரைத்தாங்கு உரைக்க.

இதற்கு அதிகாரத்தொடு இயைபில்லா வேறுரை கூறுவாரும் உளர்.

## 11. அக்கினிகாரியம்

அஃதாவது, தீ ஓம்புதல், உலகம் நலமடைய, பகை விலக, பொருள் மிக, ஞானம் சித்திக்க, தீயோம்புதல் இன்றியமையாதது; தீயோம்பாமையால் நாடு வளங்குன்ற மக்கள் நல்குரவால் நலிவுறுகின்றனர் என்ற இயைபை எடுத்துணர்த்த இது நல்குரவின் பின் வைக்கப்பட்டது,

வசையில் விழுப்பொருள் வானும் நிலனும்
திசையும் திசைபெறு தேவர் குழாமும்
விசையம் பெருகிய வேத முதலாம்
அசைவிலா அந்தணர் ஆகுதி வேட்கிலே. 214

இம் - எனின், வேட்பதால் விளையும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : குற்றமற்ற பெருமைவாய்ந்த செல்வமும். விண்ணிலும் மண்ணிலும் திசைகளிலும் வாழ்பவர்களும், திக்குப்பாலகர்களும், வெற்றி எய்த, வேத வித்துக்களாய சலிப்பற்ற அந்தணர் அக்கினிகாரியம் செய்வாராயின் (வழியுண்டாம்) என்றவாறு.

வானும் நிலனும் திசையும் தேவர் குழாமும் அந்தணர் ஆகுதிவேட்கில் விசையம் பெருகிய ஆம் என இயைக்க.

வசையில் விழுப்பொருள் - அறவழியான் ஈட்டிய, பழியற்ற பெரும்பொருள். அக்கினி வெற்றித் தெய்வமென மறைகள் கூறுதலின் வான் முதலாயினவற்றிற்கு விசையம் பெருகும் என்றார். விழுப்பொருள் என்பதற்குத் தெய்வம் என்பாரும் உளர்.

வேதமுதலாம் அந்தணர், அசைவிலா அந்தணர் எனத் தனித்தனிக்கூட்டுக.

வேதமுதலாம் அந்தணர் - கைப்பொருளைக் கருதாது வேதத்தையே தமது வாழ்வின் மூலதனமாகக் கருதிய அந்தணர். அந்தணர் - கருணையும் ஒழுக்கமும் உடைய ஞானிகள்; சாதிகுறித்த பெயர் அன்று.

ஆகுதி வேட்கும் அருமறை அந்தணர்
போகதி நாடிப் புறங்கொடுத் துண்ணுவர்
தாம்விதி வேண்டித் தலைப்படு மெய்ந்நெறி
தாமறி வாலே தலைப்பட்ட வாறே. 215

இ ம் - எனின், அந்தணர் இயல்பும் கடமையும் அறிவித்தல் நுதலிற்று.

இ – ள் : அக்கினிகாரியம்பண்ணும் வேதியர்கள் தாம் அடைதற்குரிய வீட்டின்பத்தை விரும்பி, தமக்குப் புறமாயினார் எல்லார்க்கும் கொடுத்து எஞ்சிய வற்றையே உண்ணுவர். தாம் பிறருக்கு விதித்தலை விரும்பிச் சொல்லத்தலைப்படுகிற உண்மை நெறியிலே தமது அறிவால் தாமே தலைப்பட்டவாறு இதுவாம் என்றவாறு.

பிறருக்கு 'ஐயமிட்டுண்' என்று அறிவக்க வந்த அந்தணர். தாமே தம் அறிவால் உணர்ந்து ஒழுகி, மறுமையின்பத்தை நாடிப் பிறருக்குக் கொடுத்தே உண்பர் என்பது கருத்து.

அங்கி வாயிலாக அமரரை ஏற்பவர்களாகக் கொண்டு ஆகுதியான் ஈத்துவக்கும் அந்தணர்கள், மறுமையின்பத்தினை விரும்பிப் பிறப்பைப்பற்றிய சாதிவேறுபாடு கருதாது அனைவருக்கும் கொடுத்தே உண்பர்.

பசித்து வந்தவர்க்கு உண்ணுமுன் இடின் பாத்திர சேடமாம் ஒன்று சேடம்பேசும் செருக்கர் அந்தணர் ஆகார் என்பதுகுறிப்பு. கொடுத்துப் பின் உண்டலே குடிப்பிறந்தார் இயல்பு என்பதாம்.

பிறருக்கு உபதேசித்தலை விரும்பித் தலைப் படுவார் அந்தநெறியில் தாமே நிற்கவேண்டுவது அவசியம் என்பார் 'தாம் அறிவாலே தலைப்பட்ட வாறு' இதுவாம் என்றார்.

**அணைதுணை அந்தணர் அங்கியுள் அங்கி**
**அணைதுணை வைத்ததின் உட்பொரு ளான**
**இணைதுணை யாமத் தியங்கும் பொழுது**
**துணையணை யாயதோர் தூய்நெறி யாமே 216**

இம் – எனின், அக்கினிகாரியமே சிவயோகமாக முதிரும் என்பது உணர்த்துல் நுதலிற்று.

இ – ள்: மனைவியோடு கூடிய அந்தணர்கள், (புறத்தே) ஓம்பப்படும் நெருப்போடு பிராணக்

கினியும் அணையும்வரை தியானித்து வழிபட்டு, அதன் தத்துவார்த்தமாக இணைந்த துணையான இயமம் முதலான யோக உறுப்புக்களோடு ஒன்றியியங்கும் காலத்து, உயிருக்குத் துணையாக அணைந்த யோக நெறி விளையும் என்றவாறு.

துணை அணை அந்தணர், அங்கியுள் அங்கி அணை துணை வைத்து, அதின் உட்பொருளான இணை துணை யாமத்து இயங்கும்பொழுது, துணையணை யாயதோர் தூய்நெறி ஆம் எனப் பிரித்துக்கூட்டிப் பொருள் கொள்க.

அணை துணை அந்தணர் - மனைவியோடு கூடிய இருபிறப்பாளரல்லாதார் தீயோம்பற்கு உரியரல்லர் ஆதலால் ‘ துணையணை அந்தணர் ’ என்று அருளப் பெற்றது.

அங்கியுள் அங்கி வைத்து - புறத்தே ஓம்பப் பெறும் வைதீகாக்கினியுள் தம்மகத்தே ஒளிரும் பிராணாக்கினியும் சேர்ந்து ஒன்றும்வரை தியானித்து; என்றது அக ஆகுதியுள் பிராணனையே அக்கினியாகப் பாவிதது என்றவாறு.

இங்ஙனம் புறம்பே செய்கிற ஆகுதியை அக வழிபாடாக்குதலின் உட்பொருள் யோகப் பயிற்சி என்பார் ‘ அதின் உட்பொருளான யாமம் ’ ‘ இணை துணை யாமம் ’ என்றருளினர்.

இணை துணை யாமம் - நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை,

தியானம், சமாதி முதலிய துணைகளோடு இணைந்த யாமம். யமம் என்பது செய்யுள் ஓசைநயம்பற்றி நீண்டது.

துணை அணை ஆயதோர் துய்நெறி - உயிர்த் துணையாகிய பரமபதியை அணைதற்கு ஆகிய ஒப்பற்ற தூய்மையான நெறியாகிய ஞானமாம் என்பது. " உற்ருர்க்கு உறுதுணையாவன ஐயாறன் அடித்தலம் " என்பார்களாதலின் இங்ஙனம் கூறினர்.

போதிரண் டோதிப் புரிந்தருள் செய்திட்டு
மாதிரண் டாகி மகிழ்ந்துட னேநிற்கும்
தாதிரண் டாகிய தண்ணம் பறவைகள்
வேதிரண் டாகி வெறிக்கின்ற வாறே, 217

இம் — எனின், அந்தணரின் இயல்பு அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : சுக்கில சோணிதங்களாகிய தாதுக்கள் இரண்டால்விளைந்த கருணையோடுகூடிய பறவைகள் வைகறையும் மாலையுமாகிய இரண்டுவேளைகளிலும் வேதங்களை ஓதிக்கொண்டு, விரும்பி அருள்வழங்கி, மனையாளோடு இருபறவையாகி, மகிழ்ந்துஇல்லறம் நடாத்தும். இங்ஙனம் ஆணும் பெண்ணுமாய வேறு பட்டபொருள்கள் இரண்டாகி வெறித்துத் திரிகின்ற விதம் இதுவாம் என்றவாறு.

போது இரண்டு ஓதி - பிரமசரியநிலையில் நிற்கும் அந்தணர்கள் காலை மாலையாகிய இரு போதும் ஓதுதல் மரபாதலின் இங்ஙனம் அருளினர்.

மாது இரண்டும் ஆகி – மாதொடு இரண்டாகி; மகிழ்ந்து – ஒழுக்கந்தவறுது இல்லறம் நடத்தும்.

தாது இரண்டாகிய பறவைகள் – அந்தணர் எனப் படினும் அவர்கள், அனைவரையும் போலச் சுக்கில சோணிதக் கலப்பால் விளைதலாகிய பொதுவியல்பினை உடையவர்களே. பின்னர் ஓதி இல்லறம் காத்து ஒழுக்கம் தவறுமையின் அந்தணர் ஆகின்றுர் என்று சிறப்பியல்பு தெரிவித்தவாறு.

தண்ணம் பறவை - அந்தண்மை பூண்ட பறவைகள். அந்தணரைப் பறவை என்றது அவர்கள் நாளைக்கென்று எதனையும் சேமித்து வைக்காமல், யாருக்கும் அடிமையாகாமல் வாழ்கின்றவர்களாதலின் என்க. இதனை விகங்கவிருத்தி என்பர் வடநூலார்.

வேதி இரண்டாகி; சரீரம் இரண்டாய். வேதி - மேடை; ஈண்டுப் பறவைகள் இருத்தற்கு மேடையாகிய உடலை உணர்த்திற்று.

வெறிக்கின்றவாறு - சரீரத்தில் அபிமானம் ஏற்பட்டுத் திரிகிறவிதம் இதுவாம்; என்றது வேதம் ஓதி, ஆகுதி வேட்டு, அந்தண்மைபூண்டு ஒழுக வேண்டிய இவர்கள் இங்ஙனம் வெறித்தல் கூடாது என்பது உணர்த்தியவாறும்.

பறவைகள் ஓதி, அருள்செய்திட்டு, ஆகி நிற்கும்; ஆகி வெறிக்கின்றவாறு (இதுவாம்) என முடிக்க.

நெய்நின் றெரியும் நெடுஞ்சுட ரேசென்று
மைநின் றெரியும் வகையறி வார்கட்கு
மைநின் றவிழ்தரும் அத்தினம் ஆமென்றும்
செய்நின்ற செல்வ மதியது வாமே, 218

இம்—எனின், ஆகுதிவேட்டலே ஆணவமலத்தைச் சுடுதல் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஆகுதி செய்யப்பட்ட நெய் நின்று எரிகின்ற வலஞ்சுழித்தெழும் சிவாக்கினியே, அகத்தே சென்று, நம்மை அநாதியே பற்றி நிற்கும் ஆணவ மலமாகிய இருளை எரியச்செய்யும் என்னும் உபாயத்தை உணரவல்லவர்கட்கு, அங்ஙனம் உணரும் தினமே, அவர்கள் மலக்கட்டினின்று நீங்குகின்ற நன்னாளாம் என்றும், அந்தநாளில் செயற்குரிய செல்வம் ஞானமேயாம் என்றும் உணர்க என்றவாறு.

புற ஆகுதி அக இருளைப்போக்கும் உபாயமாம் என்று உணரவல்லார்க்கு, அத்தினமே மோட்ச தினம்; அதுவே மெய்ஞ்ஞானம் என அறிக என்பது கருத்து.

பாழி அகலும் எரியும் திரிபோலிட்
டூழி அகலும் உறுவினை நோய்பல
ஆழிசெய் தங்கி உதிக்க அவைவிழும்
வீழிசெய் தங்கி வினைசுடு மாமே. 219

இம் — எனின், அக்கினிகாரியத்தால் வினைகெடும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : பெரிய அகலும் விளக்கும் திரியும் போல் ஊழிக்காலம் படர்ந்து பற்றி நிற்கின்ற மிக்க வினைகளும் அவற்றான் வரும் துன்பங்களும் ஆம்; வட்டமான ஓமகுண்டத்தில் அக்கினியானது தோன்ற அவ்வினைகள் அக்குண்டத்துள்ளே விழும்; அங்ஙனம் அக்கினியில் வீழ்தலைச்செய்து, வினைகள் வெந்து ஒழியும் என்றவாறு.

அகலும் எரியும் திரியும்போல, உடலும் வினையும் நோயும்; ஒன்று கெடின் மற்றவை இல்லையாம். அங்ஙனமாய வினையும் நோயும் ஆகுதி செய்யும் அக்கினியில் அழிந்தொழியும் என்பது கருத்து.

பாழி அகல் - பெரிய அகல்; ஊழியகலும் உறுவினை – ஊழிக்காலம்வரையில் உயிரைப் பற்றி நின்று ஊறுவிளைக்கும் இருவினைகள்.

ஆழி செய்து அங்கி உதிக்க - வட்டமாக வலஞ் சுற்றி அங்கியெழ. அவை விழும் - அவ்வினைகள் நழுவும். வீழி - வீழ்தல்; இ - தொழிற்பெயர்விகுதி.

அங்கி வீழிசெய்து என மாற்றிப் பொருள் கொள்க.

பெருஞ்செல்வங் கேடென்று முன்னே படைத்த
அருஞ்செல்வந் தந்த தலைவனை நாடும்
வருஞ்செல்வத் தின்பம் வரவிருந் தெண்ணிப்
பருஞ்செல்வத் தாகுதி வேட்கநின் றாரே. 220

இ-ள் - எனின், ஞானச்செல்வம் வேண்டுவார் ஆகுதி வேட்க என்று உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: பெருஞ்செல்வம் பெறுதல் கேடு பயப்பதாம் என்று, முன்னமே படைக்கப்பட்ட விரும்பிய ஞானத்தைத் தந்த இறைவனை நோக்கி வருகின்ற செல்வத்தினால் விளையப்போகின்ற இன்பத்தினை எண்ணிப் பார்த்து. அரிய செல்வமாகிய அக்கினியில் ஆகுதியைவேட்டார்கள் என்றவாறு.

செல்வம் நான்கனுள் பெருஞ்செல்வம் என்பது நெல் மணி முதலிய உலகச் செல்வத்தையும், அருஞ்செல்வம் என்பது ஞானத்தையும் வருஞ்செல்வம் என்பது மோட்சத்தையும், பருஞ்செல்வம் என்பது அக்கினியையும் உணர்த்தின

ஞானத்தை முன்னேபடைத்த அருஞ்செல்வம் என்றது உணர்வு. உயிரோடு அநாதி நித்தியமாதலின் கூறப்பட்டது என்க. தந்த - விளங்கச் செய்த; "கம்மியன் ஒளிதந்த மணி" என்றாற் போல. வருஞ்செல்வத்து இன்பம் வர - அடையக் கடவதாகிய முத்தியின்பம் பொருந்த.

ஒண்சுட ரானை உலப்பிலி நாதனை
ஒண்சுட ராகிஎன் னுள்ளத் திருக்கின்ற
கண்சுட ரோன்உல கேழுங் கடந்தஅத்
தண்சுட ரோமத் தலைவனும் ஆமே. 221

இ - னின், ஓமத்தலைவன் இவன் என்றல் நுதலிற்று.

இ - ள்: ஒளிவடிவான இடபத்திற்குத் தலைவனும், நித்தியனும், ஒளிபொருந்திய சுடர்வடிவாகி

உள்ளத் தாமரையில் எழுந்தருளியிருக்கின்ற கண்ணொளிபோல்பவனும், ஏழுலங்கட்கும் அப்பாற் பட்ட குளிர்ந்த சுடர்வடிவினனுமாகிய இறைவன் இயமானனும் என்றவாறு.

ஒண் சுடர் ஆன் ஐ எனப் பிரித்து: ஒளிபொருந்திய சுடர்வடிவான இடபத்திற்குத் தலைவன் எனப்பொருள் கொள்க. அறக்கடவுளும் திருமாலும் இறைவற்கு இடபமாதலின் இங்ஙனம் கூறினார். சர்வ சங்கார காலத்து எல்லாம் தன்னகத் தொடுங்கத் தான் ஒருவனாய் இருத்தலின் உலப் பில்லாமையை உபசாரமாகப் பெற்ற தேவர் கட்கெல்லாம் நாதன் என்றது. நாதனை என்பதி லுள்ள ஐ சாரியை.

ஒண்சுடர் - ஞானம், கண்சுடரோன் - கண் களைச் சோம சூரிய அக்கினிகளாகிய சுடர்களாகப் பெற்றவன். ஆயினும். ஒவ்வோருலகத்தும் அடங்கித் தனித்தனி இருத்தலும், வெப்பமுடைய வனுதலும் இல்லாதவன் என்பார் 'உலகேழும் கடந்த அத்தண்சுடர்' என்றார். கண்சுடரோன் என்பதற்கு, காணும் கண்ணுக்குக் காட்டும் சூரியன் போல உடனாய்நிற்பவன் எனலுமாம். ஓமத் தலைவன் - எசமானன்.

**ஓமத்துள் அங்கியின் உள்ளுளன் எம்இறை**
**ஈமத்துள் அங்கி இரதங்கொள் வானுளன்**
**வேமத்துள் அங்கி விளைவு வினைக்கடற்**
**கோமத்துள் அங்கி குரைகனல் தானே. 222**

இம் - எனின் ஓமாக்கினி கன்மநெருப்பை அறிவிக்கும் கடல்போலும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : எமது இறைவன் ஓமாக்கினியின் உள்ளொளியாக விளங்குபவன் அவனே சர்வ சங்கார காலத்து இடுகாட்டு எரியாக இருந்து சுவைக்கிறான். சோம சூரியர்களாகிய அக்கினிகள் ஆகாயத்து விளைகின்றன. வினையாகிற கடலுக்கு, ஓமநெருப்பானது கடலை மிகவிடாது தடுக்கும் வடவைக்கனல் போலும் என்றவாறு.

ஆகம நெறியில் நிற்பார்க்கு ஓமத்தீ வாகீசுவரி வாகீசுவர கருப்பத்தினின்று எடுத்த சிவாக்கினி யாகலின் அதன் உள்ளொளியாக இருப்பவன் இறைவனே என்றார்.

சர்வசங்காரகாலத்து, சங்காரகாரணனாகிய முதல்வன் தீயாக நின்று எரிகின்றானாதலின் இடுகாட்டெரியை இரதமாகக் கொள்கின்றவன் என்றார்.

தீ மூன்றுள் முற்கூறிய அங்கி ஒழிய ஏனைய சோம சூரியர்களாகிய இரண்டும் ஆகாயத்தில் விளைதலின் இறைவனே பரமாகாயமாக இருத்தலின் 'அங்கி வேமத்துள் விளைவு' என்றார். வேமம் - வ்யோமம் என்றதன் திரிபு.

வினையாகிய நீர்க்கடற்கு ஓமாக்கினி சடசட ஒலியோடு கூடிய வடவைக்கனல் போல்வதாம் என்பது உணர்த்த வினைக்கடற்கு ஓமஅங்கி

குரைகனல் தானே ' என்றார். குரை கனல் - ஒலியோடுகூடிய தீ.

அங்கி நிறுத்தும் அருந்தவர் ஆரணத்
தங்கி இருக்கும் வகையருள் செய்தவர்
எங்கும் நிறுத்தி இளைப்பப் பெரும்பதி
பொங்கி நிறுத்தும் புகழது வாமே. 223

இம் – எனின், ஆகுதி செய்கின்ற அந்தணர்க்கு வரும்பயன் அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : அகத்தும் புறத்தும் அங்கியை நிலை பெறச் செய்கின்ற அருந்தவரும், வைதீகாக்கினி இருக்கும் வகையை அருளிச்செய்தவரும் ஆகிய அந்தணர்கள் பெரிய பதமுத்திகளில் எங்கும் நிலை பெற்று இளைப்பெய்த, இம்மையில் மேலோங்கும் புகழ் மிக்கு உண்டாம் என்றவாறு

வைதீகாக்கினியை வழிபடுகின்ற அந்தணர்க்குச் சொர்க்காதி பதமுத்திகளும் இம்மையில் புகழுமே விளையும் என்பது கருத்து.

ஆரணத்து அங்கி - வைதீகாக்கினி இதுசூரிய காந்தக்கல், அரணிக்கட்டை முதலியவற்றினின்று எடுக்கப்பட்டுச் சமற்காரஞ் செய்யப்படாத தீ

இருக்கும்வகையருள் செய்தலாது, மந்திரங்களால் அதனை வளர்த்தல்

பெரும்பதி எங்கும் நிறுத்தி இளைப்ப எனமாறி, புகழதுவாம் என்பதனோடு கூட்டுக

## 12. அந்தணர் ஒழுக்கம்

அஃதாவது, அந்தணர்கள் மேற்கொள்ளும் ஒழுக்கம் இவை என்பது, அக்கினிகாரியஞ்செய்கிற அந்தணர்தகுதி அறிவித்தலால் அக்கினிகாரியத்தின் பின் இது வைக்கப்பட்டது.

அந்தண ராவோர் அறுதொழில் பூண்டுளோர்
செந்தழல் ஓம்பிமுப் போதும் நியமஞ்செய்
தந்தவ நற்கரு மத்துநின் றங்கிட்டுச்
சந்தியும் ஓதிச் சடங்கறுப் போர்களே. 224

இ-ம் - எனின், அந்தணர் இயல்பு அறிவித்தல் நுதலிற்று.

இ-ள்: அந்தணராவார் ஆறு தொழில்களைப் பூண்டவர்கள்; அக்கினிகாரியம் செய்து, காலை நண்பகல் மாலை என்னும் முப்போதும் தவறாது ஆற்றப்படுகின்ற தவவொழுக்கத்துச் சலியாது நின்று, காலை மாலையாகிய இருவகைச் சந்திகளிலும் வேதமோதிச் சடங்குகள் செய்பவர்கள் என்றவாறு.

அறுதொழில்: ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பன.

முப்போதும் நியமம் செய்தலாவது காலை நண்பகல் மாலை என்னும் மூன்றுவேளைகளிலும் செய்யப்படும் நியதிகள். அவை சந்தியாவந்தனம், மாத்தியான்னிகம் என்பன. ஆங்கு, இட்டு என்பன அசை,

வேதாந்தங் கேட்க விருப்பொடு முப்பதப்
போதாந்த மான பிரணவத் துள்புக்கு
நாதாந்த வேதாந்த போதாந்த நாதனை
ஈதாம் எனாதுகண் டின்புறு வோர்களே, 225

இ-ள்: வேதாந்த ஞானத்தில் சிறந்து, இறைவனை வேறாக எண்ணாது அனுபவிப்பவர்களே அந்தணர்கள் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வேதாந்தத்தைக் கேட்கும் விருப்போடு, தத்துவமசி என்னும் முப்பதங்களின் அறிவுக்கு இறுதியாயுள்ள பிரணவத்துள் புகுந்து, இறைவனை இது இறையெனத் தன்னின் வேறாகக் காணாது ஒன்றாகக் கண்டு இன்புறுவார்கள் என்றவாறு.

வேதாந்தம் - வேதத்தின் முடிவாகிய உபநிடதங்கள். அவற்றைக் கேட்டலாவது ஆசிரியன் மூலமாக இருந்து கேட்டலும், பாராயணஞ்செய்தலும். முப்பதப் போதாந்தமான பிரணவம் - தத்துவமசி வாக்கியத்தின் அனுபவ ஞானத்தின் முடிவாகிய பிரணவத் தியானம்.

இறைவன் நாததத்துவத்திற்கு அப்பாற்பட்டும், உபநிடதங்களைக் கடந்தும், பாச பசு ஞானங்களைக் கடந்தும் எழுந்தருளியிருக்கின்றார் என்பதை விளக்க ' நாதாந்த வேதாந்த போதாந்த நாதன் ' என்றருளினார். ஈதாம் எனாது-இது இறை எனத் தன்னின் வேறாய்ச் சுட்டியறியாது; அதுவே தானாய் என்றபடி.

காயத் திரியே கருதுசா வித்திரி
ஆய்தற் குவப்பர் மந்திரமாங் குன்னி
நேயத் தேரேறி நினைவுற்று நேயத்தாய்
மாயத்துள் தோயா மறையோர்கள் தாமே. 226

இ-ம் - எனின், மாயையுள் பொருந்தாது, காயத்ரி சாவித்திரி மந்திரங்களையே ஆராய்தற்கு விரும்புப வர் அந்தணர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: மந்திரத்தைத் தியானித்து, அன்பாகிய தேரிலேறி எப்போதுந் தியானித்து, தியானப்பொருளே தாமாய் மாயாகாரியமாகிய உலக வின்பத்துள் தோயாத அந்தணர்கள். காயத்ரி சாவித்ரி என்ற இரு மந்திரங்களை இடைவிடாது ஆராய்தற்கு மகிழ்வர் என்றவாறு.

மறையோர்கள் உவப்பர் என முடிக்க.

'கருது சாவித்திரி' மந்திரம் ஆங்குன்னி' என்பன மனத்தாற் செபித்தலை உணர்த்தின, அதிலும், கருது சாவித்திரி என்றதனால் சாவித்திரி மந்திரத்தையும். மந்திரப் பொருளாகிய சாவித்திரியையும் இணைத்தே எண்ணுக.

நேயத்தேர் ஏறி - நேசமாகிய தேரில் ஏறிக் கொண்டு : என்றது அன்பின்றித் தியானம் பலியாது என்பதனை அறுதியிட்டு உரைத்தவாறு.

நேயத்தாய் ; இது ஞேயத்தாய் என்பதன் மரூஉ, ஞேயம் - அறியப்படுபொருள் ; என்றது சிவத்தை. மாயம் என்பது ஈண்டுக் கருவியாகு

பெயராய் அதன் காரியமாகிய தனு கரண புவன போகங்களை உணர்த்திற்று. தாம் ஏ இரண்டும் அசைகள்.

பெருநெறி யான பிரணவம் ஓர்ந்து
குருநெறி யாலுரை கூடினுல் வேதத்
திருநெறி யான திருகை இருத்திச்
சொருபம தானோர் துகளில்பார்ப் பாரே, 227

இம் - ளின், பார்ப்பாரவார் பாசம் ஒழிந்து சிவசொரூபம் ஆனவர்கள் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: வீட்டுலகை அடைதற்கு உரிய பெரு வழியாகிய பிரணவத்தை ஆராய்ந்து, குருபரம் பரையின்படி உபதேசம் பெற்றால் வேதமார்க்க மாகிய முறுக்காணியை முறுக்கி, சிவசொரூப மானவர்களே குற்றமற்ற பார்ப்பார் என்றவாறு.

பிரணவ பஞ்சாக்கரமே வியட்டியில் ஐந்தாய் சமஷ்டியில் ஒன்றாய் முத்தியடைதற்குரிய தலைசிறந்த உபாயம் ஆதலின் 'பெருநெறியான பிரணவம் ஓர்ந்து' என்றார்.

அங்ஙனம் ஓர்தலும் பரம்பரையாகவந்த ஆசிரியன் வழியன்றி உபதேசம் கேட்டலாகாது என்பார் 'குருநெறியால் உரை கூடின்' என்றார்.

வேதங்களில் இறைவனை அடைதற்கு உபாய மாக உணர்த்தப்பெற்ற மார்க்கங்கள், முறுக்காணியை ஒத்தன. ஆதலால், அந்

முறுக்காணியை யிருத்தி முறுக்கினால் ஆன்மாக்கள் தந்தன்மை கெட்டுச் சிவ சொரூப மாவார்; அவ்வாறானவரே அந்தணர்.

முறுக்காணியைத் தளர்த்துதலும் இருத்துதலும் ராக லயத்தைக் கொடுப்பதுபோல, வேதங்களும் நாம் பிரமம் என்ற உணர்ச்சியை உண்டாக்கி உயிருக்குத் தீங்குபுரிகின்றன; ஆதலால் அதனை இருத்துக என்றார். துகளில் பார்ப்பார் - நாம் பிரமம் என்னும் குற்றமற்ற அந்தணர்.

சத்திய முந்தவம் தான் அவன் ஆதலும்
மெய்த்தகும் இந்திய மீட்டியே வாட்டலும்
ஒத்த உயிருடல் உண்டாய் உணர்வுற்றுப்
பெத்தம் அறுத்தலும் ஆகும் பிரமமே. 228

இ-ள்: சிவகுணங்களாகிய உண்மையும், தவமும், தானவனேயாதலும், உடலன்பிற்கு உறுதுணையான இந்திரியங்களை அடக்கி வாட்டுதலும், உயிரும் உடலும் ஒற்றித்து ஒன்றேயாம் என்னும் உணர்வைப் பெற்று வாழ்தலாகிய பெத்த நிலையை நீக்குதலும் கூடின் சீவன் பிரமத்தன்மை யெய்தும் என்றவாறு.

இம்-எனின், பிரமமாகும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

சத்தியம் தவம் முதலாயின அட்டாங்க யோகங்களில் ஒன்று. சத்தியம் இயமத்துள்ளும், தவம் நியமத்துள்ளும் அடங்கும். இதனை இரண்டாவது தந்திரத்துட் காண்க.

தானவனுதல் - "நான் இவளாம்பகுதிப் பொற்பு ஆரறிவார்" என்புழிப்போல. பசுபோதம் கழன்று பதிபோதம் மேவரப்பெறுதல்.

மெய்த்தகுமிந்தியம் - மெய்யின்கட் கிடந்து புலன்களை நுகருந் தகுதியை உடையஇந்திரியங்கள்.

மீட்டியே வாட்டலும் - புலன்களிற் சென்று பற்றுது வாட்டுதலும்.

ஒத்த உயிர் உடல் உண்டாய் - எனது உடல் எனது உயிர் என்னுது யான் என்று வழங்கும் நிலையில் ஒன்றுன உடலுயிர்கள்.

உணர்வுற்று - ஞானம் பெற்று, பெத்தம் அறுத்தலும் - பொறி புலன்களோடு கட்டுண்டு உலகின்பில் கட்டுண்டு நிற்கும் நிலையை நீக்குதலும், பெத்தமறுத்தலே பிரமம் என்றவாறு.

பசிநீக்கமே இன்பமாகாமை போலக் கட்டறு தலே வீட்டின்ப மாகாதாயினும், பிரமத்தோடு அநந்நியமாய் ஒன்றுகைக்கு உபாயமாதற் கிழுக் கின்மையின் இங்ஙனம் கூறினர்.

**வேதாந்தங் கேட்க விரும்பிய வேதியர்**
**வேதாந்தங் கேட்டுத்தம் வேட்கை ஒழிந்திலர்**
**வேதாந்த மாவது வேட்கை ஒழிந்திடம்**
**வேதாந்த கேட்டவர் வேட்கைவிட் டாரே. 229**

இ-ள் - எனின், வேதியரியல்பும், வேதாந்தத்தின் இலக்கணமும் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: வேதாந்த பாடம் கேட்க விரும்பிய வேதியர்கள் அதனைக் கேட்டும் தமது ஆசையை ஒழிந்திலர். ஆசையைவிட்ட இடமே வேதாந்தம். வேதாந்தம் கேட்டவர்கள் ஆசையை விட்டவர்கள் என்றவாறு.

வேட்கை - பொருள்கள் மேல் தோன்றும் பற்றுள்ளம். வேதாந்தம் படித்தும் வேட்கை ஒழியார், வேதியர் ஆகார் என்பதாம்.

நூலும் சிகையும் நுவலின் பிரமமோ
நூலது கார்ப்பாசம் நுண்சிகை கேசமாம்
நூலது வேதாந்தம் நுண்சிகை ஞானமாம்
நூலுடை அந்தணர் காண நுவலிலே. 230

இம் - எனின், புறத்தோற்றத்தினால் யாரும் அந்தணர் ஆகார் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: பூணூலும் குடுமியும் பிராமணியம் ஆகுமோ? பூணூல் பஞ்சு; குடுமி மயிர்; ஆதலால் நூலாவது வேதாந்தமே; நுண்ணியசிகை வேத சிகையாகிய ஞானமே, இதனைச் சொல்லுமிடத்து, பூணூல் தரித்த அந்தணர்கள் போற்றிக் காண்பார் களாக என்றவாறு.

கார்ப்பாசம் – பஞ்சு, கேசம் – மயிர், பிரமமோ என்பது பிராமணீயமோ என அதன் தன்மைமேல் நின்றது பெரிதோ என்றும் ஆம். காண – பார்க்க; வியங்கோள் வினைமுற்று.

சத்தியம் இன்றித் தனிஞானந் தானின்றி
ஒத்த விடையம்விட் டோரும் உணர்வின்றிப்
பத்தியும் இன்றிப் பரனுண்மை இன்றிஊண்
பித்தேறும் மூடர் பிராமணர் தாமன்றே. 231

இம் – எனின், பிராமணர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : சத்தியம், ஞானம், பொறியின்பத்தை விட்டபுத்தி, பக்தி, கடவுள் ஒருவர் உண்டு என்ற உண்மை உணர்வு இவைகள் ஒன்றும் இன்றி உண்பதில் பேராசைகொண்ட அறிவிலிகள் பிராமணர் ஆகார் என்றவாறு.

சத்தியம் முதலாயின அந்தணர்க்கு இன்றியமையாதன என்று அறிவித்தவாறு.

திருநெறி யாகிய சித்தசித் தின்றிக்
குருநெறி யாலே குருபதஞ் சேர்ந்து
கருமம நியமாதி கைவிட்டுக் காணும்
துரிய சமாதியாம் தூய்மறை யோர்க்கே. 232

இம் – எனின், துரியசமாதி கூடுவோரே அந்தணர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : வேதத்தில் சொல்லப் பெற்ற உயர்ந்த சன்மார்க்க நெறியாகிய 'இதுஞானம் அது அஞ்ஞானம்' என்ற வேறுபாடின்றி எல்லாம் மெய்ஞ்ஞானவடிவாய், குருபரம்பரையை ஒட்டிக் குருவின் திருவடிக் கமலங்களைத் தியானித்து, கரு

மங்களையும் நியமம் முதலானவற்றையும் உதறித் தள்ளிக் காணப்பெறும் துரியசமாதியே உண்மையான மறையோர்க்கு உளதாவதாம் என்றவாறு.

உண்மைஞானம் அடைந்தார்க்குக் கன்மங்களும் நியமங்களும் பயனற்ற செயல்களாதலானும். அவை தாமே நழுவுமாதலானும், ‘ கரும நியமாதி கைவிட்டு ’ என்றார்.

துரிய சமாதி - சமாதியின் நான்காம் அவத்தை; அஃதாவது பிரபஞ்சம் தோன்றமல் எல்லாம் சிவமயமாகக் காணுகை. பார்க்குமிடம் எங்குமொரு பரிபூரணனந்த போதமாகக் கண்ட தாயுமான சித்தர் நிலையைக்கொண்டு தெளிக.

மறையோது வாரே மறையவ ராளுல்
மறையோர்தம் வேதாந்தம் வாய்மையில் தூய்மை
குறையோர்தல் மற்றுள்ள கோலா கலமென்
றறிவோர் மறைதெரிந் தந்தண ராமே. 233

இ-ம் - எனின், வேதாந்தமாகிய ஒன்றைப் பயில்வாரே அந்தணர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வேதங்களை ஓதுபவர்களே அந்தணர்கள். ஆனல், அந்தணர்களின் வேதாந்தம் உண்மையில் உயர்ந்தது; குறையுடையனவாகிய மற்ற நூல்களை ஓதுதல் வீண் ஆரவாரத்திற்காகப் படித்தலே என்று உணர்பவர்கள் வேதியர் ஆவார் என்றவாறு.

குறை என்பது, குறையுடையனவாகிய ஏனைய சமய நூல்களை உணர்த்திற்று.

அந்தண்மை பூண்ட அருமறை அந்தத்துச்
சிந்தைசெய் அந்தணர் சேருஞ் செழும்புவி
நந்துதல் இல்லை நரபதி நன்றாகும்
அந்தியும் சந்தியும் ஆகுதி பண்ணுமே. 234

இ-ம் - எனின், அந்தணர் உறையுமிடம் எல்லா வளங்களோடும் இலங்கும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: எல்லாவுயிர்களிடத்தும் பொது நோக்கோடு கருணைபுரிந்து, வேதாந்த விசாரம் பண்ணும் அந்தணர்கள் தங்கியிருக்கிற செழுமையான பூமிக்கு அழிதல் இல்லை; அரசன் நல்லவனுவன்; அந்தணர்கள் காலை மாலை ஆகிய இரண்டு வேளைகளிலும் ஆகுதி செய்வார்கள் என்றவாறு.

இவர்கள் தம் கடமைகளைச் செப்பமுறச் செய்தலின், தெய்வங்கள் மகிழ்ந்து மழைவளம் முதலியவற்றைக் காலம் தவறாது அளித்துக் காப்பாற்றும்; ஆகவே எல்லாம் நன்றாம் என்பதாம். "எவ்வழி நல்லவர் ஆடவர். அவ்வழி நல்லை வாழிய நிலனே" என்னும் புறப்பாட்டும் இக்கருத்துடையதே,

வேதாந்த ஞானம் விளங்கும் விதியிலோர்
நாதாந்த போத நணுகிய போக்கது
போதாந்த மாம்பரன் பாற்புகப் புக்கதால்
நாதாந்த முத்தியும் சித்தியும் நண்ணுமே, 235

இம் – எனின், வேதாந்தானுபவமின்றி வேதம் மட்டும் ஓதும் அந்தணர் அடையும் பயன் அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : வேதாந்த ஞானத்தை விளங்கிக்கொள்ளும் ஊழில்லாத அந்தணர்கள் நாததத்துவத்தின் முடிவாகிய பதமுத்தி எய்துவர். பாச பசு ஞானங்களுக்கு அப்பாற்பட்ட சிவத்தின்பால் அணுக முயற்சிப்பதால் அந்த நாதாந்த முத்தியும் ஏனைய அட்ட மாசித்திகளும் அவர்களையடையும் என்றவாறு.

வேதத்தை ஓதுதல் மட்டும் உடையார், நாதாந்த முத்தியை எய்துவரேயன்றிப் பரமுத்தி எய்தார்; பரமுத்தி எய்தவேண்டுமாயின் அவர்களுக்கு வேதாந்த அனுபவ ஞானம் கைகூடுதல் வேண்டும் என்பதாம்.

ஒன்றும் இரண்டும் ஒடுங்கிய காலத்து
நன்றும் இருந்தும் நலம்பல பேசினும்
வென்று விளங்கும் விகிர்தனை நாடுவர்
சென்று வணங்குந் திருவுடை யோரே. 236

இம் - எனின், இதுவுமது.

இ - ள் : யாவரும் சென்று வணங்கும் ஞானத் திருவுடைய அந்தணர்கள் உடல்நிலை நன்றாகவும் இருந்து, நன்மையான பலவற்றைப்பேசினும், வாத பித்த சிலேட்டுமங்கள் துடிப்பற்று ஒடுங்கிய அன்றாங் காலத்தும், எல்லாவற்றையும் வென்று விளங்குகின்ற இறைவனையே எண்ணுவர் என்றவாறு.

ஒன்றும் இரண்டும் என்பதற்குப் பிராணனும், உச்சுவாச நிச்சுவாசங்களும் என்பாருமுளர்.

நன்றுங் காலத்தும் அன்றுங்காலத்தும் அந்தணர் இறைவனையே எண்ணுவர் என்பது கருத்து.

தானே விடும்பற் றிரண்டும் தரித்திட
நானே விடப்படும் ஏதொன்றை நாடாது
பூமேவு நான்முகன் புண்ணிய போகனாய்
ஓமேவும் ஓரா குதிஅவி உண்ணவே. 237

இம் - எனின், அவியுண்பார் அடையும் பயன் அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : தாமரைப்பூவில் எழுந்தருளியுள்ள பிரமன்போலப் புண்ணியத்தையே நுகரும் பெருநிலையுடையராய் பிரணவத்தோடுகூடிய ஓமத்தில் ஆகுதி செய்யப்படும் அவியுணவை உண்பாராயின் அவ்வந்தணர்கட்கு அகப்பற்றும் தாமேவிடும்; இறைவனை உள்ளே தரிக்க, நான் என்னும் அகங்காரம் நீங்கும்; அவர்களுடைய அறிவு வேறு ஒன்றையும் விரும்பாது என்றவாறு.

பற்றிரண்டு - உயிர்ச்சார்பு, பொருட்சார்பு எனினும் ஆம். தரித்திட என்பதற்கு இறைவனை எனச் செயப்படுபொருள் வருவிக்க, நானே விடப்படும் – நான் என்னும் தன்முனைப்பு நீக்கப்பெற்று 'எல்லாம் சிவன் செயல்' என்னும் பதிஞானம் மிகும் என்பதாம். அவியுண்ணுகின்ற அந்தணர்கள் புண்ணியங்களையே நுகரும் பிரமனாக விளங்குவர்; பின்னர்ப் பற்றற்று உண்மைஞானியாவர் என்பது கருத்து.

உண்ணப் பற்றுவிடும்; தரித்திட நானே விடப் படும்; ஏதொன்றையும் நாடாது எனமுடிக்க.

## 13 இராசதோடம்

அஃதாவது, அரசர்க்கு உண்டாகும் குற்றங் களை உணர்த்துதல். அந்தணருக்குரிய ஒழுக்கம் இவை எனக்காட்டிய சிவயோகியார். அடுத்த நிலை யினராகிய அரசர்க்கு உளதாகும் குற்றம் இவையெனக்கூறிக் கடிந்தவாறு. அதிகாரமுறையும் இதனானே விளங்கும்.

கல்லா அரசனும் காலனும் நேரொப்பர்
கல்லா அரசனின் காலன் மிகநல்லன்
கல்லா அரசன் அறம்ஓரான் கொல்என்பான்
நல்லாரைக் காலன் நணுகநில் லானே. 238

இம் – எனின், கல்லா அரசனைக் காட்டிலும் காலன் நல்லன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: ஒன்றையும் கல்லாத அரசனும், காலனும் தம்முள் ஒப்பர்; கல்லா அரசன் அறத் தைப் பாராமல் கொல் என்று சொல்லுவான்; காலன் நல்லவரை நணுகவும் மாட்டான். ஆதலால் கல்லா அரசனைக்காட்டிலும் காலன் மிகநல்லவன் என்றவாறு.

இச்செய்யுள் வேற்றுமையணி.

நாடொறும் மன்னவன் நாட்டில் தவநெறி
நாடொறும் நாடி அவன்நெறி நாடானேல்
நாடொறும் நாடு கெடுமுட னண்ணுமால்
நாடொறும் செல்வம் நரபதி குன்றுமே. 236

இம் – எனின், அரசன் முறைசெய்யாளுயின் நாடு கெடும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : மன்னவன் நாள்தோறும் தன்னுட்டில் தவநெறியை ஆராய்ந்து, அவனும் நீதியை நாடா, ஞயின் நாடோறும் நாடுகெடும்; செல்வம் குன்றும்; அரசன் அழிவான் என்றவாறு.

நாடு கெடும் உடன் நண்ணும் என்றது விரைந்து கெடும் என்பதை விளக்கியவாறு. உடன் அழி்யின் துன்பம் நெடிது தோன்ருமையின் நாடொறும் குன்றும் என்ருர் 'மூடநண்ணும்' எனப் பாடங் கொண்டு நாடு மடமை எய்தும் எனவும் உரைப்பர்.

'நாட்டில் அவநெறி, நாடொறும் நாடித் தவநெறி நாடானேல்' எனவும் பாடம்.

இச்செய்யுள் சொற்பொருட்பின் வருநிலையணி.

வேடநெறி நில்லார் வேடம்பூண் டென்பயன்
வேடநெறி நிற்போர் வேடம்மெய் வேடமே
வேடநெறி நில்லார் தம்மை விறல்வேந்தன்
வேடநெறி செய்தால் வீடது வாகுமே. 240

இம் – எனின், தவறுசெய்யாது தவவேடத்தரைக் காத்தல் அரசனின் கடமை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : மேற்கொண்ட தவவேடத்திற்குத் தக்க நல்லொழுக்கம் இல்லாதார், தவவேடத்தை மேற்

கொண்டு என்ன பயன் ? ஒழுக்கம் தவறாதார் மேற் கொள்ளும் வேடமே உண்மை வேடம். தவவேடந் தாங்கி அதில் நிலைத்து நில்லாதாரை. அரசன் நெறி யொழுகச் செய்தால் இருவர்க்கும் வீட்டின்பம் விளையும் என்றவாறு.

மூடங் கெடாதோர் சிகைநூல் முதற்கொள்ளில்
வாடும் புவியும் பெருவாழ்வு மன்னனும்
பீடொன் றிலனாகும் ஆதலால் பேர்த்துணர்ந்(து)
ஆடம் பரநூற் சிகையறுத் தானன்றே. 241

இ-ள்: அஞ்ஞானம் அகலாதார்க்கு வேடத் தாற்பயனில்லை. ஆதலின் அவர்கள் வேடத்தை அரசன் களையவேண்டும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அறியாமை நீங்கப்பெறாதோர் சிகை, பூணூல் முதலிய வேடங்களைக்கொள்ளின் மண்ணு லகம் வாழ்வுகெட்டு வாடும் ? அரசனும் பெருமை யிலனாம்: ஆதலால், மீட்டும் ஆராய்ந்து ஆடம்பரத் திற்காக அணியப்படும் நூலையும் சிகையையும் அரசன் அறுத்தானாயின் அது நல்லது என்றவாறு.

ஞானமி லாதார் சடைசிகை நூல்நண்ணி
ஞானிகள் போல நடிக்கின் றவர்தம்மை
ஞானிக ளாலே நரபதி சோதித்து
ஞானமுண் டாக்குதல் நலமாகும் நாட்டிற்கே, 242

இ-ள்: எனின், போலிஞானிகளை உண்மைஞானி களாக்குதல் உலகிற்கு நல்லது என்பது உணர்த் துதல் நுதலிற்று.

இ - ள் : ஞானமில்லாதவர்களாக. சடை, சிகை பூணூல் முதலியவற்றைப்பெற்று ஞானிகளைப் போல நடிக்கின்றவர்களை, அரசன் உண்மை ஞானிகளைக் கொண்டு சோதித்து, அவர்களுக்கு ஞானமூட்டுதல் நாட்டிற்கு நல்லது என்றவாறு.

ஞானமிலாதார் வேடம் மட்டும் தாங்கி, தீயன செய்து நாட்டைக்கெடுக்காமல் தான் பாது காப்பதோடன்றி அவர்களுக்கும் ஞானம் தந்து உய்வித்தல் இருமடங்கு நலம்பயப்பதாம் என்பது கருத்து.

ஆவையும் பாவையும் மற்றற வோரையும்
தேவர்கள் போற்றும் திருவேடத் தாரையும்
காவலன் காப்பவன் காவா தொழிவனேல்
மேவும் மறுமைக்கு மீளா நரகமே. 243

இ-ம் - எனின், அரசனால் காக்கப்படுவோர் இவர் என்றல் நுதலிற்று

இ - ள் ; பசுவையும். பெண்களையும், ஞானி களையும், தேவர்களும் வந்து வணங்கக்கூடிய திருவேடப் பொலிவுடைய முனிவர்களையும் காப்பவன் அரசனே ; அங்ஙனம் அவன் காவாது ஒழிவானாயின் மறுமையில் மீளா நரகத்தை அடைவான் என்றவாறு.

பாவையுர் - பாவை போன்ற மகளிரையும், " மாதவர் நோன்பும் மடவார் கற்பும் காவலன் காவல் இன்றெனின் இன்றாம் " ஆகலின் இவ்வாறு கூறப்பட்டது.

வேண்டுதல் வேண்டாமை இல்லாமையால் திரு வேடத்தாரைத் தேவர்களும் போற்று வாராயினர்.

**திறந்தரு முத்தியும் செல்வமும் வேண்டின்**
**மறந்தும் அறநெறி யேயாற்றல் வேண்டும்**
**சிறந்தநீர் ஞாலம் செய்தொழில் யாவையும்**
**அறைந்திடில் வேந்தனுக் காறிலொன் றுமே, 244**

இம் – எனின், அரசன் முத்திவேண்டின் ஆற்ற வேண்டுவன இவையென்று உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : மிக்க புனல்சூழ்ந்த இப்பூமியின்கண் உள்ளார் செய்யும் தொழில்கள் எல்லாவற்றிலும் சொல்லுமிடத்து வேந்தனுக்கு ஆறில் ஒருபங்கு உளதாம். ஆதலால் இம்மைக்குச் செல்வமும், மறு மைக்கு முத்தியும் விரும்பும் அரசன் மறந்தும் அறமே ஆற்றவேண்டும் என்றவாறு.

திறந்தரு முத்தி – பதமுத்தியும், பரமுத்தியும் என்னும் இருதிறப்பட்ட முத்தி, மறந்தும் என்றது அறிவொடு படாதே ஆற்றினும் என்றவாறு. மக்கள் செய்யும் புண்ணியபாவங்கள் இரண்டிலும் அரசர்க்கு ஆறில் ஒருகூறு உண்டாதலின் அவர்களை வழிப்படுத்தி நடத்தவேண்டிய பொறுப்பு அரசர்க்கே உண்டாம் என்றவாறு.

**வேந்தன் உலகை மிகநன்று காப்பது**
**வாய்ந்த மனிதர்கள் அவ்வழி யாநிற்பர்**
**பேர்ந்திவ் வுலகைப் பிறர்கொள்ளத் தாங்கொள்ளம்**
**பாய்ந்த புலியன்ன பாவகத் தானே, 245**

இம் — எனின், அரசன் எவ்வழி அவ்வழிக் குடிகள் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : இவ்வுலகத்தை மீட்டும் மீட்டும் பிறர் கவர, அவரிடமிருந்து தாம்கொள்ள, பாய்ந்த புலியைப்போல, பாவனை முற்றியவனாகிய மன்னன் உலகைக் காப்பது மிக நல்லது; உலகில் வாழ்கின்ற மக்கள் அவன் ஏவல்வழியே நிற்பர் என்றவாறு.

பாவகம் - பாவனை முற்றியநிலை, "பாவனை முற்றிய பாவகப் பயனின் யான் மேவரப் பெற்றனன் போலும்" என்பது ஈண்டு இணைத்து நோக்குதற்குரியது.

புலியென்றே எண்ணி மாற்றரசரும் தாமுமாக இவ்வுலகைக் கொள்ளையடித்துக் கொண்டு நிற்பதைக் காட்டிலும் போர் வராமலே உலகைக் காப்பது மிக நல்லது என்பது கருத்து.

கால்கொண்டு கட்டிக் கனல்கொண்டு மேலேற்றிப்
பால்கொண்டு சோமன் முகம்பற்றி உண்ணுதோர்
மால்கொண்டு தேறலை உண்ணும் மருளரை
மேல்கொண்டு தண்டஞ்செய் வேந்தன் கடனே. 246

இம் — எனின், தவவழி நின்று சிவானந்தாமுதம் பருகாமல் கள்ளுண்பவரைக் கடிந்து திருத்துதல் அரசன் கடன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : [illegible] பிராண[illegible] கட்டி மூலாக்கினி[illegible] பிரமரந்திர[illegible] ஏற்றி [illegible] [illegible] திலிருந்து ஒழுகுகின்ற [illegible]

முதத்தை உண்ணுமல் மயக்கங்கொண்டு மதுவை யுண்ணும் மயக்கம் பிடித்தவர்களே அரசன் தண்டித்து நல்வழியில் நிறுத்துதல் கடமையாம் என்றவாறு.

கால் - காற்று; என்றது பிராணவாயுவை. கால் கொண்டு கட்டுதலாவது பிராணுயாமம் செய்தல். கனல் கொண்டு மேலேற்றி - மூலக்கனலை ஆதார தெய்வங்களின் தியானத்தோடு ஆக்ஞா சக்கரம் வரையில் ஏற்றி. சோமன் பால் கொண்டு முகம்பற்றி உண்ணுதோர் என மாறுக.

மூலக்கனலை ஆக்ஞாசக்கரம் வரையில் கொண்டு செலுத்தின் மதியமுதம் உருகி வழியும்; அதனை உண்டிருப்போர் காலத்தை வென்று. களிப்போடு கடவுளடியில் வாழ்வார்; அஃது அறியாதார் கள்ளுண்டு களிப்பர்; அவர்களைத் தண்டித்துத் திருத்தல் அரசன் கடன் என்பது கருத்து.

தத்தம் சமயத் தகுதிநில் லாதாரை
அத்தன் சிவன்சொன்ன ஆகம நூல்நெறி
எத்தண்ட மும்செயும் அம்மையில் இம்மைக்கே
மெய்த்தண்டம் செய்வதவ் வேந்தன் கடனே. 247

இ - னின், மக்களைத் தத்தமக்குரிய சமய நெறியில் நிறுத்துதல் அரசன்கடன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: எவ்வுயிர்க்கும் அத்தனுகிய சிவன், தாம் சொன்ன ஆகமநூன்முறைப்படி. தங்கள் தங்களுக்கு உரிய சமயமரபில் நில்லாத மக்களை,

மறுபிறப்பிலே எத்தகைய கொடுந்தண்டனையைக் கொடுத்தும் திருத்துவன். உடலுக்குத் தண்டனை கொடுத்து இம்மையில் திருத்துவது அரசனது கடன் என்றவாறு.

அம்மை - மறுபிறப்பு. அம்மையில் திருத்துவது அரன் கடமை; இம்மையில் திருத்துவது அரசன் கடமை என்பது கருத்து.

## 14. வானச்சிறப்பு

அஃதாவது, வானத்தினது சிறப்புக் கூறுதல். வானம் இடஆகுபெயராய் மழையை உணர்த்திற்று. அரசன் கோல்கோடாது ஒழுகின், வான் வளந் தப்பாதாகலின் இது, இராசதோடத்தின் பின் வைக்கப் பட்டது.

அமுதூறு மாமழை நீரத னாலே
அமுதூறும் பன்மரம் பார்மிசை தோற்றும்
கமுகூறு தெங்கு கரும்பொடு வாழை
அமுதூறும் காஞ்சிரை ஆங்கது வாகுமே. 248

இ-ம் — எனின், மழையினது பயன் கூறுதல் நுதலிற்று.

இ - ள் : அமுதொப்பச் சுரக்கின்ற கரியமேகத்தினின்று பொழிகின்ற நீரால், அமுதைப்போல இனிய கனிகளைத் தருகின்ற பல மரங்களும் நிலமிசைத் தோன்றி வளரும்; கமுகும், இளநீர் ஊறுகிற தெங்கும், இரதம் ஊறுகிற கரும்பும், வாழையும் இனிமை மிகும்; எட்டிக்காயுங் கூட அங்ஙனமே என்றவாறு.

காஞ்சிரை அமுதூறலாவது நீர்வளத்தால் தன்நச்சுத்தன்மை குறைதல்.

வரையிடை நின்றிழி வான்நீர் அருவி
உரையில்லை உள்ளத் தகத்துநின் றூறும்
நுரையில்லை மாசில்லை நுண்ணிய தெண்ணீர்க்
கரையில்லை எந்தை கழுமணி யாறே. 249

இம் - எனின், இதுவுமது.

இ - ள் : மலையுச்சியிலிருந்து வழிகின்ற மேக நீராகிய அருவி, மனத்தகத்து நிலைபெற்று ஊறு கின்ற அன்புபோலக் குறைகூறப்படுவதில்லை; நுரையில்லை; நுண்ணிய தெளிந்த நீராகிய அதற்குக் கரையில்லை; சிவபெருமானுக்குத் திருமஞ் சனம் செய்வித்தற்கு உரிய ஆறும் என்றவாறு.

வான்நீர் - மழைநீர், அருவிக்கும், அதன் காரணமாகிய ஆற்றுக்கும் மழையே காரணம்; அது இறைவனுக்குத் திருமஞ்சனமுமாம் என்பது கருத்து.

உள்ளத்து அகத்துநின்று ஊறும் உரையென்று உரைக்கு அடைமொழியாக்கி உரைத்தலும் ஒன்று.

## 15. தானச்சிறப்பு

அஃதாவது பிறர்க்கு இடுதலின் சிறப்புக் கூறுதல், வான்தருவளத்தான் வயல்வளம் மலிந்து பொருள்வளம் நிரம்பியகாலத்து இட்டுண்டல் யாவர்க்கும் அவசியமாதலானும், தானத்தாலேயே

வான்வளம் கிட்டுதலானும் வானச்சிறப்பின் பின் இது வைக்கப் பட்டது.

ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின்
பார்த்திருந் துண்மின் பழம்பொருள் போற்றன்மின்
வேட்கை யுடையீர் விரைந்தொல்லை உண்ணன்மின்
காக்கை கரைந்துண்ணும் காலம் அறிமினே. 250

இ-ம் - எனின், பிறருக்குக் கொடுத்துண்ணுங்கள் என்று உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: எல்லோருக்கும் கொடுங்கள்; அவர் இவர் என்று வேற்றுமை பாராட்டாதீர்கள்; இன்னும் விருந்தினர்கள் விருவாரோ என்று பார்த்திருந்து உண்ணுங்கள்: பழம்பொருளைப் பாதுகாத்து வைக்காதீர்கள்; பசி உடையவர்களாக மிக விரைந்து உண்ணுதீர்கள்; காக்கைகூடத் தம் இனத்தைக் கரைந்து உண்ணுகின்ற காலத்தை அறியுங்கள் என்றவாறு.

"காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும், அன்ன நீரார்க்கே உள" என்ற திருக்குறளும் ஈண்டு எண்ணுதற்குரியது. தக்கார்க்கீதலே தானம் என்றது இடைக்கால வழக்கு என்பதை விலக்க ஆர்க்கு மிடுமின் என்றருளியது.

## 16. அறஞ்செய்வான் திறம்

அஃதாவது, வறியராய் ஏற்றூர்க்கு மாற்றாது ஈவாரது தன்மை கூறுதல். இது தானத்தோடு ஒருங்கு வைத்து எண்ணப்படுவது ஒன்றுதலின்

*தானச் சிறப்பின் பின் வைக்கப்பட்டது. ' இரந் தார்க்கு ஈதல் ' என்றும் சில ஏடுகள் இத்தலைப்பு காணப்படுகிறது.*

**தாமறி வாரண்ணல் தாள்பணி வாரவர்**
**தாமறி வாரறந் தாங்கிநின் றாரவர்**
**தாமறி வார்சிவ தத்துவ ராவர்கள்**
**தாமறி வார்க்குத் தமர்பர னாமே.**

இம் – எனின், *அறிவார் யார் என்று அறிவித்தல் நுதலிற்று.*

இ - ள் : *இறைவன் திருவடியைப் பணிபவர்களும், ஈகையை மேற்கொண்டவர்களும், சிவ தத்துவம் வரையில் அனுபவித்து உணர்ந்தவர்களும் அறிவாராவர்; அங்ஙனம் அறிபவர்க்கு உறவினர் பரசிவனும் என்றவாறு.*

*தாம் என்பன அசை. அன்றி, தம்மை அறிந் தவராவர் என்றலும் ஆம். இப்பொருளைத் " தம்மையுணர்ந்து தமையுடைய தன்னுணர் வார் " என்ற சிவஞானபோத அவையடக்க வெண்பாப்பகுதி நன்கு விளக்கும்.*

**யாவர்க்கு மாம்இறை வற்கொரு பச்சிலை**
**யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை**
**யாவர்க்கு மாம்உண்ணும் போதொரு கைப்பிடி**
**யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே** 252

இம் – எனின், *யார் யாருக்கு எவ்வெவற்றை யீதல் அறம்ஆம் என்றல் நுதலிற்று.*

இ - ள் : இறைவர்க்கொரு பச்சிலை யிடுதல் அனைவர்க்கும் இயலும் அறமாம்; பசுவிற்குப் புல்லளித்தலும் தாம் உண்ணும்போது வறியார்க்கு ஒருபிடி உணவளித்தலும் பிறர்க்கு இன்னுரை வழங்கலும் யாரும் எளிமையில் இயற்றக் கூடிய அறங்களாம் என்றவாறு.

இதனுல், வறியார்க்கு ஒன்று ஈவதே அறம் என்பதை விலக்கி, எல்லாம் கடந்த இறைவன், பகுத்தறிவு படைத்த மக்கள், பசு இவர்களுக்கும் ஏற்றன அளித்தல் அறமாம் என்று விதித்தவாறு

அற்றுநின் றுருண்ணும் ஊணே அறனென்னும்
கற்றன போதம் கமழ்பவர் மானிடர்
உற்றுநின் றுங்கொரு கூவற் குளத்தினிற்
பற்றிவந் துண்ணும் பயனறி யாரே. 253

இம் - எனின், சிவஞானிகளுக்கு உணவளிப்பதே அறன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இருவகைப்பற்றும் அற்றுநின்ற சிவ ஞானியர் உண்ணும் உணவே அறனும் என்று நூல்கள் கூறும்; அங்ஙனமிருந்தும் கல்வியறிவாகிய கருவி ஞானம் கமழ்பவர்களாகிய மானிடர்கள், பொருந்தி நின்று கிணற்றங்கரையிலும், குளத்திலும் சிவஞானிகளைக் கொண்டுவந்து உண்பித்தலால் விளையும் பயனை அறியாராயினர் என்றவாறு.

அதிகாரம் ‘அறன்செய்வான் திறம்’ ஆதலின் கற்றனவாகிய சிவஞானம் கமழப்பெறுபவர்களாகிய மானிடர்கள், சிவஞானத்தேன் நிறைந்த

கூவலையும் குளத்தையும் ஒப்பர்; அவரைச் சார்ந்து வாழும் பயன் அறியார் என்று உரைத்து இடர்ப் படுவர் சிலர். இப் பொருள் தருதற்குரிய சொல் லமைதி இன்மையையும், அதிகாரத்திற்கு இயை பின்மையும் நோக்கித்தெளிக.

நூல்கள் ஊணே அறன் என்னும்; போதங் கமழ்பவர் மானிடர் ஒரு கூவல் குளத்தினில் உற்று நின்று பற்றி வந்து உண்ணும் பயன் அறியார் எனக் கூட்டுக.

திருத்தொண்டர் புராணத்தில், கொண்டு வந்து மனைப்புகுந்து உண்பித்த வகையறிக.

அறஞ்செய்வான் திறம் சிவனடியார்க்குச் செஞ் சோறு அளித்தலே; கல்விஞானம் பெற்றவர் இதன் பயனறியார் என்றவாறு. இதனால், திருவருள் ஞானம் பெற்றவரே சிவஞானியர்க்கு ஈந்து, செம் பொருள் அடைவர் என்பது பெறப்பட்டது.

அற்றுநின்றார் என்பதற்கு ஏழைகள் எனினும் ஆம்; வறியவர்க்கு ஒன்று ஈவதே ஈகையாதலின்.

அழுக்கினை ஓட்டி அறிவை நிறையீர்
தழுக்கிய நாளில் தருமமும் செய்யீர்
விழித்திருந் தென்செய்வீர் வெம்மை பரந்து
இழிக்கவன் றென்செய்வீர் ஏழைநெஞ் சீரே. 254

இம் – எனின், உலகவர் நிலைக்கு இரங்கி. அறஞ் செய்க என உபதேசித்தல் நுதலிற்று.

இ - ள் : அறிவற்ற மனம் உடையவர்களே! அறுதியே பற்றிநின்ற ஆணவமலத்தைக் கழுவி அறிவை நிறைத்துக்கொள்ளீர்; கல்வி செல்வம் முதலியன உங்களைத் தழுவியிருக்கிற இந்நாளில் அறங்களைச் செய்யீர்; வாளா விழித்துக்கொண்டிருந்து என்ன பயன்? நீங்கள் செய்துள்ள தீவினை, உங்களை நிலையினின்று தள்ள, அன்றைக்கு என்ன செய்வீர்கள்? என்றவாறு.

அழுக்கினை ஓட்டி அறிவை நிறையீர் - அறிவு மணியின்கண் ஒளிபோல உயிரின்கண் எங்குமாய் நிற்பது; அதனது வியாபகத்தைத் தடுத்து நிற்பது ஆணவம்; அதனை ஓட்டின் அறிவு நிறைவுறுமாதலின் இங்ஙனம் கூறினார்.

தழுக்கிய நாளில் தருமமும் செய்யீர்-தழுக்கிய என்பது தழுவிய என்றதன் திரிபு, செல்வம் முதலியன சேர்ந்துள்ள நாளில் என்பது பொருள், இது "கைத்துண்டாம் போழ்தே கரவாது அறம் செய்ம்மின்" என்றதை நினைவூட்டுகிறது.

விழித்திருந்து என்செய்வீர் — 'என்னப்பா விழிக்கிறாய்' என்றாற்போல்வதொரு சொல் வழக்கு. கடமை தவறியபின் கண்விழித்துப் பயன் என்ன என்பதாம்.

வெம்மை - தீவினை; சாக்காடு எனினும் ஆம். ஏழை என்றது பிணியன் ஏழை என்புழிப்போல அறிவற்றவன் என்னும் பொருளது.

தன்னை அறியாது தான்நல்லன் என்ருதிங்(கு)
இன்மை யறியா திளையரென் ருேராது
வன்மையில் வந்திடும் கூற்றம் வருமுன்னம்
தன்மையும் நல்ல தவஞ்செய்யும் நீரே. 255

இம் - எனின், காலன் வருமுன் அறஞ்செய்மின் என்று உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: யாரானும் தடுக்க முடியாத ஆற்றலோடு வருங்கூற்றம், இன்ஞர் இனமுறையர் என்று தன்னை அறியாது; கொண்டுபோகப்படுகின்றதான் நல்லன் என்று எண்ணுது; இவ்வுலகத்து அவனுற்ருர்க்குள்ள வறுமையையும் ஆராயாது; ஆண்டில் இளையர் என்று யோசியாது; ஆதலால் அக்கூற்றம் வருமுன்னம் சீலத்திற் சிறந்த நற்றவத்தைச் செய்யுங்கள் என்றவாறு.

துறந்தான் வழிமுதற் சுற்றமும் இல்லை
இறந்தான் வழிமுதல் இன்பமும் இல்லை
மறந்தான் வழிமுதல் வந்திலன் ஈசன்
அறந்தான் அறியும் அளவறி வாரே. 256

இம் - எனின், வாழ்நாளுளபோதே அறம் செய்மின் என்று அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: துறவியன் வழிவரும் சுற்றத்தாரில்லை; இறந்தவன் வழிபற்றி வரும் இன்பமுமில்லை; தியானிக்காமல் மறந்தவன் பரம்பரையில் ஈசன் வந்திடான்; ஆதலால் தத்தம் வாழ்நாளின் அளவறியும் மக்களே! அறத்தை அறிந்து செய்யுங்கள் என்றவாறு.

துறந்தான் வழிமுதல் - துறந்தானைப் பின் பற்றித் தொடங்கும் சந்ததி. சுற்றமில்லை என்றது துறந்தவன் இருவகைப்பற்றும் அற்றவன் ஆதலின் அவனுக்குச் சந்ததியும் சுற்றமும் இல்லை என்றவாறு.

உயிர் உடலோடு கூடியிருக்கிற வரையில்தான் இன்பமும் துன்பமும் ஆதலின் இறந்தவனுக்கு இன்பமும் இல்லை; என்றது, இன்பம் என்பதன் உப இலக்கணத்தால் துன்பமும் கொள்க.

இம்மந்திரத்திற்கும், அதிகாரத்திற்கும் இயைபில்லா உரை கூறுவாருமுளர்; ஆய்ந்து கொள்வன கொள்க.

தான்தவம் செய்வதாம் செய்தவத் தவ்வழி
மான்தெய்வ மாக மதிக்கும் மனிதர்காள்
ஊன்தெய்வ மாக உயிர்க்கின்ற பல்லுயிர்
நான்தெய்வம் என்று நமன்வரு வானே. 257

இம் - எனின், தருக்காமல் தருமஞ்செய்க என்றல் நுதலிற்று.

இ - ள்: மானையே தெய்வமென மதித்துச் செருக்கும் மனிதர்களே! உடலையே தெய்வமாகக்கொண்டு மூச்சாலியங்குகின்ற பல உயிர்க்கும் நானே தெய்வமாவேன் என்று நமன் வருவான். ஆதலால் முற்பிறவிகளில் செய்த தவத்தின் பயனாக இப்பிறவியிலும் தான் தவஞ்செய்வது பொருந்தும் செயலாம் என்றவாறு.

செய்தவத் தவ்வழி தான் செய்வது தவம் ஆம் எனக் கூட்டிப் பொருள் காண்க.

'தவமும் தவமுடையார்க்கு ஆகும் அவம் அதனை, அஃதிலார் மேற்கொள்வது' ஆகலின் இங்ஙனம் அருளினார்.

மான் - பெருமை; மகத்தத்துவம்.

திளைக்கும் வினைக்கடல் தீர்வுறு தோணி
இளைப்பினை நீக்கும் இருவழி உண்டு
கிளைக்கும் தனக்கும்அக் கேடில் புகழோன்
விளைக்குந் தவம்அறம் மேற்றுணை யாமே. 258

இம்-எனின், முத்திமார்க்கம் இரண்டு என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நம்மை ஆழ்த்தும் இருவினையாகிய கடலிலிருந்து கரையேறுதற்குரிய தோணியாயிருந்து நமக்கும் நமது சுற்றத்தாருக்கும் இளைப்பைப் போக்கிக்காக்கும் இரண்டு வழிகளுள; அவை, அழியாப் புகழை உடைய அம்பலவாணரை நோக்கி ஆற்றப்படுகின்ற தவமும் அறமுமே; அவையே மறுமைக்குத் துணையாவன என்றவாறு.

தோணியாய், கிளைக்கும் தனக்கும் இளைப்பினை நீக்கும் இருவழி உண்டு; (அவை) புகழோன் விளைக்கும் தவம் அறம்; மேல் துணையாம் என முடிக்க.

திளைக்கும் வினைக்கடல்—ஆழ்த்துகின்ற நல்வினையும் தீவினையும் ஆகிய பெரிய கடல். எல்லையின்றி

மீண்டும் மீண்டும் வருதலின் திளைக்கும் வினைக்கடல் என்றார். இருவினைக் கயிற்றால் மலக்கல் ஆர்த்தலின் என, வினையைப் பந்தித்து நிற்றலான் வினையைக் கயிறாக உருவகித்ததும் ஈண்டு ஒப்புநோக்கற்குரியது.

கடல் தீர்வுறு தோணி—கடலிலிருந்து கரை சேருதற்கு உரிய தோணி.

இளைப்பு-வினைக்கடலைக் கடந்து நீந்துதலால் விளைந்த இளைப்பு. இருவகைத் தென்று பிற்கூறப் பெறும் தவமும் அறமுமாகிய இரண்டினை.

கேடில் புகழோன் - அழிவற்ற புகழை உடைய இறைவன்; "பொருள்சேர் புகழ்" என்பதற்குப் பரிமேலழகியார் உரைத்த குறிப்பை ஈண்டு உன்னுக.

நமக்கும் நமது சுற்றத்திற்கும் வினைக்கடலால் விளைந்த இளைப்பைப் போக்கும் தோணியாக இருப்பன, இறைவனை நோக்கி இயற்றப்படும் அறமும் தவமுமே என்பது கருத்து; அவையாவன [illegible] புண்ணியங்களே என்பதாம்.

பற்றது வாய்நின்ற பற்றினைப் பார்மிசை
அற்றம் உரையான் அறநெறிக் கல்லது
உற்றுங் களவியொன் றுந்தது வேதுணை
மற்றண்ணல் வைத்த வழிகொள்ளு மாறே. 259

இம் — எனின், அறம் ஒன்றே மறுமைக்குத் துணையாவதென்று அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : எல்லா உயிர்கட்கும் பற்றுக்கோடாக நிற்கின்ற இறைவனது திருவடியைப்பற்றி, உலகில் யாரையும் குற்றம் சொல்லாதவனுய், அறநெறியில் அல்லது (மனம் பொருந்தாமல்) அறம் ஒன்றி உங்களால் இயன்ற ஒன்றை உதவியதே மறுமைக்குத் துணையாம் ; இறைவன் அருளிய உபாயமாகிய இதனை அறிந்து கடைப் பிடிக்க என்றவாறு.

பற்றதுவாய்நின்ற பற்று - ஆன்மா என்றும் சுதந்திரம் இலது ஆகலின் ஒன்றைப் பற்றியே நிற்கும் ; படர் கொடிபோல பற்றப்படுவதனைப் பற்று என்ருர்.

குற்றமே காண்பார்க்கு மனம் விகாரப் படுதலின், உற்ருர் பகைவர் அயலார் என்னும் எத்திறத்தாரிடத்தும் குற்றங்காணுமை சிறந்த அறநெறியாயிற்று.

ஒன்றும் என்னும் உம்மை இயன்ற அளவாவது என்னும் பொருளது. அற்ருர்க்கு ஒன்று ஈய வைத்ததும் அவனருளே என்பார். ‘ அண்ணல் வைத்த வழி ’ என்ருர்,

## 17. அறஞ் செய்யான் திறம்

அஃதாவது. இறைவன் உதவிய செல்வத்தைக் கொண்டு அறங்களைச் செய்யாதவன்திறம் கூறுதல். இச்செல்வம் சிவன் தந்ததென்று கொடுக்க அறியாது இறக்கின்ற குலாமர் ஆதல் கூடாது

என்றவாறு. அதிகார முறைமையும் எதிர்மறை முகத்தாற் கூறியவதனுனே விளங்கும்.

எட்டி பழுத்த இருங்கனி வீழ்ந்தன
ஒட்டிய நல்லறம் செய்யா தவர்செல்வம்
வட்டிகொண் டீட்டியே மண்ணின் முகந்திடும்
பட்டிப் பதகர் பயன்அறி யாரே. 260

இம் - எனின், அறஞ்செய்யாதான் செல்வம் பயனற்றது என்று அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : விரும்பிய நல்லறங்களைச் செய்யாதவர் செல்வமானது. எட்டியினது பழுத்த பெரிய பழம் ஊழ்த்து வீழ்ந்தாற்போல்வது ; ஆதலின் இவ்வுலகத்தில் கடும்வட்டிவாங்கிச் சேர்த்து, பிறர் பொருளைக் கவருகிற அஞ்சாப் பாதகர்கள் செல்வத்தின் பயனை அறியார் என்றவாறு,

செல்வம் பழுத்த எட்டியிருங்கனி வீழ்ந்தன்ன எனவும், மண்ணில்கொண்டு ஈட்டி முகந்திடும் பதகர் பயனறியார் எனவும் இயைக்க. வீழ்ந்தன என்பது தொகுத்தல் விகாரம்

முகந்திடும் என்றது எல்லையின்றி ஏமாந்த வரையில் கொள்ளை கொள்வார் என்பது குறித்து நின்றது. பட்டிப்பதகர் - அடங்காத பட்டிமாடு போன்ற பாதகர்கள். பதகர் என்பது விகாரம். பயனறியார் என்றது, " செல்வத்துப்பயனே யீதல்; துய்ப்பேமெனினே தப்புன பலவே " என்பதை உட்கொள்ளாதாரை.

ஒழிந்தன காலங்கள் ஊழியும் போயின
கழிந்தன கற்பனை நாளும் குறுகிப்
பிழிந்தன போலத்தம் பேரிடர் ஆக்கை
அழிந்தன கண்டும் அறம்அறி யாரே. 261

இ-ம் - எனின், அறனறியார் திறங்கண்டு இரங்கல் நுதலிற்று.

இ-ள் : கணம் முதலாகக் கணக்கிடப்படுகிற காலங்களும் பல கழிந்தன; பிரமகற்பம் முதலான ஊழிகள் பலவும் கழிந்தன: கற்பனையாகிய மனக் கோட்டைகள் பலவும் அழிந்தன; ஆக்கை ஆயுள் குறுகிச் சக்கையாக அழிந்ததைக்கண்டும் உலகவர் அறம் அறியார்; இவர்தம் அறியாமை இருந்தவாறு என்னே என்றவாறு.

தம் பேரிடர் ஆக்கை நாளும் குறுகி, பிழிந்தன போல அழிந்தன கண்டும் என இயைக்க.

கற்பனை - " ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப, கோடியும் அல்ல பல" என, வகுத்த கற்பனைகள்.

பிழிந்தனபோறலர்வது பரமீப்ரனைக் காணத்தே பாழுக் குழைத்துப் பயனற்றுப் போனமை, கேடு கிண்கூடாப் பட்டது கண்டும், ஐயகோ ! அறம் அறியாரே என இரங்கியவாறு.

அறம்அறி யார்அண்ணல் பாதம் நினையும்
திறம்அறி யார்சிவ லோக நகர்க்குப்
புறம்அறி யார்பலர் பொய்ம்மொழி கேட்டு
மறம்அறி வார்பகை மன்னிநின் றாரே. 262

இ-ம் - எனின், அறமறியார் அறிவனவும், அறியாதனவும், அடைவனவும் இவையென்றல் நுதலிற்று.

இ-ள்: அறத்தை அறியாதவர்கள் சிவனடித் தியானத்தின் திறமும் அறியமாட்டார்; சிவலோகத்திற்குப் புறம்பையும் காணமாட்டார்கள். பலர் பசுபோத முனைப்பால் பகருகின்ற பொய்ம்மொழிகளைக் கேட்டுப் பாவங்களை அறிவாராய்ப் பகையுள் நிலை பெற்றார் ஆவர் என்றவாறு.

பசுபுண்ணியங்கள் பலசெய்து பதிபுண்ணியத்தில் நிலைத்து நின்று திருவடிஞானம் பெறவேண்டுதலின் 'அறம் அறியார்; நினையும் திறம் அறியார்' என்று அருளியது.

சிவலோக நகர்க்குப் புறமும் அறியார் என்ற உம்மை தொக்கது. உம்மை இழிவுசிறப்பு. புறமும் அறியார் எனவே சிவலோகம் அறியார் என்பது சொல்லாமலே பெறப்பட்டது. சாலோகமுத்தியும் எய்தார் எனவே ஏனையமுத்திகள் இவர்கட்கு எங்கே? என்பது குறிப்பு, அவர்கள் அறிந்தன பாவமும், அடைந்தன பகையுமே என்றவாறு.

இருமலும் சோகையும் ஈளையும் வெப்பும்
தருமஞ்செய் யாதவர் தம்பால தாகும்
உருமிடி நாகம் உரோணி கழலை
தருமஞ்செய் வார்பக்கல் தாழகி லாவே. 263

இ-ம் - எனின்; அறஞ்செய்வார்க்கு உளதாகும் நன்மையும், செய்யாதார்க்கு உளதாகும் தீமையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இருமல் முதலாய நோய்கள் அறம் செய்யாதவர்பால் உண்டாகும்; இடி நாகம் முதலிய வற்றால் உண்டாகும் தீமைகள் அறஞ்செய்வார் பக்கத்திலும் சாரா என்றவாறு.

சோகை-இரத்தக் குறைவாலுண்டாகும் உடல் வீக்கம். ஈளை - காசம். வெப்பு - சுரநோய். உரும் - அச்சந்தரும் இடி, உரோணி உரோகிணி; என்றது விண்மீன்களால் விளையும் தீமைகளை. கழலை - பிளவை முதலிய கட்டி.

பரவப் படுவார் பரமனை ஏத்தார்
இரவலர்க் கீதலை யாயினும் ஈயார்
கரகத்தால் நீரட்டிக் காவை வளர்க்கார்
நரகத்தில் நிற்றிரோ நன்னெஞ்சி னீரே. 264

இ - எனின், அறஞ்செய்யார் நரகம் அடைவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : எல்லாராலும் வணங்கத்தக்கவராகிய சிவபரம்பொருளைச் சிந்தியாதவர்களும், ஈயின் தலையளவாவது இரவலர்க்கு ஈயாதவர்களும், குடத்தால் நீர் முகந்து காவை வளர்க்காதவர்களு மாகிய நன்னெஞ்சு படைத்த நீங்கள் அளவில் காலம் அருநரகிடை ஆழ்ந்து கிடத்திரோ என்றவாறு.

பரவப்படுவார் பரமன் என்றது எல்லாரும் தலை வணங்கத் தான் ஒருவரையும் வணங்காத தனிப்பரம் பொருள் என்றவாறு. "சேர்ந்தறியாக் கையானை" என்பது திருவாசகம்.

ஈ தலையாயினும் என்றது தினைத்துணை என்றாற் போல சிறுமையின் எல்லைகுறித்து நின்றது, நீரட்டி – நீரை முகந்து, நீராட்டி, நீராடி எனப் பாடங்கொண்டு வேறு உரை கூறுவாரும் உளர்.

அறஞ்செய்யாரை நன்னெஞ்சினீர் என்றது நச்சுப் பாம்பை நல்லபாம்பு என்றாற்போன்றதோர் குறிப்பு மொழி, அறம்செய்யார் அடையத்தகும் இடம் மீளா நரகே என்று அறிவித்தவாறு.

வழிநடப் பாரின்றி வானோர் உலகம்
கழிநடப் பார்நடந் தார்கரும் பாரும்
மழிநடக் கும்வினை மாசற வோட்டிட்(டு)
ஒழிநடப் பார்வினை ஓங்கிநின் றாரே. 265

இ – ம் : அறவழியில் நடவாதவர்க்கு வினை மிகும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : அறவழியிலே நடப்பவராயின்றிச் சொர்க்க இன்பம் தம்மைவிட்டுக் கழிய நடப்பவர் இருள்சூழ்ந்த உலகமாகிய நரகத்தில் நடந்தாராவர்; ஆணம போதத்தையும் மடங்கச்செய்கிற வினையும் மலமுமாகிற மாசுகளை நீங்க ஓட்டிவிட்டு அதனின்று ஒழிந்து நடப்பவர்கள் நல்வினையில் சிறந்தார் ஆவர் என்றவாறு.

வழிநடப்பாரின்றி - அறவழியில் நடப்பவராயில்லாமல்; என்றது, மறவழிச்செல்வாராய் என்றவாறு.

கழிநடப்பார் : கழியநடப்பார் என்பது கழி நடப்பார் என ஆயிற்று; சொர்க்க இன்பம் தம்மைக்

பொருந்தாதே விலகநடப்பவர் என்பது பொருள், கரும் பார் - கரிய உலகம்; என்றது நரகத்தை.

மழி நடக்கும் வினை - மழித்தல் - உள்ளவற்றைக் கெடுத்தல், வினை - மயிரை மொட்டையடித்தல்போல உயிரின் பண்புகள் அனைத்தையும் கெடுத்தலின் இங்ஙனம் கூறினார்,

வினைமாசு, உம்மைத்தொகை, மாசு-மலம், ஒழி நடப்பார்; ஒழிந்து நடப்பார் என்பதன் விகாரம்.

வினை ஓங்கி நின்றார் - நல்வினையில் சிறந்தார்.

**கனிந்தவர் ஈசன் கழலடி காண்பர்**
**துணிந்தவர் ஈசன் துறக்கம தாள்வர்**
**மலிந்தவர் மாளுந் துணையுமொன் றின்றி**
**மெலிந்த சினத்தினுள் வீழ்ந்தொழிந் தாரே. 266**

இம் - எனின், அடியாரும் அல்லாரும் அடையும் நிலை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: பிற உயிர்கட்கு இரங்கிய கனிந்த மனத்து அடியவர்கள் இறைவன் திருவடியைத் தரிசிப்பர்; அடியார்களை அரனெனவே துணிந்தவர், சிவலோகத்தில் சிறப்பு எய்துவர்; பொருளாசை மிக்கவர்கள் இறப்புக்காலத்தில் துணையொன்றும் இன்றி, சினம்மிக்கு அழிவர் என்றவாறு.

முன்னிரண்டடிகளும் "நினைத்து உருகும் அடியாரை நையவைத்தார்" என்ற திருப்பாடற் கருத்தைச் சிந்திக்கச்செய்கிறது.

துணிந்தவர் - நேயம் மலிந்தவர் வேடமும் ஆலயந்தானும் அரனெனத் துணிந்தவர், இவர் தேவர் அவர்தேவரென இரண்டாட்டாது முழு முதற்கடவுள் சிவன் எனவே துணிந்தவர்

ஈசன் துறக்கம் என்றது வீட்டுலகத்தை ; வேள்வி முதலிய பசுபுண்ணியம் செய்தார் எய்தும் சொர்க்கத்தை அன்று, மெலிந்த - மெலிதற்குக் காரணமான.

இன்பம் இடரென் றிரண்டுற வைத்தது
முன்பவர் செய்கையி னாலே முடிந்தது
இன்ப மதுகண்டும் ஈகிலாப் பேதைகள்
அன்பிலார் சிந்தை அறம்அறி யாரே. 267

இம் - எனின், உபாயம் அறிந்தும் உய்யகிலாரே என்று இரங்குதல் நுதலிற்று.

இ - ள் : பழம்பிறவிகளில் அவரவர் ஈட்டிய நல்வினை தீவினை என்ற இருவினைகளாலே இன்பமும் துன்பமுமாகிய இரண்டும் பொருந்த வைக்கப்பெற்றனவாம், இன்பத்தைக் கண்டும் ஈத்துவக்கா அறிவிலிகள் அன்பற்றவர்கள் ; அறத்தை மனத்தாலும் அறியாதவர்கள் என்றவாறு.

இன்பமது கண்டும் என்றது தக்கவர்க்கு ஈந்த தானப்பயத்தினால் இம்மையில் தாம் இன்பம் எய்துதலைக் கண்கூடாகக் கண்டிருந்தும், இம்மையிலும் இரவலர்க்கு ஈந்து மறுமையின்பம் தேடகிற்றிலரே ! என்னே ! இவர்தம் அறியாமை என்றவாறு.

செடுவதும் ஆவதும் கேடில் புகழோன்
நடுவல்ல செய்தின்பம் நாடவும் ஒட்டான்
இடுவதும் ஈவதும் எண்ணுமின் இன்பம்
படுவது செய்யிற் பசுவது வாமே. 268

இம் - எனின், *அழிவதும் ஆவதும் அவனருள்! அவனருள் வழிநின்று அறஞ்செய்க என அறிவித்தல் நுதலிற்று.*

இ - ள்: *அழிவதும் ஆவதும் மெய்ம்மைசேர் புகழுடையானாகிய இறைவன் வழியதே. ஆதலால் ஒருவன் நடுநிலை தவற அவன் இன்பத்தை எண்ணவும் விடான்; ஆதலால் பிறர்க்குக் கொடுக்கவும், உதவவும் எண்ணுங்கள், அங்ஙன மன்றி இன்பம் அழிதற்கு ஏதுவான வினைகளைச் செய்யின் மக்கட்பண்பு கெட்ட மாக்களாவீர் என்றவாறு.*

*செய்து என்பதைச் செயவெனெச்சமாக்குக. இடுவதும் ஈவதும் — தக்கார்க்கிடுவதும் வறியார்க் கீவதும். இவ்விரண்டின் வேற்றுமையை ‘இட்டார்க் கிட்ட பலன்; ஈந்தார்க் கீந்தபலன்’ என்ற வழக்காறு நோக்கி உணர்க.*

செல்வங் கருதிச் சிலர்பலர் வாழ்வெனும்
புல்லறி வாளரைப் போற்றி புலராமல்
இல்லங் கருதி இறைவனை ஏத்துமின்
வில்லி இலக்கெய்த விற்குறி யாமே. 269

இம் — எனின், *வறுமை நீக்கும் வழி இறைவனை ஏத்துதலே என்பது உணர்த்துதல் நுதலிற்று.*

இ – ள் : சிலருக்கோ, பலருக்கோ தாம் வாழ்வாக இருப்பதை எண்ணி, இறுமாக்கும் சிறுமதியினரைச் செல்வங்கருதிப் போற்றி, வாய் உலர்ந்து போகாமல், வீடுபேற்றினை விரும்பி இறைவனை ஏத்துங்கள்; அச்செயல் வில்லாளன் எய்த அம்பு போல இருமைப் பயனையும் தருவது உறுதி என்றவாறு.

சிலர் பலர் வாழ்வெனும் புல்லறிவாளர் - தாம் செல்வம் மிக்கிருத்தலின் சிலருக்கோ அல்லது பலருக்கோ வாழ்வளிக்கக்கூடிய வள்ளலாக இருக்கின்றோம் என்று எண்ணியிருப்பவர்கள். வாழ்வு, முற்பிறப்பில் செய்த நல்வினை தீவினைகட்கு ஈடாக, இறைவன் தர வந்தது என்பதனை அறியாது மயங்குதலின் அவர்கள் புல்லறிவாளர்கள் ஆயினர்.

புலராமல் – பயன் எய்தாமையின் வாய் உலர்ந்து போகாமல்;

இல்லங்கருதி என்பதற்கு இல்லற இன்பத்தைக் கருதி என்பாருமுளர்; வறுமையை உடையோம் என்பதை எண்ணி எனலும் ஆம்.

வில்லி எய்த விற்குறியாம் என்றது வில்வலான் வில்லில் வைத்து எய்த அம்பு குறிதவறாது சென்று தைப்பதுபோல இறைவனை ஏத்தின் எல்லாம் தவறாது எய்தலாம் என்பது குறிப்பு.

" தம்மை யேபுகழ்ந் திச்சை பேசினும்
சார்வினுந் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடாதே எந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்

இம்மை யேதரும் சோறும் கூறையும்
ஏத்தலாம் இடர் கெடலுமாம்
அம்மை யேசிவ லோகம் ஆள்வதற்
கியாதும் ஐயுற வில்லையே ''

என்ற சுந்தரமூர்த்திசுவாமிகள் திருப்பாடலை இந்தத் திருமந்திரம் நினைவுறுத்துகிறது.

## 18. அன்புடைமை

அஃதாவது, உயிர்க்குணமாய் உயிரோடு ஒன்றி நின்று ஒளிதருவதாய அன்பினை உடையராதல், உடன்பாட்டுமுகத்தானும், எதிர்மறைமுகத்தானும் அறமாவது அண்ணலின் தாள் பணிதலே என்று அறிவித்த திருமூலதேவர், அண்ணலின் சிறப்பியல்பும், அண்ணல் அடியடைந்தார் எய்தும் பயனும் முறையாக உணர்த்துகின்றார் ஆதலின் அறஞ்செய்வான், செய்யான் திறங்களின்பின் இதனை வைத்தருளினார்.

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே. 270

இ-ம் - எனின், சிவத்தின் சிறப்பியல்பும் அதனை அறிவார் எய்தும் பயனும் அறிவித்தல் நுதலிற்று.

இ-ள் : அன்பும் சிவமும் ஆக இருபொருள் உண்டு என்பர் அனுபவஞானம் இல்லாதார்; அன்பே சிவமாவதை, உலகவர் யாவரும் அறிய

மாட்டார்; அனைவரும் அன்பேசிவமாக இருப்பதை அறிந்தபின், அவர்களும் அன்பே சிவமாக இருப்பதை நுகர்ந்து மகிழ்ந்திருந்தார் என்றவாறு.

அன்பாவது தொடர்புடையார்கண் காதலுடையனாதல் எனக் கருவிநூல்கள் சொல்லும், 'இறைவன் மாட்டுச் செலுத்தப்பெறுவது என ஞானநூலாகிய இது நவிலும், உயிர்கள்மாட்டுச் செலுத்தப்படுவதாய அன்பு சுகதுக்க ஏதுவாய் உயிர்கட்கு ஊறாகும், சிவத்திடம் செலுத்தப் பெறும் அன்பு தன்னை உடையானைச் சிவம் ஆக்கும். அன்பு உயிரினின்று வெளிப்பட்டு இறைவனிடம் படர்ந்து உயிரைக் கனியவைத்துச் சிவமாக்கும் என்பது கருத்து. உயிர்களிடம் சிவம் அன்பு வடிவாக அமர்ந்து அருள்செய்வதை உலகவர் ஓராது, அன்பையும் சிவத்தையும் வேறாக எண்ணி மயங்குவர் என்றவாறு, உண்மையுணர்ந்தவர் அன்பே சிவமாக இருப்பர் என்பதாம்.

கடவுள் அன்புவடிவர் என்பதற்கும். அன்பே கடவுள் என்பதற்கும் பெரிதும் வேறுபாடு உண்டு, உற்று உணர்க.

ஆரும் அறிந்தபின் என்பது அறிதற்கு அருமையும், அருள்துணை இருப்பின் யாவரும் எளிதில் அறிதல் கூடுதல் என்ற எளிமையும் விளக்கிநின்றது. அங்ஙனம் அறிந்தார் அறிபவனாகிய தானும் அறியப்படு பொருளாகிய சிவமும் அறிகருவியாகிய அன்பும் வேறாதலின்றி ஒற்றித்து நிற்பர் என்றவாறு.

'என்பர்' 'அறிந்தபின்' என்ற வினைகட்கு ஏற்ப அமர்ந்திருப்பாரே என்னாது அமர்ந்திருந்தாரே என்றது துணிவுபற்றிய காலவழுவமைதி.

"கற்பனை கடந்தசோதி கருணையே உருவமாகி" "இன்பமே என்னுடை அன்பே" "அருளுரு உயிர்கட்கு என்றே ஆக்கினன்" முதலிய ஞான நூற்றுணைகொண்டு தெளிக.

பொன்னைக் கடந்திலங் கும்புலித் தோலினன்
மின்னிக் கிடந்து மிளிரும் இளம்பிறை
துன்னிக் கிடந்த சுடுபொடி யாடிக்குப்
பின்னிக் கிடந்ததென் பேரன்பு தானே, 271

இம் - எனின், ஆன்மாவினிடம் அநாதிநித்ய சம்பந்தம் உள்ள அன்பிற்கும், இறைவற்கும் உள்ள இயைபு இத்தகைத்து என்றல் நுதலிற்று.

இ - ள்: நிறத்தால் பொன்னை வென்று விளங்கும் புலித்தோல் ஆடையை உடையவன்; மின்னொளி நிலைத்துக் கிடந்து மிளிர்ந்தாலொத்த இளம்பிறையை அணிந்தவன்; திருமேனியோடு பொருந்திக்கிடந்த சுடுபொடியாகிய திருவெண்ணீற்றை அணிந்து சங்கார தாண்டவம் பண்ணுநின்ற ஞானமா நடராசமூர்த்தியிடம் அடியேனது பேரன்பு பின்னிக்கிடந்தது என்றவாறு.

அன்பு பின்னிக்கிடக்கின்றபோது அன்பிற்குப் பற்றுக்கோடாய இறைவனும் பின்னிக்கிடப்பன் என்பதாம்.

என்பே விறகா இறைச்சி அறுத்திட்டுப்
பொன்போற் கனலில் பொரிய வறுப்பினும்
அன்போ டுருகி அகங்குழை வார்க்கன்றி
என்போல் மணியினை எய்தவொண் ணாதே. 272

இம் - எனின், அன்பாலன்றி இறைவனை எய்துதல் ஒண்ணாது என்றல் நுதலிற்று.

இ - ள் : எலும்பை விறகாகக்கொண்டு, இறைச்சியை அறுத்து நெருப்பில் பொன்போல் வறுப்பினும், அன்போடு மனமுருகிக் குழைகிறவர்களுக்கல்லாமல் மனமணியாகிய இறைவனை, என்னைப் போல் எய்த முடியாது என்றவாறு,

பொரிய வறுப்பினும் என்றது தவமும் வேள்வியுமாகிய பசு புண்ணியங்களைச் செய்யினும் என்பதை விளக்கியவாறு.

அன்போடு உருகி அகம் குழைவார்க்கு அன்றி என்றது. காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்குவார்க்கு அல்லாமல் என்பதாம். அகங்குழைதலாகிய பதி ஞானத்தாலேயே இறைவனை எளிதில் எய்தலாம் என்பதை விளக்கியவாறு.

என்பொன் மணியை, எனப் பாடங்கொண்டு திருமேனிக்கு நிற ஒப்புக் காண்பாரும் உளர்.

ஆர்வம் உடையவர் காண்பர் அரன்றன்னை
ஈரம் உடையவர் காண்பர் இணையடி
பாரம் உடையவர் காண்பார் பவந்தன்னைக்
கோர நெறிகொடு கொங்குபுக் காரே. 273

இம் - எனின், இறைவனையும் அவன் திருவடியையும் காண்பார் ஆர்வமும் ஈரமும் உடையவரே என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மிக்க அன்புடையவர்கள் இறைவனைக் காண்பர்; கசிந்த மனத்து அடியவர்கள் இறைவன் திருவடியைத் தரிசிப்பர்; மனத்தில் மலமாயா கன்மங்களால் விளைந்த இருவினைச் சுமையை உடையவர்கள் பிறவியைக் காண்பர். அவர்கள் அஞ்சத்தக்க நெறியினைப்பற்றி அடவியில் புகுந்தவராவர் என்றவாறு.

ஆர்வம் - அன்பின்முதிர்ச்சி, ஈரம் - அவ்வார்வத்தால் விளைந்த மனநெகிழ்ச்சி, பாரமாவது இருவினைச் சுமை.

ஆர்வமுடையவர் - இப்பொருளைப் பெற்றாலன்றி உயிர்வாழேன் என்ற உறுதியான அன்புபடைத்தவர்கள். அரன் தன்னைக் காண்பர் - அவ்வார்வமே அரனாக இருப்பதை அறிந்து அனுபவிப்பர், இங்ஙனம் அன்றி இறைவனது திருமேனியைக் காண்பர் என்று ஏலா உரை உரைப்பாருமுளர்.

ஆர்வ முதிர்ந்த மன நெகிழ்ச்சியை உடையவரே அருள்வடிவாகிய திருவடியைத் தரிசிப்பர் என இரண்டாமடி இயம்புகிறது.

பலபிறவிகளில் ஈட்டிய வினைச்சுமைகளில் விளைவது பிறவி ஆகலின், பாரமுடையவர் பவம் காண்பார் என்றார்.

கோரநெறி – அஞ்சத்தகும்நெறி, கொங்கு – தேன்; ஈண்டு அதனையுடைய காட்டுக்கு ஆயிற்று.

கோங்கு புக்காரே எனப் பாடங்கொண்டு மாறு பட்டார் எனப்பொருள் கூறுவாருமுளர். கோங்கு - மாறுபாடு; நரகம் என்பாருமுளர். சேடனுக்கேன் கோங்கு புத்தி என்பது பழமொழி, இது குரங்கின் சிதை சொல்லாகிய தெலுங்கு மொழியாதலின் ஈண்டைக் கேற்குமா என்பதுஆய்ந்துகொள்க.

என்னன் புருக்கி இறைவனை ஏத்துமின்
முன்னன் புருக்கி முதல்வனை நாடுமின்
பின்னன் புருக்கிப் பெருந்தகை நந்தியும்
தன்னன் பெனக்கே தலைநின்ற வாறே. 274

இம் - எனின், அன்பாலல்லது இறைவனையடைய முடியாது என்றல் நுதலிற்று.

இ - ள்: பலசொல்லிப் பயன் என்ன? அன்பினால் மனத்தை உருக்கி மகேசுவரனை வழிபடுங்கள்: தலையன்பினால் உயிரை உருக்கி உங்கள் தலைவனைத் தேடுங்கள்; பிறகு பெருந் தகுதியோடு கூடிய எங்கள் குருநாதனும் தமது அன்பைக்கொண்டு எம்மைக் கவனித்து, தனது பெருங்கருணையினால் எமக்கே வெளிப்பட்டவாறு இதுவாம் என்றவாறு.

முன்னன்பு – தைலதாரை போன்ற தலையாய அன்பு, பின் பெருந்தகை நந்தியும் (தமது) அன்பு உருக்கித் தன் அன்பால் எனக்கே தலைநின்றவாறு இது எனக்கூட்டுக.

மூன்றுமடியிலுள்ள அன்புருக்கி என்பதற்குத் தமது தடையிலாக் கருணையால் பாசத்தைக் கெடுத்து என்றவாறு.

தன்னன்பு – தனது கருணை. எனக்கே தலை நின்றவாறு - எனக்கு வெளிப்பட்டருளியவிதம்; இது ஆம் என்பன வருவித்து முடிக்க.

தானொரு காலம் சயம்புவென் றேத்தினும்
வானொரு காலம் வழித்துணை யாய்நிற்கும்
தேனொரு பால்திகழ் கொன்றை அணிசிவன்
தானொரு வண்ணம்என் அன்பில்நின் றானே. 275

இம் – எனின், அரிய சிவன் அன்பிற்கு எளியன் என்றல் நுதலிற்று.

இ – ள்: தானொருபொருளாயே இருக்குங் காலமாகிய பேரூழிக்காலத்துத் தானே தோன்றி யவன் என எல்லாராலும் ஏத்தப்படினும் வானும் ஒடுங்கும் சர்வசங்காரகாலத்து. பின்தோன்று தற்குத் துணையாய் இருக்கும் ஒருபக்கம் தேன் விளங்குகின்ற கொன்றை மாலை அணிந்த சிவன் ஒருவாறு அடியேன் அன்பிற் பிணைந்து நின்றான் என்றவாறு.

சயம்பு என்பது சுயம்பு என்றதன் திரிபு; தானே தோன்றியவன் என்பது பொருள். ஏத்தினும் என்பதற்கு ஏத்தப்படினும் எனப் பிறவினையாகப் பொருள் கொள்ளப்பட்டது.

வான் ஒரு காலம் - விண் என்ற பூதமும் நீங்குங்காலம்; பேரூழி. ஒருவுதல் - நீங்குதல். ஒரு காலம் : வினைத்தொகை. வழித்துணை - பிற்றோற்றத்திற்குத் துணையாய்.

ஒருபால் தேன்திகழ்கொன்றை அணிசிவம் - ஒரு பக்கம் தேனோடு விளங்குகின்ற கொன்றை மாலையை அணிந்த சிவன். ஒருபால் என்றமையின் மற்றொருபால் உமையோடு கூடி அநுக்கிரக மூர்த்தியாய் விளங்குவது தெரிவித்தாறு. தேன் என்பதற்கே தேன் போலும் இனியே சொல்லையுடைய உமாதேவி என உரைத்தலும் ஆம்.

முன்படைத் தின்பம் படைத்த முதலிடை
அன்படைத் தெம்பெரு மானை அறிகிலார்
வன்படைத் திந்த அகலிடம் வாழ்வினில்
அன்படைத் தான்றனர் அகலிடந் தானே. 276

இம் - எனின், இறைவன் செய்த உபகாரத்தை மறந்த உலகவர்க்கு இரங்குதல் நுதலிற்று.

இ - ள் : முன்னே, ஆன்மாக்கள் உய்யும் பொருட்டு அவர்களைப்படைத்து, அவர்களுக்கென்றே தனு கரண புவன போகங்களையும் படைத்துக் கொடுத்த தலைவனிடம் அன்பைச் செலுத்தி, அவனை யறியாதவர்களாய். வம்பான இந்த அகன்ற இடத்தில் வாழும் வாழ்விலே அன்பு வைத்து, அறிந்து ஏத்த உதவியாய இவ்வுலகத்தை விட்டு வாளா அகன்றனரே! என்னே இவர் அறியாமை! என்றவாறு.

இன்பம் - போகம். இறுதியதான போகத்தைக் கூறவே போகநுகர்தற் கருவியாகிய தனுவும், கரணமும், இடமாகிய புவனமும் உடன் பெறப் படும், முதலிடை — முதல்வனிடம், அன்பு அடைத்து - அன்பு முழுவதையும் செலுத்தி.

வன்பு அடைத்து - வம்பைப் பொருந்தி. அன்புக்கு எதிர்மறை வன்பு; அதனைப் பொருந்தி என்பதாம். இறைவன் அன்பு அருளியது தன்னை யறிந்து தமையுணர : அவ்வழியிற் செலுத்தாது மாறிச் செலுத்தியமையின் வன்படைத்து என்றார்.

அன்படைத்து ஆன்றனர் அகலிடந்தானே — அன்பை வைத்து, கிடைத்த உலகை விட்டனர் என்பதாம். அன்படைத்தான் தன் அகலிடந்தானே எனப்பிரித்து, பாடமுங்கொண்டு வேறுரை கூறுவாரும் உளர்.

கருத்துறு செம்பொன்செய் காய்கதிர்ச் சோதி
இருத்தியும் வைத்தும் இறைவஎன் றேத்தியும்
அருத்தியுள் ஈசனை யாரருள் வேண்டில்
விருத்தி கொடுத்திடும் விண்ணவர் கோனே. 277

இ-ம் — எனின், இறைவற்கு அன்புசெயின் அவன் எல்லாம் அருளுவன் என்றல் நுதலிற்று.

இ — ள் : கருத்தில் பொருந்திய காய்ந்த செம்பொன் போன்ற ஒளிவடிவனாகிய ஈசனை மனத்துள் இருத்தியும், மனத்தை அவனிடத்தில் வைத்தும், இறைவா இறைவா என்று ஏத்தியும், யார் அவன்

அருளை வேண்டி நிற்பினும், விண்ணவர் தலைவனாகிய அவன், உய்வைத் தந்தருள்வன் என்றவாறு.

சோதி ஈசனை, யார் இருத்தியும், வைத்தும், ஏத்தியும் வேண்டினும், விண்ணவர்கோன் விருத்தி கொடுத்திடும் என முடிக்க.

காய் செம்பொன் போலக் கதிர்செய் சோதி என இயைத்து, கனலிற் காய்ந்த மாற்றுயர்ந்த பொன்னைப் போலக் கிரணங்களைப் பொழிகிற சோதிவடிவினன் என்க, "எண்ணத்துள் எழுபரஞ் சோதி" என்றதையும் ஈண்டு உன்னுக.

இருத்தியும் - தம்மனத்துள் அவனை எழுந் தருளச் செய்தும், வைத்தும் - தம் மனத்தை அவன் பால் வைத்தும்; என்றது. கொண்டும் கொடுத்தும் குடிகுடியீசற் காட்செயதலை கூறிற்று. விருத்தி கொடுத்திடும் - வளர்ச்சியை யருளுவன்.

நித்தலும் துஞ்சும் பிறப்பையும் செய்தவன்
வைத்த பரிசறிந் தேயு மனிதர்கள்
இச்சையு ளேவைப்பர் எந்தை பிரானென்று
நச்சியே அண்ணலை நாடுகி லாரே. 278

இம் - எனின், பிறப்பை உதவிய பெருமானை விரும்பாமல் இச்சையை நச்சுதல் ஆகாது என்றல் நுதலிற்று.

இ. - ள்: ஆன்மாக்களாகிய நமக்கு நாள்நாளும் சாகின்ற பிறப்பையும் அவன் அருளிவைத்தமை

அறிந்திருந்தும் மக்கள் உலகபோகத்திலே இச்சை வைப்பவர்களாய், ‘எந்தாய்!’ ‘தலைவ!’ என்று, அண்ணலாகிய அவனை விரும்பித் தேடுகின்றிலர் என்னே! இவர்கள் பேதைமை என்றவாறு.

இவ்வுடம்பு நாள்தோறும் தேய்ந்து வருதலின் நித்தலும் துஞ்சும் பிறப்பு என்றருளியது. துஞ்சுதல் - சாதல். செய்துவைத்த பரிசு அறிந்தேயும் எனப் பிரிக்க.

இச்சை - காமம்; புவனபோகங்களிலே அழுந்தி நுகர்தற்காக அமைந்த மாயையின் காரியமாகிய மயக்கம், எந்தை - எமது தந்தை. பிரான் - வள்ளன்மை உடையவன்.

அன்பினுள் ளான்புறத் தானுட லாயுள்ளான்
முன்பினுள் ளான்முனி வர்க்கும் பிரானவன்
அன்பினுள் ளாகி அமரும் அரும்பொருள்
அன்பினுள் ளார்க்கே அணைதுணை யாமே. 279

இம் - எனின் இறைவன் அன்பு ஒன்றற்கே அகப்படுவன் என்று உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: இறைவன் அன்பிற்கு உள்ளும் புறம்பும் உடலுயும் இருப்பவன்; பரிபாகமுற்ற ஆன்மாக்களுக்குக் குருவாயும் வந்து, முன்னின்று உணர்த்துவான்; முனிவர்கட்கெல்லாம் தலைவன்; அன்பை யிடமாகக்கொண்டு அதற்குள் எழுந்தருளியிருக்கும் அரியபொருள் போல்வான்; ஆதலால், அன்போடு எண்ணுவார்க்கு அவன் சேரும் துணையாவான் என்றவாறு.

அன்பின் வழியது உயிர்நிலை ஆதலின் குண குணி ஒற்றுமைபற்றி உயிர்க்குணமாகிய அன்பிற்கு உள்ளாயிருப்பவன் இறைவன் என்னப்பட்டது; அதாவது ஒன்றாயிருத்தலை உணர்த்திற்று. அங்ஙனமே புறத்தான் என்றது வேறாயிருத்தலையும், உடனாய் என்பது உடனாக இருத்தலையும் உணர்த்தின.

அன்பினுள் ஆகிஅமரும் அரும்பொருள் - அன்பில் தாமே எழுந்தருளி இருக்கும் பொருள்; என்றது அவனது நித்திய சுதந்திரத்தன்மை சொல்லியது.

## 19. அன்புசெய்வாரை அறிவன் சிவன்

அஃதாவது, அன்பே சிவமாவது அறிந்து அமர்ந்திருக்கும் அன்பரைச் சிவன் அறிந்து ஆட்கொள்வன் என்பதாம். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

இகழ்ந்ததும் பெற்றதும் ஈசன் அறியும்
உகந்தருள் செய்திடும் உத்தம நாதன்
கொழுந்தன்பு செய்தருள் கூரவல் லார்க்கு
மகிழ்ந்தன்பு செய்யு மருளது வாமே. 280

இ-ம் - எனின், அன்புசெய்வார்க்கு இறைவன் அருளும்வகை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : உயிர்கள், இறைவனை இகழ்ந்ததையும், அதனால் அவர்கள் பெற்ற பயனையும் சர்வக்ஞனான இறைவன் அறிவான், உண்மையன்பு செய்வார்க்கே

உத்தமநாதனாகிய சிவன் தானும் மனம் உவந்து அருள் வழங்குவன், தம்மாட்டு மேலும் மேலும் புதிய அன்பைச்செய்து அருளை மிகுவிக்கவல்ல அடியார்கட்கு, மகிழ்ந்து, என்றும் நீங்கா அன்பை அவர்கள் செய்யுமளவிற்கு, அருளை வழங்கும் என்றவாறு.

நாம் இகழ்வதையும் புகழ்வதையும் ஈசன் அறிவான்; அறிந்து அருள் வழங்குவான். ஆதலால், அவன் மாட்டு, கிளைத்து எழும் அன்பு செய்ய வல்லவர்கட்கு என்றும் நீங்காது நிற்கும் அருளை வழங்குவான் என்பது கருத்து.

கொழுந்தன்பு - கொழுந்துபோலக் கிளைத்தெழும் அன்பு. கூர - மிகுவிக்க.

இன்பப் பிறவிக் கியல்வது செய்தவன்
துன்பப் பிறவித் தொழில்பல எண்ணினும்
அன்பிற் கலவிசெய் தாதிப் பிரான்வைத்த
முன்பிப் பிறவி முடிவது தானே. 281

இ - ன், அன்பால் எடுத்தபிறவியிலேயே முத்தி யெய்தலாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பேரின்பம் எய்துதற்காகக் கொடுக்கப் பெற்ற இப்பிறவியிலே அதற்கு ஏற்புடையதாகிய சாதனங்களைத் தந்த இறைவன், நாம் அங்ஙனம் ஒழுகாது துன்பமே வடிவான பிறவிக்கு ஏற்ற இழி தொழில் பலவற்றை எண்ணினும், அன்போடு

கலக்க, இறைவன் அருளிய இப்பிறவி அவன் முன்பே முடிவடையும் என்றவாறு.

என்னினும் எனப்பாடங்கொண்டு துன்பப் பிறவிக்கு ஏற்ப நாம் செய்யும் தொழில்கள் பல ஆயினும் என்று உரை கூறலும் ஆம். இயல்வது - பொருந்துவதாகிய ஞானசாதனம்.

அன்பின் கலவி செய்து - அன்போடு கூட, செய்தெனெச்சத்தைச் செயவெனெச்சமாக்குக.

ஆதிப்பிரான் முன்பு வைத்த இப்பிறவி யென மாறுக. பிறவிமுடிவது என்றது மீளஉதித்தற்கு ஏதுவாகிய வினைச்சேடங்கள். கண்ணுதலோன் கருணையினால் கழிதலின் பிறவாப்பெருநெறி கிட்டும் எனக் குறிப்பித்தவாறு.

அன்புறு சிந்தையின் மேலெழும் அவ்வொளி
இன்புறு கண்ணியொ டேற்க இசைந்தன
துன்புறு கண்ணியைந் தொடும் துடக்கற்று
நண்புறு சிந்தையை நாடுமின் நீரே. 282

இம் - எனின், அன்புடையாரை இறைவன் ஏற்றருளுவன் என்று உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அன்போடு கூடிய சிந்தையின்மேல் எழுகின்ற அகாரவடிவாகிய சிவ ஒளி, இன்பமுற்ற கண்களை உடைய பராசக்தியோடுகூடி எம்மை யேற்றுக்கொள்ள ஒருப்பட்டன; ஆதலால் உயிர்க ளாகிய நீங்கள் துன்பம்மிக்க வலையாகிய பொறிகள்

ஐந்தோடும் பொருந்துதலற்று. இறைவன் திருவடிக் கண்ணே நண்புற்ற சிந்தையை நாடிக் கொள்ளுங்கள் என்றவாறு.

ஒளி : இது பால்பகா அஃறிணைப்பெயர். சிவத்தை ஒளியென்றதற்கு ஏற்ப இசைந்தன எனப் பன்மை முடிபு தந்தார். அவ்வொளி என்பது சுட்டன்று; அகாரவாச்சியமாகிய சிவம் என்பது பொருள்.

இன்புறு கண்ணி - காமாட்சி. துன்புறு கண்ணி - துன்பத்தைத் தருகின்ற வலை. கண்ணி ஐந்தொடும் - ஆன்ம அறிவைப் புறம்போகவொட்டாது போகத்துள் அழுந்தும்படி தடுத்து நிறுத்துகின்ற ஐம்பொறிகளாய வலையோடும். தொடக்கற்று – பிணிப்பற்று.

புணர்ச்சியுள் ஆயிழை மேலன்பு போல
உணர்ச்சியுள் ஆங்கே ஒடுங்கவல் லார்க்கு
உணர்ச்சியில் லாது குலாவி உலாவி
அணைத்தலும் இன்பம் அதுஇது வாமே. 283

இம் – எனின், அன்பால் மனம் ஒடுங்கவல்லவர்க்கு இன்பு ஆம் என்றல் நுதலிற்று

இ – ள் : புணர்ச்சிக்காலத்து மகளிர்மேல் வைத்த அன்புபோல உணர்ச்சி வயப்பட்டு ஒன்றாய் ஒடுங்க வல்லவர்கட்கு, உணர்ச்சியுமற்று, குலாவியும் உலாவியும் அணைத்தபோது சிற்றின்பம் செறியும் : அந்த இன்பம் போல்வது சிவத்தோடு ஒன்றுதலால் விளையும் இவ்வின்பமும் என்றவாறு.

" நான் இவளாம் பகுதிப் பொற்பு ஆர் அறிவார் புலியூர்ப் புனிதன் வெற்பில் " என்றாற் போலவும் " புணர்ந்தால் புணருந்தொறும் பெரும் போகம் பின்னும் புதிதாய் " உணர்ந்தார்க்கு உணர்வரிய தன்மைத்தாதல் போலவும், உணர்ச்சியுள் ஒடுங்கி, அவ்வுணர்ச்சியுங் கெட்டு, பொன்னே மணியே எனப் புகழ்ந்து போற்றிக் குலாவி, உலாவந்து, அணைத்தவுடன் ஆகும் இன்பமாகிய அது இறைவனைக் கலந்தபோதுண்டா கும் இந்தப் பேரின்பமாம் என்பது கருத்து.

அன்புபோல உணர்ச்சியுள் ஒடுங்க வல்லார்க்கு, இல்லாது குலாவி உலாவி அணைத்தலும் இன்பம் ஆம்; அது இதுவாம் எனக் கூட்டிப் பொருள் காண்க. இங்ஙனமன்றி, வேண்டியவாறே சொல் முறித்துக் கண்ணழித்து உரைகாண்பாரும் உளர்.

உற்றுநின் றாரொடும் அத்தகு சோதியைச்
சித்தர்கள் என்றும் தெரிந்தறி வாரில்லை
பத்திமை யாலே பணிந்தடி யார்தொழ
முத்தி கொடுத்தவர் முன்புநின் றானே. 284

இ—ள்: சித்தர்கட்கும் எட்டாத சிவம் பத்தர்க்கு முன்னிற்கு என்றல் நுதலிற்று.

இ - ள்: அன்புடன் என்றும் தியானிப்பாரோடு விளங்கும் பெருமை தங்கிய சோதிவடிவுடைய கடவுளைச் சித்தர்கள் என்றும் ஆராய்ந்து அறிந் தாரில்லை; அங்ஙனமாக, அடியார்கள் பத்தியோடு பணிந்து தொழ அவர்கட்கு முத்தியைக்கொடுத்து அவர்கள் முன்பு நின்றான் இறைவன் என்றவாறு.

அத்தகு சோதி - அத்தகைய சோதி. அகரம் நெஞ்சறி சுட்டு, உரையினால் சொல்ல ஒண்ணாமையின் அத்தகு சோதி என்றார்.

சித்தர்கள் - அணிமாதி சித்திகளையே தம் தவ வரம்பாகக் கொண்டு மகிழ்ந்தவர்கள். அவர்களால் என்றும் இறைவன் அறியப்படான் என்றவாறு,

பத்திமை - அன்பு. முன்பு நின்றான் என்றது இறைவனது எளிவந்த கருணையைக் காட்டிற்று.

கண்டேன் கமழ்தரு கொன்றையி னானடி
கண்டேன் கரியுரி யான்றன் கழலிணை
கண்டேன் கமல மலருறை வானடி
கண்டேன் கழலதென் அன்பினுள் யானே. 285

இம் - எனின், அன்பினால் அரனைக் கண்டமையைத் திருமூலர் தன்மேலிட்டு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: மணம் வீசுகின்ற கொன்றைமாலையை அணிந்த சிவபெருமான் திருவடியைக் கண்டேன்; ஆனையை உரித்துப் போர்த்த அரனடியைக் கண்டேன். அடியார்களது உள்ளக்கமலத்தில் உறை பவனாகிய ஞானசொரூபியின் திருவடியைக் கண்டேன்; எனது அன்பினுள் யானே கண்டேன் என்றவாறு.

இம்மந்திரம் இறைவன் அன்பிற்கு எளியனாய், தமக்குக் காட்சி தந்தமையைக் கூறி உலகினரைத் தெளிவிக்கின்றது.

நம்பனை நானு விதப்பொரு ளாகுமென்(று)
உம்பரில் வானவர் ஓதுந் தலைவனை
இன்பனை இன்பத் திடைநின் றிரதிக்கும்
அன்பனை யாரும் அறியகி லாரே. 286

இ-ம் — எனின், இறைவன் இன்பத்தில் சுவையாகும் அன்புவடிவன் என்பது அறிவித்தல் நுதலிற்று.

இ-ள் : நம்பப்படத் தக்கவனும் எல்லாப் பொருளுமாய் இருப்பவன் சிவனே என்று தேவர்களால் ஓதப்படுபவனும், இன்பவடிவனும், இன்பத்திடையில் சுவைக்கப்படுகின்ற அன்புவடிவனும் ஆகிய இறைவனை யாரும் அறியமாட்டார்களே என்றவாறு.

நம்பன் – அனைவராலும் நம்புதற்கு உரியவன்; என்றது. அடைக்கலம் புகத்தக்கவன் என்பதை விளக்கிற்று.

உம்பர் - தேவலோகம். நானுவிதப் பொருள் – இயங்குவன நிற்பனவாகிய எல்லாப் பொருளும். இரதிக்கும் என்பது ரசிக்கும் என்பதன் திரிபு: சுவைக்கும் என்பது பொருள்.

முன்பு பிறப்பும் இறப்பும் அறியாதார்
அன்பில் இறைவனை யாமறி வோமென்பர்
இன்பப் பிறப்பும் இறப்பும் இலான்நந்தி
அன்பி லவனை அறியகி லாரே. 287

இம் — எனின், அன்பில்லாதவனை அரன் அறியான் என்று உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள்: முன்பு. பிறப்பிறப்பை யன்றி வேறு ஒன்றையும் அறியாத மக்கள், அன்பால் இறைவனை யாம் அறிவோம் என்று இறுமாப்பர்; இன்பம் என்று மாயையுள் அழுந்திய மக்களால் எண்ணப்படும் பிறப்பும் இறப்பும் என்றுமே யில்லாத இறைவன், அன்பில்லாதவனை என்றும் அறியான் என்ற வாறு.

அன்பால் இறைவனை அறியலாம் என்று இவர் கூறும் உபாயத்தை வழியறியாது உணர்ந்து அன்பால் இறைவனை அறிவோம் எனத் தருக்குவர் உலகர். ஆனால் பிறந்திறத்தலாகிய அவை மல கன்மங்களை வாட்ட இறைவன் அருளியது என்றதை உணராதவர்கள்; ஆதலின் அவர்கள் கருத்து தவறுடைத்து என்பதாம்.

ஈசன் அறியும் இராப்பக லுந்தன்னை
பாசத்துள் வைத்துப் பரிவுசெய் வார்களைத்
தேசுற் றறிந்து செயலற் றிருந்திடில்
ஈசன்வந் தெம்மிடை ஈண்டிநின் றானே. 288

இம் - எனின், இறைவன் அனவரதமும் அன்பு செய்வாரை அறிவன் என்று அறிவித்தல் நுதலிற்று.

இ — ள்: இறைவன் இராப் பகலாகத் தன்னைப் பற்றிநின்று அன்புசெய்பவர்களை அறிவன்; அவன் ஒளியாக வந்து பொருந்துதலை அறிந்து, செயலற்றிருந்தால் ஈசன் தாமே விரும்பிவந்து எம்முள் நெருங்கி நிற்பான் என்றவாறு.

முன் திருமந்திரத்துள் அன்பால் இறைவனை அறிவோம் என்றவர்க்கு அகப்படான் என்றவர் இத் திருமந்திரத்துள் ஈசனாகவந்து எழுந்தருளுவன் என்று கூறி. அவன் வருந்துணையும் இடையீடு இல்லாது அன்பு செய்யவேண்டுவது நம் கடன் என உபாயம் உணர்த்தியவாறு.

விட்டுப் பிடிப்பதென் மேதகு சோதியைத்
தொட்டுத் தொடர்வன் தொலையாப் பெருமையை
எட்டுமென் னுருயி ராய்நின்ற ஈசனை
மட்டுக் கலப்பது மஞ்சன மாமே. 289

இம் — எனின், இடைவிடாத்தியானமே இறைவற்கொருமஞ்சனம் என்றல் நுதலிற்று.

இ - ள் : எல்லாவற்றினும் சிறந்த மேன்மை மிக்க சோதி வடிவினராகிய இறைவனை இடையிட்டு எண்ணுவது ஏன் ? தொலையாப் பெருமையனாகிய அவனை இடைவிடாது எண்ணுவேன் ; அங்ஙனம் எண்ணுதற்கு விரும்பிய எனது உயிர்க்குயிராய் நின்ற இறைவனை அன்போடு கலந்திருப்பதே அவனுக்குச் செய்யும் அபிடேகமாம் என்றவாறு.

இடையீடுபட்டு எண்ணும் உலகவர் நிலைக்கு இரங்கி, தான் இடையீடு இன்றியே எஞ்ஞான்றும் எண்ணுவேன் ; என் அன்பு கலந்திருப்பதே அவனுக்கு அபிடேகமாகின்றது என்று தன் அனுபவம் கூறித் தெளிவித்தவாறு.

## 20. கல்வி

அஃதாவது, கற்கவேண்டியவற்றைக் கற்றல். கற்கவேண்டியன ஞானநூல்கள். அதனைக் கற்றலாவது, ஆசான் முன்பிருந்து நூலை ஓதுதலும், அவன் தன்னனுபவங்களைக் கூறப் பயிறலும் என இருவகையானும் கற்றல். நூலாற்றெரியாத நுணுக்கங்கள் வழிவழி வந்த ஆசாரியனுடைய அனுபவ உரையால் தெளியுமாதலின், நூற்பயிற்சியைக் காட்டிலும் அனுபவப் பயிற்சி மிக மிக இன்றியமையாதது, இறைவனிடத்து இடைவிடா அன்புபூண்டார்க்கு அன்றி இத்தகைய பயிற்சிகள் எய்துதல் அரிதாகலின், அன்புடைமையின் வகைக்குப் பின் இது வைக்கப் பெற்றது.

குறிப்பறிந் தேனுடல் உயிரது கூடிச்
செறிப்பறிந் தேன்மிகு தேவர் பிரானை
மறிப்பறி யாதுவந் துள்ளம் புகுந்தான்
கறிப்பறி யாமிகும் கல்விகற் றேனே. 290

இ-ள் - எனின், சிறந்தகல்வி கற்றமையால் சிவன் உள்ளம் புகுந்தமை உணர்த்துதல் நுதலிற்று,

இ — ள் : இறைவன் எனக்கு உடல் தந்ததன் குறிப்பை உணர்ந்தேன் ; உயிரோடுகூடி இறைவன் ஒன்றாய் இருக்குந்தன்மையை அறிந்தேன் ; தேவ தேவனாகிய சிவன் தடையின்றித் தானே வந்து என் உள்ளத்து எழுந்தருளியிருந்தான் ; ஆதலால், யாராலும் உவர்க்கப்படாத உயர்ந்த கல்வியைக் கற்றேன் என்றவாறு.

உடல் குறிப்பறிந்தேன் - இறைவன் யான் செய்த வினைகளுக்கீடாக எனக்கு உடலைத் தந்ததன் குறிப்பை அறிந்தேன். குறிப்பாவது எடுத்த இந்த உடல் இருக்கிறபோதே, ஆணவத்தின் நீங்கி அருட்டுணை கொண்டு சிவானந்தப்பேறு எய்துக என்னுங்குறிப்பு.

மிகு தேவர்பிரானை உயிரது கூடிச்செறிப்பு அறிந்தேன் – தேவர்களுக்கெல்லாம் தலைவனாகிய மகாதேவனை, உயிர்களோடு ஒன்றாய்க்கலந்து செறிந் திருப்பவனாக அறிந்தேன். அதாவது உயிர்க் குயிராயிருந்து காட்டியும் கண்டும் களித்தும் களிப்பித்தும் வரும் உபகாரியாக உணர்ந்தேன் என்றவாறு. மறிப்பு – தடை.

கறிப்பு அறியாது மிகு கல்வி - யார்க்கும் எஞ் ஞான்றும் வெறுப்பு அளிக்காத விருப்பம் மிக்க கல்வி.

கற்றறி வாளர் கருதிய காலத்துக்
கற்றறி வாளர் கருத்திலோர் கண்ணுண்டு
கற்றறி வாளர் கருதி உரைசெய்யும்
கற்றறி காட்டக் கயலுள வாக்குமே. 291

இம் – எனின், கற்றவர்க்கு அகத்தில் ஓர் கண் ணுண்டு என்று அறிவித்தல் நுதலிற்று.

இ – ள்: கற்றறிந்தவர்கள் இருந்து எண்ணிய காலத்து அவர்கள்கருத்தில் ஓர் கண்ணுண்டு. அவர் கள் ஆராயந்து உரைக்கும் இக்கல்வியறிவாகிய பாச

ஞானத்தின் வேருய், சிவபரம்பொருளைக் காட்டுகிற கண்ணென்று உளதாதலை விளக்கும் என்றவாறு.

இரண்டாமடிக் கண்ணும், மூன்றுமடிக் கண்ணும் உள்ள கற்றறிவாளர் என்ற தொடர்கள் சுட்டுப் பெயரளவாய் நின்றன. கண் என்றது அகக்கண்ணை, இதனை 'அகத்துக்கண் கொண்டு பார்ப்பதே ஆனந்தம்' என்னும் மந்திரத்தானும் உணர்க.

கற்றறிவு - கல்வி கற்றதால் விளையும் அறிவு; பாச ஞானம். கற்றறிவு எனற்பாலது 'கற்றறி' என விகுதி குறைந்து நின்றது.

காட்டு அக்கு அயல் உளவாக்குமே எனப் பிரித்து, காட்டுகின்ற கண் இவற்றின் வேருக உள்ளன என்பதைத் விளக்கும் எனப்பொருள் கொள்க. அக்கு - கண். கண் காணுமே யன்றிக் காட்டாது. அங்ஙனமாகவும் காட்டு அக்கு என்றது காணும் கண்ணுக்குக் காட்டும் உளம் போன்ற பதி ஞானத்தை. உள ஆக்கும் என்றது, அறிவைக் காட்டும் அறிவாய் சிவஞானம் விளங்குதலைக் தெரிவிக்கும் எனச் சிவஞானக் கல்வி பயிறலின் பயன் விளக்கியவாறு.

நிற்கின்ற போதே நிலையுடை யான்கழல்
கற்கின்ற செய்மின் கழிந்தறும் பாவங்கள்
செற்றன்றல் இன்றித் தொழுமின் தொழுதபின்
மற்றொன் றிலாத மணிவிளக் காமே. 292

இ-ள் - எனின், நிலையானபோதே நிலைத்தகல்வியை நியமமாகப் பயிலுக என்றல் நுதலிற்று.

இ – ள் : உயிர் உடலில் நிற்கிற காலத்திலேயே அழியாத் தன்மை வாய்ந்த அரன் கழலைப்பற்றி அறிவிக்கிற அருள்நூல்களைப் பயிலுங்கள் ; பாவங்கள் நீங்கும் ; சொற்சோர்வு இல்லாமல் இறைவனைத் தொழுங்கள்; தொழுதபின் வேறொரு சார்பும் வேண்டாக இரத்தின தீபமாக இறைவன் விளங்குவான் என்றவாறு.

நிற்கின்றபோது - பிராரத்த நுகர்ச்சிக்காக எடுத்த உடலில் இவ்வுயிர் நிற்கின்றபோது; கருவி கரணங்கள் செயற்பாட்டுக்கு உரியனவாக இருக்கின்றபோது எனலும் ஆம்.

நிலையுடையான் கழல் என்பது அநாதி நித்தியமாகிய இறைவன் திருவடியைப் பற்றிய திருவடி ஞானத்தை உணர்த்திற்று.

சிவஞானப்பயிற்சி உடையவர்களுக்கு ஆகாமிய சஞ்சித வினைகள் இன்மையின் கழிந்தறும் பாவங்கள் என்றார்.

சொற்குன்றல் இன்றி - சிதைவும், ஒன்று விட்டு ஒன்று கூறுதலும் முதலான வழுக்கள் இல்லாமல் ‘சொல்லால் வருங்குற்றம் சிந்தனையால் வரும் தோடம்’ என்னும் பட்டினத்தடிகள் வாக்கும் ஈண்டு அறியற்பாலது. சொற்குற்றத்தால் நாரதர் வேள்வியினின்று ஆடு எழுந்ததும், கும்பகன்னன் பெருந்துயில் பெற்றதும் காண்க. இறைவனைத் தோத்திரிக்கும் போது சொற்சோர்வின்றித் துதித்தலே பெரும் பயன் தருவதாம் என்க.

மற்றொன்றிலாத மணி விளக்காம்-எண்ணெய் திரி அகல் முதலிய சார்பு வேண்டாத, இயற்கையே ஒளியுடையதான இரத்தின தீபமாம். இதற்கு வேறு ஒப்பில்லாத விளக்காம் என உரைத்தலும் ஆம்.

கல்வி யுடையார் கழிந்தோடிப் போகின்றார்
பல்லி யுடையார் பாம்பரிந் துஞ்சுகின்றார்
எல்லியும் காலையும் ஏத்தும் இறைவனை
வல்லியுள் வாதித்த காயமு மாமே. 293

இம் – னின், பாசஞானம் பசுஞானம் உடையார் இறைவனை எய்தார் என்று உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : கருவிநூற்கல்வி உடையார் அதன் மேற்செல்ல திருவருட்டுணை இல்லாமையால் மேற் செல்லமாட்டாது ஒதுங்குகின்றார். உடம்பில் பற்றுடையார் யோகநெறிநின்று குண்டலியை எழுப்பி வருத்தி நுகர்கின்றார்கள். இத்தகைய துன்பங்கள் உங்களுக்கு வேண்டாம்; இரவும் பகலும் இறைவனைத் துதியுங்கள்; திருவருட்சத்தியால் மாற்றப் பட்ட அழியா உடல் ஆம் என்றவாறு.

கழிந்தோடிப் போகின்றார் என்றது கருவி நூல்களை மிகக்கற்று. பாசஞானமே பெரிதென மதித்து, பதிஞான விருப்பிலராய்க் கழிகின்றனர் என்பதாம்.

பல்லி – பல்குதலையுடையதாகிய உடல். பாம்பு குண்டலி. வச்சிரகாயம்பெற வேண்டுவோர்,

அட்டாங்கயோக நிலையிலிருந்து, குண்டலி சத்தியை எழுப்பி, ஆஞ்ஞையினின்று வழியும் அமுதத உண்கின்றார் என்பதாம். அமுதமுண்டலே யானந்தம் என அமையாது, சிவானந்தம் ஒன்றுண்டு என்றுணர்வார்க்கு இதுவும் வாயிலாம். சிவயோகத்திருத்தலே யன்றி, ஞானசாத்திரக்கல்வி சிவானந்தத்தைப் பயத்தலின் பாம்பரிந்துண் கின்றார் என்றார்.

பல நாள் பயின்றும் யோகநிலையிலிருந்து வருந்தற்க; இரவும் பகலும் ஏத்துங்கள்; குளிகையால் செம்பு பொன்னானாற்போலத் திருவருட் சத்தியால் உங்கள் உடல் பொன்ரு உடலாம் என அறிவித்தவாறு.

சண்டேசுரபதவி பெற்ற விசாரசருமர் திருவருட் பொலிவால் தெய்வ உடல் பெற்றமை யறிக

துணைய்து வாய்வரும் தூயநற் சோதி
துணையது வாய்வரும் தூயநற் சொல்லாம்
துணையது வாய்வரும் தூயநற் கந்தம்
துணையது வாய்வரும் தூயநற் கல்வியே. 294

இம் - எனின். கல்வியே துணை என்றல் நுதலிற்று.

இ - ள் : ஞானதாக மெடுத்து மூர்த்தி தலந் தீர்த்தம் முறையாய்த் தொழும் ஆன்மாக்களுக்கு இயற்கையே தூய்மையான, ஒளிவடிவான இறைவன் குருவாகிய துணையாய் எழுந்தருளுவர். அவரிடமிருந்து வரும் மாயாதீதமான நற்சொல்

லாகிய திருவைந்தெழுத்து துணையாம்; அது ஆன்மாக்களை வாசனுமலம் தாக்காதவாறு துணையாய், பாதுகாத்துவரும். அதனால் தூய்மையான சிவமணம் கமழும்; அதனால். சிவஞானக்கல்வியாகிய தூயகல்வி துணையாய் வரும் என்றவாறு.

தூயநற்சோதி - அப்பிராகிருத சோதியாய் உள்ள இறைவன், முன்னரும் 'மேதகு சோதி' என்றமை காண்க. துணையாய் வருதலாவது. ஆன்மாக்களின் பத்துவிதமான பரிபாகநிலைகளுக்கு ஏற்ப உள்நின்றும் முன்னின்றும் ஆசான்மூர்த்தியாயும் துணையாதல்.

தூய நற்சொல் - மாயாகாரியமான நாத அணுக்களால் ஆக்கப்படாமையின் தூய்மையான திருவைந் தெழுத்து, அது துணையாய் வருதலாவது "விதி எண்ணும் அஞ்செழுத்தே" என்றவாறு. வாசனு மலமும் தாக்காதவாறு பாதுகாத்தலாம்.

தூயநற்கந்தம் - சிவகந்தம். "சிவகந்தம் பரந்து நாற" என்பது சிந்திக்க. சிவகந்தம் துணையாய் வருதலாவது மலகந்தம் தாக்காது துணைசெய்தல்.

தூயநற்கல்வி-சிவஞானம். "சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்" என்பதை எண்ணுக. அது துணையாதலாவது சிவனடிப் பேற்றுக்குத் துணை செய்தல்.

இம்மந்திரத்தால் சிவகுரு உபதேசம் முதலியன ஒன்றற்கு ஒன்று காரணமாய் இருத்தல் காண்க.

நூலொன்று பற்றி நுனியேற மாட்டாதார்
பாலொன்று பற்றினல் பண்பின் பயன்கெடும்
கோலொன்று பற்றினல் கூடா பறவைகள்
மாலொன்று பற்றி மயங்குகின் ருர்களே 295

இம் – எனின், உலகவர் பற்றுவ பற்றிப் பயன் எய்தாது மயங்குகின்றனரே என்று இரங்குதல் நுதலிற்று.

இ – ள் : சிவஞானத்தைப் பயப்பிக்கும் நூல் ஒன்றினைப்பற்றி, முடிந்தமுடிபாகிய முத்தியை எய்த மாட்டாதார். உலகில், புறச்சமயங்களுள் ஒன்றைப் பற்றினும், உயிர்ப் பண்பின் பயன் கெட்டொழியும்; ஆதலின் அவர்கள் திருவைந் தெழுத்தாகிய மந்திரக் கோலைப் பற்றுவார் களாயின் புலன்களாகிய பறவைகள் அவர்களைச் சென்று பற்ரு: இஃது அறிந்திருந்தும் திருவருள் துணை இல்லாமையால் மாயையில் அழுந்தி மயங்கு கின்ருர்களே; இவர்களின் நிலை இருந்தபடியென்னே என்றவாறு

இதில் நூலேணியைப்பற்றி நுனியேறுதலும், ஒரு பாலைப்பற்றினல் நடுவுநிலை கெடுதலும், கோல் பிடித்தால் பறவை கூடாமையுமாகிய வேற்றுப் பொருள்கள் வெளிப்படையாகக்கொள்ளக்கிடத்தல் காண்க.

ஆய்ந்துகொள் வார்க்கரன் அங்கே வெளிப்படும்
தோய்ந்த நெருப்பது தூய்மணி சிந்திடும்
ஏய்ந்த இளமதி எட்டவல் லார்கட்கு
வாய்ந்த மனமல்கு நூலேணி யாமே. 296

இ-ம் — எனின், கல்வி பயன்படும்வகை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : தூய்தான சூரிய காந்தக்கல் மிக்க நெருப்பைச் சிந்தும்; அதுபோலத் திருவருட் பொலிவோடு ஆராய்கின்றவர்கட்குச் சிவம் வெளிப்படும். பொருந்திய மதிமண்டலம் வரையில் எட்டித் தியானிக்க வல்லார்க்கு, பொருந்திய மனம் ஏறுதற்குரிய நூலேணியாக இக்கல்வி பயன்படும் என்றவாறு.

ஆய்ந்துகொள்வார்க்கு என்பதில் எதனால் என்னுங்கருவி இன்றாயினும் அதிகாரம்பற்றி வருவித்து உரைக்கப்பட்டது.

தூய்மணி தோய்ந்த நெருப்பது சிந்திடும்: அதுபோல அரன் வெளிப்படும் எனக் கூட்டுக.

இளமதி என்றது சுழுமுனையில் உள்ள மதிமண்டிலத்தை, எட்ட வல்லார்கட்கு எனவே மதிமண்டிலம் வரையில் எட்டுதல் எளிதன்று என்பது குறிப்பித்தவாறு. மனமல்கு நூலேணி — மனமல்குதற்குரிய நூலேணி; அதாவது, அனுகத்தம் வரையில் மனம் உயர்தற்குரிய நூலேணி, திருவருட் கல்வி என எழுவாய் வருவித்து உரைக்க.

வழித்துணை யாய்மருந் தாயிருந் தார்முன்
கழித்துணை யாங்கற் றிலாதவர் சிந்தை
ஒழித்துணை யாமும்ப ராமுல் கேழும்
வழித்துணை யாம்பெருந் தன்மைவல் லானே. 297

இம் — எனின், திருவருட் கல்வி பயின்றார் உயர்வும் அவர் எய்தும் பயனும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மறுமைக்கட் செல்லும் வழிக்குத்துணையாயும், பிறவிப்பிணிக்கு மருந்தாயும் இருந்த திருவருட்கல்வியுடையார் முன்பு அஃது இல்லாதார், ஒதுக்குந்தன்மையராவர். பெருந்தன்மை வல்லானாகிய பெருமான் அக்கல்வியுடையார்க்கு மனமடங்குதற்குரிய துணையாயுந் தேவதேவனாயும் ஏழு உலகங்களுக்கு அப்பாலும் செல்லும் வழிக்குத் துணையாயும் ஆவன் என்றவாறு.

கழித்துணை - நீக்கிவிடத்தக்க அளவு, சூரியன் முன் இருள்போல் கற்றார்முன் கற்றிலாதவர் பாடிலர் என்றவாறு.

சிந்தை ஒழித்துணை - பொறிகள் வாயிலாகப் புலன்களிற்சென்று பற்றி. ஆகாமியப் பொதியைப் பெருக்க வைக்கும் சிந்தை அத்தன்மையின் நீங்கி ஒழியுந்துணை. பெருந்தன்மை வல்லான் - பெரியன் எல்லாவற்றிற்கும் பெரியன். வழித்துணையாம் வகையில் சிவஞானியரும் சிவமும் ஒருதன்மையர் என்று உணர்த்தப்பெற்றது.

பற்றது பற்றின் பரமனைப் பற்றுமின்
முற்றது எல்லா முதல்வன் அருள்பெறில்
இற்ற விரகின் இளரொளி வானவர்
கற்றவர் பேரின்பம் உற்றுநின் றாரே. 298

இம் - எனின், இறைவனைப்பற்றில் எல்லாம் பெறலாம் என்று அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : பற்றுககோடாக ஒருபொருளைப் பற்ற வேண்டின் பரமனையே பற்றுங்கள், முழுமுதற் கடவுளாகிய அவனருளைப்பெற்றால் எல்லாம் இனிது முற்றும், உபாயத்தில் வல்ல, மேன்மேலும் கிளர்ந் தெழுகின்ற ஒளியினையுடைய வானவராயினும் சிவஞானச் செய்தியுடையரே பேரின்பம் உற்றாராவர் என்றவாறு.

முதலடி "பற்றுக பற்றற்றான் பற்றினை" என்றதையும், இரண்டாமடி "முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ" என்றதையும் நினைவூட்டுகின்றது. பின்னிரண்டடிகள், பதமுத்தி அடைந்த தேவர்களேயாயினும், சிவஞானத்தைப் பயப்பிக்கும் நூலைப் பயின்று தெளிந்து அதன் கண் நின்றாலன்றிப் பேரின்பம் அவர்கட்குச் சித்தியாது என வலியுறுத்துகின்றன.

கிற்ற விரகில் - விரகில் கிற்ற எனமாறுக; உபாயங்களில் வல்ல என்பது பொருளாம்.

கடலுடை யான்மலை யானைந்து பூதத்(து)
உடலுடை யான்பல ஊழிதொ றூழி
அடல்விடை ஏறும் அமரர்கள் நாதன்
இடமுடை யார்நெஞ்சத் தில்லிருந் தானே. 299

இம் - எனின், திருவடிஞான முடையார் சிந்தையில் சிவன் உறைவன் என்றல் நுதலிற்று.

இ - ள் : கடல், மலை முதலிய ஐந்நிலத்தையும் உடையவன்; ஐம்பூதங்களையும் தனக்குத் திருமேனியாக உடையவன்; பல்லூழிக்காலமாக வலிமை

மிக்க இடபத்தை ஊர்தியாகச் செலுத்தும் தேவ தேவன் ; இத்தகைய இறைவன், திருவடிஞானம் பெற்றவர்கள் சிந்தையில் என்றும் நீங்காது எழுந்தருளியிருந்தான் என்றவாறு.

கடலுடையான், மலையான் என ஈறும் முதலும் கூறவே இடைநின்ற நிலமெல்லாம் கொள்ளப்படும்

ஐந்து பூதத்து உடலுடையான் - உலகமே உருவான நிலையில் (விராட்சொரூபத்தில்) ஐம்பூதங்களையும் திருமேனியில் ஏகதேசமாகக் கொண்டவன் என்பது பொருளன்றி, எம்மைப் போல பௌதிகத் திருமேனி படைத்தவன் அல்லன் என்பது தெளிக.

## ௩௧. கேள்விகேட்டமைதல்

அஃதாவது, கற்றற்கண்ணெழுந்த ஐயமும் தீர்ந்து தெளிதற்பொருட்டு ஆசான்வாயிலாகவும் ஏனையோர் வாயிலாகவும் கேட்கத் தக்கனவற்றைக் கேட்டு மனமடங்கி இருத்தலாம். கற்றல் சிறப்பது கேள்வியான் ஆகலின் அதன்பின் வைத்தார்.

அறங்கேட்டும் அந்தணர் வாய்மொழி கேட்டும்
மறங்கேட்டும் வானவர் மந்திரம் கேட்டும்
புறங்கெட்டும் பொன்னுரை மேனியெம் ஈசன்
திறங்கேட்டும் பெற்ற சிவகதி தானே. 300

இம் – எனின், யாரிடம் எதைக் கேட்டாலும் அவன் அருளாலேயே பெறத்தக்கது சிவகதி என்று அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : நீதிகளைக் கேட்டும், அந்தணர்களது அறிவுரைகளைக் கேட்டும், பாவங்கள் இவையெனப் பகரும் விதிநூல்களைக் கேட்டும், தேவர்கள் வாய் மொழியாகிய மந்திரங்களைக் கேட்டும், பிறநூல் களைக் கேட்டும் பொன்னென்று உரைக்கப்படுகின்ற திருமேனியையுடைய எமது ஈசன் இயல்புகளைக் கேட்டும் பெற்றன சிவகதியே என்றவாறு.

அறமாவது, உலகியல் ஒழுக்கங்களை உள்ளவாறு உணர்த்தும் நீதி நூல்கள். அதனைக் கேட்டலாவது, விளக்கிக்கூறும் ஆற்றல் உடையார்வாய்க் கேட்டல்.

அந்தணர் இலக்கணம் முன்னர்க் கூறப் பட்டது. அவர் வாய்மொழியாவது, தன்னலம் பற்றுமல் எல்லோரும் இன்புற்றிருக்க நினைத்து அருளும் உபாய மொழிகள். மறமாவது, மக்கள் விலகி உய்வதற்காக இவை இவை பாவங்கள் எனக் கூறும் நூல்கள்.

வானவர் மந்திரம் - தெய்வமனமாகத் திகழ வைக்கும் தியானத்துக்குரிய தேவமந்திரம். புறம் - இவை பற்றிக் கூறும் புறநூல்கள், புறநூல் களாயினும் செம் பொருட்டுணிவைச் சிதைக்காத வற்றைப் பயிறலாம் என்பது மரபு. ஈசன் திறம் - சிவத்தின் பொதுவும் சிறப்புமாகிய இயல்புகளைக் கூறும் ஞானசாத்திரங்கள்.

அறங்கேட்டல் நூலறிவும், வாய்மொழி கேட்டல் உபதேச அறிவும், மறங்கேட்டல் எதிர் மறையறிவும், மந்திரங்கேட்டல் சாதன அறிவும், புறங்கேட்டல் துணையறிவும் ஆதலின் இவற்றுல்

பெற்ற அறிவெல்லாம் இறைவனது தடத்த சொரூப இலக்கணங்களை அறிந்து அனுபவித்தலால் விளைவதாகிய சிவகதியே யென்று தெளிக என்பதாம்.

தேவர் பிரான்றனைத் திவ்விய மூர்த்தியை
யாவர் ஒருவர் அறிவார் அறிந்தபின்
ஓதுமின் கேண்மின் உணர்மின் உணர்ந்தபின்
ஓதி உணர்ந்தவர் ஓங்கிநின்றாரே. 301

இம் - எனின், சிவனையறிந்தபின் கற்க கேட்க தெளிக நிட்டைகூடுக என்று அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : தேவதேவனை, ஒளிவிடுகின்ற திருமேனியை உடையவனை உங்களில் யாரொருவர் அறிந்தவரோ அவர் அறிந்தபின் சிவநூல்களை ஓதுங்கள்; கேளுங்கள்; உணருங்கள்: மேலும் இடைவிடாது ஓதி உணர்ந்து கொண்டிருங்கள். அங்ஙனம் உணர்ந்தவர்கள் சதாசிவ நிட்டையில் உயர்ந்தோராவர் என்றவாறு.

சிவபெருமானைத் தியானிப்பவர்களே சிவநூல்களைக் கற்றற்கும் கேட்டற்கும் தெளிதற்கும் நிட்டை கூடுதற்கும் உரியர் என்பது கருத்து. பிரான் - தலைவன். திவ்வியம் - ஒளி. திவ்விய மூர்த்தி – ஒளியான திருமேனி உடையான்.

மயன்பணி கேட்பது மாநந்தி கேட்பின்
அயன்பணி கேட்பது அரன்பணி யாலே
சிவன்பணி கேட்பவர் தேவரும் ஆவர்
பயன்பணி கேட்பது பற்றது வாமே. 302

இம் - எனின், கேட்கத்தகுவன இவை யென்பதையும் அவற்றின் பயனையும் அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: சிவபரம்பொருள் நமக்கு உதவிய சிவஞானமாகிய சிவாகமங்களைக் கேட்டால் திருமால் நமது ஏவலைக் கேட்டு நடப்பன்; அம்மட்டோ! அயனும் பணிகேட்பது ஆம். இறைவன் ஆணைவழி நின்று அதனைக்கேட்டு நடப்பவர்கள் தேவர்களாவர். இறைவன் பணியைக் கேட்டு நடத்தலாய இதன் பயன் திருவடிக்கண் என்றும் நீங்காத பற்றும் என்றவாறு.

வள்ளுவர் படித்தான் என்புழிப்போல மாநந்தி என்பது, இறைவன் அருளிச் செய்த ஆகமங்களை உணர்த்திற்று. சிவாகமப்பயிற்சி ஆயனையும் அயனையும் பணிகொள்ளும் என்பதாம். சிவன் பணிகேட்கச் சிவனருள் இன்றியமையாதது என்பார் 'அரன்பணியாலே சிவன்பணி கேட்பவர்' என்றார். "அவனருளாலே அவன்றாள் வணங்கி" என்பதையும் ஈண்டு எண்ணுக.

தேவரும் ஆவர் என்றது சூரபன்மனுதியர்க்குத் தோற்றுச் சுகதுக்கங்களை எய்தும் பொய்த்தேவராவர் என்பது அன்று, மந்திரேசுரரும், மயேச்சுரர் அஷ்ட வித்தியேச்சுரரும்போல ஆவர் என்பதாம். இங்ஙனம் பணிகேட்டுத் தேவராவதின் பயன் பற்றற்றநிலையாகிய முத்தியில் பற்றுவைத்தலே என்பது கருத்து.

பெருமான் இவனென்று பேசி யிருக்கும்
திருமா னிடர்பின்னைத் தேவரும் ஆவர்
வருமா தவர்க்கு மகிழ்ந்தருள் செய்யும்
அருமா தவத்தெங்கள் ஆதிப் பிரானே. 303

இ - ள் : இவனே எமது தலைவனென்று உரையாடும் ஞானத்திருவினையுடை மானிடர்கள் பின்பு தேவராவர் ; எங்கள் முதல்வன், பிறர் யாரும் செய்தற்கரிய பெருந்தவத்தில் ஈடுபட்டு வருகின்ற தவமுடையார்க்கு இரங்கி அருள் வழங்குவன் என்றவாறு.

இம் - எனின், சிவஞானத்தையே செவிமடுத்திருப்பார் தேவரார் என்றல் நுதலிற்று.

தேவன் என்பதற்கு முன்னுரைத்தாங்கு உரைக்க. அருமாதவம் - சரியை கிரியை யோகம் ஞானம் என்பன. ஆதிப்பிரான் - அநாதி நித்திய சம்பந்தமுடைய முதல்வன்.

ஈசன் அருளும் இறப்பும் பிறப்பையும்
பேசி யிருந்து பிதற்றி மகிழ்வெய்தின்
நேசமும் ஆகும் நிகழொளி யாய்நின்று
வாசமலர்க்கந்த மன்னிநின் றானே. 304

இம் - எனின், மலருள் மணம்போல, கேள்வி ஞானமுடைய நம்மிடத்து இறைவன் மன்னிநிற்பன் என்றல் நுதலிற்று.

இ - ள் ; இறப்பையும் பிறப்பையும் நமக்கு ஈசன் அருளுகிறான். அவனைப்பற்றிப் பேசியும்

பிதற்றியும் மகிழ்ந்தால் அவன் நம்மீது நேசமாவன், பின், நம்மனத்தகத்து ஒளியாய் மன்னி நின்று, மலரில் மணம்போல, ஆன்மாவினிடை ஆனந்தமாக நிலைபெறுவான் என்றவாறு.

நாம்செய்த இருவினைகளுக்கு ஈடாக இறைவன் தனு கரண புவன போகங்களைக் கொடுத்தலாகிய பிறப்பையும், வினைப்போகம் முடிந்தவழி ஒடுங்குதலாகிய சிறப்பையும் உதவி ஆட்கொண்டருளுதலின் ' இறப்பும் பிறப்பும் ஈசன் அருளும் ' என்றார்.

பேசுதல் - ஆன்மபோதத்தோடு அளந்து பேசுதல். பிதற்றுதல் - தற்போதம் கழன்ற நிலையில் தொடர்பு இன்றிப் பிதற்றுதல். மகிழ்வெய்தின் - பிதறிப் பித்தேறிக் களித்தால். இறைவன் மலருள் மணம்போல இருப்பதைச் ' சீவனுக்குள்ளே சிவமணம் பூத்தது ' என்றது கொண்டு தெளிக.

விழுப்பமும் கேள்வியும் மெய்நின்ற ஞானத்
தொழுக்கமும் சிந்தை உணர்கின்ற போது
வழுக்கி விழாவிடில் வானவர் கோனும்
இழுக்கின்றி எண்ணிலி காலம தாமே. 305

இ - ளின், சிவஞானமும் சைவ ஒழுக்கமும் உடையார் தவறு இலராயின் நீடு வாழலாம் என்று அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : பெருமையும் சிவஞானக் கேள்வியும் மெய்ஞ்ஞான ஒழுக்கமுமாகிய இவற்றைச் சிந்தையால் இடையறாது உணர்கின்றகாலத்து அதனின்று

தவறி விழாவிடின், இந்திரனேயாயினும் குற்ற மின்றி அளவற்றகாலம் ஆனந்தத்திருக்கலாம் என்றவாறு.

விழுப்பம் - பெருமை; குலத்தானும் சந்தானச் சிறப்பானும் உளதாகிய பெருமை, கேள்வி – உப தேசம். மெய் நின்ற ஞானத்து ஒழுக்கம் - தத்துவ சாத்திர அனுபவம். இவற்றை உள்ளபடி உணர்கிற காலத்து, இந்திரனும் வழுக்கிவிழாவிட்டால் எல்லை யற்ற இன்பத்தில் இருக்கலாம் என்பது கருத்து.

இந்திரன், போகமே பெரிதெனக் கொண்ட வனுதலின் இந்திரிய வயமயங்கித் தவறுதல் அவற்கு இயல்பு; அவனும் தவறுனின் சிவஞானியர்க்குக் கிடைக்கும் செல்வம் அவனுக்கும் கிடைக்கும் என்பதாம்

இவ்வாறன்றி, வழுக்கி விழாவிடில் வானவர் கோனும் இழுக்கின்றி எண்ணிலி காலமதாம் எனப் பிரித்துப் பொருள்கொண்டு இடர்ப்படுவார் சிலர்.

> சிறியார் மணற்சோற்றில் தேக்கிடு மாபோல்
> செறிவால் அனுபோகம் சித்திக்கும் என்னில்
> குறியார்த தொன்றைக் குறியாதார் தம்மை
> அறியா திருந்தார் அவரவர் அன்றே. 306

இ-ம் - எனின், ஐம்புல நுகர்ச்சி உடையார்க்கு சிவானுபவம் சித்தியாது என்றல் நுதலிற்று.

இ - ள் : ஐம்புலத் தொடர்பாலேயே சிவானுப வம் சித்திக்கும் என்று கூறுவையாயின், அது மணற்

சோற்றினால் சிறுவர்கள் மனநிறைவு எய்துவது போலும் சுட்டுணர்வா லறியப்படாத ஒன்றை அங்ஙனம் அறியப்படாததாக அறியாதவர் தம்மையும் அறியா திருந்தவராகவே ஆவர் என்றவாறு.

சிறுகுழந்தைகள் சிறுவீடு கட்டி மணலால் சிறு சோறாக்கி மகிழ்வது போல, ஐம்பொறிகளாலேயே சிவானுபவத்தை நுகரலாம் என்பவர் செயல் இருக்கின்றது என்பதாம்.

குறியாதொன்று - பாச பசுஞானங்களால் சுட்டியறியப்படாத ஒன்று ; அதாவது சிவயோகம் குறியாதார் - அங்ஙனம் சுட்டியறியப்படாததாக எண்ணாதார், தலைவனை உணர்ந்தவர் தம்மை அறிந்தே தலைவனை உணர்தல் முறையாகலின் தலைவனை யுணராதார் தம்மையும் உணராதவரே என்றார். அன்று ஏ அசைகள்

உறுதுணை யாவ துயிரும் உடம்பும்
உறுதுணை யாவ துலகுறு கேள்வி
செறிதுணை யாவது சிவனடி சிந்தை
பெறுதுணை கேட்கில் பிறப்பில்லை தானே. 307

இம் - எனின், சிந்தைக்குத் துணை சிவனடியே என்று உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் ; ஒன்றற்கு ஒன்று உற்றதுணையாவது உயிரும் உடம்புமாகிய இரண்டுமாம். 'உயிருக்குற்ற துணையாவது, உலகு எவ்வாறு உற்றது என்னும்

ஆய்வாகிய சாத்திரக்கேள்வியாம். மனத்தின்கண் சென்று செறியக்கூடிய துணையாவது, சிவபெருமானுடைய திருவடிகளே. அத்திருவடித் துணையைப் பெறும் அளவு கேட்கின் பிறப்பில்லை என்றவாறு.

தலைவனும் தலைவியும் தலைப்பெய்தார் என்புழிப் போல்வது உயிரும் உடம்பும் உறுதுணையாவது என்பது. உடம்புறு துணையாவது உயிர்; உயிருறு துணையாவது உடம்பு எனக்கொள்க

உலகுறு கேள்வி - உலகம் எதற்காக எவ்வாறு வந்தது என்பதைப்பற்றி ஆயுங்கேள்வியாகிய தத்துவஞானம். சிந்தை செறி துணையாவது சிவனடி என மாற்றுக. சிந்தை சென்று பற்றும் துணையாவது சிவனடி என்றும், சிந்தைக்கண் சென்று செறிகின்ற துணையாவது சிவனடியே என்றும் இருவகையானும் பொருள் கொள்ளலாமாயினும், "மனத்திடை மன்னிய மன்னே" "நெஞ்சுள் எழு பரஞ்சோதி" என்பன போன்ற பல் சுருதிகளானும், சிந்தை சடமாய், சென்றுபற்றும் இயல்பினது அன்மையானும் பிற்கூறியதே பெருவலி உடைத்தென்க. செறிதலாவது உரலாணி இட்டாற்போல இடமின்றி நிறைதல்.

பெறுதுணை - சிவனடியைத் துணையாகப் பெறும் கால அளவு முத்திப்பேறு வரையில் என்பதாம். முத்தி பெறின், அன்னியமில்லாமையின் இங்ஙனம் உரைக்கப்பட்டது. இதற்கு வேறு கூறுவாரும் உளர். தான்; ஏ அசைகள்.

புகழநின் றார்க்கும் புராணன்எம் ஈசன்
இகழநின் றார்க்கும் இடும்பைக் கிடமா
மகிழநின் றாதியை ஓதி உணராக்
கழியநின் றார்க்கொரு கற்பசு வாமே. 308

இம் – எனின், உணராதார்க்கு இறைவன் இத் தகையனும் என்றல் நுதலிற்று.

இ – ள் : எமது சிவபெருமான் புகழ நிற்பா ராகிய அரி பிரமனுதியர்கட்கும் பழமையானவன் ; தன்னை இகழ்ந்து கூறுகின்றவர்களுக்கும் துன்பத் திற்கும் இடமாக விளங்குபவன் ; ஆதலால், எல்லாரும் எஞ்ஞான்றும் மகிழநின்ற முழுமுதற் கடவுளை உணராது ஒதுங்கி நிற்பார்க்கு அப்பரம் பொருள் ஒரு கல்பசுவாம் என்றவாறு.

'புகழ நின்றார்க்கும் புராணன்' என்றது அவனது அநாதி முதன்மையையும், 'இகழ நின்றார்க்கும் இடும்பைக்கு இடமாம்' என்பது மறக்கருணை காட்டி ஆட்கொள்ளும் திறத்தையும், 'கற்பசுவாம்' என்றது பரிபாகத்திற்கு ஏற்பப் பயனுதவும் வள்ளன்மையையும் விளக்கி நின்றன.

புகழ நின்றார்க்கும் என்பதற்குச் சிவமாகிய தம்மைப் புகழ்ந்துசொல்ல நின்ற அடியார்கட்கும் எனவும் ஆம். இறைவனை ஓதியுணர்தல் கடமையாக இருக்கவும் செய்யாது ஒதுங்கி நின்றார்கட்கு, பாலைச் சுரந்தளிக்காத கற்பசுபோல்வதாம் சிவம் என்றவாறு.

கற்பசு.– கல்லாலாகிய பசு; கறவையில்லாத பசுவுமாம். கல்வறல், கல்மடி என்றாற்போல.

வைத்துணர்ந் தான்மனத் தோடும் வாய்பேசி
ஒத்துணர்ந் தானுரு ஒன்றொடொன் றெவ்வா(து)
அச்சுழன் றாணி கலங்கினும் ஆதியை
நச்சுணர்ந் தார்க்கே நணுகலு மாமே. 309

இ-ம் - எனின். இறைவன் இயல்பை உள்ளவாறு அறிந்து நச்சவல்லார்க்கு அவனை அணுகலாகும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மனத்தோடும் தியானப் பொருளாகப் பொருந்தவைத்து உணரப்பட்டவனும், வாயினால் புகழ்ந்துபேசி உணரப்பட்டவனும், அவன் ஆன்மாக்கள் பொருட்டு எடுத்த உருவங்கள் ஒன்றோடு ஒன்று ஒவ்வாதனவாக இருப்பினும். எல்லா உருவினும் இருக்கும் அருள்விளக்கம் ஒன்றே யென்று உணரப்பட்டவனும் ஆகிய முதற்கடவுளை, தமக்கு எயிர் மயங்கிப் பொறிகள் கலங்கிய காலத்தும் விரும்பித் தியானிப்பவர்க்கு அவனை அணுகுதல் ஆம் என்றவாறு.

உணர்ந்தான் என்பன இரண்டையும் செயப்பாட்டு வினையாகப் பொருள்கொள்க. மனத்தொடும் வைத்து உணர்தல் - தியானப்பொருளாக வைத்துப் போற்றப்படுதல், பேசி உணர்தல் - அவன் ஆன்மாக்களுக்குச் செய்த பரமோபகாரங்களைச் பகரும் புராண வரலாறுகளைப் புகழ்ந்துபேசி அதனால் அவனருள் உண்மை ' அறிதல்.

உரு ஒன்றோடு ஒன்று ஒவ்வாது - அவன் ஆன்மாக்கள் மீது வைத்த பெருங்கருணையினால் விரும்பி

மேற்கொண்ட வடிவங்கள் பெண்ணுய். ஆணுய், குமரனுய், விருத்தனுய், வீரனுய், காந்தனுய்ப் பல்வேறு வகைப்படுதல். அதனை ஒத்து உணர்தலாவது எவ்வேடம் தாங்கினும் வேடந்தாங்குபவன் ஒருவனே யாதல்போல, பல உருவம் தாங்கினும் பரம்பொருள் ஒன்றேயென்று ஒத்து உணர்தல்.

அச்சு - உயிர். உழன்று - வருந்தி. உயிர் வருந்துதலாவது இருவினை வயப்பட்டு உழலுதல். ஆணி போல அங்கங்கே அறையப்பெற்றுள்ள பொறிகள் ஆணி எனப்பெற்றன. அவை கலங்குதலாவது தத்தம் புலன்கள் மேற் செல்லமாட்டாது கலங்குதல். அச்சு என்பதற்கு உடல் என்பாரும் உளர். உடலைச் சகடமாக எண்ணி, அதற்கு அச்சும் கடையாணியுமாக உயிரையும் புலன்களையும் உருவகிக்கின்றுராதலின் உண்மைப் பொருள் ஓர்க. நச்சு உணர்ந்தார் - விரும்பி யுணர்ந்தவர்கள்.

## 22. கல்லாமை

அஃதாவது கல்வி பயிலாமை. கல்வி கேள்வி இரண்டும் கற்றலாதலின் அதனது மேன்மைகூறி, கல்லாமையின் இழிவுகூறி, எதிர்மறை முகத்தானும் கற்றலின் இன்றியமையாமையைப் பெற வைத்தலின் கேள்வியின் பின் இது வைக்கப் பெற்றது.

**கல்லா தவரும் கருத்தறி காட்சியை**
**வல்லா ரெனிலருட் கண்ணுன் மதித்துளோர்**
**கல்லாதார் உண்மைபற் ருநிற்பர் கற்ருேரும்**
**கல்லாதார் இன்பம் காணுகி லாரே.** 310

இம் - எனின், கல்லார் காணும் உண்மையைக் கற்றாரும் காணார் என்றல் நுதலிற்று.

இ - ள் : ஒருநூலையும் கல்லாதவரும் தம் கருத்தால் அறிய விரும்புவாராயின் அதனால் அறியத் தக்க அறிவாயிருப்பாய். கற்று அறிய வல்லாராயின் அவர்கள் உனது திருவருட்கண்ணால் மதிக்கப் பெற்றவர்களே. கல்லாதாரும் திருவருள் பதிவு இருக்குமானால் உண்மையை உறுதியாகக் கடைப் பிடிப்பர், அங்ஙனம் கல்லாதார் காணும் இன்பத்தைக் கற்றாரும் காணமாட்டாராய்த் தவிப்பர் என்றவாறு.

இதனால் ஏட்டுக் கல்வியும் இறையருளின்றிக் காரியப்படாது ; இன்பம் பயவாது என்பது அறிவிக்கப்பெற்றது. (நீ) காட்சியை ; வல்லார் எனின் (அவர் நின்) அருட்கண்ணால் மதித்துளோரே ; கல்லாதாரும் உண்மை பற்று நிற்பர் ; கல்லாதார் இன்பம் கற்றாரும் காணுகிலாரே எனக் கூட்டி வேண்டிய வழிச் சொற்கள் வருவித்துப் பொருள்கொள்க.

கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர் வரலாறு திருவுளத்து விளங்க கல்லாதவரும் கருத்தாலறியப் படும் காட்சியை உடையவர் இறைவன் என்றும், கல்லாதார் காணும் இன்பத்தைக் கற்றாரும் காண முடியாது என்றும் அருளிச்செய்தார்.

வல்லார்கள் என்றும் வழியொன்றி வாழ்கின்றார்
அல்லா தவர்கள் அறிவு பலவென்பார்
எல்லா இடத்தும் உளன்எங்கள் தம்இறை
கல்லா தவர்கள் கலப்பறி யாரே. 311

இ-ம் - எனின், கல்லாதவர்கள் இறைவன் உயிருக்கு உயிராய்க் கலந்திருக்கும் தன்மையை உணரார் என்று அறிவித்தல் நுதலிற்று.

இ-ள்; திருவடி ஞானமாகிய கல்வியைக் கற்று வல்லவர்கள், என்றும் ஒருநெறிப்பட்ட மனத்தோடு வாழ்கின்றார்கள். அங்ஙனம் கல்லாதவர்கள் பல அறிவு படைத்து மயங்குவர். இறைவன் எல்லா இடங்களிலும் உளன். இருந்தும் கல்லாதவர்கள் இறைவன் பிரிப்பின்றிக் கலந்திருக்குந் தன்மையைக் காணமாட்டாராய்க் கலங்குவர் என்றவாறு.

வழியொன்றி வாழ்தலாவது இவர் தேவர் அவர் தேவர் என்று இரண்டாட்டாது 'சிவனே கடவுள்; அவனைத்தவிர வேறு கடவுள் இல்லை' என்ற உறுதியுடன் இருத்தல்.

அறிவுபல என்றலாவது சமயபேதங்களிற் றலைப் பட்டு அறிவு வடிவான கடவுளும் பலர் என்று அலைவுறுதல்.

சிவபரம்பொருளே உயிர்ப்பொருள் உயிரல் பொருள் ஆகிய எல்லாவிடங்களிலும் உள்ளானாகவும். உண்மை உணரமாட்டாமையின் கல்லாதவர் கலங்குவர் என்பது கருத்து.

நில்லா நிலையை நிலையாக நெஞ்சத்து
நில்லாக் குரம்பை நிலையென் றுணர்வீர்காள்
எல்லா உயிர்க்கும் இறைவனே யாயினும்
கல்லாதார் நெஞ்சத்துக் காணஒண் ணாதே. 312

இ-ம் - எனின், கல்லார் நெஞ்சில் நில்லான் ஈசன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : அழிந்துபடும் தன்மையவான உலகு முதலியவற்றை நிலையாக நெஞ்சில் நினைப்பவர் களே! வரையறுக்கப்பட்ட கால எல்லைக்கு அப்பால் ஒரு கணமும் நில்லாத உடலை நிலையானது என்று உணர்கின்றவர்களே! எறும்பு முதல் யானை ஈருன எல்லா உயிர்களுக்கும் சிவன் இறைவனாக இருப்பினும். சிவஞானப் பயிற்சி யில்லாதார் மனத்தில் அவனைக் காணமுடியாது என்றவாறு.

நெஞ்சத்து உணர்வீர்காள்; நிலையென்று உணர்வீர்காள் எனத் தனித்தனிக்கூட்டுக. கற்றூர், கல்லாதார் அனைவர்க்கும் இறைவனாயினும், எல் லோரிடத்தும் கலந்திருத்தலே இறைவனியல்பு ஆயினும், அவனைக் கல்லாதார் நெஞ்சில் காண ஒண்ணுது என்பதாம்.

இல்லேன் வினைத்துயர் ஆக்கு மயலானேன்
கல்லேன் அரநெறி அறியாத் தகைமையின்
வல்லேன் வழங்கும் பொருளே மனத்தினுள்
கல்லேன் கழியநின் றுடவல் லேனே. 313

இ-ம் - எனின், அடியேன், செய்தக்க செய்யாச் சிறுமையன் என்று தன்மேல்வைத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : திருவருள்வழியே நிற்கும் ஆற்றலில் லேன்; மேலும் மேலும் வினையையும், அதன் பயனாகிய துன்பத்தையும் விளைவித்துக்கொள்கிற மருளுடையேன்; அறியாத்தன்மையால் சிவநெறி பயிலேன்; இவ்வுலகத்து வழங்குகின்ற பொருளைச் சேர்ப்பதில் வல்லேன்; சிவஞானக்கல்வியை மனத்தில் பயிலேன்; சிவநெறிக்கு ஒதுங்கிச் சேயனாய் நின்று கண்டபடி ஆடவல்லேன் என்றவாறு.

கில் என்பது ஆற்றல்பொருளைத்தரும் இடைச் சொல்; அதனடியாகப் பிறந்த வினைமுற்று கில்லேன் என்பது. திருவருள்வழியே நிற்றலைக் கில்லேன் எனச் செயப்படுபொருள் வருவித்துரைக் கப்பட்டது.

வினைத்துயர் ஆக்கும் மயல் ஆனேன்-பிராரத்த வினையை நுகரும்போதே, யான் செய்தேன் இவர் செய்தார் என்று அகந்தையால் அழுந்தி அனுபவிக்க மேல்வினை யேறுதலின் வினையும் அதனால் துன்பமும் விளைவதாயிற்று என்பதாம்.

அரனெறி - அரனால் ஆன்மாக்களுய்ய அருளிச் செய்யப்பட்ட சரியையாதி மார்க்கங்கள். அறியாத் தகைமையின் - ஆணவத்தின் செயலால்.

வழங்கும் பொருளே வல்லேன் - இன்ப ஏது வாக இந்த உலகில் வழங்கும்பொருளைச் சேர்ப்பதி

லேயே வல்லேன். பிறர்க்குக் கொடுப்பதற் கென்றே உதவப் பெற்ற பொருளை வழங்காது சேர்ப்பதில் வல்லேன் என்றும், ஐம்புலவாயிலாக அறியும் பொருளை வல்லேன் என்றும் உரைப்பாரும் உளர்; அன்றி, அறியாத்தகைமையின் வல்லேன்; வழங்கும் பொருளே (நின்னை) மனத்தினுட்கல்லேன் எனப் பிரித்துக்கூட்டி, அறியாமையில் வல்லேன்; எனக்குத் தனு கரண புவன போகங்களை வழங்கும் முதற்பொருளே! நின்னை மனத்தினுட் கல்லேன் என உரைத்தலுமாம்.

கழிய நின்று – ஒதுங்கிநின்று; மிகுதியாக நின்று ஆடலில்மட்டும் வல்லேன் எனலுமாம்.

நில்லாது சீவன் நிலையன்றென் றெண்ணி
வல்லார் அறத்தும் தவத்துளும் ஆயினர்
கல்லா மனித்தர் கயவர் உலகினில்
பொல்லா வினைத்துயர் போகஞ்செய் வாரே. 314

இம் – எனின், கல்லாரும் வல்லாருமாகிய இவர் இயல்பு இது என்று உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: உயிர் இவ்வுடலில் நிலையாது நிலையற்றது என்றெண்ணி, திருவடிப்பற்றுவல்லார் சிவதருமத்துள்ளும், சிவயோகத்துள்ளும் நிற்பவர்களானார்கள். கல்லாத மனிதர்களாகிய கயவர்கள் இவ்வுலகத்துப் பொல்லாத வினைகளைச்செய்து துன்பத்தை நுகர்வார்கள் என்றவாறு.

சீவன் நில்லாது நிலையன்று என அடுக்கிவந்தது வற்புறுத்திவிளக்க. தவம் - சரியா கிரியா யோகங்

கள். " தவத்தினின் " என்றதன் சிவஞான மாபாடியம் நோக்கித் தெளிக.

**விண்ணினின் உள்ளே விளைந்த விளங்கனி**
**கண்ணினின் உள்ளே கலந்தங் கிருந்தது**
**மண்ணினின் உள்ளே மதித்து மதித்துநின்(று)**
**எண்ணி எழுதி இளைத்துவிட் டாரே. 315**

இம் - எனின், இறைவன் காட்சிக்கு உரியனாக இருந்தும் அவனைக் காணமாட்டாது இளைக்கின்றனரே உலகவர் என இரங்கி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : விண்ணில் விளைந்த விளாம்பழம், எமது கண்ணுள்ளும் கலந்திருந்தது; அதனை அறிந்து அநுபவிக்கமாட்டாமல், இவ்வுலகத்து எதனையோ கடைந்து கடைந்து ஆராய்ந்து எண்ணி, எழுதி உடல் இளைத்தனரே மக்கள், என்னே அறியாமை என்றவாறு.

விண் - ஞானாகாசம். விளைந்த விளங்கனி - பரசிவம். விளங்கனி உண்டார்க்குப் பித்தந் தணிக்கு மருந்தாய் ஓட்டோடு ஒட்டியும் ஒட்டாமலும் மீட்டும் அங்குரித் தற்குரிய வித்துக்கள் பலவும் தம்முள் அடங்க இருப்பது போலச் சிவமும், ஆணவ இருளகற்றும் அருமருந்தாய், ஒன்றியும் ஒன்றாமலும், விரிந்த உலகம் தன்னகத்து ஒடுங்க இருத்தலின் சிவத்தை 'விளங்கனி' யென்றார். விளங்கனி மரத்திலன்றி விண்ணில் பழுக்காது. இதுவே இதனிடமுள்ள தனிச்சிறப்பு.

கண் - அறிவு. கண்ணினின் உள்ளே கலந்து அங்கு இருந்தது - அறிவுக்கறிவாக ஒன்றி இருந்தது என்பதாம். மதித்தல் - கடைதல். கடைதலாவது பலகாலும் அழுந்தி ஆராய்தல். பயனற்ற உலகியலறிவைப் பெருக்குதலின் இளைத்தனர் என்றார்.

கணக்கறிந் தார்க்கன்றிக் காணஒண் ணாது
கணக்கறிந் தார்க்கன்றிக் கைகூடாக் காட்சி
கணக்கறிந் துண்மையைக் கண்டண்ட நிற்கும்
கணக்கறிந் தார்கல்வி கற்றறிந் தாரே. 316

இம் – எனின், சித்தாந்தம் அறிந்தவரே கற்றறிந்தவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: தத்துவங்களின் தொகையையும், அவை தொழிற்படும் அளவையும் அறிந்தவர்க்கு அன்றித் தத்துவாதீதப் பழம்பொருளாகிய சிவத்தைக் காண முடியாது. தத்துவங்களை அறிந்தார்க்கன்றி ஞானம் சித்தியாது. ஆதலால், தத்துவ எல்லையைக்கண்டு, மெய்ப்பொருளைத் தரிசித்து, அதனை அணுக நிற்கும் அளவறிந்தவர்களே கல்வி கற்றவர்கள் என்றவாறு.

கணக்கு நான்கனுள் முன்னிரண்டும் தொகை என்னும் பொருளிலும், மூன்றாவது எல்லை என்னும் பொருளிலும், நான்காவது அளவு என்னும் பொருளிலும் வந்தது.

கணக்கு - தத்துவங்களின் தொகை; அஃதாவது, சிவதத்துவம் ஐந்தும், வித்தியா

தத்துவம் ஆறும், ஆன்மதத்துவம் இருபத்தைந்தும் ஆகிய முப்பத்தாறுமாம். இவற்றை அறிதலாவது ஆன்மவியாபகத்தைத் தடைப்படுத்துவன என்று அறிதல்.

கணக்கு எல்லையாகிய அந்தத்தை அறிந்து, மெய்ஞ்ஞானத்தைக்கண்டு அணுக நிற்கும் அளவை அறிந்தவர்களே சிவஞானம் பயின்றவர் என்பது கருத்து.

**கல்லாத மூடரைக் காணவும் ஆகாது**
**கல்லாத மூடர்சொல் கேட்கக் கடனன்று**
**கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லராம்**
**கல்லாத மூடர் கருத்தறி யாரே.** 317

இ-ம் - எனின், கல்வி அறிவில்லாத மூடர்களைக் காட்டிலும் சிவஞானக்கல்வி இல்லாதார் நல்லர் என்றல் நுதலிற்று.

இ-ள் : எழுத்தும் கல்லாத மூடர்களைக் காணுதல் கூடாது ; அவர்கள் வாய்ச்சொல் கேட்கு முறைமை யுடைத்தன்று ; அவர்களைக்காட்டிலும் சிவஞானக் கல்வி கற்காதவர்கள் நல்லவர்கள் ; கல்லாத மூடர்கள் திருவுள்ளம் இருந்தபடியை அறியமாட்டார்கள் என்றவாறு.

கல்லாதமூடர் - கல்லாமையோடு அறியாமையும் மிகுந்தவர்கள், கல்லாமை - பரிபாகமின்மை, மூடம் இயற்கையேயுள்ள மறைப்பாகிய

அஞ்ஞானத்தால் அறிவு தொழிற்படாது அடங்கி யிருத்தல்.

கல்லாதார் - சிவஞானம் பயிலாதார். இவர்கள் பரிபாகம் இன்மையால் உண்மை ஞானத்தை உணரமாட்டாரேயன்றித் தீமை செய்யார்; மூடர்கள் அதுவும் செய்வர் ஆதலின் நல்லர் என்றார். கருத்து - உண்மை ஞானம்; அதுவே திருவுளக்கருத்து.

**கற்றும் சிவஞானம் இல்லாக் கலதிகள்**
**சுற்றமும் வீடார் துரிசறுர் மூடர்கள்**
**மற்றும் பலதிசை காணுர் மதியிலோர்**
**கற்றன்பில் நிற்போர் கணக்கறிந் தார்களே. 318**

இம் - எனின், கற்பது சிவஞானம் பெறவே என்பது அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: நல்லாசான்பக்கல் ஞானநூல் கற்றும் சிவஞானம் கைவரப்பெறுத கீழ்மக்கள். சுற்றத்தை யும் விடார்; மும்மலமாகிற குற்றமும் நீங்கார்கள்; இவர்களே மூடர்கள். மற்றும் பலதிசையாக உண்மையை உணரமாட்டார்கள்; மதியிலிகள். அங்ஙனமன்றிக் கற்கவேண்டியவற்றைக் கற்று இறைவனடியில் நீங்காத அன்போடு இருப்பவர் களே கணக்கறிந்தவர்கள் என்றவாறு.

இம்மந்திரம், கல்லாதார் சிவஞானமில்லாத கீழ் மக்கள் என்றும், அவருள் மூடர் பற்றுவிடாது மலத்தைப்பற்றி மயங்குபவரே என்றும், கணக்

கறிந்தார் ஆவார் சிவஞானப்பயிற்சியுடையோராய் திருவடிக் கன்பு பூண்டவரே என்றும் விளக்கி. ‘ கணக்றிந்தார்க்கன்றி ’ “ கல்லாதமூடர் ” என்ற திருமந்திரங்கட்கு ஒருவாற்ருன் விளக்கந்தரு கின்றது.

கற்று அன்பில் நிற்போர் கணக்கறிந்தார்களே - அயரா அன்பின் அரன்கழல் செல்லுகின்றவர் களே கணக்கறிந்தார்கள் என்பதாம்.

ஆதிப் பிரான் அமரர்க்கும் பரஞ்சுடர்
சோதி அடியார் தொடரும் பெருந்தெய்வம்
ஓதி உணரவல் லோமென்பர் உள்நின்ற
சோதி நடத்துந் தொடர்வறி யாரே. 319

இம் - எனின், தாம் காண்போம் என்பார் சழக்கர் என்றல் நுதலிற்று.

இ - ள் : முழுமுதற்கடவுள்; தேவர்கட்கும் எட் டாத பரஞ்சுடர்; சோதி; அடியார்கள் பின் தொடர்ந்து பற்றிக் கொள்ளும் பெரிய தெய்வம்; அத்தகைய இறைவனை ஓதி, உணர வல்லமையுடை யோம் யாம் என்பர் உலகவர். ஆனுல் அவர்கள், எம்மனத்து எழுபரஞ்சோதி உண்ணின்று நடத்தும் சம்பந்தத்தை அறியாதவர்கள் என்றவாறு.

சோதியுருவத்து இறை உள்நின்று நடத்து கிறது என்பதை உணர்வாராயின் யாம் இறைவனை உணர்வேம் என்று அகங்கரியார் என்பதாம்.

ஓதுதல் - கற்றல். உணர்தல் - தெளிதல். முன்னதும் பின்னதும் கூறவே கேட்டல், சிந்தித்தல்களும் அடங்கும் என்க.

## ஐ௩. நடுவுநிலைமை

அஃதாவது, நடுவு நிற்றலின் இயல்பு. கருவி நூல்கள் பகை நொதுமல் நண்பு என்னும் முத்திறத்தார்மாட்டும் ஒப்பநிற்கும் நிலைமை என்னும். ஞான நூலாகிய இது இடை பிங்கலை சுழுமுனையாகிய மூன்றனுள் சுழுமுனையில் நிற்றல் எனக்கருதும். இது பின்வரும் மந்திரங்களான் வலியுறும். கற்க வேண்டியன கற்று, நடுநாடியில் நன்கு நிலைப் பார்க்கே ஞானசித்தி ஆம். ஆதலின் கல்வி கல்லாமைகளின் பின் இது வைக்கப்பெற்றது.

நடுவுநின் றார்க்கன்றி ஞானமும் இல்லை
நடுவுநின் றார்க்கு நரகமும் இல்லை
நடுவுநின் றார்நல்ல தேவரும் ஆவர்
நடுவுநின் றார்வழி நானும்நின் றேனே. 320

இ-ம் - எனின், நடுவுநின்றாரே நல்லனவெல்லாம் எய்துவர் என்று அறிவித்தல் நுதலிற்று.

இ-ள்: நடுவாகிய சுழுமுனையில் நின்றவர்கட்கு அல்லாமல் ஞானம் இல்லை; அவர்களுக்கு நரகம் இல்லை; அவர்கள் நல்ல தேவர்கள் ஆவர்; ஆதலால் அவர்கள் வழியே நானும் நின்றேன் என்றவாறு.

இன்னும் இம்மந்திரத்திற்கு, அடியார் நடுவுளிருத்தலே நடுவுநிற்றல் எனப்பொருள் கொண்டு, அதற்கு ஏற்ப ஏனையவற்றை இயைப் பாரும் உளர். "உடையாளுன்றன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீயிருத்தி, அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானால்" என்ற திருவாசக அனுபவத்தால் விளையும் இருமருங்கும் தாய்தந்தை யிருக்க நடுவில் இருக்கும்நிலை. அதாவது வாசியிடை யிருக்கை வழக்கு என்பது இதன் பொருள் என்பாரும் உளர் இத்தகைய பெருநிலை எய்தினார் சிவசாயுச்சியம் பெறுவரே யன்றித் தேவருமாவர் என்பது பொருந்தாமையின் அவ்வுரை ஆய்விற் குரியது.

நடுவுநின் றான்நல்ல கார்முகில் வண்ணன்
நடுவுநின் றான்நல்ல நான்மறை ஓதி
நடுவுநின் றார்சிலர் ஞானிக ளாவோர்
நடுவுநின் றார்நல்ல நம்பனும் ஆமே. 321

இ - ளின், எல்லோருமே நடுவு நின்றவர்கள் ஆயினும் ஞானிகள் நடுவுநின்றவர்கள் என விளக் குதல் நுதலிற்று.

இ-ள் : நல்ல மேகம்போலும் கரியவண்ணனாகிய திருமால், அவன்தொழிலில் நடுவுநிலை தவறாமல் நின்றான்; நன்மையையுடைய நான்மறை ஓதியாகிய பிரமனும் படைத்தற்றொழிலில் நடுவுநிலை தவறாது நின்றான்; சிவஞானியரும் தம்நிலையில் நடுவுநிலை தவறாதவர்களே ஆவர்; அவர்களுள் நடுவுநின்றா ராகிய அடியவர்களும் சிவனேயாவர் என்றவாறு.

மாலும் பிரமனும் தத்தம் தொழிலில் நடுவு நிற்க, சிலர் சுழுமுனை நடுவில் நின்று ஞானி களாயினர். அவர்களுள் நடுவேயிருக்கும் பேறு பெற்றுச் சிவமானாரும் சிலருளர் எனப் பதமுத்தியி னிற்பார் எய்தாதபேற்றை மக்கள் எய்தக்கூடும் என்றுணர்த்தினார்.

நடுவுநின் றார்சிலர் ஞானிக ளாவர்
நடுவுநின் றார்சிலர் தேவரு மாவர்
நடுவுநின் றார்சிலர் நம்பனு மாவர்
நடுவுநின் றாரொடு நானும்நின் றேனே. 322

இம் – எனின், முற்கூறியதையே வற்புறுத்தி விளக்குதல் நுதலிற்று.

இ – ள் : நடுவுநின்றார் சிலர் ஞானிகள் ஆவர்; தேவர் ஆவர்; சிவனும் ஆவர்; ஆதலால் அவர்க ளோடு நானும் நின்றேன் என்றவாறு.

"அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்" என வாதவூரடிகள் வேண்டிக்கொள் வதும் சிந்திக்க.

தோன்றிய எல்லாம் துடைப்பன் அவனன்றி
ஏன்றுநின் றாரென்றும் ஈசன் இணையடி
மூன்றுநின் றார்முதல் வன்திரு நாமத்தை
நான்றுநின் றார்நடு வாகிநின் றாரே. 323

இம் – எனின், சங்கார காரணனே முதல்வன்; அவன் திருநாமத்தைப் பற்றுதலே நடுவுநிலைமை என்றல் நுதலிற்று.

இ – ள் : பிறந்தன எல்லாவற்றையும் அழிப்பவன் அவனன்றிப் பிறர் இலர்; அத்தகைய ஈசனது இணையடிகளைத் தாங்கி நின்றவர்களும், அவனது நாமத்தை முயன்று நின்றவர்களும், அவனைப் பற்றி நின்றவர்களுமே நடுவுநின்றார் ஆவர் என்றவாறு.

இறைவன் திருவடிகளைப் பற்றிநின்றார் பகை பழி பாவங்களுக்கு அஞ்சுவர்கள் ஆகலின், அவர்கள் நடுவுநின்றார் ஆயினர்.

முதல்வன் திருநாமம் – திருவைந்தெழுத்து, 'நாதன் நாமம் நமச்சிவாயவே' என்ற ஞான சம்பந்த சுவாமிகள் திருவாக்கையும் ஈண்டு எண்ணுக. எஞ்ஞான்றும் திருவைந்தெழுத்தைச் செபிப்பார்க்கு வாசனுமலமும் தாக்காதாகலின் அவர்களும் நடுவு நின்றாராயினர். அங்ஙனமே அவனது திருநாமத்தைப் பற்றிநின்றார்க்கும் புறச்சார்பு இன்மையின் அவர்களும் நடுவு நின்றாராயினர்.

திருநாமத்தை மூன்று நின்றார். திருநாமத்தை நான்று நின்றார் என நடுநிலைத் தீவகமாகக் கொள்க. மூன்று நிற்றல் – முயலுதல்; நான்று நிற்றல் - பற்றி நிற்றல்.

## ௨4. கள்ளுண்ணாமை

அஃதாவது, கள்ளுண்டலைச் செய்யாமை. இப்பகுதியில், கள் என்ற பொதுமையான்

சிவானந்தத் தேறலும், தீமதுத்தேறலும் கொண்டு கொள்ளத்தகுவதும் சள்ளத் தகுவதும் வரையறுத் துணர்த்துகின்றாராதலின் திருவடியைப் பற்றி நிற்றலாகிய நடுவு நிலைமையின்பின் இது வைக்கப் பெற்றது.

கழுநீர்ப் பசுப்பெறின் கயந்தொறும் தேரா
கழுநீர் விடாய்த்துத்தங் காயம் சுருக்கும்
முழுநீர்க் கள்ளுண்போர் முறைமை அகன்றோர்
செழுநீர்ச் சிவன்றன் சிவானந்தத் தேறலே. 324

இம் - எனின், கள்ளுண்பார் கசடர்கள் என்று அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: பசுக்கள் கழுநீரைப் பெறுமாயின் குளந் தோறும் உண்ணமாட்டா; கழுநீரை எண்ணி விடாய் கொண்டு தன் உடலையும் இளைக்கச் செய்யும். உயர்ந்த செழுமையான நீர் சிவபெரு மானுடைய சிவானந்தத் தேனேயாகும்; இதனை விட்டு, முழுமை வாய்ந்த கள்ளுண்போர் முறைமை அகன்றவர் ஆவர் என்றவாறு.

பசு என்னும் பால்பகா அஃறிணைப்பெயர் தேரு என்னும் பன்மைப் பயனிலைகொண்டு முடிந்தது. சுவையுள்ள கழுநீரைக் குடித்த பசு, குளங்கண்ட இடத்திலெல்லாம் நீரைக் குடிக்காமல், கழு நீரையே எண்ணி விடாய்கொண்டு உடலிளைக்கும். மக்கள் சிவானந்தத் தேனை உண்ண இருந்தும், முழுமுடராய்க் கள்ளுண்டு முறைமை யகன்றார் களே; மாக்கட்குள்ள மதிகூட மக்கட்கு இல்லையே என்பது கருத்து.

முழுநீர்க்கள் - மடமை பயக்குங் கள்; முழு மகன் என்றாற்போல்வதோர் வழக்கு, கள்ளுண்டல் பொருள் கொடுத்து மெய்யறியாமைகொளல் ஆதலின் அவர்களை முறைமை அகன்றோர் என்றார். சிவானந்தத் தேறல் உயிர்தளிர்க்கும் மருந்து ஆகலின் செழுநீர்த் தேறலாயிற்று.

**சித்தம் உருக்கிச் சிவமாம் சமாதியில்**
**ஒத்த சிவானந்தம் ஓவாத தேறலைச்**
**சுத்த மதுவுண்ணச் சுவானந்தம் விட்டிடா**
**நித்தல் இருத்தல் கிடத்தல்கீழ்க் காலே. 325**

இம் - எனின், சுத்தமதுவை உண்டு சுவானந்தம் நுகர்தலே தூயநெறி என்றல் நுதலிற்று.

இ - ள்: சித்தத்தைச் சிவன்பாலேவைத்து, அதனை உருக்கி, சிவசமாதியில் ஒன்றிய சிவானந்தம் நீங்கப் பெறாத தேனாகிய சுத்தமதுவைத் துய்க்க சிவானந்தமாகிய தன்னானந்தம் என்றும் ஆன்மாவை நீங்காது; இங்ஙனமன்றி மயக்குங் கள்ளுண்பார் தன்வய மழிந்து நிற்றலும் இருத்தலும், கிடத்தலும் செய்வாராயின் அவை கீழ்நிலையே ஆகும் என்றவாறு.

சித்தம் உருக்கி - இரும்பை உருக்குதல்போலச் சித்தத்தைத் தன்தன்மை நெகிழச்செய்து. சிவமாம் சமாதி - சிவசமாதி, தேறல் உண்பார் ஆனந்தம் எய்துவார் தேன்தரும் ஆனந்தம் ஓர் எல்லையை உடையது. சிவானந்தத்தேறல் என்றும் இடையீடு இல்லாதது; ஒருபடித்தாய் உள்ளது; ஆதலின் ஒத்த

ஓவாத தேறல் என்றார். தேறலாகிய மதுவை என உருபு விரித்துக் கூட்டுக.

சுவானந்தம், சூரியன் முன்னிலையில் சூரிய காந்தக் கற்குள்ள நெகிழ்ச்சிபோல, சிவத்தின் முன்னிலையில் அவன்தரத் தான் நுகரும் ஆனந்தம், இஃதன்றி ஆன்மானந்தம் அன்று; இறைவன் ஒருவனே ஆனந்த வடிவினன் ஆதலின்,

நிற்றல் என்பது எதுகைநோக்கி நித்தல் என விகாரப்பட்டது. கீழ்க்கால் - கீழ்நிலை.

காமமும் கள்ளும் கலதிகட் கேயாகும்
மாமல முஞ்சம யத்துள் மயலுறும்
போமதி யாகும் புனிதன் இணையடி
ஓமய ஆனந்தத் தேறல் உணர்வுண்டே. 326

இம் - எனின், கீழோர்க்கும் மேலோர்க்கும் ஆம் தேறல் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : கீழ்மக்களுக்குக் காமமும் கள்ளுமே ஆகும்; மேன்மக்களுக்கு, ஆணவமலமும் சமய பேதங்களுள் மயக்கத்தையுறும் அறிவும் கெடுதற்குக் காரணமாகிய இறைவன் திருவடிமலரிலிருந்து ஊறிய பரநாதவடிவாகி உணர்வை விளக்கஞ் செய்கின்ற சிவானந்தத்தேன் உண்டு என்றவாறு.

"கலதிகள் – கீழோர், காமம் என்றது ஈண்டு இழிந்த காமத்தை; தகாத இடத்தும், விலக்கப்பட்ட காலத்திலும் விளைதலின், மா மலம் - மலங்களுக்குள் பெரியதாகிய மூலமலம்.

சமயத்துள் மயல் உறு உம்: சமயத்துள் உறு மயலும் எனமாறி, அகமும் அகப்புறமும் புறமும் புறப்புறமாகிய சமயபேதங்களில் நின்று அடையப் பெறும் மயக்க உணர்வும் எனப் பொருள் கொள்க.

போம்மதியாகும்; இவை கெடுதற்குரிய ஞானமேயான இணையடி என்க. இணையடிதரும் ஆனந்தத்தைத் தேறல் என்றமையின இணையடி மலராயிற்று; ஏகதேச உருவகம்.

ஓம் மயானந்தம்; பிரணவ வடிவாகிய ஆனந்தம். ஆனந்தத்தேறல் உணர்தேறல் எனக் கூட்டுக. உணர்வு - சித்சக்தி. கலதிகட்குக் காமமும் கள்ளும் ஆகும்; உயர்ந்தோர்க்கு உணர்வுத்தேறல் உண்டு எனக் கூட்டுக.

வாமத்தோர் தாமும் மதுவுண்டு மாள்பவர்
காமத்தோர் காமக்கள் ளுண்டே மயங்குவர்
ஓமத்தோர் உள்ளொளிக் குள்ளே உணர்வர்கள்
நாமத்தோர் அன்றே நணுகுவர் தாமே. 327

இம் – எனின், சிவச்சார்பு உடையாரே சிவனடி சார்வர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சாக்தேய மார்க்கத்தில் நிற்கின்ற வர்கள் தாமும் கள்ளுண்டு இறப்பர்; காமுகர்கள் காமமாகிற கள்ளையுண்டு கலங்குவர்; ஓமம் செய்பவர்கள் சித்தத்துள் செழுஞ் சோதியாகச் சிவத்தை உணர்வார்கள். சிவநாமம் பயில்பவர்கள் அக்கணமே அரனடியை அடைவார்கள் என்றவாறு,

வாமத்தோர்: வாமமார்க்கத்தை மேற்கொள்ளு பவர்கள்; ஊனும் கள்ளும் உண்டு செயல்மறந்து திரிதலே சத்திலயம் என்கின்ற கொள்கையினை உடையவர்கள். இவ்வாமம் சுத்தவாமமும் தாந்திரிக வாமமும் என இருவகைத்து; ஈண்டுக் கூறப் பெற்றது தாந்திரிக வாமத்தையே என்க.

கள்ளும் காமமும் கலக்குதற் றொழிலால் ஒக்குமாயினும் கள்ளினும் காமம் சிறந்தமையை "உண்டார் கண் அல்லது அடுநறாக் காமம்போல், கண்டார் மகிழ் செய்தல் இன்று" என்னும் வள்ளுவர் வாக்கானும் தெளிக.

ஓமத்தோர் - சிவவேள்வி செய்வோர். உள் ளொளிக்கு உள்ளே உணர்பவர்கள் - ஆக்ஞையின் கண்ணே எழும் ஒளிக்குள்ளே ஒளியாக உணர்பவர் கள். நாமத்தோர் - திருவைந்தெழுத்து ஓதுபவர்கள்; நணுகுவர் - அணுக்கத் தொண்டராய் அரனடியை அடைவர். 'ஓமத்துள் அங்கியின் உள்ளுவன் எம் இறை' (222) என்னும் மந்திரங்கொண்டும் தெளிக.

உள்ளுண்மை ஓரார் உணரார் பசுபாசம்
வள்ளன்மை நாதன் அருளினின் வாழ்வுறார்
தெள்ளுண்மை ஞானச் சிவயோகம் சேர்வுறார்
கள்ளுண்ணும் மாந்தர் கருத்தறி யாரே. 328

இ-ள் - எனின், செயத்தக்கார் செய்யார் கள்ளுண்டு கலங்குவர் கலதிகள் என வருந்துதல் நுதலிற்று.

இ – ள் : உயிருக்கு உயிராயிருந்து உணர்வருளும் மெய்ப்பொருளாகிய சிவத்தை ஓரார்; தம்மையும் தடைகளையும் உணரார்: வள்ளலாகிய சிவனருளால் வாழார்; தெளிந்த உண்மையாகிய ஞானத்தை விளக்கும் சிவபோகத்தைச் செய்யார்கள்; கள்ளையுண்ணும் மாந்தர் தாம் வந்த கருத்து யாது என்று அறியார்கள் என்றவாறு.

உள் உண்மை – உள்ளேயுள்ள மெய்ப்பொருள். அது, பதியாகிய தலைவன். தலைவனை உணராமையால் தம்மையும் உணரார், தடையையும் உணரார் என்பார் மேலே ‘உணரார் பசுபாசம்’ என்றருளினர்.

ஆன்மாக்களின் இழிநிலை அறிந்தும் எவ்வண்ணமும் இவர்களை ஆட்கொள்வோம் என்னும் திருவுள்ளக் குறிப்புடன் அருள்வழங்க இருக்கும் வள்ளல் நாதனுடைய திருவருளையே துணையாகக் கொண்டு வாழார்; என்பது, ஆன்மாக்கள், என்றும் சுதந்திரமற்றன ; நாம் அரனுடைமை என்றுணர்ந்து முனைப்பு அடங்கிச் சிவபோதத்தால் வாழ்தலாம்.

தெள்ளுண்மை ஞானம் – தெளிந்த உண்மையாகிய திருவடிஞானம். இஞ்ஞானமே சிவத்தினிடம் இடையறு இணைப்பை விளைவிக்கும். அவ்விணைப்பே சிவயோகம்: அதனைப் பொருந்தார் என்பதாம்.

சிவயோகம் சேர்ந்து செயல்மடங்கிச் சிவச்செயலாக இருக்கவேண்டிய மக்கள், கள்ளுண்டு, கருத்தழிந்து, மயங்கும் நிலையைப் பெரிதென்று மதிக்கின்றனரே; அற்ப ஆனந்தம் இது என்று அறிகின்

றிலரே என இரங்கிக் கூறியவாறு. சிவயோகமாவது சிவத்துடன் இயைதல்.

'உள்ளுண்மை ஓரார்' என்பது சிவரூபத்தையும், 'உணரார் பசு பாசம்' என்பது ஆன்மரூபம் ஆன்ம தரிசனம் ஆன்மசுத்தி தத்துவரூபம் தத்துவதரிசனம் தத்துவசுத்தி என்பனவற்றையும், 'அருளினின் வாழ்வுறார்' என்பது சிவதரிசனத்தையும். 'சிவயோகம் சேரார்' என்பது சிவயோகத்தையும் உணர்த்தியது.

மயக்குஞ் சமய மலமன்னு மூடர்
மயக்கு மதுவுண்ணு மாமூடர் தேரார்
மயக்குறு மாயையின் மாமாயை வீடு
மயக்கில் தெளியின் மயக்குறும் அன்றே. 329

இம் - எனின், சமயச்சடங்கு என்று கள்ளுண்பாரும் மூடரே என்றல் நுதலிற்று.

இ-ள்: அறிவைத்திரிக்கின்ற சமயங்களின் நின்று அதனால் மலினப்பட்ட அறிவையுடைய மூடர்கள் அறிவை மயக்கும் கள்ளையுண்ணும் மூடர்கள் ஆவர். ஆன்மாக்களை மயக்கி மலத்துள் அழுத்தும் நிலமுதல் மாயையீறான முப்பத்தொரு தத்துவங்களையுடைய அசுத்தமாயையைப்போல, சுத்தவித்தைமுதல் சிவ தத்துவம் ஈறான ஐந்து தத்துவங்களையுடைய சுத்த மாயையும் நீங்கும். அஃதெப்படியோ எனின், ஒரு மயக்கிலிருந்து தெளியின் மற்றொரு மயக்கம் வந்து பொருந்தும்; அதுவும் முன்னதுபோலவே கெடும் அன்றே என்றவாறு.

வாமமார்க்கத்தவரின் ஆசாரத்தைத் திருவுளத் தடைத்து 'மயக்கும்சமய மலமன்னுமூடர்' என்றது அவர்கள் கள்ளுண்ணும் மூடராவர். அசுத்தமாயை யென்றஒன்று நம்மைமயக்கிநிற்கிறது. அம்மயக்கம் தெளியின் வேறொரு மயக்கும் பொருளாகிய சுத்த மாயை வந்து பற்றும்; அதுவும் நீங்கும்; தெளிந்த சிவஞானம் சித்திக்கும் என்பதை அவர்கள் அறியார் கள் என்பது கருத்து.

மாமாயை-சுத்தமாயை, மாயை- அசுத்தமாயை

மயக்கும் தியங்குங்கள் வாய்மை அழிக்கும்
இயங்கும் மடவார்தம் இன்பமே எய்தி
முயங்கும் நயங்கொண்ட ஞானத்து முந்த
இயங்கும் இடையறா ஆனந்தம் எய்துமே. 330

இ-ளின், கள்ளுண்பார் காரிகையார் வய மயங்கிக் கதிகாணார் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்; கள்ளானது தன்னை உண்டாரை மயங் கச் செய்யும்; கவலச்செய்யும்; உண்மையை அழிக் கும்; இயங்குகின்ற பெண்ணினின்பமே பெரிதென்று பெற்று முயங்கச் செய்யும்; இங்ஙனமாய கள்ளை உண்பார் நல்லஞானத்துத் தலைப்படார்; அவர் களுக்கு என்றும் இடையறாது இயங்குகின்ற சிவானந்தம் கிட்டுமோ? கிட்டாது என்றவாறு.

மயங்கும். தியங்கும் என்பனவற்றை, மயக்கும் தியக்கும், எனப் பிறவினையாக்கிப் பொருள்கொள்க.

நிலைமடவார் பத்தினிகளாதலின், இயங்கு மடவார் என்றது பரத்தையரை, வள்ளுவரும்

இவர்களை ஒரு மனப்பெண்டிர் இருமனப்பெண்டிர் என அழைத்தல் காண்க, "இருமனப் பெண்டிரும் கள்ளும் கவரும் திருநீக்கப் பட்டார் தொடர்பு" என்பதனையும் ஈண்டு எண்ணுக. முயங்கும் — முயங்கச்செய்யும்.

நயங்கொண்டஞானம் - நல்ஞானம். முந்துதல்-தலைப்படுதல், இடையறா இயங்கும் என மாறிக் கூட்டுக; இது பெயரெச்ச அடுக்கு. எய்துமே; ஏகாரம் எதிர்மறைக்கண் வந்தது.

இராப்பகல் அற்ற இடத்தே இருந்து
பராக்கற ஆனந்தத் தேறல் பருகார்
இராப்பகல் அற்ற இறையடி இன்பத்து
இராப்பகல் மாயை இரண்டிடத் தேனே. 331

இம் — எனின். உலகவர் நிலையையும், தந்நிலையையும் கூறித் தெளிவித்தல் நுதலிற்று.

இ — ள் : இரவும் பகலும் இல்லாத என்றும் பேரொளிமயமான இடத்தில் இருந்து, வேறு புலன்களில் புத்தி செல்லாதபடி, சிவானந்தத் தேனைப் பருக மாட்டார்கள் உலகவர்கள். அவர்கள் அங்ஙனமாக நான், அறிவு அறியாமைகள் அற்ற, என்றும் ஞான மயமேயான சிவபெருமானுடைய திருவடிப் பேற்றால் விளையும் இன்பத்தில் இருப்பதால், துன்ப இன்பங்களுடைய அசுத்த சுத்த மாயைகளாலாகிய புவனங்களில் வாழ்பவன் ஆவனோ? ஒருபோதும் ஆகேன்; பரமுத்தன் ஆவேன் என்றவாறு.

இரவுபகல் என்பன கன்ம பூமியாகிய இதற்கே யுரியதாய் உறக்கமும் விழிப்பும் முயற்சியும் அயர்ச்சியும் பயப்பனவாய் இருப்பன. அவை அற்ற இடமாகிய இறைவனடியில் இருந்து என்பதாம்.

பராக்கு - செலுத்த வேண்டியதிற் கவனஞ் செலுத்தாது வேறொன்றிற் செலுத்துதல். அற - (அது) அற. பருகார் என்பதற்கு உலகவர் என எழுவாய் விருவித்துரைக்க.

திருவடியின்பம் இன்பத்துன்பக் கலப்பு இன்றி ஒரே இன்ப வடிவான தாகலின் அதனை இராப்பகல் அற்ற இன்பம் என்றார். இன்பத்து இன்பத்தில் இருப்பதால். மாயையிரண்டு இடத்தேனே - துன்ப இன்பக் கலப்பாகிய சுத்தாசுத்த மாயா புவனங் களில் வதிபவன் ஆவேனோ என்பதாம். ஏ; எதிர் மறைப்பொருளில் வந்தது.

இம்மந்திரம் ஏழாந்தந்திரத்திற் குருபூசையின் இறுதிப்பாடலாகவும் அமைந்துள்ளது.

சத்தியை வேண்டிச் சமயத்தோர் கள்ளுண்பர்
சத்தி அழிந்தது தம்மை மறத்தலால்
சத்தி சிவஞானம் தன்னில் தலைப்பட்டுச்
சத்திய ஞானவா னந்தத்திற் சார்தலே. 332

இம் - எனின், வாமத்தோர்நிலையில் சாராவண் ணம் உண்மையுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சத்தியை விரும்பி வாம மதத்தவர்கள் கள்ளுண்பார்கள்; அவர்கள் தம்மை மறந்து போதலால் உடல்வன்மை கெடுதலேயன்றி, வழி

பாடும் மறைகிறது; சிவஞானத்தில் இடைவிடாது சேர்ந்து உண்மை யறிவானந்த வடிவத்தைச் சார்தலே சத்தியாம் என்றவாறு.

சமயத்தோர் - எல்லாம் சத்தியின் காரியம்; எல்லாம் சத்தியிலேயே ஒடுங்குகிறது; ஸ்ரீ புரத்தைச் சார்தலே முத்தி என்னும் வாமமதத்தவர்கள். அவர்கள் சத்தியை வேண்டிக் கள்ளுண்டலாவது, சத்தியின் தியானம் நிலைபெறவேண்டிக் கள்ளுண்டல். அதனால் தமது உடல் வலிமை அழிதல் மாத்திரமே யன்றித் தியானமும் சித்தியாது என்பதாம். சத்தியஞானவானந்தம் – உண்மை யறிவானந்தம்; சச்சிதானந்தம்.

சிவஞானம் தலைப்பட்டார்க்கு உண்மை அறிவானந்த வடிவினராகிய சிவத்தைச் சார்தல் கூடும். அதுவே திருவருட்பேறும் என்றபடி.

சத்தன் அருள்தரின் சத்தி அருளுண்டாம்
சத்தி அருள்தரின் சத்தன் அருளுண்டாம்
சத்தி சிவமாம் இரண்டுந்தன் னுள்வைக்கச்
சத்தியம் எண்சித்தித் தன்மையு மாமே. 333

இ — னின், சத்தி, சத்தன் இவ்விருவருள் வேறுபாடின் றென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : சிவம் அருளைச்செய்யின் சத்தியின் அருளுண்டாம்; சத்தி அருளைச்செய்யின் சிவத்தின் அருள் தானே உண்டாம்; ஆதலால், சத்தி சிவம் இரண்டையும் மனத்துள் தியானிக்க. அட்டமா சித்திகளும் ஆம்; இது சத்தியம் என்றவாறு.

சத்தன் – சத்தியையுடையவன், சத்தி குணமும் சத்தன் குணியுமாதலின் இவர்களுக்குள் ஒரு சிறிதும் வேறுபாடின்று; ஆதலால், ஒருவர் அருள் செய்யின் மற்றவர்அருளும் தானேவந்து இயையும். ஆகவே இருவரையும் எண்ணுக என்றவாறு

எண்சித்தி தன்மையும் ஆம்-அட்டமாசித்தியும் விளையும்; இது சத்தியம் என்பது கருத்து.

தத்துவம் நீக்கி மருள்நீக்கித் தானாகிப்
பொய்த்தவம் நீக்கிமெய்ப் போகத்துட் போகியே
மெய்த்த சகமுண்டு விட்டுப் பரானந்தச்
சித்திய தாக்கும் சிவானந்தத் தேறலே. 334

இம் – எனின், சிவானந்தத்தேனை உண்பதாலுள தாகும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இறைவனால் நமக்குதவப்பட்ட தத்துவ தாத்துவிகங்களாகிற தொண்ணூற்றாறையும் தம் முடைமையல்ல எனநீக்கி, அவற்றைத் தம் முடையன வாகக் கருதும் மயக்க ஞானத்திற் கேது வாகிய மலச்சார்பையும் அகற்றி, ஆன்மா தானே யாய் உலக இன்பங்களை விரும்பிச் செய்யும் வேள்வி தவம் முதலியவற்றை நீக்கி, சிவபோகத்துட் சென்று, என்றும் மாறாத அழியாத உண்மை யுலகாய வீட்டுலகிலிருந்து, பேரின்பத்தை நுகர்ந்து விட்டுச் சிவனடிப்பேறாகிய பரானந்த சித்தியை விளைவிக்கும் சிவானந்தத்தேன் என்றவாறு.

தேறல் நீக்கிநீக்கி ஆகி நீக்கி போகி உண்டு விட்டு சித்தியது ஆக்கும் என முடிக்க. ஆகி போகி என்பனவற்றை பிறவினையாகப் பொருள் கொள்க.

மெய்த்த சகம் – உண்மையான உலகம்; என்றது வீட்டுலகத்தை, சிவானந்தத்தேறலுண்பார் செயல்களைத் தேறலுக்கு ஏற்றியது; கருத்தாவைக் கருவிக்கு ஏற்றியமையால் உபசாரம். முருகன் வேல் வென்றது என்புழிப்போல.

யோகிகள் கால்கட்டி ஒண்மதி ஆனந்தப்
போத அமுதைப் பொசித்தவர் எண்சித்தி
மோகியர் கள்ளுண்டு மூடராய் மோகமுற்று
ஆகும் மதத்தால் அறிவழிந் தாரே. 335

இ – னின், யோகியர் மோகியர் இவர்களின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: சிவயோகியர்கள் பிராணாயாமமுறையால் பிராணவாயுவைக்கட்டி, மதிமண்டலத்திலுள்ள சிவஞானானந்த அமுதைப் பொசிக்கின்ற அட்டமா சித்திபெற்ற தவசிகள் ஆவார்கள். மோகியர்கள் கள்ளுண்ட மூடர்களாய் மயங்கிக் கள்ளால் விளைந்த மதத்தால் அறிவழிந்தவர் ஆவார்கள் என்றவாறு.

கால் கட்டி – பிராண ஆயாமம் செய்து. சுழுமுனை நாடியாகிய மதிமண்டலத்தில் ஊறுகின்ற சிவஞானானந்தத் தேனைப் பொசிக்கிறவர்கள் அட்டமா சித்தி அடைந்தவராவர் என்பது கருத்து.

உண்ணீர் அமுதம் உறுமு றலைத்திறந்(து)
எண்ணீர் குரவன் இணையடித் தாமரை
நண்ணீர் சமாதியி னுடிநீ ரான்லங்
கண்ணுற்றொடுசென்று காலவழி காணுமே. 336

இ-ம் - எனின், சமாதியிலிருந்து எல்லாவற்றையும் சாதியுங்கள்; காணுங்கள் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: உபாயத்தை உணர்த்தியருளிய குருவினது திருவடித்தாமரையைத் தியானியுங்கள்; கண்ணுடியில் நீரைப்போல் சமாதியின்பத்தையடையுங்கள்; ஆறு ஆதாரங்கள் வழியாக மேலே ஆஞ்ஞைவரை சென்று பிராணன் சென்ற வழியைக் காணுங்கள்; அமுதம் சுரக்கின்ற ஊற்ருகிய மதிமண்டலத்தைத் திறந்து அவ்வமுதத்தையுண்ணுங்கள் என்றவாறு.

குருவின் திருவடியைத் தியானித்து, சமாதியை அடைந்து, ஆதாரம் வழியே பிரமரந்தரம் வரை சென்று, பிராணன் சென்ற வழியைக் கண்டு, அமுத நிலையைத் திறந்து, அமுதம் உண்ணுங்கள் என்பது கருத்து.

இங்ஙனமன்றிச் சொற்களைக் கண்டவாறு பிரித்துக் கொண்டுகூட்டி இடர்ப்பட்டுப் பொருள் காண்பாரும் உளர்; சிந்தித்துத் தேறுக.

ஆடி நீரான் - கண்ணுடியில் நீர்போல. ஆன் என்பது சாரியை. கண்ணுடியில் நீர்போலச் சமாதி இன்பத்தை நண்ணுங்கள் என்றவாறு

கண்ணுெருடே சென்று: கண்-இடம்; ஆதாரம், கண் ஆறு - ஆறு ஆதாரம்; கால்வழி — காற்ருகிய பிராணன் மேற்சென்ற வழியை.

திருமந்திரம் முதல் தந்திரம்

பஞ்சாக்ஷரதீபம் என்னும் உரையுடன் முற்றிற்று.

உ

சிவமயம்

# இரண்டாம் தந்திரம்

## 1. அகத்தியம்

காமிக ஆகமத்தின் தெளிவாகிய இரண்டாம் தந்திரம் உணர்த்துவான் எடுத்துக்கொண்டார், இதனுள் அகத்தியம் என்பது முதலாக இருபத்தைந்து அதிகாரங்களான் புராணவரலாறுகளின் தத்துவமும், ஐந்தொழிற்சிறப்பும், உயிர்கள் பிறக்கும் முறையும் உயிர்களின் வகையும், எவ்வகையானும் யாரையும் நிந்தித்தல் கூடாது; பெரியோரைத் துணைக்கொண்டு ஒழுகவேண்டும் என்னும் ஒழுக்கமும், பிறவும் உரைக்கப்புகுந்து, முதற்கண்; அகத்தியரைப்பற்றிய வரலாற்றுக் குறிப்புகளின் தத்துவ விளக்கத்தை உணர்த்துகின்றார் ஆசிரியர் திருமூலதேவநாயனார்.

அவற்றுள் அகத்தியமாவது, அகத்தியரைப் பற்றிய வரலாறுகளை உணர்த்துவது. ஒழுக்கநெறி நின்றாரே உண்மை உணர்த்தற்குரியர். ஆதலின் முதற்கண் இது வைக்கப்பெற்றது.

நடுவுநில் லாதிவ் வுலகம் சரிந்து
கெடுநின்ற தெம்பெரு மானென்ன ஈசன்
நடுவுள அங்கி அகத்திய நீபோய்
முடுகிய வையத்து முன்னிரென் றனே. 337

இம்மந்திரம் என்னுதலிற்றோ எனின், இறைவன் அகத்தியனாரை ஏவல்கொண்டமை உணர்த்துதல் நுதலிற்று.

இதன்பொருள் : 'எம்பெருமானே ! இவ்வுலகம் நடுவின்றி ஒருபால் சரிந்து அழிகின்றதே' என்று தேவர்கள் வேண்டிக்கொள்ள, இறைவன் 'அக்கினியை உடைய அகத்தியனே ! நீ சென்று உயர்ந்து நிற்கின்ற உலகத்தை முன்னுவாயாக' என்றருளினன் என்றவாறு.

உலகம் ஒருபாற்கோடி சரிதலாவது தேவரும் முனிவரும் ஞானியரும் பிறரும் அம்மையப்பராக எழுந்தருளியிருக்கிற ஸ்ரீ கண்டபரமசிவனைத் தரிசித்து அனவரதம் அனுபவிக்கும் ஆனந்த வாழ்விலே ஈடுபட்டுப் புறம்போகமாட்டாமையான் அங்கேயே தங்கினார்களாகத் தென்பாற் சிவஞானத்தைச் செந்தமிழ் வாயிலாக உணர்த்தும் சிவகுரு தேவையாயிற்று. ஆனால் தென்னாடோ சிவஞானக் களஞ்சியம்; அங்குச் செல்க என இறைவன் அகத்தியனைப் பணித்தனன், இதனால் அகத்தியன் பெருமையினளவறிக. உருவிற் சிறிய அகத்தியன் செல்லின் நிலச்சரிவு சமமாகுமோ எனின், உள்ளத்தில் எழுபரஞ்சோதியாகிய அங்கியை உடையவன் அகத்தியன் ஆதலால் அவன் சேறல்தகும் என்பது திருவுள்ளக்கருத்தாயிற்று.

முடுகிய - வேகங்கொண்ட, உயர்ந்த. முன்னிர் என்பது முன்னுக என்னும் பொருள்தரும் ரகர ஈற்று வியங்கோள் முற்று.

இம்மந்திரத்துள் நடுவுள அங்கி ஈசன் எனக் கூட்டி, ஐம்பூதங்களுக்குள் நடுவணதாகிய அங்கி வடிவான ஈசன் என்றுரைப்பாரும் உளர்.

சிவபெருமானுக்கும் மலைமகளாகிய பார்வதிக்கும் திருமணம் நடந்தது; அதுகாணத் தேவர்களும் பிறரும் வடபால் ஒருங்கு கூடினர். அதனுல் வடபால் தாழ்ந்தது; அதுகண்டு விண்ணவர் நடுங்கினர்; சிவபெருமான் தன்னை ஒப்பானுகிய அகத்தியனை அனுப்பினர்; அகத்தியன் "சித்த மாசகல அந்தச் செந்தமிழ் இயல்நூல்தன்னை அத்தனே! அருளிச்செய்தி" என்முராகச் சிவபெருமான் அங்ஙனமே அருளிச்செய்தனர் என்பது இம்மந்திரத்திற் குறிப்பிடப் பெறும் வரலாறு.

இதனுல் தெரியும் உண்மை, இறைவன் போகியாயிருந்து உயிர்க்குப் போகத்தை நல்க, தேவர் முதலாயினேர் போகத்திலாழ்ந்துபோயினர். அதனுல் போக மோக்கங்களுக்கு உரிய உலகம் ஒருபால் சரிந்து போக விருப்பதாயிற்று. சிவஞானியரோ உடையாள் நடுவிலிருக்கும் நிலையாகிய சிவசிவ மந்திரத்தைத் தியானித்துக்கொண்டே இருந்துவிட்டனர். அதனைத் தெளிவிக்க உண்மைஞானியான் அகத்தியரை அனுப்பினர் என்பதாம். எல்லையற்ற தேவர் முனிவர் முதலாயினுர்க்கு உண்மைஞான முடைய ஒரகத்தியன் சமமாவன்

என்பதைத் தெளிவிக்கவே இறைவன் திருவருள் நிலை இங்ஙனம் இருந்தது என்பதாம்.

இஃதன்றி வடபுலம் தென்புலம் இவற்றின் வேற்றுமை கூறிக் கயிலைமுதற் கன்னிவரை சிறந்திருந்த சிவனெறிக்கும், சிவஞானியர்களின் ஒப்ப எண்ணும் உயர்வுக்கும் இழுக்குத்தரும் பொருந்தாக் கருத்துப் புகலுவாரும் உளர். உண்மையுணர்த்தி உயர்வுதந்து பேரின்பம் நல்கும் பெருநூற்கண் இடம், காலம், சாதி, மொழிபற்றிய காழ்ப்புக் காரணமாகப் பொருந்தாவுரைகூறல் வடகயிலை முதல் தெற்கட்குமரி வரை ஞானவரசாளும் சிவனெறிக்குப் பொருத்த மாமோ? புகல்க.

அங்கி உதயம் வளர்க்கும் அகத்தியன்
அங்கி உதயஞ்செய் மேல்பா லவனொடும்
அங்கி உதயஞ்செய் வடபால் தவமுனி
எங்கும் வளங்கொள் இலங்கொளி தானே. 338

இம் - எனின், அகத்தியன் பெருமை இனைத்தென் றறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: சிவாக்கினியை இதயகமலத்தில் தோற்றுவிக்கின்ற வடதிசைத் தவமுனிவரும், வைகறைப் போதிலேயே அக்கினி காரியம் செய்யும் முனிவரும் ஆகிய அகத்தியர், அக்கினிபோலக் கீழ்த்திசையில் தோன்றி மேற்றிசையில் அடைபவனாகிய சூரியனோடும் எங்கும் வளப்பத்தை மிகுவித்து விளங்குகின்ற ஒளியாம் என்றவாறு.

வடபால் தவமுனி அகத்தியன் இலங்கு ஒளி யாம் என முடிக்க. தான்; ஏ; அசைகள்

அங்கி உதயஞ்செய் வடபால் தவமுனி என்றது நடுவுள அங்கி அகத்தியன் என்புழிப்போல, தியானப் பொருளாகச் சிவச்சோதியை வெளிப் படுக்கும் வடபால் முனிவன் தவமுனிவனைக் குறித்தது.

அங்கி உதயம் வளர்க்கும் அகத்தியன்; அகத் தியர் உலோபா முத்திரையாரை மணந்து இல்லற மேற்ற அந்தணராதலின் நாள்தோறும் வைகறைப் போதில் அக்கினிகாரியம் செய்பவன் என்பதாம்.

அங்கி உதயஞ்செய் மேல்பாலவனொடும்; அக் கினிப் பிழம்பாக உதயம் செய்து மேற்றிசைக் கண்ணேனாகின்ற சூரியனோடும்.

எங்கும் வளம் கொள் இலங்கு ஒளி தானே; சூரியன் எங்கும் தன்னுடைய வெங்கதிரால் வளப்பம் மிகுவிப்பதுபோல அகத்தியரும் எங்கும் ஞானவளங் கொள்ளச் செய்பவராதலின், அவரை விளங்குகின்ற ஒளியாம் என்றார். மேல்பாலவ னொடும் இலங்கொளியாம் என்றது சூரியனொடும் ஒக்க உரைக்கின்ற நிலையில் ஒளிப்பொருளாம் என்றவாறு.

இதனால் இறைவனால் உயர்ந்தநிலத்து முன்னிற்க எனப்பணிக்கப்பெற்ற அகத்தியன் சூரியனோடு ஒருங்குவைத்து எண்ணத்தக்க ஒளிப் பொருளாம் என்பது கருத்து. இதற்கு வேறுரை கூறி மயங்க வைப்பாரும் உளர்.

மேற்போந்த இரண்டு திருமந்திரங்களானும் அகத்தியன் சீவபோதங் கழன்று சிவபோத நிலையில் என்றும் இருப்பவனாதலின் அவனைக்கொண்டு சிவபோதத்தை எங்கும் பரப்ப, இறைவன் திருவருள் பாலித்தார் என்பதே அகத்தியரைத் தென்புறத் தனுப்பிய புராண வரலாற்றின் அடிப்படைக் கருத்து.

## ஐ. பதிகவலியில் வீரட்டம்

அஃதாவது, இறைவன் மறக்கருணை காட்டி ஆட்கொண்ட வீரத்தானங்கள் எட்டு என்பதை உணர்த்துதல். வீரட்டம் ; வீரத்தால் அட்ட இடம். வீரஸ்தானம் வீரட்டானமாகி அது வீரட்டமாகி மருவிற்று என்பாருமுளர். இறைவன் அடியாரைக் கொண்டு இயற்றுவித்த அருட்செயலை அடுத்து. இறைவனே மறக்கருணை காட்டி ஆட்கொள்ள மேற் கொண்ட வீரச்செயலை விளக்குதலின் அகத்தியத் தின் பின் இது இடம்பெற்ற தென்க.

கருத்துறை அந்தகன் தன்போல் அசுரன்
வரத்தின் உலகத் துயிர்களை எல்லாம்
வருத்தஞ்செய் தானென்று வானவர் வேண்டக்
குருத்துயிர் சூலங்கைக் கொண்டுகொன் றனே. 339

இம் - எனின், அந்தகாசுரனை அழித்த வரலாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நீதியில் தோய்ந்த கருத்தினை உடைய இயமனைப்போன்ற அந்தகாசுரன் என்பவன் தான்

பெற்ற வரத்தால் உலகத்துள்ள உயிர்களை யெல்லாம் வருத்தினன் என்று தேவர்கள் இறைவனிடம் வேண்டிக்கொள்ள, நுனி உயர்ந் திருக்கிற மூவிலைச்சூலத்தை இறைவன் ஏந்திக் கொன்றான் என்றவாறு.

கருத்துறை அந்தகன் என்பதற்குக் கருமை நிறத்தோடு பொருந்திய அந்தகன் எனலும் ஆம். அந்தகன் - இயமன்; எல்லா உயிர்கட்கும் இறுதி செய்பவனாகலின் இது காரணப்பெயராயிற்று.

அந்தகன்தன்போல் அசுரன் என்றது சொற் பொருள் விரித்தல் என்னுமுத்தி. அந்தகாசுரன் என்ற பெயர்க்காரணத்தை விளக்கியவாறு. குருத்து - நுனி. அவதியுறுங்காலத்து ஆன்மாக் களுக்கு அடைக்கலத்தானம் அரனே என்பது அறிவித்தவாறு. இந்நிகழ்ச்சி, திருக்கோவிலூர் என்ற தலத்தில் நடந்தது.

கொலையிற் பிழைத்த பிரசா பதியைத்
தலையைத் தடிந்திட்டுத் தானங்கி யிட்டு
நிலையுல குக்கிவன் வேண்டுமென் றெண்ணித்
தலையைப் பரிந்திட்டுச் சந்திசெய் தானே. 340

இம் - எனின், தக்கனைத் தண்டித்ததும் அருள் செய்ததுமாகிய இரண்டையும் அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : கொலையைக் காட்டினும் பெருந்தவ றிழைத்த தக்கனது தலையை வெட்டிக் கொளுத்தி விட்டு, நிலைபேறுடைய உலகுக்கு இவன் இன்றியமை

யாதவன் என்று எண்ணி, ஆட்டின்தலையை அரிந்து அவனுடலில் பொருத்திவைத்தான் என்றவாறு.

கொலையில் பிழைத்த பிரசாபதி; கொலையைக் காட்டிலும் பெருங்குற்றமாகிய சிவநிந்தனை செய்த தக்கன். இதில் அடங்கிய வரலாறு; தக்கன் தன் மருகன் என்ற மதத்தால் மயங்கிச் சிவபெருமானை மதியாமல் வேள்விசெய்தானாக சிவபெருமானுடைய நெற்றிக் கண்ணிலிருந்து வீரபத்திரர் தோன்றி வேள்வியை அழித்துத் தக்கனையும் கொன்றார்; பிரமன் வேண்டுகோளின் வண்ணம் இறைவன் மீண்டும் அவனது குறையுடலில் ஆட்டுத்தலையைப் பொருத்தி எழுப்பினார் என்பது. இதனை "மைத்தலை கண்டு சேர்த்தி எழுகென்றான் மறைகள் போற்றும் அத்தனை இகழும் நீரர் ஆவர் இப்பரிசே என்னே" என்னும் கந்தபுராணக் கவிதையாலும் அறிக.

நிலையுலகுக்கு இவன் வேண்டுமென்று எண்ணி; உயிர்கள் உலகில் இடையறாமல் நின்று நிலவுதற் பொருட்டு எண்ணிப் படைப்புத்தொழிலைப் பகிர்ந்து செய்த இவன் வேண்டப்படுவன் என்று கருதி.

தலையைப் பரிந்திட்டு; ஆட்டின் தலையை அரிந்து வைத்துப் பொருத்தி. இவ்வரலாறு திருப்பறியலூர் என்னும் வீரட்டத்துள் நிகழ்ந்தது. இமயமலைச் சாரலில் கனகல் என்னுமிடத்தில் நடந்தது என்றலும் உண்டு. இவ்வரலாற்றால் இறைவனுடைய நிக்கிரகானுக்கிரகத் தன்மை விளக்கியவாறு.

எங்கும் பரந்தும் இருநிலந் தாங்கியும்
தங்கும் படித்தவன் தாளுணர் தேவர்கள்
பொங்கும் சினத்துள் அயன்தலை முன்னற
அங்கச் சுதனை உதிரங்கொண் டானே. 341

இம் - எனின், பிரமனின் சிரம்கொய்து செருக் கடக்கிய வரலாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : எங்கும் வியாபித்தும் பெரிய பூமிக்கு ஆதாரமாய் இருந்து தாங்கியும் எல்லாம் நிலை பெறுதற்கு ஏதுவானது இறைவனுடைய திருவடி யென்று உணர்ந்துகொண்ட தேவர்களில் ஒருவ னாகிய பிரமனது தலையொன்று பொங்கியெழுகின்ற கோபத்தால் அற்றுப்போக, அற்றதலையில் திருமாலின் குருதியை ஏற்றுக்கொண்டான் இறைவன் என்றவாறு.

எங்கும் பரந்து என்பது இயங்கியற்பொருளும் நிலையியற்பொருளும் ஆகிய உலகமெங்கணும் உள் ளும் புறம்பும் ஒத்துப்பரவியும் என்பதை உணர்த் திற்று.

இருநிலம் தாங்கியும் : பெரிய உலகங்கள் பலவும் சலியாதே நிலைபெற ஆகாரமாக இருந்து தாங்கியும் என்றவாறு.

தங்கும் படித்து அவன் தாள் ; எல்லா உலகங்களும். எல்லா உயிர்களும் சென்று ஒடுங்குதற்கு இடமாந்தன்மையை உடையது அவனது திருவடி என்றவாறு. உணர் தேவர்கள் - அத்திருவடியை உணர்ந்தவர்களே உண்மைத் தேவர்கள் ஆவார்கள்.

*அயன் தலை பொங்கும் சினத்துள் முன் அற ; திருவடிஞானத்தை எய்தாது செருக்கிய பிரமன் தலைகளுள் ஒன்று திருவுள்ளத்துப் 'பொங்கியெழுகின்ற சினத்தால் முன் அற்றுப் போக, என்றது, தருக்கிய பிரமனுடைய ஐந்து தலைகளுள் நடுத்தலையைக் கோபத்தால் இறைவன் தன் திருக்கரத்தின் நகத்தாற் கிள்ளினுர் என்ற வரலாற்றை உணர்த்திற்று. அப்பிரம கபாலம் நிரம்ப, திருமாலின் இடதுமார்பிலிருந்த உதிரத்தை ஏற்றுக் கொண்டார் என்பது 'அச்சுதனை உதிரங்கொண்டான்' என்பதால் விளக்கப்பெறுவது. இந்நிகழ்ச்சிக் குரிய தலம் திருக்கண்டியூராகும்.*

*இவ்வரலாறுகள். படைத்தும் காத்தும் தொழில் புரியுங் கடவுளரும் சிவன் ஏவல்வழி நிற்பர் என்றலின் சிவனே முழுமுதற்கடவுள் என்பதை உணர்த்தின.*

எங்கும் கலந்துமென் உள்ளத் தெழுகின்ற
அங்க முதல்வன் அருமறை யோதிபால்
பொங்குஞ் சலந்தரன் போர்செய்ய நீர்மையின்
அங்கு விரற்குறித் தாழிசெய் தானே. 342

*இம் - எனின், சலந்தரனை வென்ற இறைவனது வீரம் உணர்த்துதல் நுதலிற்று.*

*இ - ள் : எல்லா உலகத்தும், உயிர்களிடத்தும் கலந்திருந்தும் அடியேன் உள்ளத்திலே விளக்கமாகத் தோன்றுகின்ற. ஆறு அங்கங்களுக்கு முதல் வரும் அருமறை நான்கையும் அருளிச்செய்தவரும்*

ஆகிய இறைவனிடத்துச் சினத்தாற்பொங்கிய சலந்தரன் போர்செய்ய, தன்மையாக அவ்விடத்து தன்காற் பெருவிரலால் ஒரு சக்கரத்தை எண்ணி இயற்றினர் என்றவாறு.

எங்கும் கலந்தும் என்றது உயிர்கள்தோறும் பொதுமையின் நிற்றலையும், என் உள்ளத்தெழு கின்ற என்றது தன்னுள்ளத்து மணியின்கட் சோதி போல வெளிப்பட்டிருக்கிற சிறப்பியல்பையும் உணர்த்தின.

அங்கம் முதல்வன்; வேதத்தின் அங்கங்களாகிய சிட்சை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தோ பிசிதம், சோதிடம் என்ற ஆறு அங்கங்களுக்கும் தலைவன். உத்தமாங்கமாகிய உபநிடதங்களை உதவி யவன் எனலும் ஆம். அருமறை ஓதி - நான்கு வேதங்களையும் அருளிச்செய்தவன். அருமறையோகி எனப் பாடம் கொண்டு அரியவேதம் புகழும் யோகி என்பாரும் உளர். பொங்கும் - தருக்கிய. நீர் மையின் என்றது யாதொரு முயற்சியும் இன்றி இயல்பாக என்னும் பொருளில் வந்தது.

சலந்தராசுரன் தருக்குற்றுச் சிவபெரு மானிடமே போருக்குவர, சிவபெருமான் ஓரந்தண வடிவம் தாங்கி அவன் முன்னேவந்து 'சிவனோடு பொருவது அப்புறமாகட்டும்; இச்சக்கரத்தை எடுத்து உன் தலைமீது வைத்துக்கொள்' என்று காற்பெருவிரலால் ஓர் ஆழி கீறினர்; அசுரன் அதனைக்கீறி எடுத்துத் தன் தலைமேல் வைத்துக் கொண்டான். ஆழி சுழன்று அவன் தலையைக்

கொய்தது என்பது வரலாறு. இது விற்குடி என்ற தலத்தில் நிகழ்ந்தது.

இம்மந்திரம், மலபரிபாககாலத்து இறைவனே எழுந்தருளிவந்து மறக்கருணை கட்டி ஆட்கொண்டும் தன்னடிக்கீழ் வைப்பன் என்ற மெய்ப்பொருள் மேவ நின்றது.

**அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்**
**முப்புறஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள்**
**முப்புர மாவது மும்மல காரியம்**
**அப்புரம் எய்தமை யாரறி வாரே. 343**

இம்-எனின், திரபுரம் எரித்தருளிய வரலாற்றின் தத்துவம் அறிவித்தல் நுதலிற்று.

இ—ள் ; கங்கையை அணிந்த சிவந்த சடையினை உடையவனும் அனைத்திற்கும் தொல்லோனுமாகிய பெருமான், முப்புரங்களையும் அழித்தனர் என்று மூடர்கள் சொல்லுவார்கள். முப்புரம் மூன்று மலங்களின் காரியமாய் அமைந்தது ' இறைவன் மூன்று மலங்களையும் எய்து வீழ்த்தியதை அறிவார் எவரும் இல்லை என்றவாறு.

மும்மலங்களாவன ஆணவம் கன்மம் மாயை என்பன. ஆணவத்தின் காரியமாகிய மோகம், மதம், அராகம், விஷாதம், சோஷம், வைசித்திரியம் அரிசம் என்பனவும், கன்மத்தின் காரியமாகிய புண்ணிய பாவ ரூபமான வினைகளும், மாயையின் காரியமாகிய தனுகரண புவன போகங்களும் ஆம். இவற்றின் வடிவு கமலன், கமலாக்கன், வித்யுன்

மாலி என்ற மூன்று அசுரர்களும் இம்மூன்று மலங்களையும் அழித்ததே இம்மூவரையுங் கொன்று முப்புரம் எய்த வரலாறு.

எய்தமை அறிதலாவது, மலமாதி முப்புரங்கள் இன்றும் எம்முயிரைப் பந்தித்து நிற்கின்றன; யான் அன்பு செய்கின்றேன்; அரன் அவற்றை அழிந்தருளு கின்றான் என்று உணர்தல், இவ்வரலாறு திருவதிகை யில் நிகழ்ந்தது

முத்தீக் கொளுவி முழங்கெரி வேள்வியுள்
அத்தி யுரியர னுவ தறிகிலர்
சத்தி கருதிய தாம்பல தேவரும்
அத்தீயின் உள்ளெழுந் தன்று கொலையே. 344

இம் – எனின், இறைவன் யானையை உரித்துப் போர்த்தியதை அறிவித்தல் நுதலிற்று.

இ – ள் : முத்தீயினை எழுப்பி முனிவர்கள்செய்த முழங்குகின்ற எரியினையுடைய யாகத்தில் எழுந்த யானையின்தோல் சிவபெருமானுக்கு ஆனதை யாவரும் அறிந்திலர்; தங்கள் வன்மையே பெரி தென்று கருதிய தேவர்கள் பலரும் எண்ணியது போல அந்த வேள்வித் தீயுள், கொலையாகிய ஆபிசாரம் எழுந்தது அன்று என்றவாறு.

முத்தீ – ஆகவனீயம்; காருகபத்தியம். தட்சிணுக்கினி என்பன. தாருகாவனத்தில் கன்மமே பிரமமென் றெண்ணிய எண்ணாயிரம் முனிவர்கள்

இறைவனைப் போற்றாது * இருந்தவம் இயற்றினர், ஆகவே அவர்களுக்கு உண்மை உணர்த்தியவாறு.

அத்தி உரி அரன் ஆவது - யானையின் தோல் சிவபெருமானுக்கு உகந்த போர்வையாவதை. யானைத் தோலைப் போர்த்தும் அழியாமையால் இறைவனுடைய நித்யத்துவம் பெறப்பட்டது என்ற தக்கயாகப்பரணியுரைக் குறிப்பையும் ஈண்டுக்கருதுக.

மூலத் துவாரத்து மூளும் ஒருவனை
மேலைத் துவாரத்து மேலுற நோக்கிமுற்
காலுற்றுக் காலனைக் காய்ந்தங்கி யோகமாய்
ஞாலக் கடவூர் நலமாய் இருந்ததே. 345

இ - னின், காலனை வென்றதன் தத்துவம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: மூலாதாரத்துள் மூண்டெழுகின்ற சோதியாகிய தலைவனை, பிரமரந்திரமாகிய மேலைத் துவாரத்து மேல் பன்னீரங்குலம் உயரத்துள் தரிசித்து. பிராணனாகிய முதற்காற்றையும் நிறுத்தி, யமனை வென்று, அந்த மேலைத்தலத்திலேயே ஆன்மாவாகிய மார்க்கண்டரும் சிவமும் சேர்ந்து, உலகத்தில் கடவூர் என்னுந்தலத்துள் நலம்பொருந்த இருந்த உண்மை இதுவாம் என்றவாறு.

---

*இரும் + தவம், *இருந்து + அவம் எனப்பிரித்து நயங்காண்க.

மூலத்துவாரத்து மூளும் ஒருவனை: மூலா தாரத்தில் உள்ள வழியில். துவாரம் - வழி. மூளும் என்ற குறிப்பால் ஒருவன் என்றுருவகித்தது சோதிவடிவாய சிவத்தினை என்க.

மேலைத்துவாரம் - ஆக மேலுள்ள வழி. அது பிரமரந்திரம். அங்கும், அதற்குமேல் துவாத சாந்தம் வரையும், அதற்குமேலும் தியானிக்க என்பார் மேலைத் துவாரத்தும், மேலும் உறநோக்கி என வேண்டிய வழியும் உம்மை அமைய அருளிய வாறு காண்க.

தசவாயுக்களுள் பிராணன் முதலாவதாகலின் ‘முற்கால்’ எனப்பட்டது. பிராணனை நடுநாடி யின் வழியாகக் குண்டலினியோடு பிரம்ரந்திரம் வரை ஏற்றின் காலனை வெல்லலாம் ஆதலின் இங்ஙனம் கூறினார்.

அங்கு யோகம் குற்றியலிகரம் பெற்றது. அங்கியோகம் எனக் கொண்டு சிவமாகிய சோதி யோடு கலந்து அவனேதானேயாகிய அந்நெறியில் ஏகனாகி நிற்றல் எனலுமாம்.

மார்க்கண்டேயராகிய உயிர் சிவத்தோடு யோக மாக இருந்தமையே காலனை வென்ற வரலாறும் என்ப துணர்த்தியவாறு.

**இருந்த மனத்தை இசைய இருத்திப்**
**பொருந்தி இலிங்க வழியது போக்கித்**
**திருந்திய காமன் செயலழித் தங்கண்**
**அருந்தவ யோகங் கொறுக்கை அமர்ந்ததே. 346**

இம் — எனின், இறைவன் காமனைக் கொறுக்கையில் அழித்த வரலாற்றின் குறிப்பு அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : இறைவன் திருவடிக்கண்ணே வைத்த மனத்தை அங்கேயே அசையாமல் என்றும் இசைய இருத்தி, இலக்கின்வழியே பொருந்தி மேற்போகச் செய்து திருத்தமுற்ற மன்மதன் செயலாகிற இச்சைகளனைத்தையும் அழித்தமையே சிவபெருமான் யாரும் செய்தற்கரிய தவயோகமாகக் கொறுக்கைத் தலத்தில் விரும்பிச் செய்தது என்றவாறு.

இருந்த மனமாவது அலையாது ஒரு பொருளிடமே உறைத்திருந்தமனம். அதனை இசைய இருத்துதலாவது பொருந்திய இடத்திலேயே பொருந்தவிடாது ஆதாரங்களின் வழியே மேற்போதற்குத் தகுதியாக இருத்துதல் இலிங்கம் - குறி: அஃதாவது இலக்கு; ஈண்டு ஆக்ஞையில் செல்லுதலை உணர்த்திற்று.

இச்சைக்கெல்லாம் அதிதெய்வம் காமன்; அவன் செயலை அழித்தலாவது சென்று பற்றும் சிந்தனையை நிறுத்துதல்; இதுவே யோகம், இந்த யோகமூர்த்தியாகவே இறைவன் கொறுக்கை என்னும் தலத்தில் இருந்தார் என்பது கருத்து.

## 3. இலிங்க புராணம்

அஃதாவது திருவருளால் அருட்குறியாகிய திருமேனியைத்தாங்கி எழுந்தருளிய இறைவனது வரலாறு கூறுதல், புராணமாவது தொன்மையாய வரலாறு. இலிங்கம் - அருட்குறி, பதிவ்லிபோல,

இதுவும் இறைவனுடைய வரலாறு கூறுதலின் அதன்பின் வைக்கப் பெற்றது.

அடிசேர்வன் என்னஎம் ஆதியை நோக்கி
முடிசேர் மலைமக ளார்மக ளாகித்
திடமாத வஞ்செய்து தேவர் அறியப்
படியார அர்ச்சித்துப் பத்திசெய் தாளே. 347

இ-ம் - எனின், திருவருட்சத்தி இறைவனைப் பூசித்த வரலாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: சத்தியானவள், எம் முதற்கடவுளாகிய சிவபெருமானின் திருவடியைச் சேருவேன் என்று அவரையே நோக்கி, கொடுமுடிகள் பலவுடைய இமய மலையரசன் மகளாராகி, உறுதியான தவஞ் செய்து தேவர்கள் அனைவரும் தரிசித்து உய்யப் பூமியில் மனமாரப் பூசித்து அன்புசெய்தாள் என்றவாறு.

இறைவனோடு ஒன்றுயுள்ள சத்தி பூமிக்கண்ணுள்ளார் பூசனை செய்யுமாற்றையும் அதன் பயனையும் கண்டு உய்யத் தாம் மலைமகளாகி, அவரையே நோக்கித் தவஞ்செய்து, பூமியில்வந்து பூசித்து அன்பு பூண்டாள் என்பது கருத்து

இது, காஞ்சியில் பாலியாற்றங்கரையில் காமாட்சியம்மை மணலால் சிவலிங்கம்செய்து வழிபட்டமையையும், இமயமலையில் கௌரி சிருங்கம் என்ற உச்சியில் இறைவனையே மணாளனாக அடையவேண்டிக் கடுந்தவம் செய்தமையையும் உணர்த்துவது.

திடமா தவம் என்றது இறைவனே கிழவேதிய ளுகவந்து, சிவபெருமானுடைய பல வரலாற்றைக் குறைத்துக் கூறியும் கலங்காத உறுதியுடன் இருந்தமையை உணர்த்துவது.

தேவரறிய என்றது. காமியப் பூசையையன்றி அடிசேர் ஞானம் அடையப் பூசனை செய்ய வறியாத தேவர்களும் அறிய என்றவாறு.

படி ஆர அர்ச்சித்து - பூமியில் எல்லாவகைகளும் நிரம்பப் பூசித்து ; என்றது இவள்செய்த பூசனையிலேயே உலகம் எல்லா மேன்மையையும் எய்திற்று என்பதாம்.

அடிசேர்வன் என்னப் பத்தி செய்தாள் என்ற இயைபு அடிசேர் ஞானத்தை அடைவிப்பது பத்தி நெறியொன்றே என்று உணர்த்தியவாறு.

**திரிகின்ற முப்புரஞ் செற்ற பிரானை**
**அரியனென் றெண்ணி அயர்வுற வேண்டா**
**புரிவுடை யாளர்க்குப் பொய்யலன் ஈசன்**
**பரிவொடு நின்று பரிசறி வானே.** 348

இ-ம் - எனின், திரிபுரத்தை எரித்த இறைவன் பரிவொடு நின்று அருளும்செய்வார் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : எல்லா அண்டங்களிலும் சுற்றிவருகின்ற முப்புரங்களையழித்த இறைவனை, அடைதற்கு அரியன் என்று எண்ணி அயர்ச்சியுற வேண்டா ; அன்பு உடையவர்கட்கு அவன்

பொய்த்தல் இலன் ; கருணையோடு வெளிப்பட்டு அவர்கள் பரிபாகத்தை உணர்ந்து ஆட்கொள்வன் என்றவாறு.

பகைவர்க்கு அரியனுயினும் அன்பர்க்கு எளியன் என்பது உணர்த்தியவாறு. புரிவு - அன்பு. பரிவு – கருணை, பரிசு – தன்மை.

ஆழி வலங்கொண் டயன்மால் இருவரும்
ஊழி வலஞ்செய்ய ஒண்சுட ராதியும்
ஆழி கொடுத்தனன் அச்சுதற் கவ்வழி
வாழிப் பிரமற்கும் வாள்கொடுத் தானே. 349

இம் - எனின், இறைவன் அரிபிரமாதியர்கட்கு அருள் செய்தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : மலையை வலம்வந்து பிரமனும், திருமாலும் முறையாக வலம்வர, தீப்பிழம்பாய் நின்ற சிவபெருமான், அவ்விடத்துத் திருமாலுக்குச் சக்கரம் அளித்தார் ; பிரமனுக்கு ஒளியைக் கொடுத்தருளினுர் என்றவாறு.

ஆழி – அரியும் அயனும் தாமே பெரியர் எனப் பொருதகாலத்து இருவரிடையே நின்ற அண்ணுமலை.

ஊழி - முறைமை. ஒண்சுடர் ஆதி – ஒளி பொருந்திய தீப்பிழம்பாகிய இறைவன். அச்சுதற்கு ஆழி கொடுத்தனன் என்பது, திருவீழிமிழலையில் திருமால் நாடோறும் ஆயிரம் தாமரைப்பூக் கொண்டு அர்சிக்க, இறைவன் இவர் உறுதியை

உலகினர் கண்டுய்ய ஒரு நாள் ஒருமலர் குறையச் செய்தார்; திருமால் கவன்று தாமரையை ஒத்த தன் கண்களில் ஒன்றைப் பறித்துத் திருவடியில் சாத்தினார்; மகிழ்ந்து இறைவன் ஆழியளித்தார் என்ற வரலாற்றை அடக்கி நிற்கின்றது.

வாள் - ஒளி. அந்தணனாகிய பிரமற்கு, அவன் வழிபாட்டிற்கு இரங்கி, பிரமதேசு அருளிச்செய் தார் என்பதாம். இதனைக் கருவியாகக்கொண்டு மயங்குவாரும் உளர்.

தாங்கி இருபது தோளுந் தடவரை
ஓங்க எடுத்தவன் ஒப்பில் பெருவலி
ஆங்க நெரித்தம ராவென் றழைத்தபின்
நீங்கா அருள்செய்தான் நின்மலன் தானே 350

இம் – எனின், இராவணற்கு அருள் செய்த மையை இயம்புதல் நுதலிற்று.

இ – ள் : இருபதுதோள்களாலும் சுமந்து கயிலை மலையைத்தூக்கிய இராவணனது பெரிய வன்மையை, காற்பெருவிரல் நுனியால் நெரித்து, அவன் அமரா என்று அலறியபின், அநாதி மலரகி தனாகிய இறைவன் அவனுக்கு அருள்வழங்கினான் என்றவாறு.

தாங்கி என்றது கயிலைமலை இவனால் தாங்கக் கூடாததாக இருந்தது என்ற உண்மையை உணர்த்தி நின்றது. அமரா – தேவா! நீங்கா அருள் - என்றும் பிரியாத கருணை.

உறுவ தறிதண்டி ஒண்மணற் கூட்டி
அறுவகை ஆன்ஐந்தும் ஆட்டத்தன் தாதை
செறுவகை செய்து சிதைப்ப முனிந்து
மறுமழு வால்வெட்டி மாலைபெற்றனே. 351

இம் - எனின், சண்டேசற்கு அருள்செய்தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மேல்வரக் கடவதாகிய சிவப் பேற்றை அறிந்த தண்டீசனார், ஒள்ளிய மணலைக்கூட்டிச் சிவலிங்கமாக்கித் தம் பிறப்பறும் வகையில் பசுவினிடமிருந்து பெறும் ஐந்து பொருள்களால் நீராட்ட, அதனைக் கண்ட தமப்பனாகிய எச்சதத்தன் அழிக்கும் வகையில் அதனை அழிக்க, அதற்காகச் சினந்து வேற்று மழுவால் அவன் காலை வெட்டி. இறைவன் சாத்தியிருந்த மாலையைப் பெற்றான் என்றவாறு.

திருச்சேய்ஞலூரிலே வாழ்ந்த எச்சதத்தன் என்னும் அந்தணர்க்கு மகனாகிய விசாரசருமர், பிரமசரிய நிலையில் அந்தணர் ஆன்களை மேய்க்குங்கால், ஆவின் பாலைக்கறந்து மண்ணியாற்றங் கரையில் உள்ள ஆத்தியின்கீழ் மணலால் சிவலிங்கம் தாபித்து வழிபட்டு வந்தனர். ஆ பயன் குன்றுதலை அறிந்த அந்தணர்கள். எச்சதத்தனுக்கு அறிவித்தனர். எச்சதத்தன், மறைந்திருந்து தனது மகன் பூசைக்கு வைத்திருந்த பாற்குடத்தைக் காலால் இடறினன். அதுகண்ட விசாரசருமர் கோபித்துப் பக்கத்தில் இருந்த பசுவோட்டுங்கோலை எடுத்து ஓச்ச அது மழுவாய்த் தந்தையின் காலைத்

தடிந்தது. அதுகண்ட இறைவன் அவருடைய இணையீடற்ற அன்பைத் திருவுளங்கொண்டு அவருக்குச் சண்டேசுரபதவி ஈந்து, ' நாம் சாத்திய மாலையும் நாம் உண்ட அமுதும் பெறுக ' என அருள் செய்தனர் என்பது வரலாறு.

மறுமழு - கோலாயிருந்து மாறிய மழு. மாலை - இறைவன் திருமுடிக்கண் சூடியமாலை.

ஓடிவந் தெல்லாம் ஒருங்கிய தேவர்கள்
வாடி முகம் வருத்தத்துத் தாஞ்சென்று
நாடி இறைவா நமஎன்று கும்பிட
ஈடில் புகழோன் எழுகவென் றானே. 352

இ – ள் ; தேவர்கள் வருத்தத்துடன் வந்து விண்ணப்பிக்க, இறைவன் அருள்செய்தமையை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் ; தன்முனைப்படங்கிய தேவர்கள் ஓடி வந்து முகமும் வாடி வருத்தத்தோடு தேடிச் சென்று, இறைவா! வணக்கம் என்று கும்பிட, ஒப்பற்ற புகழோனாகிய இறைவன் ' எழுக ' என்று ஆசிவழங்கினான் என்றவாறு.

ஓடிவந்து நாடிச்சென்று எனக் கூட்டுக. ஓடி வந்து - தமக்கு அரணாவார் யாருமின்மையின் விரைந்து வந்து. எல்லாம் ஒருங்கிய தேவர்கள் — கருவிகரணங்களின் செயற்பாடும், யாம் தேவர் என்னும் இறுமாப்பும் ஒடுங்கிய தேவர்கள். விஷயங்களிற் சென்று பற்றும் பொறிகளெல்லாம்

ஒன்றுபட்ட தேவர்கள் எனலும் ஆம்; உறுதற்கரியன உற்றகாலத்து முனைப்பு அடங்கி, சிவனன்றி வேறு கதியில்லை என்று எண்ணுவது யாவர்க்கும் இயல்பாதலின் இங்ஙனம் கூறினார்.

வருத்தத்து முகமும் வாடி எனக் கூட்டுக. நெஞ்சங்கடுத்தது முகம் காட்டுமாகலின் மனவருத்தத்தால் முகம் வாடிற்று என்பதாம். துன்பம் மேலெழுந்த காலத்து, தேடப்படும் பொருள் எதிரில் இருந்தாலும் தெரியாமல் தேடச் செய்யுமாதலின் நாடி என்று அருளினர். இறைவா நம சிவாய நம. கும்பிடும் வணக்கமும் தன்முனைப்பு அடங்கியவிடத்தே நிகழ்வதாகலின் கும்பிட்ட தேவர்கள்முன்னே சிவம் வெளிப்பட்டது.

## 4. தக்கன் வேள்வி

அஃதாவது, தேவர்கள் துணைக்கொண்டு தக்கன் செய்த வேள்வியைச் சிவபெருமான் அழித்து அவர்க்கு ஞானம் நல்கியதை அறிவிப்பது. அதிகார இயையும், இதனானே விளங்கும்.

தந்தைபி ரான்வெகுண் டான்தக்கன் வேள்வியை
வெந்தழல் ஊடே புறப்பட விண்ணவர்
முந்திய பூசை முடியார் முறைகெட்டுச்
சிந்தினர் அண்ணல் சினஞ்செய்த போதே. 353

இ - ள்: இறைவன் சினத்தின் பெருமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அனைவர்க்கும் தந்தையும் பிரானுமாய் உள்ள சிவபெருமான் தக்கன் செய்த வேள்வியை வெகுண்டவனாய் யாகத் தீயினின்றும் வெளிப்பட, தேவர்கள் தாங்கள் செய்யமுற்பட்ட பூசையை முடிக்காதவராயினர். அம்மட்டோ ! அவர் சினந்த பொழுதே தடுமாறிச் சிதைந்தும் ஓடினார் என்றவாறு

எல்லாருக்கும் தந்தையாதலின் தந்தை என்றார். பிரான் - வள்ளன்மை உடையவன். தந்தை பிரான் வெகுண்டான் என்றது கொல்ல அல்ல. பொல்லாவினை போக்கிப் புனிதஞானம் வழங்க என்றவாறு. வீரபத்திரக்கடவுள் யாகத் தீயினின்று தோன்றியவுடன் தேவர்கள் பூசையை முடிக்காமல் தெறிகெட்டு ஓடினர் என்பது வரலாறு.

அடித்துத் திருத்தி அறிவுபுகட்டவரும் ஆசானைக் கண்டு அஞ்சியோடும் மாணவன் என்ன பெற்றான் ? அதனையே அமரரும் பெற்றார்கள். என்னே ! இவர் அறிவு இருந்தபடி ! என்று எள்ளியவாறு.

சந்தி செயக்கண் டெழுகின் றரிதானும்
எந்தை யிவனல்ல யாமே உலகினிற்
பந்தஞ்செய் பாசத்து வீழ்ந்து தவஞ்செய்ய
அந்தமி லானும் அருள்புரிந் தானே. 354

இம் – எனின், மால் தாமே முதலென்று மயங்க அவனுக்கு அடிஞானம் அருளியதை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : யாகத்திற்கு சமாதானஞ்செய்ய அறிந்து எழுகின்ற திருமால், "எமக்கெல்லாம் தந்தை இறைவனாகிய இவனல்லன்; யாமே அனைவருக்கும் தலைவன்" என்ன, (அதனால்) உலகத்தில் அனைவரையும் பந்தித்து நிற்கும் பாசத்தில் அகப்பட்டு வருந்திப் பின் அறிவு வந்து தவஞ்செய்ய, ஈறில்லாதவனாகிய இறைவனும் அவன் பரிபாகங்கண்டு அருள் வழங்கினன் என்றவாறு.

'சந்திசெய் கண்டெழு கின்றரிதானும்' என்று பாடங்கொண்டு. சந்தி செய்தலைக்கண்டு திருமாலும் எனப்பொருள் கொள்வாரும் உளர் சந்தி — சமாதானம், எழுகின்ற அரி என்ற பெயரெச்சத்து அகரம் விகாரத்தாற்றொக்கது.

எந்தை இவனல்ல யாமே என்றது மூலமல முனைப்பால் தானே முதல்வன் என்று தருக்கியது. அதனாலேயே அவதாரம் என்ற பெயர் புனைந்து ஊர்வன முதல் தேவர் ஈறான பிறவிகளை எடுத்தான்; அந்தந்தப் பிறவிக்கேற்ற பாசத்துள் அழுந்தினான்; பல்காலும் பயின்றரனைப் பூசித்த பண்பாட்டினால், நல்லறிவு சற்றே நக, நம்பனை நோக்கி நற்றவம் செய்தான் : அவனும் அருள்புரிந்தான் என்பது உணர்த்தப் பெறுகின்றது.

எல்லார்க்கும் ஈறுவிளைத்து தனக்கோரீறு இல்லாதவனாகையால் அந்தமிலான் என்றார். "அந்தமிலான் வரக்கூவாய" என்ற மணிவாசகமு மது, அண்மை தகுதி முதலிய ஏதுக்களின்றி அந்த

மிலான் என்பது இறைவனையே உணர்த்தும் பெயராதல் தெளிவு, இக்கருத்தை வரலாறுகள் கொண்டும் துணிக.

அப்பரி சேயய ஞர்பதி வேள்வியுள்
அப்பரி சேயங்கி அதிசய மாகிலும்
அப்பரி சேயது நீர்மையை யுள்கலந்
தப்பரி சேசிவன் ஆவிக்கின் றனே. 355

இம் - ஏனின், தக்கனார் செய்த வேள்வியிலும் அங்கியாயிருந்து ஆவிக்கின்றவன் சிவனே என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அவ்வண்ணமே, தட்சப்பிரசாபதி செய்த யாகத்துள் அத்தன்மையாக வளர்ந்த தீ வியத்தக்கதாயிருப்பினும் அத்தீயினுள் வெம்மையாகக் கலந்து நின்றே சிவபெருமான் அங்ஙனம் இயங்குகின்றான் என்றவாறு.

அயனார் – ஆர் விகுதி இழிவு குறித்து நின்றது. நரியார் சென்றார் என்புழிப்போல. தக்கன் உபபிரமாக்களில் ஒருவனாதலின் இங்ஙனம் அருளினார். முதற்கண் உள்ள 'அப்பரிசே' என்ற நெஞ்சறி சுட்டு முதல்வனை மதியாது தன்னையே மதித்துத் தருக்கிச்செய்த வேள்வி என்ற பொருள் விளக்கி நின்றது.

அங்கி, இறைவனுடைய அட்டமூர்த்தி சொரூபங்களில் ஒன்றாக இருப்பினும் அதனை ஆணவத்தால் அறியாத தக்கனுக்கு வியத்தகு பொருளாய்

வேருய் இருந்தது என்பார் 'அங்கி அப்பரிசு அதிசயமாகிலும்' என்ருர்.

அது நீர்மையை உள் கலந்து - அவ்வங்கியின் தன்மையுட்கலந்து தீயுள் வெம்மைபோல முழுதும் வியாபகமாய் உள்ளும் புறம்பும் செறிந்து, ஆவிக்கின்ருன் - தோன்றுகின்ருன், ஆவ என்னும் பெயர்ச் சொல்லடியாகப் பிறந்த வினைமுற்று இது. உயிரோடு கூடிக் காணப்படுகின்ருன் என்பது பொருள், உள்ளுணர் பொருளாய் உயிரோடு ஒற்றித்து நிற்கின்ருன் என்பது கருத்து. 'அப்பரிசே அயனு பதி' எனப்பாடங் கொண்டு இப்பொருளே கொள்வாரும் உளர்.

அப்பரி சேஅயன் மால்முதல் தேவர்கள்
அப்பரி சேயவ ராகிய காரணம்
அப்பரி சங்கி யுளநாளும் உள்ளிட்
டப்பரி சாகி அலர்ந்திருந் தானே. 356

இம் - எனின், இறைவன் அங்கியுள் விளக்கம் பெற்றிருத்தலாலேயே அமரர் அனைவரும் ஆக்கத்தை எய்தினர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அவ்வண்ணமே பிரமன் திருமால் முதலிய தேவர்கள் அவ்வவர்கட்கு உரிய பதவிகளில் அவ்வவ்வண்ணம் அவரவர்கள் அமர்தற்குக் காரணம், அங்ஙனமே அங்கி அழியாதிருக்கிற காலம் வரையில் அங்கியினுள்ளாக இறைவன் நீக்கமற நிறைந்து மகிழ்ந்திருந்தான் ஆதலின் என்க என்றவாறு.

அப்பரிசே என்றது அங்ஙனம் சிவன் தமக்குள் ஆவிக்காவியாய் ஆவித்திருத்தலை அறிந்த அயன் மால் முதலிய தேவர்கள் எனக் கூட்டிப் பொருள் கொள்க. அவர் அப்பரிசேயாகிய காரணமென இயைத்து, பிரம விட்டுணுக்கள் அவரவர்கட்கு உரிய தன்மையாகிய படைத்தலாதி தொழிலையும், அதற்குரிய குணங்களையும், மலங்களையும் பெற்றமைக்குக் காரணம் எனப் பொருள்கொள்க.

அங்கியுளநாளும் என்றது இறைவனது அட்ட மூர்த்தங்களுள் ஒன்றாகிய அக்கினியும், அத்தீயினுள் இறைவன் கலந்திருத்தலும் நித்தியமானது என்று அறிவித்தவாறு.

அலர்ந்திருந் தானென் றமரர் துதிப்பக்
குலந்தரும் கீழங்கி கோளுற நோக்கிச்
சிவந்த பரமிது சென்று கதுவ
உவந்த பெருவழி யோடிவந் தானே. 357

இ - ளின், சுழுமுனைத்தியானம் உடையார்க்கு, சிவம் வெளிப்படுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அமரர்கள் இங்ஙனம் மகிழ்ந்திருந்தான் என்று தோத்திரிக்க, மூலாதாரமாகிய இடத்திலுள்ள அக்கினியானது சூரியன் சந்திரன் ஆகிய இருநாடிகளும் இருபாலுற நடுவே சிவந்த மேலிடத்தை நோக்கிச் சென்று பற்றிக்கொள்ள, மகிழ்ச்சியாகிய பெருவழியிலே இறைவன் ஓடி வந்தருளினான் என்றவாறு.

துதித்த அமரர்கள் மூலத்தீயை சுழுமுனை வழியாக மேலேற்றி, பிரமரந்திரத்தைச் சென்று பற்றச் செய்ய, பிரமரந்திரவழியாகப் பெருமான் ஓடிவந்தான் என்பது கருத்து. தக்கன் மூலாதார மாகிய யாககுண்டத்தில் இறைவனை நினையாமல் நினைத்து அங்கியை வழிபட, அது மேல்நோக்கிச் சென்று பரவெளியைப் பற்ற, இறைவன் வெளிப் பட்டான் என்பதை இப்புராண வரலாறு உணர்த்துகிறது.

கீழ் குலந்தரு மங்கி என மாற்றி, ஆறு தாரங் களிற் கீழான மூலாதாரமான இடத்திலிருந்து முளைத்து எழுந்த குண்டலினி எனக்கொள்க. கோளுறநோக்குதலாவது அதற்கு மேலுள்ள ஆதாரங்களில் முறையே சென்று பற்ற வளர்தல். சிவந்தபரம் - சிவந்த மேலிடமாகிய பிரமரந்தரத் தானம். மூலத்தீ உச்சியைச் சென்று பற்ற அமுதம் பெருகி உடல்முழுதும் வியாபித்து உவப்பை உண்டு பண்ணும்; அந்த இன்ப வழியாக இறைவன் ஓடிவந்து அருள்செய்தான் என்பதாம்.

இங்ஙனமன்றி, சிவந்தபரம் என்பதற்குக் கோபித்த பெருமையுள்ள அன்பின் வழியிலே என்று உரைப்பாருமுளர். அது தக்கன் வரலாற் றோடு இயையாமை உணர்ந்து இனியனகொள்க

**அரிபிர மன்தக்கன் அருக்க னுடனே**
**வருமதி வாலை வன்னிநல் இந்திரன்**
**சிரமுக நாசி சிறந்தகை தோள்தான்**
**அரனருள் இன்றி அழிந்தநல் லோரே.** 358

இம் - எனின், தக்கனூர் வேள்வியுள் அங்கம் இழந்த அமரர்கள் இவரிவர் என்றல் நுதலிற்று

இ - ள் : திருமாலும், பிரமனும், தக்கனும், சூரிய சந்திரர்களும், வாலையும், அங்கியும். இந்திரனும், சிரம், முகம், நாசி, கை, தோள் இவற்றைச் சிவனருள் பொருந்தாமையால் இழந்த நல்லவர்கள் என்றவாறு.

தக்கன் சிரத்தையும், பிரமன் முகத்தையும், அக்கினி நாவையும், இந்திரன் தோளையும், ஏனைய தேவர்கள் ஏனைய உறுப்புக்களையும் இழந்தனர் என்பதைப் புராண வரலாறு கொண்டு அறிக.

நல்லோர் என்றது குறிப்பு மொழி. நல் இந்திரன் என்றதுமது. வாலை - கன்னி; யாக சாலையின் காவல் தெய்வம். இளம்பெண் எனப் பொருள் கொண்டு தக்கன் மனைவி என்பாரும், வால் ஐ வன்னி எனச் சொற்சிதைத்து, தூய்மை யான காருகபத்தியம், தட்சிணாக்கினி ஆகவனீயம், சம்ஸப்யம்,, ஆவசத்தியம் என்ற ஐந்து அக்கினி என்பாரும் ஆகப் பலவாறு உரைகூறுவர். இவையவன கொள்க. தோள்தான் என்ற பாடத்தினும் தோள் தாள் என்ற பாடம் சிறந்தது.

**செவிமந் திரஞ்சொல்லுஞ் செய்தவத் தேவர்**
**அவிமந் திரத்தின் அடுக்களை கோலிச்**
**செவிமந் திரஞ்செய்து தாமுற நோக்கும்**
**குவிமந் திரம்கொல் கொடியது வாமே.** 359

இ-ம் - எனின், தேவர்கள் செபிக்கத்தக்க மந்திரம் இதுவென்று உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: செபிக்கத்தக்க மந்திரங்களைச் சொல்லும் தவத்தினைச்செய்த தேவர்கள், வாயவிந்த மந்திரமாகிய ஊமை யெழுத்தால் மூலாதாரத்தில் உள்ள அடுப்புக் கூட்டைக்கட்டி, செவிபோன்ற மந்திரமாகிய பிரணவத்தைச் செபித்து, தாம் பொருந்த நோக்குகின்ற மன மொருங்குதற்குக் காரணமாகிய அசபாமந்திரமோ கொடியது ஆகும்? நல்லதேயாம் என்பது கருத்து.

செவிமந்திரம்-செபிக்குமந்திரம். அவிமந்திரம் - பேசா எழுத்தாகிய பிரணவம். பிரணவத் தியானத்தால் அடுப்புக்கோலி, அதில் மூண்டெழு கனலை அசபையால் மேலேற்றினால் எத்தீமையும் இயையாது என்று உண்மை உணர்த்தியவாறும். 'கால் கொண்டு கட்டிக் கனல்கொண்டு மேலேற்றி' என்றதும் ஈண்டு இயைத்துக் காண்க. குவிமந்திரம்-மனங்குவிதற்குக் காரணமாகிய அசபை. கொல்; ஐயப்பொருளது.

நல்லார் நவகுண்டம் ஒன்பதும் இன்புறப்
பல்லார் அமரர் பரிந்தருள் செய்கென
வில்லாற் புரத்தை விளங்கெரி கோத்தவன்
பொல்லா அசுரர்கள் பொன்றும் படிக்கே. 360

இ-ம் - எனின், அமரர்கள் வேண்ட அசுரரைக் கொன்று இறைவன் அருள்வழங்கினன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நன்மை அமைந்த ஒன்பது குண்டங்களும் இன்பமெய்தப் பலதேவர்கள் 'அடியேங்கட்கு இரங்கி அருள்செய்யவேண்டும்' என்று வேண்டிக் கொள்ள, கொடிய அரக்கர்கள் அழியும் வண்ணம் மேருமலையாகிய வில்லினால் முப்புரங்களையும் தீக் கொளுவச் செய்தனன் என்றவாறு.

நல் ஆர் நவகுண்டம் : வேள்விக்கு ஏற்ப நவகுண்டம் என நவத்துவாரங்களையும் குறிப்பித்தவாறும். அவைகள் ஒன்பதும் தத்தம் தொழிலைச் செய்து முறைபிறழாது இன்புற்றிருக்க அருள் செய்க எனத் தேவர்கள் வேண்டிக் கொண்டனர்; இறைவன் அதற்கிடையூறாக இருந்த அசுரர்களையழித்து அருள் வழங்கினார் என்பது கருத்து.

தெளிந்தார் கலங்கினும் நீகலங் காதே
அளிந்தாங் கடைவதெம் ஆதிப் பிரானை
விளிந்தா னதுதக்கன் வேள்வியை வீயச்
சுளிந்தாங் கருள்செய்த தூய்மொழி யானே. 361

இம் - எனின், சரணமாக அடையத் தக்கவனை அடைக என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : தக்கன் அழிந்தான்; அவன் செய்த வேள்வியைக் கோபித்து அழித்துப் பின்னர். அநாதி நித்திய சுத்தனாகிய இறைவன் அருள் வழங்கினான். இதனையறிந்து மகனே ! தெளிந்தவர்கள் கலங்கினும் நீ கலங்காதே ! அன்புகூர்ந்து நீயுடைவது முழுமுதற் கடவுளாகிய சிவனையேயாம் என்றவாறு.

தெளிந்தார் என்றது குறிப்புமொழி. வேதங்களை யோதித் தெளிந்தவர்கள் என்று தம்மைத் தாமே எண்ணிக்கொண்டு அகங்கரித்திருக்கும் பிரமன் தக்கன் முதலியோர் என்பது.

அளிந்து ஆங்கு அடைவது – இறைவன் அளிபவர் உள்ளத்து ஆனந்தக் கனியாய் அடைய வருதலின் நீ மனம் கனிந்து அடைய வேண்டுவது அவனையே என்க.

தக்கன் விளிந்தான் எனக் கூட்டி அது அசையாக்குக. அன்றி விளிந்தான் தக்கனது வேள்வியென உருபு பிரித்துக் கூட்டுதலும் ஆம்.

தூய்மொழியான் - வேதமொழியன். "வேத மொழியினர் அன்னேயென்னும்" என்னும் மணிவாசகம். சுளிதல் - சினத்தல்.

## 5. பிரளயம்

அஃதாவது, ஆன்மாக்கள் அனைவரும் கறங்கும் சகடமும்போன்ற சுழல்கின்ற நிலையிலிருந்து சற்றே இளைப்பாறச் சர்வசங்கார கிருத்தியம் செய்வதாம்.

கருவரை மூடிக் கலந்தெழும் வெள்ளத்
திருவருங் கோவென் றிகல இறைவன்
ஒருவனும் நீருற ஓங்கொளி யாகி
அருவரை யாய்நின் றருள்புரிந் தானே 362

இம் – எனின், பிரளயகாலத்து இறைவன் ஒருவனே சேட்மாய் நின்றமை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்; கரிய மலைகளும் மூழ்க எங்கும் பரந்தெழுகின்ற பேரூழிவெள்ளத்தில், மாலும் அயனுமாகிய தேவரிருவரும் கோ என்று மாறுபட்டுக்கதற, சிவபெருமானொருவனே ஊழிவெள்ளத்தில் மிகவுயர்ந்தோங்கிய ஒளிவடிவாகி மலையாய் நின்று அருள் வழங்கினன் என்றவாறு.

கருவரை மூடிக் கலந்தெழும் வெள்ளம்: "பார் கொண்டு மூடிக் கடல்கொண்ட ஞான்று நின்பாதமெல்லாம்" என்ற சேகாழித் திருவிருத்தத்தை நினைவூட்டுதல் காண்க.

இருவரும் கோ என்று இகல - படைத்தோன் காப்போன் என்று அதிகாரத்தான் மயக்குற்ற இருவரும் கோவென்று மாறிமாறிக் கத்த, இகலுதல்-மாறி ஒலித்தல், கோ: அச்சத்தால் விளையும் ஒலிக்குறிப்பு, அதுவும் நாங்கள் தலைவரல்லர் கோவொருவன் உளன் என்ற உண்மை உணர்ந்து கத்தினர் என்று கொள்ளுதலுமாம்.

ஒருவனும் என்றது இரண்டாமவன் இல்லை என்று வலியுறுத்தியவாறு. நீர் உற ஓங்கொளியாகி-நீரும் ஒளியும் தம்முள் மாறுபட்டவையாயினும் இறைவனே எல்லாப் பூதமுமாயிருத்தலின் இரண்டுமாய் இயைந்து நின்றனன் என்க.

**அலைகடல் ஊடறுத் தண்டத்து வானோர்**
**தலைவன் எனும்பெயர் தான்றலை மேற்கொண்**
**டுலகார் அழற்கண் டுள்வீழா தோடி**
**அலைவாயில் வீழாமல் அஞ்சலென் றானே. 363**

இம் - எனின், ஊழிக்காலத்து எஞ்சி நின்று அபயம் அளிப்பவன் இறைவன் ஒருவனே என்பது நுதலிற்று.

இ - ள் : அலைகளோடு கூடியதான கடலையும் ஊடறுத்து உயர்ந்து, வானவர்கள் தலைவன் என்னும் சிறப்புப்பெயரைத் தாங்கிநின்று. உலகம் முழுதும் நிறைந்து நிற்கின்ற ஊழித்தீயைக் கண்டு அதனுள் தாமும் வீழ்ந்து ஒழியாதபடி, எஞ்சிநின்ற ஏனையோரையும் அவரவர்கள் காலவெல்லைக்குத் தக துன்பக் கடலில் வீழாவண்ணம் அபயம் அளித்தான் இறைவன் என்றவாறு.

இம்மந்திரம் தீயூழியினும் இறைவனே காப்பன் என்றது. அலை - துன்பம்.

**தண்கடல் விட்ட தமரருந் தேவரும்**
**எண்கடல் சூழெம் பிரானென் றிறைஞ்சுவர்**
**விண்கடல் செய்தவர் மேலெழுந் தப்புறங்**
**கண்கடல் செய்யுங் கருத்தறி யாரே.** 364

இம் - எனின், அமரரின் அறியாமை இருந்தபடி என்னே ! என்று வியந்துரைத்தல் நுதலிற்று.

இ - ள் : அமரர்களுந் தேவர்களும் எண்ணமாகிற கடலாற் சூழப்பட்ட எம்பிரானை, குளிர்ந்த கடல் தன் எல்லையை விட்டதாகப் பொங்கிற்றே என்செய்வோமென்று இறைஞ்சுவார்கள். விண்ணளவும் கடல் மேலெழுந்து வரச்செய்த இறைவனை அதன்பிறகு எண்ணிக் கண்களைக்,

கடல்போல அவர்மேற் செலுத்தும் கருத்தை அறியாராயினர்; இவர் அறிவு இருந்தபடி என்னே! என்றவாறு.

கடல் பொங்கித் துன்பம் வந்தகாலத்திறைஞ்சுகின்ற தேவர்கள் அங்ஙனம் வரச்செய்த இறைவனை அப்புறம் காணும் கருத்து அறியாராயினர் என்பது கருத்து. எண் கடல் - அன்பர் எண்ணமாகிற கடல். அதனாற் சூழப்பட்ட பெருமான் என்றபடி.

கண் கடல் செய்தல் - காதலாகிக் கசிந்து கண்ணிலிருந்து நீரைக் கடல்போலப் பெருக்குதல். நோய்க்கு மருந்துண்டல்போல, துன்பமானது வந்தகாலத்துத் தோத்திரித்து உண்மை அன்பு செய்யும் உபாயம் அறியகில்லார் என்றவாறு.

அமரர் - இறவாமையைப் பெற்றவர்கள். தேவர் - தெய்வத்தன்மை உடையார். இருவரும் வானுலகத்து வசிப்பவராயினும் வேறுவர். அமரரும் தேவர் எனப் பிரித்து கடல் கரைகடந்தமையால் இருத்தற்கு முடியாத தேவர்கள் எனலும் ஆம்.

சமைக்கவல் லானைச் சயம்புவென் றேந்தி
அமைக்கவல் லாரிவ் வுலகத்து ளாரே
திகைத்ததெண் ணீரிற் கடலொலி ஓசை
மிகைக்கொள அங்கி மிகாமைவைத் தானே. 365

இ - ள். இறைவனை உள்ளவாறுணர்ந்து போற்றுவார் உலகத்துள் யாவர்? என்று வினவுதல் நுதலிற்று.

இ - ள் : அனைத்துயிரையும் பரிபாகப்படுத்த வல்ல இறைவனைத் தோற்றமில்லாதவன் என்று தோத்திரித்து மனத்துள் மன்னிய பொருளாக அமைத்துக்கொள்ள வல்லவர்கள் இவ்வுலகத்துள் யார் ? அனைவரும் திகைப்பதற்கு ஏதுவாகிய தெளிந்த நீரை உடைய கடலில் ஒலியும் ஓசையும் மிக எல்லை கடவாதபடி வடவைத்தீயை அதனுள் வைத்தான் ; அவன் அருள் இருந்தபடி இது என்றவாறு.

சமைக்கவல்லான் - சிருட்டிக்க வல்லான் எனலும் ஆம். இறைவன் ஆன்மாக்கள் அனைத்தை யும் ஒருசேரப் பரிபாகப்படுத்த மேற்கொள்ளுந் தொழில் சங்கார கிருத்தியமாதலின், அதனைச் செய்யவல்லவன் தோற்றமும் ஈறுமில்லாத் தொல்லோனாக இருத்தல் வேண்டும் என்பார் சயம்பு என்றார்.

சயம்பு - சுயம்பு என்பதன் திரிபு, ஏனை யோரைப் போல வினைவயத்தான் தோன்றாது தமது சங்கற்பத்தின்படி தானே தோன்றியவன் எனச் சிவபரத்துவம் குறித்தவாறு. ஒலி, எழுத் தொலிபோலப் பொருள் விளங்கக் காரணமா யிருப்பது, ஓசை அதற்கு மாறானது. 'ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே' என்ற அப்பர்சுவாமிகள் திருவாக்கையும் ஈண்டு இணைத்து நோக்குக

கடல்தன் எல்லை கடவாமலிருக்கப் பெண் குதிரையின் முகத்திலிருந்து உண்டான பெருந்

தீயைக் (வடவாமுக அக்கினியை) கடலுக்குள் அமைத்தான் அரன் என்றவாறு.

பண்பழி செய்வழி பாடுசென் றப்புறங்
கண்பழி யாத கமலத் திருக்கின்ற
நண்பழி யாளனை நாடிச்சென் றச்சிரம்
விண்பழி யாத விருத்திகொண் டானே. 366

இம் - எனின், அயனூழியில் அயனை அழித்து அவன் சிரத்தை அங்கை ஏற்றமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பண்பழிந்ததும் செய்யப்படுவது மாகிற வழிபாட்டால் அப்புறம்போய், கண்ணைப் பழியாத கமலமாகிய வெண்டாமரையிலிருக்கிற நண்பு கெட்டவனாகிய பிரமனைத் தேடிச்சென்று, அவனுடைய அந்தத்தலையை விண்ணவர்யாரும் பழித்துக்கூறாத சீவனோபாயமாகத் தமது திருக் கையில் கொண்டான் இறைவன் என்றவாறு.

பண்பு அழி செய் வழிபாடு - விதிமுறையாகிய பண்பை அழித்தலைச் செய்கின்ற வழிபாடு என்றது மாம். 'செய்தப்புறம்' எனவும் பாடம், செந்தா மரை யாவர் கண்ணுக்கும் ஒப்பாய் அதனைப் பழிக்கும் இயல்பிற்றாதலின் பிரமனிருக்கும் வெண்டாமரை கண்பழியாத கமலமாயிற்று.

நண்பு அழியாளன் - நட்பினைக் கொல்லும் நன்றியிலாளன், சிரம் விருத்திகொண்டான்

என்பது பிரம கபாலத்தைப் பிச்சைப்பாத்திர மாகக் கொண்டான் என்ற வரலாற்றை அடக்கியது. விருத்தி - பிழைப்பு.

## 6 சக்கரப்பேறு

அஃதாவது, திருமாலுக்குச் சக்கரம் அருளிச் செய்ததை உணர்த்துவது, அயனுக்கு அருள் புரிந்ததை அறிவித்தபின் அரிக்கு அருள்புரிவதை அறிவித்தலின் மேலதனோடு இது இயைபுடைத் தாயிற்று.

மால்போ தகனென்னும் வண்மைக்கிங் காங்காரம்
கால்போதங் கையினோ டந்தரச் சக்கரம்
மேல்போக வெள்ளி மலைஅம ராபதி
பார்போக மேழும் படைத்துடை யானே. 367

இம் - எனின், திருமாலை அகங்காரம் அடக்கி ஆட்கொண்டமை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : திருமால், குரு என்னும் வண்மையால் அகங்காரத்தை வெளிப்படுத்திய காலத்து, அவர் திருக்கரத்திலுள்ள மேலாகிய சக்கரமானது மேலெழுந்து போகவும் உலகமேழினும் செல்லவும் பணித்தான் வெள்ளிமலைக்கண் அமர்ந்த தலைவனாகிய சிவபெருமான் என்றவாறு.

போதகன் - உபதேச குரு. திருமால் உபதேச குரு எழுவரில் ஒருவனாதலை, " திருமாலிந் திரன் பிரமன் உபமனியன் தபனநந்தி செவ்வேளாகித், தருமமுது குரவருக்கும் தனதருளா லாசிரியத் தலைமை நல்கி " எனவருஞ் செய்யுளானறிக.

ஆங்காரம் கால்போது - அகங்காரத்தை வெளிப் படுத்தியபோது. காலுதல் - வெளிப்படுத்தல். அங்கையினோடு அந்தரச் சக்கரம் - என்றும் அங்கையை விட்டுப்பிரியாத மேலான சக்கரம். அந்தரம் - மேல். சக்கரம் மேல்போக, ஏழ்பாரும் போக ஆபதிப்படைத் துடையான் எனக்கூட்டுக. ஆபதி - ஆன்மாக்கட்குத் தலைவன்; பசுபதி என்க.

சக்கரம் பெற்றுநல் தாமோ தரன்தானும்
சக்கரந் தன்னைத் தரிக்கவொண் ணாமையால்
மிக்கரன் தன்னை விருப்புடன் அர்ச்சிக்கத்
தக்கநற் சத்தியைத் தான்கூறு செய்ததே. 368

இ - ள்: திருமாலும் சக்கரத்தைப் பெற்று அதனைத் தரிக்கமாட்டாமையால் இறைவனை அன்போடு அருச்சிக்க, இறைவன், தன் வல்லமை யைத் தான் பகிர்ந்து கொடுத்தான் என்றவாறு.

இம் - எனின், சக்கரத்தைத் தாங்கும் வன்மையும் இறைவனாற் பெற்றதேயென்று அறிவித்தல் நுதலிற்று.

கூறது வாகக் குறித்துநற் சக்கரம்
கூறது செய்து கொடுத்தனன் மாலுக்குக்
கூறது செய்து கொடுத்தனன் சத்திக்குக்
கூறது செய்து தரித்தனன் கோலமே. 369

இம் - எனின், மாலுக்கும் சத்திக்கும் கூறுசெய்து கொடுத்தமையை உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : திருமாலுக்கு, நல்ல சக்கரத்தைத் தனது அம்சமாகப் படைத்துக் கொடுத்து அதனைத் தாங்க வல்லமையையும் கூறுசெய்து கொடுத்தார், தமது சத்தியாகிய உமாதேவிக்கு, தனது திருமேனியைப் பங்கிட்டுக் கொடுத்தார். தனது அபின்னமாகிய சத்தியை வேறாகப்பிரித்து அதற்கு வடிவமும் தந்தருளினர் என்றவாறு.

சக்கரம் சங்காரத்தைச் செய்வதாகலின் தன்னுடைய கூறாகத் திருவுளத்தில் எண்ணி அதனைப் படைத்து அரிக்கு அளித்தார். அதனைத் தாங்கும் ஆற்றலையும் தன்னிற் பிரித்து அவனுக்கே அளித்தார். அங்ஙனமே உமாதேவியாருக்கு, தன் திருமேனியைக் கூறுசெய்து இடப்பாகத்தைக் கொடுத்தார். சத்தியை வேறாகப் பிரித்து, வடிவுந் தாங்கினார் என்பது கருத்து. சத்தியையும் மாலையும் இணைத்துக் கூறியது திருமால் இறைவற்குப் புருஷாகாரமான சத்தியாதலின். " அரியலால் தேவியில்லை " என்பதுமது.

தக்கன்றன் வேள்வி தகர்த்தநல் வீரர்பால்
தக்கன்றன் வேள்வியில் தாமோ தரன்தானும்
சக்கரந் தன்னைச் சசிமுடி மேல்விட
வக்கி உமிழ்ந்தது வாயுக் கரத்திலே. 370

இ - னின், சக்கரமும் சங்கரனின் திருமுன்பு வலியற்றமை உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : தக்கன் யாகத்தை அழித்த நல்வீரரும், சந்திரனைச் சூடியவருமாகிய வீரபத்திரரது முடியின்

மேல் தாமோதரன் சக்கரத்தைச் செலுத்த. அது அவருடைய திருவாயினின்று பிறந்த உங்காரத் தாலேயே நாணித் தனது வலிமையைக் கக்கியது என்றவாறு.

வேள்விதகர்த்த சகியாகிய நல்வீரர்பால் முடிமேல் சக்கரந்தன்னைவிட என இயைத்துப் பொருள்காண்க. உக்கரம் - உங்காரம்; அதட் டொலி, அஸ்திரமந்திரத்தின் பீஜம் உங்கார மாதலாலும், அது அகோரமந்திரத்தின் பீஜமாத லாலும் எந்த மற்றப் படையையும் வெல்லும் வலியை உடைத்தாயிற்று. வக்கி - வட்கி; நாணி.

## 7. எலும்பும் கபாலமும்

அஃதாவது, சிவனே தேவதேவன் என்பதை விளக்க. அழிந்த அயன் அரி முதலிய தேவர் களுடைய எலும்பு முதலியவற்றை அணிந்திருக் கிறான் என்று தெரிவிக்கின்றது.

எலும்பும் கபாலமும் ஏந்தி எழுந்த
வலம்பன் மணிமுடி வானவ ராதி
எலும்பும் கபாலமும் ஏந்தில ணுகில்
எலும்பும் கபாலமும் இற்றுமண் ணுமே. 371

இம் - எனின், இறைவன் என்புமாலை அணிந்த தன் பயன் அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : எலும்பையும் கபாலத்தையும் அணிந்து தோன்றிய வீரருள் வீரனும், மணி முடியை அணிந்த தேவர்க்கெல்லாம் முதல்வனும்

ஆகிய இறைவன் எலும்பையும் கபாலத்தையும் அணிந்திலனாகில் அவை இற்று மண்ணாகிப் போயிருக்கும் என்றவாறு.

சிவன் அணிந்தமையால் அவையேனும் அழியாமலிருந்து ஊழூழிக்காலத்தும் அயனரியாதியோர் இருந்தனர் என அறிவிப்பதோடன்றி, இப்போது இருக்கிற தேவர்கட்கும் நிலையாமையை உணர்த்தி, தலைவனை உணர்ந்து தான் தலைப்பட்டு உய்ந்துபோங்கள் என உணர்ச்சி ஊட்டியும் நிற்கிறது.

## 8. அடிமுடிதேடல்

அஃதாவது, இவ்வண்ணம் எல்லோருடைய என்பையும் கபாலத்தையும் அணிந்து ஈறிலான் தான் ஒருவனேயென்று இறைவன் காட்டி நின்றும், அயனும் மாலும் அவனுடைய அடியையும் முடியையும் தேட முற்பட்ட அறியாமையைப் பற்றிக் கூறுவது, அதிகார முறைமையும் இதனானே விளங்கும்,

பிரமனும் மாலும் பிரானேநான் என்னப்
பிரமன்மால் தங்கள்தம் பேதமை யாலே
பரமன் அனலாய்ப் பரந்துமுன் நிற்க
அரனடி தேடி அரற்றுகின் றாரே. 372

இம் - எனின், நானே முதல் என்ற மாலுக்கும் அயனுக்கும் இறைவன் உண்மை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பிரமனும் திருமாலும் நானே தலைவன் என்று தமது அறியாமையால் தம்முள் மாறுபட, பரமன் அனல் மலையாய் எங்கும் பரவி இவர்களுக்கு முன்னிற்க; அதனையும் உணர்ந்து போற்றாது இறைவன் திருவடியைத் தேடிப் புலம்புகின்றனரே; என்னே அறியாமை என்றவாறு.

அடிதேடி எனவே உபலக்கணத்தால் முடியும் கொள்ளப்படும். முடியாத செயலை மேற்கொண்டது அவர்களுக்கு இருந்த ஆணவமலத்தின் ஆற்றலால் என்பது.

ஆமே முலகுற நின்றஎம் அண்ணலும்
தாமே முலகில் தழற்பிழம் பாய்நிற்கும்
வானே முலகுறும் மாமணி கண்டனை
நானே அறிந்தேன் அவனருண்மை யாலே. 373

இம் - எனின், எல்லா உலகும் வியாபித்து நின்ற இறைவனை அவனருளாலே காணலாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் ; ஆகிய வானமாகிய மேல் ஏழுலகங்களிலும் தீமலையாய் நின்ற எமது இறைவனை அடியேன் அவன் தந்த அருளாண்மையால் அறிந்தேன் என்றவாறு.

மால் அயன் முதலியவர்கள் தமக்கு அவ்வாண்மையிலாமை அறியமாட்டார் ஆயினர். "காண்பார் ஆர் கண்ணுதலாய் காட்டாக்காலே" என்பதும் ஓர்க. சர்வவியாபியாய்நின்ற இறைவனை

அவனருட்கண்ணால் காணலாம் பேறு எம்போன்ற பச்குவான்மாக்களுக்கே உளதாவதாம் என்பது கருத்து.

ஊனாய் உயிராய் உணர்வங்கி யாய்முன்னம்
சேணாய்வா னோங்கித் திருவுரு வாய்அண்டத்
தாணுவும் ஞாயிறும் தண்மதி யுங்கடந்
தாண்முழு தண்டமு மாகிநின் றானே 374

இம் - எனின், அங்ஙனம் எல்லா உலகும் தானேயாய் நின்ற பெருமானே, ஊனாயும் உயிராயும் உணர்வாயும் இப்பிண்டத்துள்ளும் இருப்பவன் என்றல் நுதலிற்று.

இ - ள் : மாலும் அயனும் மாறுபட்ட அந்தக் காலத்தே தூரத்திலுள்ள பொருளாய் ஆகாயமளாவி அண்ணாமலையாய் நின்ற அப்பெருமானே. அண்டங்கள் எல்லாம் நிலைபெறுதற்கேற்ற தம்பமாயும், அதனைச் சுற்றிவருகின்ற சூரியன் சந்திரன் இவர்களைக் கடந்து எல்லா அண்டங்களையும் ஒருசேர ஒருகாலத்தே ஆளும் பொருளாயும் உடலாயும், அவ்வுடலுள் உயிராயும், உயிர்க்குள் உணர்ச்சியாயும் தீயாயும் நின்றான் என்றவாறு.

தாணு - ஸ்தாணு என்பதன் திரிபு. தண்டவடிவான அவியக்த வடிவு.

இம்மந்திரம் முதல் 'ஊழி வலஞ்செய்' என்னும் மந்திரம் வரையிலுள்ள பகுதியைச்

சர்வோபதானம் எனச்சில பிரதிகள் தெரிவிக்கின்றன.

நின்றான் நிலமுழு தண்டத்துள் நீளியன்
அன்றே யவன்வடி வஞ்சின ராய்ந்தது
சென்றார் இருவர் திருமுடி மேற்செல
நன்றாங் கழலடி நாடஒண் ணாதே. 375

இம் - எனின், திருவடிகளும் திருமுடியும் தேடத் தேடச் சேணாயின என்றல் நுதலிற்று.

இ — ள் : நிலமுதலான அண்டங்கள் முழுதிலும் நீண்டு நின்றான் இறைவன்; அன்றே அவன் திருமேனி யிருந்தபடியைக் கண்டு அஞ்சியவர்களாக, அதனை ஆராய்ந்து சென்றனர் மால் அயனாகிய இருவரும்; அப்போது திருமுடி மேன்மேற்செல்ல, திருவடியும் அவர்களால் காண வொண்ணாத தாயிற்று என்றவாறு.

தற்போத முனைப்பால் அவ்விருவரும் இடந்தும் பறந்தும் செல்ல, அடிகளும் முடியும் அப்பாலைக் கப்பால் ஆயின என்பதாம்.

சேவடி ஏத்துஞ் செறிவுடை வானவர்
மூவடி தாவென் றானும் முனிவரும்
பாவடி யாலே பதஞ்செய் பிரமனும்
தாவடி யிட்டுத் தலைப்பெய்து மாறே. 376

இம் — எனின், தேவர் முனிவர் முதலானோரும் தேடிக் காணவொண்ணாச் சீர்த்தியது எனத் திருவடிப் பெருமை தெரிவித்தல் நுதலிற்று.

இ - ள் : சிவந்த திருவடியைத் தோத்திரிக்கும் கூட்டமான தேவர்களும், மாவலிபாற் சென்று மூவடி மண் இரந்த திருமாலும், முனிவர்களும், வேதமாகிய பாக்களின் அடியாலே பதமந்திரங்களைச் சொல்கின்ற பிரமனும், தம்முள் தாம் பெரியர் எனப் பொருதும் அவரைக் கூட முடியுமோ ! முடியாது என்றவாறு.

பசுபோத முனைப்பொழிந்து அருள் வெள்ளத்துப் புணைபோல அவசமானாலன்றிச் சண்டையால் அண்ட முடியாதவன்அண்ணாமலையான் என்றபடி. தாவடி - ஆயிரம் மக்கள் தாவடி போயினார் என்புழிப்போலப் போர் என்னும் பொருளது.

தானக் கமலத் திருந்த சதுமுகன்
தானக் கருங்கட லூழித் தலைவனும்
ஊனத்தின் உள்ளே உயிர்போல் உணர்கின்ற
தானப் பெரும்பொருள் தன்மைய தாமே. 377

இம் - எனின், முத்தேவர் தேவர்களும் முதல்வன் தன்மையர் ஆவரோ என்றல் நுதலிற்று.

இ - ள் : சிறந்த இடமாகிய தாமரையிலிருந்து விளங்குகின்ற நான்முகனும், செருக்கோடு கூடிய கருங்கடலைப் படுக்கையாகக் கொண்ட நாராயணனும், ஊழிகட்கெல்லாம் தலைவனாகிய உருத்திரனும், ஊனாய் அதனுள் உயிராய் உயிருள் உணர்வாய் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்கின்ற அந்தப் பரம் பொருளின் தன்மையர் ஆவரோ ? ஆகார் என்றவாறு.

தானம் - சிறப்புமாம். கருங்கடல் தலைவனும் ஊழித்தலைவனும் எனப் பிரித்துக் கூட்டுக. ஊனத்துள்ளே உயிர், ஒன்றாய் நிற்றற்கும். உயிருள் உணர்வு, உடனாய் நிற்றற்கும் ஓதப்பெற்றது. தான்; அசை. ஆமே - ஏகாரம் எதிர்மறை; அங்ஙனமன்றி ஈற்றசையாகக் கொண்டு, பரம்பொருளின் தன்மையதன்றித் தனக்கென்ற தனித்தன்மை உடையவரல்லர் எனவும் பொருள் கொள்ளலாம்.

ஆலிங் கனஞ்செய் தெழுந்த பரஞ்சுடர்
மேலிங்ஙன் வைத்ததோர் மெய்ந்நெறி முன்கண்
டாலிங் கனஞ்செய் துலகம் வலம்வரும்
கோலிங் கமைஞ்சருள் கூடலு மாமே. 378

இ-ம் — எனின், உண்மைநெறியை உணரின் அவனருளைக் கூடலாம் என்பதறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : அண்டங்கள் அனைத்தையும் தழுவி நிற்கும் தனிவடிவாகிய பரம்பொருள், ஆன்மாக்களுக்காக இவ்வண்ணம் அருளிவைத்த உண்மைநெறியை ஆராய்ந்தறிந்தால், உலகமனைத்தினும் கலந்து உலாவி வருகின்ற பிருதிவியாதி பஞ்சபூத இலிங்களின் அருளைக் கூடலாம் என்றவாறு.

இங்ஙன் வைத்ததோர் மெய்ந்நெறி என்றது தன் அநுபவத்தில் கைவந்த இன்பத்தை உட்கொண்டு உரைத்தது. கோலிங்கம் ஐஞ்சு - பிருதிவிலிங்கமாகிய வன்மீகலிங்கமும், அப்புலிங்கமாகிய ஆனைக்காவலண்ணலும். தேயுலிங்கமாகிய

அண்ணுமலையும், வாயுலிங்கமாகிய காளத்தியப் பரும், ஆகாயலிங்கமாகிய திருமூலத்தானரும் ஆகிய ஐந்து இலிங்கங்கள். அன்றி ஈசாஞதி பஞ்சப்பிரம லிங்கங்களுமாம்

வாள்கொடுத் தானை வழிபட்ட தேவர்கள்
ஆள்கொடுத் தெம்போல் அரனை அறிகிலர்
ஆள்கொடுத் தின்பங் கொடுத்துக் கோளாகத்
தாள்கொடுத் தானடி சாரகி லாரே. 379

இ‌ம் — எனின், தேவர்கள் எம்போல் சிறப்பிலர் என்றறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : தமக்கு ஒளிதந்த இறைவனை வழிபட்ட தேவர்கள். அடிமையாக அளித்த எம்மைப்போல இறைவனை அறியமாட்டார்கள். தன்னையே எமக்கு ஆளாகவும் கொடுத்து, சிவபோகத்தையும் அளித்து. நாங்கள் அறிந்து கடைத்தேறப் பற்றுக்கோடாகத் திருவடியையும் கொடுத்த இறைவன் திருவடியைச் சாரமாட்டார் ஆயினர் என்றவாறு.

வாள் - ஒளி, தேவர் என்பதற்கே ஒளியான் திருமேனியுடையவர்கள் என்பது பொருள். அங்ஙனம் அவர்கள் ஒளிமேனி படைத்தது அவனருளால்தான் என்பதை மறந்து முறையறியாது முனைப்படங்காது வழிபட்ட தேவர்கள் என்பதாம்.

ஆள்கொடுத்து - அடிமையாக ஆத்மார்ப்பணம் செய்து, எம்போல்- 'மீளாவடிமை உமக்கேயாளாய்' என்ற நிலையில் முனைப்பொழிந்த எம்போல், அரனை

ஆன்மாக்களாகிய நாங்கள் அறியுமாறு தனி முதல்வன் அவன் ஆணைவழி நடப்பவர்கள் நாங்கள். அவன் உணர்த்த உணர்கிறோம். ஊட்ட உண்கிறோம் என்று உணர்தல். தேவர்கள் அறியுமுறை தம்முள் ஒருவனாகத்தருக்கித் தலைவனையுணர்தல். மீளா ஆளான அடியேங்களுக்கு அவன், தன்னை ஆளாகவும் கொடுத்து இன்பமும் எய்தவைக்கிறான். அடியார்க் கெளியனாதலின் அங்ஙனம் இன்பங் கொடுத்தபோது ஆன்மாக்கள் இன்பக்களியால் 'எங்கே காரணராகிய தன்னை மறந்து தடுமாறுவரோ; வாசனைதாக்கி வலிகுன்றுவரோ' என்ற எதிர்நோக்கால் பற்றுக் கோடாகத் திருவடியையும் தந்துதவினான் என்ற வள்ளன்மை அறிந்து இன்புறுதற்குரியது.

ஊழி வலஞ்செய்தங் கோரும் ஒருவற்கு
வாழி சதுமுகன் வந்து வெளிப்படும்
வீழித் தலைநீர் விதித்தது தாவென
ஊழிக் கதிரோன் ஒளியைவென் றானே. 380

இ-ம் – எனின், ஊழிகண்ட முதல்வற்குப் பிரமனாதியர் தோன்றுவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : ஊழியை உண்டாக்கி வெற்றிகண்ட ஒருவனாகிய இறைவற்கு, நான்முகனாகிய பிரமன் வந்து வெளிப்படுவன். அங்ஙனம் வெளிப்பட்ட அவன் 'விரும்பப்படுகின்ற இந்தத்தலையில் தேவரீர் அடியேன் ஆற்றவேண்டிய பணிகளை விதித்துத் தருக' என்று வேண்ட, பேரூழிக்காலத்துத்

தீப்போலும் ஒளியுடையவனாகிய இறைவன் பிற எல்லா ஒளிகளையும் வென்று விளங்கினான் என்றவாறு.

ஊழி - முறைமையுமாம். வலஞ்செய்தல் - வென்றி காணல். வாழி; முன்னிலையசை, எல்லாவற்றையும் ஒடுக்கிநிற்கின்ற இறைவன் சிருஷ்டியைத் திருவுளங் கொண்டகாலத்து, சிருஷ்டிகர்த்தாவாகிய பிரமன் வந்து முதற்கண் பிறப்பன் என்பதாம்.

வீழ் இ தலை நீர் விதித்து இது தா என - விரும்பத்தக்க இந்தத்தலையில் தேவரீர் இன்னபடியென்று எழுதி, இந்தச் சிருஷ்டித்தொழிலைத் தருக என வேண்டிக்கொள்ள, வீழ்தல் - விரும்புதல்; " தாம் வீழ்வார் மென்றோள் " என்புழிப்போல.

## ௯. சர்வசிருஷ்டி

சர்வசங்காரகாலத்து எல்லாவற்றையும் தன்னகத் தொடுக்கிய இறைவன், மீண்டும் அந்த உயிர்களின் மலகன்மங்களைப் பரிபாகப்படுத்தற் பொருட்டு அவ்வுயிர்கள் புனருற்பவம் பொருந்துக எனத் திருவுளம் பற்றுவன்; அதுவே சர்வசிருஷ்டி எனப்படுவது, இவ்வண்ணம் சர்வசங்காரஞ் செய்து சர்வசிருஷ்டி செய்பவனே முதற்கடவுள் என்றுணர்க என்கின்றமையின், மாலும் அயனும் அடிமுடி தேடித் தமக்குத் தலைவனொருவன் உளன் என உணர்ந்ததைக் கூறும் முன்னதனோடு இது இயையுடைத்தாயிற்று.

ஆதியோடந்தம் இலாத பராபரம்
போதம தாகப் புணரும் பராபரை
சோதி யதனிற் பரந்தோன்றத் தோன்றுமாந்
தீதில் பரையதன் பால்திகழ் நாதமே. 381

இம் — எனின், அருவம் நான்கில் முதல்மூன்றின் தோற்றம் உரைத்தல் நுதலிற்று.

இ - ள் : தனக்குத் தோற்றக்கேடுகள் இல்லாத பராபரவஸ்துவாகிய சிவத்தோடு ஞானமே வடிவாகப் பராபரையாகிய பராசத்தி புணருவள். ஒளிவடிவான பராபரசிவத்தினின்று பரசிவமானது தோன்ற. குற்றமற்ற பராசத்தியினிடமாக விளங்குகின்ற நாதம் தோன்றும் என்றவாறு.

பராபரம் : பராத்பரம் என்பதன் சிதைவு, மேலான வற்றிற்கெல்லாம் மேலானது என்பது பொருள். இதன் இலக்கணம்.

நிலவுமரு வுருவின்றி குணங்குறிகள் இன்றி
நின்மலமாய் ஏகமாய் நித்த மாகி
அலகிலுயிர்க் குணர்வாகி அகல மாகி
அகண்டிதமாய் ஆனந்த வுருவாய் அன்றிச்
செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த்
திகழ்வதுதற் சிவமென்பர் தெளிந்து ளோரே.

எனும் சிவப்பிரகாசத் திருவிருத்தத்தால் உணர்க. இத்தகைய பரமசிவம் உயிர்கட்கு அனுக்கிரக மாத்திரங் குறித்துப் பொதுவகையான் அறிந்தும், அறிவித்தும் நிற்கின்றபோது அதனது ஆற்றல்

பரையாகிறது. புணரும் என்றது உபசாரம். பரையைப் புணரும்போது சிவம் பரமாகிறது. பரம் கண்ணுடி, பரை அதிற்றேன்றும் நிழல். இங்ஙனம் காணப்படுகின்ற பராசத்தியினிட மிருந்து நாதமூர்த்தி உண்டாம்.

நாதத்தில் விந்துவும் நாதவிந் துக்களில்
தீதற் றகம்வந்த சிவன்சத்தி என்னவே
பேதித்து ஞானங் கிரியை பிறத்தலால்
வாதித்த விச்சையில் வந்தெழும் விந்துவே. 382

இம் - எனின், நாதத்திலிருந்து விந்து முதலியன தோன்றும் முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நாத தத்துவத்திலிருந்து விந்துவும், அந்த நாத விந்துக்களில் ஞானமே ஆனபோது சிவமும், கிரியையே யானபோது சத்தியும் என்ன, சொல்லப் பட்டசுத்த வித்தையிலிருந்து குடிலையும் தோன்றும் என்றவாறு.

இவ்விரு மந்திரங்களில் கூறப்பட்ட தத்துவத் தோற்றமாவது : —



தீற்ற அகம் வந்த சிவன் - மலக்கோண் அற்ற மனத்தில் எழுந்த சிவன். பேதித்து - வேறுபட்டு, வாதித்த விச்சை - பேசப்படுகின்ற சுத்தவித்தை, விந்து - குடிலையாகிய பிரணவம்.

இல்லது சத்தி இடந்தனில் உண்டாகிக்
கல்லொளி போலக் கலந்துள் இருந்திடும்
வல்லது ஆக வழிசெய்த அப்பொருள்
சொல்லது சொல்லிடில் தூராதி தூரமே. 383

இம் – எனின், விந்து சத்தியிலிருந்து தோன்றுவன உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : விந்துசத்தியிலிருந்து சுத்தமாயை தோன்றி மணியுள் ஒளிபோலக் கலந்து எங்கும் வியாபகமாய் இருக்கும். வல்லமை உடைய அம்மாயையின் மூலமாகச் சிருஷ்டிக்கப்பட்ட பொருள்களைச் சொல்லால் சொல்லப்புகின் எல்லை கடந்ததாம் என்றவாறு.

இல்லது - மாயை, சத்தி – முற்கூறிய விந்து சத்தி. கல்லொளிபோலக் கலந்து - மணியின்கண் ஒளிபோல முற்றும் வியாபகமாய் ஆன்மாவினிடம் கலந்துநிற்கும். வல்லது - மாயைக்கு மற்றொரு பெயர். எல்லாவற்றிற்குப் முதற்காரணமாய் வெவ்வேறு வடிவாய் நிற்றலின் எல்லாம் வல்லது மாயை ஆயிற்று. கந்தபுராணத்து, சூரபன்மனுடைய தாயாகிய மாயை என்பாள், மாயா மலத்தின் வடிவாய் எல்லாம் வல்லளாதலை ஈண்டு இணைத்து எண்ணுக.

மாயை அனேக சத்திகளை உடையதாய் மூவகை ஆன்மாக்களிடத்தும் உள்ளதாய், அனைவரையும் பந்திப்பதாய், தம்மில் ஒன்றையொன்றொவ்வாத தனு கரண புவன போகங்களைத் தோற்றுவிப்பதாய், சங்கார காலத்திலும் ஆணவமலம் முற்றும் வலி ஒடுங்காத உயிர்கட்கு இருப்பிடமாய் இருத்தலின் வல்லது எனப்பட்டது.

தூரத்திற் சோதி தொடர்ந்தொரு சத்தியாய்
ஆர்வத்து நாதம் அணைந்தொரு விந்துவாய்
பாரச் சதாசிவம் பார்முதல் ஐந்துக்கும்
சார்வத்துச் சத்திஓர் சாத்துமா னாமே. 384

இம் - எனின், சத்தியே சத்திமானாதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சேய்மைக்கண் காட்சி அளிக்கும் ஒளியைப்பற்றிச் சத்தியாயும், காதன்மையோடு நாத தத்துவத்தைச் சார்ந்தபோது ஒப்பற்ற விந்துவாயும், பெருமையையுடைய சதாசிவ முதலான ஐந்துக்கும் பிருதிவி முதலான பூதங்கள் ஐந்துக்கும் சார்பிடமாகிய பொருளாகிய சத்தியே சத்திமானாகவும் விளங்கும் என்றவாறு.

தூரத்திற்சோதி ; பராபரத்தோடு ஒன்றியுள்ள பராபரையாகிய சோதி. சத்தி என்றது பராசத்தியை.

பாரச்சதாசிவம் ஐந்துக்கும், பார் முதல் ஐந்துக்கும் எனத் தனித்தனிக் கூட்டுக. சதாசிவம்

ஐந்து - சதாசிவம், மகேச்சுவரம், உருத்திரன், விஷ்ணு, பிரமன் என்ற ஐந்து, பரசிவமுதல் சதாசிவமீருன ஐந்துமாம். குணகுணிகளுக்குள் அபேதம்பற்றிச் சத்திமாணும் என்றது.

மானின்கண் வானாகி வாயு வளர்ந்திடும்
கானின்கண் நீரும் கலந்து கடினமாய்த்
தேனின்கண் ஐந்துஞ் செறிந்தைந்து பூதமாய்ப்
பூவின்கண் நின்று பொருந்தும் புவனமே. 385

இம் - எனின், வான் முதலிய பூதங்கள் ஐந்தின் தோற்றம் புகலுதல் நுதலிற்று.

இ - ள் ; அசுத்தமாயையிலிருந்து ஆகாயமாகிக் காற்றுத்தோன்றி வளர்ந்து, அனல் தோன்றி, நீருங்கலந்து, கடினமாகிய பூமியும்தோன்றி, மாயா சத்தியின், இடமாக சூட்சும பூதங்களாகிய தன் மாத்திரைகள் ஐந்தும் செறிந்து, ஐம்பெரும் பூதங்களாய் பூ: என்னும் வியாகிருதியிலிருந்து இவ்வுலகந்தோன்றும் என்றவாறு.

மான் – அசுத்தமாயை. வான் வாயு அனல் நீர் மண் என்னும் பருப்பூதங்கள் ஐந்தும், சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்து தன்மாத்திரைகளின் செறிவால் விளைந்தவை என்பது கருத்து.

புவனம் படைப்பான் ஒருவன் ஒருத்தி
புவனம் படைப்பார்க்குப் புத்திரர் ஐவர்
புவனம் படைப்பானும் பூமிசை யானய்
புவனம் படைப்பானப் புண்ணியன் தானே. 386

இம் – எனின், உலகத்தைப் படைப்பவரின் பரம்பரை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : உலகத்தைப் படைப்பவர் சிவமும் சத்தியும்; அவர்கட்குப் புதல்வர் ஐவர்; புவனத்தைப் படைக்கின்றவனாகிய அப்புண்ணியனும் தாமரைமலரின் மேலனாய் இருந்து, புவனங்களைப் படைப்பான் என்றவாறு.

சிவமும் சத்தியும் பஞ்ச கிருத்தியங்களைச் செய்ய. ஞானமும் கிரியையும் சமமாய் ஒத்த அவசரத்தில் சதாசிவனும், கிரியை மிகுந்து ஞானம் குறைந்த அவசரத்தில் மகேசுரனும், ஞானம் மிகுந்து கிரியை குறைந்த அவசரத்தில் உருத்திரனும், மகேசுரர்பால் தோன்றிய விட்டுணுவும், பிரமாவும் ஆக ஐவர் தோன்றுவர் என்பதாம்

இவர்களைப்புத்திரர் என்றது உபசாரம். இவர்கள் ஐந்தொழிலை ஆற்றுகின்றபோது சிவன் ஆணைவழி நின்று அவன் சந்நிதிமாத்திரையில் செய்வர். பிரமன் படைக்கின்றபோது சிருட்டி உன்முகமாகிய சிவம் 'பவமலி தொழிலது நினைவொடு பதுமநன் மலரது மருவி'யிருந்து திருவுளம் பற்றுகிறார் என்ற திருஞான சம்பந்தரின் சிவபுரம் திருவாக்கைக்கொண்டு தெளிக. இதனையே ஆசிரியர் 'பூமிசையானாய்' என்று குறிப்பித்தருளியது.

**புண்ணியன் நந்தி பொருந்தி உலகெங்கும்**
**தண்ணிய மாளை வளர்த்திடுஞ் சத்தியும்**
**கண்ணியல் பாகக் கலவி முழுதுமாய்**
**மண்ணியல் பாக மலர்ந்தெழு பூவிலே.** 387

இ-ம் - எனின், சிவமும் சத்தியும், நிலமும் நீரும் போலக் கலந்து, பிரபஞ்சமாக விரிந்திருக்கின்றனர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : புண்ணியனாகிய சிவம் பொருந்திய உலகமெங்கும் மண்ணின் தன்மையை உடைய தாகி வளர்ந்திருக்கும், சத்தியும் நீரினியல்பாகிப் பூமிமுழுதும் கலந்திருக்கும். இங்ஙனம் சிவமும் சத்தியும் எண்ணப்படு மியல்பிற்றாக இப்பிரபஞ் சத்தில் கலந்து விளங்கும் என்றவாறு.

மண், கடினமாய்த் தரிக்கும் இயல்பிற்று. வாரி குளிர்ந்து பதமாம் இயல்பிற்று. ஆதலின் கடின மாய்த் தாங்கும் வல்லமையையுடைய சிவத்தைக் குளிர்ந்து பதமாக்கும் சத்தி எய்துதலின் பிரபஞ்சம் விரிந்து காணப்படுகிறது என்பது.

கண்இயல்பு - எண்ணப்படுகின்ற தன்மை, கண்ணுதல் - எண்ணுதல்.

நீரகத் தின்பம் பிறக்கும் நெருப்பிடை
காயத்திற் சோதி பிறக்கும்அக் காற்றிடை
ஓர்வுடை நல்லுயிர்ப் பாதம் ஒலிசத்தி
நீரிடை மண்ணின் நிலைப்பிறப் பாமே. 388

இ-ம் - எனின், முறையே பூதங்கள் ஒன்றினொன்று தோன்றும் முறைமை கூறுதல் நுதலிற்று.

இ - ள் : நெருப்பின்கண் குளிர்ச்சியாகிய இன்ப வடிவுடைய நீர் பிறக்கும். ஆகாயத்தில் தோன்றிய உணர்தலுடைய நல்ல ஆன்மாவை அடியாகவும்,

ஒலியைச் சத்தியாகவும் கொண்ட ஆகாயத்திலிருந்து காற்றில் ஒளிவடிவாகிய தீப்பிறக்கும். நீரில், எல்லாவற்றையும் தாங்குந் தன்மையுடைய பூமியின் பிறப்பு உண்டாம் என்றவாறு.

நெருப்பிடை அகத்தின்பம் நீர் பிறக்கும் எனக் கூட்டி, தீயிலிருந்து நீர் தோன்றும்; அந்நீர் குளிர்ச்சியாகிய இன்பத்தை அகத்திலுடையது என்பது பொருளாகக் கொள்க.

ஓர்வு உடை நல் உயிர் பாதம் - உணர்வுடைய நல்ல ஆன்மாவை அடியாகவும், ஒலி சக்தி — ஒலியைச் சத்தியாகவும் கொண்ட காயம் என ஆகாயத்திற்கு அடையாக்குக. காயம் - ஆகாயம். அக் காற்றிடை சோதி பிறக்கும் எனக்கூட்டிப் பொருள் கொள்க.

நீரிடை நிலை மண்ணின் பிறப்பாம்; நீரிலிருந்து நிற்றலையுடைய பூமியின் தோற்றமாம் என்பது.

இங்ஙனம் ஆன்மாவினிடமாக ஆகாயமும், ஆகாயத்திலிருந்து வாயு. தேயு, அப்பு, பிருதிவி முதலியவை ஒன்றிலிருந்து ஒன்று தோன்றும் என்றது காரியத்தின் குணம் காரணத்தில் இருக்க வேண்டும் என்ற நியாயத்தால் பிருதிவிக்குள்ள கந்தாதி குணங்கள் ஆகாயத்திற்கும் அமைதல் வேண்டும். அங்ஙனம் அமையின் அவை இரண்டற்கும் வேறுபாடில்லையாம். அங்ஙனம் ஆகாமையானும், ஆன்மாவாகிய சித்துப் பொருளினின்று ஆகாயமாகிய சடம் தோன்றுமென்றல் அமையாமையானும், விண்ணுதி பூதங்கள் ஒன்

னின்று ஒன்று தோன்றும் என்றல் பொருந்தாதெனின், இக்கூற்றிற்கு ஒன்றன்பின் ஒன்றாய். ஒருபூதத்தின் ஏகதேசத்தின் தன்மை ஏனைய பூதங்களிலும் சிறிது வியாபித்திருக்கத் தோன்றும் என்ற அவ்வளவிற்கொள்க. இவற்றின் விரிவையும் விளக்கத்தையும் அமைதியையும் சிவஞான போத மாபாடியத்திற் காண்க.

உண்டுல கேழும் உமிழ்ந்தான் உடனாகி
அண்டத் தமரர் தலைவனும் ஆதியும்
கண்டச் சதுமுகக் காரணன் தன்னொடும்
பண்டிவ் வுலகம் படைக்கும் பொருளே. 389

இம் - எனின், இந்த உலகம் காரியமே என்று உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : எல்லா அண்டங்களிலும் உள்ள தேவர்களுக்குத் தேவனாகிய உருத்திரனும், ஆதி சத்தியும், உலகம் ஏழனையும் உண்டு உமிழ்ந்தவனாகிய திருமாலோடு, ஒரு கண்டமும் நான்கு முகமும் உடைய பிரமனும் கூடி முன்னே படைக்கப் பட்ட பொருளே இப்பிரபஞ்சம் என்றவாறு.

அண்டத்தமரர் தலைவனும், ஆதியும். உலகேழும் உண்டு உமிழ்ந்தான் உடனாகி, கண்டச் சதுமுகக் காரணன் தன்னொடும் பண்டு படைக்கும் பொருளே இவ்வுலகம் எனக்கூட்டுக.

உலகம் படைக்கப்பட்ட பொருள் எனவே, மாலுடனாகிக் காக்கப்பட்ட பொருள். உருத்திரன்

தானய் நின்று சங்கரிக்கப்பட்ட பொருள் என்பனவும் உபலக்கணத்தாற் கொள்க.

கண்டச்சதுமுகன் ; இறைவன் திருக்கரத்தால் கிள்ளிக் கண்டிக்கப்பட்டமையால் நான் முகனனவன் எனலுமாம்.

இம்மந்திரம் அயனாதியர் அவரவர்கள் தொழில்களாற்றுவதும் ஆதிசத்தியோடு சங்கார காரணனாகிய அரன் அருளாணையின் வியாபகத் தாலேயே என்பதும் உணர்த்துகிறது.

ஓங்கு பெருங்கடல் உள்ளுறு வானொடும்
பாங்கார் கயிலைப் பராபரன் தானும்
வீங்கும் கமல மலர்மிசை மேலயன்
ஆங்குயிர் வைக்கும் அதுவுணர்ந் தானே. 390

இம் - எனின், சிவன், அரியயனாதியர் தொழிலாற்றத் திருவுளம்பற்றியமை தெரிவித்தல் நுதலிற்று.

இ-ள் : அழகிய திருக்கயிலையில் வீற்றிருக்கின்ற பராபர வஸ்துவாகிய சிவன், அலைகள் உயர்ந்துவருகின்ற கடலில் உறைகிறவனாகிய திருமாலும், சிறந்த தாமரைமலர் மேலவனாகிய பிரமனும் ஆகிய அவ்விருவரிடத்தும், உயிரை உடலோடு கூட்டி நிலைபெறுத்தும் செயலை நிகழ்த்தத் திருவுளம் பற்றினன் என்றவாறு.

உயிர் வைத்தல் - ஆன்மாக்களை அவரவர் வினைக்கீடாகத் தனுகரண புவனபோகங்களைத் தந்து

படைத்தலும் நிலைபெறுத்தலும், உணர்ந்தான் எனவே தானே விகாரியாகி இயற்றுமை தெளிவிக்கப்பெற்றது.

காரணன் அன்பிற் கலந்தெங்கும் நின்றவன்
நாரணன் நின்ற நடுவுட லாய்நிற்கும்
பாரணன் அன்பிற் பதஞ்செய்யும் நான்முகன்
ஆரணா மாய்உல காயமர்ந் தானே. 391

இ-ம் – எனின், பிண்டத்தில் மூவரின் நிலையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : காரணனாகவுள்ள சர்வேசுவரன், திருவருளால் தாம் எல்லாவற்றிலும் கலந்து எங்குமாய் வியாபித்திருப்பவன். நாராயணன், நின்ற நடுவுடம்பாய் இருப்பவன். அன்பினால் நான்முகன் பூமியை அண்ணியவனாகப் பாதத்தை இடமாகச் செய்வன். இவ்வண்ணம் இறைவன் வேதரூபமான சொற் பிரபஞ்சமாயும் பொருட் பிரபஞ்சமாயும் விரும்பி எழுந்தருளியிருந்தனன் என்றவாறு.

நிமித்தகாரணனாகிய இறைவன் ஆன்மாக்கள் மீது வைத்த கருணையே ஏதுவாக உருத்திரனாகவும், மகேசனாகவும், சதாசிவனாகவும் வித்தியாகலைமுதல், சாந்தியதீத கலைவரை கலந்து வியாபித்திருந்தான் என்பார், ‘காரணன் அன்பிற்கலந்து எங்கும் நின்றவன்’ என்று அருளினர். எங்கும் நின்றவன்’ எங்கும் – மூன்று கலைகளிலும்.

நின்ற நடுவுடல்; மனித உடலில் இந்தக் கலைகளை அமைத்து நோக்கும்போது முழங்காலுக்கு

மேல், தொப்பூழ் வரையுள்ள பகுதி நடுவுடல், இது அப்பு மண்டலமாகிய பிரதிஷ்டாகலை. இதற்கு அதிபதி விஷ்ணு, ஆதலின் 'நாரணன் நின்ற நடுவுடலாய் நிற்கும்' என்றார்.

நான்முகன் அன்பின் பார் அணன் (ஆகி) பதம் செய்யும்; பிரமன், அன்பினாலே பிருதிவிதத்துவத்தைக் கொண்ட நிவிருத்தி கலையில் அதிபதியாகி நின்ற உடலில் பாதமே இடமாகக்கொண்டு விளங்குவன்.

இங்ஙனம் இறைவன் சொற்பிரபஞ்சமும் பொருட் பிரபஞ்சமுமான பிரபஞ்சத்தைப் படைத்து அவற்றுட் கலந்து காரியப்படுத்துகின்றான் என்பது கருத்து. உலகாயமர்ந்தான் என்பதற்கு விராட்சொரூபமாக இருந்தான் என்று பொருள் கோடலுமாம்.

பயன்எளி தாம்பரு மாமணி செய்ய
நயன்எளி தாகிய நம்பன்ஒன் றுண்டு
அயன்ஒளி யாயிருந் தங்கே படைக்கும்
பயனெளி தாம்வய ணந்தெளிந் தேனே. 392

இம் – எனின், பிரமன் படைப்பதன் எளிமைக் காரணம் இதுவாம் எனல் நுதலிற்று.

இ - ள் : பிரமன் சிருட்டிக்கேதுவாகிய ஞானத்தைப்பொருந்தி, அங்குப் படைக்கும் பயனுக்கு எளிதான காரணம், அனைவருக்கும் பயனளிப்பதில், எளிமையான, பருத்த மாமணிபோற் சிவந்த,

நேர்மையில் எளிய நம்பப்படத்தக்கவனுகிய சர்வே சுவரனுகிய ஒரு பொருள் உண்டு என்று தெளிந்தேன் என்றவாறு.

செய்ய நம்பன், எளிதாகிய நம்பன் எனக் கூட்டுக. நம்பனைப் பொருள் என்றதற்கேற்ப உண்டு என அஃறிணைப் பயனிலை அளித்தார். நம்பன் ஒன்று - நம்பனுகிய ஒருபொருள், உண்டு; ஐம்பால் மூவிடத்திற்கும் பொதுவாகிய வினையு மாம். இது பின்னூல் வழக்கு.

ஒளி - ஞானம், ஈண்டு அவனுக்குரிய சிருஷ்டி ஞானம். படைக்கும் பயன் - படைத்தலாகிய பயன், வயணம் - காரணம். தனக்கு ஒரு முதல் வனிருந்து நடத்துவிக்கத் தான் படைத்தலின் படைப்பு அவனுக்கு எளிதாயிற்று என்பதாம்.

போக்கும் வரவும் புனிதன் அருள்புரிந்(து)
ஆக்கமுஞ் சிந்தைய தாகின்ற காலத்து
மேக்கு மிகநின்ற எட்டுத் திசையொடுந்
தாக்குங் கலக்குந் தயாபரன் தானே. 393

இ - னின். புனருற்பவம் செய்விக்கத் திருவுளம் பற்றிய காலத்துச் சிவன் உலகத்தோடு பொருந்திக் கலந்து நிற்கின்றுன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : புனிதனுகிய சிவம் சங்காரத்தையும், படைப்பையும், அருளலையும் காத்தலையும் திருவுளத் தடைக்கின்றகாலத்து, விண்ணும்

(மண்ணும்) எட்டுத் திசைகளுமாகிய பிரபஞ்சத்தோடு கருணையே வடிவாக விளங்கும் கடவுள் ஒன்றாயும் உடனாயும் இருப்பன் என்றவாறு

அருள்புரிந்து ஆக்கமும் - அருளலும் காத்தலும் என இருதொழிலை உணர்த்தி நின்றது. நான்கு தொழில் கூறவே மறைத்தலாகிய ஒன்றும் கொள்ளப்படும்.

மேக்கு - மேல் ஆகாயம். மேக்கு மிக நின்ற - உயர்ந்து நின்ற எனலுமாம்.

வேறாய் நின்று பிரபஞ்சத்தைக் காரியப்படுத்துகின்றான் அல்லன்; கலந்தும் பொருந்தியும் நின்றே இறைவன் காரியப்படுத்துகின்றான் என்பதாம்.

நின்றுயி ராக்கு நிமலன்என் னுருயிர்
ஒன்றுயி ராக்கும் அளவை உடலுற
முன்துய ராக்கும் உடற்குத் துணையதா
நன்றுயிர்ப் பானே நடுவுநின் றானே. 394

இ-ள்: நிலைபெற்று நின்று ஆன்மாக்களுக்கு ஆக்கத்தை அளிக்கின்ற அநாதியே மலரகிதனாகிய அரன் எனது உயிர் என்பதொன்று உண்டென்னும் அளவையன்றி நேரே அறிதற்கரிய உயிரைத் தேகத்தோடுஒன்றி அறியப்படு பொருளாக்குகின்ற காலத்து, முற்பிறவிகளில்செய்த துன்ப இன்பங்களுக்கு ஈடாகவே படைப்பன். தான் பட்சபாதமின்றி நடுவுநிற்றலை யுடையவனாகி, கொடுத்த

உடம்பிற்குத் துணையாகப் பிராணனும் இயங்குவன் என்றவாறு.

உயிர் ஆக்குதல் ; குற்றம் களைந்து, அரிசியைப் பதப்படுத்துதலைச் சோறு ஆக்கினன் என்பது போல, உயிர்கட்கு அநாதியேயுள்ள மலக் குற்றத்தை வாட்டி உயிர்களைப் பரிபாகப் படுத்துதல். அங்ஙனம் பரிபாகப் படுத்துபவன் தாமும் மலக்கட்டுடையனுயின், குருடு குருட்டினை நீக்க முற்பட்ட கதையாக முடிதலின் அது பொருந்தாது என்பார் இறைவன் அநாதிமல ரகிதன் என்பது தோன்ற 'நிமலன்' என்றார்.

உயிர் உடலுற உயிர் ஆக்கும் அளவை : உயிர் காணப்படாத ஒன்று ஆதலாலே பல மதவாதிகள் " உளதில தென்றலின் " என்ற மூன்றாஞ் சூத்திரத்தில் மெய்கண்டதேவ நாயனார் அறிவித்த வண்ணம் மாறுபடச் சாதிக்க வேண்டிய இன்றி யமையாதநிலை ஏற்பட்டது. உடலொடு கூடிய வழியே இயக்கங்கொண்டு உயிரிருப்பு உணரப்படும் என்பதறிக.

இறைவன் உடலைக்கொடுப்பது தன் விருப்பப் படியன்று ; அவரவர்செய்த வினைப் பரிபாகத்திற்கு ஏற்ப என்பார் 'முன்துயர் ஆக்கும் உயிர்க்கும்' என்றார். ஆக்கும் : ஆக்கப்படும் எனச் செயப்பாட்டு வினையாக்குக.

" என்னுளே உயிர்ப்பாய்ப் புறம்போந்து புக்கு
என்னுளே நிற்கும் இன்னம்பர் ஈசனே "

என்பவாகலின், உடற்குத் துணையாகி நின்று உயிர்ப் பான் என்றருளினார்.

ஆகின்ற தன்மையில் அக்கணி கொன்றையன்
வேகின்ற செம்பொனின் மேலணி மேனியன்
போகின்ற சீவன் புகுந்துட வாய்உளன்
ஆகின்ற தன்மைசெய் ஆண்டகை யானே 395

இம் - எனின், உயிர்க்கு உயிராயும் உடலாயும் இருத்தலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: எலும்பு மாலையாகிய அணி, கொன்றைப் பூமாலை ஆகிய இவற்றை உடையவனும் உருக்கி ஓடவிடப்பட்ட செம்பொன்னைக் காட்டிலும் மேலாக அணிசெய்கிற மேனியை உடையவனும், பிரபஞ்சத்தை உண்டாக்க வேண்டுமென்ற பெருவிருப்பினை உடையவனுமான இறைவன். பிரபஞ்சங்கள் உண்டாக வேண்டுமென்ற திருவுள்ளக் குறிப்போடு சிருட்டித்தலேயன்றி ஒடுங்குகின்ற உயிர்கள் அனைத்திற்கும் உடலாயுமுள்ளான் என்றவாறு.

ஆகின்ற தன்மையில்; படைக்கவேண்டுமென்ற திருவருட் குறிப்போடு பிரமனாதியோர், இறைவன் திருவருள் நோக்கம் தம்மீதுவிழத் தத்தம் தொழிலை இயற்றுகின்றனராதலின் அக்குறிப்போடு இறைவன் இருந்தருள்கின்றான், உடலாயிருத்தலாவது எல்லாம் ஒடுங்குதற்கு இடந்தந்து நிற்றல். ஆண்டகையான் - ஆடவருள் தகுதி பெற்றவன்.

ஒருவன் ஒருத்தி விளையாடல் உற்றார்
இருவர் விளையாட்டும் எல்லாம் விளக்கும்
பருவங்கள் தோறும் பயன்பல வான
திருவொன்றிற் செய்கை செகமுற்று மாமே. 396

இம் - எனின், இறைவன் மாயையைக் கொண்டு உலகைப் படைகின்றான் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : சிவமும் சத்தியும் திருவிளையாடலைச் சிந்தை கொண்டார்கள். அவர்களிருவரின் விளையாட்டு எல்லாவற்றையும் படைக்கும். பரிபாகத்தால் வேறுபட்டுப் பலவான மாயா சத்தியோடு இறைவன் பொருந்திய காலத்து உலகமுற்றும் செயற்படும் என்றவாறு.

படைப்பாதி ஐந்து தொழில்களும் இறைவற்கு விளையாட்டேயன்றி அவனை விகாரியாக்கும் வினையன்று ஆதலின் 'விளையாட்டு' என்றருளினர். பருவங்கள்தோறும் பயன் பலவான திரு - பரிபாக நிலைக்கு ஏற்பப் பயனால் வேறுபட்ட சுத்தம் அசுத்தம் பிரகிருதி என்று மூன்றான மாயை, இதன் இயல்பை "நித்தமாய் அருவாய்" என்று தொடங்கும் சிவஞானசித்தியார் திருவிருத்தத்தால் உணரலாம்.

புகுந்தறி வான்புவ னாபதி அண்ணல்
புகுந்தறி வான்புரி சக்கரத் தண்ணல்
புகுந்தறி வான்மலர் மேலுறை புத்தேள்
புகுந்தறி யும்முழுக் காகிநின் றாரே. 397

இம் - எனின், உருத்திரனாதியரும் கருவியாவரேயன்றிக் கருத்தாவாகார் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : புவனபதியாகிய புவனேசுவரிக்குத் தலைவனாகிய உருத்திரனிடம் புகுந்து உலகத்தை அழித்தலைச் செய்வான். சக்கரத்தையேந்திய திருமாலிடம் புகுந்து காத்தலைச் செய்வான். தாமரைமலர்மேல் எழுந்தருளியிருக்கின்ற பிரமனிடம் புகுந்து படைத்தலைச் செய்வான். ஆதலால், இறைவன் புகுதலால் தொழில் செய்யும் அந்த மூவரும் உழக்குப்போல் சுதந்திரம் அற்றவர்களாவர் என்றவாறு.

அறிவான் என்பன மூன்றும் அறிந்தியற்றுவான் என்னும் பொருள்மேனின்றன. அண்ணலைப் புத்தேளை என இரண்டாவது விரிக்க. உழக்கு ஆகி நின்றார் என்றது இறைவனாகிய கொள்பொருளைக் கொள்கின்ற முகத்தற்கருவியானார்கள் என்ற அவர்களது முதன்மை யின்மையை மொழிந்தவாறு.

ஆணவச் சத்தியும் ஆம்அதில் ஐவரும்
காரிய காரண ஈசர் கடைமுறை
பேணிய ஐந்தொழி லால்விந்து விற்பிறந்(து)
ஆணவம் நீங்கா தவரென லாகுமே. 398

இம் – னின் ஆணவமலமொன்றே உடைய ஆன்மாக்களியல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் ; ஆணமலமாகிய சத்தியொன்றனுடன் உதித்தவர்களான ஐவகை ஆன்மாக்களும், காரண ஈசரும் காரிய ஈசருமாவர். இறுதியில் பரசிவம் திருவுள்ங்கொண்ட பஞ்சகிருத்தியத்தால், சுத்தமாயை

யிற்றேன்றி ஆணவச்சத்தி நீங்கப்பெருதவர்கள் எனலாம் என்றவாறு.

ஐவராவார் அணுசதாசிவரும், அஷ்டவித்தியேசுரரும், சப்தகோடி மகாமந்திரர்களில் இருவகையரும், அபக்குவமலரான ஆன்மாக்களும் ஆவார்கள்.

அணுசதாசிவராவார் அன்பே வடிவாய், அதிகார சிவனுடைய அனுக்கிரகத்தைப் பெற்று, பிரளயா கலருக்கு அருள்வழங்கிக்கொண்டு, சாதாக்கியதத்துவத்திலே போகங்களை நுகர்ந்து, சதா சிவனைச் சூழ்ந்து இருப்பவர்களாகிய பிரணவர், சுதர், சுதீப்தர், காரணர், சுசிவர், ஈசர், சூக்குமர், காலர், அம்பு, தசேசர் என்ற பதின்மரும் ஆவர். அணுசதாசிவர் என்பது குழுஉப்பெயர்.

அஷ்டவித்தியேசுரராவார் அசுத்தமாயா கிருத்தியங்களுக்கு அதிகாரிகளாய், அதிகாரமலம் மாத்திரம் உடையவர்களாய், ஈச்சுரதத்துவத்திலுள்ள புவனங்களுக்கு அதிபதிகளாய், அங்கு வசிப்பவர்களாகிய அனந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகவுருத்திரர், திரிமூர்த்தி, ஸ்ரீகண்டர், சிகண்டி என்ற எண்மரும் ஆவர்.

சப்தகோடி மகாமந்திரராவார் நம: சுவாஹா, சுவதா, வௌஷட், வஷட், பட், ஹூம் என்ற ஏழு இறுதிகளுடைய மந்திரங்களுக்கு அதிபதிகளாய், அஷ்டவித்தியேசுரர்களால் பிரேரிக்கபட்டு, சுத்த வித்தியா தத்துவத்தில் வசிப்பவர்களாய், சிவன் நிராதாரமாய் நின்று அனுக்கிரகிக்குமிடத்து

அதற்குக் காரணமாயிருந்து அதிகாரத்தில் வைராக்கியம் பிறந்த போது சிருட்டிக்குப் பின்பு மோட்சத்தில் சேர்க்கப்படுகின்ற மூன்றரைக்கோடி பேர்கள்.

மற்ற மூன்றரைக்கோடி பேர்களாவார். சிவன் குருமூர்த்தத்தை அதிட்டித்து நின்று, சகலான்மாக்களைக் காத்தருளும்போது அதற்குக் காரணர்களாக இருந்து மகாப்பிரளயத்திலே வீடுபெற இருப்பவர்கள்.

அபக்குவமலராவார் சுத்த வித்தைக்குக் கீழே மாயைக்கு மேல் வசிப்பவர்களாய், வடிவற்று, ஆணவமலமே வடிவாய், சுத்தமாயையிலே தோற்றம் ஒடுக்க முடையவர்களாய், ஆணவம் பரிபாகம் பெறுமளவும் பெத்தர்களாய், விஞ்ஞானத்தாலும் அநுபவத்தாலும் யோகத்தாலும் சந்நியாசத்தாலும் தீட்சையினுலும் மாயை கன்மங்கள் நீங்கப்பெற்றவர்களாய், அசுத்த மாயைக்கு மேலுள்ள புவனங்களிலுள்ள போகங்கட்கு ஏதுவாய் இருப்பவர்கள். இவர்களில், மந்திரபதம் பெறுபவரும். மந்திரேசபதம் பெறுபவருமாகப் பரிபாகத்தால் இருவகையர் உளர்.

இவர்களில் ஒவ்வொருவரும் தமக்கு மேலுள்ளவர்களை நோக்கக் காரிய ஈசர்களாகவும் கீழுள்ளவர்கட்குக் காரணர்களாகவும் இருப்பதால் 'காரிய க்ாரண ஈசர்' என்றருளப்பட்டது. அதிலும் க்ாரியத்தன்மை மிகுதலின் சிறப்பும் மிகுதியும் பற்றி முற்கூறப்பட்டது.

இவர்கள் ஐவரும் பரசிவத்தின் அருளால் விந்து சத்தியினின்று தோன்றிய தனு கரண புவன போகங்களையுடையவர்கள். ஆதலின் 'பேணிய ஐந்தொழிலால் விந்துவிற் பிறந்து' என்றருளப் பெற்றது. பேணிய - இறைவன் திருவுளத் தெண்ணிய.

ஆணவம் நீங்காதவர் என்றது என்றுமே நீங்காதவர் என்பதன்று; சிவபெருமான் உண்ணின்று உணர்த்தும் பரிபாகம் பெறும்வரையில் நீங்காதவர் என்பதே பொருளாம்.

**உற்றமுப் பாலொன்று மாயாள் உதயமாம்**
**மற்றைய மூன்றும் மாயோ தயம்விந்து**
**பெற்றவள் நாதம் பரையிற் பிறத்தலால்**
**துற்ற பரசிவன் தொல்வினை யாட்டிதே.** 399

இம் - எனின், மாயை முத்திறப்படும் என்பதும் அம்மாயையின் பரம்பரையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பொருந்திய மாயையிலிருந்து சுத்தம் அசுத்தம் பிரகிருதி என்ற மூன்று பகுதிகள் தோற்றமாகப்பொருந்தும். இங்ஙனம் கூறிய மூன்றான மாயைக்குத் தோற்றுமிடனுயுள்ளது விந்துசத்தியாகும். அவ்விந்துவினைப் பெற்றவள் நாதசத்தி; அவள் பராசத்தியிலிருந்து பிறத்தலால் இங்ஙனம் தோற்றுவிக்கின்ற செயலெல்லாம் பரையைத் தனது சத்தியாக உற்ற பரசிவத்தினுடைய பழமையான விளையாட்டுக்களாம் என்றவாறு.

மாயை ஒன்றே மல கன்மங்களோடு விரவாது இருப்பதும், விரவி நிற்பதும், விரவித் தூலபரிணமமாய்த் தோன்றுவதுமாகிய முப்பகுதியை உடைமையின் ' ஒன்று மாயாள் உற்ற முப்பால் உதயமாம் ' என்றருளினர். இதனை,

" விந்துவின் மாயையாகி மாயையின் அவ்வியத்தம்
வந்திடும் விந்துத்தன்பால் வைகரியாதி மாயை
முந்திடும் அராக மாதி முக்குண மாதி மூலம்
தந்திடுஞ் சிவனவன்றன் சன்னிதிதன்னின் நின்றே"

எனவரும் சிவஞான சித்தித் திருவிருத்தத்தானும், ஞானவரண விளக்கத்தானும், அதன் உரையானும் சுத்தமாயை அசுத்தமாயை பிரகிருதிமாயை என முத்திறப்படுதல் தெளிக.

மாயோதயம் மற்றைய மூன்றும் என்றது மாயையானது விந்துசத்தியிலிருந்து தோன்றும் என்பது பற்றி முறையே பரசிவன், பரை, நாதம். விந்து மாயை எனத் தோற்றமுறைமை சொல்லப் பெற்றது. துற்ற - பொருந்திய. பரையைச் சத்தியாகப் பொருந்திய என்பதாம்.

ஆகாய மாதி சதாசிவ ராதியென்
போகாத சத்தியுட் போந்துடன் போந்தனர்
மாகாய ஈசன் அரன்மால் பிரமனும்
ஆகாயம் பூமி காண அளித்தலே. 400

இ - ம் - எனின், சதாசிவன் முதலியோர் சிருஷ்டிப்பர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஆகாய முதலான பஞ்சபூதங்கள் என்ன ? சதாசிவர் முதலான பஞ்சமூர்த்திகள் என்ன ? எனின், இவர்கள் என்றும் அழிவில்லாத மாயா சத்தியுள் தோன்றி விரைந்து வந்தவர்கள். மகேசன். உருத்திரன், மால், பிரமன் இவர்களால் ஆகாயமுதல் மண்ணீறான பூதங்கள் புலனும்படிப் படைத்தல் ஆம் என்றவாறு.

ஆகாயமாதியென் சதாசிவராதி என் என்றது. இப்பூதங்கட்கும் சதாசிவர் முதலிய பஞ்சமூர்த்தி கட்கும் உள்ள இயைபு என்ன என்று அறிய விரும்பும் மாணவன் வினாவைக் கொண்டு கூறியது.

போகாத சத்தி - நித்தியமாகிய மாயாசத்தி, சதாசிவன் சத்தி மனோன்மணி. மகேஸ்வரன் சத்தி கௌரி. உருத்திரன் சத்தி உமை. மால் சத்தி லட்சுமி, அயன் சத்தி சரஸ்வதி, சதாசிவனுதியர் தோன்றுமுறையாவது ஞானமும் கிரியையும் சமமாய் ஒத்த சதாசிவர் ; அவரிலிருந்து மகேசர் ; அவரிலிருந்து உருத்திரர் : அவரிலிருந்து திருமால்; அவரிலிருந்து அயன் எனத் தோன்றுதல், இவர்கள் ஐவருள் மகேசர் உருத்திரன் முதலியோர் இறைவனுடைய நவந்தரு பேதங்களில் சகள வடிவம் நான்கனுட்பட்டு, சுத்தவித்தியா தத்துவங் களில் வைகும் காரணேஸ்வரர்களாவர். சகலரில் தவவிசேடத்தால் அதிகாரம் பெற்ற காரியேஸ் வரர்களல்லர் என்பது தெளிக

மாகாய ஈசன் - மகேசன், மா கு ஆய ஈசன், கு: சாரியை ; தவிர்வழிவந்தது, மா ஆய ஈசன் - மகேசன், அரன் - உருத்திரன், காண அளித்தல் -

காணுதலும் அளித்தலும், எனவே ஏனைய முத்தொழிலும் உபலக்கணத்தால் கொள்ளப் பட்டன.

அளியார் முக்கோணம் வயிந்தவந் தன்னில்
அளியார் திரிபுரை யாம்அவள் தானே
அளியார் சதாசிவ மாகி அமைவாள்
அளியார் கருமங்கள் ஐந்துசெய் வாளே. 401

இம் – எனின், பஞ்சகிருத்தியமும் பராசத்தியின் செயலே எனல் நுதலிற்று.

இ – ள் : கருணைநிறைந்த முக்கோண வடிவான விந்துசத்தியில் திரபுரையாகிய மனோன்மணி தோன்றுவள். அவளே சதாசிவமாகி அமைவாள்; ஆன்மாக்கள் மீது வைத்த கருணையால் பஞ்ச கிருத்தியங்களைப் பண்ணுவள் என்றவாறு.

இது சத்திசிருஷ்டி கூறியது.

வாரணி கொங்கை மனோன்மணி மங்கலி
காரண காரிய மாகக் கலத்தவள்
வாரணி ஆரணி யான அம் மோகினி
பூரணி போதாதி போதமு மாமே. 402

இம் – எனின், அவளே பரஞானமாகவும் அபர ஞானமாகவுமிருப்பள் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : கச்சணிந்த திருத்தனபாரத்தையுடைய மனோன்மணியும், நித்திய சுமங்கலியும், காரணேஸ்

வரர் காரியேஸ்வரர்களிடத்து அவரவர்கள் நிலையிற் கலந்தவளும், கணேசையும், வேதரூபியும் அந்த மோகினியும் ஆகிய பூரணி அறிவும் பேரறிவும் ஆவள் என்றவாறு,

காரண காரியமாகக் கலத்தலாவது காரணேஸ்வரர்களுக்கு அவர்கள் சத்தியாயும், காரியேஸ்வரர்களுக்கு அவர்கள் சத்தியாயும் கலந்து நின்று பஞ்சகிருத்தியம் பண்ணுதலாம்.

வாரணம் – யானை. வாரணி – கணேசை. ஆரணம் - வேதம். ஆரணி - வேதவடிவினள், ஆரணியான மோகினி என்றது, வேதம் அவரவர்கள் ஞான பரிபாகத்திற்கு ஏற்ப உண்மை விளக்கஞ்செய்து மயக்கி நிற்றலைப்போல இவளும் அங்ஙனம் உண்மை ஞானம் பயப்பித்தலின் கூறியதாம்.

போத அதிபோதம் - அறிவும் பேரறிவும் ஆவர் என்றவாறு. அறிவு பாச பசுஞானங்கள். பேரறிவு பதிஞானம்.

நின்றது தானாய் நிறைந்த மகேசுரன்
சென்றங் கியங்கி அரன்திரு மாலவன்
மன்றது செய்யும் மலர்மிசை மேலயன்
என்றிவ ராக இசைந்திருந் தானே. 403

இம் – எனின், மகேசுரன், உருத்திரன், திருமால் அயன் என்னும் இவர்களாக எழுந்தருளியுள்ளமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள் : தற்சிவமாய் நின்று நிறைந்த மகேசுரன், சுத்தமாயையிற்சென்று கலக்கி, உருத்திரன்

திருமால் மணம் வீசுகின்ற தாமரைமலர்மேல் உள்ள அயன் என்ற முத்தொழில் செய்யும் மூர்த்திகளாகப் பொருந்தியிருந்தான் என்றவாறு.

மும்மூர்த்திகளாகப் பொருந்தியிருந்தான் என்றது அவர்களாகவே திருமேனிகொண்டான் என்பதன்று; அவர்களை அதிட்டித்து நின்றான் என்பதே கருத்து.

அங்கு சென்று இயங்கி எனப் பிரித்துக்கூட்டுக. மன்று என்பது மன்றல் என்பதன் திரிபு; மணம் என்பது பொருள்.

ஒருவனு மேஉல கேழும் படைத்தான்
ஒருவனு மேஉல கேழும் அளந்தான்
ஒருவனு மேஉல கேழும் கடந்தான்
ஒருவனு மேஉட லோடுயிர் தானே. 404

இ-ம் - எனின், இறைவனே எல்லாமாயிருப்பவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இறைவன் ஒருவனே உலகு ஏழையும் படைத்தவன்; அளந்தவன்: அழித்தவன்: உயிரும் உடலுமாக இருப்பவன் என்றவாறு.

அளந்தான் - திருமால். அளத்தல் வினைப் போகங்களை அவரவர் நுகருமாறு அளந்தூட்டிக் காத்தல்.

கடந்தான் - அழித்தவன், உடலோடு உயிர் - உடலோடு கூடிய உயிர்; சீவர்க்கும்.

செந்தா மரைவண்ணன் தீவண்ணன் எம்இறை
மஞ்சார் முகில்வண்ணன் மாயஞ்செய் பாசத்துக்
கொந்தார் குழலியர் கூடிய கூட்டத்து
மைந்தார் பிறவி அமைத்துநின் றுரனே. 405

இ - ளின், இறைவன், மாயையால் ஆடவர் மகளிர் கூடப் பிறவியை அமைத்தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: செந்தாமரைபோன்ற நிறத்தையுடைய தீவண்ணனாகிய இறைவனும் மேகவண்ணனாகிய திருமாலும் கூடி விளைத்த் மாயாகாரியமாகிய காதலால், மைந்தர்கள் பூங்கொத்தை அணிந்த கூந்தலையுடைய மகளிரோடு கூடிய கூட்டத்தால், உலகத்தில் பிறவியை அமைத்து நின்றனர் என்றவாறு.

மைந்தார் குழலியர் கூடிய கூட்டம் என இயைக்க. மைந்தர் என்பது மைந்தார் என எதுகை நோக்கி நீண்டது.

செந்தாமரைவண்ணனாய தீவண்ணன் எம் இறை என இயைத்துச் செந்தாமரை நிறப்பண்பையும், தீ ஒளிப்பண்பையும் உணர்த்தியமை அறிக. மஞ்சார் முகில் - வெண்முகிலும் கருமுகிலும். திருமாலை மஞ்சார் முகில்வண்ணன் எனக் கூறியது, ஆலகால விஷம் தாக்குவதற்கு முன்பு செந்நிறமும், தாக்கிய பின் கருநிறமும் பெற்ற வரலாற்றினை உட்கொண்டு. 'மைந்தார் முகில் வண்ணன்' எனப் பாடங்கொண்டு வலிமை நிறைந்த திருமால் என உரைப்பாருமுளர்.

இவர்கள் ஈற்றடியை 'அந்தார் பிறவி அறுத்து நின்றானே' என்று பாடங்கொள்வர். இப்பாடத்திற்கு, அழகிய மாலைபோல் தொடுத்து வருகின்ற பிறவியை அறுத்து நின்றான் என்பது பொருளாதல் காண்க. அதிகாரம் சர்வசிருஷ்டி கூறுவதாகலின், 'அறுத்து நின்றான்' என்பது அமையுமாறு யாங்ஙனம் ?

தேடும் திசைஎட்டுஞ் சீவன் உடலுயிர்
கூடும் பிறவிக் குணஞ்செய்த மாநந்தி
ஊடும் அவர்தம துள்ளத்தி னுள்நின்று
நாடும் வழக்கமும் நான்அறிந் தேனே. 406

இம் - ஒனின், இறைவன் உயிர்களுக்குப் போகியாக இருந்து விருப்பம் விளைவித்தலை உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : தேடப்படுகின்ற திசையெட்டிலும் உடலோடு உயிர் கூடுதலாகிய பிறத்தற்றொழிலை, அதற்குக் குணமாக அமைத்த சிவபெருமான், கன்னியரும் காளையருமாக இருந்து ஊடுகின்ற வருள்ளத்தில், உள்பொருளாக எழுந்தருளி நின்று, விருப்பஞ்செய்யும் வழக்கத்தையும் நான் அறிந்தேன் என்றவாறு.

தேடுந்திசை எட்டும் என்றது எட்டுத்திசைக்குள் அகப்பட்ட எல்லா அண்டங்களிலும் என்றவாறு. உடலுயிர் கூடும் பிறவிச் சீவன் குணம் எனக் கூட்டி உடலோடு உயிர் கூடுதலாகிய பிறவியை உயிரின் குணமாக அமைத்த சிவபெருமான் என்பதப் பொருள் கொள்க.

ஊடுமவர் - புணர்ச்சி இன்பின் மீதூர்ச்சிக் காகப் புலவிகொள்ளுகின்ற கன்னியர் காளையர். உள்ளதின் உள் நின்று நாடும் வழக்கம் - உயிர்க்கு யிராய் நின்று விருப்பத்தை விளைவிக்கின்ற வழ்க்கத்தை ; என்றது போகியாயிருந்து உயிர்க்குப் போகத்தை நல்குதலை உணர்த்திற்று, கந்த புராணத்து, இறைவன் யோகியாயிருப்ப இணை விழைச்சியற்கை கூடாது அவரவர் இருந்தமை காமதகனப் படலத்தில் காணலாம்

ஓராய மேஉல கேழும் படைப்பதும்
ஓராய மேஉல கேழும் அளிப்பதும்
ஓராய மேஉல கேழும் துடைப்பதும்
ஓராய மேஉட லோடுஉயிர் தானே. 407

இம் — எனின், சிவசத்திகளின் சேர்க்கையே முத்தொழில்புரிவது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : ஒப்பற்ற சிவசத்திகளின் கூட்டமே, ஏழுலகங்களையும் படைப்பதும் காப்பதும் அழிப் பதும் உடலோடு உயிராய் ஒன்றுயிருப்பதுமாம் என்றவாறு.

ஆயம் - கூட்டம், படைத்தது. நடப்பது, இறப்பது என ப் பாடங்கொள்வாருமுளர். சிவத்தின் கூறு உயிரும், சத்தியின் கூறு உடலு மாதலின் உடலோடு உயிர்தானே என்றருளினர். இந்த நிலையைப் பிருங்கி முனிவர் சத்தியின் மறக் கருணையால் உடல்வலி இழந்ததும். சிவனருளால் சிவனை வழிபட்டதும் ஆகிய வரலாறு கொண்டு தெளிக.

நாதன் ஒருவனும் நல்ல இருவரும்
கோது குலத்தொடுங் கூட்டிக் குழைத்தனர்
ஏது பணியென் றிசையும் இருவருக்(கு)
ஆதி இவனே அருளுகின் றனே. 408

இம் — எனின், சிவமே முதற்கருத்தாவாக நின்று ஏனையோரை இயக்கித் தொழில் நிகழ்த்துகின்ற தெனல் நுதலிற்று.

இ — ள் : சிவமும், சதாசிவமும், மகேச்சுரனும் சுத்தம் அசுத்தமாகிய மாயைகளைக் கலக்கினர். அப்போது, எங்களுக்குரிய பணி ஏது என்று வினவும் அரி அயற்குச் சிவமே அவரவர்க்குரிய தொழில்களை அருளிச்செய்கிறுன் என்றவாறு.

நாதன் ஒருவன் - சிவன், நல்ல இருவர் - ஞான சத்தியும், கிரியாசத்தியு மாகிய தாதான்மிய சத்திகள் இருவர். ஆக மூவரும், கோதுகுலத் தோடும் கூட்டி - அசுத்தமாயா கூட்டமாகிய தனுவாதிகளோடு கூடச்செய்து, குழைத்தனர் — பரிபாகப்படுத்தினர் என்பாரும் உள்ர். நல்ல இருவர் என்பதற்கு அவ்விருவரும் எனப் பொருள் கோடல் பொருந்தாது என்பதைச் சிவஞான மாபாடியத்து முதற்காரண முடிபின் இறுதிப் பகுதியால் தெளிக.

அப்பரி செண்பத்து நான்குநூ றுயிரம்
மெய்ப்பரி செய்தி விரிந்துயி ராய்நிற்கும்
அப்பரி சேதென்று புகலும் மனிதர்கள்
அப்பரி சேஇருள் மூடிநின் றுரே. 409

இம் - எனின், உயிர்கள் எண்ணிலவாய், பல கோடி யோனிபேதமுடையனவாய் விரிந்தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அவ்வண்ணம், எண்பத்து நான்கு நூறுயிரம் யோனி பேதங்களைப் பொருந்தி விரிந்து, உயிராயும் இறைவன் நிற்குமது யாங்ஙனம் ? என்று வினவும் உலகாயதர் அங்ஙனமே ஆணவமலத்துள் அழுந்திக் கிடந்தவர் ஆவர் என்றவாறு.

எண்பத்து நான்கு நூறுயிரம் பேதத்தை,

" ஊர்வ பதினொன்றும் ஒன்பது மானுடம்
நீர்பறவை நாற்காலோர் பப்பத்து - சீரிய
பந்தமாந் தேவர் பதினு லயன்படைத்த
அந்தமில்சீர்த் தாவரநா லைந்து "

என்ற வெண்பாக்கொண்டு தெளிக. இறைவன் இங்ஙனம் விரிந்தும் அவற்றிற்கு உள்ளுணர் பொருளாயும் (உயிராயும்) இருத்தலை அறியாதவர் ஆணவமலத்துளழுந்திய அறிவிலிகளேயாவர் என்பது கருத்து. 'மனிதர்கள்' என்ற சொற் பயன் மனமிருந்தும் அதன் பயன் கொண்டிலர் என்ற குறிப்புணர நின்றது.

ஆதித்தன் சந்திரன் அங்கி எனப்பலர்
போதித்த வாறெலி பொங்கெரி நீர்புவி
வாதித்த சத்தாதி வாக்கு மனாதிகள்
ஓதுற்ற மாயையின் விந்துவின் உற்றதே. 410

இம் - எனின், சுத்தமாயையினின்று தோன்றியனவே அனைத்துலகும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சூரியன் சந்திரன் அக்கினி எனப் பல தேவர்களும், அறிபொருளாகக் காட்டிய வான், காற்று, தீ. நீர், நிலம் என்ற பஞ்சபூதங்களும், பேசப்படுகிற சத்தம் முதலிய தன்மாத்திரைகளும், வாக்கு முதலிய கன்மேந்திரியங்களும், மனம் முதலான அந்தக்கரணங்களும் ஆகச் சொல்லப் பெற்ற இவை அனைத்தும் அசுத்தமாயை சுத்த மாயை இவற்றினின்று தோன்றியனவே என்றவாறு.

போதித்த வான் – அறிவுருவாகிய ஆகாயம்.

## 10. திதி

இவ்வண்ணம் சர்வசிருஷ்டி யுரைத்த தம்பிரான் மூலர் பத்துத் திருமந்திரங்களால், நிலைபேறாகிய திதியை உணர்த்துவான் எடுத்துக்கொண்டார். திதியாவது முன் படைக்கப்பட்டன யாவும் தத்தம் வினைப்போகங்களை நுகரச்செய்து காத்தல். இத்தொழில் ஊட்டிக் கழிக்கும் உபாயமாதலின் உடலளிப்பாய சிருட்டியின் பின்னர் வைக்கப் பட்டது.

புகுந்துநின் றான்வெளி யாய்இரு ளாகிப்
புகுந்துநின் றான்புகழ் வாய்இகழ் வாகிப்
புகுந்துநின் றான்உடலாய்உயி ராகிப்
புகுந்துநின் றான்புந்தி மன்னிநின் றானே. 411

இம் – எனின், இறைவனே எங்கும் வியாபியாய் நின்று காக்கின்முன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : புத்தியுள் நிறைந்து நிற்கின்ற இறைவன், வெளியுள் விளங்கும் ஒளியாயும். அதற்கு மறையாகிய இருளாயும் புகழ்ச்சியாயும். இகழ்ச்சியாயும், உடலாயும், உயிராயும் கலந்து நின்றனன் என்றவாறு.

வெளி – ஆகாயம் ; பரவெளியாகிய ஞானம். இருள் - அஞ்ஞானம், புகழ்வு - ஞானகாரியம். இகழ்வு - அஞ்ஞான காரியம். உடல் சடமாய் இடந்தந்துநிற்பது. உயிர் வியாபகமாய் இடத்துள் எங்குமாய் நிறைந்து நிற்பது. புந்தி - அறிவு.

தானே திசையொடு தேவரு மாய்நிற்கும்
தானே உடலுயிர் தத்துவ மாய் நிற்கும்
தானே கடல்மலை யாதியு மாய்நிற்கும்
தானே உலகில் தலைவனு மாமே. 412

இம் — எனின், இறைவன் எல்லாமாய் நிற்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இறைவனே திசைகளும், அவற்றில் உறைகின்ற தேவர்களுமாய் நிற்பன் ; உடலாயும், அதனுள் தங்கும் உயிராயும், தத்துவங்களாயும் நிற்பன்; கடல், மலை முதலானவையாயும் நிற்பன்; உலகிற்குத் தலைவனுமாவான் என்றவாறு.

எல்லாமாய் நிற்றலாவது உடனாய் நிற்றல், தலைவனுமாமே என்றது வேறாய் நிற்றல்.

உடலாய் உயிராய் உலகம தாகிக்
கடலாய்க் கார்முகில் நீர்பொழி வானாய்
இடையாய் உலப்பிலி எங்குந்தா னாகி
அடையார் பெருவிழி அண்ணல்நின் றானே. 413

இம் – எனின், இறைவன் காண்பானும் காட்சிப் பொருளுமாய் நிற்றல் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : உடலாயும், உயிராயும், உலகமாயும் கடலாயும், கரியமேகம் நீரைப் பொழிகின்ற வானம் ஆகிய இவையாயும் இவற்றின் உள்ளுறைபவனாயும் எங்கும் கேடற்ற பொருளாயும், எங்கும்சர்வவியாபி யாயும் சென்று பற்றுதலைப் பொருந்திய பெரிய கண்களையுடைய அண்ணலாகிய பரமேசுவரன் நின்றான் என்றவாறு.

ஆகவே கண்ணும், கண்ணையுடையவனாகியும், கடல் மலை முகில் முதலிய காட்சிப்பொருளாயும் இறைவன் எழுந்தருளிக் காக்கின்றான் என்பது கருத்து.

தேடுந் திசைஎட்டுஞ் சீவன் உடலுயிர்
கூடு மரபிற் குணஞ்செய்து மாநந்தி
ஊடும் அவர்தம துள்ளத்து ளேநின்று
நாடும் வழக்கமும் நான்அறிந் தேனே. 414

இம் – எனின், இறைவன் உள்ளத்துள் நின்று தேடப்படும் பொருளாதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சிவபெருமான், தேடப்பெறுகிற எட்டுத் திசைகளிலும், சீவனாகிய உயிர் உடலோடு கூடும் வகையில் குணங்களை உண்டாக்கி, மாறுபட்ட அவ்வான்மாக்களின் உள்ளத்துள்ளே நின்று, அவர்களைக் காத்தருளும் வழக்கத்தையும் நான் அறிந்தேன் என்றவாறு.

இத்திருமந்திரமும். சர்வசிருஷ்டியில் வரும் (406) திருமந்திரமும் ஒன்றுபோலக் காணப்படினும் பாட வேற்றுமையுடைமையும் அதிகார இயைபிற்கு ஏற்பப் பொருள் மாற்றமுடைமையும் கூர்ந்து தெளிக.

நாடுதல் - விரும்பிக்காத்தல். குணபேதத்தால் மாறுபட்ட உயிர்களின் உள்ளத்தே நின்று அவரவர்கள் பரிபாகத்திற்கேற்பப் பாதுகாக்கின்றான் இறைவன் என்றவாறு. ஊடுதல் – பிணங்குதல்.

தானொரு காலந் தனிச்சுட ராய்நிற்கும்
தானொரு கால்சண்ட மாருத மாய்நிற்கும்
தானொரு காலந் தண்மழை யாய்நிற்கும்
தானொரு காலந்தண் மாயனு மாமே. 415

இம் – எனின், இறைவன் சுடர், மாருதம் முதலியனவாய் நிற்றலை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : இறைவன் தானொருகாலம் ஒப்பற்ற ஒளிப்பொருளாயும், சண்டமாருதமாயும், குளிர்ந்த மழையாயும், தண்ணிய திருமாலாயும் இருப்பன் என்றவாறு.

தனிச்சுடர் – சூரியன், சண்டமாருதம் – வேகமான காற்று.

அன்பும் அறிவும் அடக்கமு மாய்நிற்கும்
இன்பமும் இன்பக் கலவியு மாய்நிற்கும்
முன்புறு காலமும் ஊழியு மாய்நிற்கும்
அன்புற ஐந்தில் அமர்ந்துநின் றானே. 416

இ-ம் – எனின், இறைவன் இருப்பு இப்படி என்றல் நுதலிற்று.

இ – ள் : பஞ்சபூதங்களினும் அன்புடன் எழுந்தருளியிருக்கும் இறைவன், அன்பு ; அறிவு ; அடக்கம் ; இன்பம், இன்பம் விளைக்கும் புணர்ச்சி ஆகிய எல்லாமாய் நிற்பன்; மேலும் தோற்றக் காலமும், இறுதிக் காலமுமான ஊழியுமாக இருப்பன் என்றவாறு.

இறைவன் அன்பு முதலிய உயிர்க்குணமாகியும் புணர்ச்சி முதலாகிய தொழிலாகியும், பொழுதாகியும் இருப்பன் என்பது கருத்து.

உற்று வளைவான் அவனே உலகினைப்
பெற்று வளைவான் அவனே பிறவியைச்
சுற்றிய சாலும் குடமுஞ் சிறுதூதை
மற்றும் அவனே வளையவல் லானே. 417

இ-ம் – எனின், இறைவனே உலகிற்கு நிமித்த காரணன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : இந்தப் பிரபஞ்சத்தைப் பொருந்தி சிருஷ்டிப்பவனும், உயிர்களைப் பெற்றுப்பிறவியைக்

கொடுப்பவனும் சால் குடம் தூதை மற்றுமுள்ள எல்லாவற்றையும் வனையவல்லவனும் இறைவனே என்றவாறு.

உற்று - அசுத்தமாயையைக் கலக்கி. பெற்று - உயிர்களைப்பெற்றுத் தாம் அம்மையப்பராக இருந்து, சுற்றிய சால் - திரிகையைச் சுற்றியதால் ஆன சால், சால் - பெரிய மிடா. தூதை - கலயம். சால் குடம் முதலியன சிறியவும் பெரியவுமாகிய உடற்பேதங்களை உணர்த்தி நின்றன.

உள்ளுயிர்ப் பாயுட லாகிநின் றான்நந்தி
வெள்ளுயி ராகும் வெளியான் இலங்கொளி
உள்ளுயிர்க் கும்உணர் வேயுட லுட்பரந்து
தள்ளுயி ராவண்ணந் தாங்கிநின் றானே. 418

இம் — எனின், உடலினுள்ளே உயிர் தள்ளப் பெறாது தங்கி நிற்கும்வண்ணம் தாங்கி நிற்பவன் சர்வேஸ்வரனே என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : உள்ளே பூரிக்கப்பெறும் பூரகமாயும் உடலாகியும் நின்று நிறைந்துள்ளவனும், அநாதியே மலமொன்றாலும் பற்றப்பெறாத சுத்தான்மாவாக வீற்றிருக்கும் பரவெளி வடிவானவனும் ஆகிய சிவன், விளங்குகின்ற ஒளியுடன் சுவாசிக்கும் உணர்வோடு இயைந்த உடலுட் பரவி நின்று உயிரானது தங்கால எல்லைக்குள் தள்ளப்படா வண்ணம் காத்து நின்றான் என்றவாறு.

'உள்ளுயிர்ப்பாய்' என்றது "என்னுளே உயிர்ப்பாய்ப் புறம்போந்து புக்கு" என்ற அப்பர் திருக்குறுந் தொகையை நினைவூட்டுகிறது.

வெள்ளுயிர் - சுத்தான்மா. ஆன்மாக்களாகிய நாம் கேவலநிலையிலும் மலத்துள்ளே அழுந்திக் கிடக்கின்ற அசுத்த ஆன்மாக்கள்; இறைவனோ என்றும் மலம் பற்றாத சுத்தான்மா; ஆதலின் இங்ஙனம் கூறினார். வெளி - பரவெளி; பூதாகாய மன்று

உள் உயிர்க்கும் உணர்வு ஏய் உடலுள் பரந்து உயிர் தள்ளாவண்ணம் தாங்கிநின்றான் எனக் கூட்டி, திதிக்கேற்பப் பொருள்கொள்க. உடலில் உயிர் தங்கி நிற்பதும் இறைவன் கருணையால் என்றபடி.

தாங்கருந் தன்மையுந் தானவை பல்லுயிர்
வாங்கிய காலத்து மற்றோர் பிறிதில்லை
ஓங்கி எழுமைக்கும் யோகாந்த மவ்வழி
தாங்கிநின் றானும்அத் தாரணி தானே. 419

இம் - எனின், இறைவனே சங்காரகாரணனாய் எல்லாவற்றையும் தாங்கிநிற்பவன் என்பதுணர்த் துதல் நுதலிற்று.

இ - ள்: அங்ஙனந்தாங்கிய அரியதன்மையும், தான் பல்லுயிர்களாகிய அவைகளை ஒருசேரச் சங்கரித்த காலத்து வேறெவரும் எஞ்சிநின்றார் களில்லை யாதலால் ஆறாதாரங்களையும் கடந்து ஓங்கிநின்ற துவாதசாந்தமாகிய யோகாந்தத் தானத்து தாரணி முதல் எல்லாவற்றையும் தாங்கி நின்றானும் அவனே என்றவாறு.

தாங்கு அருந்தன்மை எனப் பிரித்துத் தாங்கிய அருமை எனப் பொருள்கொள்க. இது மேல் மந்திரத்துக் கூறியதனை அநுவதித்து நின்றது.

வாங்கிய காலம் - சர்வசங்காரகாலம். மற்றோர் பிறிதில்லை - மற்றோரும் பிறிதும் இல்லை என்பதாம். "வேறு இல்லை உண்டு ஐம்பால் மூவிடத்தன" ஆதலின் மற்றோர் பிறிதில்லை என முடிந்தது.

எழுமைக்கும் - ஏழுநிலைகளுக்கும் அணியாவன மூலாதாரமுதல் ஆறும், கடந்த துவாதசாந்தமுமாம். யோகாந்தம் - யோகத்தின் முடிந்த இடம். யோகம் ஆதாரங்களைப் பற்றி நிற்பது. அந்தம் அதனைக் கடந்த ஏழாவது நிலம்.

அத்தாரணி தாங்கி நின்றானும் தானே எனக் கூட்டுக. தாரணி - உலகம்.

**அணுகினுஞ் சேயவன் அங்கியிற் கூடி**
**நணுகினும் ஞானக் கொழுந்தொன்று நல்கும்**
**பணியினும் பார்மிசைப் பல்லுயி ராகித்**
**தணியினும் மண்ணுடல் அண்ணல்செய் வானே. 420**

இம் - எனின், இதுவுமது.

இ - ள் ; ஆன்மபோதத்தால் அணுகுவார் அணுகினும் அவர்களுக்குத் தூரத்திலுள்ளவனாகிய சிவன், தீயைப்போலச் சேர்ந்து அணுகினாலும் ஒப்பற்ற சிவஞானத்தைக் கொடுப்பான். இவ்வுல

கத்துப் பல உயிர்களாகி வணங்கினும் அவ்வுயிர்கட்கு நிலைபேறுடைய உடலை அண்ணல் செய்வான் என்றவாறு.

அணுகினும் நணுகினும் என்பன அண்மையிற் போதல் என்பதை உணர்த்தின. அருள் துணையால் அணுகுகின்றோம் என்பதன்றி ஆணவத்தால் அணுகுவார்க்குச் சேயவன். அங்கியிற்கூடி நணுகுதலாவது தீயினிடம்போல அகலாது அணுகாதிருத்தல். தீயைக்காண இருள் விலகிப் பொருள் புலப்படுமாறுபோல ஞான ஒளிபோலும் இறைவனை அணுகினால் சிவஞானம் வெளிப்படும். பணிதல் - விழுந்து வணங்குதல், தணிதல் - தன்முனைப்பு அடங்குதல்.

## 11. சங்காரம்

அங்ஙனம் போகநுகர்ச்சியின் காறும் ஆன்மாக்களைப் பாதுகாத்துவந்த இறைவன், அவர்கள் இளைப்பாறற் பொருட்டாகச் சங்கரித்தலைச் சொல்லுகின்றது. "அழிப்பு இளைப்பாற்றல்" என்னும், சித்தித்திருவிருத்தப் பகுதியையும் ஈண்டு இணைத்து எண்ணுக.

**அங்கிசெய் ஈசன் அகலிடஞ் சுட்டது**
**அங்கிசெய் ஈசன் அலைகடற் சுட்டது**
**அங்கிசெய் ஈசன் அசுரரைச் சுட்டது**
**அங்கியவ் வீசற்குக் கைஅம்பு தானே. 421**

**இ-ள் - எனின், அக்னிப்பிரளயம் அறிவித்தல் நுதலிற்று.**

இ - ள் : இறைவன் நிலத்தையும், அலைகளோடு கூடிய கடலையும். அசுரர்களையும் சுட்டனன். அந்த அக்கினி அந்த இறைவற்குக் கையம்பாக விளங்குவது என்றவாறு.

ஈசனால் அகலிடம் சுடப்பட்டது எனற்பாலது செயப்படுபொருளைச் செய்தது போலச் சொல்லியது.

இலயங்கள் மூன்றினும் ஒன்றுகற் பாந்த
நிலையன் றிழிந்தமை நின்றுணர்ந் தேனல்
உலைதந்த மெல்லரி போலும் உலகம்
மலைதந்த மாநிலம் தான்வெந் ததுவே. 422

இம் - எனின், பிரளய வகையும், தன்மையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : முடிவான பிரளயங்கள் மூன்றில் ஒன்று கற்பாந்தப்பிரளயம். இவ்வுலகங்களின் நிலை அன்றைக்கு இழிந்த தன்மையை அடியேன் உணர்ந்தேன், மலைகளோடு கூடிய இப்பெரிய நிலவுலகம் உலையிலிட்ட அரிசிபோன்றது. வெந்து ஒழிவது என்றவாறு.

மூன்றாவன தினப்பிரளயம், கற்பாந்தப்பிரளயம் மகாப்பிரளம் என்பன. மகாப்பிரளயமாகிய பேரூழி தன்னாலறியப்படாத ஒன்று. கற்பாந்தம் வரையில் நான் அறிவேன் என்றருளியது திருமூலதேவநயனார்து கற்பம் வரையுள்ள வாழ்வைக் காட்டுவதாகலாம்.

உலையிலிட்ட அரிசி மேலும் கீழுமாக மாறிச் சுழன்று வேதல்போல இவ்வுலகமும் துன்ப இன்பப் புயலிற்பட்டுச் சுழல்கிறது; இறுதியில் வெந்தொழி யும் என்றவாறும்.

பதஞ்செய்யும் பாரும் பனிவரை எட்டும்
உதஞ்செய்யும் ஏழ்கடல் ஓதம் முதலாம்
குதஞ்செய்யும் அங்கி கொளுவியா காச
விதஞ்செய்யும் நெஞ்சின் வியப்பில்லை தானே. 423

இம் – எனின், யோகிகட்குக் கற்பாந்தப்பிரளயம் ஓர் வியப்பன்று என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : நுகர்தற்கு இடந்தந்து நிற்கும் உலகும், குளிர்ந்த மலைகள் எட்டும், மகிழ்ச்சியை விளைவிக்கின்ற ஏழு கடல்களின் பெருக்கமும் முதலிய எல்லாவற்றையும் மிகுதியான தீயைக் கொளுத்தி ஆகாயம் போல வெறுவெளியாக்கும் இறைவன் திருவுள்ளத்து வியப்பொன்றுமில்லை என்றவாறு.

குதம் - புட்டமுமாம். குதம் செய்யும் அங்கி - மூலாக்கினி; குண்டலினி; அதனை எழுப்பி நிலம் முத லாகிய எல்லாவற்றையும் அழிப்பார்க்குப் பிரளயம் ஓர் வியப்புத் தருவதாகாது என்பது உட்கருத்து. பார் என்றது ஆறுதாரங்களை, மலை என்றது அவற்றின் சக்கரங்களை. ஆகாசவிதஞ் செய்தலாவது பராகாய தரிசனம் செய்தல். பராகாயதரிசனஞ் செய்வார்க்குப் பார் முதலாயின புலனாகாமையின் இது உண்மையான யோகிகட்குப் பிரளயமென்பது

உணர்த்தப்பெற்றது. "பரமே பார்த்திருப்பார் பதபதார்த்தங்கள் பாரார்" என்பதும் இணைத்து எண்ணற்குரியது.

கொண்டல் வரைநின் றிழிந்த குலக்கொடி
அண்டத்துள் ஊறி யிருந்தெண் டிசையாதி
ஒன்றின் பதஞ்செய்த ஓம்என்ற அப்புறக்
குண்டத்தின் மேல்அங்கி கோலிக்கொண் டானே. 424

இம் - எனின், விந்துவும் நாதத்தில் ஒடுங்கிய தன்மை உணர்த்துதல் நுதலிற்று

இ - ள் : மேகங்கள் சூழ்ந்த மலையினின்றிழிந்த குலக்கொடியாகிய விந்துசத்தி, பொருட்பிரபஞ்சம் எல்லாவற்றிலும் பரவியிருந்து, திக்குக்காலம் முதலிய வற்றை இடமாகக்கொண்டிருந்த பின்பு, ஓம் என்ற பிரணவமாகிய நாதத்தில் ஒடுங்கி, மூலாதாரத்தில் குண்டலினியாக அமைத்தனன் என்றவாறு.

கொண்டல்வரை என்றது அருள் மலையாகிய சிவத்தை. குலக்கொடி விந்துசத்தி. இழிதலாவது சிவம் சிருஷ்டி யுன்முகரான காலத்து வெளிப்பட்ட பராசத்தியின் பதினாயிரத்தில் ஒரு கூறான ஆதிசத்தியின் கூறான விந்துவாக எளிவந்து இரங்கி என்றவாறு.

அண்டத்துள் ஊறியிருத்தல் அதாவது சத்தப் பிரபஞ்சமாக வியாபித்திருத்தல்.

எண்திசையாதி ஒன்றின் பதம்செய்த ஓம் என்ற அப்புறம் - பொருட்பிரபஞ்சமாகக் காரியப்

பட்டுப் புவனபோகங்களாக விரிந்து மீட்டும் நாதத்தில் ஒடுங்கிய பின்பு.

குண்டத்தின்மேல் அங்கி கோலிக்கொண்டான்: எல்லாவற்றையும் தம் மூலாதாரத்தில் கரந்து கொண்டனன் என்று சர்வசங்காரத்தை யோக முறையில அமைத்துக்காட்டியவாறு.

நித்தசங் காரம் உறக்கத்து நீள்மூடம்
வைத்தசங் காரமுஞ் சாக்கிரா தீதமாம்
சுத்தசங் காரத் தொழிலற்ற கேவலம்
உய்த்தசங் காரம் பரன்அருள் உண்மையே. 425

இம் - எனின், தினச்சங்காரத்தின் இயல்பை மொழிதல் நுதலிற்று.

இ-ள்: தினப்பிரளயம் உறக்கத்தால் ஒன்றையும் உணராதிருக்கின்ற நிலை. ஆன்மாக்களுக்கு என்று அமைத்த சங்காரம் விழிப்புநிலையைத் தாண்டி யுள்ள கனநிலையாம். சுத்தசங்காரமாவது ஆன்மா ஆணவத்துள் அழுந்திக்கிடக்கிற கேவலநிலை, இறை வன் நமக்கென்றுய்த்தருளிய சங்காரமாவது காரண சரீரத்தோடு சிவசத்தியில் ஒடுங்கியிருக்கும் நிலை யாம் என்றவாறு.

தினச்சங்காரம் சொப்பனமும், சுழுத்தியும், துரியமும், துரியாதீதமும் என நால்வகை நிலைத்து. நனவுலகில் வினைப்போகங்களைத் துய்த்த ஆன்மா இளைப்பாறற்பொருட்டாகச் சில கருவிகரணங்கள் மட்டும் முறையேகாரியப்பட, ஏனையவைசெயலற்று

மடங்கிக் கிடக்க இருப்பதாகிய நிலைகள் நான்கும் தினப்பிரளயமாம் எனத் தெரிவித்தவாறு.

நித்தசங் காரம் இரண்டுடல் நீவுதல்
வைத்தசங் காரமும் மாயாள்சங் காரமாம்
சுத்தசங் காரம் மனாதீதம் தோய்வித்தல்
உய்த்தசங் காரஞ் சிவனருள் உண்மையே. 426

இ-ம் – னின் சங்காரபேதங்கட்குத் தத்துவக் கருத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : நித்தியசங்காரம் தூலமும் சூக்குமமுமாகிய இரண்டுடலையும் கடத்தல்; வைத்தசங்காரம் மாயையைக்கடந்து நிற்றல்; சுத்தசங்காரம் மனமும் செயலற்று மடங்க இருத்தல்; உய்த்தசங்காரம் துரியா தீதத்தில் சிவசத்தயில் ஒருங்கியிருத்தல் என்றவாறு.

இரண்டு உடலாவன தூல சூக்கும சரீரங்கள். மாயாள்–மாயை. மாயையைக் கடந்து நிற்றலாவது அழுந்தி யனுபவிக்கும் நிலையினின்று பிரிதல்; விருப்பு வெறுப்பின்றி நுகர்வ நுகர்தல். சிவனருள் உண்மையே என்றது இறைவன் திருவடிக்கண்ணே இரண்டறக் கூடிநிற்கும் நிலை. இவற்றின் இயல்பை.

இருவினைச் செயல்கள் ஒப்பின் ஈசன்றன் சத்திதோயக்
குருவருள் பெற்றுஞான போகத்தைக் குறுகிமுன்னைத்
திரிமலமறுத்துப் பண்டைச்சிற்றறி வொழிந்து ஞானம்
பெருகிநா யகன்றன் பாதம் பெறுவது சுத்த மாமே

என்னும் சித்தித்திருவிருத்தானும் அறிக.

நித்தசங் காரங் கருவிடர் நீக்கினல்
ஒத்தசங் காரம் உடலுயிர் நீவுதல்
வைத்தசங் காரம் கேவலம் ஆன்மாவுக்(கு)
உய்த்தசங் காரம் சிவமாகும் உண்மையே. 427

இம் – எனின், இதுவும் சங்காரவகையும் இயல்பும் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : நித்தசங்காரம் கருவிகளால் விளையும் துன்பங்களை நீக்குதலாம். அதனுல் ஒத்ததாகிய சங்காரம் உயிர் உடலைத் துறத்தலாம். வைத்தசங்காரம் ஆன்மாவுக்குள் கேவல நிலையாம். ஆன்மாக்களுக்கு என்று உய்த்தசங்காரமாவது சிவமாதலாகிய உண்மைத் தன்மையாம் என்றவாறு.

கருவி இடர் எனற்பாலது கருவிடர் எனத் தொகுத்தல்விகாரம் பெற்றது. கரு இடர் எனப் பிரித்து, பிறவித்துன்பம் என்பாரும் உளர்.

நித்தசங் காரமும் நீடிளைப் பாற்றுதல்
வைத்தசங் காரமும் மன்னும் அனுதியிற்
சுத்தசங் காரந் தோயாப் பரனருள்
வைத்தசங் காரமும் நாலாம் மதிக்கிலே. 428

இம் – எனின், சங்காரத்தின் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : நித்தசங்காரம் நீண்ட இளைப்பினை ஆறச் செய்தலாம். வைத்தசங்காரம் மனம் முதலான அந்தக் கரணங்கள் அவிந்தநிலையில் மன்னுதலாம். சுத்த சங்காரம் பரனருள் தோயாமையாம். வைத்த

சங்காரம் அவனருளில் தங்குதலாம். இவ்வண்ணம் சங்காரம் ஆராயும்போது நான்காகும் என்றவாறு.

நித்தசங்காரம் எனத்தொடங்கும் நான்கு திருமந்திரங்களானும் நித்தசங்காரம், வைத்தசங்காரம், சுத்தசங்காரம், உய்த்தசங்காரம் எனச் சங்காரம் நால்வகைப்படும் எனவும், அவற்றுள் முறையே நித்த சங்காரமாவது, ஆன்மாக்கள் அன்றாடம் நுகர்ந்த வினைப்போகத்தான் விளைந்த அயர்வினை ஒழித்தற் பொருட்டாகவும் கருவிகரணங்களுக்குண்டான துன்பங்களைத் துடைப்பதற்காகவும், தூல சூக்கும உடல்களை விட்டுக் காரண சரீரத்துடன் உறக்கத்து நீண் மூடமாய், அழுத்தியிடு மூலந்தன்னில் துரியாதீதம் அதனிடையே புருடனொன்றி யமருஞானமாய் நிற்கும் நிலை. நீண்மூடமாய் என்றதற்கு ஞானமாய் என்று உரைகண்டது ஞானம் அறிதற்பாடின்றி அறிவு ஒன்றாய் அடங்கியிருக்கும் நிலையில் மூடம் போலிருத்தலின், ஞானியைப் பாலன்போலக் கூறினார்.

வைத்தசங்காரமாவது, மனமுதலிய அந்தக்கரணச் சேட்டைகளும் அடங்கிச் சாக்கிராதீதமான துரிய நிலையில், மாயையின் விருத்தியும் அற்றுக் கேவலமாய் (தனியாய்) நிற்கும் நிலை.

சுத்தசங்காரமாவது, தொழிலற்ற கேவலமாய் மனமுதலிய அந்தக் கரணங்களுக்கு அப்பாற்பட்டதாய் பரனிடம் தோயாமல் நின்மலமாய் நிற்குநிலை.

உய்த்தசங்காரமாவது, அருளிற்றோய்ந்து அருளை யன்றி வேறொன்றையும் அறியாமல், சிவமாகும் உண்மையில் தோய்ந்திருக்கின்ற நிலை.

இந்நான்கு திருமந்திரங்களிலும், இம்முறை மாறிக் கூறிப்பெற்றிருப்பினும், இயல்புகள் ஒத்துள்ளமை நான்கு மந்திரங்களையும் இயைத்து நோக்கி எண்ணுக.

இறுதியில் 'மதிக்கில் நாலாம்' என்பது தொகுத்துச் சுட்டல் என்னும் உத்தி.

பாழே முதலா எழும்பயிர் அவ்விடம்
பாழே அடங்கினும் பண்டைப்பாழ் ஆகாவாம்
வாழாச்சங் காரத்தின் மாலயன் செய்தியாம்
பாழாம் பயிராய் அடங்கும்அப் பாழிலே. 429

இம் - எனின், பரசிவத்தினின்றும் எல்லாம் தோன்றி மீட்டும் அங்கே ஒடுங்கும் என்றுரைத்தல் நுதலிற்று.

இ - ள் : பாழிலிருந்து முதற்கண் தோன்றிய பயிராகிய பிரபஞ்சம், மீட்டும் அப்பாழிலியே அடங்கினும், முன்னைய பாழில் அடங்காமல் வாழ்வைக் கொடாத சங்காரத்தினின்று திருமாலும் அயனுமாகிய இவ்விருவர் செயலுமாகிய காத்தலும் படைத்தலுமாகும். பின்னர் முளைத்தற்குரிய வன்மையற்ற பயிராக நிஷ்கள சிவத்தில் அடங்கும் என்றவாறு.

பாழே முதலா எழும்பயிர் - "முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமாய், அப்பாலும் பாழென்றறி" என்றவண்ணம் விளங்கும் நிஷ்கள சிவம் பராசத்தியை அதிட்டித்து நின்று ஐந்தொழி லாற்றுதலின், பாழாகிய பரசிவத்தை முதலாகக் கொண்டு எழும் ஆன்மப்பயிர் என்று அறிவித்த வாறு. அங்ஙனம் தனு கரணாதிகளோடு கூட்டப் பட்ட உயிர் திரும்பவும் பரசிவத்துள் ஒடுங்கினு லும் பண்டை நிலை எய்தாது. மலம் மாயை கன் மங்களின் பந்தம் உடையவாய் வேறுயே நிற்கு மாதலின் பண்டைப்பாழ் ஆகாவாம் என்றும், அந் நிலையில் மீண்டும் மலவாதனை நீங்க, பிறந்து இருத் தலின் சங்காரத்தின் மால் செய்தியும் அயன் செய்தி யும் ஆம்என்றும் ஆணவமல வன்மைகெட்டு வறுத்த வித்துப்போலப்பாழும் பயிராய் ஆனபோது அப்பர சிவத்தின் வியாபகத்து அடங்கியிருக்கும் என்பார் பாழாம் பயிராய் அப்பாழிலே அடங்கும் என்றும் அருளிச்செய்தார்.

தீயவைத் தார்மின்கள் சேரும் வினைதனை
மாயம்வைத் தான்வைத்த வன்பதி ஒன்றுண்டு
காயம்வைத் தான்கலந் தெங்கும் நினைப்பதோர்
ஆயம்வைத் தாயுணர் வாரவைத் தானே. 430

இம் - எனின், இறைவன் நமக்குச் செய்த உபகா ரத்தை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: வினைகளைப் புசிக்க உடலெடுத்த உயிர் கள், அதனை அழுந்தி நுகர, மாயையோடு கூட்டிய இறைவன் உயிர் தங்குவதற்கு இடமாக உதவிய

உடலாகிய வலிய இடம் ஒன்றுண்டு; அங்ஙனம் உடலொடு கூட்டியவனாகிய இறைவன் உயிர்களாகிய நம்மொடு கலந்து எவ்விடத்தும் நினைப்பதற்குரிய அடியார் கூட்டத்தையும் அளித்து ஆராய்ந்து உணர்தற்கு உரிய அறிவையும் நிரம்ப அளித்தான், ஆதலால் இனி வரக்கடவனவாய வினைகளை, வன்மையை வாட்டி நுகருங்கள் என்றவாறு.

மாயம் வைத்தான் என்றது ஆடைக்கு உவர் மண்ணழுக்கேற்றிய வண்ணானைப்போல் கன்மங்களை ஈடுபட்டு நுகர மாயா மலத்தோடு கூட்டியவன் என்றவாறு. இதனையே "விச்சதின்றியே" என்னும் மணிவாசகம் "வச்சு வாங்குவாய்" என்று கூறுதல் காண்க. வன்பதி என்றது அங்ஙனம் மாயையொடு கூட்டுவதற்கு ஏற்றதாக அளித்த வலிய உடலாகிய இடத்தை உணர்த்திற்று. வன்பதி இன்னது என்பதனைப் பின்னரும் 'காயம் வைத்தான்' என்றதால் விளக்கியவாறு. ஆயம்-கூட்டம். நினைப்பதோராயம்—தியானிக்கின்ற அடியார்கள் கூட்டம். நேயம் மலிந்தவர் கூட்டத்துக் கலந்திருப்பவர்கட்கு மால் அறுமாதலின் ஆயுணர்வு ஆரவைத்தான் என்றார். கொடுத்த கருவியாகிய ஞானத்தைக் கொண்டு இனிச்சேரும் வினைகளாகிய ஆகாமிய சஞ்சிதங்களைக் கெடுத்து, பிராரத்தத்தை மட்டும் நுகர்மின்கள் என்பதாம்

இந்தத் திருமந்திரம் திருப்பெருகு சிவஞானத்தைக்கொண்டு மலமாதனையகற்றிச் சிவனடிசேர்க என்பதால் இது உய்த்த சங்காரமாய் இவ்வதிகாரத்துக்கு இயைபுடையதாயிற்று.

## 12. திரோபவம்

அஃதாவது, பரம கருணாநிதியாகிய பரசிவம் ஆன்மாக்களுக்குப் போகங்களைப் புசிப்பித்து, கன்மங்களை நீக்குமளவும் தன்னை மறைத்து, உலக போகங்களை உண்மை என்று கருதச்செய்து, கன்மங்களிற் சுவை உண்டாக்கி கன்மபலன்களாகிய போக்கியப் பொருள்களில் அழுந்தச் செய்யும் அனுக்கிரகமாம். இதனைப் பத்துத் திருமந்திரங்களான் உணர்த்துவான் எடுத்துக்கொண்டார்.

உள்ளத் தொருவனை உள்ளுறு சோதியை
உள்ளம்விட் டோரடி நீங்கா ஒருவனை
உள்ளமுந் தானும் உடனே இருக்கினும்
உள்ளம் அவனை உருவறி யாதே. 431

இ-ளின்: இறைவன் உடனாயிருந்தும் உயிர் அவனை உணராது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: உயிர்க்குயிராயுள்ள ஒப்பற்ற தலைவனை, ஒளிவடிவானவனை, மனத்தைவிட்டு ஓரடியும் நீங்காதவனை, தற்பரம்பொருளும் உயிரும் உடனாயிருக்கினும் உயிர் அவனுடைய உருவத்தை அறியமாட்டாது என்றவாறு.

உள்ளம் – ஆன்மா; "காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்" என்புழிப்போல. இறைவன் ஒன்றாயும், தெற்றென விளங்குகின்ற சோதியாயும் பிரிவற்றும் உடனாயிருக்கினும் அவன் மறைப்புச் சத்தியால் அவன் உருவை அறியாது என்பது கருத்து. அன்புளங் கொண்ட தாய்

அருமை மகனுக்கென்று அமைத்த உணவை மறைத்து, அவாவை எழுப்பி, அதனைச் சுவைத்து உண்ணச் செய்யுமாறுபோல இறைவன் தன்னை மறைத்து வினைப்போகத்தில் அழுந்தி அனுபவிக் செய்கிறான் என்பதாம்.

இன்பப் பிறவி படைத்த இறைவனும்
துன்பஞ்செய் பாசத் துயருள் அடைத்தனன்
என்பிற் கொளுவி இசைந்துறு தோல்தசை
முன்பிற் கொளுவி முடிகுவ தாக்குமே. 432

இ-ளின், இறைவன் உடலைக் கொடுத்து. பாசத்துளழுத்தி, பரிபாகமுறுத்துதலை உணர்த்து தல் நுதலிற்று.

இ-ள்; முத்தியின்பம் பெறுதற்காகப் பிறவி யைத் தந்த இறைவனும் துன்பத்தை விளைக்கின்ற பந்தத்துள் அடைத்தவனாய் என்போடு சேர்த்தி, பொருந்திய தோலாலும் தசையாலும் வன்மை பொருந்தப் பொருத்தி, இறைவன், உயிரை முடிவு பெறுவதாக்கும் என்றவாறு.

முத்தியின்பம் பெறுதற்கென்று எடுத்த இப் பிறவி பாசத்துளழுந்தி உடலன்பு குன்றாது அழியச் செய்வது அவன் திரோபவ ஆற்றல் என்பது கருத்து. கொளுவி என்பன இரண்டும் சேர்த்தி அல்லது பொருத்தி என்னும் பொருளில் வந்தன. முடிகுவது ஆக்கும் என்பதற்கு, திரோபவம் என்ற எழுவாய் வருவித்து உரைக்க. இறைவனும் அடைந்தனனாய் கொளுவி ஆக்கும் என இயைப் பினும் அமையும்,

இறையவன் மாதவன் இன்பம் படைத்த
மறையவன் மூவரும் வந்துடன் கூடி
இறையவன் செய்த இரும்பொறி யாக்கை
மறையவன் வைத்த பரிசறி யாரே. 433

இம் – எனின், மாயா இயந்திர தனுவினுள் இறைவன் வைத்த மறையை உயிர்கள் அறியா என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : சீருத்திரன், திருமால், இன்பவாயிலாகப் படைத்த பிரமன் ஆகிய மூவரும் ஒருங்கு கூடி இறைவன் ஆணையின்வண்ணம் செய்த இந்தப் பெரிய உடலாகிய பொறியுள் அவன் வைத்த இரகசியத்தின் தன்மையை யாரும் அறியார் என்றவாறு.

இரும்பொறி யாக்கை என்பது "மாயா இயந்திரதனு" என்ற சிவஞானபோதப் பகுதியைச் சிந்திக்கச் செய்வது, மறையாவது உடலே தானாய் மாலையும் மாதரும் முதலிய போகங்களே பரமாய் எண்ணச் செய்த மறை.

காண்கின்ற கண்ணொளி காதல்செய் யீசனை
ஆண்பெண் அலியுரு வாய்நின்ற ஆதியைப்
பூண்படு நாவுடை நெஞ்சம் உணர்ந்திட்டுச்
சேண்படு பொய்கைச் செயலணை யாரே. 434

இம் – எனின், இதுவும் இறைவன் திரோபவத்தால் தன்னை மறைத்தருள் செய்கையை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : காணுகின்ற கண்ணுக்கு உடனுயிருந்து காட்டுகின்ற ஒளியைப்போல உயிர்களைக் காதலிக்கின்ற் ஈசனும் ஆணும் பெண்ணும் அலியாய் நின்ற முதற்பரம்பொருளும் ஆகிய இறைவனை, பூண்பட்ட நாவோடு கூடிய நெஞ்சத்தால் நினைப்பற நினைந்து, பராகாயத்தின் கண்ணே உண்டாகிற பொய்கையாகிய அமுதத்தடாகத்தோடு உடனுறைதலைப் பொருந்தாராயினர் இவ்வான்மாக்கள் என்றவாறு.

இத்திருமந்திரம் காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல் காண உள்ளத்தைக் கண்டு காட்டலின், அயரா அன்பின் அரன்கழல் செல்ல வேண்டிய ஆன்மா, அதனை மறந்து அயர்கின்றதே என்பதை அறிவித்தவாறு. சேண்பாடு பொய்கை என்ற உருவகம், பராகாயத்திலுள்ள அமுதத்தடாகத்தை உணர்த்திநின்றது. அதனைச் செயலாவது அதிலிருந்து அமுதமானது ஊறி உள்ளங்கால்வரை வியாபித்து இன்பமயமாகச் செய்தல்,

பூண்படு நா - பூணணிந்த நாக்குச் செயலற்று இருப்பதுபோலச் செயலற்ற நாக்கு. இவ்வண்ணம் மந்திரங்களும் தியானங்களும் மானசிகமாக நிகழ்த்த வேண்டியதை வற்புறுத்தியவாறு.

தெருளும் உலகிற்கும் தேவர்க்கும் இன்பம்
அருளும் வகைசெய்யும் ஆதிப் பிரானும்
சுருளுஞ் சுடருறு தூவெஞ் சுடரும்
இருளும் அறநின் றிருட்டறை யாமே. 435

இ-ம் - எனின், அனைவர்க்கும் திரோபவத்தை ஆக்குபவன் அரனே என்றல் நுதலிற்று.

இ - ள் : எல்லா உலகங்கட்கும், தேவர்கட்கும், இன்பம் அருளும்வண்ணம் உபகரிக்கும் ஆதிபரமேசுரன், சுருண்டு எரியும் அங்கியும் தூய்மையும் வெம்மையுமுற்ற சுடர்களாகிய சூரிய சந்திரர்களும் இவர்கட்கு மாறாகிய இருளும், தன் வன்மையழிய நிலை பெற்று இருட்டறை போல ஆவர் என்றவாறு.

என்றது திரோபவிப்பர் என்றவாறும். சுருளுஞ் சுடர் என்றது. மாறிமாறி வரும் சூரிய சந்திரர்கள் எனவும் தூவெஞ்சுடர் – தூயநெருப் பெனவும் உரைப்பாருமுளர். ஒளியையும் இருளையும் மறைக்கின்ற பேரிருளாய் இறைவன் மறைப்பர் என்பதாம்.

அரைக்கின் றருள்தரும் அங்கங்கள் ஓசை
உரைக்கின்ற ஆசையும் ஒன்றொடொன் றெவ்வாப்
பரக்கும் உருவமும் பாரகத் தானாய்க்
கரக்கின் றவைசெய்த காண்டகை யானே. 436

இ-ம் - எனின், இதுவும் தத்துவமாதியவற்றை இறைவன் மறைத்தருளும் வன்மையை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அனைவரும் காணத்தக்க பேரழகனாகிய பெருமான் உறுப்புக்களாலும் குரலாலும் சொல்லப் படுகின்ற விருப்பு வெறுப்பு முதலிய குணங்களாலும் ஒன்றோடொன்று ஒவ்வாதனவாக எங்கும் ரவியுள்ள உருவங்களும் உலகமும் தானாய் மறைக்

கின்ற தன்மையைச் செய்த, வருத்துகின்ற திரோபவச் சத்தியைத் தருவான் என்றவாறு.

வருத்துகின்ற திரோபவமும் அருளலே என்பார் அரைக்கின்ற அருள் என்றார். காண்டகை யான் உருவமும் பாரகமும் தானாய் கரக்கின்றமை செய்த அரைக்கின்ற அருள் தரும் எனக்கூட்டிப் பொருள் கொள்க. ஒன்றோடொன்றொவ்வாத தனு கரணங்களையும் புவனங்களையும் படைத்தன் இறைவ மறைத்து அவற்றை நுகரவும் செய்கின்றான் என்பதாம். அங்கங்கள் - முகம் தோள் கை கால் முதலிய உறுப்புக்கள். ஓசை - குரல். ஆசை கூறவே உப லக்கணத்தால் வெறுப்பு முதலிய உயிர்க் குணங்கள் அனைத்துங்கொள்க.

ஒளித்துவைத் தென்னுள் ளுறவுணர்ந் தீசனை
வெளிப்பட்டு நின்றருள் செய்திடும் ஈண்டே
களிப்பொடுங் காதன்மை என்னும் பெருமை
வெளிப்பட் டிறைஞ்சினும் வேட்சியு மாமே. 437

இம் - எனின், அங்ஙனம் திரோபவம் செய்யினும் அவனைக் காதலாற் கசிந்துருக அவன் வெளிப் படுவன் என்பது அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : என்னுள் மறைத்து வைத்து நன்றாகத் தியானிக்கின் அவன் இவ்விடத்திலேயே வெளிப் பட்டு நின்று அருள் செய்வன்; ஆதலால் மன் மகிழ்ச்சியோடு காதன்மை என்னும் தலையன்பு வெளிப்பட நீங்கள் வணங்கினால் உம்முடைய விருப் பமும் நிறைவேறும் என்றவாறு.

உணர்ந்து வெளிப்பட்டு என்னும் செய்தென் எச்சங்களைச் செயவெனெச்சமாக்கிப் பொருள் கொள்க. தந்தை மறைக்கினும் தன்கடமை அறிந்து செய்யும் தனயனை அத்தந்தை பாராட்டுதல் போலத் தன்னை மறைத்து வினைப்போகத்துள் அழுத்தினும் ஆன்மாக்கள் காதலாகிக் கசிந்து வழிபட இறைவன் வெளிப்பட்டு அருளுவன் என்பதாம். வேட்சி—வேட்கை. சி: பண்புப்பெயர் விகுதி, இறைஞ்சின் நும் வேட்சியும் ஆம் எனக் கண்ணழிவு செய்து பொருள் காண்க.

நின்றது தானாய் நிறைந்த மகேசுரன்
சென்றங் கியங்கும் அயன்திரு மாலவன்
நன்றது செய்யும் மலர்மிசை மேலயன்
என்றிவ ராகி இசைந்திருந் தானே. 438

இம் – எனின், இறைவனே மூவராய்க் கரந்து நின்று முத்தொழில் இயற்றுபவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : தற்சொரூபமாய் நிறைந்து நின்ற சிவமே அதிகாரசிவமாய மகேச்சுரனாகி, தனது ஆணை வழிச் சென்று இயங்குகின்ற பிறப்பில் பெம்மானாகிய உருத்திரன், திருமால், நன்மையைச் செய்கின்ற தாமரை மேலுள்ள பிரமன் என்ற இவர்களாகியும் பொருந்தி இருந்தான் என்றவாறு.

இறைவனே திரோபவித்து முத்தொழிலைச் செய்யும் மூவராவன் என்றவாறு. அயன் - பிறப்பிலி ; அஜன் என்றதன் திரிபு. மயன் திருமாலவன்

என இயைத்து மாயன் என்பதின் முதல் குறுக்க மாகக் கொண்டு திருமாலுக்கே அடையாக்குவாரும் உளர். அது பொருந்தாமை தெளிக. இறைவன் மூவராய்க் கரந்து நிற்கும் முதன்மையன் என அவனது திரோபவம் உணர்த்தியது இது ஆதலின் இவ்வதிகாரத்தோடு இயைபுடைமை காண்க,

ஒருங்கிய பாசத்துள் உத்தம சித்தன்
இருங்கரை மேலிருந் தின்புற நாடி
வருங்கரை ஓரா வகையினிற் கங்கை
அருங்கரை பேணு தழுக்கது வாமே. 439

இ-ம் - எனின், திரோபவத்தால் ஆன்மா அலைப் புண்ணுகின்றமை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : அடர்ந்த பாசிநிறைந்த குளத்துள் உத்தம சித்தமுடைய ஆன்மா பெரிய கரையின் மேலிருந்து இன்பம் பொருந்த ஆராய்ந்து இனி வரக்கடவ முக்திக் கரையை ஆராயாத தன்மையால் கங்கையாற்றின் அரிய கரையைப் பேணுது அழுக் காகிய மலத்துள் அழுந்துகின்றது என்றவாறு.

உத்தமசித்தன் என ஆன்மாவை விசேடித்தது திரோபவத்தைத் தந்தருளிய சிவமே மறைப் பகற்றும் வன்மையையும் உயிர்களுக்கு உதவியிருக் கின்றமையைக் குறித்தது. இருங்கரை என்றது உடலை.

மேலிருந்து இன்புற நாடலாவது, சுழுமுனை யிலும் அதற்கு மேலாகிய ஆக்ஞையிலும் துவாத

சாந்தப் பெருவெளியிலும் இருந்து பேரின்பத்தைப் பொருந்த ஆய்தல். அங்ஙனம் ஆய்வதால் வரக் கூடிய பயனைத் திருவடி நெடுங்கரை அருள் எனும் நலத்தால் கூட்டி "திருவடி நெடுங்கரை சேர்த்துமாசெய்யே" என்னும் பட்டினத்தடிகள் வாக்கைக்கொண்டு தெளிக. கங்கை அருங்கரை பேணுது அழுக்கதுவாம் என்றது கங்கைக் கரையிலிருந்தும் அதனைப் போற்றிக் கங்கை யுள்ளே தோய்ந்து அழுக்கைப் போக்கிக் கொள்ளாமல் மேலும் அழுக்கை ஏற்றிக்கொள்ளு கின்றது இந்த ஆன்மா என்பதாம்.

பிராரத்த கன்மத்தை நுகர்வதற்காக உதவிய திரோபவத்தைக் கொண்டு அதனைப் போக்கிக் கொள்ளாது, மேலும் ஆகாமிய சஞ்சிதங்களைத் தேடிக் கொள்ளுகின்றனவே ஆன்மாக்கள் என்று இரங்கிக் கூறியவாறு.

மண்ணொன்று தான்பல நற்கல மாயிடும்
உண்ணின்ற யோனிகள் எல்லாம் ஒருவனே
கண்ணொன்று தான்பல காணும் தனைக்காணு
அண்ணலும் அவ்வண்ண மாகிநின் றானே. 440

இ-ம் - எனின், இறைவனே உயிரோடு ஒன்றி நின்று எல்லாவற்றையும் கண்டு தன்னைக் காட்டா னுயினுன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : மண் ஒன்றே பலவகையான நல்ல கலங்களாகும்; அதுபோல இறைவன் ஒருவனே எல்லா யோனிகளாயும் இருப்பன்; கண் ஒன்றே

பலவற்றைக் கண்டும் தன்னைக் காணாது; இறைவனும் அவ்வண்ணமாகியிருந்தான் என்றவாறு.

பல நல் கலம் என்றது குடமும் மண்டையும் தூதையும் போல்வன. யோனிகள் என்றது, யோனிகள் வாய்ப்பட்டுப் பிறக்கும் பிறவிகள் மேல் நின்றன. கண் புறப்பொருளைக் காண உதவியாக இருந்தும் தன்னைக் காட்டாதவாறு போலத் தலைவனும் பிறவற்றைக் காட்ட உபகாரம் செய்தும் தன்னைக்காட்டானாயினன் என்பதாம்.

## 13. அநுக்கிரகம்

இனி அநுக்கிரகம் உணர்த்துவான் தொடங்கினார் அநுக்கிரகமாவது மலபரிபாகமுற்ற ஆன்மாக்களைச் சிவபிரான் தன் திருவடிகளிலே சேர்த்துக் கொள்ளுதல்.

எட்டுத் திசையும் அடிக்கின்ற காற்றவன்
வட்டத் திரையனல் மாநிலம் ஆகாசம்
ஒட்டி உயிர்நிலை என்னும்இக் காயப்பை
கட்டி அவிழ்க்கின்ற கண்ணுதல் காணுமே. 441

இம் - எனின், உடலைப் படைத்துக்கொடுக்கும் அநுக்கிரகத்தை மொழிதல் நுதலிற்று.

இ - ள் : எட்டுத்திசைகளிலும் சுற்றியடிக்கின்ற காற்றும், உலகைச்சுற்றியுள்ள வட்டமாகிய கடலும், அனலும் நிலமும் ஆகாயமும் ஆகிய ஐம்பூதங்களையும் ஒன்றுசேர்த்து உயர்நிலை என்று பேசப்பெறும் இவ்வுடலாகிய பையைச் சுருக்கி

விரிக்கின்ற இறைவன் இவ்வான்மாக்களுக்கு அநுக்கிரகிப்பன் என்றவாறு,

காற்றவன் - வாயு, அவன் என்பது காற்றை விசேடித்து வந்தது. காற்ருகிய அவன் எனக் கொண்டு இருபெயரொட்டாக்கலுமாம் வட்டத் திரை - வட்டமாகிய அலை இது ஆகுபெயராய்க் கடலையுணர்த்தி, அப்புத்தத்துவத்திற்குப் பெயரா யிற்று. இவ்வுடம்பைக் கட்டிச்சுருக்கி அவிழ்க்கின்ற இறைவன் என, உடலைப் பை யென்றதற்கேற்பக் கூறியது. காணும் - அநுக்கிரகிக்கும்.

உச்சியில் ஓங்கி ஒளிதிகழ் நாதத்தை
நச்சியே இன்பங்கொள் வார்க்கு நமனில்லை
விச்சும் விரிசுடர் மூன்றும் உலகுக்கும்
தச்சு மவனே சமைக்கவல் லானே. 442

இம் - எனின், அவனநுக்கிரகங் கொள்ளுமுறை உணர்த்துதல் நுதலிற்று

இ - ள்: பிரமரந்திரத்தில் ஓங்கியெழுந்து பிரகாசிக்கின்ற பரநாத தரிசனத்தை விரும்பி இன்பங் கொள்ளும் உயிர்கட்கு இறப்பில்லை. இவ்வுலகை யாக்குதற்குரிய வித்தும், சோமசூரியாக்கினியாகிய ஒளிப்பொருள் மூன்றும் உலகுமாகிய இவற்றிற்குச் செய்பவனுக இருந்து இயற்றவல்லவனும் அவனே என்றவாறு.

இதனுல், சிருஷ்டித்தலும் அவன் ஆன்மாக்களுக்குச் செய்யும் அநுக்கிரகத் தொழிலே ஆதலின் அவன் பரநாதவடிவாய் ஆஞ்ஞாசக்கரத்து விளங்கு

கிறுன்; அவனைத் தரிசித்தலே பேரருளைப்பெறுதற்கு உபாயமாம் என்பது கருத்து, விச்சு: வித்து என்பதன்போலி. தச்சு - தச்சுத்தொழில், ஈண்டு இணைப்பிக்கிற செய்பவன் என்னும் பொருளில் வந்தது.

குசவன் திரிகையில் ஏற்றிய மண்ணைக்
குசவன் மனத்துற்ற தெல்லாம் வனைவன்
குசவனைப் போல்எங்கள் கோன்நந்தி வேண்டில்
அசையில் உலகம் அதுவிது வாமே. 443

இம் - எனின், இறைவன் திருவுள்ளக் கருத்துப் போல இவ்வுலகம் படைக்கப்பெறுகின்றது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் ; குயவன் சக்கரத்தில் வைத்த மண்ணைக் கொண்டு தன் மனத்தெண்ணிய பொருளையெல்லாம் இயற்றுவன். அவனைப்போல எங்கள் இறைவனும், திருவுள்ளத்து எண்ணிப் புடைபெயரின் இவ்வுலகம் பலவகையாகும் என்றவாறு.

சிவன் சிந்தையின் வண்ணமே மாயையைக் கொண்டு சிருஷ்டிக்கப்பெறுவது இவ்வுலகம் முதலிய பொருளெல்லாம் என்பது கருத்து. "ஆரியன் குலாலனாய்நின்று ஆக்குவன் அகிலமெல்லாம்" என்ற சித்தித் திருவிருத்தமும் ஈண்டு எண்ணுக.

விடையுடை யான்விகிர் தன்மிகு பூதப்
படையுடை யான்பரி சேஉல காக்கும்
கொடையுடை யான்குண மேகுண மாகும்
சடையுடை யான்சிந்தை சார்ந்துநின் ருனே. 444

இம் — எனின்; இதுவுமது.

இ—ள் : இடபவாகனத்தை உடையவனும், விகிர்தனும், மிக்க பூதப்படை உடையவனும் ஆகிய இறைவன் தான் எண்ணியபரிசே இவ்வுலகை ஆக்கும் வள்ளல் வைத்தகுணமே இவ்வுலகப் பொருளின் குணமாகும், ஆதலின் சடையுடையானுகிய பேரமேசுரன் ஒவ்வோராான்மாக்களுடைய சிந்தையைச் சார்ந்து நின்ருன் என்றவாறு.

சிந்தை சார்ந்து நின்று அருள்வழங்குகின்ருன்; அதனையறிந்து உய்யும் ஆன்மாக்களே அவனடி சார்வர் என்பதாம்.

உகந்துநின் றேபடைத் தான்உல கேழும்
உகந்துநின் றேபடைத் தான்பல ஊழி
உகந்துநின் றேபடைத் தான்ஐந்து பூதம்
உகந்துநின் றேஉயிர் ஊன்படைத் தானே. 445

இம் — எனின், இறைவன் விரும்பியே இவ்வுலகைப் படைத்து அளித்து அழித்து அருளுவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : விரும்பி இவ்வுலகேழனையும் இறைவன் படைத்தான்; பல ஊழிகளையும் படைத்தான்: ஐம்பூதங்களைப் படைத்தான்; உயிருக்கு நிலைக்களமாக உடலையும் படைத்தான் என்றவாறு.

ஊன் - ஆகுபெயராக உடலை உணர்த்திற்று. படைத்தலும் அருளல்வகையுள் ஒன்ருகலின் இவ்வதிகாரத்தோடியை புடைத்தாயிற்று இம்மந்திரம்.

படைத்துடை யான்பண் டுலகங்கள் ஏழும்
படைத்துடை யான்பல தேவரை முன்னே
படைத்துடை யான்பல சீவரை முன்னே
படைத்துடை யான்பர மாகிநின் ருனே. 446

இ-ம் – எனின், பரசிவமே எல்லாவற்றையும் எல்லாரையும் படைத்தருளியது என்றது நுதலிற்று.

இ-ள்: பண்டே இவ்வுலகங்கள், ஏழையும் உலகத்துள் பல தேவர்களையும், சீவர்களையும் படைத்துப் பரம்பொருளாயும் இருந்தான் என்றவாறு.

ஆதி படைத்தனன் ஐம்பெரும் பூதங்கள்
ஆதி படைத்தனன் ஆயபல் ஊழிகள்
ஆதி படைத்தனன் எண்ணிலி தேவரை
ஆதி படைத்தவை தாங்கிநின் ருனே. 447

இ-ம் – எனின், ஆதிபகவன் படைத்தளித்தலை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஐம்பெரும் பூதங்களையும், பல பிரளயங்களையும். எண்ணற்ற தேவர்களையும் படைத்தும் அவற்றைத் தாங்கிக் காத்தும் அருள்செய்தான் ஆதி முதல்வன் என்றவாறு.

அகன்ருன் அகலிடம் ஏழுமொன் ருகி
இவன்ரு னெனநின் றெளியனும் அல்லன்
சிவன்ருன் பலபல சீவனும் ஆகி
நவின்ருன் உலகுறு நம்பனு மாமே. 448

இ-ம் - எனின், இறைவன் எல்லாவற்றோடும் ஒன்றாயும் வேறாயும் இருந்து, குருவாயும் வந்து அருள் செய்தலை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்; அகன்ற இடத்தையுடைய இவ்வுலகம் ஏழுடனும் ஒன்றாயிருந்து வேறாயும் ஆனவன். இவ்வண்ணம் இருப்பினும் எளியனல்லன். பலவாகிய சீவனிடத்து வியாபியாயிருந்தும், குருவாகத் திருமேனி தாங்கிவந்தும் உபதேசித்தான். உலகங்களுக்கெல்லாம் உற்ற தலைவனுமாவன் என்றவாறு.

அகன்றான் - வேறானான். விரிந்தான் எனலுமாம். இவ்வண்ணம் உடனா யிருப்பவன்தானே எனின் எளியனல்லன்; அரியன். சிவனே, சீவனாகித் திருமேனிதாங்கி குருவாய் வந்து உபதேசம் தந்தருளுவன் என்பதுகருத்து. நம்பன் - சிவன்.

உண்ணின்ற சோதி உறநின்ற ஒருடல்
விண்ணின் றமரர் விரும்பும் விழுப்பொருள்
மண்ணின்ற வானோர் புகழ்திரு மேனியன்
கண்ணின்ற மாமணி மாபோ தகமே. 449

இ-ம் - எனின், இறைவன் உயிர்களோடு ஒன்றி நிற்கும் நிலைவேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : உயிருக்குள் எழுபரஞ்சோதியாயும், உயிர் பொருந்தி நிற்றற்கு ஏற்ற ஒருடலாயும், விண்ணுலக வாசிகளாகிய தேவர்கள் விரும்பிப் போற்றும் பொருளாயும், பூசுரர் புகழ்கின்ற திருமேனிகொண்டவனாயும், கண்ணுட் கருமணி

யாயும் இருக்கும் இறைவனே அறியப்படு பொருளாவன் என்றவாறு.

ஆரும் அறியாதவ் வண்டத் திருவுருப்
பார்முத லாகப் பயிலுங் கடத்திலே.
நீரினிற் பால்போல நிற்கின்ற நேர்மையைச்
சோராமற் காணும் சுகம்அறிந் தேனே. 450

இம் - னினி, இறைவன் பாலில் நீர்போல் எங்குமாய்க் கலந்திருக்கும் நிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : யாவரானும் அறியப்படாத அண்டமே வடிவான அரனுருவைப் பூமி முதலாகச் சொல்லப் படுகின்ற குடத்திலே விளங்கும் நீரிற் பால்போல் நிலவுகின்ற நேர்மையை இடைவிடாது தரிசிக்கும் இன்பத்தை யான் அறிந்தேன் என்றவாறு.

அண்டமெலாம் தானாய் நிற்கும் விசுவ ரூபத்தை எவரும் அறியார் ; அடியேனோ கடத்து நீரிற் பால் போலக் கலந்து நிற்கின்ற நிலையை இடைவிடாது அனுபவிக்கிறேன் எனத் தன் மேலிட்டுத் திருவருள் பெறும் உபாயத்தை விளக்கியவாறு

## 14. கர்ப்பக்கிரியை

ஐந்தொழிலாற்றலை அறிவித்த திருமூலதேவ நாயனார் முதற்றொழிலாகிய படைப்புக்கு இன்றியமையாத கருப்பத்தொழில்களை நாற்பத்தொரு

திருமந்திரங்களால் விளக்குவான் தொடங்கினர். அஃதாவது உயிர்கள் கருப்பத்திற் செயற்படுதல்.

ஆக்குகின் றுன்முன் பிரிந்த இருபத்தஞ்(சு)
ஆக்குகின் றனைவ ஞதிஎம் ஆருயிர்
ஆக்குகின் றுன்கர்ப்பக் கோளகை யுள்ளிருந்(து)
ஆக்குகின் றுன்அவன் ஆவ தறிந்தே. 451

இம் - எனின், உயிர்களின் பரிபாக நிலைக்கு ஏற்ப இறைவன் கருவுள்ளிருந்து ஆக்குமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : முற்பிறப்பிலே பிரிந்துபோன இருபத்தைந்து தத்துவங்களையும் ஆக்குகின்றுன்; எம்முயிரையும் தத்துவத் தொடர்புடையதாகப் படைக்கின்றுன். கருப்பாசயத்திலிருந்து, எவ்வெக்காலத்து எவை எவை இவ்வுடல்வளர்ச்சிக்கு இன்றியமையாதனவோ அவற்றைப் படைக்கின்றுன் இறைவன் என்றவாறு.

முன் பிரிந்த இருபத்தைந்தாவன முற்பிறவியில் உடல்விட்டுப் பிரிந்தகாலத்து அகன்றுபோன பூதம் ஐந்தும், புலன் ஐந்தும், ஞானேந்திரியம் ஐந்தும் கன்மேந்திரியம் ஐந்தும், அந்தக்கரணம் நான்கும், புருடன் ஒன்றும் ஆம். ஆருயிர் ஆக்குதலாவது உயிரைப் பற்றிநின்ற மலக்கோணை நீக்கி ஞானம் பெறுவித்தல். ஏனைய வெளிப்படை.

அறிகின்ற மூலத்தின் மேல்அங்கி அப்புச்
செறிகின்ற ஞானத்துச் செந்தாள் கொளுவிப்
பொறைநின்ற இன்னுயிர் போந்துறை நாடப்
பறிகின்ற பத்தெனும் பாரஞ்செய் தானே. 452

இம் - எனின், கருவினின்று வெளிப்படுக்குங்காலம் இதுவென்றல் நுதலிற்று.

இ - ள்: யோகிகளால் அறியப்படுகின்ற மூலாதாரத்திற்குமேல் அங்கிவடிவான நீர்சூழ நிறைந்திருக்கின்ற கருப்பாசயத்துள், சிவந்த தாளைச் சுருட்டிக்கொண்டு சுமையாயிருந்த இனிய உயிரானது வெளிப்போகுந் துறையை நாட, அக்கருவை விட்டு நீங்குகிற பத்து மாதங்கள் என்னும் கரையை அவ்வுயிர்க்கு அமைத்தான் என்றவாறு.

அங்கி அப்பு-ஜாடராக்கினி என்னும் உணவைச் சீரணிக்கச்செய்யும் பித்தநீர். இந்நீர் வெப்பம் உடையதாகலின், அங்கி அப்பு எனப்பட்டது. கருவிலிருக்கும் குழவிக்குப் பண்டைப் பிறவியின் வாதனை நீங்காதிருக்கு மாகலின், ஞானத்துச் செந்தாள் கொளுவி என்றருளப்பெற்றது. பொறை நின்ற இன்னுயிர் - இதுவரை பித்தநீர் எரிவிலும் குடரிலும் வருந்திப் பொறுமையோடிருந்த இனிய உயிர்.

பறிகின்ற - அவ்விடத்தை விட்டு நீங்குகின்ற. பத்தெனும் பாரம் - பத்து மாதங்கள் என்கிற கரையை. கரையாவது எல்லை. அதாவது காலவரையறை. 'செறிகின்ற தானத்து' எனவும் பாடம்,

**இன்புறு காலத் திருவர்முன் பூறிய**
**துன்புறு பாசத் துயர்மனை வானுளன்**
**பண்புறு காலமும் பார்மிசை வாழ்க்கையும்**
**அன்புறு காலத் தமைத்தொழிந் தானே. 453**

இம் — எனின், தாயும் தந்தையுமாகிய இருவர் பாசத்துள் உயிர்களுக்கு உலகவாழ்வை உதவினுன் இறைவன் என்றல் நுதலிற்று.

இ-ள் : பராகாயத்திலுள்ளவராகிய இறைவன், தாயும் தந்தையுமாகிய இருவர் இன்புற்றகாலத்து. முன்பிறவியிலேயே மிகுந்துள்ள துன்பமிக்க பாச மாகிய துன்பமனையில் பரிபாகர் பெறுங்காலத்தை யும், இப்பூமியிற் பிறந்து வாழ்கின்ற வாழ்க்கை யையும், அன்பு மிகுந்த காலத்து ( உயிர்கட்கு ) அமைத்துவிட்டான் என்றவாறு.

வான் உளன், இருவர் இன்புறு காலத்து, துன்புறு பாசத்துயர்மனை, பண்புறு காலமும் பார்மிசை வாழ்க்கையும் அன்புறுகாலத்து அமைத்து ஒழிந்தான் என கூட்டிப் பொருள் காண்க.

கருவை ஒழிந்தவர் கண்டநால் மூவேழ்
புருடன் உடலில் பொருந்துமற் றோரார்
திருவின் கருக்குழி தேடிப் புகுந்த(து)
உருவம் இரண்டாக ஓடி விழுந்ததே. 454

இம் — எனின், ஆணும் பெண்ணுமாக உருமாறிப் பிறத்தலை உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : பிறப்பற்றவர்களாகிய ஞானிகள் கண்ட இருபத்தைந்து தத்துவங்களும் புருடனுகிய உயிரோடு உடலிலே பொருந்துமதனை உலகவர் அறியார்கள். அழகினையுடைய கருக்குழியில் தேடிப் புகுந்ததாகிய உருவம் ஆணும் பெண்ணுமாகிய இரண்டு உருவமாக ஒடிப்பாய்ந்தது என்றவாறு.

ஞானிகள் புருடனில் இருபத்தைந்து தத்துவங்கள் அமைந்தமை அறிவர். உலகவர் அதனை அறியாமை மட்டும் அன்றிக் கருக்குழி தேடிப் புகுந்தது ஆணாக பெண்ணாக ஒடிவிழுந்ததும் அறியார் என்பது கருத்து.

விழுந்தது லிங்கம் விரிந்தது யோனி
ஒழிந்த முதலைந் துயிரோ டேறிப்
பொழிந்து புனல்பூதம் போற்றுங் கரணம்
ஒழிந்த நுதல்உச்சி உள்ளே ஒளித்ததே. 455

இம் - எனின், இதுவும் கருவின் உற்பத்தி அறிவித்தல் நுதலிற்று.

இ-ள் : இலிங்கம் விழுந்தது; யோனி விரிந்தது; ஒழிந்து நின்ற முதல் ஐந்து வாயுக்களும், உயிரோடு ஏறிச்சென்று புனல்வடிவாகப் பொழிந்து பூதங்களைத் தோற்றுவிக்கின்ற தன்மாத்திரைகளை அறியும் கரணங்களாகச் சொல்லப்பட்ட நுதல்வழியாக உச்சியுள்ளே சென்று ஒளித்தது என்றவாறு

இலிங்கம் யோனி என்பன ஆண்குறி பெண்குறிகளை. ஒழிந்த முதலைந்து என்பது தசவாயுக்களில் பின் நிற்பனவாகிய ஐந்தும் ஒழிந்த பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன் என்னும் ஐந்து வாயுக்களை. இவையே உயிரோடு ஆண் நாதத்தின் வழியாகக் கருவிற்புகுவன. புனல் பொழிந்து - ஆண்விந்து கழன்று என்பதாம். பூதம் போற்றும் கரணம் ஒழிந்த நுதல் என்றது ஐந்து பூதங்களையும் தோற்றுவிக்கின்ற பஞ்ச தன் மாத்திரைகளை அறியும் ஞானேந்திரியங்களை

வழியாகக் கொண்டு இயங்குகின்ற அந்தக்கரணங்கள்; என்றது உருக்கொள்ளுங்காலத்து ஞானேந்திரியம் கன்மேந்திரியம் அந்தக் கரணம் முதலியவற்றின் வளர்ச்சியை ஒருவாறு குறிப்பித்ததாகக் கொள்ளலாம்.

பூவின் மணத்தைப் பொருந்திய வாயுவும்
தாவி உலகில் தரிப்பித்த வாறுபோல்
மேவிய சீவனில் மெல்லநீள் வாயுவும்
கூவி அவிழுங் குறிக்கொண்ட போதே. 456

இம் - எனின், தனஞ்சயன் என்னும் வாயு உபகாரப்படுதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பூக்களிடத்து மணத்தைப் பொருந்திய காற்று உலகில் எங்கும் பரவி அதனைத் தரிப்பித்தது போலக் கருவுட்புகுந்த உயிரில் உடலாய் மெல்ல நீளுகின்ற தனஞ்சயன் என்னும் காற்றும், குறிக்கொண்ட காலத்திலேயே இரைந்து கொண்டு உள்ளே செல்லும் என்றவாறு.

பூவிலுள்ள ஆண் மகரந்தத்தைக் காற்று எடுத்துச் சென்று எங்கும் பரப்பிப் பெண் அண்டகோசத்துப் படியச்செய்து தாவரக் கருவை வளர்ப்பது போலத் தனஞ்சயன் என்னும் காற்றானது ஆண்விந்துவோடு எழுந்து பெண் கருவில் நுழைகின்றது என்பதாம்.

போகின்ற எட்டும் புகுகின்ற பத்தெட்டும்
மூழ்கின்ற முத்தனும் ஒன்பது வாய்தலும்
நாகமும் எட்டுடன் நாலு புரவியும்
பாகன் விடானெனிற் பன்றியு மாமே. 457

இம் – எனின், புரியட்டகசரீரம் முதலியவற்றை இறைவன் உபகரியாவிடின் இழிந்த பிறவியாம் என்றல் நுதலிற்று.

இ - ள் : உள்ளே போகின்ற புரியட்டக சரீரங்களும், அவற்றுடன் புகுகின்ற வாயுக்கள் பத்தும், அவற்ருேடு கூடிய காமாதி எட்டுக் குணங்களும், அவற்றுடன் அழுந்தியிருக்கிற ஆன்மாவும், ஒன்பது வாயில்களும், எட்டு நாகங்களும், நான்கு குதிரைகளும் பாகனுகிய இறைவன் உபகரியாவிட்டால் பன்றியைப்போல இழிந்தபிறவியாய்விடும் என்றவாறு.

போகின்ற எட்டு – சூக்குமசரீர தத்துவங்களாகிய சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் புத்தி மான் அகங்காரம் என்பன. புகுகின்ற பத்து – பிராணன், அபானன், உதானன்; வியானன், சமானன். நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்பன.

புகுகின்ற எட்டு - காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம், துன்பம், அகங்காரம் என்பன. மூழ்கின்ற முத்தன் - இவற்றுள் திளைத்து நிற்கின்ற ஆன்மா. ஒன்பது வாய்தல் - கண், காது மூக்கு, வாய், குதம். குய்யம் என்பன. நாகம் எட்டு - ஞானேந்திரியங்களாகிய மெய் ஒன்றும், வாய் ஒன்றும், கண்ணிரண்டும், காது இரண்டும், மூக்கு இரண்டுமாய பாம்புகள் எட்டு. ஞானேந்திரியங்களை நாகமாக உருவகித்தலை “ ஐவாய் அரவு ” என்பதனுலும் அறியலாம்.

நாலுபுரவி - உயிர் ஏறிச்சென்று பொறிவழி யாகப் புலன்களைச் சென்று பற்ற உதவும் மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்பன. இக் கருவிகரணங் களை இறைவன் உதவாவிடின் பன்றியைப்போல இழிந்த பிறப்பினவாம் என்பது விளக்கியவாறு.

இதற்கு இவ்வாறன்றி, சூக்குமசரீர தத்துவங்கள் எட்டும், உட்புகுகின்ற பூதம் புலன் புரியட்டகம் ஆகிய ப்தினெட்டும், விடுகின்ற ஆன்மாவும், நவத் துவாரங்களும், குண்டலினியும், பன்னிரண்டு விரற் கிடையளவு புறம்போந்து போகும் பிராணன் ஆகியகுதிரையும் பாகன் விடாவிடில் பன்றியும் ஆம் என உரைப்பாருமுளர்.

ஏற எதிர்க்கில் இறையவன் ருகும்
மாற எதிர்க்கில் அரியவன் ருகும்
நேரொக்க வைக்கின் நிகர்போதத் தாகும்
பேரொத்த மைந்தனும் பேரர சாளுமே. 458

இம் - எனின், விந்துவின் மிகுதியையும் குறைவை யும் கொண்டு பயன் கூறுதல் நுதலிற்று.

இ - ள் : விந்துவானது, நாத சத்திக்கு மேற்பட்டு எதிர்த்துச் சென்றால், பிறக்கும் மைந்தன் உருத்திர னவான். அமைதியாக எதிர்ததுச்சென்றல், திருமா லாவான். இரண்டும் சமமாக இருப்பின், பூமேலய னவான். இருவரும் ஒத்து விளைந்த காமத்தால் உற்பவித்த மைந்தனயின் அரசனவான் என்ற வாறு.

இது, சுக்கில சுரோணிதங்கள் ஏறியும் குறைந்தும் ஒத்தும் இருப்பதனால் விளையும் குணமாறுபாடு கூறிற்று

ஏயங் கலந்த இருவர்தஞ் சாயத்துப்
பாயுங் கருவும் உருவா மெனப்பல்
காயங் கலந்தது காணப் பதிந்தபின்
மாயங் கலந்த மனோலய மானதே. 459

இ-ளின், இருவர் கலப்பால் காயம் வளர்ந்தமையை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பொருந்தி அவ்விடத்து வருந்திய தாய் தந்தையராகிய இருவரின் சாயத்தால் பாய்ந்த கருவும் உரு ஆம் என்று பல வடிவங்கொண்டு தம்முட் கலந்ததாய தாயும் தந்தையும் காணக் கருவுட் பதிந்த பின் அவர்கள் இருவர்களுக்கும் மோகவயத்தால் விளைந்த மன வொருமைப்பாடு விளைந்தது என்றவாறு,

விந்துவும் நாதமும் கழன்று கருவுட் பதிகின்ற காலத்துக் கலவிசெய்யும் இருவருக்கும் சிற்றின்பத்தால் மனோலயம் விளைந்தது என்பது கருத்து. சாயம் என்றது சுக்கில சுரோணிதங்களை. ஏய் அங்கு அலந்த இருவர் - கலவியுட்பொருந்தி அவ்விடத்து வருந்திய ஆணும் பெண்ணும், பலகாயம் கலந்தது காணப் பதிதலாவது பல துளிகளாகவும் உயிரணுக்களாகவும் சென்று பரவுதலை.

கர்ப்பத்துக் கேவல மாயாள் கிளைகூட்ட
நிற்குந் துரியமும் பேதித்து நினைவெழ
அற்புறு காமியம் எட்டாதல் மாயேயம்
சொற்புறு தூய்மறை வாக்கினுஞ் சொல்லே. 460

இம் – எனின், ஆன்மா கருப்பத்தில் கேவலாவத்தையிலிருந்து சாக்கிரம் எய்துதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : கருப்பத்தில் ஆன்மா, கேவலாவத்தையில் கட்டுண்டு நிற்கும்போது மாயை தத்துவ சமூகமாகிய உறவைச் சேர்ப்பிக்க. தான் நிற்கும் கேவல துரியத்திலிருந்து பிரிந்து நினைத்தலாகிய நனவு நிலை விளைய அன்பினுலுறுகின்ற காமிய எண்ணம் எட்டும்படியாகச் சுத்தமாயையின் காரியமாகிய சொற்றன்மை வாய்ந்த வேதவாக்குகளைப் போலச் சொல்விளையும் என்றவாறு.

ஆன்மா ஆணவமல பந்திதனுய்க் கருப்பத்துள் கட்டுண்டு கிடக்கின்றபோது, மாயாசத்தி. தத்துவங்களைக் கூட்ட. தான் கேவல துரியநிலையிலிருந்து படிப்படியாகக் கேவல சாக்கிரத்தை அடைந்து காமியப் பயன்களை விரும்பி வாக்குக்களைச் சொல்லும் வன்மையைப் பெறும் என்பது கருத்து, வன்மையைப் பெறுமேயன்றிக் கருவுட் பேசாது.

என்பால் மிடைந்து நரம்பு வரிகட்டிச்
செம்பால் இறைச்சித் திருந்த மனைசெய்து
இன்பால் உயிர்நிலை செய்த இறையோங்தம்
நண்பால் ஒருவனை நாடுகின் றேனே. 461

இ-ம் — னின், எமக்கு உடலை உதவிய ஒருவனை நாடவேண்டும் என்று உலகவரை வலியுறுத்தல் நுதலிற்று

இ-ள் : எலும்புகளாற் பின்னி, நரம்புகளாகிற கயிற்றால் வரிந்து கட்டி, இரத்தத்தோடு கூடிய இறைச்சியால் திருத்தமாக வீட்டை அமைத்து, இன்பத்தோடு உயிர் நிற்றற்கிடமாகி உதவிய ஒப்பற்ற இறைவனை மிக்க நண்போடு தேடுகிறேன் என்றவாறு.

செய்த ஒருவனாகிய இறையை ஓங்கு நண்பால் நாடுகின்றேன் என இயைக்க.

பதஞ்செய்யும் பால்வண்ணன் மேனிப் பகலோன்
இதஞ்செய்யும் ஒத்துடல் எங்கும் புகுந்து
குதஞ்செய்யும் அங்கியின் கோபம் தணிப்பான்
விதஞ்செய்யு மாறே விதித்தொழிந் தானே. 462

இ-ம் — எனின், இறைவன், மூலத்தீயின் வெப்பம் ஒழிக்க விதித்தமை விளக்குதல் நுதலிற்று.

இ-ள் : ஆன்மாக்களைப் பரிபாகப்படுத்துகின்ற பால்போலும் நிறமுடையவனும், சூரியனைப் போன்ற செந்நிறத் திருமேனி உடையவனுமாய் இறைவன், இன்பத்தை விளைவிக்கின்ற உடலெங்கும் ஒத்துப்பரவி, குதத்திலிருந்து கிளம்பும் தீயின் கொடுமையைத் தணிப்பதற்காகக் கலவி விதங்களைச் செய்யுமாறு பணித்தான் என்றவாறு.

உயிருக்கு உயிராயும் உடலிலும் வியாபித்து நிற்கும் இறைவன் நாதத்தீயின் வெப்பத்தைத் தணிப்பதற்காகப் போக ஆற்றலைப் படைத்துதவினன் என்பது கருத்து. குதம் செய்யும் அங்கி - குறிவழியாகத் தோன்றும் அங்கியின் காரியமாகிய சுக்கிலம். போககாலத்து மூலாதாரத்திலிருந்து எழும் வெப்பத்தாலேயே சுக்கிலம் உருகிப் பெருகுகிறது ஆதலின் இங்ஙனம் கூறினர். இணைவிழைச்சு இயற்றும் போகத்தின் வன்மையும் இறைவன் இயற்றியதே என்பதாம்.

ஒழிபல செய்யும் வினையுற்ற நாளே
வழிபல நீராட்டி வைத்தழு வாங்கிப்
பழிபல செய்கின்ற பாசக் கருவைச்
சுழிபல வாங்கிச் சுடாமல் வைத்தானே. 463

இ-ன், இறப்புற்ற ஆன்மாவை மீட்டும் பிறவிக்கண் உய்த்தலை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மரணங்கள் பலவற்றை விளைவிக்கின்ற வினைபொருந்தியகாலத்துப் பலவகையாலும் நீராற் கழுவி, நடையிலே கிடத்தி, உறவினர் அழுகின்ற செய்கையிலிருந்து தூக்கி எடுத்து, பல பாவங்களைச் செய்கின்ற பாசத்தோடு கூடிய கருவை வினைச்சுழிகள் பலவற்றிலிருந்தும் எடுத்து மலவெப்பம் தாக்காதவாறு காப்பாற்றினன் என்றவாறு,

ஒழி என்பது முதனிலைத் தொழிற்பெயராய் மரணத்தை உணர்த்தி நின்றது. பல ஒழி - பல மரணங்கள். அழு என்பது முதனிலைத் தொழிற்பெயர். வாங்கி - கை தூக்கி. கரு என்றது கருவுள்

அமைந்த ஆன்மாவை. வினைகள் சுழியாக உருவகிக் கப்பெற்றன. சுடாமல் வைததலாவது, மலவாதனை தாக்காதவாறு பரிபாகமுறுத்துதல்.

சுக்கில நாடியில் தோன்றிய வெள்ளியும்
அக்கிர மத்தே தோன்றுமவ் வியோனியும்
புக்கிடும் எண்விரல் புறப்பட்டு நால்விரல்
அக்கரம் எட்டும்எண் சாணது வாகுமே. 464

இம் - எனின், சுக்கில சுரோணிதக் கலப்பால் எட்டு அக்கரங்கள் எண்சாண் உடம்பாகின்றன என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : சுக்கிலநாடியிலிருந்து தோன்றுகின்ற வெள்ளை நிறமான சுக்கிலமும். அவ்வாறே யோனியி லிருந்து தோன்றும் சுரோணிதமும், எட்டு விரற் கிடையளவு புறப்பட்டு நால்விரலளவு உள்ளே புகும். அப்போது எட்டு அக்கரங்களும் எண்சாண் உடம்பு ஆகும் என்றவாறு.

சுக்கில நாடி-விந்துக்குழாய். வெள்ளி-வெண்மை யான ஆண்கரு. யோனி-சுரோணிதமாகிய பெண் கரு. இடத்தின் பெயர் இடத்துநிகழ் பொருளுக் காயிற்று. எண்விரல் புறப்பட்டு நால்விரல் புக் கிடுமென மாறுக. அக்கரம் எட்டாவன பிருதிவி முதலான பூதங்கட்கு ஓதப்பட்ட பீஜங்களாகிய ல, வ, ர, ய, ஹ என்பனவும் பிரணவத்தின் உறுப் புக்களாகிய அகார உகார மகாரங்களுமாம். இவற் ருல் எண்சாணுடம்பு ஆதலாவது பஞ்சபூதங்களும் அகாரமாகிய நாதமும், உகாரமாகிய விந்துவும்

மகாரமாகிய மாயையும் கலந்து உடல் உண்டாம் கலந்து உடல் உண்டாம் என்பதுணர்த்தியவாறு.

போகத்துள் ஆங்கே புகுந்த புனிதனும்
கோசத்துள் ஆகம் கொணர்ந்த கொடைத்தொழில்
ஓகத்துள் ஆங்கே இரண்டெட்டு மூன்றைந்து
மோகத்துள் ஆங்கொரு மூட்டைசெய் தானே. 465

இம் – எனின், பஞ்சகஞ்சுகனாய் இருபத்தைந்து தத்துவங்களுடன் ஆன்மா கருவுட்படுதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : போகத்திலீடுபட்ட புனிதனாகிய ஆண் மகன், தனது கோசம் வழியாக உடலைக்கொணர்ந்த கொடைத்தொழில் இந்த உலகத்து இருபத்தைந்து தத்துவங்களுடன் மாயையை முதற்காரணமாகக் கொண்டு ஒரு வினைமூட்டையை விளைவித்தான் என்றவாறு.

புனிதன் – ஆன்மா. கோசம் என்றது வெளிப் படையாக வேறொரு பொருளை விளக்குமாயினும் ஈண்டு அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ் ஞானமயம், ஆனந்தமயம் எனும் பஞ்சகோசத்தை உணர்த்திற்று. இரண்டு எட்டு மூன்று ஐந்து என்பன உம்மைத் தொகையாய்ப் பதினெட்டான பூதங்கள் ஐந்து, தன்மாத்திரைகள் ஐந்து, சூக்கும தேகக்கருவி கள் எட்டு இவற்றை உணர்த்தின என்பர். இப் பொருள் முன்னரே இவ்வதிகாரத்து ஏழாம் திருமந் திரத்தும் உணர்த்தப்பட்டமையின் ஈண்டும் கூறு தற்கியைபு இன்மையின், இரண்டும்எட்டும் மூவைந்

தாகிய பதினைந்தும் ஆக இருபத்தைந்து ஆன்ம தத்துவங்களோடு என்ற பொருளே பொருத்த மாதல் தெளிக.

மூட்டை என்றது வினைமூட்டையாகிய உடலை, மூட்டை - மூட்டப்பட்டது; என்பு நரம்பு தோல் ஆகிய இவைகளால் மூட்டப்பட்டதாகிய உடலை உணர்த்திற்று.

பிண்டத்தில் உள்ளுறு பேதைப் புலனைந்தும்
பிண்டத்தி னூடே பிறந்து மரித்தது
அண்டத்தின் உள்ளுறு சீவனும் அவ்வகை
அண்டத்து நாதத் தமர்ந்திடுந் தானே. 466

இம் - எனின், பிண்டத்து உயிர் பிறந்து மரிப்பது போல அண்டத்தும் ஆம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: பிண்டமாகிய இவ்வுடம்பின் உள்ளே பொருந்தி அறியாமை நிறைந்த புலன்கள் ஐந்தும் உடம்பினிற்றோன்றி அவ்வுடம்பினுள்ளேயே ஒடுங்கிற்று. அதுபோல இந்த அண்டத்தினுள்ளே பொருந்திய ஆன்மாவும், இவ்வண்டக் கருவியாகிய நாத தத்துவத்தில் ஒடுங்கும் என்றவாறு.

பிண்டம் - ஐந்துறுப்படங்கிய பிண்டமாகிய உடல். உயிரினிடமாகத் தன்மாத்திரைகள் விளக்கம்பெறுதலின் இங்ஙனம் கூறினார். அண்டத்து நாதம் - பிரம்மாண்டத்திற்கு அடியான மாயை.

இலைப்பொறி ஏற்றி எனதுடல் ஈசன்
துலைப்பொறி யிற்கரு ஐந்துடன் ஆட்டி
நிலைப்பொறி முப்பது நீர்மை கொளுவி
உலைப்பொறி ஒன்பதில் ஒன்றுசெய் தானே. 467

இ-ம் - எனின்; ஈசன் இயற்றிய இயந்திர தனுவின் இயல்புணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சிவபெருமான், எனதுடலை இல்லாகிய பொறியில் ஏற்றுவித்து. துலா என்னும் பொறியினுல் கருவைப் பஞ்சேந்திரிய சுகத்தோடு கூட்டி, முப்பது தத்துவங்களோடு கூடிய நிலையான பொறியைச் செய்து, உலைப்போல் கொதித்துக் கொண்டிருக்கின்ற பொறியிலுள்ள ஒன்பது வாயில்களில் ஒருவாயிலால் அமைத்தான் என்றவாறு.

இலைப்பொறி – இல்லைப்பெறியாகக் கொண்டு. எனது உடலை ஏற்றி என்க. அதாவது மனையாளாகிய இயந்திரத்தில் எனதுடலை ஏற்றி என்பதாம்; என்பது போகம் உணர்த்தியது. துலைப்பொறி - கோசதண்டம். துலை-ஏற்றத்துலை. போகமுயற்சியிலீடுபட்ட உறுப்பு துலைபோலிருத்தலின் துலைப் பொறி எனப்பட்டது.

கரு ஐந்துடன் ஆட்டி - கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புல இன்பங்களுடன் கருக்குழம்பை வெளிப்படுத்தி, நிலைப்பொறி-வினைப் போகம் துய்க்குமளவும் நிலையான உடல், முப்பது நீர்மை - முற்கூறியவை நீங்கலாக ஏனைய ஆன்ம தத்துவம் பதினெட்டும். வித்தியாதத்துவம் ஏழும்,

சிவதத்துவம் ஐந்தும் ஆகிய முப்பது, உலைப்பொறி-உலைபோல என்ஞான்றும் கொதிக்கும் பொறியாகிய உடல். ஒன்பது-நவத்துவாரங்கள். ஒன்று என்பது கோசத்தை. ஒன்றுய்ச்செய்தான் என மூன்றுவது விரிக்க.

இன்புற் றிருவர் இசைவித்து வைத்தமண்
துன்பக் கலசம் அணைவான் ஒருவனே
ஒன்பது நீர்ச்சால் கலசம் பதினெட்டு
வெந்தது சூளை விளைந்தது தானே. 468

இம் - எனின், இறைவனாகிய குயவனிட்ட சூளையின் இயல்பினைத் தெரிவித்தல் நுதலிற்று.

இ - ள் : சிற்றின்பத்தில் ஈடுபட்டிருந்த தாயுந் தந்தையுமாகிய இருவரும் மனமொன்றி வைத்த மண்ணாலான துன்பமயமான குடத்துள்ளே சேர்ந்தவன் ஒரான்மாவே அத்துடன் ஒன்பது தண்ணீர்ச் சால்களையும் பதினெட்டுக் கலசங்களையும் வைத்தான். சூளை வெந்தது. நன்றாகக் கலசங்கள் விளைந்தன என்றவாறு.

ஆரியனைக் குலாலனாக உருவகித்தமைக்கு ஏற்ப உடல் முதலியவற்றைக் கலங்களாகவும். கருவைச் சூளையாகவும் உருவகித்தார். துன்பக்கலசம் – துன்பக்கொள்கலமாகிய உடல். ஒன்பது நீர்ச்சால்-மலசலங்கழியும் வாயில்களாகிய கண், காது, மூக்கு குதம், குய்யமாகிய ஒன்பது துவாரங்கள். சால் என்றது வாயகன்ற பானை பதினெட்டுக் கலசம் – முன் இவ்வதிகாரத்து ஏழாம் மந்திரத்திற் கூறிய

பதினெட்டுத் தத்துவங்கள். சூளை-பானை முதலியன சுடும் அடுப்பு.

அறியீர் உடம்பினி லாகிய வாறும்
பிறியீர் அதனிற் பெருகுங் குணங்கள்
செறியீர் அவற்றினுட் சித்திகள் இட்ட(து)
அறிவீர் ஐந்தினுள் ளானது பிண்டமே. 469

இம் — எனின், உடலினியல்பும் அதனாலுறு பயனும் உணர்த்துதல் நுதலிற்று

இ - ள்: இவ்வுடம்பினில் விளைந்த ஆறு துன்பங்களை அறியுங்கள்; அத்துன்பங்களினின்றும் விலகுங்கள். இவற்றைக் காட்டிலும் மிக்குத் தோன்றும் குணங்களைப் பொருந்துங்கள்; அவற்றுள் அட்டமா சித்திகளையும் அறிந்துகொள்ளுங்கள். பஞ்சபூத விகாரமே இவ்வுடல் என்றவாறு.

உடம்பினில் ஆகிய ஆறுவன பேறு: இழவு. துன்பம், பிணி, மூப்பு, சாக்காடு என்பன, சித்திகள் எட்டாவன அணிமா, மகிமா, கரிமா, லகிமா. பிராப்தி, பிராகாமியம், ஈசித்வம், வசித்துவம் என்பன, ஐந்தினுள் ஆனது பிண்டம் என்றது பஞ்சபூத சேர்க்கையே இவ்வுடல், ஆதலால் நிலையற்றது; நிலையற்ற இந்த உடலைக் கருவியாகக் கொண்டு, இது அழிவதற்குள் குணங்களைப்பெற்று, அட்டமா சித்திகளை அடைந்து, நிலைபேறான வழியைத் தேடிக்கொள்ளுங்கள் என உலகவர்க்கு உண்மை உணர்த்தியவாறு.

உடல்வைத்த வாறும் உயிர்வைத்த வாறும்
மடைவைத்த ஒன்பது வாய்தலும் வைத்துத்
திடம்வைத்த தாமரைச் சென்னியுள் அங்கிக்
கடைவைத்த ஈசனைக் கைகலந் தேனே. 470

இ - ளின், எனக்கு உடல் முதலியவைகளை உதவிப் பிரமரந்திரத்தில் ஒளிவடிவா யுறையும் இறைவனைக் கூடினேன் எனத் தன்மேல்வைத்து உண்மை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : உடலை உதவியவாறும். அவ்வுடலுள் உயிரை அமைத்தவாறும் மடைகளோடு கூடிய ஒன்பது வாயில்களை அமைத்து, உறுதியான ஆயிர இதழ்த் தாமரையோடு கூடிய உச்சியில் ஒளியை யும் இறுதியாயுதவிய இறைவனைக் கூடினேன் என்றவாறு.

என்னைப்போல் நீவிரும் இவ்வுடலின்பஅளவில் அமையாது, சகஸ்ராரத்தில் உள்ள ஒளியுருவப் பெருமானைக் கூடுக என்னும் குறிப்புணர்த்திய வாறு.

மடை - மூடுகின்ற வாய்; மடு + ஐ - மூடிக் கொள்ளுதலையுடையது. நவத்துவாரங்களும் மூடிக் கொள்கின்ற வாய் உடைமையை ஓர்க, திடம் வைத்த சென்னி - மண்டைஓட்டால் உறுதியாக அமைக்கப்பெற்ற தலை.

தாமரை என்றது பிரமரந்திரத்திலுள்ள ஆயிர இதழ்த் தாமரையை. கடை அங்கி வைத்த ஈசன் - இறுதியாக ஒளிப்பிழம்பைத் திரட்டிவைத்த இறை

வன். இறைவன் ஒளிவடிவாய் அங்கு உறைகின்றமை உணர்த்தியது. கைகலந்தேன் - கூடினேன்.

கேட்டுநின் றேன்எங்குங் கேடில் பெருஞ்சுடர்
மூட்டுகின் றான்முதல் யோனி மயமவன்
கூட்டுகின் றான்குழம் பின்கரு வையுரு
நீட்டிநின் றாகத்து நேர்பட்ட வாறே. 471

இம்-எனின், இறைவனே உருவையும் உதவி உயிர்க்குயிராயும் உடனிற்கின்றான் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தனக்கு ஒரு கேடுமில்லாத ஒளிவடிவான பெருமான். முதற்காரணத்தினின்று சிருஷ்டியைத் தொடங்குகிறான்; குழம்பான கருவைச் சேர்ப்பிக்கின்றான். அதனை உருவாக நீட்டி, அவ்வுருவிலே தானும் எழுந்தருளி. உணர்கின்ற பக்குவர்களுக்கு மட்டும் அவன் எதிர்ப்பட்டதை அடியேன் எங்கும் கேட்டுநின்றேன் என்றவாறு.

நேர்பட்டவாறு எங்கும் கேட்டுநின்றேன் எனக் கூட்டுக. கேடில் பெருஞ்சுடர்-தனக்கு அழிவொன்றுமில்லாத அநாதி நித்தியமாகிய ஒளி முதல் யோனி மயமவன் மூட்டுகின்றான் - முதற் படைப்பிற்குக் காரணமாகிய மாயத்தை அவன் கலக்கிச் சேர்ப்பிக்கின்றான். மயம் என்பது மாயம் என்பதன் குறுக்கல்-விகாரம். இது ஆகிசிருஷ்டி கூறியது. குழம்பின் கருவைக் கூட்டுகின்றான் என்றது பிரபஞ்சத்தில் நாடோறும் நிகழும் சிருஷ்டியைக் கூறியது உருவாக நீட்டி நின்று அவ்வுடலுள் தானுமிருந்து

எதிர்ப்படுதல், ஆன்மாக்களை உய்விக்கத் திருவுளங் கொண்டு என்க

பூவுடன் மொட்டுப் பொருந்த அலர்ந்தபின்
காவுடைத் தீபங் கலந்து பிறந்திடும்
நீரிடை நின்ற குமிழி நிழலதாய்ப்
பாருடல் எங்கும் பரந்தெட்டும் பற்றுமே. 472

இ - னின், விந்து பரவி உடலாகும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: பூப்போலும் கர்ப்பாசயமும், மொட்டுப் போலும் இலிங்கமும் பொருந்த அவை ஒக்க அலர்ந்தபின் காவுதல் பொருந்திய ஒளி வடிவினதாகிய சுக்கில சுரோணிதங்கள் கலந்து வெளிப்படும். அந்நீரிடை உண்டான குமிழியானது நிழலாக உடலெங்கும் பரவி, சூக்கும சரீரக் கருவிகள் எட்டையும் பற்றி நிற்கும் என்றவாறு.

காவுடைத் தீபம் என்றது இருவராலும் சுமக்கப் படுகின்ற ஒளிவடிவாகிய ரேதசு. ரேதசு குறையவே தேசசு குறைதலின், ரேதசு தீபமாக உருவகிக்கப்பட்டது. குமிழி என்றது விந்துவி லுள்ள சீவ அணுக்களை, உடல் - கருவுள் சீவன் எடுக்கும் உடல், எட்டின் விரிவு முன்னரே கூறப் பெற்றது.

எட்டினுள் ஐந்தாகும் இந்திரி யங்களும்
கட்டிய மூன்று கரணமு மாய்விடும்
ஒட்டிய பாச உணர்வென்னும் காயப்பை
கட்டி அவிழ்த்திடுங் கண்ணுதல் காணுமே. 47

இ-ம் - எனின், மாயாகாரிய மாய உடற்பையைக் கட்டி அவிழ்ப்பவர் கண்ணுதற்பெருமானே என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : முற்கூறிய எட்டினுள் இந்திரியங்கள் ஐந்தும். அவற்றோடு தொடர்புற்ற மூன்று கரணங்களுமாகிய சேர்ந்திருக்கின்ற பாசவுணர்வென்கின்ற உடலாகிற பையைப் பெருமானே கட்டி அவிழ்த்து விடுவர் ; இதனை நீங்கள் காணுங்கள் என்றவாறு.

இந்திரியங்களாவன ஞானேந்திரியங்கள், மூன்று கரணம் - மனம் புத்தி சித்தம் என்பன, இந்திரியங்களும் மூன்றுகரணமுமாய் இருக்கின்ற பாசவுணர்வோடு கூடிய உடற்பையைக் கட்டி அவிழ்ப்பவர் கண்ணுதற்பெருமானே என்பது கருத்து. காயத்தைப் பையென்றமைக்கு ஏற்பக் கட்டி அவிழ்த்திடும் என்றார்.

கண்ணுதல் நாமங் கலந்துடம் பாயிடப்
பண்ணுதல் செய்து பசுபாசம் நீக்கிட
எண்ணிய வேதம் இசைத்த பரப்பினை
மண்முத லாக வகுத்துவைத் தானே. 474

இ-ம் - எனின், இறைவன் பசுக்கள் பாசத்தினின்றும் நீங்கக் கருணை பாலித்தலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சிவபெருமான் தன்னுடைய திருநாமமாகிய திருவைந்தெழுத்துக்களைக் கலந்து, நமக்கு

உடம்பாக அமைத்து, பசுக்கள் பாசத்தினின்றும் நீங்கி உய்ய மூன்றென்று எண்ணப்படுகிற வேதங் களிற் சொல்லிய பொருட்பரப்பினை, மண்முதல் சிவமீறான தத்துவங்களாக வகுத்து வைத்தருளினான் என்றவாறு.

கண்ணுதல் நாமம் - ஸ்ரீபஞ்சாக்கரம் " நாதன் நாமம் நமச்சிவாயவே " என்ற ஞானசம்பந்தர் திருவாக்கையும் இணைத்துச் சிந்திக்க. மண் முதலாக என்றமையின், மண் முதல் சிவதத்துவ மீறான முப்பத்தாறும் கொள்ளப்படும். நாதன் நாமம் பிரணவம் என்பாருமுளர்.

அருளல்ல தில்லை அரனவன் அன்றி
அருளில்லை யாதலி னாலோர் உயிர்க்குத்
தருகின்ற போதிரு கைத்தாயர் தம்பால்
வருகின்ற நண்பு வகுத்திடுந் தானே. 475

இம் - எனின், சிவனே செவிலியாயிருந்து சீவனைச் பாதுகாப்பன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சிவனின்றி அருளில்லை; அருளின்றிச் சிவனில்லை; ஆதலால் ஒருயிர்க்கு உடம்பைத் தரு கின்றபோது அவ்வுயிர்க்கு இருசெவிலித்தாய் மாட்டு வைக்கும் அன்பை அமைப்பன் என்றவாறு.

சிவமும் அருளும் இரு செவிலியர் போல வளர்த்தலின் சீவர்கள் வளர்ப்புத்தாயரிடம் வைக் கின்ற அன்பை அவர்களிடம் வைப்பார்கள் என்பது கருத்து.

வகுத்த பிறவியின் மாதுநல் லாளும்
தொகுத்திருள் நீக்கிய சோதி யவனும்
பகுத்துணர் வாகிய பல்வகை எங்கும்
வகுத்துள்ளும் நின்றதோர் மாண்பது வாமே. 476

இம் - எனின், சிவமும் சத்தியும் உயிர்களுக்கு உணர்வாயும், உயிர்க்குயிராயும் இருந்து உதவுவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: அவரவர்கள் வினைக்கு ஈடாக வகுத்த பிறவியில் சத்தியும், ஆன்மாக்களுக்கு அநாதியே உள்ள ஆணவமலத்தை அகற்றிய பரஞ்சோதியாகிய பரனும், எங்கும் பகுத்துணர்வாகிய பல வகைகளை வகுத்து உயிருக்குள் நிற்கின்ற ஒப்பற்ற சிறந்த பொருளும் ஆம் என்றவாறு.

இருள் - ஆணவமலம், பகுத்துணர்வாகிய பல் வகை எங்கும் வகுத்து - ஒவ்வொன்றையும் வேறு படுத்துணர்வதாகிய பல வகைகளை எங்கும் அமைத்து; என்றது விஷய பேதங்களை உணரும் உணர்ச்சியைத் தந்து என்றவாறும்.

உள்ளும் நின்றதோர் மாண்பது ஆம் - சீவனுக் குள்ளேயும் நிலைபெற்று நிற்கும் மாட்சிமை உடைய தாம்: என்றது உயிருக்கு உயிராய் நிற்கின்ற உயர்ச்சியினையும் உடையது என்பதை உணர்த் திற்று.

மாது நல்லாளும் சோதியவனும் பல்வகை வகுத்து நின்றதோர் மாண்பு அதுவாம் எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

மாண்பது வாக வளர்கின்ற வன்னியைக்
காண்பது ஆண்பெண் அலியெனும் கற்பனை
பூண்பது மாதா பிதாவழி போலவே
ஆம்பதி செய்தானச் சோதிதன் ஆண்மையே. 477

இ-னின், இறைவன் தன் ஆற்றலால் பரம் பரைக்குணமும் தோற்றமும் அமையப் படைக்கின்றானென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அந்தச் சோதிவடிவாகிய இறைவன் தன்னாற்றலால் மாட்சிமை உடையதாக வளர்கின்ற தீவடிவாகிய விந்துவை காண்பதாகிய ஆண் பெண் அலியென்னும் கற்பனையைப் பூண்பதாக, மாதா பிதாக்களின் பரம்பரையைப் போலவே ஆகும் பதிவுகளை அமைத்தான் என்றவாறு

கருவை வன்னியென்றல், 'அறிகின்ற மூலத்தின் மேலங்கியப்பு' என்பதனாலும், 'குதஞ்செய்யும் அங்கியின் கோபந்தணிப்பான்' என்பதனானு முணர்க. காண்பதாகிய ஆண் பெண் அலி எனுங் கற்பனை பூண்பது மாதா பிதா வழிபோலவே ஆம் என முடிக்க. பதி செய்தான்-பதிதலைச் செய்தான். பதி முதனிலைத் தொழிற்பெயர். ஆணுகப் பெண்ணுக அலியாகக் கற்பித்தல் மாதா பிதாக்களின் அமைப்பினுலாகும் என்பதை வருகின்ற மந்திரத்தால் விளக்குகின்றார்

ஆண்மிகில் ஆணாகும் பெண்மிகில் பெண்ணாகும்
பூணிரண் டொத்துப் பொருந்தில் அலியாகும்
தாண்மிகு மாகில் தரணி முழுதாளும்
ஆண்வச மிக்கிடில் பாய்ந்ததும் இல்லையே. 478

இ-ம் — எனின், ஆண் பெண் அலியாவதற்குக் காரணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சுக்கிலம் மிகுமானால் ஆணாகும். சுரோ ணிதம் மிகுமானால் பெண்ணாகும். இவ்விரண்டும் அளவொத்துப் பொருந்தினால் அலியாகும், சுக்கிலம் அளவில் மிகக் கூடுமாயின் உலகம் முழுவதும் ஆளக்கூடிய அரசன்போல ஆண்மையுடையவனாகும். சுக்கிலம் மிக்க சுரோணித வயமாயின் பயனின்றிக் கழியும் என்றவாறு.

ஆண்வசம் மிக்கிடில் பாய்ந்ததுமில்லை என்றது சுக்கிலம் சுரோணிதத்தின் வயமாய்ச் சுரோணிதம் மிகுமாயின் பாய்ந்ததால் பலனில்லை என்றவாறு; கருப்பை வாயிலில் சுக்கிலத்தில் உள்ள சீவ அணுக்கள் முன்னேறிக் கருப்பையுள் நுழைய, சுரோணித அணுக்கள் அவற்றோடு போரிட்டு அழிக்கும்; அழிந்த அணுக்கள் சிறுநீரோடு வெளிக் கழிக்கப்பெறும்; வென்ற அணுக்களே கருவிற்சென்று உருவாகும்; ஆதலால். சுரோணிதம் மிகில் சுக்கிலம் வலியற்று அழிந்துபோதலின் பாய்ந்ததுமில்லை என்றார்.

பாய்ந்தபின் அஞ்சோடில் ஆயுளும் நூறாகும்
பாய்ந்தபின் நாலோடில் பாரினில் எண்பதாம்
பாய்திடும் வாயுப் பகுத்தறிந் தவ்வகை
பாய்ந்திடும் யோகிக்குப் பாய்ச்சலும் ஆமே. 479

இ-ம் - எனின், விந்து பாய்ந்தபின் ஓடும் வாயுவின் கால அளவுகொண்டு ஆயுளைத் துணியலாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : விந்து பாய்ந்தபின் ஐந்துமாத்திரை யளவு தாய்தந்தையர்க்குப் பிராணவாயு ஓடினுல் பிறக்கின்ற குழந்தைக்கு ஆயுள் நூறாகும். நான்கு மாத்திரை காலம் ஓடின் உலகிலேயே எண்பதாண்டு வாழ்வான். அவ்வண்ணம் வாயுவைப் பகுத்தறிந்து அதன்படி யோகியால் பாய்ச்சவும் கூடும். யோகிக்கு அக்கணக்கின்படியே பாயும் என்றவாறு.

யோகி பிராணனை ஆயாம முறையால் அளந்து அடக்கி நடத்துபவனுதலின் அவனுல் அளவில் வண்ணம் பாய்ச்ச இயலும் என்பது கருத்து.

ஐந்தோடின் நாலோடின் என்பதற்கு விந்துத் திவலைகள் ஐந்தல்லது நான்கு ஓடின் என்றும் பஞ்ச பூதங்களிலும் பரந்தோடினுல் என்றும் உரைப்பார் சிலர். ஐ தோடின் என்பதற்குப் பஞ்சபூதங்களில் சரம் பரந்தோடினுல் எனக்கொள்ளின் நாலோடின் என்பதற்கு எங்ஙனம் பொருள் கொள்ளுதல் இயலும் என்ற ஐயம் எழுதல் காண்க.

இந்தத் திருமந்திரத்திற்குப் பாடந்திரித்து, சூரிய கலை ஓடுமானுல் வயது நூறு, சந்திரகலை ஓடுமானுல் வயது ஐம்பது என்றும் உரை வகுப்பர். 'பாய்ந்திடும் வாயுப் பகுத்தறிந்து' எனப் பின் வருதலின் பிராணவாயு பாயும் கால அளவைக் கொண்டே கணிக்கப்பட்டமை தெளிவு. அருள் நூல்களில் பாடங்கொள்ளும் முறை மரபுவழிவந்த நூல்களின் மேற்கோளாக இருத்தல்பற்றியே துணிதல் வேண்டுமன்றிப் புறச்சமய நூல்களிலும், அவைதிக சமய நூல்களிலும், கருவி நூல்களிலும்

வந்தவற்றைக்கொண்டு பாடந்துணிதலும், உரைகோடலும் அத்துணைச் சிறந்த செய்கை அன்றென அமைக. அடுத்த மந்திரமும் வாயுவின் அமைதியே அறிவித்தல் காண்க.

பாய்கின்ற வாயுக் குறையின் குறளாகும்
பாய்கின்ற வாயு இளைக்கின் முடமாகும்
பாய்கின்ற வாயு நடுப்படின் கூனாகும்
பாய்கின்ற வாயுமா தர்க்கில்லை பார்க்கிலே. 480

இம் – எனின், குழவி குறளாதற்கும் முடமாதற்கும் கூனாதற்கும் ஏது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பாய்கின்ற வாயு முன்னைய மந்திரத்திற் கூறியபடி நான்கிற்கும் குறையுமானால் குழவி குறளாகும். இளைக்குமாயின் முடமாகும். ஓடுகிறபோது இடையில் தடைப்படுமானால் கூனாகும். இங்ஙனம் பாய்கின்ற வாயு பெண்களுக்கில்லை என்றவாறு.

ஆண்களுக்குப் பாய்கின்ற பிராணனைக் கொண்டே கணக்கிடுக என்பதாம்.

இம்மந்திரத்திற்குச் சுக்கிலமானது வாயுவோடு சேர்ந்து பாயும்போது குறுகினால் சிசு குட்டையாகும்: சுக்கிலம் வளையுமானால் கூனாகும் என உரைப்பா. சுக்கிலத்திற்கு வளைவும் குறுக்கமும் இல்லை. அஃதேயு மன்றிப் 'பாய்ந்தபின்' என்ற முன்மந்திரத்துச் சுக்கிலம் பாய்ந்த பிறகு பாய்கின்ற வாயு என வாயு பாய்தலை உணர்த்துகின்றாராதலின்

வாயுவின் குறுக்கம் வளைவு முதலியனவே கூனுக்கும் குறளுக்கும் ஏது எனக் கொள்ளப்படும்

மாதா உதரம் மலமிகின் மந்தனும்
மாதா உதரம் சலமிகின் மூங்கையாம்
மாதா உதரம் இரண்டொக்கில் கண்ணில்லை
மாதா உதரத்தில் வந்த குழவிக்கே. 481

இம் - எனின், குழந்தை மந்தமாதற்கும் ஊமையாதற்கும் குருடாதற்கும் காரணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்; தாயின் வயிற்றில் கருவிடை அமைந்த குழந்தைக்கு. அவள் வயிற்றில் மலமிகுமானல் அவன் மந்தனுவான்; சலம்மிகுமானல் ஊமையாம்; மலம் சலம் இரண்டும் மிகுமானல் குருடாம் என்றவாறு.

கருவுற்ற காலத்தில் உள்ள நிலைகளைக் கொண்டு இந்த நிலைகள் அமைகின்றன என்பதாம். அன்றிப் புணர்ச்சிக்காலத்து நிலை என்பாரும் உளர்.

குழவியும் ஆணும் வலத்தது வாகில்
குழவியும் பெண்ணும் இடத்தது வாகில்
குழவியும் இரண்டாம் அபானன் எதிர்க்கில்
குழவி அலியாகும் கொண்டகால் ஒக்கிலே. 482

இம் - எனின், போக காலத்திலேயே ஆண்பெண் அலி அறியுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ ள் : போககாலத்தில் பிராணன் சூரிய கலையிலியங்குமாயின் ஆண் குழந்தையாம் ; சந்திர

கலையில் இயங்குமாயின் பெண் குழந்தையாம்; பிராணவாயுவோடு அபானவாயு எதிர்த்துப் போரிடின் இரட்டைக் குழந்தைகளாம்; சூரிய கலையிலும் சந்திரகலையிலும் பிராணன் ஒத்து நடக்கின் அலியாம் என்றவாறு.

கொண்டநல் வாயு இருவர்க்கும் ஒத்தெழில்
கொண்ட குழவியும் கோமள மாயிடும்
கொண்டநல் வாயு இருவர்க்கும் குழறிடில்
கொண்டதும் இல்லையாங் கோல்வளை யார்க்கே. 483

இம் - எனின், குழந்தை அழகாய்ப் பிறப்பதற்கும், குழவி பிறவாமலே யொழிதற்கும் ஏது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: பிராணவாயு புணரும் இருவருக்கும் ஒத்தியங்குமாயின் கருவுட்கொண்ட குழந்தை அழகாக இருக்கும்; இருவர்களுக்கும் பிராணவாயு தடுமாறினால், மாதருக்குக் கருத்தரித்தலாகிய பயனில்லையாம் என்றவாறு.

கோல் வளை - திரண்ட வளையல், கோமளமாய் விடும் என்பதற்குக் கானல்நீரைப் போலாகிவிடும் என உரைப்பாரும் உளர். கோமளம் - அழகு என்னும் பொருளதன்றிக் கானல்நீர் என்றல் பொருந்துமாறு அறிந்து கொள்க.

கோல்வளை உந்தியிற் கொண்ட குழவியும்
தால்வளை யுள்ளே தயங்கிய சோதியாம்
பால்வளர்ந் துள்ளே பகலவன் பொன்னுருப்
போல்வளர்ந் துள்ளே பொருந்துரு வாமே. 484

இ-ம் — எனின், கருவிற்குழவி சுழுமுனையிற் சோதியாம் என்றல் நுதலிற்று.

இ - ள் : பெண்ணினது உந்தியிற் கொண்ட குழவியும், அண்ணத்தின் கண்ணதாம் தொளைவழி மேற் செல்லும் சுழுமுனையில் விளங்குகின்ற சோதியாகும். கருப்பையுள் பகுதிபகுதியாக உறுப்புக்கள் வளர்ந்து. உதயசூரியனது நிறம்போலப் பொன்னிறம் வாய்க்கப் பெற்றுப் பொருந்திய உருவெய்தும் என்றவாறு.

தால் வளை — மேலண்ணத்தூடு செல்லும் தொளை, அது புருவநடுவில் விளங்கும் சுழுமுனை, அதில் விளங்கிய சோதியாம் என்றது சுழுமுனையில் விளங்கிய ஒளியாகிய கரு. விந்துற்பனம் சுழுமுனையிலிருந்து உருகிக் கீழிறங்கிவருகிறது ஆதலின் இங்ஙனம் கூறப்பெற்றது.

பால் - பகுதி; ஈண்டு பகுதிபகுதியாக வளருகிற உறுப்புக்களை உணர்த்திற்று.

உருவம் வளர்ந்திடும் ஒண்டிங்கள் பத்தில்
பருவம தாகவே பாரில் வந்து
மருவி வளர்ந்திடும் மாயையி னாலே
அருவம தாவதிங் காரறி வாரே. 485

இ-ம் — எனின். கரு உருவாகிப் பிறக்குங்காலம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : உருவம் ஒளிபொருந்திய பத்து மாதங்கள் வளரும்; பக்குவம்வரப் பூமியிற்பிறந்து வளரும், அக்குழந்தை மாயையால் தன்னுருவைத்

தானறியாமலிருப்பதை இங்கு அறிவார் யார்? என்றவாறு.

இட்டார் அறிந்திலர் ஏற்றவர் கண்டிலர்
தட்டான் அறிந்தும் ஒருவர்க் குரைத்திலன்
பட்டாங்கு சொல்லும் பரமனும் அங்குளன்
கெட்டேன்எம் மாயையின் கீழ்மையெவ் வாறே. 486

இ-ம் - எனின், கருவளர்த்த மாயையின் கீழ்மையை வியந்து கூறுதல் நுதலிற்று.

இ-ள்: வித்திட்டவராகிய தந்தையரும் அறிந்திலர்; அதனை ஏற்றுக்கொண்ட தாயரும் கண்டிலர்; படைத்த பிரமன் அறிந்திருந்தும் ஒருவருக்கும் உரைத்தானல்லன்; உண்மையைச் சொல்லும் இறைவனும் அங்கிருக்கிறன்; கெட்டேன்; சிருஷ்டிக்கும் மாயையின் கீழ்மை எவ்வாறிருந்தது என்றவாறு

தட்டான் - பூவிதழில் உள்ளவனுகிய பிரமன் - தட்டு - பூவிதழ், பட்டாங்கு சொல்லும் பரமன் என விசேடித்தது அவன் உடனிருந்தும் உண்மையை உணர்த்தாமையால்.

இன்புறு நாடி இருவருஞ் சந்தித்துத்
துன்புறு பாசத்தில் தோன்றி வளர்ந்தபின்
முன்புற நாடி நிலத்தின்முன் தோற்றிய
தொன்புற நாடிநின் றுதலு மாமே. 487

இ-ம் – எனின், பிறந்த உயிர்கள் பழமையை ஆராய்ந்து பரகதியினை அடைதலுங்கூடும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : ஆணும் பெண்ணும் இன்புறுதலை விரும்பிச் சந்தித்துத் துன்புறுதலால் அவர்களுடைய பாசங் காரணமாகக் கருவுள் தோன்றிப் பத்துத் திங்கள் வளர்ந்த பிறகு, மேலாக இருக்க விரும்பி நிலத்தில் பிறந்த உயிர்கள் பழம் பிறவியின் வினையால் வந்த துன்ப இன்பங்களை ஆராய்ந்து அவற்றின் நீங்கி வீடுபேறாகிய ஆக்கத்தை அடைதலு மாம் என்றவாறு.

தோற்றிய — தோற்றினவாகிய உயிர்கள்; அஃறிணை பலவின்பாற் படர்க்கை வினையாலணையும் பெயர். தொன்பு: 'பு' விகுதிபெற்ற பண்புப் பெயர்; பழமை. ஆதல் - ஆக்கத்தை அடைதல்; என்றது ஈண்டு வீடு பெறுதலை.

குயிற்குஞ்சு முட்டையைக் காக்கைதன் கூட்டிட்டால்
அயிர்ப்பின்றிக் காக்கை வளர்க்கின் றதுபோல்
இயக்கில்லை போக்கில்லை ஏனென்ப தில்லை
மயக்கத்தால் காக்கை வளர்க்கின்ற வாறே. 488

இம் - எனின், கருப்பத்தில் ஒவ்வொரு தாயும் மயக்கத்தால் உடலைவளர்க்கும் முறை இது என்றல் நுதலிற்று.

இ - ள் : குயிலின் முட்டையைக் காக்கையின் கூட்டில்வைத்தால், காக்கை சந்தேகப்படாமல் வளர்ப்பதைப்போலத் தாயும் போகமயக்கத்தால் இயங்காமலும் போக்கில்லாமலும் ஏனென்று வினவாமலும் கருவிலுற்ற ஆக்கையை வளர்க்கிற முறை இதுவாம் என்றவாறு.

முதற்கிழங் காய முளையாய் முளைப்பின்
அதற்புத லாய்ப்பல மாய்நின் றளிக்கும்
அதற்கது வாம்இன்ப மாவது போல
அதற்கது வாய்நிற்கும் ஆதிப் பிரானே. 489

இ‌ம் – எனின், ஆன்மாக்களுக்கு உறுபயனாய் நிற்பவன் இறைவன் ஒருவனே என்றல் நுதலிற்று.

இ - ள் : முதலில் கிழங்காயிருந்தது முளையாய், முளைக்குப்பின் அதன் புதராய், பின் பழமாய் நின்று பயன்படும்; அக்கிழங்கிற்கு அதுவே இன்பமாதல் போல, அந்தந்த ஆன்மாக்களுக்கு அதுவதுவாய் நின்று இறைவனும் அருளுவன் என்றவாறு.

இறைவனுக்கு இன்பமாவது உயிர்கட்கு அருள் செய்தலே என்பது கருத்து.

ஏனோர் பெருமைய னாகினும் எம்இறை
ஊனேய் சிறுமையுள் உட்கலந் தாங்குளன்
வானோர் அறியும் அளவல்ல மாதேவன்
தானே அறியும் தவத்தினி னுள்ளே. 490

இம் - எனின்; இறைவனது எளிவந்த கருணை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : மற்றைய தேவர்களைக்காட்டிலும் எம் இறைவனாகிய சிபரமேசுவரன் பெருமையைஉடைய னாயினும், உடலுக்குள் பொருந்திய உயிருட்கலந் தும் இருக்கின்றான், வானோர்களாலும் அறியப் படாதவனாகிய மகாதேவன் தவத்தால் தானே அறியப்படுபவன் என்றவாறு.

ஊன் ஏய்சிறுமையுள் உட்கலந்து, ஊன்-உடல் ஆகுபெயர், ஏய்-பொருந்திய சிறுமை-அணுவுக்கும் அணுவாயுள்ள உயிர், வானோராலும் அறியப்படாத அளவினனாய அறிவன், பசுக்களால் தவத்தால் அறியப்படுபவன் என்பதாம். தவத்தினின் என்ப தற்கு, ''தவத்தின் உணர்த்திவிட்டு'' என்பதற்குச் சிவஞானமுனிவர் உரைத்தாங்கு உரைக்க தவமா வது சரியை கிரியை யோகம் என்பன. தானே அறி யப்படுவன்; ஈண்டும், இறைவனது நித்திய சுதந் திரம் தோன்ற நின்றமை காண்க.

பரத்திற் பதிந்து பதிந்தநற் காயம்
உருத்தரித் திவ்வுடல் ஓங்கிட வேண்டில்
திரைக்கடல் உப்புத் திரண்டது போலத்
திரித்தும் பிறக்குட் திருவரு ளாலே. 491

இ-ம் - எனின் திருவருளாலேயே புனருற்பவம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பரசிவத்திடத்தில் ஒடுங்கி ஒன்றான நல்ல ஆகாயம் உருவைத் தாங்கி இந்த உடலோடு வளர விரும்பினால் அலைகளோடுகூடிய கடலில் உப்பு திரண்டு உருவானாற்போல இறைவன் திருவருளால் மீண்டும் பிறக்கும் என்றவாறு.

பரத்தில் பதிந்து பதிந்த நற்காயம் — சங்கார காலத்துச் சிவத்தினிடம் ஒன்றி ஒன்றான ஆகாயம் போல் உருவற்ற ஆன்மா. காயம்-ஆகாயம் என்ப தன் முதற்குறை. ஆன்மாவை ஆகாயம் என்றது, அனுமானாதிகளால் உண்டென்று உணரப்பட்டு

உருவின்றி இருத்தலால், காயம் ஓங்கிடவேண்டில் உப்புத் திரண்டதுபோலத் திருவருளால் திரித்தும் பிறக்கும் எனஇயைத்துப் பொருள்கொள்க. வியாபகமாய் உள்ள பரத்தில்வி யாப்பியமாயுள்ள ஆன்மா, திருவருளால் உருக்கொண்டமைக்குப் பரந்தகடலில் வேனில் வெப்பத்தால் உருக்கொண்ட உப்பு உவமமாயிற்று.

## 15. மூவகைச் சீவவர்க்கம்

கர்ப்பக்கிரியை என்னும் பகுதியால் உயிர்கள் பிறத்தலைக் கூறியருளிய ஆசிரியர், மல மாயை கன்மங்களின் கூட்டுறவினால் உயிர்கள் முத்திறப் படுவதை உணர்த்துகின்றார் ஆதலின் மூவகைச் சீவவர்க்கம் என உயிர்களின் வகையினை உணர்த்துவான் எடுத்துக்கொண்டார். அதிகாரமுறையும் இதனானே விளங்கும்.

**சித்தி சிவன்விளை யாட்டால் உயிராக்கி**
**ஒத்த இருமாயா கூட்டத் திடைபூட்டிச்**
**சுத்தம தாகுந் துரியம் பிரிவித்துச்**
**சித்தம் புகுந்து சிவமய மாக்குமே 492**

இ-ம் - எனின், இறைவன் விளையாட்டாகவே படைத்தல் அருளல் முதலியவற்றைப் புரிகின்றார் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: சத்தியும் சிவனும், விளையாட்டாகவே உயிர்களை உடம்பினுள் ஆக்கி. சுத்தமும் அசுத்தமும் மாகிய இருவகை மாயையுள் கூட்டுவித்து, சுத்த

மாகிய துரியாவத்தையினின்று நீக்கி, ஆன்மாவின் சித்தத்தில் என்றும் பிரிப்பற விளங்கிநின்று, அவ் வான்மாவைச் சிவமயமாக்குவர் என்றவாறு,

விளையாட்டால் என்றது, படைத்தலாதி தொழில் புரிதலால் இறைவன் விகாரியாகான் என்பதை விளக்கிற்று. உயிர் ஆக்கி - உயிரை உடலுக்குள் ஆக்கி; என்றது சிருஷ்டித்தலை. மாயா கூட்டம்-முற்கூறிய இருவகை மாயையும் அவற்றின் காரியமாகிய மாயேயங்களாகிய தத்துவங்களுமாகிய இவற்றின் தொகுதி.

ஊட்டி என்றும் பாடம். இப்பாடத்திற்கு நுகர்வித்து என்பது பொருள். துரியாவத்தையில் ஆன்மா சில தத்துவங்களே தொழிற்பட அடங்கிக் கிடக்கும் நிலை. சுத்த துரியம்-நின்மல. துரியம் அஃதாவது சுத்தவித்தை ஈச்சுரம் சாதாக்கியம் சத்தி என்னும் நான்கும் நீங்காமல் நீங்கின நிலை.

விஞ்ஞானர் நால்வர் மெய்ப்பிரள யாகலத்(து)
அஞ்ஞானர் மூவருந் தாங்கு சகலத்தின்
அஞ்ஞானர் மூவரு மாகும் பதின்மராம்
விஞ்ஞான ராதிகள் வேற்றுமை தானே. 493

இம் - எனின், மூவகையான்மாக்கள் பத்துவகையினராதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: விஞ்ஞானகலர் நால்வரும், பிரளயாகலர் மூவரும், சகலர் மூவரும் ஆவர்; விஞ்ஞானகலராதியான மூவரும் பத்து வகையினராவர் என்றவாறு.

*விஞ்ஞானகலர்:* விஞ்ஞானத்தாலே கலையை அகன்றோர். விஞ்ஞான + அகலர். விஞ்ஞானத்தாலே **கட்டுப்படுகின்றவர் எனலுமாம்,** இவர்களுக்குப் பிரபோதாகலர் எனவும் பெயர் உண்டு. ஆணவமலமொன்றே உடையவர்கள் சுத்தாத்துவாவில் வசிப்பவர்கள். இறைவன் நேரே இருந்து அநுக்கிரகம் செய்யும் தகுதிபெற்றவர்கள். விந்துவிலிருந்து உண்டான தனு கரண புவனபோகங்களை உடைய்யவர்கள். இவர்கட்கு இறைவன் உள்நின்று திருநோக்கத்தான் உ ப தே சி த் து ஆணவமலக் கட்டையும் அறுத்து அநுக்கிரகிப்பர்.

*பிரளயாகலர்:* பிளயத்தில் மாயாதத்துவத்தில் கட்டுப்படுகிறவர். பிரளயகாலத்தில் கலாதி நீங்கினோர் எனலுமாம். ஆணவம் கன்மமாகிய இருமலமுடையார் மிஸ்ராத்துவாவில் வசிப்பவர்கள் அசுத்த மாயா காரியமான சூக்கும தனு கரண புவனபோகங்களை உடையவர்கள். சிவபெருமான் முன்னின்று திருநோக்கானும், பரிசத்தானும், உரையானும் உபதேசிக்கப்பெறும் உயர்வுடையவர்கள்.

*சகலர்:* ஆணவம் கன்மம் மாயையாகிய இம் மும்மலங்களும் உடையவர்கள். அசுத்தாத்துவ வாசிகள், அசுத்தமாயையின் தூலபரிணமமாகிய பிரகிருதி மாயையிலுண்டான தனு முதலியவற்றை உடையவர்கள். இறைவன் குருவாகத் திருமேனி தாங்கிவந்து அருள்செய்யும் பேறுபெற்றவர்கள்.

**மெய்ப்பிரளயாகாலத்து அஞ்ஞானர்**-உண்மையான பிரளயகாலத்து நீங்கிய கலாதிகளையுடையவர்களாகிய அந்த ஞானிகள்: சகலத்தின் அஞ்

ஞானர் - மும்மலத்தாலும் கட்டுண்டிருப்பதால் அறியாமை மேவினோர்.

விஞ்ஞானர் கேவலத் தாரது விட்டவர்
அஞ்ஞானர் அட்டவித் தேசுரஞ் சார்ந்துளோர்
எஞ்ஞானம் ஏழ்கோடி மந்திர நாயகர்
மெய்ஞ்ஞானர் ஆணவம் விட்டுநின் றாரே. 494.

இம் - எனின், விஞ்ஞானகலர் நால்வகையினராவாரிவர் என்றல் நுதலிற்று.

இ - ள் : விஞ்ஞானகலர் ஆணவமல சம்பந்தமட்டுமுடையராய் ஏனையவற்றை அநாதியே பொருந்தாதவர்களும், பக்குவப் பட்டமையால் மாயை கன்மங்கள் நீங்கியவர்களாகிய அட்டவித்தியேசுரபதம் சார்ந்தோரும், பக்குவம் அபக்குவமாகிய இருதன்மையும் உடையராய் எவ்வகைப் பட்ட ஞானம் என்று வரையறுத்துச் சொல்லமுடியாத ஞானமுடையவர்களாகிய சப்தகோடி மகாமந்திரரும், உண்மை ஞானம் மேவியவர்களாக ஆணவமல வாசனையும் விட்டு நிற்பவர்களுமாக நால்வகையினர் ஆவர் என்றவாறு.

விஞ்ஞானகலரில் அநாதியே பக்குவம் பெற்றவர்களும், இடையே பக்குவ விசேடத்தால் மாயை கன்மங்கள் நீங்கப்பெற்றவர்களும் என இருவகையர் உளர். அவரில் பக்குவவிசேடத்தால் நீங்கப் பெற்றவர்களில் பக்குவமலர், பக்குவாபக்குவமலர், அபக்குவமலர் என முத்திறத்தார் உளர். பக்குவ மலராவார் அன்பே வடிவானவர்களாய், அதிகார

சிவத்தின் அதிகாரத்தைப்பெற்று, விந்துதத்துவத்தில் வசிப்பவர்கள். இவர்கள் பிரணவர் முதலான அணுசதாசிவர் ஆவார்.

அஷ்டவித்தியேசுவரராவார் அனந்தர். சூக்குமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகவுருத்திரர், திரிமூர்த்தி, சீகண்டர், சீகண்டி ஆகிய எண்மர்.

ஏழ்கோடி மந்திரநாயகர் :- நம:, சுவாஹா, சுவதா, வௌஷட், வஷட், பட், ஹூம் என்ற ஏழு இறுதியினையுடைய மந்திரத்தலைவர்கள். எஞ்ஞானர் எண் ஞானர் எனப் பிரித்து எண்மை ஞானத்தாராய செவ்வாயர் என்று உரைகண்டு இடர்ப்படுவாரும் உளர். மெய்ஞ்ஞானர்-சிவஞான சித்திபெற்றோர்.

இரண்டா வதில்முத்தி எய்துவர் அத்தனை
இரண்டாவது துள்ளே இருமல பெத்தர்
இரண்டாகு நூற்றெட்டு ருத்திரர் என்பர்
முரண்சேர் சகலத்தர் மும்மலத் தாரே. 495

இ - னின், விஞ்ஞானகலர் எய்தும் முத்தி நிலையும் பிரளயாகலர்வகையினையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : விஞ்ஞானகலரில் அபக்குவர்களாகிய மூவரும், அடுத்த பிறவியில் வீடுபெறுவர்; அவ்வளவே, இரண்டாமவராகிய பிரளயாகலரோ ஆணவமும் கன்மமுமாகிய இருமலமுடையவர்கள். அவர்கள் பக்குவரும், அபக்குவரும் என இருவகையினராவர். இவர்களில் பக்குவர்கள், பரமுத்தரும் அபரமுத்தரும் என இருவகையினராவர், ஆகவே

பரமுத்தர், அபரமுத்தர், அபக்குவர் என முத்திறப் பட்டு நூற்றெட்டு உருத்திரர்களும் பிரளயாகலரா வர் மாறுபட்ட சகலான்மாக்கள் மூன்று மல முடையார் ஆவர் என்றவாறு.

இருமல பெத்தர் - இரண்டு மலங்களால் கட்டுண்டவர்

பெத்தத்தர் சித்தொடு பேண்முத்திச் சித்தது
ஒத்திட் டிரண்டிடை யூடுற்றார் சித்துமாய்
மத்தத்து மும்மலம் வாட்டுகை மாட்டாதார்
சத்தத் தமிழ்ந்து சகலத்து ளாரே. 496

இ-ம் - எனின், விஞ்ஞானகலர் முதலானோரியல்பு இதுவென்றல் நுதலிற்று.

இ - ள் : மூலமாகிய முதல்மலத்தால் பிணிப் புண்ட அறிவினையுடைய விஞ்ஞானகலர் போற்றப் பெறுகிற முத்திநிலையில் ஞானமயமான சிவமே யாவர். இருமலங்கள் ஒத்து அவற்றினிடையே பிணிப்புண்ட பிரளயாகலரில் அபக்குவர் ஞானி யாவர். ஏனைய மூன்று மலங்களையும் வலியொடுக்க மாட்டாதாராய்ச் சத்தம் முதலான சூக்கும உடலி லிருப்பவர்களாய்ச் சகலான்மாக்கள் ஆவர் என்றவாறு.

விஞ்ஞானகலர் முத்திநிலையில் சிவமேயாவர்; பிரளயாகலர் ஞானியாவர்; சகலர் சூக்கும உடம்பி லிருப்பவர்கள் ஆவர் என்பது கருத்து. மற்றது என்பது மத்தது என எதுகை நோக்கி விகாரப் பட்டது. சத்தம் - சத்த முதலானவற்றையுடைய

சூக்கும உடல். மத்தது என்பதை உன்மத்தது என்பதன் முதற் குறையாகக் கொண்டு இடர்ப்படு வாரும் உளர்.

சிவமாகி ஐவகைத் திண்மலஞ் செற்றோர்
அவமாகச் சித்தர்முத் தாந்தத்து வாழ்வர்
பவமான தீர்வோர் பசுபாசம் அற்றோர்
நவமான தத்துவம் நாடிக்கண் டாரே. 497

இ-ள்: சிவஞானியரும், நவந்தருபேதங்களை ஆராய்ந்தோரும் எய்தும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: சிவமாகி, ஐந்துவகைப்பட்ட மலங்களையும் வென்ற வீண்போகாதவர்களாகிய ஞானிகள், சாயுச்சியம் பெற்று வாழ்பவர்கள். பசுஞானமும் பாசஞானமும் அற்று ஆராயப்படுகின்ற ஒன்பது வகையான உண்மை வடிவை உணர்ந்தவர்கள். பிறவிகளை ஒழித்தவர் ஆவர் என்றவாறு,

ஐவகைத் திண்மலமாவன ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி என்பன. முத்தாந்தம் - முத்தியாகியமுடிவு, வாழ்வார் என்றது அவ்வாழ்வே என்றுமாறு இன்பவாழ்வாதலின் கூறியது. நவ தத்துவங்கள் சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மயேச்சுரன், உருத்திரன், திருமால், பிரமன் என்பன. இறைவன் நவந்தருபேதமாகி நடிப்பதைக் கண்டவர்கள் பிறவிநோயினின்று நீங்குவோராவர் என்பதாம். நாடுதல் - ஆராய்தல்.

விஞ்ஞானர் ஆணவங் கேவல மேவுவோர்
விஞ்ஞானர் மாயையில் தங்கும் இருமலர்
அஞ்ஞானர் அச்சக லத்தர் சகலராம்
விஞ்ஞான ராதிகள் ஒன்பான்வே றுயிர்களே. 498

இம் - எனின், இதுகாறும் கூறியவற்றைத் தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : (பரிபாகத்தால்) விஞ்ஞானகலரானோர் ஆணவமலமட்டும் பொருந்தியவர் அவரிற்பிரிந்த அறிவினையுடைய பிரளயாகலர்கள் சுத்தமாயையிற்றங்கும் இருமலமுடையார். சகலரும் அஞ்ஞானமுடையராய் மூவகைப்படுவர். இவ்வண்ணம் விஞ்ஞானராதிகள் ஒன்பதுவகைப்படும் வேறு வேறான உயிர்கள் ஆவர் என்றவாறு.

விஞ்ஞானர் மூவராவர் பக்குவரும் பக்குவா பக்குவரும் அபக்குவரும் என. விஞ்ஞானர் - விகதஞானர் - பிரிந்த ஞானத்தையுடையவர். விஞ்ஞானகலரில் பிரிந்த இருமலமுடையார். இவர்களுக்குச் சுத்தமாயை இடமாதலின் இங்ஙனம் கூறினார். அஞ்ஞானர் மூன்று மலங்களோடும் கூடியமையால் அறிவுமறைந்தவர்கள். இவர்களும் முறையே பக்குவர் அபக்குவர் பக்குவா பக்குவர் எனமுத்திறப்பட்டு ஒன்பதின்மராவர். இவ்வதிகாரத்து முதன் மந்திரத்தில் கட்டிய இயல்பாகவே விஞ்ஞானகலரானார் ஒழிய ஏனையோரைத் தொகுத்து ஒன்பதின்மர் என்றருளினர் ;

விஞ்ஞான கன்மத்தால் மெய்யகங் கூடிய
அஞ்ஞான கன்மத்தி னுல்சுவர் யோனிபுக்(கு)
எஞ்ஞான மெய்தீண்டி யேயிடை யிட்டுப்போய்
மெய்ஞ்ஞான ராகிச் சிவமேவல் உண்மையே. 499

இம் – எனின், விஞ்ஞானர் சிவமேவல் உறுதி என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : மேலான ஞானகன்மத்தைப் புரிபவர். உண்மையாகவே உயிருட்பதிந்துள்ள அந்த ஞான கன்மம் புரிவதால், தேவப்பிறப்பெடுத்து, அதனை விட உயர்ந்த ஞானசொரூபத்தைத்தீண்டி, அதனை அகத்துட்கொண்டு மெய்ஞானியராகிப் பரசிவத்தை அடைதல் உண்மையாம் என்றவாறு.

விஞ்ஞான கன்மத்தால் - விசேஷ ஞானம். சிறந்த ஞானத்தாற் செய்யப்பெறும் செயலால். சுவர்யோனி புக்கு - பூ: புவ: ஸ்வ: என்றமுறையில் வைத் தெண்ணப் பெறும் தெய்வ யோனியுட் புகுந்து. எவ் + ஞானம் – எஞ்ஞானம். எவ்வுதல் - உயர்தல். எழும்புதல். எவ் ஞானம் மெய் தீண்டி - உயர்தற்கேதுவாகிய ஞான சொரூபத்தைத் தீண்டி. அதனையும் இடையிட்டு மேலேறிச் சென்று. மேவல்- விரும்பியுறைதல்.

ஆணவந் துற்ற வவித்தா நனவற்றோர்
காணிய விந்துவா நாத சகலாதி
ஆணவ மாதி அடைந்தோ ரவரன்றே
சேணுயர் சத்தி சிவதத் துவமாமே 500

இம் — எனின், அவித்தை அகன்றார் அடையும் பயனையும், சகலரில் ஞானம்பெற்றார் எய்தும் பயனையும் எடுத்துரைத்தல் நுதலிற்று.

இ — ள் : ஆணவத்தில் செறிந்துள்ள அஞ்ஞானமாகிற நனவு அகன்றோர் காணும்பொருட்டு விந்துவும் நாதமும் ஆம். ஆணவம் முதலான மலங்களைப் பெற்றுச் சகலாதிகளாயுள்ளவரன்றே மிக்க தொலைவிலுள்ள சத்தி சிவ தத்துவங்களைத் தரிசித்தோர் ஆவர் என்றவாறு.

துற்ற - செறிந்த. அவித்து ஆம் நனவு — அவித்தையால் மறைப்புண்ட சாக்கிரம்; என்றது அறியாமையோடு கூடிய ஞானம். அதனை நீங்கியவர் என்க. விந்து நாத சகலாதிகள் காணிய ஆம் எனக் கூட்டி, விந்து நாதம் முதலிய அனைத்தும் தரிசனமாகும் எனப் பொருள்கொள்க. ஈண்டுக் காணிய ஆம் என்றது பின்னர் சேணுயர் சிவதத்துவமாம் என்பதால் ஈண்டு அண்மையில் அறிவினுள் அறிவாய் மன்னி நிற்றலைப் பொருந்துவர் என்பதாம். ஆணவமாதி யடைந்தோரே அவர் என்று சுட்டப்பெறும் முனைப்பை எய்துபவர் ஆதலின் அடைந்தோர் அவரன்றே என்றருளப் பெற்றது.

நனவற்றோர் விந்துவாதி சகலத்தையும் காண்பர் என்னாது விந்துநாத சகலாதி காணிய ஆம் என விந்து நாதங்களின் தொழிலாகக் கூறியது விஞ்ஞானகலர்க்குக் காண்டலாகிய முனைப்பும் தோன்றாது மடங்குதலின் என்க. சேணுயர் சிவம்

சத்தி தத்துவம் ஆம் என்றது இவர்கள் தத்துவங் களனைத்தினும் கட்டுப்பட்டிருப்பதால் தத்துவதரி சனம் பெற்றவராவர் என்பதாம்.

## 16. பாத்திரம்

மூவகைச் சீவவர்க்கம் மொழிந்த ஆசிரியர், ஆன்மவர்க்கங்கள் அனைத்தினும் சிவஞானியரே சிறந்தவர்; அவரே ஈதற்கும் இருந்து கேட்டற்கு முரிய சற்பாத்திரமாவர் என்பதை உணர்த்தத் தொடங்கிப் பாத்திரம் அருளுகின்றார். பாத்திர மாவது கொள்கலம்; அஃதாவது அறவழியில் ஈட்டியபொருளை வருபயன் கருதிச் சேமவைப்பாக வைக்கும் இடமே; அதற்கு உரியார் சிவஞானியரே என்பதாம். அதிகார இயையும் இதனானே விளங்கும்.

திலமத் தனைபொன் சிவஞானிக் கீந்தால்
பலமுத்தி சித்தி பரபோக முந்தரும்
நிலமத் தனைபொன்னை நின்மூடர்க் கீந்தால்
பலமுமற் றேபர போகமுங் குன்றுமே. 501

இ—ளின், சிவஞானிக்கும் அவஞானிக்கும் ஈவதன்பயன் இதுவாம் என்றல் நுதலிற்று.

இ-ள் : எள்ளளவு பொன்னைச் சிவஞானிக்குக் கொடுத்தால், அதனது பயன் மறுமைக்கு முத்தியும் இம்மைக்குச் சித்தியும் போகமும் ஆம். பூமியளவு பெரும் பொன்னை அஞ்ஞானிகளுக்குக் கொடுத் தால் பயனுமில்லையாய். மறுமையின்பமும் இல்லை யாம் என்றவாறு.

அடங்கலர்க் கீந்த தானப் பயத்தினல் அலறு முந்நீர்த்
தடங்கடல் நடுவுள் தீவு பலவுள அவற்றுள் தோன்றி
உடம்பொடு முகங்கள் ஒவ்வார் ஊழ்கனி மாந்தி வாழ்வர்
மடங்கலஞ் சீற்றத் துப்பின் மானவேல் மன்னர் ஏறே

என்கிறது புறச்சமயநூலும். திலம் நிலம் என்பன சிறுமை பெருமைக்கோர் எடுத்துக்காட்டு. நின் மூடர்—முப்பொருள் உண்மையறியாத முழுமூடர். சிவஞானியர்க்கன்றிப் பிறர்க்கு ஈதலாகாது என்பது வலியுறுத்தப்பெற்றது. இதனை,

சிவஞானச் செயலுடையோர் கையில் தானம்
திலமளவே செய்திடினும் நிலமலைபோல் திகழ்ந்து
பவமாய கடலினழுந் தாதவகை யெடுத்துப்
பரபோகம் துய்ப்பித்துப் பாசத்தை அறுக்கத்
தவமாரும் பிறப்பொன்றிற் சாரப் பண்ணிச்
சரியைகிரி யாயோகந் தன்னினுஞ் சாராமே
நவமாகுந் தத்துவஞா னத்தை நல்கி
நாதனடிக் கமலங்கள் நணுகுவிக்குந் தானே.

என்னும் சிவஞானசித்தியார் திருவிருத்தமும் தெரிவித்தல் காண்க.

கண்டிருந் தாருயிர் உண்டிடுங் காலனைக்
கொண்டிருந் தாருயிர் கொள்ளுங் குணத்தனை
நன்றுணர்ந் தார்க்கருள் செய்திடு நாதனைச்
சென்றுணர்ந் தார்சிலர் தேவரு மாமே. 502

இ-ள். நோயறிந்தும், அதற்குரிய மருந்து இருந்தும் மக்கள் உணராராயினர்; உணர்ந்தவர் தேவராவர் என்றல் நுதலிற்று.

இ - ள் : உயிர்களைத் தத்தம் கால எல்லையிற் கொண்டுபோகும் காலனைக் கண்டிருந்தார்கள் இம் மக்கள். உயிர்க்குயிராகக் கொண்டிருக்கும் அருட் குணத்தினனாகிய இறைவனைத் தம்முட் கொண்டிருக்கின்றனர். அங்ஙனமிருந்தும் அவனை நன்கறியாமையால் பலர் அவதியுறுகின்றனர். நன்றாக அறிந்தனுபவிக்கும் ஞானிகளுக்கு அருள்வழங்கும் தலைவனைச் சென்று அறிந்தவர்களாகிய சிலர் தேவர்கள் ஆவர் என்றவாறு.

அறிந்தார்சிலர் எனவே அறியார் பலராயினர், இறப்பாகிய நோயும், அதனை நீக்குமருந்தாக இறைவன் உயிர்க்குயிராக உள்ளேயிருப்பதும் அறியாமையால் பலர் வீணே அழிகின்றனர் என்பதாம்.

கைவிட்டி லேன்கரு வாகிய காலத்தும்
மெய்விட்டி லேன்விகிர் தன்னடி தேடுவன்
பொய்விட்டு நானே புரிசடை யானடி
நெய்விட் டிலாத இடிஞ்சிலு மாமே. 503

இம் - எனின், சிவஞானியரியல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அடியேன் கருவாய்க் கிடக்கின்ற காலத்தும் இறைவனை மறந்தேன் அல்லேன். பொய்யைக் கைவிட்டு உண்மையைக் கைவிடாதவனாக இறைவன் திருவடியைத் தேடுகின்றேன். புரியாகிய சடையையுடைய பெருமானின் திருவடியாகிற நெய்யை விட்டு எரிக்கப்பெறாத அகலும் ஒளியுடைய விளக்கு ஆகுமா ? என்றவாறு.

திருவடியாகிய திருவருட்பற்று இல்லாதார் சிவஞானியர் ஆகார் என்பது கருத்து. இம்மந்திரம் தன்மேல்வைத்து, கருவுற்ற நாள்முதலாகக் கழலே நினையும் கருத்துடையராய், பொய்யான பிரபஞ்சப் பற்றையெல்லாம் நீக்கி, உண்மையான திருவடிப் பற்றொன்றே உடையவர் சிவஞானியர் என்பது உணர்த்தியவாறு. அம்மட்டோடன்றி நெய்விட்டு எரிக்காத அகல் விளக்காகாததுபோல, திருவருள் நேயமில்லாத உடலுடையார் சிவஞானியர் ஆகார் என எதிர்மறை முகத்தானும் விளக்கியருளினர் திருமூலதேவநாயனார் என்க.

ஆவன ஆவ அழிவ அழிவன
போவன போவ புகுவ புகுவன
காவலன் பேர்நந்தி காட்டித்துக் கண்டவன்
ஏவன செய்யும் இளங்கிளை யோனே. 504

இ-ள். எல்லாம் சிவன்செயல் என்று இருப்பவனே சிவஞானி என்றல் நுதலிற்று

இ-ள்: ஆவன ஆகும்; அழிவன அழியும்; கழிவன கழியும்; வருவன வரும்: ஆகையால் இவற்றை இறைவன் காட்டியருளக் கண்டிருப்பவனே சிவ ஞானியின் வண்ணம் செயலாற்றுகின்ற அடியார் கூட்டத்தில் இளையோன் ஆவன் என்றவாறு

ஆவன - சிருஷ்டிக்கப்படும் உலகு உடல் முதலியன. அழிவன - ஒடுக்கப்பெறுவனவாகிய அவை. போவன-மறைவன; இவை உண்டு கழிக்கப்பெறும் வினைகள். புகுவன - உண்ணக்கடவனவாக வந்து பொருந்தும் வினைகள். ஆகவே ஆவன அழிவன

இரண்டும் தனுகரணங்களையும், போவன புகுவன இரண்டும் வினைபபோகங்களையும் உணர்த்தின.

இவை நமது சுதந்திரத்தானன்றி அவன் கூட்ட அமைகின்றன என்பதையும், பெருமான் காட்டக் காணவேண்டுமேயன்றி நாமாக எத்துணையும் உணர முடியாது என்பதையும், உணர்ந்தவன் எல்லா வற்றையும் சிவனுணையின் வழிநின்று சிவன்செய லாகச் செய்வானேயன்றி, தன்முனைப்பாற் செய் யான், ஆகவே அவனே சிவஞானி என்பது விளக் கியவாறு.

## 17. அபாத்திரம்

தானத்திற்குரிய பாத்திரமாவார் இவர் என்பதை உடன்பாட்டுமுறையால் விளக்கிய ஆசிரி யர், ஆகார் இவர் என்பதையும் எடுத்துக்காட்டி, மேலதை வலியுறுத்துகின்றார் ஆதலின் முன்னதன் பின் இது இடம்பெற்றது.

கோல வறட்டைக் குனிந்து குளக்கிட்டுப்
பாலைக் கறந்து பருகுவ தேயொக்கும்
சீலமும் நோன்பும் இல்லாதவர்க் கீந்தது
காலங் கழிந்த பயிரது ஆகுமே. 505

இம் - னின், அபாத்திரர்க்கு ஈயின் பய னில்லை என்பது உவமைமுகத்தான் உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள்: அழகான வறட்டுப் பசுவிற்குக் குனிந்து நிமிர்ந்து பசுந்தழை முதலியவற்றையிட்டுப்

பாலைக் கறந்து குடிப்பதுபோலாம் ஒழுக்கமும், விரதமும் இல்லாதவர்க்கு ஈந்தது. அன்றியும்; பருவம் தவறிச் செய்த பயிரையும் போல்வதாம் என்றவாறு

கோல வறடு - கண்ணுக்குக் கவர்ச்சியான அழகாய்ப் பயனற்ற பசு, குளிந்து என்றது பாதுகாத்தலாகிய பயனற்ற தொழிலை உணர்த்திற்று. ஒக்கும் என்றது இயலாது என இகழ்ந்தவாறு.

முதலுவமை குளகிடுதல் முதலியன வீண் முயற்சி என்பதையுணர்த்திற்று. பின்னது காலமில்லாக் காலத்துச் செய்யப்பட்ட பயிர் வளர்ந்தும் பயன் தராததுபோலப் பொருளழிவே யன்றிப் பெறும் பயனின்மையை உணர்த்திற்று.

ஈவது யோகம் இயம நியமங்கள்
சார்வ தறிந்தன்பு தங்கு மவர்க்கன்றி
ஆவ தறிந்தன்பு தங்கா தவர்களுக்(கு)
ஈவ பெரும்பிழை யென்றுகொள் வீரே. 506

இ - ளின், யோகமும் அன்பும் உடையார்க்கு அன்றி ஏனோர்க்கு ஈவது பிழை என்றல் நுதலிற்று.

இ - ள் : உலகவர்களே! யோகவுறுப்புகளாகிய இயம நியமாதிகளில் சாரத் தகுவனவற்றை அறிந்து அன்பு செய்கின்றவர்கட்குக் கொடுப்பது அல்லாமல் அன்பில்லாதவர்கட்கு அவர்களுடைய பேராசையை அறிந்து ஈவது பெரும் பிழையாம் என்று அறிந்துகொள்ளுங்கள் என்றவாறு.

உலகவர்களேஎன்ற எழுவாய் வருவித்துரைக்க. 'சார்வது அறிந்து' என்பது ''சார்புணர்ந்து'' என்ற குறட்பகுதியை நினைவூட்டுதல் காண்க. இயம நியமங்களினியல்பை மூன்றாந் தந்திரத்துக் காண்க. இறைவன்மாட்டன்புடையார்க்கு ஆவல் இராது. அவர்கட்கு ஈயின் அந்த ஈகை பெரும்பயன் தருவது என்பது உணர்த்தியவாறும்.

ஆமா றறியான் அதிபஞ்ச பாதகத்
தோமாறும் ஈசற்குந் தூய குரவற்குங்
காமாதி விட்டோர்க்குந் தரல்தந்து கற்பிப்போன்
போமா நரகிற் புகான்போதங் கற்கவே. 507

இம் – எனின், சிவஞானியர்க்கு ஈந்தவன் நரகிற் புகான் என்றல் நுதலிற்று,

இ – ள் : மிக்க பஞ்சமாபாதகங்களில் ஈடு படுவதை அறியாதவனாய், குற்றங்களினின்றும் இயல்பாகவே நீங்கின சிவபெருமானுக்கும், மல வாதனை அகன்ற ஆசாரியனுக்கும், காமாதிகளை விட்ட ஞானியர்க்கும் கொடுத்து, அவர்களை அவ்வந் நிலையிலேயே நிற்கச் செய்பவனாகிய ஆன்மா, பிறர் செல்லக்கடவதாய பெரிய நரகங்களிற் புகான்; அவன் என்றும் சிவஞானமே கற்பானாக என்ற வாறு.

அதி பஞ்ச பாதகம்-பஞ்சமாபாதகம்; என்றது மொழி மாறி நின்றது. மா என்பதன் பொருளை அதி என்றதால் குறிப்பித்தார். பாதகத்து ஆம் ஆறு அறியான் எனக் கூட்டிப் பாதகத்திலீடுபடுவதை யறியாதவன் எனப் பொருள்கொள்க. தோம் –

குற்றம்; மலக்குற்றம். மாறுதல்-பரிபாகத்தாலன்றித் தானே இயற்கையாகவே பொருந்தாதிருத்தல்.

தூய குரவன் - நால்வகை நெறியானும் மலம் நீங்கித் தூய்மையான ஞானாசிரியன். காமாதி - காமம் முதலிய உட்பகை ஆறு. விட்டோர்-முனிவர். சமாதியெனப் பாடங்கொண்டு பொன்னுசை முதலியவற்றையெனப் பொருள்கொள்வாரும் உளர்.

தரல் தந்து - கொடுத்தலைச் செய்து. ஈவோன் - யோக முதலிய நெறியினிற்பார்க்குப் பசியும் பிணியும் நீக்கி அவ்வந்நெறிகளிலே அவரவர்களை யொழுகப் பண்ணுதலின் கற்பிப்போன் என்றருளினர். மாநரகு-ரௌரவம், கும்பீபாகம் முதலிய பெரிய நரகங்கள். கற்க என்பது வாழ்த்துதற் பொருளில் வந்த வியங்கோள்.

மண்மலை யத்தனை மாதனம் ஈயினும்
அண்ணல் இவனென் றஞ்சலி யத்தனாய்
எண்ணி இறைஞ்சாதார்க் கீந்த இருவரும்
நண்ணுவர் ஏழா நரகக் குழியிலே. 508

இ-ள், ஈவாரும் ஏற்பாரும் இறையுணர்ச்சி இலராயின் நரகு எய்துவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் ; சிவனே பரம்பொருள் என்று கூப்பிய கையராய், இறைவனை இடைவிடாது தியானித்து வணங்காதார்க்கு இம்மண்ணுலகிலுள்ள மலையளவு மிகப்பெரிய செல்வத்தை ஈந்தாலும், கொடுத்தவ

ரும் வாங்கினவருமாகிய இருவரும் ஏழு வகையான நரகங்களிலும் முறையே விழுந்து வருந்துவர் என்றவாறு.

*ஈந்த இருவர் – கொடுத்தவர்க்கு ஆங்கால் செய்வினைப் பெயரெச்சம்; வாங்கியவர்க்கு ஆங்கால் ஈயப் பட்டவர் எனச் செயப்பாட்டு வினைப்பெயரெச்சம்.*

## 18. தீர்த்தம்

*அஃதாவது புனிதமுறுத்துகின்ற நீர்என்பதாம். இடத்து நிகழ்பொருளின் பெயராகிய தீர்த்தம் என்பது நீர்நிறம்பிய ஆறும் குளமுமாகிய இடத்தை உணர்த்தும். அகத்தூய்மைக்கு ஏற்ற தானத்தை விளக்கிய நாயனார் புறத்தூய்மைக்கு இன்றியமையாத தீர்த்தத்தின் இயல்பை உணர்த்துவான் தொடங்கி தீர்த்தங்களும் புறத்தே இல்லை எல்லாம் அகத்தே என்று ஆறு திருமந்திரங்களால் தெரிவித் தருளுகின்றார்.*

**உள்ளத்தின் உள்ளே உளபல தீர்த்தங்கள்**
**மெள்ளக் குடைந்துநின் றுடார் வினைகெடப்**
**பள்ளமும் மேடும் பரந்து திரிவரே**
**கள்ள மனமுடைக் கல்வியில் லோரே.** 509

*இம் – எனின், தீர்த்தம் தேடித்திரிவார் அறிவிலிகள் என்பது நுதலிற்று.*

*இ – ள்: தீர்த்தங்கள் பலவும் நம்முள் உள்ளன. தாம்செய்த வினை யகல அவற்றை மெள்ளக்*

குடைந்து. ஆடாராய்க் கள்ள மனமுடைய கல்வி யில்லாதார் பள்ளமும் மேடும் சுற்றித்திரிவர் என்றவாறு.

தீர்த்தங்கள் பத்து, அவை கொல்லாமை முத லாகவும் தவம் செபம் முதலியனவாகவும் மூன்றுந் தந்திரத்து மொழியப்பட்ட பப்பத்தான இரு வகைத் தீர்த்தங்கள். அவை, தன்னுள்ளே இருப் பன ஆதலின், அவற்றை அறிந்தொழுகி மாசுகளைக் கழுவத் தெரியாத கள்ள மனத்தார் ஊர்சுற்றித் திரிவர் என்பது கருத்து.

> தளியறி வாளர்க்குத் தண்ணிதாய்த் தோன்றும்
> குளியறி வாளர்க்குக் கூடவும் வொண்ணான்
> வளியறி வாளர்க்கு வாய்க்கிலும் வாய்க்கும்
> தெளியறி வாளர்தஞ் சிந்தையுளானே. 510

இம் - எனின், சிவஞானியரின் சிந்தையிலுள்ள திருவருளே தீர்த்தம் என்றல் நுதலிற்று.

இ - ள் : தெளிந்த ஞானியர் சிந்தையுள் விளங்கு கின்ற சிவன், சீவதயை உடையவர்க்குக் குளிர்ந்த பொருளாய்த் தோன்றுவன். உலகவின்பத்துள் அழுந்தி அநுபவிப்பவர்களால் அறியவும்முடியாதவ ளுக இருப்பன். பிராணனை அடக்கி மன ஒருமை யாகிய அதனிலையை அறிந்த யோகியர்க்கு வாய்த் தாலும் வாய்ப்பன் என்றவாறு.

தளி-குளிர்ச்சி; என்றது ஈண்டு எல்லாவுயிர்கள் மேலும் ஒப்பச் செலுத்துவதாய கருணையை. இரக்கமுமாம். ஆலயமுமாம், உலகில் பிறந்து

அதில் ஈடுபட்டு ஒரொருகால் பிறவி வாசனையான் உண்மை ஞானம் உதிக்க ஆலயத்தை வழிபடுகின்றவர்கட்கு, கருணைவடிவாய்க் காட்சியளிப்பன் என்று உரைகோடலுமாம்.

குளி - குளித்தல்; இது முதனிலைத் தொழிற் பெயர். அழுந்தியனுபவித்தல். தீர்த்தம் என்பதற்கு ஏற்ப குளி என்றார். உலகபோகங்களை என்ற செயப்படு பொருள் வருவிக்கப் பெற்றது. வளி - காற்று; ஈண்டுப் பிராணன். யோகம் ஞானவாயிலாதலின் அது நெறி தவறின் பயன் கிட்டாது என்பார் வாய்க்கிலும் வாய்க்கும் என்றார்.

தெளியறிவு - பவமதனை யறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம். தெளியறிவாளர் – திருவடி ஞானம்உடையார். சிந்தையுளான்–மாமணிச்சோதி போல் வெளிப்பட்டு நிற்பன் என்பதாம்.

உள்ளத்தின் உள்ளே உணரும் ஒருவனைக்
கள்ளத்தி னுலுங் கலந்தறி வார்இல்லை
வெள்ளத்தை நாடி விடுமவர் தீவினைப்
பள்ளத்தி லிட்டதோர் பத்தலுள் ளாமே. 511

இம் – எனின், வஞ்சனையாக வழிபட்டாலும் அதற்கும் இரங்குவர் இறைவன் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : தண்ணீரை விரும்பிப் பத்தலை விடுபவர்கள் கிணற்றில் விடாமல் தீவினையாகிய பள்ளத்தில் விட்டாலும் நீர்கிட்டும். அதுபோல உயி

ருக்குயிராக அறியப்படும் சிவபெருமானைக் கள்ளத் தனமாகவாவது கலந்து அறிகின்றவர்கள் யாரும் இல்லையென்றவாறு.

பத்தல் – நீரிறைக்குஞ்சால். வெள்ளம் – நீர். நீரை விரும்பிச் சாலே கிணறு குளம் முதலியவற்றி லிடுபவர்கள் தமது தீவினையாற்றறடுமாறி வேற்றுப் பள்ளத்திலிட்டாலும் அதிலுள்ள நீர் பத்தலுள் ஆம். அதுபோல உள்ளத்தில் வைத்து உணரத் தக்க இறைவனைக் கள்ளத்தாற் கலந்தாவது அறிய லாமே! அதுவும் இயற்றுர்களே என்னே இவர்தம் மடமை! என இவர்கட்கு இரங்கியும், கள்ளத்திற் கும் வெளிப்படும் இறைவன் கருணையைப் பாராட்டி யும் கூறியவாறு. "நாடகத்தால் உன்னடியார்போல் நடித்து, நான் நடுவே வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்" என்ற மணிவாச கத்தையும் இணைத்து எண்ணுக. பாவனைசெய் வார்க்குப் பாவகமாய் வெளிப்படுதல் இறைவன் கருணையாதலின் இங்ஙனம் கூறினார். நீர் ஆம் என எழுவாயும், பத்தல் விடும் அவர் எனச் செயப்படு பொருளும் ஆங்காங்கு வருவித்து முடிக்க.

கள்ளத்தினாரும் எனப் பாடங்கொண்டு வேண் டியவாறு பல தொடர்களை இட்டு வேறு பொருள் காணபரும் உளர்.

அறிவார் அமரர்கள் ஆதிப் பிரானைச்
செறிவா னுறைபதுஞ் சென்று வலங்கொள்
மறியார் வளைக்கை வருபுனற் கங்கைப்
பொறியார் புனல்மூழ்கப் புண்ணிய ராமே. 512

இ-ம் — எனின், இறைவனை வணங்காத தேவர்கள் கங்கையாடிப் பயன் என்னை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : மிகத் தெரிந்தவர்களாகிய தேவர்கள். நீக்கமற நிறைந்துள்ள முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானை, அவன் உறைகின்ற இடங்களாகிய தலங்களிற் சென்று வணங்கி வலங்கொள்ளுதலைச் செய்து மீளார்கள். அவர்கட்கு வளையணிந்த கையிலிருந்து உண்டான நீராகிய கங்கையின் திவலையோடுகூடிய புனலில் மூழ்கப் புண்ணியராந்தன்மை விளையுமோ என்றவாறு.

அறிவார் அமரர்கள் என்றது புகழ்வதுபோலப் பழித்தது. 'அமரர்கள் சென்று வலங்கொள் மறியார் புண்ணியர் ஆமே' எனக் கூட்டிப் பொருள்கொள்க. செறிதல்-நீக்கமற நிறைதல். கொள் முதனிலைத் தொழிற்பெயர். வலங்கொள்ளுதலைச் செய்து என ஒரு வினைச்சொல் வருவித்து முடிக்க.

வளைக்கை வருபுனல்: இறைவனுடைய திருக் கண்களை உமையம்மை புதைத்தஞான்று உலகம் இருண்டதாக, இறைவன் நெற்றிக்கண்ணைத் திறந்து உலகிற்கு ஒளிதந்தார்; அவ்வெப்பம் தாங்காது அம்மையின் திருக்கரங்கள் வியர்த்தன; அம்மை கையை உதறினாள்; அவளுடைய பத்து விரல்களின் வழியாகச் சிந்திய வியர்வையிலிருந்து பத்துக் கங்கைகள் உண்டாயின என்பது புராண வரலாறு. பொறி-துளி, ஏகாரம் ஈற்றசையன்று; எதிர்மறை. புண்ணியர் ஆமேஎனப் பலர்பாற்

படர்க்கை செய்யு மென்னும் முற்றைக் கொண்டு முடிந்தது சித்தர் மறை (ஆரிடம்) ஆதலின்.

கடலிற் கெடுத்துக் குளத்தினிற் காண்டல்
உடலுறத் தேடுவார் தம்மையொப் பாரிலர்
திடமுற்ற நந்தி திருவரு ளாற்சென்(று)
உடலிற் புகுந்தமை ஒன்றறி யாரே. 513

இம் - எனின், இறைவனை இடம்விட்டு இடம் தேடுவார் அஞ்ஞானிகள் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: பொன்னைக் கடலிற்போட்டு, குளத்தில் காண்பதாக மாறுபட்டுத் தேடுகின்றவர்களைப் போல அறிவிலிகள் யாருமிலர்; அதுபோல நிலைத்த பற்றுக்கோடான சிவபெருமான் ஆன்மாக்கள்மீது வைத்த அளவிலாக் கருணையால் அவர்கள் உடம்பிற் சென்று புகுந்த ஒரு செயலை அறியாராயினர் என்றவாறு.

உடலுற - மாறுபாடுற. பொன்னைக் கடலில் எறிந்துவிட்டு, குளத்தில் தேடுகின்ற அறிவிலிகளைப்போல்வார் யாருமிலர்; இறைவன் உடலிடங் கொண்டமையை அறியாரும் அத்தகையர் என்பதாம்.

கலந்தது நீர துடம்பிற் கறுக்கும்
கலந்தது நீர துடம்பிற் சிவக்கும்
கலந்தது நீர துடம்பில் வெளுக்கும்
கலந்தது நீர்நிலங் காற்றது வாமே. 514

இம்-எனின், முக்குணங்களையும் திருவருள் நீராற் கழுவுக என்பது உணர்த்துதல் நுதலிற்று

இ - ள் : உடம்பிற் கலந்ததாகிய குணங்கள் கறுத்தும் சிவத்தும் வெளுத்தும் இருக்கும். அவை நீரும் நிலமும் காற்றுமாகிய மூன்று தன்மையை உடையன என்றவாறு.

நீரது-தன்மையை உடையது. தன்மை-குணம் குணங்கள் உயிருக்கேயுள்ள இயல்பாயினும் உயிர் உடம்போடு கலந்த வழியே வெளிப்படுமாதலின் உடம்பிற் கலந்தது நீரது என்றார். கறுப்பும், சிவப்பும். வெளுப்பும், முறையே தாமதம், ராசதம், சாத்துவிகம் இவற்றின் நிறங்களாம். மேலும். இவை நீரும் நிலமும் காற்றுமாகிய இவற்றின் ஆற்றலுமாம். இவற்றைத் திருவருள்நீரால் தூய்மைப்படுத்துக என்றவாறு. நீர் வெளுப்பும் காற்று கருப்பும், நிலம் செம்மைகலந்த மஞ்சளுமாகிய நிற மாகிய நிறமுடைமை 'உண்மை விளக்கம்' கொண்டு உணர்க.

## 19. திருக்கோயிலிழிவு

அஃதாவது, இறைவன் கிணற்றில் நீர்போல வும் ஆவின் மடியிற் பால்போலவும் எளிதில் வெளிப்பட்டு எழுந்தருளி யிருக்குமிடங்களாகிய திருக்கோயிலுக்கு உளதாம் இழிவுகளையும். அவற் றால் அரசனும் நாடும் அடையும் இழிவுகளையும் ஐந்து திருமந்திரங்களால் உணர்த்துதலின் இப் பெயர்த்தாயிற்று. தீர்த்தமுரைத்தவர், மூர்த்தி

யிருக்குமிடந்தன்னை மொழிதல் முறையாகலின் அதிகார இயையும் இதனுனே அறிக.

தாவர லிங்கம் பறித்தொன்றில் தாபித்தால்
ஆவதன் முன்னே அரசு நிலைகெடும்
சாவதன் முன்னே பெருநோய் அடுத்திடும்
காவலன் பேர்நந்தி கட்டுரைத் தானே. 515

இ-ம் - எனின், திருவுருவைப் பறித்தலாற் படு பயன் அறிவித்தல் நுதலிற்று.

இ-ள் : நிலைபேறுடைய சிவலிங்கத்தைப் பிடுங்கி, வேறொன்றில் தாபித்தால், தாபிப்பதற்கு முன் அரசு நிலைதடுமாறும்; பறித்தவன் இறப்பதற்கு முன்பே தொழுநோயால் வருந்துவன்; இது என் இன்னுயிர்க் காவலனுகிய சிவபெருமான் உரைத்த உறுதிமொழி என்றவாறு.

தாவர லிங்கம் – நிலைபெறுத்தப்பெற்ற சிவபெருமானது திருவுரு; சிவலிங்கமுமாம். இலிங்கத்தைப் பறித்து வேறோரிடத்தில் தாபித்தாலே இத்துணைக்கேடு விளையுமாயின், தாபிக்காமல் விடின் விளையும் பயன் எத்துணையோ என்று எண்ணுக.

ஆவதன் முன்னே - தாபித்தல் ஆதற்கு முன்பு, கேட்பார்க்கு உறுதிபிறக்க இது சிவனுணை என்று விளக்கியவாறு.

கட்டுவித் தார்மதிற் கல்லொன்று வாங்கிடில்
வெட்டுவிக் கும்அபி டேகத் தரசரை
முட்டுவிக் கும்முனி வேதிய ராயினும்
வெட்டுவித் தேவிடும் விண்ணவன் ஆணையே. 516.

இம் - எனின், திருக்கோயிலுக்குத் தீங்கிழைத்தார் எய்தும் பயன் கூறுதல் நுதலிற்று.

இ - ள் : கட்டுவிக்கப்பெற்று நிறைந்த மதிலிலே ஒருகல்லைப் பெயர்த்தெடுத்தால் அத்தீமை, மகுடாபிஷேகம் செய்விக்கப்பெற்ற மன்னர்களை வெட்டி வீழ்த்தும் ; முனிவர்களை இடருறச்செய்யும். கல்லைப் பெயர்த்தவர் வேதியராயினும் அவர்களையும் வெட்டுவித்தே விடும் ; இது சிவன் ஆணை என்றவாறு.

'விடும்' துணிவுப்பொருளில் வந்தது.

ஆற்றரு நோய்மிக் கவனி மழையின்றிப்
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத் தான்திருக் கோயில்க ளெல்லாம்
சாற்றிய பூசைகள் தப்பிடில் தானே. 517

இம் — எனின், பூசை தவறுதலால் பொருந்தும் தீமைகள் இவையிவையென அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : இயமனை உதைத்தவராகிய இறைவன் எழுந்தருளியுள்ள திருக்கோயில்களில், வேதாகமங்களில் விதிக்கப்பட்ட பூசைமுறை தப்புமாயின், நாட்டில் பொறுக்கமுடியாத நோய் பரவும் ; மழை குறைந்து, போற்றுதற்கரிய மன்னர்களும் போர் வலி குன்றுவர் என்றவாறு.

இதனால் நாட்டிற்கும் நாட்டைக் காக்கின்ற அரசனுக்கும் வருந்தீமை அறிவிக்கப்பட்டது.

முன்னவ னார்கோயில் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும்
கன்னங் களவு மிகுத்திடுங் காசினி
என்னருள் நந்தி எடுத்துரைத் தானே. 518

இ-ம் – எனின், இதுவுமது,

இ – ள் : முதல்வனுடைய திருக்கோயில்களில் பூசைக்கு இடையூறு நேருமாயின் அரசர்கட்குத் தீமை உளதாம்; மழைநீர் வளப்பம் குறையும்; கன்னம் களவுகள் மிகும் என்று எனது அருள்வடிவாகிய சிவபெருமான் எடுத்துச்சொன்னான் என்றவாறு.

வாரி - வருவாயும் ஆம்

பேர்கொண்ட பார்ப்பான் பிரான்தன்னை அர்ச்சித்தால்
போர்கொண்ட வேந்தர்க்குப் பொல்லா வியாதியாம்
பார்கொண்ட நாட்டுக்குப் பஞ்சமு மாம்என்றே
சீர்கொண்ட நந்தி தெரிந்துரைத் தானே. 519

இ-ம் - எனின், பார்ப்பான் இறைவனைப்பூசித்தலாகாது என்றல் நுதலிற்று.

இ - ள் : பெயரளவில் அமைந்த பார்ப்பான் சிவபெருமானை வழிபடின், போர்புரியும் அரசர்கட்குப் பொல்லாத வியாதி விளையும்; இப்பூமியை இடமாகக் கொண்ட நாட்டுக்குப் பஞ்சமாம் என்று சிறப்பினைத் தாமே கொண்ட சிவபெருமான் ஆராய்ந்து அறிவித்தான் என்றவாறு.

பேர்கொண்ட பார்ப்பான் - பார்ப்பான் என்ற பெயரைமட்டுங் கொண்டு அதற்குரிய கடமைகளைச் செய்யாத பார்ப்பான். ஆகமநெறி நின்று முப்பொருளுண்மையுணர்ந்து சிவதீட்சை பெற்று ஒழுக்கமும் தவறுதவனே பிரானை அருச்சிக்கத் தக்கவன் என்பதாம்.

" अदीक्षितार्चितं लिंगं त्यक्त्वा भीतो महेश्वरः।"

என்ற ஆகமவாக்கியமும் ஈண்டு எண்ணற்கு உரியது.

## 20. அதோமுக தெரிசனம்

சதாசிவமூர்த்திக்குள்ள ஈசானம் முதலான ஐந்து முகங்களோடு கீழ்நோக்கிய முகமாகிய அதோமுகமும் * ஒன்று உண்டு. அதனைத் தெரிசித்தமை கூறுவதே இப்பகுதி.

எம்பெரு மான்இறை வாமுறை யோஎன்று
வம்பவிழ் வானோர் அசுரன் வலிசொல்ல
அம்பவள மேனி அறுமுகன் போயவர்
தம்பகை கொல்என்ற தற்பரன் தானே. 520

இம் – எனின், இறைவன் 'சூரபன்மனைவென்று வருக' என்று முருகற்குப் பணித்தமை மொழிதல் நுதலிற்று.

---

* " ஐந்து முகத்தோடு அதோமுகமுந் தந்து "
— கந்தர்கலிவெண்பா.

இ-ள் : ‘ எம்பெருமானே ! இறைவா ! நாங்கள் இங்ஙனம் வருந்துவது முறையோ ’ என்று மணம் விரியப்பெற்ற கற்பகமாலையை அணிந்த தேவர்கள் சூரபன்மனுகிய அசுரனது வலிமையைச் சொல்லி வழிபாடு செய்ய, தற்பரசிவம், ‘ அழகிய பவளம் போலும் திருமேனியை உடைய ஆறுமுகனே ! நீ சென்று அவர்களுடைய பகையைக் களைந்து வருக ’ என்று பணித்தனன் என்றவாறு.

அறுமுகனைத் தோற்றுவித்தற்கு முன்பு தான் அதோமுகந்தாங்கி அறுமுகமாயிருந்து இறைவன் தீப்பொறி ஆறையும் தோற்றுவித்தான் என்பது வரலாறு ஆதலின் இங்ஙனம் கூறப்பெற்றது. தற்பரன் - சுட்டப் படுபொருள்கள் எல்லாவற்றையும் அழித்துத் தானே அனைத்திற்கும் மேலானவன், நித்தியமானவன், ஆனந்த வடிவினன், சுட்டப் படாதவன் என்பதை உணர்த்தியவன்.

அண்டமொ டெண்டிசை தாங்கும் அதோமுகம்
கண்டங் கறுத்த கருத்தறி வாரில்லை
உண்டது நஞ்சென் றுரைப்பர் உணர்விலோர்
வெண்டலை மாலை விரிசடை யோற்கே. 521

இம் - என்னின். இறைவற்கு அதோமுகம் அமைந்த காரணம் இது என்றல் நுதலிற்று.

இ - ள் : வெண்மையான தலைமாலை அணிந்த விரிந்த சடையை யுடைய சிவபெருமானுக்கு, அண்டங்களையும் திசைகளையும் தீமை புகுதாதே காக்கும் அதோமுகத்தின் கழுத்து கறுத்த காரணத்தை அறிகின்றவர்கள் யாரும் இல்லை ; அவர்

உண்டது நஞ்சு, அதனாற் கறுத்தது என்பர் அறிவிலார் என்றவாறு.

அதோமுகம் பிரகிருதிமாயையில் தொழிற் படுத்த அவன் விரும்பி மேற்கொண்டது, உலகங் கட்கு வந்த இடையூறுகளைப் போக்கவே அவர் கண்டங் கறுத்தாரே அன்றி நஞ்சு உண்டதாலன்று என்பதாம். மூவகை யாருயிர்வர்க்கமாகிய பாற் கடலை நல்வினையாகிய தேவர்களும், தீவினையாகிய அசுரர்களும் ஆன்மபோதம் என்ற மந்தரமலையை யிட்டுப் பாசஞானமாகிய அமுதம் திரளக் கடைந்த காலத்து, ஆணவத்தின் காரியமாகிய அஞ்ஞான மும், மோகம், மதம், அராகம், விஷாதம்,சோஷம், வைசித்திரியம். அரிசம் முதலியவைகளும் ஆகிய நஞ்சு திரண்டு உயிர்களை மறைக்கத் தொடங்கிய போது, இறைவன் அந்நஞ்சை விழுங்கி, 'இவ் வண்ணம் எஞ்ஞான்றும் காப்பேம்' என்பதற்கு அறிகுறியாகத் திருமிடற்றில் வைத்தனன் என்பதே தத்துவக் கருத்தாக இருக்க, இதனையறியாமல் வரலாறு என்று கருதுவார் அறிவிலார் என்பது கருத்து. இதனை உடம்பொடுபுணர்த்தி அதோ முகத்திற்கு அடைமொழியாக்கி "அண்டமொடு எண்திசை தாங்கும் அதோமுகம் கண்டம் கறுத்த கருத்து" எனத் திருவாய் மலர்ந்துள்ளமை தெளிக.

**செய்தான் அறிவன் செழுங்கடல் வட்டத்துப்**
**பொய்யே உரைத்துப் புகழும் மனிதர்காள்**
**மெய்யே உரைக்கில் விண்ணோர் தொழச்செய்வன்**
**மைதாழ்ந் திலங்கு மணிமிடற் றோனே. 522**

இம் - எனின், உண்மை உரைக்கில் உயரலாம் என்று உலகோர்க்கு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இவ்வுலகைப் படைத்த இறைவன் அறிவான் ; செழுமையான கடல் புடைசூழ்ந்த நிலவலயத்து, பொய் சொல்லியே புகழும் மக்களே! கருமை அடங்கி விளங்குகின்ற அழகிய கழுத்தினை உடைய இறைவன், உண்மை உரைப்பீர்களாயின் உங்களை விண்ணோர்களும் வந்து வணங்க உயர்த்துவன் என்றவாறு.

இவ்வுலகத்து, செத்துப்பிறக்கின்ற தேவர்களையெல்லாம் முதல்வர் எனப் பொய்யாகப் புகழ்ந்து கொண்டேகழியாமல் உண்மையுணர்ந்து ஒழுகுவீர்களாயின் நீங்கள் தேவதேவராக விளங்கலாமே என்பது கருத்து. இதுவும் பிரகிருதிமாயாபுவனவாசிகளாகிய ஆன்மாக்களை அதோமுகங்கொண்டு காப்பதை அறிவித்தலின் இம்மந்திரம் இவ்வதிகாரத்ததாயிற்று.

நந்தி எழுந்து நடுவுற ஓங்கிய
செந்தீ கலந்துட் சிவனென நிற்கும்
முந்திக் கலந்தங் குலகம் வலம்வரும்
அந்தி இறைவன் அதோமுக மாமே. 523

இம் — எனின், இறைவன் அதோமுகமாமாறு இது என்றல் நுதலிற்று.

இ — ள் ; சிவம். ஆன்மாக்களை இரட்சிக்கத் திருவுளங்கொண்டு எழுந்து, நடுவாக உயர்ந்த தன்மையுள்ள பராசத்தியை அதிட்டித்து நின்று, சதாசிவன்

என்னும் சிவசாதாக்கியமாய் நிற்பர். பின்பு முதலில் கலந்து உடனாய் பிரபஞ்சத்தில் ஈசனாக, பிரமனாக, ஈஸ்வரனாக, ஈசானனாக வென்று விளங்குவர். இதுவே இறைவன் அதோமுகம் ஆவதாம்.

இறைவன் அதோமுகமாதலாவது ஆன்மாக்களை ஈடேற்றவேண்டும் என்ற பெருங்கருணையால், உயர்ந்த நிலையினின்றும் கீழிறங்கிப் பஞ்சகிருத்தியம் செய்தலும் செய்வித்தலும் ஆகிய நிலைகளில் எழுந்தருளுதலாம். செந்தீயென் றுருவகித்தது பராசத்தியை,

அதோமுகங் கீழண்ட மான புராணன்
அதோமுகந் தன்னொடும் எங்கும் முயலுஞ்
சதோமுகத் தொண்மலர்க் கண்ணிப் பிரானும்
அதோமுகன் ஊழித் தலைவனு மாமே. 524

இம் - எனின், இறைவன் அதோமுகந் தாங்குவது இதன் பொருட்டு எனல் நுதலிற்று.

இ - ள் : சத்தாகிய 'ஓம்' என்னும் பிரணவ வடிவாயுள்ள ஒளிபொருந்திய மலரானியன்ற மாலையை அணிந்த முதல்வனும், அதோமுகமுடையனாகி ஊழித் தலைவனும் ஆவன். அஃதேயன்றிப் பழையவனாகிய அவன் அதோமுகந்தாங்கிக் கீழுள்ள பிரகிருதி மாயா புவன அண்டங்களுமாகி, எங்கும் அருள்புரிவன் என்றவாறு.

பிரணவ சொரூபியாயுள்ள இறைவன், சிவசத்தியாகிய மாயையின் மேற்பாகம் சுத்த

மாயை, கீழ்ப்பாகம் மோகினி, இடைப்பாகம் மான் ஆதலான் அங்கங்கு அவ்வவற்றை அதிட்டித்து நின்று அருள் புரிவர்; அதுவே அவர் அதோமுகமா தற்குக் குறிக்கோள் என்பதை இம்மந்திரம் விளக்கிற்று.

அதோமுக மாமல ராயது கேண்மின்
அதோமுகத் தாலொரு நூறுய் விரிந்து
அதோமுக மாகிய அந்தமில் சத்தி
அதோமுக மாகி அமர்ந்திருந் தானே. 525

இம் – எனின், இதுவுமது.

இ – ள் : அதோமுகமே பெரியமலரான விந்தையைக் கேளுங்கள்: கீழ்நோக்கிய சத்தியாகிய இறைவனது ஆற்றல் ஆயிரமாக விரிந்து பிரகிருதிமாயா புவனங்களாக, இறைவன் அவற்றையும் அதிட்டித்து நின்றனன் என்றவாறு.

இறைவனுடைய அதோமுகமான மாயையே பெரிய மலர்போல புவனங்களாகிற இதழ்கள் விரியப்பெற்று விளங்குகிறது என உருவகித்தனர். அதோமுகம் என்றது ஆதிசத்தியை. அந்தமில்சத்தி என்றது அளவிலாற்றலை யுடைய மாயாசத்திகளை. இவ்வண்ணம் சத்திகள் விரிய இறைவன் அதோமுகமாய் எழுந்தருளினன் என்பதாம்.

## உ௧. சிவநிந்தை

அஃதாவது, சிவபெருமானே முழுமுதற் கடவுள் என உணராது நிந்தித்தல். இறைவன்

அதோமுகமாயிருந்து அருளுதலை மயங்கி எல்லாத் தேவரையும்போல இவனும் ஒருவன் என அறிவிலிகள் எள்ளுகின்றன ராதலின் அதோமுகத்தின்பின் இது வைக்கப்பெறுகின்றது.

தெளிவுறு ஞானத்துச் சிந்தையின் உள்ளே
அளிவுறு வாரம ராபதி நாடி
எளியனென் றீசனை நீசர் இகழில்
கிளியொன்று பூளையாற் கிழது வாகுமே. 526

இ-ளின், இறைவனை இகழ்வார் இழிவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: விண்ணுலகை இடங்கொண்ட தேவர்கள் தெளிந்த ஞானத்தோடு கூடிய சிந்தையால் உள்ளே ஆராய்ந்து, அவன் கருணையை எய்துவர், அங்ஙனமாகவும் சில இழிசனர்கள், இறைவனை எளியன் என்று இகழ்வார்களாயின், அவர்களின் நிலை கிளி பூனையால் கிழிக்கப்பட்டதைப்போலாம் என்றவாறு.

பளிவுறுவார் அமராபதிநாடு எனப்பாடங்கொண்டு அமராபதியாகிய நாட்டை இடமாகக் கொண்ட தேவர்கள் எனப் பொருள்கொள்வாரும் உளர். இப்பொருளில் பளி என்பதைப் பள்ளி என்பதன் விகாரமாகக் கொள்க. அமராபதி, இடவாகுபெயர். இடப்பெயர் இடத்துள்ளவர்களாகிய தேவர்களை உணர்த்திற்று.

தம்நிலையைப் பெரிதென்று எண்ணிச் சிவநிந்தை செய்பவர், வானத்திற் பறக்கின்ற கிளி பூனை

யால் கிழிபட்டுக் கிடத்தலைப்போல அழிவர் என்பதாம்.

முளிந்தவர் வானவர் தானவர் எல்லாம்
விளிந்தவர் மெய்ந்நின்ற ஞானம் உணரார்
அளித்தமு தூறிய ஆதிப் பிரானைத்
தளிந்தவர்க் கல்லது தாங்கஒண் ணாதே. 527

இம் - எனின். ஆன்றவிந்து அடங்கினார்க்கல்லது அரனை அறிதல் ஆகாது என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : உலர்ந்தவர்களாகிய தேவரும் அசுரருமாகிய அனைவரும். உண்மைஞானத்தை உணரமாட்டாமையால் இறந்தாரேயாவர். கனிந்து அமுதம் போல ஊறி இனிக்கின்ற முதல்வனைத் தாங்க அடங்கினவர்க்கன்றி ஏனையோரால் அறிதல் ஆகாது என்றவாறு.

முளிந்தவர் - வினைப்போகத்தால் உலர்ந்த மேனியை உடையவர்கள். இருவினையால் தொடக்குறுதலும், வாடுதலும் திருமாலாதி தேவர்கட்கும், அசுரர்கட்கும் இயல்பாதலின் இங்ஙனம் கூறினார். மெய் நின்ற ஞானம் - உண்மை நிலைபெற்ற சிவ ஞானம், சிவனைச் சிவஞானத்தினாலன்றி மற்ற வற்றால் அறியமுடியாது என்பதுணர்த்தப் பெற்றது. " பாசஞானத்தாலும் பசு ஞானத் தாலும் பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத் தாலே, நேசமொடும் உள்ளத்தே நாட " வேண்டுதலின் இங்ஙனம் கூறினார்.

இறைவன் கரும்பைத் தேனைப் பாலைக் கனி யமுதைக் கட்டியை ஒத்திருப்பவனாதலின் அளிந்து அமுதூறிய ஆதிப்பிரான் என்றருளப்பெற்றது. தளிந்தவர் – அடங்கினவர்; சீவபோதமற்றவர், தற்போதம் அடங்கினவிடத்தே சிவம் பிரகாசிக்கும் என்பார் இவ்வண்ணம் அருளினர்.

அப்பகை யாலே அசுரருந் தேவரும்
நற்பகை செய்து நடுவே முடிந்தனர்
எப்பகை யாகிலும் எய்தார் இறைவனைப்
பொய்ப்பகை செய்யினும் ஒன்றுபத் தாமே. 528

இம் – எனின், இறைவனை விளையாட்டாகவும் நிந்தித்தலாகாது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: இறைவனிடம் எவ்வகையில் பகை கொள்ளினும் அடைதல் இயலாது. பொய்யாகப் பகைக்கினும், ஒன்று பத்தாகப் பெருகும்; அங்ஙனம் பகைத்தமையாலேயே தேவர்களும் அசுரர்களும் தங்களுக்குள்ளும் பகைத்துக்கொண்டு நடுவே அழிந்தனர் என்றவாறு.

எல்லாமாய் எல்லாருமாய் இருப்பவன் இறைவனாதலின் இறைவனைப் பகைத்தவர்கள் தம்முள்ளே கலாம் விளைத்து மடிந்தனர் என்பதாம். தேவர் தட்சயாகத்தில் நிந்தித்துச் சூரபன்மனால் முடிந்தமையும். அசுரர்கள் நிந்தித்து முருகனால் முடிந்தமையும் உலகம் அறியும்; ஆதலால் எந்தவகையிலும் இறைவனை நிந்தித்தல் ஆகாது என்பதாம்.

போகமும் மாதர் புலவி யதுநினைந்(து)
ஆகமும் உள்கலந் தங்குள ராதலில்
வேதிய ராயும் விகிர்தனும் என்கின்ற
நீதியுள் ஈசன் நினைப்பொழி வாரே. 529

இம் - மனின், வேதியர் அழிவிற்குக் காரணம் அரனை மறந்தமை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : வேதியராகப் பிறந்தும் மாதர்போகமும் அவர்களோடு விளைந்த ஊடலால் உண்டான தாகமும் தமக்குள்ளே கலந்துள்ளார் ஆதலால், நாமே கடவுள் என்கின்ற நீதியால் இறைவனை மறந்தனர் என்றவாறு.

வேதியர் - வேதம் உணர்ந்தவர். நிலைத்த இன்பம் இது நிலையற்ற சிற்றின்பம் இது என்று பாகுபடுத்தி உணர்த்தும் வேதத்தை உணர்ந்தும், கலவியும் புலவியுமே நினைந்து, நாமே கடவுள் என்று மயங்கி, இறைவனை மறந்தனர் ஆதலால் அவர்கள் சிவநிந்தகர் ஆயினர் என்பதாம். நாம் விகிர்தன் - அகம் பிரமம் என்பது,

## ௨௨. குருநிந்தை

அஃதாவது இறையுண்மையைக் காட்டிய குருவை நிந்தித்தல், சிவநிந்தைபோலக் குருநிந்தையும் கொடியது. ஆகலின் அதன்பின் வைக்கப் பட்டது.

**பெற்றிருந்த தாரையும் பேணார் கயவர்கள்**
**உற்றிருந் தாரை உலைவன சொல்லுவர்**
**கற்றிருந் தார்வழி உற்றிருந் தாரவர்**
**பெற்றிருந் தாரன்றி யார்பெறும் பேறே. 530**

இ-ம் - என்னின், குருவை வழிபட்டிருப்பாரின் உயர்வு உரைத்தல் நுதலிற்று.

இ-ள் : பெற்ற தாய்தந்தையர்களைப் போற்ற மாட்டாதாராய கயவர்கள் உற்ற இளைஞரையும் வருந்துவன சொல்லித் துன்புறுத்துவர். ஞானநூல்களை நன்கு கற்ற ஆசாரியன்வழியே ஒழுகும் பெற்றிமை உடையார், பெற்ற தாய்தந்தையரேயன்றி மற்றோரும் இவரைப்பெறும் பேறு பெற்றார் வேறு யாவர் என வியக்கும் வண்ணம் விளங்குவர் என்றவாறு.

கற்றிருத்தல் — ஞானசாத்திரங்களைக் கற்று அடங்கியிருத்தல், ஆசான் வைத்தபடியே இருந்து சித்த சலனமற்றிருப்பவர்களே அவர்வழியுற்றிருந் தார் ஆவர். இத்தகையாரைப் பெற்றமைக்காகத் தாய் தந்தையர் மகிழ்வர்; அஃது இயற்கை. அவரேயன்றி உலகவரும் 'இவர் எம்மிடை ஒருவராக விளங்கும் பேறு பெற்றோமே' என்று வியப்பர் என்பதாம்.

**ஓரெழுத் தொருபொருள் உணரக் கூறிய**
**சீரெழுத் தாளரைச் சிதையச் செப்பினோர்**
**ஊரிடைச் சுணங்கனாய்ப் பிறந்தங் கோருகம்**
**பாரிடைக் கிருமியாய்ப் படிவர் மண்ணிலே. 531**

இம் - எனின், குருவை நிந்தித்தார் எய்துகிற இழிநிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஒவ்வோரெழுத்து ஒவ்வொரு பொருள் தருதலை விரித்துணர்த்திய சீர்த்தியோடு கூடிய எழுத்தாளனாகிய குருவை மனமுடையச் சொன்ன பேர்கள், ஊர்சுற்று நாயாய்ப் பிறந்து ஓர்யுகம் திரிந்து வருந்திப் பின் பூமியில் புழுவாய்ப் பிறப்பர் என்றவாறு.

ஓரெழுத்து ஒருபொருள் உணரக்கூறலாவது.

" இறைசத்தி பாசம் எழில்மாயை ஆவி
உறநிற்கும் ஓங்காரத் துள் "

என்பன முதலியவாக ஐந்தெழுத்தருணிலை உணர்த்துதல். சிதையச் செப்பினோர் - அவர்கள் மன நிலைகெட அவதூறுரைத்தோர். ஊர்ச் சுணங்கள் - பாதுகாப்பாரற்ற ஊர்நாய், நாயாய்ப் பிறந்தும் உணர்த்திய நன்றியை உணரமாட்டா மையின் செயலற்றுக் கிடக்கும் புழுவாயும் பின் பிறப்பர் என்பதாம்.

**பத்தினி பத்தர்கள் தத்துவ ஞானிகள்**
**சித்தங் கலங்கச் சிதைவுகள் செய்தவர்**
**அத்தமும் ஆவியும் ஆண்டொன்றில் மாண்டிடும்**
**சத்தியம் ஈது சதாநந்தி ஆணையே. 532**

இம் - எனின், கற்புடைய மங்கையர்க்கும், சிவனடியார்க்கும் தீங்குசெய்தவர்கள் அழிவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : பத்தினிகளும், பத்தர்களும், மெய்ஞ் ஞானிகளும் மனங்கலங்கச் சிதைவுசெய்த பேர் களின் பொருளும் உயிரும் ஓராண்டிற்குள் அழியும். இது சத்தியம்; சதாசிவத்தின் மேல் ஆணை என்றவாறு.

மந்திரம் ஓரெழுத் துரைத்த மாதவர்
சிந்தையில் நொந்திடத் தீமைகள் செய்தவர்
நுந்திய சுணங்கனுய்ப் பிறந்து நூறுரு
வந்திடும் புலையராய் மாய்வர் மண்ணிலே. 533

இம் – எனின்; குருநிந்தை செய்தவர்கள் எய்தும் தீமை இது என்றல் நுதலிற்று.

இ – ள் : ஒரெழுத்தேனும் மந்திரோபதேசம் செய்த பெரிய தவத்தையுடைய குருவை மனம் நோக அவர்கட்குத் தீமைசெய்தவர்கள், இழிந்த நாயாய் நூறு பிறவியெடுத்துப் பின்பு புலையராய்ப் பிறந்து மண்ணில் மடிவர் என்றவாறு

நுந்திய - இழித்து ஒதுக்கப்பட்ட நூறு பிறவி கள் நாயாய்ப் பிறந்தால்தான் குருநிந்தையின் பாவம் குறையும்; பின் புலையனுகப் பிறப்பர்; சிறப்பின்றி மண்ணில் மடிவர் என்பதாம்.

ஈச னடியார் இதயங் கலங்கிடத்
தேசமும் நாடுஞ் சிறப்பும் அழிந்திடும்
வாசவன் பீடமும் மாமன்னர் பீடமும்
நாசம தாகுமே நம்நந்தி யாணையே. 534

இ-ம் - எனின், சிவனடியார்க்குத் தீங்குசெய்தார் எய்தும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சிவனடியார் மனங்கலங்கினால் தேசமும் நாடும் பிறசிறப்புக்களும் அழியும். இந்திரனது ஆட்சி பீடமும் நாசமாகும். நமது சிவபெருமான் மேல் ஆணை என்றவாறு.

சன்மார்க்கச் சற்குரு சந்நிதி பொய்வரின்
நன்மார்க்க முங்குன்றும் ஞானமுந் தங்காது
தொன்மார்க்க மாய துறையும் மறந்திட்டுப்
பன்மார்க்க முங்கெட்டுப் பஞ்சமு மாமே. 535

இ-ம் - எனின், குருவின்முன்பு பொய் கூறின் எய்துங் கேடுகள் இவை எனல் நுதலிற்று.

இ - ள் : மெய்ஞ்ஞானவழியை விளக்கிய நல்ல ஆசிரியன் திருமுன் பொய் கூறின் நல்லொழுக்கமும் குன்றும் ; அவனிடமிருந்து பெற்ற ஞானமும் தங்காது. பழைமையான உய்யுநெறிகளும் பிழைத்து வளர்ச்சிக்குரிய வழிகளெல்லாம் அழிந்து வறுமையும் வாட்டும் என்றவாறு.

சன்மார்க்கம் - ஞானம்.

கைப்பட்ட மாமணி தானிடை கைவிட்டு
எய்ப்பட்ட கல்லைச் சுமப்போன் விதிபோன்றும்
கைப்பட்ட நெய்பால் தயிர்நிற்கத் தானறக்
கைப்பிட்டுண் பான்போன்றும் கன்மிஞா
[னிக்கொப்பே. 536

இ – ள் : பத்தினிகளும், பத்தர்களும், மெய்ஞ் ஞானிகளும் மனங்கலங்கச் சிதைவுசெய்த பேர் களின் பொருளும் உயிரும் ஓராண்டிற்குள் அழியும். இது சத்தியம்; சதாசிவத்தின் மேல் ஆணை என்றவாறு.

மந்திரம் ஓரெழுத் துரைத்த மாதவர்
சிந்தையில் நொந்திடத் தீமைகள் செய்தவர்
நுந்திய சுணங்களுய்ப் பிறந்து நூறுரு
வந்திடும் புலையராய் மாய்வர் மண்ணிலே. 533

இம் – எனின்; குருநிந்தை செய்தவர்கள் எய்தும் தீமை இது என்றல் நுதலிற்று.

இ – ள் : ஒரெழுத்தேனும் மந்திரோபதேசம் செய்த பெரிய தவத்தையுடைய குருவை மனம் நோக அவர்கட்குத் தீமைசெய்தவர்கள், இழிந்த நாயாய் நூறு பிறவியெடுத்துப் பின்பு புலையராய்ப் பிறந்து மண்ணில் மடிவர் என்றவாறு

நுந்திய - இழித்து ஒதுக்கப்பட்ட நூறு பிறவி கள் நாயாய்ப் பிறந்தால்தான் குருநிந்தையின் பாவம் குறையும்; பின் புலையனுகப் பிறப்பர்; சிறப்பின்றி மண்ணில் மடிவர் என்பதாம்.

ஈச னடியார் இதயங் கலங்கிடத்
தேசமும் நாடுஞ் சிறப்பும் அழிந்திடும்
வாசவன் பீடமும் மாமன்னர் பீடமும்
நாசம தாகுமே நம்நந்தி யாணையே. 534

இம் - எனின், சிவனடியார்க்குத் தீங்குசெய்தார் எய்தும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சிவனடியார் மனங்கலங்கினல் தேசமும் நாடும் பிறசிறப்புக்களும் அழியும். இந்திரனது ஆட்சி பீடமும் நாசமாகும். நமது சிவபெருமான் மேல் ஆணை என்றவாறு.

சன்மார்க்கச் சற்குரு சந்நிதி பொய்வரின்
நன்மார்க்க முங்குன்றும் ஞானமுந் தங்காது
தொன்மார்க்க மாய துறையும் மறந்திட்டுப்
பன்மார்க்க முங்கெட்டுப் பஞ்சமு மாமே. 535

இம் - எனின், குருவின்முன்பு பொய் கூறின் எய்துங் கேடுகள் இவை எனல் நுதலிற்று.

இ - ள் : மெய்ஞ்ஞானவழியை விளக்கிய நல்ல ஆசிரியன் திருமுன் பொய் கூறின் நல்லொழுக்கமும் குன்றும் ; அவனிடமிருந்து பெற்ற ஞானமும் தங்காது. பழைமையான உய்யுநெறிகளும் பிழைத்து வளர்ச்சிக்குரிய வழிகளெல்லாம் அழிந்து வறுமையும் வாட்டும் என்றவாறு.

சன்மார்க்கம் - ஞானம்.

கைப்பட்ட மாமணி தானிடை கைவிட்டு
எய்ப்பட்ட கல்லைச் சுமப்போன் விதிபோன்றும்
கைப்பட்ட நெய்பால் தயிர்நிற்கத் தானறக்
கைப்பிட்டுண் பான்போன்றும் கன்மிஞா
[னிக்கொப்பே. 536

இம் – எனின், ஞானிக்கும் கன்மிக்கும் வேறு பாடுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : கையிலகப்பட்ட பெரிய மாணிக்கத்தைக் கைவிட்டு, இளைத்த கல்லைச் சுமப்போனின் விதியைப் போன்றும் கையிலகப்பட்ட நெய் பால் தயிர் முதலிய நல்ல உணவுகள் நிற்க அதனை விட்டுத் தான் சாகக் கசப்பையிட்டு உண்பார் போலவும் ஆம் ஞானிகளோடு கன்மியை ஒப்பாக எண்ணுதல் என்றவாறு.

எண்ணுதல் ஆம் என்ற சொற்கள் வருவித்து முடிக்க. கசப்பு - காஞ்சிரங்காய் போலக் கசப்பான நஞ்சுகள், எய்ப்பட்ட – எறியப்பட்ட என்றுமாம். தான் அற - உண்போனாகிய தான் சாக. கன்மி – கன்மங்களையுடையவன். இதன் கருத்து. ஞானியைக் கன்மியோடு ஒப்ப எண்ணுதல் மாணிக்கத்தை எறிந்து விட்டுக் கல்லைச் சுமப்பது போலவும், நெய் முதலிய உணவைவிட்டுச் கசப்பை உண்பது போலவும் ஆம் என்பதாம்.

## 23. மகேச்சுர நிந்தை

மகேச்சுரராவர் சிவனடியார்கள். அவர்களை நிந்தை செய்தார் அடையும் பயன் அறிவித்தலின் இது இப் பெயர்த்தாயிற்று. குருநிந்தைபோல இதுவும் தீமை பயப்பதொன்றாகலின் குருநிந்தையின் பின் வைக்கப்பட்டது.

ஆண்டான் அடியவ ரார்க்கும் விரோதிகள்
ஆண்டான் அடியவர் ஐயமேற் றுண்பர்
ஆண்டான் அடியாரை வேண்டாது பேசினோர்
தாந்தாம் விழுவது தாழ்வா நரகமே. 537

இம் – ளனின், மகேச்சுரரியல்பும் நிந்தித்தார் எய்தும் கேடும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள் : இறைவனடியார்கள் யார்க்கும் விரோதிகள் ஆவர் அவர்கள் பிச்சையேற்றுண்பர். அவர்களை வெறுத்துப்பேசினோர் வீழ்வது மிகத்தாழ்வான நரகிலாம் என்றவாறு.

ஆண்டான் - ஆட்கொண்ட இறைவன். ஆர்க்கும் விரோதிகள் என்றது பித்தர் பிசாசர் போல உலக விருத்தமாக இருத்தலின். ஆர்க்கும் யார்க்கும் என்பதன் மரூஉ, உண்பது ஊரிடு பிச்சை ஆதலின் ஏற்று உண்பது ஐயம் என்று அருளினர். ஐயம் - பிச்சை.

வேண்டாது விரும்பாது பேசினோர்தாம் தாம் விழுவது எனக்கூட்டி பேசினவர்கள் தாமே விழுவது எனப்பொருள் கொள்க.

ஞானியை நிந்திப் பவனும் நலனென்றே
ஞானியை வந்திப் பவனுமே நல்வினை
யான கொடுவினை தீர்வார் அவன்வயம்
போன பொழுதே புகுஞ்சிவ போகமே. 538

இம் – ளனின், ஞானியரை நிந்திப்பவனும் வந்திப்பவனும் எய்தும்பயன் உணர்த்துதல் நுதலிற்று.

*இ – ள் : சிவஞானியை நிந்திப்பவனும் நல்லவன் என்று சிவஞானியை வணங்குபவனும் நல்வினையானும் கொடிய தீவினையானும் ஒழிவடைவர். அச்சிவஞானியின் வசப்பட்டபோதே சிவபோகம் சித்திக்கும் என்றவாறு.*

*நிந்திப்பவன் கொடுவினையால் அழிவன். வந்திப்பவன் நல்வினையானவற்றால் தீமை ஒழிவன் என இயைத்துப் பொருள் காண்க. உம்மை தந்து எண்ணியமைக்கு ஏற்பத் தீர்வார் எனப் பன்மைப் பயனிலை தந்தார். ஞானியின்வசமாயின் சிவபோகமே சித்திக்கும் என்றது மலவாதனை கெடுதலின்.*

## 24. பொறையுடைமை

*அஃதாவது, பிறர் தீயனசெய்தவழிப் பொறுத்தலையுடையனாதல் என்பர் பிறர். ஈண்டுப் பொறையாவது இறைவனை எட்டலும், அவனருளைப் பெறுதலுமே என்பதாம். நிந்தைகள் நிகழ்வது பொறுமையுடையார்க்காதலின் அது கூடாதென விலக்குவார் நிந்தைகளின் பின் பொறையுடைமை அமைத்தார்.*

பற்றிநின் றார்நெஞ்சிற் பல்லிதான் ஒன்றுண்டு
முற்றிக் கிடந்தது மூக்கையும் நாவையுந்
தெற்றிக் கிடந்து சிதைக்கின்ற சிந்தையுள்
வற்றா தொழிவது மாகமை யாமே 539

இம் – எனின், *பொறையாவது இன்னது என உணர்த்துதல் நுதலிற்று*

இ - ள் : உலகபோகங்களை இறுகப் பற்றிநின்ற வர்கள் நெஞ்சில் ஒரு பல்லியிருக்கிறது. அது முதிர்ந்து வளர்ந்தது. மூக்கையும் நாக்கையும் பின்னிக்கிடந்து அழிக்கப்படுகிற மனத்துள் வற்றும லிருப்பது பெரிய பொறையொன்றுமே என்றவாறு.

பல்லி – சுவர்ப்பல்லி; என்றது யான் என்னும் அகப்பற்றை. அது பெரியதாகி வளர்ந்து ஞானம் விளங்கவிடாது மறைத்து நிற்பதால் முற்றிக்கிடந் தது என்றார். மூக்கையும் நாக்கையும் கூறவே ஏனைய இந்திரியங்களும் கொள்ளப்பெறும். சிதைக்கின்ற சிந்தை - சிதைக்கப்படுகின்ற சிந்தை. சிந்தையழி வது யான் என்னும் செருக்காலாதலின் இங்ஙனம் கூறினர். நான் எனும் முனைப்பு வரும்போது வற்றுத குணமாகிய பொறை எழுமாயின் முனைப் படங்கிவிடும். ஆதலின் 'சிந்தையுள் வற்றுதொழி வது சுமை' என்றார்.

ஓலக்கஞ் சூழ்ந்த உலப்பிலி தேவர்கள்
பாலொத்த மேனியன் பாதம் பணிந்துய்ய
மாலுக்கும் ஆதிப் பிரமற்கும் மன்னவன்
ஞாலத் திவர்மிக நல்லரென் றானே. 540

இம் - எனின், இறைவனைப் பணிந்த தேவர்களே அவனால் பாராட்டத்தக்கவர் என்றல் நுதலிற்று.

இ – ள் : பாலொத்த திருமேனியனாகிய சிவ பெருமானுடைய திருவோலக்கத்தைச் சூழ்ந்துள்ள எல்லையற்ற தேவர்கள் அவன் திருவடியை யடைந்து உய்ய, திருமாலுக்கும் பிரமற்குந் தலைவனாகிய அவன்

இத்தேவர்கள் உலகத்தில் மிகநல்லவர்கள் என்றருளினன் என்றவாறு.

ஓலக்கம்-வீற்றிருத்தல். தன்முனைப்படங்கிய தேவர்கள் நல்லவர்கள் என்று பாராட்டப்பெறுத லின் இது பொறையுடைமைக்கு இயைபுடைத் தாயிற்று.

ஞானம் விளைந்தவர் நம்மிட மன்னவர்
சேனை வளைந்து திசைதொறுங் கைதொழ
ஊனை விளைத்திடும் உம்பர்தம் ஆதியை
ஏனை விளைந்தருள் எட்டலு மாமே. 541

இ-ள்; பொறையுடையராகி இறைவனைத் தொழுபவர் அருள்பெறுவர் என்றல் நுதலிற்று.

இ — ள் ; மெய்ஞானர் விளைந்தவர்களாகிய பூமியில் மன்னுகின்ற மக்கள், சேனைபோல் வளைந்து உடலைத்தந்த தேவதேவனைத் திக்குகள் தோறும் வணங்க. மற்றஞானங்களும் வளர்ந்து திருவருளை அடைதலுமாகும் என்றவாறு.

ஞானம் விளைந்தவர் நம்மிடம் மன்னவர்-மெய் யறிவு தோன்றப் பெற்றவர்களாகிய நமது பூமியில் மன்னுதலை உடையவர்களாகிய பரிபாகமுற்ற ஆன் மாக்கள்; மன் அவர்—நிலைபெறுதலை யுடைய மக்கள், திசைதொறும் சேனை வளைந்து - திக்குகள்தோறும் சேனையைப்போல் சுற்றிக்கொண்டு, ஊனை விளைத் திடும்-உடம்பைத்தந்த. ஏனை-மற்றையன; என்றது மலபரிபாகம் முதலியன உயிரினிடமாக விளையப் பெற்று. அருள் எட்டலும் ஆம் - திருவருளைச் சார்த

லும் ஆம். மக்களும் சிவஞான முதிர்ச்சியால் வணங்க அவன் அருளை அதனால் எய்தலாம் என்பது கருத்து.

வல்வகை யாலும் மனையிலும் மன்றிலும்
பல்வகை யாலும் பயிற்றிப் பதஞ்செயும்
கொல்லையி னின்று குதிகொள்ளுங் கூத்தனுக்(கு)
எல்லையி லாத விலயமுண் டாமே. 542

இம் - எனின், ஆன்மாக்களைப் பரிபாகப்படுத்த ஆடும் ஆனந்தக் கூத்துக்கு இலயம் உண்டு என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : வலிமை உள்ளபடி மனையிலும் மன்றிலும் அனைவரையும் பலவகையாகப் பயிற்றிப் பரிபாகப் படுத்தும் காட்டில் நின்றாடும் கூத்தனுக்கு அளவற்றதான ஐக்கியம் உண்டாம் என்றவாறு.

வல்வகையாலும் - அவ்வவ்வான்மாக்களின் வலிமைக்கு ஏற்ப: என்றது பரிபாகத்திற்கு ஏற்ப என்பதாம். இறைவன் மனையிலும் மன்றிலுமாகப் பலவகையாலும் தாண்டவத்தைப் பயிலச்செய்து பரிபாகப் படுத்துகின்றார் என்பதும். அதனால் அவருக்கு அகண்டமான ஒருமைப்பாடு உண்டாகின்றது என்பதும் உணர்த்தப்பட்டன. கொல்லை - மகாசங்காரகாலத்து இடுகாடு. குதிகொள்ளுதல் — சங்கார தாண்டவம், எல்லையிலாத இலயம்-அஞ்ஞான்றும் தன்னையன்றி எவரும் எதுவும் இல்லாமையால் விளைந்த மனோலயம்.

## 25. பெரியாரைத் துணைக்கோடல்

அஃதாவது. அன்பு நாண் முதலியவற்றால் பெரியாரைத் தமக்கு உசாத் துணையாகவும் உறு துணையாகவும் கோடலாம். பொறையுடையார்க்கு அன்றி, தன்முனைப்படங்கித் தன்னிற் பிறரை மதிக்கும் குணமும், அவரைத் துணையாகக் கோடலும் அமையாமையின் பொறையுடைமையின் பின் இது வைக்கப்பெற்றது.

ஓடவல் லார்தம ரோடு நடாவுவன்
பாடவல் லாரொலி பார்மிசை வாழ்குவன்
தேடவல் லார்க்கருள் தேவர் பிரானொடும்
கூடவல் லாரடி கூடுவன் யானே. 543

இ-ளின், ஓடிப்பாடி உலையும் நான் அடியாரொடும் சேர்வன் என அடியார் துணைக்கோடலின் இன்றியமையாமையை இயம்புதல் நுதலிற்று.

இ-ள். ஓடவல்லாரோடு நடப்பேன்; பாடவல்லார் ஒலியால் இந்த உலகில் வாழ்வேன்; தேடவல்ல பூர்வபுண்ணியம் உடையவர்க்கு அருள்செய்கின்ற தேவ தேவனோடு கூடவல்ல உண்மையடியாரொடு கூடுவன் என்றவாறு.

ஓடவல்லார்-உலகியலையே பெரிதெனஎண்ணிச் சிறிதும் அமைதியின்றி ஓடி அலைகின்றவர்கள். நடாவுவன்-நடப்பேன்: என்றது யானும் இயங்கு வேனாயினேன் என்பதாம். அவ்வண்ணமே. பாடவல்லாரோடு கூடி ஒலியிற்கலந்து உலகில் வாழ்வேன். ஓடுகின்றவர்களோடு ஓடியும் பாடுகின்றவர்

களோடு பாடியும் உலகில் வாழ்வேனாகிய யான். இறைவனையே தேடிக் கூட எண்ணும் உண்மையடியாரொடும் கூடுவேன் என்று தன்மேல் வைத்துக் கூறியவாறு. இதனால் பரிபாகமுற்ற காலத்து நிலையும் அதற்கு முன்னிலையும் அறிவித்தருளுகின்றார்,

தாமிடர்ப் பட்டுத் தளிர்போல் தயங்கினும்
மாமனத் தங்கன்பு வைத்த திலையாகும்
நீயிடர்ப் பட்டிருந் தென்செய்வாய் நெஞ்சமே
போமிடத் தென்னொடும் போதுகண் டாயே. 544

இம்-எனின், தனித்த தன்னெஞ்சைப் பார்த்துப் பெரியோனாகிய தன்னோடு போதுக என அழைத்தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: தாம் துன்பப்பட்டுத் தளிரைப்போல வாடினாலும், பெரியமனத்து இறைவன் அன்பு வைத்தாலல்லது எப்பயனும் இல்லையாம். ஆதலால் நீ மட்டும் என்செய்வாய் மனமே! யான் போகின்ற இடத்துக்கு என்னோடு வா என்றவாறு.

கண்டாய் முன்னிலையசை. தளிர்போலத் துவண்டாலும் ஆண்டவன் அன்புவைத்தாலல்லது துன்பு நீங்காதாம். என்னைத் துணைக்கொள்க எனப் பெரியாரைத் துணைக்காடல் பேசப்படுகிறது.

அறிவார் அமரர் தலைவனை நாடிச்
செறிவார் பெறுவர் சிவதத் துவத்தை
நெறிதான் மிகமிக நின்றருள் செய்யும்
பெரியா ருடன்கூடல் பேரின்ப மாமே. 545

இம்-எனின், பெரியாருடன் கூடுதல் பேரின்பமாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்; தேவர்கள் தமது தலைவனாகிய தேவ தேவனைத் தேடியறிவார்கள். அங்ஙனம் அவனிடம் மாறாத அன்பு பெற்றவர்கள் சிவதத்துவத்தைப் பெறுவர். ஒழுக்க நெறியில் சிறிதும் அசையாது நின்று அருள் வழங்குகின்ற பெரியாரோடு கூடி வாழ்தலே பேரின்பமாம் என்றவாறு.

தார்சடை யான்றன் தமராய் உலகினில்
போர்புக ழாவெந்தை பொன்னடி சேருவர்
வாயடை யாவுள்ளந் தேர்வார்க் கருள்செய்யும்
கோவடைந் தந்நெறி கூடலு மாமே, 546

இம் - எனின், சிவனடியார்க்கும் சிவனுக்கும் அடியாராய அவர்களைத் துணைக்கொள்ள வேண்டும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: நீண்ட சடையையுடைய சிவபெருமானின் அடியார்களாய், உலகில் சண்டைகளைப் புகழாமல், அவனடியே சாருவாராய், மௌனமாய் மனத்தால் தியானிப்பார்க்கு அருள்வழங்கும் தலைவராகிய தேவதேவனைச் சாராதே சார்ந்து, அவரருளிய சிவநெறியில் சேர்தலுமாம் என்றவாறு

தார்-மாலையுமாம். தார், தலைமாலையன்றாதலின் நீண்ட எனப்பட்டது. அவன்றமராதல் - சிவனடியாராக ஒழுகுதல். போர்புகழா - மதப்போர்களைப் புகழாமல். புகழாமையாவது அவற்றைப் பாராட்டிப் பேசி அவற்றுள் தாமும் சாராதிருத்தல்

வாயடையா-வாயடைத்து, தேர்வார்க்கு-தெளிந் தறிவார்க்கு, கோ-தலைவன். அந்நெறி என்ற சுட்டு அவன் வகுத்துத்தந்த சிவநெறியை உணர்த்திற்று.

உடையான் அடியார் அடியா ருடன்போய்ப்
படையா ரழன்மேனிப் பதிசென்று புக்கேன்
கடையார நின்றவர் கண்டறி விப்ப
உடையான் வருகென ஓலமென் றுரே, 547

இம்-எனின், தன்னை வாயில்காப்போர் இறைவன் திருமுன்பு உய்த்தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: எம்மை அநாதியே ஆளாக உடைய சிவனுடைய அடியார்க்கடியாரொடும் சென்று, முத்தலைச் சூலப்படையும் செந்தழல்போலும் மேனியும் உடைய தலைவனைச் சென்று அடைந்தேன். அவருடைய தலைவாயிற்காப்பார் அவர் திருமுன் சென்று அறிவிப்ப என்னை ஆளாகவுடைய அவர் 'அவனை உள்ளே வரவிடுக' என்றருள, அவர்கள் என்னைக் கொண்டு அவர் திருமுன்பு உய்த்து 'இவன் உன் அடைக்கலம்' என்றனர் என்றவாறு.

சிவனடியார்களாகிய பெரியாரைத் துணைக் கொண்டமையின். அவர்கள் திருக்கயிலாயத்தை அடைவித்தனர் எனப் பெரியோரைத் துணைக் கொண்டதனால் பெற்ற பெரும்பயன் இதனால் உணர்த்தப்பெற்றது.

அருமைவல் லான்கலை ஞானத்துள் தோன்றும்
பெருமைவல் லோன்பிற விச்சுழி நீந்தும்
உரிமைவல் லோன்உணர்ந் தூழி யிருக்குந்
திருமைவல் லாரொடு சேர்ந்தனன் யானே, 548

இ - ம் - எனின், மும்மை ஞானத்தையும் முற்ற வுடைய அடியார்களோடு கூடினமை உணர்த்துதல் நுதலிற்று

இ - ள்: அருமையில் வல்லவன் கலைஞானத்துள் விளக்கம்பெற்றிருப்பன். இறைவனே நினைப்பற நினையும் பெருமையுள்ளான். தொன்றுதொட்டு வரும் பிறவியாகிற சுழியிலகப்படாது நீந்திக் கரை சேருவேன். சன்மார்க்க நெறியாகிய உரிமையில் வல்லவன். அவனே தானேயாகிய அந்நெறியில் அழிவின்றியிருப்பன். அடியேன் இந்த மூன்று தன்மை வல்லாரையும் துணையாகக் கொண்டு அவர்களையடைந்தேன் என்றவாறு.

கலையானது சிறிது விளக்கம் காட்ட, அதனைக் கொண்டு, உவமையிலாக் கலைஞானத்தை யுணர்ந்தவன் கோடியுள் ஒருவனாதலின் அருமைவல்லான் என்றும், அங்ஙனம் கலைஞானம் பிறந்து ஒழிவற நிறையும் யோகத்துள்ளிருத்தலைக் காட்டிலும் சிறந்த பெருமை வேறு இல்லையாதலின், அவனைப் பெருமைவல்லான் என்றும், சன்மார்க்க நெறி முன்னம் அவனுடைய நாமங்கேட்டு. வண்ணம் கேட்டு, ஊர்கேட்டு, அவனுக்கே பிச்சியாகித் தன்னை மறந்து அவனருளுக்கே தலைப்படும் ஞான நெறியாதலின், அந்த ஞானநெறி, காதலியும் காதலனும்போல இறைவனைக் காதலிக்கும் நெறியாதலின் உரிமைவல்லோன் என்றும் உரைத்தார். உரிமை-மனைவியாந்தன்மை.

திரிமை என்பது எதுகை நோக்கித் திருமை என வந்தது. முற்கூறிய அருமை, பெருமை, உரிமை ஆகிய மூன்றும் ஒருசேர வாய்க்கப்பெற்ற சிவஞானியாரோடு சேர்ந்தேன்; அதனால் அடியேன் கலைஞானமும் உணர்வரிய மெய்ஞ்ஞானமும் திருப்பெருகு சிவஞானமும் பெற்றுப் பிறவிச் சுழியினின்றும் நீந்திப் பெருவாழ்வு எய்தி என்றும் சிவனடிக்கீழ்ச் சேர்ந்திருப்பேன் என்று அருளியவாறு.

திருமந்திரம் இரண்டாந்தந்திரம்
பஞ்சாக்ஷரதீபம் என்னும் உரையுடன் முற்றிற்று.

சிவமயம

# மூன்றாம் தந்திரம்

## 1. அட்டாங்கயோகம்

இது வீராகமத்தின் சாரமாக அமைந்தது என்பது தொல்லோர் மரபு. இத்தந்திரத்தினுள், யோக உறுப்புக்களாகிய இயம நியமாதிகளின் இயல்பும், அவற்றிற் சிறிதுந் தவறாது நிற்பதால் விளையும் பயனும், அணிமாதி எண்வகைச் சித்திகளும், அவற்றின் தத்துவ அமைதியும், கலைநிலையும், எடுத்த உடல் ஞானம்எய்தி வீடுபே றெய்தும் வரைத் தீங்கின்றி நீடுவாழ்தற்கேற்ற உபாயங்களும், காலசக்கரமும், ஆயுள் இவ்வளவு என நிச்சயித்தற்கு உரிய உபாயங்களும், பிராணன் இன்னின்ன நாட்களில் முதன் முதலாக இன்னின்ன நாடிகள் வழியாக இயங்கும் என்பதும், யோகப் பாகுபாடுகளும், அவற்றின் இயல்பும், பயனும், பிறவும் முந்நூற்று முப்பத்தைந்து திருமந்திரங்களால் உணர்த்திய எடுத்துக்கொண்ட திருமூல தேவநாயனார் முதற்கண் அட்டாங்கயோகத்தின் இயல்புகளை வகுத்துணர்த்துகின்றார்.

அஃதாவது, கரநியாசம் அங்கநியாசம் இவற்றைச் செய்து, உறுதியாக நிலைத்த மனத்தோடு, இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தி

யாகாரம், தாரணை, தியானம், சமாதி என்ற எட்டு யோக சாதனங்களையும் இயற்றுவார்க்கு ஞான வாயில் திறக்கும்; வீடடையலாம் என்பதனை நான்கு மந்திரங்களால் உணர்த்துகின்றார் திருமூலதேவர்.

உரைத்தன வற்கரி ஒன்று மூடிய
நிரைத்த இராசி நிரைமுறை எண்ணிப்
பிரைச்சதும் எட்டும் பேசிய நந்தி
நிரைத்த இயமம் நியமஞ்செய் தானே. 549

இம் – எனின், இறைவன் இயமம் முதலாக எண் வகை யோக அங்கங்களையும் அருளினன் என்று உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: குருநாதனாகிய சிவபெருமான், அட்டாங்கயோகத்தை அருளிச்செய்யத் திருவுள்ளங் கொண்டு, இயமம் நியமம் முதலாகச் சொல்லப் பட்டவற்றுள், ஒரு நாடியை மூடியதால் பயிலப் படும் பிராணாயாம அளவு ஒழுங்கு செய்யப்பட்ட பன்னிரண்டங்குலம் என முறையே எண்ணி நிரல் பட அமைத்தருளினன் என்றவாறு.

நந்தி பிரைச்சதம் எட்டும் பேசிய இயமம், நியமம், உரைத்தன ஒன்றுமூடிய வற்கரி நிரைத்த இராசி நிரை முறை எண்ணிச் செய்தான் எனக் கூட்டிப் பொருள் கொள்க.

வற்கரி – குதிரைககயிறு; என்றது முச்சுக்காற்றாகிய பிராணனையுணர்த்திற்று என்பர். பிராணனைப் பின் வருந் திருமந்திரங்களில். 'உய்யக் கொண்டேறுங் குதிரை' (564) 'குதிரை இரண்டுள' (565)

'புள்ளி னும் மிக்க புரவி (566) எனக் குதிரையாகவே உருவகிப்பார் ஆதலின் ஈண்டுக் குதிரைக்கயிறு அல்லது கடிவாளம் என உருவகித்ததாகக் கோடல் பொருந்தாது. ஆதலின் வற்க+அரி என்பது வற்கரி யெனத் திரிந்ததாகக் கொண்டு கயிற்றொடு அல்லது கடிவாளத்தொடு கூடிய குதிரை எனப் பொருள் கோடலே சிறந்தது. வற்கம் – கடிவாளம். அரி - குதிரை. ஒன்று மூடியவற்க அரி-இரேசக பூரகங் களில் ஒரு நாடியை மூடிய மூச்சு. இராசியென்றது பன்னிரண்டு என்னும் எண் மாத்திரையாய் நின்றது, இராசி நிரைமுறை எண்ணுதலாவது, பன்னிரண்டு மாத்திரையளவு பூரித்தலும் இரேசித் தலும் செய்தல். இதனைப் பின் 'பன்னிரண்டானைக் குப் பகலிரவில்லையே' (577) என்றதனுலும் காண்க

பிரைச்சதம்-யோகம். பேசிய என்பது செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். பேசிய செய்தான் எனக்கூட்டுக. நிரைத்த இயமம்-இயமம் முதலாக முறைப்படுத்தப் பெற்றவற்றைச் செய்தான் என்க. (1)

செய்த இயம நியமஞ் சமாதிசென்
றுய்யப் பராசத்தி உத்தர பூருவ
மெய்த கவச நியாசங்கள் முத்திரை
எய்த வுரைசெய்வன் இந்நிலை தானே. 550

இம் – எனின். நியாசமுறைகளை நிரலே சொல்லு வன் என நுதலிப்புகுதல் நுதலிற்று.

இ – ள்: அங்ஙனம் நந்தி உரைசெய்த இயமம் நியமம் சமாதி இவற்றிற் பயின்றுய்யவும். முன்னும்

பின்னும் திருவருட்சத்தியைத் துணையாக எய்தவும் கவசம் நியாசம் முத்திரை இவைகளை இந்த முறைப் படிப் பொருந்த உரைப்பேன் என்றவாறு

செய்த என்பது முன் திருமந்திரத்தை அநு வதித்தது. உய்ய, எய்த, உரைசெய்வன் எனக் கூட்டுக. பராசத்தி—சத்தியெழுத்தாகிய வகாரம். அது முன்னும் பின்னும் எய்தலாவது. சிவயவசி என ஆன்ம எழுத்தின் இருமருங்கும் சத்தியெழுத் திருக்கச் செய்தல். அதாவது திருவருட்கடலில் நாம் மூழ்கித்திளைக்கச் செய்தல் என்பதாம்.

கவசம் — பாதுகாப்பாகிய சட்டை. நியாசம் — சிவத்தை நிலைபெறுத்தித் தன் உடல் தன் உறுப்புக் களைச் சிவனுடையதாகச் செய்தல். இது அங்க நியாசம் கரநியாசம் என இரண்டு வகைப்படும். முத்திரை - அடையாளம். (2)

அந்நெறி இந்நெறி என்னாதட் டாங்கத்
தந்நெறி சென்று சமாதியி லேநின்மின்
நன்னெறி செல்வார்க்கு ஞானத்தி லேகலாம்
புன்னெறி யாகத்திற் போக்கில்லை யாகுமே, 551

இ-ம் - எனின், அவசியமும் பலனும் அறிவித்தல் நுதலிற்று.

இ — ள்: உலகீர்! அந்நெறி இந்நெறியெனத் தடுமாறாது, அட்டாங்கத்தோடு கூடிய யோக நெறிக்கட்சென்று, சமாதியிலே நிலைபெறுங்கள்; இத்தகைய நன்னெறிக்கண்ணே செல்வார்க்குச்

சிவஞானத்திற் செல்லல் ஆகும்; இழிந்தநெறி யாகிய கருவுட்பட்டு மீட்டும் உடலிற் புகுதல் இல்லையாம் என்றவாறு.

அந்நெறி இந்நெறி என்றது இக்கரைக்கு அக்கரை பச்சையெனத் திடஞானமின்றித் தடு மாறும் நிலையை. அட்டாங்கத்து அந்நெறி -அட்டாங்கயோகமாகிய அந்தநெறி, அந்நெறி என்ற சுட்டு அதனது சிறப்புத் தோன்ற நின்றது.

சமாதி நிலைத்து நிற்றல். இதனை நொசிப்பு என்பர் தொல்லோர். யோகமாகிய சகமார்க்கம் ஞானமாகிய சன்மார்க்கத்திற்கு வாயிலாதலின் 'ஞானத்தில் ஏகலாம்' என்றருளினார்; அதனால் வீடுபெறலாம் என்பவர் அதற்கு இடையூறாகிய மறுபிறப்பில்லை என்றருளினார். (3)

இயம நியமமே எண்ணிலா ஆதனம்
நயமுறு பிராணயா மம்பிரத்தி யாகாரஞ்
சயமிகு தாரணை தியானஞ் சமாதி
அயமுறும் அட்டாங்க மாவது மாமே. 552

இ-ளின், எண்வகை யோகவுறுப்புக்களையும் தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இயமம், நியமம், கணக்கற்ற ஆதனம் நலம் மிக்க பிராணயாமம், பிரத்தியாகாரம், வெற்றி மிக்க தாரணை, தியானம், சமாதி ஆகிய இவைகள் பிறவா நெறியைப் பயப்பிக்கும் எண் வகையுறுப்புக்களாம் என்றவாறு.

ஆதனங்கள் எட்டும், அதன்மேல் நூற்றிருப்பத்தாறும் எனப்பலவாம் ஆதலின் 'எண்ணிலா ஆதனம்' எனப்பட்டது, பின்னரும் 'பரந்தபல் ஆதனம்' (558) என்றல் காண்க

நயமுறு பிராணாயாமம்; மன ஒருமைப்பாட்டை உண்டாக்கி ஆயுளைத்தருதலின் நன்மைமிக்க பிராணாயாமம் என்றார். பிராண ஆயாமம் மூச்சினை அடக்கல்.

அயம் அஜம் என்பதன்றிரிபு. அஜம் பிறப்பற்றது. அட்டாங்கமாவது அயமுறும் ஆம் எனக் கூட்டுக யோகமே பிறவியை அறுக்காதாயினும் அதனை அறுக்கும் வாயிலாகிய ஞானத்தைப் பயக்கும் என்பதாம். இங்ஙனம் கூறியது காரண காரியமாகிய பரம்பரை முறைபற்றி என்க. (4)

## ௨. இயமம்

நிறுத்த முறையானே இயமம் உணர்த்துவான் எடுத்துக்கொண்டார். இயமமாவது தீயனவற்றிற் சிந்தைசெல்லாது கட்டுப்படுத்துதல். யமம் என்பது இயமம் என வந்தது. தேகேந்திரியங்களில் உண்டாகும் இன்பம் நிலையற்றதென்னும் வைராக்கியமே இயமம் என்பதைத் திரிசிகியுபநிஷத், தரிசனோபநிஷத் சாண்டில்யோபநிஷத், சூதசங்கிதை முதலியவற்றில் காணலாம்.

எழுந்துநீர் பெய்யினும் எட்டுத் திசையுஞ்
செழுந்த ணியமங்கள் செய்மின்னென் றண்ணல்
கொழுந்தண் பவளக் குளிர்சடை யோடே
அழுந்திய நால்வர்க் கருள்புரிந் தானே, 553

இம் - எனின். இறைவன் இயமநிலையினை அருளி னமை அறிவித்தல் நுதலிற்று.

இ—ள் ' பெருமையிற் சிறந்தவனாகிய சிவபெரு மான், எட்டுத் திசையும் மேலோங்கி சோனாமேக மாகப் பொழியினும் செழுமையான குளிர்ந்த இய மங்களைத் தவறாது செய்யுங்கள் என்று, கொழுமை யான குளிர்ந்த பவளம்போலும் திருச்சடையோடு கூடிய திருவருளிற்றோய்ந்த சனகாதியர் நால்வர்க் கும் அருளினன் என்றவாறு.

நீர்பெய்யினும் என்றது நீரூழ்வந்த காலத்தும் என்பதாம். அழுந்திய என்பதற்குத் திருவருளிற் றோய்ந்த என இடம் விரித்துரைக்கப்பட்டது. நால்வ ராவார் நந்தி யருள்பெறு நந்திகள் நால்வராகிய சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் என்பார்.

கொல்லான்பொய் கூறான் களவிலான் எண்குணன்
நல்லான் அடக்க முடையான் நடுச்செய்ய
வல்லான் பகுந்துண்பான் மாசிலான் கட்காமம்
இல்லான் இயமத் திடையில்நின் றானே, 554

இம்-எனின், இயமியினிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: ஒருயிரையும் கொல்லாதவனும் பொய் கூறாதவனும், திருடாதவனும், எண்ணத்தக்க குணங்களையுடையவனும் நல்லவனும், அடக்க முடையவனும் நடுவுநிற்றலை உடையவனும் எல் லார்க்கும் பகிர்ந்து மீதியைப் பின்பு தான் உண்பவ

னும், குற்றமற்றவனும், கள் காமம் என்ற இத்தீய குணமில்லாதவனும் ஆகிய இவ்விலக்கணமுடையானே இயமத்தான் என்றவாறு.

கொல்லாமை, வாய்மை, கள்ளாமை, காமமின்மை, பொறையுடைமை, உறுதியுடைமை, தயை, நேர்மை, அளவறிந்துண்டல், தூய்மை, இப்பத்தும் இயமமாம் என்று யோகநூல் கூறும்

अहिंसा सत्यमस्तेयं ब्रह्मचर्यं क्षमा धृतिः।
दयार्जवं मिताहारः शौचं चैव यमा दश॥

என்பது ஹடயோகப்ரதீபிகை.

இவற்றுட் கொல்லாமையாவது, மனம் வாக்கு காயங்களாற் பிறவுயிர்களைக் கொலைசெய்யாமை. வருத்தாமையுமாம். அது, தன்னாற் செய்யப்படுவது, செய்விக்கப்படுவது, மற்றவன் செய்யத் தான் ஒத்து மகிழ்வது எனமூன்று வகைப்படும். இவற்றை வடநூலார் முறையே கிருதம், காரிதம், அனுமோதிதம் என்பர். இவை ஒவ்வொன்றும் விருப்பையடியாக் கொண்டதும், வெறுப்பையடியாக் கொண்டதும், அறியாமையையடியாக் கொண்டதும், என மூவகைப்படும். இவற்றின் விரிவை யோகநூல்களுட் காண்க.

வாய்மை : கண் முதலிய பொறிகளாற் கண்டவற்றை அப்படியே அறிவித்தலாம். இறைவனே உண்மைப் பொருள்; ஏனையவை யாவும் பொய் யென்னும் உறுதியும் வாய்மையாம் என்பர். இதன் பயன் விண்ணுலகையும் வழங்கும் வாக்கு வன்மை.

கள்ளாமை : தன்னுடையது அல்லாத மணி பொன் நெல் துரும்பு முதலானவற்றை எக்காரணம் பற்றியும் கவர எண்ணுதிருத்தல். சிதசித்தாகிய உயிரிடத்துச் சடத்தன்மை ஏற்றுதிருத்தலுமாம் என்பர் தத்துவ ஞானியர். இதன் பயன் உயர்ந்த மணிகளைப் பெறுதல்.

காமமின்மை : தன் மனைவியை விதித்த காலத்துப் புணர்ந்து பிறர் மனைவியரை எண்ணுதிருத்தல். இது எட்டு வகைப்படும். பெண்களை விருப்போடு எண்ணுதல் அவர்களைப்பற்றிப் பேசுதல், அவர்களுடன் விளையாடுதல் அவர்களை இடைவிடாது பார்த்தல், தனித்துப் பேசுதல், அடைய எண்ணுதல், உறுதி கோடல், செயலற்றுப் போதல் ஆகிய இவைகள் இல்லாமையாகிய எட்டுமாம். இறைவனிடத்து என்றும் நீங்காத மனமுடைமையும் காமமின்மையுமாம் என்பர். இதன் பயன், எல்லாவற்றையும் எண்ணியாங்கு இயற்றும் வன்மையடைதலாம்.

பொறை : பகைவர் முதலானோர் தமக்குத் தீங்குசெய்யினும் அவற்றைத் தாங்கும் பொறுமை. இதனாற் பயன் உடற்பற்று நீங்குதல்.

உறுதியுடைமை : செய்த தவத்தாலேயே சம்சார பந்தம் நீங்கும், வேறுவிதத்தால் நீங்காது என்னும் உறுதிபெறுதல். யான் உயிர் ; இறைவனை எய்துதற்குரியன் என்னும் உறுதியும் இதுவேயாம். இதனால் பயன் இச்சித்த பயனை எய்துதல்.

கருணையுடைமை; பிறவுயிரையும் தமது உயிர் போலப் பேணுதல். இது எல்லாரையும் வசப் படுத்தும்.

பொதுமை : பகை, நொதுமல், நண்பு சுற்றம் ஆகிய எல்லாரிடத்தும் எப்போதும் சமபாவனை செய்தல். இதனால் மனமலர்ச்சியுண்டாம்.

அளவான உணவு : அரைவயிறு உணவும் கால் வயிறுநீரும், கால்வயிறு காற்றுமாக உட்கொள்ளு தல், இதன் பயன் ஆரோக்கியம்.

தூய்மை : உள்ளும் புறமும் தூய்மையாக இருத்தல். இது அகத்தூய்மை, புறத்தூய்மையென இருவகைப்படும். அகத்தூய்மை ஞானசௌசம் என்றும் வழங்கப்பெறும். "அகந்தூய்மை வாய்மை யால் காணப்படும்" என்ற வள்ளுவம் சிந்திக்க. புறத்தூய்மையாவது நீரால் கழுவிக்கொள்வது. "புறந் தூய்மை நீரானமையும்" என்றமையும் காண்க. (6)

## 3. நியமம்

நியமமாவது. விதிமுறைகளை வழுவாதொழுகு தல் பரத்துவத்தில் இடைவிடாதொழுகும் விருப்பம் நியமம் எனினும் ஆம். இதனை மூன்று திருமந்திரங்களால் மொழிகின்றார்.

ஆதியை வேதத்தின் அப்பொரு ளானைச்
சோதியை அங்கே சுடுகின்ற அங்கியைப்
பாதியுள் மன்னும் பராசத்தி யோடுடன்
நீதி யுணர்ந்த நியமத்த னாமே. 55 5

இம்—எனின். அம்மையப்பரை அறிகின்றவனே நியமத்தன் என உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : முதற்பொருளை, வேதத்தின் பொருளாக உள்ளவனை, ஒளிவடிவானவனை, அங்குச் சுடுகின்ற தீவடிவானவனை திருமேனியிற் சரிபாதியாக விளங்கும் பராசத்தியோடு உடனுக. முறைமையான் உணர்ந்து இருப்பவன் நியமத்தனும் என்றவாறு

ஆதியை என்பது முதல் அங்கியை என்பது வரை உள்ள பகுதி இறைவனது பொதுவியல்பு உணர்த்துவன. வேதத்தின் அப்பொருளான் - வேதங்களால் விளக்கப் பெறுகின்ற பொருளாகவுள்ளவன். அப்பொருளான் என்ற சுட்டு நெஞ்சறி சுட்டு. சோதி ஒளிமட்டும் உடையது. அங்கி சுட்டு ஒன்றுவிக்கும் தன்மையது. ஆகவே இந்த இரண்டாயும் இருப்பவன் இறைவன் என இயைத்துக் கூறியவாறு. (7)

தூய்மை அருளூண் சுருக்கம் பொறைசெம்மை
வாய்மை நிலைமை வரைதலே மற்றிவை
காமங் களவு கொலையெனக் காண்பவை
நேமியீ ரைந்து நியமத்த னாமே; 556

இம் - இனின், இப்பத்தும் உடையான் நியமத்தன் என்றல் நுதலிற்று.

இ – ள் : தூய்மை. அருள், சுருங்கிய உணவு, பொறை, செம்மையுடைமை, வாய்மை, உறுதியுடைமை, காமமின்மை, களவின்மை, கொலை

யின்மை ஆகிய இவற்றை நியமமாகவுடையவன் நியமத்தன் ஆம் என்றவாறு.

நியமி என்பது நேமியென ஆயிற்று. வரைவு – நீக்குதல். காமம் வரைவு, களவு வரைவு. கொலை வரைவு எனத் தனித்தனிக் கூட்டுக. வளர்த்தல் எனப் பாடங்கொண்டு இடர்ப்படுவோரும் உளர்.

‘ தூய்மை அருளூண் ’ என்ற இத்திருமந்திரமும், ‘ கொல்லான் பொய்கூறான் ’ என்ற (554) திருமந்திரமும் திரிசிகி உபநிஷத், தரிசனோபநிஷத், சாண்டில்யோப நிஷத், சூதசம்ஹிதை முதலியவற்றிலுள்ள பத்து வகை இயமங்களாகவே இருத்தலானும், ஹடயோகப் பிரதீபிகையிலிருந்து மேற்காட்டப்பெற்ற ‘ அஹிம்சா சத்யம் ’ என்ற சுலோகமும் அதனையே தெரிவித்தலானும், ‘ தூய்மை அருளூண் ’ என்ற இத்திருமந்திரம் நியமத்துள் இடம்பெறலாகாது; இயமத்துள் இருக்க வேண்டியதொன்று என்பதே விளங்கும். அன்றியும் ஒரே பொருளில் இரண்டு மந்திரங்களைத் திருமூலதேவநாயனார் அருளிச் செய்யார் ஆதலின் இரண்டனுள் ஒன்று இடைச்செருகலாக இருக்க வேண்டும் என உணர்க. அன்றியும், தூய்மை அருள் என்பன நியமமாகாமையும் இக்கருத்தை வலியுறுக்கும்.

நியமத்திற்கேற்ப, காமம் களவு கொலையெனக் காண்பவை நேமி எனக்கூட்டி, காமம் களவு கொலையெனக் காண்கின்ற இவற்றில் ஈடுபடாத நியமமுடையான் எனப் பொருள் கொள்க. (8

தவஞ்செபஞ் சந்தோடம் ஆத்திகந் தானஞ்
சிவன்றன் விரதமே சித்தாந்தக் கேள்வி
மகஞ்சிவ பூசைஒண் மதிசொல்லீ ரைந்து
நிகழ்பல செய்யின் நியமத்த னாமே. 557

இ-ம் - எனின், இதுவுமது.

இ-ள் : தவம், செபம், சந்தோடம், ஆத்திகம், தானம், சிவவிரதம், சித்தாந்தக் கேள்வி, வேள்வி, சிவபூசை, ஒளிபொருந்திய சிவஞானமென்ற பத்தாகிய கரணங்களைப் பலகாலும் இயற்றின் நியமத்தனும் என்றவாறு.

இவற்றை,

तपः सन्तोष आस्तिक्यं दान मीश्वरपूजनम्।
सिद्धान्तवाक्यश्रवणं ह्रीमतिच जपोहुतम्॥
नियमादश संप्रोक्ता योगशास्त्र विशारदैः॥

என்பதாலும் உணர்க.

தவமாவது விதி நூல்களிற் கூறியபடி விரதங்களை மேற்கொண்டு சரீரத்தை உலர்த்துதலாம். நான் ஆர் என் உள்ளம் ஆர் நாயகனுக்கு நாம் எவ்விடத்தோம் என்று ஆராய்தலும் தவமாம். இதனால் பயன் காயசித்தியும், அணிமாதி சித்தியும், இந்திரிய ஜயமும் ஆம்.

ஜபமாவது திருவைந்தெழுத்து முதலிய மந்திரங்களை விதிப்படி உச்சரித்தலாம். சாஸ்திரபுராண

இதிகாசங்களை மனனஞ்செய்தலும் ஜபமாம். இது வாசிகம், மானசிகம் என இருவகைப்படும். இதனுல் பயன் இட்டதெய்வம் வெளிப்படுதல்.

சந்தோஷமாவது பெற்றதில் மகிழ்தல். சுவர் லோகம் முதலிய இன்பவுலக வாழ்வு இயைவதாயி னும் அவற்றை விட்டு, சிவஞானப் பேறென்றே விரும்பி யிருத்தலுமாம். பயன் நிரதிசய இன் பத்தை எய்துதல்

ஆஸ்திகமாவது வேதாகமங்களில் கூறப்பட்ட வற்றுள் நம்பிக்கைவைத்தல். பயன் இருமைப் பயனையும் முத்தியையும் எய்துதலாம்.

தானமாவது நல்வழியிலீட்டிய பொருளைச் சிவ னடியார்க்கும் சிவஞானியர்க்கும் அளித்தல், இதன் பயன் பாவங்குறைதல்.

சிவ விரதமாவது சிவனை முழுமுதற் கடவுளா கக் கொண்டு சிவராத்திரி முதலிய விரதங்களை யனுட்டித்தல். பயனுவது இந்திரியம் அடங்குத லும் பதிபோத மிகுதலும்.

சித்தாந்தக் கேள்வியாவது பதி பசு பாசம் என்ற முப்பொருளுண்மையை உணர்த்தும் ஞான சாத்திரங்களை இடை விடாது கேட்டல். பயன் பாச பசு ஞானங்களையும் சிவஞானத்தையும் அறிதல்

மகமாவது பசுத்துவத்தைச் சிதைத்து, சிவத்து வம் மேவச்செய்யும் யாகம். இது சிவவேள்வி எனப் படும். "பறப்பைப் படுத்தெங்கும் பசுவேட்டு எரி

யோம்பும் சிறப்பு'' ஆம். வேதாகமங்களிற் கூறிய விதி நிஷேதங்களை அனுட்டித்தலாகிய நித்திய கன்மமுமாம்.

சிவபூசையாவது,

" புத்திரமார்க் கம்புகலிற் புதிய விரைப்போது
புகையொளிமஞ் சனமமுது முதல்கொண்டைந்து
சுத்திசெய்தா சனமூர்த்தி மூர்த்திமானுஞ்
சோதியையும் பாவித்தா வாகித்துச் சுத்த
பத்தியினல் அருச்சித்துப் பரவிப் போற்றிப்
பரிவினெடு மெரியில்வரு காரியமும் பண்ண
நித்தலுமிக் கிரியையினை இயற்று வோர்கள்
நின்மலன்றன் அருகிருப்பர் நினையுங் காலே''

என்று சித்தியாரில் விதித்தவண்ணம் பூசித்தல்.

மதியாவது வேதாகம நெறிகளிலும். கிரியை களிலும் உண்டாகும் சிரத்தையாம். பயன் உறுதி யாகப் பயனளிக்கும் கன்மங்களையுடைமை

ஹடயோகப்பிரதீபிகை முதலிய நூலுடையார் விரதத்தை மகமெனக்கொண்டு, நாணத்தைக்கூட்டி உரைப்பர். (9)

## 4. ஆதனம்

ஆதனமாவது உடல், உள்ளம் இவற்றுலுண்டா கும் ரஜோதர்மத்தைத் தடுத்து நிலைபேறளிப்பது.

**आसनेन रजो हन्ति**

என்று யோக சூடாமணி உபநிஷத்திலும் ; வியாதி, யோகத்தில் வன்மை இன்மை, ஐயம், இது ஆகும்

இது ஆகாது என்ற விருப்பு வெறுப்பு, அலட்சியம், வைராக்கியமின்மை, திரிபுணர்ச்சி, சமாதிக்கு உரிய இடம் கிடையாதிருத்சல், கிடைத்த இடத்தில் சித்தம் நிலையாதிருத்தல் முதலியன இல்லாமல் நிலைபேற்றினையளிப்பது ஆதனமாம் என்று * பாதஞ்சல யோக சூத்திரத்திலும் கூறப் பட்டுள்ளமைகொண்டு தெளிக. அவ்வாசன வகை களும் பயனும் இவ்வதிகாரத்துட் கூறப்படுகின்ற தாதலின் இப்பெயர்த்தாயிற்று.

பங்கய மாதி பரந்தபல் ஆதனம்
அங்குள வாம்இரு நாலும் அவற்றினுள்
சொங்கில்லை யாகச் சுவத்திக மெனமிகத்
தங்க இருப்பத் தலைவனு மாமே. 558

இம் - எனின், ஆதனங்கள் இத்துணைய வென்ற லும், இனையவென்றலும் நுதலிற்று.

இ - ள் : பதுமாசனம் முதலாகப் பரந்துபட்ட ஆசனங்கள் அங்கு உள்ளனவாம் ; அவற்றுள், மயக்க மில்லையாகும்படி சுவத்திகாசனம் முதலாக எட்டிலும் நிலைத்திருக்கத் தலைவனாவான் என்ற வாறு.

சொங்கு - குற்றம். பதுமாசனம் முதலாகப் பலவகை யாசனங்களுள்ளன ; அவற்றுள் எட்டு சிறந்தனவாம். அவற்றுள்ளும் சுவத்திகாசனத்துள்

* व्याधिस्त्यानसंशयप्रमादालस्याविरतिभ्रान्तिदर्शना
लब्धभूमिकत्वानवस्थितत्वानि चित्तविक्षेपास्तेऽन्तरायाः॥

ஒருவனிருக்க அவன் தலைவனாவான் என்பது இம்மந்திரத்தின் கருத்து. சுவத்திகாசனம் சுகத்தைத் தருவது சுவத்திகாசனமாவது முழந்தாளுக்கும் தொடைக்கும் நடுவில் இரண்டு பாதங்களையும் வைத்து உடல் நிமிர்ந்து செவ்வையாக உட்கார்ந்திருப்பது இதனை,

जानूर्वोरन्तरे सम्यक् कृत्वा पादतलेऽभे।
ऋजुकायः समासीनः स्वस्तिकं तत्प्रचक्षते॥

என்னும் சாண்டில்யோபநிஷத் சுலோகத்தினாலும் அறிக. (10)

ஓரணை யப்பத மூருவின் மேலேறிட்
டார வலித்ததன் மேல்வைத் தழகுறச்
சீர்திகழ் கைகள் அதனைத்தன் மேல்வைக்கப்
பார்திகழ் பத்மா சனமென லாகுமே, 559

இ - னின், பதுமாசனத்தின் இயல்புணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: ஒவ்வொரு பாதத்தையும்மாறி தொடையின் மேல் நன்றாக ஏறவிட்டுப் பொருந்த இழுத்து அதன்மேல் வைத்து, அப்பாதங்களின்மேல் அழகு பொருந்தச் சிறப்போடு விளங்குகின்ற கைகளை வைக்க; அது, பூமியின் கண்ணே விளக்கத்தினைத் தருதற்கு ஏதுவாகிய பதுமாசனம் என்று சொல்லப்படும் என்றவாறு.

அஃதாவது வலது தொடையின்மேல் இடது பாதத்தையும், இடது தொடையின்மேல் வலது

பாதத்தையும், உள்ளங்கால் மலர நன்ருக இழுத்துப் பொருத்தி, அதன்மேல் இருகைகளையும் மலர்த்திவைப்பது பதுமாசனமாம் என்பதுகருத்து.

ஓரிலையப்பதம் - ஒருபக்கம் அணைந்த காலை ஆரவலித்து-மிக இழுத்து. இரண்டு புறங்கால்களையும் முயற்சியால் தொடையின்மேல் சேர்த்து, இரு தொடையின் மத்தியிலும் இரண்டு கைகளையும் ஒன்றன் மேல் ஒன்ருக மலர்ந்த பாவனையில் வைத்து, மூக்குநுனியில் பார்வையை அசைவற நிறுத்தி, முன் பற்களின் இருபுறத்திலும் நாவை வளைத்து நிறுத்தி, மார்பில் மோவாய்கட்டையை வைத்து வாயுவை எழுப்புதல் பதுமாசனமாம் என்று யோகநூல் கூறும். மந்திரத்திற்கும் அதற்கும் பல ஒற்றுமைகளிருத்தலை அறிக.

இவ்வாசனத்தில் மச்சேந்திர பதுமாசனம் என்றும் முக்த அல்ல பத்தபதுமாசனம் என்றும் இரு வகையுண்டு, பத்த பதுமாசனமாவது, முற்கூறிய வாறு பதுமாசனத்தைச் செய்து. இரண்டு கைகளையும் சம்புடமாகச் சேர்த்து, மடியில் வைத்துக் கொள்ளுதலாம். (11)

துரிசில் வலக்காலைத் தோன்றவே மேல்வைத்து
அரிய புழுந்தாளி லங்கை களைநீட்டி
உருகி யிடுபுடல் செவ்வே யிருத்திப்
பரிசு பெறுமது பத்திரா சனமே, 560

இ-ள் - எனின்: பத்திராசனத்தின் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : குற்றமற்ற வலக்காலை விளங்கும்படி மேல்வைத்து, முழந்தாளின்மேல் கைகளை நீட்டி தளர்ந்த உடலைச் செவ்வையாக இருத்தி, நன்மை யைப்பெறுவது பத்திராசனமாம் என்றவாறு

யோகநூல்கள் பீஜத்தின் கீழ்ப்பாகமாகிய நரம்பினது இருபக்கங்களிலும் காற்பரடுகளைச் சேர்த்து அஃதாவது, இடதுபுறத்தில் இடது பரட்டையும் வலதுபுறத்தில் வலது பரட்டையும் சேர்த்து இரண்டு பாதங்களையும் இறுகப் பிடித்துக் கொண்டிருப்பது என்னும் இம்முறை கோரக்கரால் பயிலப்பட்டமையால். கோரக்காசனம் எனவும் கூறப்படும். திருமூலர் முறைக்கும் இதற்கும் உள்ள வேறுபாடு ஊன்றி அறியத்தக்கது. (12)

ஒக்க அடியிணை யூருவில் ஏறிட்டு
முக்கி யுடலை முழங்கை தனில்ஏற்றித்
தொக்க அறிந்து துளங்கா திருந்திடிற்
குக்குட ஆசனங் கொள்ளலு மாமே, 561

இம் - எனின், குக்குடாசன இலக்கணம் கூறுதல் நுதலிற்று

இ - ள் : பாதங்களிரண்டையும் தொடையின் மேல் மாறி ஏற்றி உடலை முழங்கைகளின்மேல் நிறுத்தி, அசையாதபடி இருந்திடின், அது குக்குடா சனமாம் என்றவாறு.

இதனது விளக்கத்தைத் தொடைகளில் மேல் நோக்கிய பாதங்களாக வைக்கும் பதுமாசனத்தைச் செவ்வையாகக் சேர்த்துக்கொண்டு, கணைக்காலுக்

கும் தொடைக்கும் மத்தியிலே இரண்டு கைகளையும் நுழைத்து, பூமியில் ஊன்றி, உடம்பை முழங்கை வரையில் முக்கித்தூக்கி நிறுத்துதல் குக்குடாசனம் என்னும் ஹடயோகப்பிரதீபிகை கொண்டும் தெளிக.

ஒக்க அடியிணை ஊருவில் ஏறிட்டு என்பது பதுமாசனம் கூறியது. பதுமாசனத்திற்கும் இதற்கும் உள்ள வேறுபாடு கைகளைத் தொடைக்கு நடுவாகச் செலுத்திக் கீழேயூன்றி, உடம்பை முழங்கைக்குமேல முக்கித் தூக்குவது ஒன்றே என்பது விளக்கப் பெற்றது.

पद्मासनन्तु संस्थाप्य जानूर्वोरंतरेकरौ ।
निवेश्यभूमौसंस्थाप्य व्योमस्थं कुक्कुटासनम् ॥

என்பது உபநிஷத் வாக்கியம். (13)

பாத முழந்தாளிற் பாணி களைநீட்டி
ஆதர வோடும்வாய் அங்காந் தழகுறக்
கோதில் நயனங் கொடிமூக்கி லேயுறச்
சீர்திகழ் சிங்கா தனமெனச் செப்புமே, 562

இ-ள் : பாதநுனிகளைப் பூமியிலூன்றி முழங் காலில் கைகளை நீட்டி, அன்போடு வாயைப் பிளந்து கொண்டு அழகு பொருந்தக் குற்றமற்ற கண்களை மூக்குநுனியிலே வைத்திருப்பது புகழமைந்த சிம்மாசனம் என்று புகலப்படும் என்றவாறு.

இம் - எனின், சிம்மாசனத்தின் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் விளக்கத்தைப் பீஜத்தின் கீழ்நரம்பு இரண்டிடத்திலும் காற்பரட்டை ஊன்றி உட்கார்ந்து. முழங்கையை முழங்காலிலே வைத்து. விரல்களை விரித்து, நாசியைப்பார்த்திருத்தல் என்னும் யோகநூல் கருத்தால் உணர்க.

**गुल्फौच वृषणस्याधः सीवन्याः पार्श्वयोः क्षिपेत् ।**
**दक्षिणे सव्यगुल्फन्तु दक्षगुल्फंचसव्यके ॥**
**हस्तौतुजान्वो· संस्थाप्य स्वांगुलीः संप्रसार्यच ।**
**व्यात्तवक्त्रो निरीक्षेत नासाग्रंसुसमाहितः ॥**
**सिह्मासनंभवेत् ।**

எனவரும் சாண்டில்யோபநிஷத் வாக்கியங்களாலும் நன்கு உணரலாம், (14)

பத்திரங் கோமுகம் பங்கயங் கேசரி
சொத்திரம் வீரஞ் சுகாதனம் ஓரேழும்
உத்தம மாமுது ஆசனம் எட்டெட்டுப்
பத்தொடு நூறு பலஆ சனமே, 563

இம் — எனின், உத்தமாசனங்கள் ஏழும் ஏனைய ஆசனங்கள் நூற்றிருபத்தாறும் என்றல் நுதலிற்று

இ - ள் : பத்திரம் கோமுகம் பங்கயம் கேசரி சொத்திரம், விரம் சுகாசனம் என ஆசனங்கள் ஏழாம், முன்சொன்ன பழமையான ஆசனமாகிய சுவத்திகத்தைக்கூட்ட, எட்டாகிய இவைகள் சிறந்த ஆசனங்களாம். இவையன்றி, நூற்றிருபத்தாறும் மேலும் பலவும் ஆசனங்களாகக் கூறப் பெற்றுள்ளன. என்றவாறு,

பத்திரம், பங்கயம். கேசரி, சுவத்திகம் முதலிய வற்றினிலக்கணம் முன் கூறப்பெற்றன. கோமுகா சன மாவது இடது பின்பாகத்தில் வலது பரட்டை யும், வலது பின்பாகத்தில் இடது பரட்டையும் மாறிச் சேர்க்க அமைவதாம், இது பசுவின் முகம் போல அமைதலின் இப்பெயர்த்தாயிற்று.

सव्येदक्षिण गुल्फन्तु पृष्ठपार्श्वे नियोजयेत् ।
दक्षिणेपि तथासव्यं गोमुखं गोमुखाकृतिः ॥

என்பது சாண்டில்யோபநிஷத்.

சொத்திரம்; சொத்திகம் எனவும் பாடமுண்டு. ஆசனவகையுள் சொத்திரம் என ஒன்று காணப் படாமையானும், சொத்திகமே சொத்திரம் எனக் கொள்ளப்பெற்றது எனல் அமையும், அன்றியும், ஓரேழும் உத்தமமாம் என்பதற்கும் பொருந்துவ தாம்- முதுவாசனம் என்பதற்கு, சொத்திகம் என்று பொருள் கூறுவாருமுளர், இச்சொல் இப்பொருளைக் காட்டுமாறு யாங்ஙனம்? ஆதலால் பழமையான ஆசன்ங்கள் நூற்றிருபத்தாறும், மேலும் பல ஆசனங்களும் ஆம் எனப் பொருள்கோடலே மிகப் பொருந்துவதாம்.

நூற்றிருபத்தாறனுக்கும் பெயர் மட்டும் ஈண்டுக் குறிப்பிடப்பெறுகிறது. விளக்கமும் விரிவும் யோக நூலுட் காண்க.

1 சுவஸ்திகாசனம்
2. கோமுகாசனம்
3. விராசனம்
4. கூர்மாசனம்
5 குக்குடாசனம்
6. உத்தான கூர்மாசனம்
7. தனுராசனம்
8. மச்சேந்திராசனம்
9. பச்சிமதானாசனம்
10. மயூராசனம்
11. சவாசனம்
12. மச்சேந்திரசித்தாசனம்
13. சித்தாசனம்
14. வச்சிராசனம்
15. பதுமாசனம்
16. மச்சேந்திரபதுமாசனம்
17. முக்தபதுமாசனம்
18 சிம்மாசனம்
19. பத்திராசனம்
20. வல்லரியாசனம்
21. விருச்சிகாசனம்
22. குப்சிகாசனம்
23. பாரிசுவோபாதாசனம்
24 யோகாசனம்
25 கபாலாசனம்
26. டிட்டிபாசனம்
27. பூர்வதானாசனம்
28 அர்ப்பகாசனம்
29. காமதகனாசனம்
30. கேசரியாசனம்
31. சோபகிரியாசனம்
32 பரியங்காசனம்
33 பத்தாசனம்
34. லௌல்யாசனம்
35. பத்தயோனியாசனம்
36. பேகனாசனம்
37. மகாபேகனாசனம்
38 பிராணாசனம்
39. அபானாசனம்
40 சமானாசனம்
41. பைரவாசனம்
42 மண்டூகாசனம்
43 மர்க்கடாசனம்
44 ஏகபாதவாசனம்
45. பணீந்திராசனம்
46 யோகநித்திராசனம்
47 சுகாசனம்
48 தண்டாசனம்
49 சக்கிராசனம்
50. வர்த்துலாசனம்
51. அர்த்தாசனம்
52. பர்வதாசனம்

53. யோனிமுத்திராசனம்
54. திருடாசனம்
55. பவனமுக்தாசனம்
56, வாமபாதபவனமுக்தாசனம்
57. தட்சிணபாதமுக்தாசனம்
58. தீராசனம்
59. சுவாசகமணாசனம்
60 வாதாயணாயணாசனம்
61. அர்த்தபாதாசனம்
62 ஊர்த்துவபத்மாசனம்
63. பூர்ணபாதாசனம்
64. தட்சிணாசனம்
65, அத்துவாசனம்
66 வாமதட்சிணபாதாசனம்
67. திவிபாதசிரசாசனம்
68. விருட்சாசனம்
69 வாமபாதசிரசாசனம்
70 தட்சிணபாதசிரசாசனம்
71. தாடாசனம்
72. ஊர்த்துவதனுராசனம்
73, வாமசித்தாசனம்
74. விவேகாசனம்
75 தர்காசனம்
76. நிசுவாசாசனம்
77. அர்த்தகூர்மாசனம்
78. கருடாசனம்
79. திரிகோணாசனம்
80. பிரார்த்தணாசனம்
81. பாதத்திரிகோணாசனம்
82, புஜாசனம்
83. அஸ்தபயங்கராசனம்
84. அங்குஷ்டாசனம்
85. உத்தகடாசனம்
86. அர்த்தபரதாசனம்
87. அஸ்தபுஜாசனம்
88. வரமவக்கிராசனம்
89 ஜாந்த்வாசனம்
90, சாகாசனம்
91. திரிஸ்தம்பாசனம்
92 பாதஅபான கமணாசனம்
93. அசத்சதுஷ்கோணாசனம்
94 கூர்மாசனம்
95. கர்ப்பாசனம்
96. ஏகபாதவிருட்சாசனம்
97. முத்தஅஸ்தவிருட்சாசனம்
98 துவிபாதபாரிசுவாசனம்
99, கந்த்பீடாசனம்

100. பிரௌடபாதாசனம்
101 உபாதானுசனம்
102. ஊர்த்துவ சர்யுக்த பாதாசனம்
103. அர்த்தசவாசனம்
104. வேறு அபனுசனம்
105, யோனியாசனம்
106. வேறுபர்வதாசனம்
107, பர்வதாசனம்
108, சலபாசனம்
109. கோகிலாசனம்
110. லோலாசனம்
111. உத்தமாங்காசனம்
112, உட்டிராசனம்
113. அம்சாசசனம்
114, வேறுபிராணுசனம்
115. கார்முகாசனம்
116. ஆனந்தமந்திராசனம்
117. கம்புநாசனம்
118. கிரந்திபேதனுசனம்
119, சமாசனம்
120, புஜாங்காசனம்
121. பவனுசனம்
122. மச்சாசனம்
123, மகராசனம்
124. விருஷாசனம்
125. சங்கடாசனம்
126. சர்வாங்காசனம்

## 4. பிராணுயாமம்

அஃதாவது பிராணனைக் கட்டுப்படுத்துதல். இருக்கையாகிய ஆசனம் நிலைக்கப்பெற்றுர் மேற் செய்ய வேண்டியது மூச்சுக்காற்றைக் கட்டுப் படுத்துதலே யாதலின் அதனை அறிவிப்பதாகிய இவ்வதிகாரம் மேலதனோடு இயைபுடைத்தாயிற்று.

ஐவர்க்கு நாயகன் அவ்வூர்த் தலைமகன்
உய்யக்கொண் டேறுங் குதிரைமற் றென்றுண்டு
மெய்யர்க்குப் பற்றுக் கொடுக்குங் கொடாதுபோய்ப்
பொய்யரைத் துள்ளி விழுத்திடுந் தானே, 564

இம் - எனின், பிராணுயாமமுறையை உருவகத் தால் உளங்கொள உரைத்தல் நுதலிற்று.

இ — ள்: ஐந்துபேருக்குக் கணவனுகவும் அவ்வூருக்குத் தலைவனுகவுமுள்ள ஒருவன் தான் எங்கும் செல்ல ஏறி நடத்தும் குதிரை ஒன்று உண்டு; அது உண்மையான அடியார்க்குப் பிடிகொடுத்து நடக்கும்: பொய்யராயின் துள்ளிக்குதித்து அவர்களை விழச்செய்யும் என்றவாறு.

இம்மந்திரம் பிறிதுமொழிதல் என்னும் அணி.

ஐவர் — பஞ்சேந்திரியங்கள், நாயகன் - நடத்துபவனுகிய கணவன், பஞ்சேந்திரியங்களும் மனத்தின் வழியாக ஆன்மா நடத்தப் புலன்களில் சென்று பற்றி இயங்குவன ஆதலின் ஐவர்க்கு நாயகன் என்ருர். அவ்வூர் — அப்புரம், புரம் என்பது ஊருக்கும், உடலுக்கும் பெயர் ஆதலால் அவ்வூர் என்றது உடலை உணர்த்திற்று. உடலுக்குத் தலைவன் உயிர்.

உய்யக் கொண்டு - தான் பிழைக்கக்கொண்டு, தான் இடமிடங்கள் தோறும் சென்று அடையக் கொண்டு, குதிரை என்றது பிராணவாயுவை. மெய்யர் - நித்திய வஸ்துவாகிய பரசிவத்தினிடம் உண்மைப்பற்றுடைய மெய்யடியார். பொய்யர் - மாயா காரியங்களான தனுவாதிகளையே நம்பி வாழும் பொய்யடியார்.

பற்றுக்கொடுத்தல் - அவர்கள் வயப்பட்டு அவர்களது விருப்பம்போல இயங்குதல். கொடாது போய் என்பதற்குப் பற்று என்ற செயப்படு பொருளை வருவித்துரைக்க, துள்ளிவிழுத்திடும் அடங்காக் குதிரைபோல் துள்ளிக்குதித்து

விழுத்தும். அதாவது, பிராணாயாமத்தை முறைப் படி செய்யாதொழியின் இதயநோய் முதலியன உண்டாகி இடர்ப்படுதல்மட்டுன்றி ஆயுட்குறைவும் உண்டாம் என்பதாம். (16)

ஆரியன் நல்லன் குதிரை இரண்டுள
வீசிப் பிடிக்கும் விரகறி வாரில்லை
கூரிய நாதன் குருவின் அருள்பெற்றால்
வாரிப் பிடிக்க வசப்படுந் தானே, 565

இம் - எனின், இதுவும் முன்னைய உருவகத்திற்கு ஏற்ப, அதனைப் பிடிக்க ஆசான் இன்னருள் வேண்டும் என்றல் நுதலிற்று.

இ - ள் : பெரியோன் : நல்லவன் : அவனுக்குக் குதிரைகள் இரண்டுள்ளன; அவற்றை வீசிப்பிடிக்கும் உபாயம் அறிந்தார் ஒருவருமிலர்; நுண்ணறிவைப் படைத்த இறைவனாகிய குருவின் அருள் பெற்றால் அக்குதிரைகளை வாரிப்பிடிக்க அவை வசப்படும் என்றவாறு.

ஆரியன் – கொண்டாடத்தக்கவன்; பூசிக்கத் தக்கவன்; என்றது மனத்தை. மனம் இடகலை பிங்கலையாகிய இரண்டு மூச்சுகளின்வழியாக இயங்குதலின் ஆரியற்கு இரண்டு குதிரைகள் உள்ளன என்றார். வீசிப் பிடித்தலாவது குதிரையைச் சம்மட்டியால் வீசிப்பிடித்தல், பிராணயாமத்திற்கு வெளியே நிச்சுவாசமாக வீசி, உள்ளுக்குப் பூரகமாக இழுத்துக் கும்பகமாகப் பிடித்தல்

விரகு - உபாயம்; அஃதாவது இவை இத்துணை மாத்திரையினவாக இருத்தல்வேண்டும் என்பதும்' அவற்றைப் பயிலும் முறையும். கூரிய - நுண்ணிய, நாதனே குருவாக வருதலின் நாதன் குருவின் என இயைத்துக் கூறிஞர். வாரிப்பிடிக்க – இரண்டு குதிரைகளையும் சேர்த்துக் பிடிக்க. அங்ஙனம் சேர்த்துப் பிடித்தால் இடநாசி வலநாசிகளின் வழியாக இயங்கும் இயக்கம் தடைப்பட்டுச் சுழுமுனை திறக்கும். அப்போது இரண்டையும் பிடித்தது போலாகும் என்பது கருத்து. வசப்படுதல் - போக்கு வரவற்று நிலைத்தல். (17)

புள்ளினும் மிக்க புரவியை மேற்கொண்டாற்
கள்ளுண்ண வேண்டாந் தானே களிதரும்
துள்ளி நடப்பிக்கும் சோம்பு தவிர்ப்பிக்கும்
உள்ளது சொன்ஞேம் உணர்வுடை யோருக்கே, 566

இ‌ம் – எனின்: பிராணுயாமத்தின் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: பறவையைவிடக் கடுப்பினையுடைய குதிரையை ஏறிஞல் கட்குடிக்க வேண்டாம்; தானே களிப்புண்டாம்: பெருமிதத்தோடு துள்ளி நடக்கச் செய்யும்; சோம்பலைப்போக்கும்; உணர்வினை உடையோருக்கு உண்மையைச் சொன்னேம் என்றவாறு.

புள்—புரவியின் வேகத்திற்கு ஒப்பு ; பிராணுயாமத்தைச் செவ்வையாகச் செய்வார்க்கு மனமகிழவும் சுறுசுறுப்பும், வன்மையுமுண்டாம் என்பது கருத்து. உணர்வுடையோர்க்கே சொன்னேம்; ' பிள்ளை '

புத்தியிருந்தால் பிழைத்துக் கொள்ளட்டும் என்பது போலப் பழமொழியைத் தழுவிக் கூறியது. (18)

பிராணன் மனத்தொடும் பேரா தடங்கிப்
பிராண னிருக்கிற் பிறப்பிறப் பில்லை
பிராணன் மடைமாறிப் பேச்சறி வித்துப்
பிராண னடைபேறு பெற்றுண்டீர் நீரே. 567

இ - ள்: பிராணவாயு மனத்தொடும் அசைவின்றி அடங்கி இருந்தால் பிறப்பு இல்லை : இறப்பு இல்லை ; ஆதலால் நீங்கள் பிராணனை இடகலை பிங்கலை யாகிய இருவழிகளிலும் மாறிமாறி நடக்கச் செய்து அதன் நடப்பால் வருபயனை நுகருங்கள் என்றவாறு.

பிராணன் ஒடுங்க மனம் ஒடுங்கும் ஆதலின் 'பிராணன் மனத்தொடும் பேராதடங்கி' என்றார்.

चलेवाते चलंचित्तं निश्चले निश्चलंभवेत् ।
योगी स्थाणुत्वमाप्नोति ततोवायुं निरोधयेत् ॥

காற்று அசையின் மனம் அசைகிறது ; காற்று ஒடுங்கின் மனம் ஒடுங்குகிறது ; அதனால் யோகி கட்டைபோல் ஆகிறான் : ஆகையால் பிராணாயாமம் செய்க என்னும் யோக சூடாமணி உபநிஷத்தைக் கொண்டு தெளிக.

பிராணன் நடைபேறு பெற்றுண்டீர் நீரே - பிராணன் ஒடுங்காததால் பிறப்பு இறப்பு உங்களைப் பிடித்துள்ளது என்பதாம். (19)

ஏறுதல் பூரகம் ஈரெட்டு வாமத்தால்
ஆறுதல் கும்பகம் அறுபத்து நாலதில்
ஊறுதல் முப்பத் திரண்டதி ரேசகம்
மாறுதல் ஒன்றின்கண் வஞ்சக மாமே, 568

இ-ள்: *பதினாறு மாத்திரையளவு இடகலையால் மூச்சை மெல்ல உள்ளுக்கிழுத்தல் பூரகமாம்; அறுபத்துநான்கு மாத்திரைகாலம் உள்ளேயே தடுத்து வைத்தல் கும்பகமாம்; முப்பத்திரண்டு மாத்திரை வெளிப்படுத்தலாகிய அது ரேசகமாம்; ஆதலால் இடகலையால் இழுத்து, பிங்கலையால் விடுதல் வஞ்சனையாம் என்றவாறு.*

இம் - எனின்: *பிராணாயாமத்தின் கால அளவு கூறுதல் நுதலிற்று.*

*இதனையே மீட்டும் "வாமத்தி லீரெட்டு" (573) என்னும் திருமந்திரத்தாலும் ஓதுவர். மாறுதல் ஒன்றின்கண் வஞ்சகமாமே என்றது இழுத்த வழியே விடாமல் வஞ்சித்து மாறிவிடுக என்பது கருத்து.* (20)

வளியினை வாங்கி வயத்தில் அடக்கில்
பளிங்கொத்துக் காயம் பழுக்கினும் பிஞ்சாம்
தெளியக் குருவின் திருவருள் பெற்றால்
வளியினும் வேட்டு வளியனு மாமே, 569

இம் - எனின், *அதனால் விளையும் பயன் அறிவித்தல் நுதலிற்று.*

இ - ள் : காற்றையிழுத்து வசப்படுத்தி அடக்கினால், உடல் பளிங்கைப்போல மாசுமறுவின்றித் தூயதாய், அது முதுமையடையினும் இளமை உண்டாம். இது நன்குதெளிய குருவின் திருவருளையும் பெற்றுவிட்டால் காற்றைக்காட்டிலும் விரும்பி மென்மையனும் என்றவாறு.

அளியன் - மென்மையன்; என்றது ஆகாயத்தில் பறக்குந்தன்மையும் விளையும் என்பதாம். (21)

எங்கே இருக்கினும் பூரி இடத்திலே
தங்கே யதுசெய்ய ஆக்கைக் கழிவில்லை
அங்கே பிடித்தது விட்டள வுஞ்செல்லச்
சங்கே குறிக்கத் தலைவனு மாமே, 570

இம் - எனின் . மேலதை விளக்கிக்கூறுதல் நுதலிற்று.

இ - ள்: நீ எங்கே இருந்தாலும் இடப்பாக நாசியாகிய இடகலையாலேயே பூரகம்செய்: அதுசெய்யின் உடலுக்கு ஒருபோதும் அழிவில்லை. அங்கே கும்பித்ததும் ரேசகம் செய்ததும் அவ்வவற்றிற்குரிய அளவுடன் செல்லுமாயின் வெற்றிச்சங்கை ஊதுக; நீ தலைவனுமாகலாம் என்றவாறு.

சங்கே குறித்தலாவது பிராணனை, வென்றோம்: நமக்கு அழிவில்லை என்று வெற்றிச் சங்கு ஊதுதல். (22)

ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்குங்
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாரில்லை
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை யுதைக்குங் குறியது வாமே. 571

இம் - எனின். மேலதை வேறொருவாற்றான் விளக்கிக் கூறுதல் நுதலிற்று.

இ—ள்: இடகலை பிங்கலையாகிய இருவழியாலும் பூரித்தும் ரேசித்தும் இருவழியாலும் பிராண வாயுவைக் கும்பகம் செய்யுங் கால அளவை அறிவார் யாருமில்லை; அங்ஙனம் அறிந்தவர்களுக்கு யமனையும் உதைக்கும் ஆற்றல் உண்டாம் என்றவாறு.

பிராணுயாமத்தில் கனிஷ்டம் மத்திமம் அதமம் என மூவகையுண்டு. அவற்றுள் கனிஷ்டமாவது பன்னிரண்டு மாத்திரையளவு பூரக கும்பக ரேசகங்கள் செய்யப்படுவதாம். இதனைப் "பன்னிரண்டானைக்கு" (577) என்னும் மந்திரத்தால் விளக்குவர். மத்திமமாவது இருபத்து நான்கு அல்லது முப்பத்திரண்டு மாத்திரை அளவினதாம். உத்தமம் அறுபத்து நான்கு மாத்திரையளவினதாம். கோரக்கர் தாமியற்றிய யோக சூடாமணியில் பிராணுயாமத்தில் அதமம் பன்னிரண்டு மாத்திரை, மத்திமம் அதனிருமடங்கு, உத்தமம் அதன் மூன்று மடங்கு என்பர்.

अधमेद्वादशप्रोक्ता मध्यमेद्विगुणाः स्मृताः ।
उत्तमेत्रगुणामात्राः प्राणायामे द्विजोत्तमैः ॥

என்பது யோகசூடாமணி (23)

மேல்கீழ் நடுப்பக்க மிக்குறப் பூரித்துப்
பாலாம் இரேசகத் தாலுட் பதிவித்து
மாலாகி யுந்தியுட் கும்பித்து வாங்கவே
ஆலாலம் உண்டான் அருள்பெற லாமே. 572

இம் — னின், வாயுவைத் தரிக்குமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : சிரசு, கால், இதயம் முதலிய இடங்களிற்சென்று பரவும்படிப் பூரகஞ்செய்து, பான்மையோடமைந்த ரேசகத்தால் உள்ளே பதியச் செய்து மயங்கி உந்திகமலத்திற் கும்பகஞ்செய்து பின் சிறிது சிறிதாக ரேசகம் செய்ய, விடமுண்ட கண்டராகிய சிவபெருமானுடைய அருளைப் பெறலாம் என்றவாறு.

மேல் என்றது சிரம், கண், செவி இவற்றில் பூரித்த வாயு பரவித் தாக்குதல். கீழ் என்றது கால் பெருவிரல், மயிர்த்துவாரங்கள் வரை பரவுதல். நடு என்றது நாபி, இதயம் முதலிய இடங்களில் பரவுதல். பால் ஆம் ரேசகம் — கொல்லன் உலைத் துருத்தி போலாது மேல் விடும் ரேசகம். (24)

வாமத்தில் ஈரெட்டு மாத்திரை பூரித்தே
ஏமுற்ற முப்பத் திரண்டும் இரேசித்துக்
காமுற்ற பிங்கலைக் கண்ணாக இவ்விரண்
டோமத்தால் எட்டெட்டுக் கும்பிக்க உண்மையே. 573

இம் - எனின், கும்பிக்கும் முறையும் அளவும் கூறுதல் நுதலிற்று.

இ - ள் : இடகலைவழியாக பதினாறு மாத்திரை பூரகம்செய்து. பாதுகாப்புற்ற முப்பத்திரண்டு மாத்திரையளவு இரேசகம் செய்து விரும்பத்தக்க பிங்கலை வழியாக நாபியாகிய ஓமகுண்டத்தில் இரண்டிரண்டு மாத்திரையாக அறுபத்து நான்கு மாத்திரைகாலம் கும்பிக்க உண்மைவிளையும் என்றவாறு.

நாபியாகிய ஓமகுண்டத்தில்; 'ஓம்' என்ற பிரணவ பஞ்சாக்கர தியானத்துடன் அதாவது இரண்டு மாத்திரையுடன், அறுபத்து நான்கு மாத்திரை காலம் கும்பிக்கவேண்டும் என அளவு முறையும் கூறியவாறு. இதுவே சகர்ப்ப பிராணாயாமம் எனப்படும். (25)

இட்ட தவ்வீ டிளகா திரேசித்துப்
புட்டிப் படத்தச நாடியும் பூரித்துக்
கொட்டிப் பிரானன் அபானனுங் கும்பித்து
நட்டம் இருக்க நமனில்லை தானே. 574

இ-ம் - எனின், இதுவும் அதனைச் செய்யுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இடப்பெற்ற வீடாகிய உடல் தளர்ச்சியடையாது ரேசகம்செய்து பத்து நாடிகளும் புஷ்டியாக வாயுவைப் பூரித்து, உள்ளே நிறைந்த பிராண வாயுவும், கீழ்நோக்கிய அபானவாயுவுமாகக் கலந்து கும்பித்து நிமிர்ந்திருக்க அவர்களுக்கு யமனில்லையாம் என்றவாறு.

இரேசகம் செய்கின்ற காலத்து உடல் தளரும் ஆதலின் இளகாது இரேசித்து என்றார். இட்டது

அவ்வீடு-இறைவனால் வினைக்கழிவிற்காகவும், மலம் கெடவும் உதவியிடப்பட்டதாகிய அந்த உயிர் உறையும் வீடாகிய உடல் என்பது கருத்து.

புட்டி - புஷ்டியென்பதன் திரிபு. அபானனும் பிராணனும் கும்பித்தலாவது பிராணவாயுவைக் கும்பித்தபோது அது கீழ்நோக்கிச் சென்று அபான மாக வெளிப்பட முயலும்; ஆகவே அதனையும் தடுத்துக் கும்பிக்க என்பதாம். (26)

புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை
நெறிப்பட வுள்ளே நின்மல மாக்கில்
உறுப்புச் சிவக்கும் உரோமங் கறுக்கும்
புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே. 575

இ-ம் - எனின், பிராணாயாமம் செய்யும் ஆன்மா வினிடைச் சிவம் பிரகாசிக்கும் என்றல் நுதலிற்று

இ-ள்: உயிர்ப்பாய்ப் புறம்போந்து புக்குத் திரியும் வாயுவை, முறைப்பட உள்ளே தூய்தாக்கினால் உறுப்புக்கள் எல்லாம் சிவக்கும்; உரோமம் மிகக் கறுப்பாகும்; ஆன்மாவினிடமாகப் பாலில் நெய்யும் விறகில் தீயும் மணியுள் சோதியுமாக விளங்குகிற இறைவன் வெளிப்பட்டே நிற்பன்; புறம்போகான் என்றவாறு. (27)

கூடம் எடுத்துக் குடிபுக்க மங்கையர்
ஓடுவர் மீளுவர் பன்னிரண் டங்குலம்
நீடுவர் எண்விரல் கண்டிப்பர் நால்விரல்
கூடிக் கொள்ளிற்கோல அஞ்செழுத் தாமே. 576

இ்ம் - எனின், பிராணனை மங்கையாக உருவகித்தல் நுதலிற்று.

இ – ள் : வீடுகட்டிக் குடிபுகுந்த பெண்கள் வெளியில் ஓடுவர்; திரும்ப மீளுவர் : பன்னிரண்டங்குல அளவு நீண்டு செல்வர் ; எட்டங்குல அளவை வெட்டிக் கொள்வர் இழந்த நாலங்குலத்தையும் சேர்த்துக் கொள்வாராயின் திருவைந்தெழுத்தின் வடிவாவர் என்றவாறு.

மங்கையர் என்றது இடபிங்கலை வழியாக இயங்கும் பிராணவாயுவை. பன்னிரண்டங்குலம் பூரிக்கப்பட்ட வாயு எட்டங்குலம் உள்ளே தங்க நாலங்குலம் வெளிப்பட்டுக் கழிகின்றது. அதுவுமின்றிப் பூரித்து முழுதும் தங்கப்பெறின் மந்திரவடிவன் ஆவன் என்பது கருத்து.

இதுவும் கனிஷ்டமுறை கூறியதேயாம். இது பிராணுயாமச் சாதக நிலையில் முதற்படியில் நிற்பாரை நோக்கிக் கூறியதாம். (28)

பன்னிரண் டானைக்குப் பகலிர வுள்ளது
பன்னிரண் டானையைப் பாகன் அறிகிலன்
பன்னிரண் டானையைப் பாகன் அறிந்தபின்
பன்னிரண் டானைக்குப் பகலிர வில்லையே. 577

இம் - எனின், பிராணனை வசப்படுத்தின் பிறப்பு இறப்பு இல்லை என்றல் நுதலிற்று.

இ – ள் : பன்னிரண்டானைக்குப் பகலும் இரவும் உள்ளது; அதன் பாகனும் அதனை அறியான்;

பாகன் அறிவானாயின் ஆனைக்குப் பகலும் இரவும் இல்லை யாம் என்றவாறு.

பன்னிரண்டு ஆனை – பன்னிரண்டு மாத்திரை யளவு இயங்கும் பிராணவாயு ஒவ்வொரு மாத்திரை யையும் ஒவ்வோர் யானையாக உருவகித்தார். அடங் காத யானை பழக்கப்படின் அடங்குதல் போலப் பிராணனும் அடங்குதலின் இங்ஙனம் கூறப் பட்டது. பகல் இரவு – தோற்றம் நாசம்; அல்லது அறிவு அறியாமையுமாம். பாகன் – ஆன்மா. (29)

## 6. பிரத்தியாகாரம்

அஃதாவது பிராணனைத் திருப்புதலாம். பிரத்தியாகாரம் – திருப்புதல். தேனைக்குடிக்கும் வண்டானது மணத்தை விரும்பாதது போல நாத தரிசனத்திற் பற்றுள்ள ஆன்மா மாலை மாதர் சந்தனம் முதலிய ஐம்புல இன்பங்களை விரும்பாத நிலையாம். இதனியல்பு பல நூல்களிற் பலவாறு கூறப்பெற்றுள்ளது.

இயல்பாகவே விடய சுகங்களிற் சென்று பற்றும் பொறிகளை வலிந்திழுத்து அடக்கல் எனவும், எதனையும் நீக்கமற நிறைந்த சிவமாகப் பாவித்தல் எனவும் கால், விரல், கரடு கணைக்கால், முழந்தாள், தொடை, பாயு, இலிங்கம், நாபி, இருதயம், கழுத்து, மிடறு, அண்ணம், நாசி, கண், புருவநடு, நெற்றி, சிரம் என்றும் பதினெட்டிடங் களிலும் பிராணனை ஏற்றியும் இறக்கியும் நிலை பெறுத்துதல் எனவும், நித்தியகர்மங்களின் பலத்தைவிடுதல் எனவும் இறப்பு வரையில்

துயரமும சுத்தம் அசுத்தம் அனைத்தையும் சொரூபணமாகச் செய்தல் எனவும், பசுகரணங்களைப் பதிகரணமாக்கல் எனவும், வாயுவை முற்கூறிய பதினெட்டிடங்களிலும் ஓரிடத்திலிருந்து ஓரிடத்திற்கு மாற்றுதலெனவும். சகல விஷயங்களிலும் பராமுகமாயிருத்தல் எனவும், தனது புத்தியையிழுத்துச் சமசித்தம் உள்ளெனுகை வேற்றுமையும் பற்றுமின்றி உயிரினிடமாக நிறுத்துதல் எனவும் நாதபிந்து உபநிஷத், திரிசிகியுபநிஷத், சாண்டில்யோபநிஷத் விஷ்ணுபுராணம் முதலியவைகள் கூறுகின்றன. இவை அனைத்தையும் இணைத்து எண்ணும்போது, பிராணனை நிறுத்துதலே பிரத்தியாகாரம் என்பது பெறப்படும். இது பிராணாயாமத்தின் பின் இயற்றப்படுவதாகலின் அதன்பின் வைக்கப்பெற்றது. இதனைப் பத்து மந்திரங்களான் ஆசிரியர் அறிவிக்கின்றார்.

கண்டுகண் டுள்ளே கருத்துற வாங்கிடிற்
கொண்டுகொண் டுள்ளே குணர்பல காணலாம்
பண்டுகந் தெங்கும் பழமறை தேடியை
இன்றுகண் டிங்கே இருக்கலு மாமே, 578

இ-ம் - எனின், நுண்ணிய இடங்களை அறிந்து, அங்கே வாயுவை நிலைக்கச்செய்க என்றல் நுதலிற்று.

இ - ள் : மர்மத்தானங்களை அறிந்து அங்கங்கே மணம்பொருந்த வாயுவை இருத்தின், பலவகையான நன்மைகளைக் காணலாம். முன்னமே பழமறைகள் விரும்பித் தேடியலையும் சிவபெரு

மானை இக்கணமேயாம் கண்டு இவ்வுலகில் அழிவின்றி வாழலாம் என்றவாறு.

கண்டு கண்டு என்பன முதலிய அடுக்குகள் இடைவிடாமைப் பொருளில் வந்தன. உள்ளே என்றது முற்கூறிய பதினெட்டிடங்களிலும். இங்கே இருக்கலுமாம் என்றது பிரத்தியாகார முறை சிதறிக்கின் அழிவில்லை என்பது அறிவித்தவாறும்.

தேடி - தேடப்படுபவன், இன்று - காலவிரைவுப் பொருளைக் காட்டிநின்றது.

நாபிக்குக் கீழே பன்னிரண் டங்குலந்
தாபிக்கு மந்திரந் தன்னை அறிகிலர்
தாபிக்கு மந்திரந் தன்னை அறிந்தபின்
கூவிக்கொண் டீசன் குடிபுகுந் தானே, 579

இம் - எனின். மூலாதார மந்திரங்களை அறியின் முதல்வன் வெளிப்படுவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : உலகவர் கொப்பூழுக்குப் பன்னிரண்டு விரல் அளவு கீழேயுள்ளதாகிய மூலாதாரத்தில் நிலைபெறுத்தப்பெறுகின்ற மந்திரங்களை அறியார். அந்த மந்திரத்தை அறியின் சிவபெருமான் தானே அழைத்துக்கொண்டு அவ்விடத்தைக் குடியாகக் கொண்டு புகுவன் என்றவாறு.

ஈசன் வேறு கணேசன் வேறன்மையின் விநாயகர் மேவியிருத்தலை ஈசன் குடிபுகுந்தான் என்றார். குடிபுகுதல் - புதிதாகச் சேறலன்று உள்ள

தன் விளக்கமே. மந்திரம் வ ஶ ஷ ஷ என்பன. அன்றிப் பிரணவம் என்றலும் உண்டு.

அறிதல்-தியானத்தல். இந்த வண்ணம் மூலா தாரத் தியானம் செய்வோருக்குக் குண்டலினி ஓசையோடு மேலெழுதலின் கூவிக்கொண்டு ஈசன் குடிபுகுந்தான் என்றார்.

மூலந் திருவிரல் மேலுக்கு முன்னின்ற
பாலித்த யோனிக் கிருவிரற் கீழ்நின்ற
கோலித்த குண்டலி யுள்ளே செழுஞ்சுடர்
ஞாலத்து நாபிக்கு நால்விரற் கீழே. 580

இ-ம் - எனின், சுவாதிட்டான மணிபூரக ஆதாரங் களை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : மூலாதாரத்திற்கு இருவிரலளவு மேலுள்ளதும், முன்னின்றதும், பிறவியைப் பாலிப் பதற்கு ஏதுவானதுமாகிய யோனிக்கு இருவிரல் கீழுள்ளதுமாகிய சுவாதிட்டானத்தில் வட்டமாகச் சுருண்டு கிடக்கிற குண்டலினி சத்தியுள் நாபிக்கு நால்விரல் கீழேயுள்ள இடமாகிய மணிபூரகத்தி னுள்ளே எழுகின்ற செஞ்சுடராகிய தீ விளங்குவ தாம் என்றவாறு.

மூலாதாரத்திற்கு இருவிரல் மேலும், யோ னிக்கு இருவிரல் கீழும் உள்ள யோனிமூலமாகிய இடம் சுவாதிட்டானம் எனப்படும். இது ஆறிதழ்க் கமலம் உடையது; ப ப ம ய ர ல என்னும் ஆறு எழுத்துக்களையுடையது; சிந்தூர நிறமுடையது; இதன் கர்ணிகையில் 'வம்' என்ற அப்புபீஜம்

உள்ளது; அதன் மத்தியில விஷ்ணு விளங்குகிறார், வட்டமாகச் சுருண்டு கிடக்கின்ற குண்டலினி என்றது ஆதிசேஷனாகிய படுக்கையை.

நாபிக்குக்கீழ் நால்விரல் என்றது நாபிமூலத்தின் கீழே நான்குவிரல் அழத்திலுள்ள மணிபூரக சக்கரத்தை, கீழ் என்பது ஆழத்தை உணர்த்திற்று. முன்னைய போன்று கீழ்ப்பகுதியை உணர்த்திற்றன்று. மணிபூரகம் மேகநிறமுள்ள ட ட ண த ய த த ந ப ஃ ய ட ந வ ம என்னும் பத்தெழுத்துக்களையுடைய பத்து இதழ்த் தாமரையுடையது. அதன் கர்ணிகையில் திரிகோண வடிவும். அதன் வெளியில் மூன்று சுவஸ்திகத்தோடு கூடிய சிவந்த அக்கினி மண்டலமும் இருக்கின்றன, அதன்மத்தியில் ரம் என்ற அக்னிபீஜம் இருக்கிறது. உருத்திரன் விளங்குகிறார். இதனையே நாபிக்கு நால்விரற் கீழே உள்ளே செழுஞ்சுடர் என்று குறித்தருளியது.

இவ்வாறு சித்தாந்தசாராவளி, யோகசூடாமணி, ஷட்சக்ரநிருபணம் முதலிய நூல்களைத் துணைக்கொள்ளாதார் தமக்குத் தோன்றியதே கருத்தாகவுரைத்து மரபுபிறழ்வர்; அதன் பொருந்தாமையை இந்த முறைவைப்பொன்றுமே வலியுறுப்பதாகும். (32)

நாசிக் கதோமுகம் பன்னிரண் டங்குலம்
நீசித்தம் வைத்து நினையவும் வல்லையேல்
மாசித்தி மாயோகம் வந்து தலைப்பெய்தும்
தேகத்துக் கென்றுஞ் சிதைவில்லை யாகுமே. 581

இ-ம் — எனின், இதயத்தானமாகிய அநாகத சக்கரத்தில் பிரத்தியாகாரமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: நாசிக்குக்கீழ்ப் பன்னிரண்டு அங்குலம் தூரத்திலுள்ள இதயத்து. நீ மனத்தை நிறுத்தி, தியானித்தலாகிய பிரத்தியாகாரத்தைச் செய்வையாயின். அட்டமாசித்திகளும் ராஜயோகமும் வந்து கூடும்: நீ எடுத்த உடலுக்கு என்றும் அழிவில்லை என்றவாறு.

இதயம் என்றது இதயத்தானத்தில் உள்ளதாகிய அநாகத சக்கரத்தை. இது சிவந்த பன்னிரு இதழ்த் தாமரை வடிவானது. இதழ் ஒவ்வொன்றிலும். கூ வ ழ வ ஊ உ ஊ ஐ ஊ ஞு ட ○ என்னும் பன்னிரண்டு எழுத்துக்களுமுள்ளன. நடுவிலுள்ள கர்ணிகை, புகைநிற அறுகோணவடிவான வாயு மண்டலம் அதன் நடுவில் திரிகோணம். அதன் நடுவில் யம் என்ற வாயுபீஜம் மகேசன் தெய்வமாக விளங்குகிறார். இவ்வண்ணம் அநாகதசக்கரம் உள்ளவர்கள் உடலுக்கு அழிவில்லை என்பதாம். (33)

சோதி இரேகைச் சுடரொளி தோன்றிடிற்
கோதில் பரானந்தம் என்றே குறிக்கொண்மின்
நேர்திகழ் கண்டத்தே நிலவொளி எய்திடில்
ஓதுவ துன்னுடல் உன்மத்த மாமே, 582

இ-ம் - எனின், விசுத்திசக்கர தியானம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சோதிவடிவான சந்திரனது கீற்றுப் போன்ற பிறைவடிவு தோன்றின். குற்றமற்ற மேலான ஆனந்தம் என்றே எண்ணுங்கள். நேராக விளங்குகின்ற கழுத்துத்தானமாகிய விசுத்தியில் நிலாவைப் போலும் ஒளிதோன்றுமாயின், நான் சொல்வது உன் உடல் பரவசமடையும் என்று என்றவாறு.

விசுத்திசக்கரமாவது, கழுத்தினடியில் செந்நிற மான பதினாறிதழ்க்கமலவடிவாய் அ முதல் அஃ வரை பதினாறு உயிர் எழுத்துக்களையுடையதாக விளங்குவது. அக்கமலத்தின் கர்ணிகையில் வட்ட வடிவமான வெண்ணிறமான ஆகாயம் இருக்கிறது. அதன் நடுவில் திரிகோணமும், அதன் நடுவில் சந்திரமண்டலமும், அதன்மேல் ஹம் என்னும் ஆகாய பீஜமும் உள்ளன. அதன் நடுவில் சதாசிவ மூர்த்தி விளங்குகிறார். அவர் சிரத்தில் பிறைமதி அமுததாரையைப் பொழிந்து கொண்டே விளங்குகிறது.

இந்த அமைப்பைக்கொண்டு இந்த மந்திரத்தை ஆராயின், சுடர்சோதி இரேகை ஒளி தோன்றிடின் என்றது சந்திரமண்டல நடுவிலுள்ள சதாசிவ மூர்த்தியின் சிரத்திலுள்ள பிறைமதியையுணர்த் தும்; அஃதறியப்படவே பரானந்தானுபவமாம் என்பது கருத்து. அடுத்து கண்டத்தே நிலவொளி என்றது பதினாறிதழ்க் கமலத்தின் நடுவில் விளங் கும் சந்திர மண்டலத்தை உணர்த்தும்; அதனைத் தரிசிக்கவே விசுத்தி தரிசனம் முழுதுமாம்; ஆகவே பரவசம் எய்தும் என்பதாம். (34)

மூலத் துவாரத்தை முக்கார மிட்டிரு
மேலைத் துவாரத்தின் மேல்மனம் வைத்திரு
வேலொத்த கண்ணை வெளியில் விழித்திரு
காலத்தை வெல்லுங் கருத்திது தானே. 583

இ-ள் - எனில், ஆஞ்ஞாசக்கர தியானமாகிற பிரத்தியாகாரம் சொல்லுதல் நுதலிற்று.

இ-ள்: மூலாதாரத்தை அடைத்துக் கொண்டிரு; பிரமரந்திரத்தின்மேல் மனத்தைப் பதித்துவை. வேல்போலுங் கூரிய கண்ணை விழித்தபடியிரு; இது தான் காலத்தை வெல்லும் உபாயமாம் என்றவாறு.

புருவ நடுவிலுள்ள ஆஞ்ஞாசக்கரம், சித்ரவர்ண முள்ள ஹ, க்ஷ என்னும் இரண்டு எழுத்துக்களை யுடைய ஈரிதழ்க் கமலவடிவாய் வெண்மையாயிருப் பது. அதன் கர்ணிகையில் வெண்தாமரையின்மேல் ஹாகினிசக்தி இருக்கிறது. அதற்கு மேல் திரிகோணம். அதில் மின்னல்வடிவமான இதர என்னும் லிங்கம். அதற்கு மேல் திரிகோணத்தில் பிரணவ வடிவான ஆன்மா தீபசோதியாக விளங்கு கிறது. அதன் நான்கு பக்கங்களிலும் பொறிபோல் விளங்கும் எரிகின்ற விளக்குப்போன்ற மூல முதல் பிரமரந்திரம் வரை பிரகாசிப்பதான சோதி விளங்குகிறது. அதன் நடுவில் சிவசத்திகள். இதன் குறிப்பையே சோதி மூலாதாரத்தினின்றும் கீழ்ப் போகாதவாறு மூலாகாரத்தை அடைத்திடு என முதலில் அறிவித்தருளியது. பிரமரந்திரம்வரை வியாபித்திருக்கும் என்பதை மேலைத்துவாரத்தின் மேல் மனம் வைத்திரு என்றது, மனஞ்சலியாமல்

பிரத்தியாகாரம் செய்க என்பதை விளக்கக் கண்ணை வெளியில் விழித்திரு என்றருளியது.

வெளி - துவாதசாந்தப் பெருவெளி. முக்கார மிடுதல் - அடைத்தல், (35)

எருவிடும் வாசற் கிருவிரல் மேலே
கருவிடும் வாசற் கிருவிரற் கீழே
உருவிடுஞ் சோதியை உள்கவல் லார்க்குக்
கருவிடுஞ் சோதி கலந்துநின் றானே. 584

இ - னின் இதுவும் மூலாதார பிரத்தியா காரம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மலங்கழிக்கும் வாயிலாகிய குதத்திற்கு மேலே இருவிரலும் கருவுண்டாக்கும் வாயிலாகிய கோசத்திற்கு இருவிரல் கீழுமுள்ள மூலாதாரத்தில் உருவுகொள்ளும் சோதிவடிவாகிய இறைவனைத் தியானிக்க வல்லார்க்குப் பிறவியை ஒழிக்கும் பெருமான் ஒளிவடிவாக உயிருட் கலந்து நின்றான் என்றவாறு.

எரு — மலம். கரு இடும் — கரு உற்பத்தி செய்யும், கருவிடும் — பிறவியை ஒழிக்கும். கரு என்றது ஆகு பெயர். இம்மந்திரம் மூலாதாரத்து முளைத்தெழுஞ்சோதி உள்கவல்லார்க்குப் பிறவி யில்லை ; பெருமான் வெளிப்பட்டருளுவார் என்பதாம். (36)

ஒருக்கால் உபாதியை ஒண்சோதி தன்னைப்
பிரித்துணர் வந்த உபாதிப் பிரிவைக்
கரைத்துணர் வுன்னல் கரைதல்உள் நோக்கல்
பிரத்தியா காரப் பெருமைய தாமே. 585

இ-ம்-எனின், பிரத்தியாகாரத்தினியல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: துன்பந்தருவதாகிய மாயையையும், ஒள்ளிய சோதியாகிய இறைவனையும், பிரித்து உணர்தலைக் கைவரப்பெற்ற மாயையினின்றும் பிரிந்ததாகிய ஆன்மாவையும் கரையச்செய்து, உணர்தலும், தியானித்தலும், தன்மைகெடுதலும், ஆதாரங்களிலும் நிராதாரத்தும் வைத்து நோக்குதலும், பிரத்தியாகாரத்தின் பெருமையாம் என்றவாறு.

இம்மூன்றையும் கரைத்துணர்வாவது, தலைவனை அறியாது மாயையால் மறைப்புண்டு கிடக்கும் ஆன்மா அந்நிலையைக் கெடுத்து மாயைதனைச்சுட்டு வல்வினையைத் தேய்த்து மலவாதனையைக் கெடுத்துத் தலைவனை அறிதல்.

உன்னல் - இடைவிடாது தியானித்தல். கரைதல் - தற்போதமிழத்தல். உள்நோக்கல் - பதியை உள்ளே காணல். அதாவது நித்திய வஸ்துவாகிய நிமலனை உணர்வில் அறிதல், உபாதிப்பிரிவு - ஆன்மா ; மாயையிற்றோய்ந்த நிலையினின்று பிரிந்து நிற்கின்ற ஆன்மா. (37)

புறப்பட்ட வாயுப் புகவிடா வண்ணந்
திறப்பட்ட நிச்சயஞ் சேர்ந்துடன் நின்றால்
உறப்பட்டு நின்றது உள்ளமும் அங்கே
புறப்பட்டுப் போகான் பெருந்தகை யானே. 586

இ - ளின், பன்னிரண்டங்குலமும் உள்ளே கும்பிக்கச்செய்யின் மனம் ஒருங்கும்; மகேசன் என்றும் விளங்கிநிற்பன் என்றல் நுதலிற்று.

இ - ள் : வெளிச்செல்லப் புறப்பட்ட பிராண வாயுவை மீளவும் புகமுடியாதபடி தடுத்து நிறுத்தின் மனமும் ஒன்றி நிலைபெற்றதாம்; அவ்விடத்துப் பெருந் தகுதியாளுகிய இறைவனும் புறப்பட்டுப் போகானாய் என்றும் விளங்குவன் என்றவாறு.

புறப்பட்ட வாயு—நிச்சுவாசவழியாக வெளியே செல்லப் புறப்பட்ட நால்விரல் அளவுள்ள பிராணன். புகவிடாவண்ணம் திறப்பட்ட நிச்சயம் சேர்ந்துடன் நின்றால் - வெளிச்சென்று மீளவும் புகவிடாவண்ணம் மிக உறுதியாகக் கும்பித்து நிற்கின். திறம்பட எனற்பாலது எதுகைநோக்கித் திறப்பட்ட என விரிந்தது. திறப்பட்ட நிச்சயம் ஒருபொருட் பன்மொழிகள். உள்ளமும் அங்கே உறப்பட்டு நின்றது - மனம் ஒருங்கிநின்றது (38)

குறிப்பினின் உள்ளே குவலயந் தோன்றும்
வெறுப்பிருள் நீங்கி விகிர்தனை நாடும்
சிறப்புறு சிந்தையைச் சிக்கென் றுணரில்
அறிப்புறு காட்சி அமரரு மாமே. 587

இ-ளின், பிரத்தியாகாரப் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: குறித்து நிறுத்துதலாகிய பிரத்தியாகாரத்தில் உலகம் முழுவதுமே இருந்தநிலையிலிருந்து அறியப்படும். வெறுக்கத்தக்க இருளாகிய அவித்தை கெட்டுப் பரசிவத்தை விரும்பும் சிறப்புற்ற மனத்தால் உறுதியாக உணர்ந்தால் சிவஞானம் பொருந்திய தேவர்களுமாவன் என்றவாறு.

ஆன்மா நாடும். ஆம் என எழுவாய் ஒன்று வருவித்து முடிக்க.

குறிப்பு - ஆறு ஆதாரங்களிலும், அதற்குமேல் துவாதசாந்தப் பெருவெளியிலும் குறித்து நிற்றல். குவலயம் தோன்றலாவது இருந்தநிலையினின்றே எல்லாவற்றையும் அறிதல்.

வெறுப்பு இருள் - வெறுக்கத்தக்க அவித்தை. அது ஆணவத்தின் காரியமாதலின் அது நீங்கும். எனவே ஆணவ வலி குன்றும் என்றதாம். இவ்வண்ணம் ஆணவ வலி குன்றிய நிலையே ஆன்மாவிற்குச் சிறப்பு ஆதலின் சிறப்புறு சிந்தை எனப்பட்டது. சிந்தையுணரில் - சிந்தையால் உணரில் அறிப்பு -அறிதல்; தொழிற்பெயர்.

அமரர் ஆம் என்றது என்றும் அழியாத இறப்பற்ற நிலை எய்துவர் என்றதாம். இங்ஙனம் ஆணவம் குன்றிச் சிவஞானம் சேர்ந்தார்க்குத் தேவராதல் சிறிய நிலையாதலானும், தேவரும்

எம்போற் சகலரேயாதலானும். தேவர் என்பது ஈண்டு விளக்கமுடையார் மரணமில்லாதார் என்ற காரணக்குறியாய், பிறப்பு இறப்பில்லார் பெருநிலை எய்துவர் என்பதே பொருளாதல் வேண்டும் (39)

## 7. தாரணை

தாரணையாவது தரிக்கச்செய்தல் ; நிலைபெறச் செய்தல் என்பது கருத்து. பிராணுயாமம் விதிப்படி பன்னிரண்டு செய்யின் பிரத்தியாகாரமாகிய ஓட்டற்ற மனம் உண்டாகும். அது பன்னிரண்டு செய்யின் தாரணையாம்.

இதனை,

प्राणायामद्विषट्केन प्रत्याहार उदाहृतः ।
प्रत्याहारद्विषट्केन धारणा परिकीर्तिता ॥

என்ற மகாஸ்காந்த சுலோகத்தாலும் உணர்க, மேலும்.

धारणाद्वादशायामा ध्यानंद्वादशधारणम् ।
ध्यानद्वादशकं यावत् समाधिरभिधीयते ॥

என்ற இலிங்கபுராண வாக்கியமும் இதனை வற்புறுத்தும், மற்றும் யோகசூடாமணியில், மூன்று நொடியளவுள்ள காலம் மாத்திரை ; மாத்திரை பன்னிரண்டு கொண்ட காலம் பிராணுயாமம் எப்போது நிலைக்கிறதோ அப்போது பிராணன் பிரமரந்திரம்வரை செல்கிறது ; பிரமரந்திரத்தை அடைந்த பிராணன் இருபத்தைந்து விபலம்

வரையில் நிலைத்தால் அது பிரத்தியாகாரமாம்; ஐந்து நாழிகைவரை நிலைத்தால் தாரணையாம்; அறுபது நாழிகை நிலைத்தால் தியானமாம்; பன்னிரண்டுநாள் நிலைத்தால் சமாதியாம் என்று கூறப்பெற்றுள்ளமையுங் கண்டுச் சிந்திக்க.

धारणापञ्चनाडीभि ध्यानंस्यात् षष्ठिनाडिका।
दिनद्वादशकेनस्यात् समाधिः प्राणसंयमात्॥

என்னும் வாக்கியம் இதற்குப் பிரமாணமாம் என்க

கோணா மனத்தைக் குறிக்கொண்டு கீழ்க்கட்டி
வீணாத்தண் டூடே வெளியுறத் தாக்கிக்
காணாக்கண் கேளாச் செவியென் றிருப்பார்க்கு
வாணாள் அடைக்கும் வழியது வாமே. 588

இ-ம் – எனின், தாரணை இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இந்திரியத்தின் வயப்பட்டு, கோணாத மனத்தைக் குறிப்பாக நிறுத்தி கீழ்நோக்காத வண்ணம் தடுத்து, வீணாத்தண்டுள்ளாகவே பரவெளியைப் பார்த்து, காணாத கண்ணும், கேளாத செவியும் ஆக இருப்பார்க்கு வாழ்நாளாகிய ஆயுள் அழியாமே அடைக்கும் உபாயம் அதுவாம் என்றவாறு.

கோணா மனம் - விஷயங்களிற் சென்றுபற்றிக் கோணாத மனம். குறிக்கொண்டு கீழ்க்கட்டுதலாவது

பிரத்தியாகாரத்தில் பிரமரந்திரத்து நிறுத்திய நிலையினின்று கீழ்நோக்காதவாறு விழிப்பாக (கவனமாக) தடுத்து நிறுத்தி என்பதாம்.

வீணாத்தண்டு - முதுகந்தண்டு. இடகலை பிங்கலைகள் முதுகந்தண்டின் இருபுறமும் பின்னிச் செல்லச் சுழுமுனை முதுகந்தண்டின் உட்புறமாக விளங்குதலின் வீணாத்தண்டூடே நோக்கி என்றார். வெளியுற - அங்ஙனம் நடுநாடியின் வாயிலாகப் பரவெளியைப் பார்த்து. பரவெளி - சிதாகாசம். அங்ஙனம் இருப்பார்க்குக் கருவிகரணங்கள் காரியப் படாமையின் கண் விழித்திருந்தாலும் புலன் சென்று பற்றாது; காதுகளில் பல வொலிகள் வந்து வீழ்ந்தாலும் சிந்தையிற் செல்லாது; ஆதலின் காணாக்கண் கேளாச்செவியென்று இருப்பார் என்றார். "விழித்த கண் குருடாய்த்திரியும் வீரர்கள் பலரால்" என்றதும் நோக்குக. தானே சென்று புலன்களைப் பற்றுவதாகிய கண்ணையும், புலன்கள் வந்துபற்றக் கொள்வதாகிய செவியை யும் கூறவே இத்தன்மையுடைய ஏனையபொறிகளும் காரியப்படா என்பது குறிப்பித்தவாறும். வழி - உபாயம். (40)

மலையார் சிரத்திடை வானீர் அருவி
நிலையாரப் பாயும் நெடுநாடி யூடுபோய்ச்
சிலையார் பொதுவில் திருநட மாடுந்
தொலையாத ஆனந்தச் சோதிகண் டேனே. 589

இம் — எனின். தாரணையாற் சோதி தரிசனம் கிடைத்தது என்றல் நுதலிற்று.

இ - ள் : மேருமலையினுச்சியினின்று வழிகின்ற தேவகங்கை எப்போதும் பாய்ந்துகொண்டே யிருக்கின்ற சுழுமுனை நாடியின் வழியாகச்சென்று பரநாத வொலியோடு கூடிய சிற்சபையில் ஆனந்தக் கூத்து ஆடுகின்ற சச்சிதானந்தச் சோதியைத் தரிசித்தேன் என்றவாறு.

உடலை மேருமலையென்றல் சித்தர் மரபு. சித்தர் நூலில் அமுரிகற்பத்தும் இக்கருத்தைக் காணலாம். வானீர் அருவியென உருவகித்தது பரமாகாயத்தி லுள்ள சகத்திரதள பதுமத்தினின்று பெருகும் அமுத நீரை. சிலை ஆர் பொது – ஒலிபொருந்திய மன்று. ஒலியாவது பரநாத ஓசை. அது தண்ணுமை சங்கு பிரணவம் இவற்றின் ஒலிபோன்றது சிலை முதனிலைத் தொழிற்பெயர். (41)

மேலை நிலத்தினுள் வேதகப் பெண்பிள்ளை
மூல நிலத்தில் எழுகின்ற மூர்த்தியை
ஏல எழுப்பி இவளுடன் சந்திக்கப்
பாலனும் ஆவான் பார்நந்தி ஆணையே. 590

இம் - எனின், தாரணைமுறையை ஓர் உருவக வாய்பாட்டால் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: துவாதசாந்த நிலத்திலுள்ளவள் ஞான வடிவான சத்தி. மூலாதாரத்திலிருந்து எழுகின்ற இறைவனைப் பொருந்த எழுந்தருள்வித்துச் சத்தி யுடன் கூடச்செய்தால் அங்ஙனம் செய்பவன் என்றும் இளையோனாவன் ; சிவன்மேலாணை என்றவாறு.

பெண் பராகாய வெளியிலும், பிள்ளை மூலா தாரமாகிய அடிநிலையிலும் உள்ளனர்; இருவரையும் சந்திக்கச்செய்யின் செய்பவனுக்கு மாறா இளமை விளையும் என உருவக அணி அமைய ஓதியிருத்தல் காண்க.

வேதகம்—ஞானம். வேதம் – வேதகம். பாலன் பாலகன் ஆனாற்போல 'க' மிகுதியை விளக்கு வதோர் விகுதியாம். வேதகப் பெண்பிள்ளை சித்சத்தி. (42)

கடைவாசலைக் கட்டிக் காலை எழுப்பி
இடைவாசல் நோக்கி இனிதுள் இருத்தி
மடைவாயிற் கொக்குப்போல் வந்தித் திருப்பார்
உடையாமல் ஊழி இருக்கலு மாமே. 591

இ – ளின், இதுவுமது.

இ–ள்: மூலாதாரத்தை அடைத்து பிராண வாயுவால் அங்கிருக்கின்ற குண்டலினியை எழுப்பி, நடுவழியாகிய சுழுமுனையால் தாரணை செய்து நீரோடுகின்ற மடைவாசலிற் காத்திருக்கின்ற கொக்கைப் போல வணங்கி இருப்பவர்கள், ஊழிக் காலம்வரை அழியாமல் இருக்கலாம் என்றவாறு.

கடைவாசல் – மூலாதாரம். கால் – பிராணன், இடைவாசல் – நடுவழியாகிய சுழுமுனை. இருத்தி – தாரணைசெய்து. மடைவாயின் கொக்கு, ஓடுமீனோடு உறுமீன் வருமளவும் வாடியிருப்பதுபோலப் பொறி புலன்களை மடக்கியிருப்பார்க்கு அழிவில்லை என்று உணர்த்தியவாறும். (43)

கலந்த உயிருடன் காலம் அறியில்
கலந்தலை யாது காலின் நெருக்கங்
கலந்த உயிரது காலது கட்டிக்
கலந்த உயிருடன் காலமும் நிற்குமே. 592

இம் - எனின், பிராணதாரணை செய்வதின் பயனுணர்த்துதல் நுதலிற்று

இ - ள் : உயிரோடு கலந்தியங்குகின்ற பிராண வாயுவை அறியின், மனம் பொறி வழியாகப் புலன்களிற் சென்றுபற்றி அலையாமல், பிராணவாயுவின் கும்பகத்தால் சோதியோடு கலந்த ஆன்மாவாம். அங்ஙனம் பிராணவாயுவைத் தடுத்துச் சிவத்தோடு கலந்த உயிருடன் காலதத்துவமும் கட்டுப்பட்டு நிற்கும் என்றவாறு.

இதுவரை வந்துள்ள பல சிறந்த பதிப்புக்களிலும், ஏட்டிலும் 'கலந்த உயிருடன் காலமும் நிற்குமே' என்ற பாடமே காணப்படுதலின் அதற்கேற்ப உரை காணப்பெற்றது. உயிருடல் எனப் பாடந்திரித்துத் தோன்றியவாறே கண்ணழித்து உரை வகுப்பாரும் உளர்.

கலந்த உயிருடன் என்பதை உயிருடன் கலந்த என மாறுக. காலம் என்பதில் அம் தவிர்வழி வந்த சாரியை. கால் - காற்று; என்றது ஈண்டுப் பிராண வாயுவை. அதாவது உயிரோடு கலந்து உச்சுவாச நிச்சுவாசமாக இயங்குகிற பிராணவாயுவை.

கலந்து அலையாது: மனம் புலன்களிற் கலந்து வருந்தாமல், என, மனம் என்ற எழுவாயும்,

இடனும் வருவித்துரைக்க. காலின் நெருக்கம் - பிராணவாயுவின் நெருக்கம்; அதாவது கும்பகம். கும்பகத்தால் சிவத்தோடு கலந்த உயிராம் என்க. ஆம் என ஒரு சொல் வருவித்து முடிக்க. உயிரது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. உயிராகிய அதுவாம் எனலுமாம்.

காலது கட்டி – பிராணனைக் குட்பித்து. கலந்த–சோதியோடு கலந்த. உயிருடன் - ஆன்மாவினுடன் காலம் நிற்கும் - காலதத்துவம் கட்டுப் பட்டு நிற்கும்; அதாவது அவற்கு மரணமில்லை என்றவாறும்.

வாய்திற வாதார் மனத்திலோர் மாடுண்டு
வாய்திறப் பாரே வளியிட்டுப் பாய்ச்சுவர்
வாய்திற வாதார் மதியிட்டு முட்டுவர்
கோய்திற வாவிடிற் கோழையு மாமே. 593

இம் - எனின், இதுவுமது,

இ - ள் : வாய்திறவாமல் மௌனமாக இருப்பவர் மனத்தில் ஓர் செல்வம் உண்டு. அங்ஙனமன்றிக் காற்றை வெளிப்படுத்திப் பாய்ச்சுபவர்கள் இறப்பவர்கள் ஆவார்கள். மௌனமாக இருப்பவர்கள் சந்திர மண்டலம்வரை பிராணனைச் செலுத்தி, மூலாதாரத்திலுள்ள குண்டலியைப் பிரமரந்திரம்வரை முட்டுபவர். குண்டலி அடங்கியுள்ள செப்பாகிய மூலத்தைத் திறவாவிடில் அவர் கோழைத்தனம் உள்ளவராவர் என்றவாறு.

வாய்திறவாதார் – மௌனமாக இருப்பவர்கள். பிராணன் வெளிவரும் வாயிலாகிய மூக்கை எனலுமாம் ஆகவே கும்பகம் செய்வார் என்பது கருத்து. மாடு - செல்வார். வளியிட்டு - பிராணனை வெளிப்படுத்தி. பாய்ச்சுவர் - பாயச்செய்பவர்கள்; என்றது நிச்சுவாசம் செய்பவர்கள் என்றவாறும்.

வாய்திறப்பார் - இறப்பார்கள் என்பதாம். இறந்தார்களை வாய்விட்டார் வாய்பிளந்தார் என்றல் உலகியல். மதியிட்டு முட்டுவார் - மூலத்திலிருந்து ஆஞ்ஞைவரையில் மூலக்கனலை முட்டவிடுவார். இதனை 'மேலை நிலத்தினள்' (590) என்ற மந்திரத்தானும் அறிக. மூட்டுவர் எனவும் பாடங்கொண் டுரைப்பர்.

கோய் - செப்பு; என்றது ஈண்டு மூலாதார முடிச்சை. முடிச்சு - கிரந்தி. கோழையும் ஆம் – வீரம் அற்றவனுவன் (45)

வாழலு மாம்பல காலும் மனத்திடைப்
போழ்கின்ற வாயு புறம்படாப் பாய்ச்சுறின்
ஏழுசா லேகம் இரண்டு பெருவாய்தல்
பாழி பெரியதோர் பள்ளி அறையிலே. 594

இ - னின், தாரணை செய்யின் நெடுங்காலம் வாழலாம் என்றல் நுதலிற்று.

இ – ள்; உள்ளத்தினின்று புறப்பட்டு வெளியே போழ்ந்து கொண்டு செல்கின்ற பிராணனை அங்ஙனம் செல்லவிடாமல் அகமுகமாக நடுநாடியிற் பாய்ச்சினல் ஏழு சாளரங்களையும்,

இரண்டு பெரிய வாயில்களையும் உடைய குகையி லுள்ள பெரிய ஒப்பற்ற பள்ளியறையில் பலகாலம் வாழலாம் என்றவாறு.

பாய்ச்சுறின் பாழி பள்ளியறையில் பலகாலம் வாழலாம் எனக் கூட்டிப் பொருள்கொள்க.

போழ்தல் – இழித்துக்கொண்டு ஊடறுத்துப் புறப்படுதல். பிராணன், நெஞ்சினின்று வேகமாகப் புறப்படுதலின் மனத்திடைப் போழ்கின்ற வாயு என்றார் பாய்ச்சுறின் என்றவிடத்து, சுழுமுனை யில் என ஒரு சொல் வருவித்து இயைக்க.

சாலேகம் – பலகணி. ஜன்னல் என இக்காலை வழங்குவது. 'சாலேகம் சாரநட' என்று பழம் பாடலிலும் சாலேகம் இப்பொருட்டாதலைக் காணலாம். சாலேகம் இக்காலைச் சாலகமென மரீஇ யிற்று. அவை ஏழாவன கண் இரண்டு, காது இரண்டு, மூக்குத்துளை இரண்டு, வாயொன்று ஆக இவை. இரண்டு பெருவாயில் - கருவாயும் எருவா யும் ஆகிய வாயில்கள். இடகலை பிங்கலையாகிற நாடிகள் என்பாருமுளர்.

பாழி - குகை. அரதைப் பெரும்பாழி என்றதை யும் உன்னுக. பாழி என்றது உடலை. பள்ளியறை என்றது மேலைநிலத்திலுளாகிய வேதகப் பெண் பிள்ளையும், மூலநிலத்தில் எழுகின்ற மூர்த்தியும் சந்திக்கு மிடமாகிய சகத்திராரத்தை. உள்ளம் என்பாருமுளர். மனத்திடைப் போழ்கின்ற என்ற மையின் மீட்டும் உள்ளம் பள்ளியறையாகாமை யுணர்க.

நிரம்பிய ஈரைந்தில் ஐந்திவை போனால்
இரங்கி விழித்திருந் தென்செய்வை பேதாய்
வரம்பினாட் கோலி வழிசெய்கு வார்க்குக்
குரங்கினைக் கோட்டைப் பொதியலு மாமே. 595

இ-ளின், தாரணையால் மனமடங்கும் என்ப துணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: நிரம்பிய பத்து வாயுக்களில், ஐந்து வாயுக்கள் கழிந்தால், பேதையே, நீ இரங்கி விழித் திருந்து என்செய்வாய்! அளவுபடுத்திச் சுழுமுனை வழியாக இயங்கச் செய்வார்க்குக் கோட்டையில் குரங்கை அடக்கி வைத்தலுமாம் என்றவாறு.

நிரம்பிய ஈரைந்து - தன்னாற்றலில் நிரம்பிய பத்துவாயுக்கள். அவையாவண பிராணன், அபானன் வியானன், உதானன், சமானன், நாகன். கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்பன. ஐந்தென்றது முதற்கண் கிடந்த ஐந்து வாயுக்களை. இவை பஞ்சப்பிராணன் எனவும்படும். தாரணைப் பயிற்சியின்றி வறிதே கழியின் என்செய் வாய் என இரங்கிக் கூறுகின்றார் என்செய்வை பேதாய் என. வரம்பு - பன்னிரண்டும். பதினாறும், முப்பத்திரண்டும் ஆதியாய மாத்திரை வரம்புகள், கோலுதல் – கட்டுதல், குரங்கு – மனம்; உவமவாகு பெயர், கோட்டை என்றது உடலை. (47)

முன்னம் வந்தனர் எல்லாம் முடிந்தனர்
பின்னை வந்தவர்க் கென்ன பிரமாணம்
முன்னுறு கோடி உறுகதி பேசிடில்
என்ன மாயம் இடிகரை நிற்குமே. 596

இ-ம் - எனின், தாரணை செய்கவென வற்புறுத்துதல் நுதலிற்று.

இ-ள் : முன்னே பிறந்தவர்கள் அனைவரும் இவ் வியோகவழி நில்லாமையினால் இறந்தனர். பின்னே வந்தவர்கட்கு இறப்பில்லையென்பதற்கு ஏதாயினும் ஓர் பிரமாணம் உண்டோ? இறந்தவர்கள் எய்த இருக்கும் கோடிக்கணக்கான நிலைகளைப்பேசின், எவ்வளவு பெரிய வியப்பு! இடிகரை நிற்குமா? என்றவாறு.

இம்மந்திரம், உலகமே சதம், எடுத்தவுடலே நித்யம் என்றிருப்பாரை விளித்து, உனக்கு முன்னே வந்தவர்கள் எத்துணைப்பேர் சிவயோகப் பயிற்சி இல்லாமையால் செத்தொழிந்தனர்; பின்னே வந்தவர்கள் இருப்பார்கள் என்பதற்கு என்ன பிரமாணம்; இறந்தார்கள் எய்தும் கதியை எண்ணின் எண்ணப்படுகிற கோடிக் கணக்காகும்; இது என்னவிந்தை! எங்காவது இடிகரை நிற்குமா? என்று உண்மை உபதேசித்ததாக அமைந்துள்ளது.

பிரமாணம் - நூலளவை; எடுத்துக்காட்டாகிய ஆதாரம். கோடி என்பது "எண்பதுகோடி நினைந்து எண்ணுவன" என்புழிப்போல பல எனும் பொருட்டாய் நின்றது. உறுகதி பேசிடில் முன்னுறு கோடியென மாறுக. முன்னுறுதல் - எண்ணுதல். முன்னூறு என்பதன் திரிபுமாம். இடிகரைபோல்வது இவ்வுடல்; எக்கணமும் அழியலாம் என்பதாம். ஆதலால் தாரணை செய்து நீடுவாழ்க என அறிவுறுத்தியவாறு. "என்ன மாமாயம்" என்பது பாடம். (48)

அரித்த வுடலை ஐம் பூதத்தில் வைத்துப்
பொருத்தலும் பூதஞ்சித் தாதியிற் போந்து
தெரித்த மனாதிசத் தாதியிற் செல்லத்
தரித்தது தாரணை தற்பரத் தோடே. 597

இ-ள் - என்னின், ஞானயோகதாரணை இதுவென்றல் நுதலிற்று.

இ-ள்: புலன்களால் அரிக்கப்பட்டவுடலை ஐம் பூதங்களில் ஒடுக்கி, அவ்வைம் பூதங்களையும் சித்தம் முதலானவற்றில் போந்து ஒடுக்க, ஆராயப்பெற்ற அம்மனம் முதலிய அகக்கருவிகள் நான்கும் சத்தம் முதலான தன்மாத்திரை ஐந்தில் ஒடுங்க, ஆன்மா தனித்துத் தற்பரப்பொருளாகிய சிவத்தோடு ஒன்றியிருப்பதே தாரணையாம் என்றவாறு.

'முன்னமே' என்றதுவரை சிவயோக மார்க்கத்தில் தாரணை சொல்லிவந்த ஆசிரியர் திருமூலதேவ நாயனார் இம்மந்திரத்தால் ஞானயோக தாரணை உணர்த்துவான் எடுத்து, உடல் முதலியவற்றின் ஒடுக்கத்தை முறையே சொல்லி, தேகேந்திரிய கரணங்கள் அழிந்து சிவத்தோடு சீவன் ஒன்றி யிருத்தலே தாரணை என்று அருளியது காண்க.

அரித்த உடல் - புலன்களாகிய சுறவால் அரித்துத் தின்னப்பட்ட உடல். வைத்து, போந்து, எரித்த, செல்ல என்பன ஒடுக்கி என்ற பொருளில் வந்தன. ஐம்பூதம் - மண் புனல் அனல் கால் வெளி என்பன. சித்தாதி - சித்தம், புத்தி, அகங்காரம், மனம் என்பன. சத்தாதி-சத்த பரிச ரூபரச கந்தம் என்பன.

## 8. தியானம்

தியானமாவது ஒன்றையே உன்னுதலாம். முற் கூறியாங்கு ஒன்றில் நிலைத்த உள்ளம், வேறொன்றி லும் சென்று பற்றாது. பற்றற்றான் பற்றினையே பற்றி நிற்குமாயின் அது தியானமாம். தாரணை செய்யப்பட்ட விடயத்தில் ஒன்றியிருக்கும் நிலையே தியானம் என்னும் கருத்து அடங்கிய

तत्रप्रत्येकतानताध्यानम्।

என்னும் பாதஞ்சலயோக சூத்திரமும் ஈண்டு இணைத்து எண்ணற்குரியது. மகேசுரனை வேறற்ற நிலையிலிருந்து தியானிப்பது எனவும். பிரமத்தை இரண்டற்ற நிலையால் தியானிப்பது எனவும், சாண்டில்யமும் யோக தத்துவமும் சொல்லுகின் றன. இது சகுணத்தியானம், நிர்க்குணத்தியானம் என இருவகைப்படும். சகுணத் தியானமாவது மூர்த்தியைத் தியானித்தல். நிர்க்குணத் தியானமா வது ஞானசொரூபியாயிருக்கும் பரசிவத்தைத் தியானித்தல். சகுணத்தியானம் சித்தித்தால் நிர்க் குணத்தியானம் சித்திக்கும் எனச் சிவபுராணத்தில் கூறப்பெற்றுள்ளது.

स्थूलेतु निश्चलं चेतो भवेत्सूक्ष्मेतु सुस्थितम्।

இத்தகைய தியானத்தை இருபது மந்திரங் களால் உணர்த்தியருளத் தொடங்கினார் ஆசிரியர்.

வருமாதி யீரெட்டுள் வந்த தியானம்
பொருவாத புந்தி புலன்போக மேவல்
உருவாய சத்தி பரத்தியான முன்னும்
குருவார் சிவத்தியானம் யோகத்தின் கூறே. 598

இ - ளின், தியானத்தின் வகையினை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : தாரணையிற் கூறிப்போந்த பதினாறில் நிலைத்த தியானமாவது, ஒப்பற்ற புத்திதத்துவம் புலன்களையும் அவற்றால் எய்தும் போகங்களையும் கடந்து நிற்றலாம். அது உருவாகிய சத்தியைத் தியானித்தலாகிய பரத்தியானமும், குருவடிவாக எண்ணப் பெறும் சிவத்தியானமும் ஆகிய இவைகள் யோகத்தின் இருகூறுகளாம் என்றவாறு.

ஆதிவரும் ஈரெட்டு எனமாறுக. ஆதிவரும் - முற்கூறப்பட்ட. ஈரெட்டு - இரண்டும் எட்டுமாகிய பத்து மந்திரங்களால். வந்த - பெற்றதியானம் என்க பத்து மந்திரங்களானும் பெறப்பட்ட தாரணையின் முதிர்ச்சியாகிய தியானம் என்பது கருத்து. இங்ஙனமன்றிப் பூதம் ஐந்து, புலன் ஐந்து கரணம் நான்கு, மாயை ஒன்று, ஆன்மா ஒன்று ஆகப் பதினாறு என்பாரும் உளர்.

பொருவாத புந்தி ; தியானப் பொருளை வேறொன்றோடு வைத்து ஒத்துநோக்காத புத்தி என விசேடித்தது ஒத்துநோக்கின் இருபொருள் எண்ணப்பட்டுத் தியானம் நிலைக்காதாம் ஆதலின் என்க. புலன் போகம் - உம்மைத்தொகை. புலன்களையும் அவற்றால் எய்தும் போகங்களையும். மேவல்

என்பது குமரன் சூரபன்மனை மேவினன் என்புழிப் போல வெல்லுதல் என்னும் பொருளில் வந்தது.

உருவாய சத்தி : இறைவனது அறிவாற்றலை உருவாகத் தியானித்தல். அது பரத்தியானமாம். தனு கரண புவன போகங்களில் ஒன்றியிருத்தலைக் காட்டிலும் இதுமேலானதாகலின் பரத்தியான மாயிற்று. இது சகளத்தியானமாம். ஞானமே வடிவான குருவாய் முன்னும் தியானம் சிவத் தியானமாம் என்க. இது நிஷ்களத் தியானமாம். (50)

கண்ணுக்கு மூக்குச் செவிஞானக் கூட்டத்துட்
பண்ணுக்கி நின்ற பழம்பொருள் ஒன்றுண்டு
அண்ணுக்கின் உள்ளே அகண்ட ஒளிகாட்டிப்
புண்ணுக்கி நம்மைப் பிழைப்பித்த வாறே. 599

இம் - எனின், தியானத்தினுறுபயன் உணர்த் துதல் நுதலிற்று.

இ — ள் கண், நாக்கு, மூக்கு செவி முதலாய ஞானேந்திரியக் கூட்டமாய உடலுள் நாதத்தைச் செய்வதாய பழமையான பரம்பொருள் ஒன்றுண்டு. அது அண்ணுக்கினுள்ளே எல்லையற்ற பேரொளி யைத் தரிசிக்கச் செய்து, நம்மை வருத்தி, உய்வித்த வண்ணம் இதுவாம் என்றவாறு.

ஞானேந்திரியங்களுள் நாக்கு வாயை யுணர்த்திற்றுகலின் தானியாகுபெயர், வாயெனப் பொதுப்படக் கூறிலும் சுவையறிதற்கருவி நாக்கா தலின் நாக்கையே கூறினதுமாம். மெய், கண்

நாக்கு மூக்குச் செவிகளின் கூட்டமாதலின் உடம் பொடுபுணர்த்தி அதனை உணர்த்தியவாறு.

பண் ஆக்குதல் — பரநாத ஒலியை உண்டாக்குதல். முன்னைப் பழம்பொருளுக்கும் முன்னைப் பழம்பொருளாகிய பரசிவம் ஆன்மாவினிடமாக ஆஞ்ஞாசக்கரத்தில் விளங்கிப் பரநாதத்தையும் ஒளியையும் உதவுமாதலின் 'பண்ணுக்கி ஒளிகாட்டி' என இயைத்துக் கூறியவாறு.

அண்ணுக்கு - உள்நாக்கு. உள்நாக்கையொட்டி மேற்செல்லும் தொளை புருவமத்தியாகிய சுழு முனையிற் சேர்தலால் அங்கே உண்டாகின்ற ஒளியை 'அண்ணுக்கினுள்ளே அகண்ட ஒளிகாட்டி' எனக் குறிப்பித்ததாம்.

புண்ணுக்கி – வருத்தி. கோல் கொண்டோச்சும் தந்தைபோலத் தயாநிதியாகிய சிவம் நம்மை வருத்துவது நாம் தவறுகளிலிருந்து உய்வதற்கே என்பார் 'நம்மைப் பிழைப்பித்தவாறே' என்றருளினர். (51)

ஒண்ணு நயனத்தில் உற்ற ஒளிதன்னைக்
கண்ணுரைப் பார்த்துக் கலந்தங் கிருந்திடில்
விண்ணுறு வந்து வெளிகண் டிடவோடிப்
பண்ணுமல் நின்றது பார்க்கலு மாமே. 600

இ-ள் - எனின், சுழுமுனைத் தியானத்தால் சோதி தரிசனமாம் என்றல் நுதலிற்று.

இ — ள் : ஒன்றான கண்ணில்பொருந்திய ஒளியைக் கண்ணாரக்கண்டு அங்கேகலந்து நிலைத்திருக்கின், பராகாயநெறியில் பெருவெளிதோன்ற விரைந்து சென்று, சுயம்புமூர்த்தியாகிய சிவத்தைத் தரிசிக்கலாம் என்றவாறு.

ஒண்ணும் நயனம் — விடயங்களிற் சென்று பற்றாது ஒன்றிய கண். எதுகைநோக்கி இங்ஙனமாயிற்று. மாறு உவுமாம். புருவமத்தியில் ஒன்றிய கண் என்பது கருத்து. புருவமத்தியில் தீப ஒளிபோல, நட்சத்திரம் போல ஆதேய மாத்திரமான ஒளியாகச் சிவம் காட்சி வழங்குதலின் 'ஒளி தன்னைக் கண்ணாரப் பார்த்துக் கலந்து இருந்திடின்' என்றருளியது.

விண்ணாறு - பராகாயம். வெளி - துவாதசாந்தப் பெருவெளி, பண்ணால் நின்றது - ஆன்மாக்கள்மீது வைத்த கருணையால் தானே தோன்றிய சுயம்புவாகிய சிவம் (52)

ஒருபொழு துன்னார் உடலோ டுயிரை
ஒருபொழு துன்னார் உயிருட் சிவனை
ஒருபொழு துன்னார் சிவனுறை சிந்தையை
ஒருபொழு துன்னார் சந்திரப் பூவையே. 601

இம் — எனின், தியானிக்காத உலகர்நிலைக்கு இரங்குதல் நுதலிற்று.

இ — ள் : ஒருக்காலாயினும், உடலோடு கலந்துள்ள உயிரை எண்ணார்கள்: உயிர்க்குயிராக விளங்குகின்ற சிவனை எண்ணார்கள்: சிவன் விரும்பி

யெழுந்தருளியிருக்கின்ற சிந்தையை எண்ணுார்கள் ; சந்திர மண்டலத்திலுள்ள சத்தியை எண்ணுார்கள்; இவர்கள் அறியாமை இருந்தவாறு என்னே என்றவாறு.

உடலுள் உயிரையும், உயிருள் சிவத்தையும், சிவனுறை சிந்தையையும், பராகாயத்தில் ஹாகினி சக்தியையும் முறையே எண்ணுக எனத் தியான முறை தெரிவித்தவாறு. சந்திரப்பூ – சந்திர வண்ணமான ஹாகினிசக்தி. பூ என்றது உருவகம். ஆஞ்ஞாசக்கரத்தில் வெண்ணிறமான தாமரைப் பூப்போல விளங்குதலின் சந்திரப்பூ என்றருளினர் என்பது அனுபவ உரை. (53)

மனத்து விளக்கினை மாள்பட எற்றிச்
சினத்து விளக்கினைச் செல்ல நெருக்கி
அனைத்து விளக்குந் திரியொக்கத் தூண்ட
மனத்து விளக்கது மாயா விளக்கே, 602

இ-ம் – எனின் மனவிளக்கை ஏற்றுமுபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மனத்தில் விளங்கும் விளக்காகிய சிவனை மான் என்னும் அகங்காரத்தை விளைவிக்கும் ஆற்றலையுடையதாகிய ஆணவம் வலியொடுங்க விளங்கச்செய்து, சினமாகிய விளக்கை விலகும் வண்ணம் நெருக்கி எல்லா விளக்குகளையும் ஒருசேரத் திரியைத் தூண்ட மனத்து விளக்காகிய சிவம் என்றும் நீங்காத விளக்காம் என்றவாறு.

"நினைப்பவர் மனமணிவிளக்கை" என்ற அருள் வாக்கும் நினைவுகூர்க.

மனத்து விளக்கு – மனத்தின் கண்ணதாகிய விளக்கு. விளக்குப் புக இருள் மாய்வதுபோல. சிவம் பிரகாசிக்க ஆணவம் வலிகுன்றலின் மாள்பட ஏற்றி என்றார். விளக்காக உருவகித்தமைக்கு ஏற்ப ஏற்றி என்றமை காண்க பட - வலி குன்ற. ஆணவத்திற்கு அழிதலின்மையின் இங்ஙனம் கூறப்பட்டது.

சினம் தாமதத்தால் விளைந்து தன்னையுடையானை அவித்தையில் விளக்கஞ்செய்தலின் சினமும் விளக்காக உருவகிக்கப்பட்டது. செல்ல – வெளிச் செல்ல. நெருக்கி - இடமின்றி நெருக்கித்தள்ளி.

அனைத்து விளக்கும் - புலன்களைச் சென்று பற்றி விளக்கம் தருவதாகிய பொறிகளாகிய விளக்குகள் எல்லாவற்றையும். திரியொக்கத் தூண்ட - முன் பின்னின்றி ஒருசேரத் தூண்ட; என்றது புறவிடயங்களாயின் ஒன்றுணரும்போது ஒன்றுணரமாட்டாது ஆதலின் வன்றொண்டப் பெருந்தகை ஐந்து பேரறிவுங் கண்களே கொள்ள இருந்தமைபோல ஐந்து பேரறிவும் சிவபரம்பொருள் ஒன்றையே பற்ற இருத்தலை உணர்த்திற்று விளக்கு பொறிகள்; திரி விளக்குகளைப்பற்றி நிற்கும் மனம். மனத்து விளக்கு முற்கூறியது. மாயா விளக்கு நிலைபேறுடையதாம். "என்னுள் மன்னிய மன்னே", எனவும், "பூங்கோயிலுள் புக்குப் போகாதிருந்தாரே" எனவும் வரும் திருமுறைகள் குறிப்பது போல மனத்தைவிட்டு அகலாதிருத்தல். (54)

எண்ணு யிரத்தரண்டு யோகம் இருக்கினும்
கண்ணு ரமுதினைக் கண்டறி வாரில்லை
உண்ணுடி யுள்ளே ஒளிபெற நோக்கில்
கண்ணாடி போலக் கலந்திருந் தானே, 603

இம் - எனின், கடவுளைக் காணுமுறை தியான மொன்றே எனல் நுதலிற்று.

இ - ள் : எண்ணுயிரமாண்டு யோகமிருந்தாலும் கண்ணிறைந்த அமுதம் ஒப்பாகிய சிவபரம் பொருளைத் தரிசித்து அறிகின்றவர்கள் யாருமிலர். சுழுமுனை நாடியுள் ஒளிவடிவாகத் தியானிக்கின் கண்ணாடியில் ஒளிபோல அவன் கலந்திருந்தான் ; அஃதுணரப்படும் என்றவாறு.

எண்ணுயிரம் என்ற எண் பல ஆண்டு என்ற அளவினின்றது. அடயோகத்தாற் பயனில்லை ; தியான யோகமே சிறந்தது என்பதாம். உள்நாடி - புருவ மத்தியிலுள்ளதாகிய சுழுமுனை. ஒளி - நட்சத்திரம், ஏற்றிய விளக்கு இவைபோலத் தோன்றுகின்ற ஒளி. கண்ணாடியுள் ஒளிபோல உயிரிடைச்சிவம் கலந்திருப்பர் அதனைக் காணலாம் என்று வருவித்து முடிக்க. (55)

நாட்டம் இரண்டும் நடுமூக்கில் வைத்திடில்
வாட்டமும் இல்லை மனைக்கும் அழிவில்லை
ஓட்டமும் இல்லை உணர்வில்லை தானில்லை
தேட்டமும் இல்லை சிவனவ னுமே 604

இம் — எனின், தியானிப்பவர் தியானப்பொருளாகவே ஆவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : கண்களிரண்டையும் மூக்கின் நுனியில் வைத்தால் வாட்டம் இல்லை ; உடலுக்கு அழிவில்லை பிராணனியங்காது ; உலகவுணர்வற்றுப் போம் : தான் என்ற முனைப்பும் அடங்கும் ; வேறுவேறுணர்தலாகிய ஆராய்ச்சி ஞானமுமில்லை சிவனே ஆகலாம் என்றவாறு.

இதனையே பின்னர் 'விண்ணூறு பாய்ச்சிக் குளத்தை நிரப்பினால்' என்றும், 'துதிக்கையால் உண்பார்க்குச் சோரவும் வேண்டாம்' என்றும் கூறுவர்.

நடுமூக்கில் வைத்தலாவது, இடகலை பிங்கலையாகிய நாடிகளைக்கட்டி நடுநாடியாகிய சுழுமுனையில் அதாவது புருவமத்தியில் தியானித்தல்.

வாட்டம் - சோர்வு. மனை - உடல், ஓட்டம் — மனத்தின் அசைவு (சித்தசலனம்). உணர்வு— பொருள்களைப் பகுத்துணரும் விவேகஞானம். இஃதிருப்பின் மனம் அடங்காமையின் ஒன்றையே பற்றிநிற்கும் போது ஒத்திட்டுப் பார்க்கும் உணர்விற்கிடமின்மை யானும் இங்ஙனம் கூறினார்.

தான் இல்லை ; உணர்வோனாகிய ஆன்மாவின் செயலும் அடங்கிப்போம் என்பதாம். சேட்டம் — ஆராய்ச்சி. தியானிக்கப்படும் பொருளும் தியானிப்போனும் வேறின்றித் தியானப் பொருளாயே ஆவன் என்பதாம். (56)

நயனம் இரண்டு நாசிமேல் வைத்திட்(டு)
உயர்விழா வாயுவை உள்ளே அடக்கித்
துயரறு நாடியே தூங்கவல் லார்க்குப்
பயனிது காயப் பயமில்லை தானே 605

இ-ள் - எனின்: பிராணாயாமத்துடன் தியானிப்ப வர்க்கு மரணமில்லை என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: கண்களிரண்டையும் மூக்கின் நுனியில் வைத்து உயர்தலின்று தாழாத பிராணனை உள்ளே கும்பித்து, தொடக்கறுத நாடியில் அசையாம லிருக்க வல்லவர்க்கு உளதாம் பயன் உடம்பிற்குப் பயமில்லை என்றவாறு.

உயர்விழா — உயர்தலின்று தாழாத, உயர்தல் மேனோக்கியே செல்லுதல். விழாமை — தாழாமை; என்றது அபானன் முதலியவாகக் கழியாது, நிச்சுவாசமாக வெளிப்படாது பிரமரந் திரம் வரை மேலேறிச் சென்று ஆஞ்ஞையிலேயே நிலைத்திருத்தல். உயர்வு என்பது விகுதி கெட்டு உயர் என முதனிலை மாத்திரையாய் நின்றது. விழா வாயு என்பது ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

துயர் - துயர்வு: தொடக்கு. துயர் அறு நாடி — தொடக்கறுதநாடி. நாடிகள் ஒன்றோடொன்று பற்றியே நிற்பனவாகலின் இங்ஙனம் கூறினார். தூங்குதல் அசையாதிருத்தல்; ஈண்டு நிலைத்த தியானத்திருத்தலை உணர்த்திற்று. (57)

மணிகடல் யானை வார்குழல் மேகம்
அணிவண்டு தும்பி வளைபேரி கையாழ்
தணிந்தெழு நாதங்கள் தாமிவை பத்தும்
பணிந்தவர்க் கல்லது பார்க்கவொண் ணாதே. 606

இ-ம் - எனின், தியானசீலர்க்கன்றிப் பத்துநாதமும் அறியப்படாதென்றல் நுதலிற்று.

இ-ள் : முத்துக்களோடு கூடிய கடல், யானை, புல்லாங்குழல், மேகம், மணி, வண்டு, தும்பி, சங்கு, பேரிகை, யாழ் என்ற இவற்றின் நுண்ணொலிகள் பத்தும், தியானத்தில் உறைத்து நின்று அடங்கியவர்கட்கு அன்றி, வேறு யாராலும் பார்க்க ஒண்ணாது என்றவாறு.

श्रूयते प्रथमाभ्यासे नादोनानाविधोमहान् ।
ततोऽभ्यासे वर्धमाने श्रूयते सूक्ष्मसूक्ष्मकः ॥

आदौ जलधिजीमूत भेरीझर्झर संभवाः ।
मध्ये मर्दल शंखोत्था घंटाकाहलजास्तथा ॥

अंतेतुकिंकिणीवंश वीणाभ्रमरनिस्वनाः ।
इतिनानाविधानादाः श्रूयन्तेदेहमध्यगाः ॥

என்ற நாதபிந்தூபநிஷத் வாக்கியங்களைக் கொண்டு ஆயுங்கால், முதற்பழக்கத்தில் பலவகையான கடல் மேகம் பேரிகை முதலியவற்றைப் போன்ற நாதம் கேட்கப்படுகிறது; பின் நாதானுசந்தானம் வளர்ச்சி யடையும்போது நுண்ணொலி

நுண்ணொலியாகக் கேட்கப்படுகின்றது; பிராணன் பிரமரந்திரத்திற் செல்லுங்காலத்துக் கடல், பேரி சருச்சரம் முதலியவற்றின் ஒலியும், வாயு பிரமந்திரத்தில் நிலைத்தபோது மத்தளம் சங்கு, மணி, காகளம் என்பனவற்றின் ஒலி போன்ற ஒலியும். பின்பு கிண்கிணி, குழல், வீணை, வண்டு இவற்றின் ஒலிகளும் உடனடுவே கேட்கப்படுகிறது என்பதறியப்படும், மேலும்,

महति श्रूयमाणेऽपि मेघभेर्यादिकेध्वनौ ।
तत्रसूक्ष्मात्सूक्ष्मतरं नादमेवपरामृशेत् ॥

என்ற பிரமாணங்கொண்டு. எவ்வளவு பேரொலிகள் கேட்கப்படினும், அவற்றுள் நுண்ணிதின் நுண்ணிதாகிய ஒலியையே தியானிக்கவேண்டும்; அதிலேயே நிலைபேறும் களிப்பும் இருக்கின்றன என்றும் அறியப் பெறும். ஆதலால், நாதங்கள் பத்தையும் கலந்து கூறியிருப்பினும் அவற்றின் நிலைவேறுபாடுகளை அறிந்து தியானிக்க

தணிந்தெழு நாதம்—சூட்சுமநாதம். இஃதறியார் வேறு கூறுப. அது யோகநூற் 'கருத்தன்றெனஓர்க'. பணிதல் - மனம் அடங்கல். (58)

கடலொடு வேகக் களிறொடும் ஓசை
அடலொடு மவ்விளை அண்டமண டத்து
சுடர்மன்னு வேணு சுரிசங்கின் ஓசை
திடமறி யோகிக்க லாற்றெரி யாதே. 607

இம் - எனின், இவ்வோசைகள் திடயோகிக்கே தெரியுமென்றல் நுதலிற்று.

இ - ள் : அத்தகைய வினைகளை அழித்தலொடு, பராகாயத்தில் பரஞ்சுடர் மன்னுதலைத் திடமாக அறியவல்ல யோகியர்க்கன்றி. கடல், வேகம் பொருந்திய யானை இவற்றின் ஓசையும், புல்லாங் குழல், சுரிந்த வாயினையுடைய சங்கு இவற்றின் ஓசையும் அறிய முடியாது என்றவாறு.

அவ்வினை அடலொடும், அண்டரண்டத்துச் சுடர் மன்னு திடம் அறி யோகிக்கு அல்லால், கடலொடு வேகக்களிற்றொடு மோசை வேணு சுரிசங்கினோசை தெரியாது எனக் கூட்டிப் பொருள் காண்க, ஓசைகளை இணைத்துக்கூறாது இருகூறு படுத்துக் கூறியது நிலைவேறுபாடு கருதி என்பதை முன்னர்க் காட்டியவற்றான் உணர்க.

சுடர் - "சோதியே சுடரே" என்றருளப் பெற்ற பரசிவம். மன்னுதலாகிய திடம் என இயையும். சுரி சங்கு - "சுரிமூக்கு நொள்ளை" என்புழிப்போலக் கொள்க. (59)

ஈசன் இயல்பும் இமையவர் ஈட்டமும்
பாசம் இரங்கப் பரந்துயி ராய்நிற்கும்
ஓசை யதன்மணம் போல விடுவதோர்
ஓசையும் ஈசன் உணரவல் லார்க்கே, 608

இம் - எனின், நாதமே அனைத்துலகும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இறைவனை அறிந்து தியானிக்க வல்லார்க்கு அவனியல்பும், இமையவர் முதலான உயிர்த் தொகுதியும், பாசம் அழிய எங்கும் பரவி உயிர்களாக விளங்கும் ஓசையும் அதன் மணம் போல சூட்சுமமாய் இயங்கும் நாதமுமாகிய அனைத்தும் நாதமுடிக்கே என்றவாறு.

உணரவல்லார்க்கும் இயல்பும் ... ஓசையும் ஆம் என ஒரு சொல் வருவித்து முடிக்க.

ஈசன் இயல்பு நாதமாம் என்றது ஈசன் பரநாத வடிவினனாக இருப்பது கருதி. இமையவர் ஈட்டமும் பரந்துயிராய் நிற்கும் என்றது தேவரும் மக்களும் முதலான உயிர்த்தொகுதிகள் யாவும் அபரநாத வடிவாகிய மாயையின் வடிவாதலின் கூறியது.

பாசம் இரங்க ஆணவ மலக்கலப்பாலுண்டான பந்தம் நீங்க ஓசை அதன் மணம்போல-ஓசையும், அதன் அறிவுவடிவான வாசனையும்போல. மணிஓசை அழியினும் அதன் உணர்வு மடியாமைபோல இருப்பது. இவ்வுண்மைகள் யாவும் சிவனைத் தியானிப்பார்க்கே சித்திப்பது என்பதாம். (60)

நாத முடிவிலே நல்லாள் இருப்பது
நாத முடிவிலே நல்யோகம் இருப்பது
நாத முடிவிலே நாட்டம் இருப்பது
நாத முடிவிலே நஞ்சுண்ட கண்டனே. 609

இம் - எனின், ஓசையும் அடங்கிய இடமே சிவம் வெளிப்படுமிடம் என்பது உணர்த்துதல் நுதலிற்று

இ - ள்: நாத தத்துவத்தின் முடிந்தவிடத்திலே சத்தி விளங்குவள். நாதாந்தமே யோகத்திற்குச் சிறந்த இடம். நாதம் முடியுமிடமாகிய பிரமரந்திரத்திலே நமது பார்வை பதிவது அவ்விடத்திலேயே திருநீலகண்ட சிவம் விளங்கும் என்றவாறு.

முதற்கண்ணதாகிய நாதமுடிவு நாததத்வ முடிவு. சத்தியினின்று நாதம் பிறத்தலின் முடியும் போது இது அச்சத்தியினிடமே ஒடுங்குதலின் நாத முடிவிலே நல்லாளிருப்பது என்றருளினர்.

இரண்டாவதாகிய நாதமுடிவு ஓசையற்ற இடம். யோகம் கைவரவேண்டுமாயின், புறவோசையும் அகவோசையும் அற்றஇடம் சிறந்ததாகலின் இங்ஙனம் அருளியது.

மூன்றாவதாகிய நாதமுடிவு ஒலிகள் சென்று மடங்குதற்கிடமாகிய பிரமரந்திரம். அங்கே அகப் பார்வையாகிற தியானம் பதியவேண்டும் என்பதாம்.

நான்காவதாகிய நாதமுடிவு சுத்தமாயை யையுங் கடந்த நிலை. (61)

உதிக்கின்ற ஆறினும் உள்ளங்கி ஐந்துந்
துதிக்கின்ற தேசுடைத் தூங்கிருள் நீங்கி
அதிக்கின்ற ஐவருள் நாதம் ஒடுங்கக்
கதிக்கொன்றை ஈசன் கழல்சேர லாமே. 610

இ - ம் - எனின், ஓசையொடுங்கத் திருவடிஞானம் சித்திக்குமென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஆதாரங்கள் ஆறினும் தோன்றுகின்ற ஐந்து ஒலிகளாலும், எல்லா நூல்களானும் புகழப் படுகின்ற ஒளிபடைத்த மிக்க இருளாகிய ஆணவம் நீங்கப்பெற்று, ஐந்து தன்மாத்திரைகளிலும் சிறந்ததான ஓசை ஒடுங்க, கொன்றைமாலையை அணிந்த ஈசன் திருவடியைச் சேரலாம் என்றவாறு.

ஆறினும் உதிக்கின்ற ஐந்து உள்ளங்கி : மூலா தாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், விசுத்தி, அநாகதம், ஆஞ்ஞை என்ற ஆறு ஆதாரங்களிலும் தோன்றுகின்ற சந்திரன், சூரியன், அக்கினி, தீபம் பெருவெளியாகிய ஐந்தொளிகள்.

ஆணவம் துதிக்கப்படுதலாவது தன்னையுங் காட்டாமல் தலைவனையுங்காட்டாமல் ஆன்ம அறிவைத் தடுதது நிற்பது என ஆகமங்களால் புகழப்படுதல். தேசு - கருமையாகிய ஒளி. தூங்கு இருள் - செறிந்த இருள் வடிவான ஆணவம்

ஐவருள் அதிக்கின்ற நாதம் என மாற்றிக் கூட்டுக. ஐவர் - புலன்கள். அதிக்கின்ற - சிறந்த. ஓசையே புலன்களிற் சிறந்ததென்பது.

பஞ்சேந்திரியங்களையும் விடயங்களிற்செலுத்தி அதிட்டித்து நிற்கின்ற மாயை எனலுமாம். இப் பொருளில் ஐவர்-பொறிகள்; அதித்தல்-இயக்குதல்; நாதம் - மாயை.

கதியாக, கழல் சேரலாம் என விரித்துப் பொருள் கொள்க. (62)

பள்ளி அறையிற் பகலே இருளில்லை
கொள்ளி அறையிற் கொளுந்தாமற் காக்கலாம்
ஒள்ளி தறியிலோர் ஓசனை நீளிது
வெள்ளி அறையில் விடிவில்லை தானே. 611

இ - ள். ஆஞ்ஞை அனுபவம் அறிவித்தல் நுதலிற்று

இ - ள் : பராசத்தி தங்குமிடமாகிய பிரமரந்திரத்தில் ஒளியேயன்றி இருளில்லையாம். அறையாகிய உடலில், அக்கினி கொளுந்தாமல் காக்கலாம். ஒளியுடையதாகிய இதனையறியில் ஓர்யோசனை நீளமானது. இவ்வண்ணமான வெள்ளிய அறையில் விடிவேயில்லை என்றவாறு.

பள்ளியறை - பராசத்தியைக் கூடுமிடமாகிய ஆஞ்ஞை. பகலே என்றது எப்போதும் ஒளிமயமாக இருத்தலின், அறையில் கொள்ளி கொளுந்தாமல் காக்கலாம் என்றது உடலின் மரணத்தால் கொள்ளி கொளுத்தாதபடி காக்கலாம் என்றவாறு. இது மரணமில்லை என்பதை விளக்கியவாறு. பிரமரந்திரத்தில் வெப்பந்தாக்காதவாறு காக்கலாம் எனலுமாம்,

ஒள்ளிது - ஒளியுடையதாகிய இந்நிலையை. ஓர் ஓசனை நீளிது - ஓர் தியானத்தால் எய்தப்பெறுவது, ஓசனை - தாரம் ; தியானமும் ஆம். இப்பொருளில் யோசனை என்பதன் விகாரம்.

வெள்ளி அறையில் - வெண்மையான மதிமண்டலமாகிய பிரமரந்திரத்தில். விடிவுஇல்லை -

எப்போதும் ஒளி பரந்திருந்தலின் விடிவேயில்லை என்பதாம். (63)

கொண்ட விரதங் குறையாமற் றொன்றித்
தண்டுடன் ஓடித் தலைப்பட்ட யோகிக்கு
மண்டலம் மூன்றினும் ஒக்க வளர்ந்தபின்
பின்னாளும் ஊழி பிறியா திருக்குமே. 612

இ-ம் - எனின், இதுவுமது.

இ-ள் : தாம் மேற்கொண்ட இயம நியம முதலிய விரதங்களிற் சிறிதும் குன்றாது, முதுகந் தண்டாகிய வீணாதண்டுடன் ஒன்றி மேல்நோக்கி ஏறிச்சென்று பிரமரந்திரத்திற் கூடிய யோகிக்கு மூன்று மண்டலங்களிலும் தட்ப வெப்பங்களைத் தாங்கி வளர்ந்த பிறகு உடல் ஒரூழிக்காலம் பிரியாமலிருக்குமென்றவாறு.

விரதம் — இயமமுதல் தியானம்வரை கூறப்பட்ட விரதங்கள். ஒன்றி - ஒன்றுபட்டு. தண்டு — வீணாத்தண்டெனக் கூறப்படும் முதுகந்தண்டு. தலைப்பட்ட - தலையில் பிரமகபாலத்துச் சென்று பதிந்த; என்றது தியானிக்குமிடம் கூறியது,

மண்டலம் மூன்று - சந்திரன் சூரியன் அக்கினி யென்ற மூன்று மண்டலங்கள். நாடிகளை மண்டலம் என்று குறித்தது. ஒக்க வளர்தல் — ஏற்றத் தாழ்வின்றி மூன்று நாடிகளிலும் தாரணைசெய்து தியானிக்கப் பழகுதல். அங்ஙனம் பழகின் தட்ப வெப்பங்கள் உடலைப் பாதியா; சமனிலை விளையும் என்பதாம்.

பிண்டம் – உடல். ஊழி பிரியாதிருக்கும் – ஒருழிக்காலம் அழியாது என்பதாம். (64)

அவ்வவர் மண்டல மாம்பரி சொன்றுண்டு
அவ்வவர் மண்டலத் தவ்வவர் தேவராம்
அவ்வவர் மண்டலம் அவ்வவர்க் கேவரில்
அவ்வவர் மண்டல மாயமற் றோர்க்கே 613

இ-ம் - எனின், மூன்று மண்டலங்களின் இயல்பும் தேவதையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : அவ்வவர்க்கு உரிய மண்டலங்களும் ஆகின்ற தன்மையொன்று உண்டு. அவ்வவர்க் குரிய மண்டலங்களில் அவரவர்களே தேவராம். அங்ஙனமாயின் அவரவர்களுக்கு உரிய மண்டலங் கள் ஏனைய உயிர்கட்குத் துணைக்கருவிக் கூட்டமாம் என்றவாறு.

அவ்வவர் மண்டலம் என்றது முற்கூறிய மூன்று மண்டலங்களையும். இந்த மூன்று மண்ட லங்களும் முறையே பிரமகிரந்தி, விஷ்ணுகிரந்தி, ருத்ரகிரந்தி என்றும் கூறப்படும். சந்திரமண்ட லாதிபதயே பிரம்மணே நம: சூரியமண்டலாதி பதயே விஷ்ணுவே நம: அக்னிமண்டலாதிபதயே ருத்ராய நம; என்ற சிவபூஜை மந்திரங்களால் அந்தந்த மண்டலங்களுக்கு அவரவர் தேவராதல் அறிக.

இளைக்கின்ற நெஞ்சத் திருட்டறை உள்ளே
முளைக்கின்ற மண்டலம் மூன்றினும் ஒன்றித்
துளைப்பெரும் பாசத் துருவிடு மாகில்
இளைப்பின்றி மார்கழி ஏற்றம தாமே. 614

இ-ம் - எனின், மூன்று கிரந்திகளையும் கடந்து அன்போடு தேட ஞானோதயமாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : வருந்துகின்ற உடலாகிய இருட்டறையுள் தோன்றுகின்ற மண்டலங்கள் மூன்றினும் பொருந்தி, துளையாகிய நடுநாடி வழியாகப் பேரன்போடு ஆராயின் இளைப்பகன்று, மார்கழி மாதமாம் என்றவாறு.

இளைக்கின்ற நெஞ்சம் - உலகப் பற்றுள் சிக்கித் தவிக்கின்ற மனம், நெஞ்சத்து இருட்டறை உள்ளே - மனத்தகத்ததாகிய ஆணவவல்லிருள் மூடிய இடத்தில், தியானச்சிறப்பால் இருள் நீங்க ஒளிமண்டலம் தோன்றலின் இருட்டறையுள்ளே முளைக்கின்ற மண்டலம் என்றார்.

துளை - நடுநாடி. பெரும்பாசம்-பேரன்பு. துருவுதல் - ஆராய்தல். மார்கழி - ஆணவ இருள் நீங்க ஞானசூரியன் எழுகின்ற வைகறைப்போது. ஆதலின் இருள் நீங்கி விடிவெள்ளி தோன்றும் என்றாராம். மாதங்களுள் மார்கழி சிறந்தமை ஓர்க.

சுழுமுனை வழியாகத் தியானிப்பார்க்குப் பிரமரந்திரத்தில் ஒளிதோன்றுதலின் மார்கழி மாதம் சிறக்கும் எனக் குறிப்பிட்டவாறும். (66)

முக்குண மூடற வாயுவை மூலத்தே
சிக்கென மூடித் திரித்துப் பிடித்திட்டுத்
தக்க வலமிடம் நாழிகை சாதிக்க
வைக்கும் உயிர்நிலை வானவர் கோனே. 615

இம் - எனின், பிராணாயாம தாரணையுடன் தியானிக்க உடலழியாது என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ — ள்: முக்குணங்களாலும் மூடப்பட்ட தன்மை நீங்கப் பிராணனை மூலாதாரத்தே உறுதியாகக் கும்பித்து, மாறச் செலுத்திப் பிடித்து. முற்கூறப் பட்ட கால அளவுப்படி இடபிங்கலைகள் வழியாகச் சாதிக்க, தேவர் கோனாகிய சிவபெருமான் உடலை அழியாமல் உதவும் என்றவாறு.

முக்குணமூடு: ஆன்மாவை, ராசதம் தாமதம் சாத்துவிதம் என்ற மூன்று குணங்களும் மூடி மறைத்திருத்தலின் ஆன்மா அவற்றின் வயப்பட்டு மயங்குதலின் அது நீங்கப் பிராணாயாமத் தியானம் செய்க என்றதாம்.

சிக்கென மூடியென்றது குண்டலியை மூட அது புறப்பட்டுப்போகவே தொடங்குமாதலின் உறுதியாக மூடுக என்பதாம். திரித்து - ரேசக பூரகங்களை மாறி மாறிச் செய்து.

நாழிகை — ரேசக பூரக கும்பகங்களுக்கு முன்னர் விதிக்கப்பட்ட மாத்திரையளவு. உயிர் நிலை - உடல்; உயிர் நிற்றற்கு இடமாதலின் இப்பெயர் பெற்றது. (67)

நடலித்த நாபிக்கு நால்விரல் மேலே
மடலித்த வாணிக் கிருவிரல் மேலே
கடலித் திருந்து கருதவல் லார்கள்
சடலத் தலைவனைத் தாமறிந் தாரே. 616

இ-ம் - னின், சிவனை அறிந்தவர் இவரென்றல் நுதலிற்று.

இ - ள் : சிறந்த நாபிக்கு நால்விரல் மேலதாக இதழ்களோடு கூடிய நாதந்தோன்றும் இடமாகிய விசுத்தித்தானத்திற்கு இருவிரலளவு உள்ளே அதாவது அநாகததானத்தில் கடல்போல அடங்கி யிருந்து தியானிக்க வல்லவர்கள். இவ்வுடற்றலை வனுகிய உயிரை அறிந்தவர் ஆவர் என்றவாறு.

நடலித்த - அசைந்தாடுகின்ற என்றுமாம்; தீ அசைந்தாடும் இடம் அதுவாதலின். மடலித்த - இதழ்களோடு கூடிய; விசுத்தித்தானம் பதினறு இதழ்களோடு கூடியதாகலின் இங்ஙனம் கூறினர். வாணி - ஒலி. ஈண்டு நாதம்; தானியாகு பெயராக விசுத்தித் தானமாகிய கண்டத்தின் அடியை உணர்த்திற்று.

கடலித்து - கடலையொக்க இருந்து. அலை யின்றி அடங்கியிருக்கும்கடலைப் போல இருந்து. சடலம் - உடல். சடலத் தலைவன் - ஆன்மா

அநாகத சக்கரத்தில் பன்னிரண்டுவர்ணங்க ளோடுகூடிய பன்னிரண்டிதழ்த் தாமரையும், அதன் கர்ணிகையில் அறுகோண வடிவான வாயுமண்டல மும், அதன்மேல் திரிகோணமும், அதன்மேல் யம் என்னும் வாயு பீஜமும், அதன்நடுவில் ஈசனும் இருக்கிறர். அக்கர்ணிகையின் செந்தாமரையில் காகினி சத்தியும், நடுவிலுள்ள திரிகோணத்தில் பாணலிங்கமும், அதன் கீழ்த்தீபமொட்டுவடிவான ஹம்ஸ ரூபமான உயிரும் இருக்கின்றன, இக்கர்ணி

கையின் கீழே தான் எட்டிதழ்ப் பதுமத்தில் அகப் பூசைக்குரிய இடமிருக்கிறது என யோகசூடாமணி முதலிய நூல்கள் கூறுதலின், அநாகத தியானம் வல்லவர்கள் ஆன்மாவை அறிவர் என்றருளியது. இக்கருத்தறியாதார் கிடைத்த குறிப்புக்களைக் கொண்டு ஏதாயினும் எழுதவேண்டுமே என்று உரையை எழுதி நிரப்பினர். அதன் உண்மை இவ் யோகநூல்களின் துணைக்கொண்டு ஆய்க. (68)

அறிவா யசத்தென்னு மாறு றகன்று
செறிவான மாயை சிதைத்தரு ளாலே
பிறியாத பேரரு ளாயிடும் பெற்றி
நெறியான அன்பர் நிலையறிந் தாரே. 617

இ-ம் - எனின் முறையான ஞானிகள் இவரெனல் நுதலிற்று.

இ-ள் ஞானமே வடிவாய், சடமாகிய முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து, மிகச் செறிவாக ஆன்மவிளக்கம் சிறிதும் தோன்றாதபடி மறைத்து நிற்கும் மாயையை அழித்து அவனருளாலே என்றும் பிறியாத பேரருளாக இருக்கும் தன்மையை உணர்ந்து முறைப்பட்ட அன்பர்களே உண்மையை உணர்ந்தோர் ஆவர் என்றவாறு.

சிதசித்தாகிய ஆன்மா சித்தேயாக இருத்தலை அறிவாய் என்றார் மாயையின் காரியமாகிய மண் முதற் சிவமீறான தத்துவங்கள் முப்பத்தாறும் அழிவனவாதலின் அசத்தென்னும் ஆறாறு என்றருளினார், அவற்றை அகறலாவது அவற்றுட் பட்டு மயங்காது கடத்தல் இவ்வண்ணம்

தனுகரண புவன போகங்களில் மயங்கி அழுந்தப் பண்ணும் உபகாரமலமாகிய மாயையைக்கெடுத்து என்பதாம்.

அவனருட்டுணை இருந்தாலன்றிப் பேரருள் வடிவாகத் தான் வியாப்பியமாக அடங்கியிருத்தல் முடியாதாகலின் பிறியாத பேரருளாய் என்றது. நெறியான அன்பர் - இத்தன்மையிலேயே ஊற்ற மாக நின்ற அன்பர்கள். உண்மைகண்டவர்கள் என்றவாறும். (69)

## 9. சமாதி

சமாதியாவது உயிரும் இறையும் இரண்டற ஒன்றி, சங்கற்ப விகற்பங்கள் அற்றுஇருக்கும் நிலை. இதனை ஏனையநூல்கள் அப்பொடு பெய்த உப்பே போல உயிரினிடமாக மனம் ஒன்றும் நிலையென்றும் சீவாத்ம பரமாத்மாக்களின் நெருக்கம் என்றும் உரைக்கும். இதனைப் பதினுன்கு திருமந்திரங்களான் உணர்த்திய தொடங்கினர்.

சமாதி யமாதியிற் றுன்செல்லக் கேட்கின்
சமாதி யமாதியிற் றுனெட்டுஞ் சித்தி
சமாதி யமாதியில் தங்கினோர்க் கன்றே
சமாதி யமாதி தலைப்படுந் தானே 618

இ - னின். சமாதியின் இலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: இயமம் முதற்கொண்டு சமாதிவரையிற் சொல்லக்கேட்கின். சமாதி என்பது இயமமுதலான

எட்டு உறுப்புக்களிலும் சித்திபெறுதலாம். இந்த எட்டு யோக உறுப்புக்களிலும் நிலைபெற்றோர்க்கே இவை சித்திக்கும் என்றவாறு.

யமாதியிற் சமாதி என மாறுக. இயம முதலாயின யோக உறுப்புக்கள்; ஆதலின் அவை நிலைக்க யோகமாகிய சமாதி நிலைக்கும் என்பது கருத்து. (70)

விந்துவும் நாதமும் மேருவில் ஓங்கிடின்
சந்தியி லான சமாதியிற் கூடிடும்
அந்த மிலாத அறிவின் அரும்பொருள்
சுந்தரச் சோதியுந் தோன்றிருந் தானே 619

இ-ம் - எனின், சமாதி கூடுதலின் பயனுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இவ்வுடலில். சுழுமுனை நாடியில் சிவசத்திகள் வெளிப்பட்டுச் சிறந்து தோன்றின். இறுதியற்ற ஞான யோகமான சமாதி கூடும். சொரூபமான சிவபரம்பொருளாகிய அழகிய சோதி வெளிப்படும் என்றவாறு.

விந்து - சத்தி. நாதம் - சிவம். சுழுமுனை சதாசிவம் எழுந்தருளியிருக்கும் இடம் எனச் சித்தாந்த சாராவளி கூறும். சதாசிவம் சிவசத்தி கூடிய அருவுருவத் திருமேனி. ஆகவே மேருமலையாகிய இவ்வுடலின் உச்சியாகிய பிரமரந்திரத்தில் விந்து நாதமாகிய சதாசிவம் விளங்க, அதனை ஆன்மாச் சந்தித்து நிலைபெறுதலே சமாதி என்பது கருத்து. அங்ஙனம் சமாதி கூடும்போது அநாதி நித்தமான

ஞானசொரூபியான பரம்பொருள் அழகான சோதி யாகக் காட்சிவழங்கும் என்பதாம்.

சுந்தரச்சோதி – மறைந்திருந்து வெளிப்பட்ட சோதி. சுந்தரம் – நஷ்ட திரவியலாபம். (71)

**மன்மனம் எங்குண்டு வாயுவும் அங்குண்டு**
**மன்மனம் எங்கில்லை வாயுவும் அங்கில்லை**
**மன்மனத் துள்ளே மகிழ்ந்திருப் பார்க்கு**
**மன்மனத் துள்ளே மனோலய மாமே.** 620

இ - ளின், மனத்திற்கும் பிராணவாயுவிற்கு முள்ள இயைபு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : நினைத்தலைச் செய்கின்ற மனம் எங்கே யுண்டோ அங்கு பிராணவாயுவும் உண்டு. அஃதின் றாயின் வாயுவும் இல்லை. அம்மனத்துள் மகிழ்ந்து சமாதி கூடுவார்க்கு அம்மனமும் சதாசிவத்தினிடம் லயமாம் என்றவாறு.

மனம் என்பது நினைத்தலைச் செய்வது என்று காரணப் பெயர் ஆதலின் மன் மனம் என்றபோது நினையும் மனம் எனச் சொற்பொருள் விரித்தலாம். தூல சூக்கும உடல்களைப் பொருந்தும் மனம் என்றுமாம். ஆகவே பிராணன் ஒடுங்க மனம் ஒடுங்கும்; மனம் ஒடுங்க மனோலயமாகிய சிவம் தோன்றும் என்பதாம். (72)

**விண்டலர் கூபமும் விஞ்சத் தடவியுங்**
**கண்டுணர் வாகக் கருதி யிருப்பார்கள்**
**செண்டு வெளியிற் செழுங்கிரி யத்திடை**
**கொண்டு குதிரை குசைசெறுத் தாரே.** 621

இம் - எனின்: சமாதிகூடும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: சமாதி கூடுமவர்கள், மலையுச்சியில் விளங்கும் கிணற்றையும் விந்தியாடவியையும் கண்டு, ஞான சொரூபமாக அதனைக் கருதித் தியானிப்பார்கள்; மனமாகிய குதிரையைச் செழுமையான மலையில் உள்ள செண்டு வெளியிற் கொண்டுபோய்க் கடிவாளத்தையிழுத்து அடக்கிறுர்கள் என்றவாறு.

குதிரையில் ஏறிப் பல இடங்களைச் சுற்றிச் செண்டு வெளியில் ஓடவிட்டு அழகான மலையடிவாரத்தில் கட்டிவைத்தல்போல, மனமாகிய குதிரையைப் பிரமரந்திரமாகிய கிணற்றையும் அதனைச்சுற்றியுள்ள உச்சந்தலையாகிய விந்தியாடவியையும் சுற்றிப் பார்த்து அதற்கு அப்பாலுள்ள துவாதசாந்தப் பெரு வெளியாகிய செண்டு வெளியில் ஓடவிட்டு. அங்கே விளங்குகின்ற செழுமலையாகிய சிவத்தினிடம் கடிவாளமாகிய பிராணனையிழுத்து நிலைபெறுத்தலாகிய சமாதியைச் செய்பவர் சிவயோகி எனப் பிறிதுமொழிதலணியாம்.

விண்டு - மலை, என்றது உடலை. அலர்தல் - தோன்றுதல். கூபம் - கிணறு போல்வதாகிய பிரமரந்திரம். விஞ்சம் - விந்தியம் என்பதன் மரூஉ. விஞ்சத் தடவி - உச்சந்தலையும் அதனைச்சுற்றி அடர்ந்துள்ள உரோமக்காடும். அங்கே பிராணனை நிறுத்தித் தியானிக்கின், அதற்கு மேலதாகிய பெருவெளியிற் செல்லலாம்.

செண்டுவெளி-குதிரையை ஓடவிடும் வையாளி வீதி. அங்கேயுள்ள செழுங்கிரி பரசிவம். அங்கே சென்று மனமாகிய குதிரையைப் பிராணனாகிய கடிவாளத்தை இழுத்துப் பிடித்து மடக்கிக் கட்டுதலே சமாதியாம் என்றவாறு. குசை - கடிவாளம். (73)

மூல நாடிமுக் கட்டல குச்சியுள்
நாலு வாசல் நடுவுள் இருப்பர்காள்
மேலை வாசல் வெளியுறக் கண்டபின்
காலன் வார்த்தை கனவிலும் இல்லையே. 622

இம் – எனின், சமாதி கூடுவார்க்கு மரணபயம் இல்லை என்றல் நுதலிற்று.

இ - ள் : மூலநாடியிலிருந்து முக்கட்டினையும் பேதித்து, கூரையுச்சியில் நாலு வாசலுக்கு நடுவில் இருக்கும் சமாதியாளர்களே! நீங்கள் பிரமரந்திர மாகிய மேலை வாசலை அடுத்துள்ள பெருவெளியைக் கண்டபின், உங்களுக்குக் காலன் என்ற சொல்லுங் கூடக் கனவிலும் இல்லை என்றவாறு.

மூலநாடி சுழுமுனை. இருகால்களின் பெருவிரல் தொடங்கி மூலாதாரம்வரையில் இரு கூறாக வரும் நடு நாடி, மூலாதாரத்திலிருந்து புருவநடுவரை ஒன்றாகி, பிரமகிரந்தி, விஷ்ணுகிரந்தி, ருத்திர கிரந்தி என்ற மூன்று முடிச்சுக்களையுடைமையின் ‘மூலநாடி முக்கட்டு அலகு உச்சி’ என உருவகிக்கப்பட்டது. கட்டு - கிரந்தி (முடிச்சு). அலகு - வீட்டு மேற்கூரைக்கிடப் படும் மரம்! ஈண்டு ஆஞ்ஞாசக்கரத்தைக் குறித்தது. நாலுவாசல்

கண் காது வாய் மூக்கு ஆகிய நான்கு வாசல். அதன் நடு - புருவம் மேலைவாசல் - எல்லா வற்றிற்கும் மேலேயுள்ள உச்சிவாசலாகிய பிரமரந் திரம். அதனை அடுத்துள்ள வெளி - துவாதசாந்தப் பெருவெளி. காலன் என்ற வார்த்தை கனவிலும் இல்லை என்றது மரணமில்லை என்பதை வற்புறுதிக் கூறியவாறும். (74)

மண்டலம் ஐந்து வரைகளும் ஈராறு
கொண்டிட நிற்குங் குடிகளும் ஆறெண்மர்
கண்டிட நிற்குங் கருத்து நடுவாக
உண்டு நிலாவிடும் ஒடும் பதத்தையே. 623

இம் — எனின், சமாதியினிற்பார் திருவடி ஞானம் சேர்வர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : மண்டலங்கள் ஐந்தும், அவற்றிற்கு உரிய இடங்கள் பன்னிரண்டும், அவற்றை இட மாகக் கொண்டு விளங்கும் குடிகள் ஆறுபேரும், எண்மரும் இவற்றைக் காணநிற்கும் கருத்தின் நடுவில் எங்கும் வியாபகமாக ஓடும் திருவடியை அனுபவித்து விளங்குவன் சிவயோகி என்றவாறு.

மண்டலம் ஐந்தாவன: பிருதிவி மண்டலம், அப்புமண்டலம், தேயுமண்டலம், வாயுமண்டலம், ஆகாயமண்டலம் என்பன.

வரை — வரைந்து கொடுக்கப்பெற்ற இடங்கள் அவை பன்னிரண்டாவன: மூலாதாரம், சுவாதிட் டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, அண்ணம், ஆஞ்ஞை, பிரமரந்திரம், சிர்சக்கு

மேலிடம், துவாத சாந்தம், அதற்குமேலிடம், பரவெளி என்பனவாம், இவற்றுள் பத்தாதாரங்கள் வரை சித்தாந்தசாராவளியிலும், அதற்கு மேலதாகிய இரண்டாதாரங்கள் தியானபிந்துவிலும் கூறப்பட்டுள்ளன.

அங்கே வாழ்கின்ற குடிகள் அறுவர்; கணபதி பிரமா, விஷ்ணு, ருத்ரன், மகேசர், சதாசிவன் இவர்கள். பிருதிவி மண்டலத்து டாகினி சத்தியும், அப்பு மண்டலத்து ராகினி சத்தியும், தேயு மண்டலத்து லாகினி சத்தியும், வாயுமண்டலத்துக் காகினிசத்தியும் ஆகாயமண்டலத்து ஸாகினி சத்தியும் ஆகிய மண்டலத்தெய்வம் ஐந்தும், அதற்குமேல் புருவநடுவில் ஹாகினியும், பிரமரந்திரத்தில் சதாசிவமும், அதற்கு மேல் பரசிவமும் விளங்குகின்றமையின் எஸ்மர் என்றருளினார்.

இவற்றைக் கண்டிட நிற்கும் கருத்தாவது, தியானித்துச் சமாதிகூடும் உள்ளம், அவ்வுள்ளம் திருவடி ஞானத்தை அனுபவித்து விளங்கும் என்பதாம்.

இங்ஙனமன்றி ஆறு எண்மர் என்பதற்கு ஆதாரத் தெய்வங்கள். மண்டலத்தெயவங்கள் சந்திர சூரியர்கள் சக்திகளுமாம் எனத் தொகையாகக் கூறுவாரும் உளர். சந்திர சூரியர்கள் மண்டலத் தெய்வமாக பிரமனும் விஷ்ணுவும் அதிட்டித்து நிற்க விளங்குபவர்கள் ஆதலின் வேறு கூறல் வேண்டாமையானும், சக்திகள் பலரையும் ஒன்றாக எண்ணுதல் கூடாமையானும் அவர் குறிப்புரை ஆராய்தற்குரியது. (75)

பூட்டொத்து மெய்யிற் பொறிப்பட்ட வாயுவைத்
தேட்டற்ற வந்நிலஞ் சேரும் படிவைத்து
நாட்டத்தை மீட்டு நயனத் திருப்பார்க்குத்
தோட்டத்து மாம்பழந் தூங்கலு மாமே. 624

இ-னின், பிராணனை அடக்கில் சிவத்தைத் தரிசிக்கலாம் என்றல் நுதலிற்று.

இ-ள்: இவ்வுடலில் பூட்டைப் பொறியைப் போலப் போய் மீளுகின்ற பிராணவாயுவை, தேட்டமற்ற பிரமரந்திரத்தில் பொருந்தச் சேர்த்தித் தேடியலைதலை விட்டு விழித்தபடி இருப்பார்க்கு தோட்டத்தில் மாம்பழந் தொங்கும் அதனை நுகரலா மென்றவாறு.

மெய்யில் பூட்டு ஒத்து பொறிப்பட்ட வாயுவை உடம்பில் பூட்டைப் பொறியைப்போல மேலுங் கீழுமாகப் போய்ப்போய் அகப்பட்டுக் கிடக்கின்ற பிராண வாயுவை. பூட்டைப்பொறி - கிணற்றுச் சகடை. அதில் கட்டிய கயிறு மேலுங்கீழுமாக மாறிமாறிப் போய் வருதல் உச்சுவாச நிச்சுவாச மாகப் பிராணன் இயங்கிக் கொண்டேயிருத்தல்: அதனை உச்சியில் கட்டிப்போட்டால் சிவம் விளங்கும் என்பதாம்.

தேட்டம் - தேடுதல். அம் தொழிற் பெயர் விகுதி. இடகலை பிங்கலை வழியாகப் பூட்டையில் கயிறுபோலப் போய் வந்து கொண்டிருக்கும் வாயு வைக்கட்டின் தேடுதல் அற்ற நிலைத்ததாகிய பிரமரந்திரத்தை தானே சென்றடையும்: அங்கேயே

வாயுவை நிலைக்கச்செய்து, மீட்டும் தேடி அலைதலை விட்டு விழிப்பாயிருப்பாருக்கு மாம்பழம் கிட்டும் என்பது கருத்து.

மாம்பழம் – சிவம். கனியினும் இனியஞதலின் சிவம் மாம்பழமென உருவகிக்கப்பட்டது பின்னரும் 'தோட்டத்தில் மாம்பழம் தோண்டி விழுந்தக்கால்' எனக் கூறுதல் காண்க. தோட்டத்து மாம்பழம் தூங்கலும் ஆம் என்றது ' பயன் மரம் உள்ளூர்ப் பழுத்தற்று '' என்றாற்போல எளிமையில் துய்க்க லாம் என்பது கருதி. (76)

உருவறி யும்பரி சொன்றுண்டு வானோர்
கருவரை பற்றிக் கடைந்தமு துண்டார்
அருவரை யேறி அமுதுண்ண மாட்டார்
திருவரை யாமனந் தீர்ந்தற்ற வாறே. 625

இம்-எனின், வானோர்க்கும் கிட்டாதபேறு சமாதி யாளர்க்குக் கிட்டும் என்றல் நுதலிற்று.

இ - ள் : உருவினை அறியுந்தன்மை ஒன்றுண்டு. அதனை உரைப்பேன் யான்; அரிய மலைமீதேறி அமுதுண்ண மாட்டாதாராகிய தேவர்கள் பெரிய மலையைப்பற்றிக் கடைந்து அமுதத்தை உண்டார் கள். சிவஞானப்பேறே எல்லையாக மனம் அடங்கு தலே சொரூபத்தை அறியும் தன்மையாம் என்றவாறு

உரு – சொரூபம். அஃதாவது இறைவனது சிறப்பியல்பு. அதனையும் அறியும் பரிசாவது

இறைவனது எல்லையற்ற திருவருளில் தான் வியாப் பியமாயடங்கித் தாடலைபோல நிற்றலை அறிதல்.

கருவரை - வலிய பெரியமந்தரமலை. இம் மலையையிட்டுத் தேவர் பாற்கடல் கடைந்து அமுதம் கொண்டனர். இதனைக்காட்டிலும் மேலான அமுதம் நமது உடலாகிய கிடைத்தற்கரிய மலையின் உச்சியில் சந்திர மண்டலத்து உள்ளது ; அதனை உண்ண வேண்டுமாயின் ப்ராணுயாமமுறை பற்றி, தாரணை தியான சமாதிகளின் முறையே நின்று எய்தவேண்டும் ; அஃதறியாத தேவர்கள் கடல முதம் உண்டனர் என அவர்களது நிலையின் இழிவை விளக்கியவாறு.

திரு - சிவஞானம். "பொன்னும் மெய்ப் பொருளுந் தருவானைப் போகமும் திருவும் புணர்ப் பானை" என்ற சாயாசிவத்தின் திருவாக்கிலும் மெய்ப்பொருள் தந்து திருபுணர்ப்பானை என்ற இயைபில் திரு ஞானமாதல் தெளிக. திரு வரையா மனம் — சிவஞானப்பேறே தமக்கு எல்லையாகக் கொண்ட மனம். சிவஞானம் வாயிலாகச் சிவதரிசனம் சிவயோகம் சிவபோகத்தை முறையே எய்தும்போது மனமழிதலின் மனந்தீர்ந்து அற்ற வாறே என்றார். தீர்தல் அறுதல் ஒருபொருட் பன்மொழி. "தன்செயலற்றுத் தானற்றபின் நாதன் தன்செயலே யென்றுந் தீபற" என்றதும் கண்டு எண்ணுதற்குரியது. (77)

நம்பனை யாதியை நான்மறை ஓதியைச்
செம்பொனின் உள்ளே திகழ்கின்ற சோதியை
அன்பினை யாக்கி யருத்தி ஒடுக்கிப்போய்க்
கொம்பேறிக் கும்பிட்டுக் கூட்டமிட் டாரே. 626

இ - ளின், சிவத்தொடு கலத்தலே சமாதி என்றல் நுதலிற்று.

இ - ள்: நம்பனை, முதற்பொருளை, நான்கு வேதங்களையும் அருளிச்செய்தவனை, செம்பொன்னுள் விளங்குகின்ற சோதி போன்றவனை அன்பு செய்து புறப்பொருளில் விளையும் ஆசையை ஒடுக்கிச் சென்று, உச்சிக்கொம்பாகிய சுழுமுனையில் சென்று கும்பகஞ் செய்து கலந்திருந்தார் என்றவாறு.

நம்பன் - நம்பப்படத்தக்கவன். ஆதி-முதலுக்கெல்லாம் முதல். நான்மறை ஓதி - வேதகாரணன். செம்பொனின் உள்ளே திகழ்கின்ற சோதி - பொற்சோதி. பொன் ஒருபொருள். சோதிபொருட்டன்மை யாதலின் ஞானசொரூபமாகிய சிவத்தை பொருட்டன்மையாகக் கூரியது. பொருள் அழியினும் பொருட்டன்மை நித்தியமாகலின் தன்மையைக் கூறிய நுண்மை அறிந்தின்புறத்தக்கது.

இறைவனிடம் அன்பினை யாக்கவேண்டுமாயின் புவனபோகங்களிற் செல்லும் அருத்தியை ஒடுக்கவேண்டும். விளைபுலத்திற்கு நீர்பாய்ச்ச விரும்புகின்றவன் வேற்றுநிலத்திற் பாயும்நீரைக் கட்டிப் பாய்ச்சுதல் போல அருத்தியைத் தடுத்து அன்பினை யாக்குக என்பதாம். கொம்பு - உடலாகிய மரத்

தினுச்சியாகிய கொம்பு ; என்றது சுழுமுனையை. கும்பிட்டு — வணங்கி என்பாரும் உளர். ஈண்டு பிராணாயாமவழி வந்த சமாதிக்கு ஏற்பக் கும்பகம் செய்து எனலே பொருந்துவதாம். கும்பு இட்டு - கும்பகம் செய்து, கூட்டம் இட்டார் – கலந் திருந்தார். (78)

மூலத்து மேலது முச்சது ரத்தது
காலத் திசையிற் கலக்கின்ற சந்தினில்
மேலைப் பிறையினுள் நெற்றிநேர் நின்ற
கோலத்தின் கோலங்கள் வெவ்வேறு கொண்டதே627

இம் - எனின், இதுவுமது.

இ - ள் : மூலாதாரத்தின்மேலே முக்கோணமும் நாற்கோணமும் உள்ளது. அங்கிருந்து பிராண வாயு குண்டலியோடு ஒத்துச்சேர்ந்து எழுந்து நெற்றிக்கு நேரான மேல்நிலையிலுள்ள மதி மண்டலத்துப் பொருந்தின் அழகினையுடைய வடிவங்கள் பல கொண்டதாம் என்றவாறு.

மூலாதாரத்தில் நாற்கோண சக்கரம் பூமண்டலத்தைக் குறிப்பது. முக்கோணம் அதன் மேல் இருக்கிறது. இது மணிபூரகத்தானம். இவற்றில் முறையே பிராணவாயுவொடு ஒத்து குண்டலி எழின் மேல் ஆஞ்ஞையிற்சென்று பொருந்தும். அப்போது நட்சத்திரம், தீபம், பரஞ்சோதி, ஆகாயப் பொறி இவைபோலப் பல அழகிய ஒளி வடிவங்கள் கொண்டு காட்சியளிக்கும் என்பது உணர்த்தியவாறும்.

கோலத்தின் கோலம் - அழகின் வடிவம்; நெற்றி நேர் நின்ற மேலைப்பிறை என மாறுக: நெற்றிக்கு நேரேயுள்ள பகுதியே மதிமண்டல மாதலின். (79)

கற்பனை யற்றுக் கனல்வழி யேசென்று
சிற்பனை எல்லாஞ் சிருட்டித்த பேரொளிப்
பொற்பினை நாடிப் புணர்மதி யோடுற்றுத்
தற்பர மாகத் தகுந்தண் சமாதியே. 628

இம் - எனின், இதுவும் மதிமண்டலஞ் சார்தலே சமாதியென்றல் நுதலிற்று

இ - ள்: அருள் விளக்கங்கொண்ட சமாதி யாவது, வீணான சங்கற்பங்களை விட்டு மூலக்கனலோடு மேற்சென்று, சிற்பத்திறம் மிகுந்த இந்தப் புவன போகங்களை யெல்லாம் படைத்துக் கொடுத்த பேரொளியழகனாகிய பரசிவத்தைத் தேடி, சேர்ந்துள்ளமதி மண்டலத்தோடு பொருந்தி சிவபோதமிகுந்து வணங்குதலாம் என்றவாறு.

தண் சமாதி, அற்று. சென்று, நாடி. உற்று தற்பர மாகஅத் தகும் எனக் கூட்டுக. கற்பனை - மனத்தாற் படைத்திட்டுக்கொள்வன. சிற்பனை - விசித்திரமான செயல்முறை; அதாவது சிற்பத் திறம். வேறு கூறி முடிபுகாணாது இடர்ப்படுவாரும் உளர்.

பொற்புப் பேரொளி - அழகிய பேரொளி; புணர் மதி - பொருந்திய மதிமண்டலம். தற்பர

மாக — அதனையே மேலாக; என்றது தற்போத மழிந்து சிவ போதமிகுத்து என்றவாறும். (80)

தலைப்பட் டிருந்நிடத் தத்துவங் கூடும்
வலைப்பட் டிருந்திடும் மாதுநல் லாளும்
குலைப்பட் டிருந்திடுங் கோபம் அகலுந்
துலைப்பட் டிருந்திடுந் தூங்கவல் லார்க்கே. 629

இ-ம் - எனின், சமாதி கூடியவர் இயல்பு இது வெனல் நுதலிற்று.

இ-ள்: மேற்கூறியவண்ணம் சமாதிகூட மெய்ப் பொருளாகிய சிவம் வெளிப்படும். திருவருட் சத்தியும் இவனுடைய சமாதியாகிய வலையுட்பட்டுப் பிரியாது இருப்பள். தவத்தைக் கெடுத்துக்கொண்டேயிருக்கும் கோபமும் நீங்கும். சிவபோகத்திற் றூங்குவார்க்குத் துலைநா வொப்ப மனமானது சமனுகும் என்றவாறு.

தலைப்படுதல் — கூடுதல். வலைப்பட்டிருந்திடும் மாது நல்லாளும் என்று அடையாக்கி, பிராணனைச் சுழுமுனையிற் செல்லாதவாறு தடுக்கும் குண்டலி யென்பாரும் உளர். அது பொருந்து மேற் கொள்க.

குலைப்பட்டிருந்திடும் கோபம் — கூட்டமாகிய கோபமுமாம். தூங்குதல்-யோகநித்திரை கொள்ளு தல். "தூங்காமற்றூங்கல்" என்பர் மூலன் மரபில் வந்த தாயுமானவர். துலைப்படுத்தலாவது தராசு முள் போலச் சமநிலைநிற்றல். [81]

சோதித் தனிச்சுட ராய்நின்ற தேவனும்
ஆதியும் உள்நின்ற சீவனு மாகுமால்
ஆதிப் பிரமன் பெருங்கடல் வண்ணனும்
ஆதி அடிபணிந் தன்புறு வாரே. 630

இ-ம் - எனின் சமாதியின் இயல்பை வேறொரு வாற்றான் விளக்குதல் நுதலிற்று.

இ-ள் : ஒளியோடு கூடிய ஒப்பற்ற சுடர்வடிவாக நின்ற சிவமும், ஆதியாகிய சத்தியும் உள்ளே விளங்குகின்ற சீவனும் ஆகிய மூன்றன் கலப்பே சமாதியாம். படைப்பின் முதல்வனாகிய பிரமனும், கடல் வண்ணனாகிய திருமாலும், முதற்பொருள் ஆகிய சிவத்தின் அடியினைப் பணிந்து அவனிடம் என்றும் நீங்கா அன்பெய்துவர் என்றவாறு.

சிவமும் சக்தியும் ஆன்மாவும் உண்ணின்றன ஆகும் எனக் கூட்டுக. உள்நின்றன ஆகும் என்றது சமாதி நிலையில் இயைந்தன என்பது கருத்து, அங்ஙனம் ஆன்மாவால் அடையப்படும் ஆதிப்பிரானைத் திருமாலும் பிரமனும் அடிபணிவர் அன்புறுவர் என்பதாம். (82)

சமாதிசெய் வார்க்குத் தகும்பல யோகஞ்
சமாதிகள் வேண்டாம் இறையுட னேகின்
சமாதிதா னில்லை தானவ னாகிற்
சமாதியில் எட்டெட்டுச் சித்தியும் எய்துமே. 631

இ-ம் - எனின், சமாதியின் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சமாதி செய்வார்க்குப் பல யோகங்கள் சித்திக்கும். எப்போதும் முதல்வனேடு ஒன்றியிருக்கின் சமாதிகள் வேண்டாம். ஆன்மாவாகிய தான் சிவமேயானுல் சமாதியே யில்லை. சமாதியினுல் அறுபத்து நான்கு கலைகளும் சித்தியாம் எ-று.

பல யோகமாவன மந்திரயோகம் பக்தியோகம் ஞானயோகம், கர்மயோகம் முதலியன.

தகும் – தக்கதாகும்; என்றது சித்திக்கும் என்பதாம்; எப்போதும் சிவத்தோடு சேர்ந்தேயிருப்பின் சமாதியே வேண்டாம். அட்டாங்கயோகப் பயன் சிவ சீவச் சேர்க்கையாதலின் அது சித்தித்தமையின் வேண்டாம் என்றதாம். ஞாதிருவும் ஞேயமும் ஒன்றுன போது சமாதிக்கு இடமில்லையாதலின் சமாதியேயில்லை என்றுர். சமாதியினுலை அறுபத்து நான்கு கலைகளும் சித்திக்கும் என்றது ஓதாமலே உள்ளத்தூறும் என்பதாம், இவற்றையே சேக்கிழார் பெருமான் 'உவமையிலாக் கலைஞானம்" என்றது. சமாதியில் எட்டு எட்டுச் சித்தியும் எய்தும் – சமாதியில் எட்டுகின்ற அணிமாதி எட்டுச் சித்திகளும் எய்தும் எனலுமாம் (83)

## 10. அட்டாங்கயோகப்பேறு

இது, முற்கூறிய இயமமாதி அட்டாங்க யோகங்களால் எய்தும் பயனை எட்டுத் திருமந்திரங்களால் உணர்த்துகின்றமையின் இப்பெயர்த் தாயிற்று.

## இயமம்

போதுகந் தேறும் புரிசடை யானடி
யாதுகந் தாரம ராபதிக் கேசெல்வர்
ஏதுகந் தானிவன் என்றருள் செய்திடு
மாதுகந் தாடிடு மால்விடை யோனே. 632

இ-ள் - எனின், இயமத்துறுபயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: பூவானது விரும்பியடையும் புரியான சடைகளையுடைய சிவபெருமான் திருவடிக்கண் எந்த வகையிலாயினும் அன்புபூண்டவர் விண்ணுலகடைவர். உமாதேவி மனமுவக்கத் திருகூத்துச் செய்யும் திருமாலாகிய இடபவாகனத்தையுடைய சிவபெருமான், இவன் எதனைவிரும்பினுன் - என்றறிந்து அதனை அருளுவன் என்றவாறு.

உலகவர் அனைவரும் பூவை விரும்பிச்சூட, பூ சிவன் சடையைவிரும்பி அணியாகின்றது என பூவின் விளையாக உரைத்து, சிவன் விருப்பிலான் என்பதை விளக்கியது.

யாது உகந்தார் - காமியம் நிஷ்காமியம் என்றவற்றுள் எதனைக் கருதியாவது அன்புபூண்டவர்கள். அமராபதி அமராவதியெனவும் வழங்கும். விண்ணுலகாகிய சுவர்க்கம் என்பது பொருள். இதனை இந்திரனுக்க எண்ணிப் பிரித்து இடர்ப்படுவர் சிலர். 'வேண்டுவார் வேண்டுவதே ஈவானாதலின் ஏது உகந்தான் இவன் என்று அருள்செய்திடும்' என்றார். உகந்து என்பதை உகக்க எனச் செயவெனெச்சமாக்குக.

மால் விடை — திருமாலாகிய விடை ; பெரிய விடையுமாம். அடியுகந்தார் என்பதற்கு ஈண்டு திருவடியை விரும்பி இயமத்துள் நின்றார் எனப் பொருள் கொள்க. இயமத்து நின்றார் இமையவராவர் என்பது கருத்து. (84)

## நியமம்

பற்றிப் பதத்தன்பு வைத்துப் பரன்புகழ்
கற்றிருந் தாங்கே கருது மவர்கட்கு
முற்றெழுந் தாங்கே முனிவர் எதிர்வரத்
தெற்றுஞ் சிவபதஞ் சேர்தலு மாமே. 633

இம் — எனின், நியமப்பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : திருவடியைப் பற்றிநின்று, அதன்கண் அன்புவைத்து, சிவபரம்பொருளின் புகழையே கற்றுக் கேட்டிருந்து, அங்கு அவ்வண்ணமே சிந்தித்தும் இருப்பவர்கட்கு முனிவர்களனைவரும் எழுந்து எதிர்கொண்டழைக்க, தெளிந்த சிவபதம் சேர்தலாகும் என்றவாறு.

பற்றி என்ற வினையெச்சத்திற்குச் செயப்படு பொருள் வருவித்து முடிக்க. கற்று இருந்து கருது மவர் எனக் கற்றல் தெளிதல் நிட்டைகூடல் கூறவே இடைநின்ற கேட்டலும் கொள்ளப்படும். முனிவர் முற்று எழுந்து ஆங்கே எதிர்வர எனப் பிரித்துக் கூட்டுக. முற்றும் என்ற உம்மை விகாரத்தால் தொக்கது. தெற்றும் - தெளிந்த. இறைவனிடம் அன்புபூணலும் அவன் புகழையே ஓதலும் சிந்தித்தலுமாகிய நியமந் தவறாதார் சிவபதம் சேர்வரென்பது கருத்து. (85)

ஆதனம்

வருந்தித் தவஞ்செய்து வானவர் கோவாய்த்
திருந்தம ராபதிச் செல்வன் இவனெனத்
தருந்தண் முழவங் குழலும் இயம்ப
இருந்தின்பம் எய்துவர் ஈசன் அருளே. 634

இ-ள் – எனின், ஆசனத்தின் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : ஆசனங்களில் இருந்து வருந்தித் தவஞ் செய்து இந்திரனாகத் திருந்திய அமராபதிச் செல்வன் இவனென்று பாராட்ட. தண்ணிய முழவமும் குழலும் ஒலிக்க ஈசனருளால் புதிய இன்பத்தையும் எய்துவர் என்றவாறு.

இயம்ப இருந்து இன்பம் எய்துவர் எனலுமாம். வருந்தித் தவஞ்செய்து என்பது பலவகை ஆசனங்களில் வருந்தியிருந்து, தவஞ்செய்து எனப் பொருள் தந்து நின்றது.

வானவர்கோன்-இந்திரன். அமராபதிச் செல்வன் இவன் என – தேவருலகிற்கே பெரிய செல்வன் இவன் என்று அனைவரும் பாராட்ட. ஆசனப் பயிற்சியுடையார். வாச்சியம் ஒலிக்க, இந்திரனாகி இன்ப வாழ்வு எய்துவர் என்பது கருத்து. (86)

பிராணயாமம்

செம்பொற் சிவகதி சென்றெய்துங் காலத்துக்
கும்பத் தமரர் குழாம்வந் தெதிர்கொள்ள
எம்பொற் றலைவன் இவனென்னச்சொல்ல
இன்பக் கலவி இருக்கலு மாமே. 635

இம் - எனின், பிராணுயாமப் பயனைத் தொகுத் துணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : செம்பொன்னைப் போலும் சிவபெருமானுடைய உலகை எய்துகின்றகாலத்து. பூரண கும்பத்துடன் தேவர்கள் வந்து எதிர்கொண்டழைக்க, பொன் போல் போற்றத்தக்க எங்கள் தலைவன் இவனும் என்று அனைவரும் பாராட்ட, இன்பச்சேர்க்கையுள் என்றும் இருக்கலாம் என்றவாறு.

செம்பொற் சிவகதி என்பதில் செம்பொன் என்ற அடைமொழி சிவகதி என்ற தொடர்மொழியுள் சிவமாகிய முதன்மொழியைமட்டும் விசேடித்து வந்தது. பிராணுயாமத்தை உபாயமாகக்கொண்டு சமாதிகூடி, பின்னர் சிவஞானப்பேறுற்று அடைய வேண்டிய தொன்றைப் பரம்பரைத்தொடர்பு கருதி இதற்கே பயனுகக் கூறியருளினர்.

பன்னும் பயில்யோகம் பரம்பரையின் விரும்பினராகிய சுந்தரர்பெருமான்,

"இந்திரன் மால்பிரமன் எழிலார்மிகு தேவரெல்லாம்
வந்தெதிர் கொள்ளவென்னை மத்தயானை யருள்புரிந்து
மந்திர மாமுனிவர் இவனாரென எம்பெருமான்
நந்தம ரூரனென்ருன் நொடித்தான்மலை யுத்தமனே"

என்று அருளிய அனுபவமும் இதனை வலியுறுத்துதல் காண்க. (87)

## பிரத்தியாகாரம்

சேருறு காலந் திசைநின்ற தேவர்கள்
ஆரிவன் என்ன அரனும் இவனென்ன
ஏருறு தேவர்கள் எல்லாம் எதிர்கொள்ளக்
காருறு கண்டனை மெய்கண்ட வாறே. 636

இ-ள்: சிவயோகத்தைச் சேர்கின்ற காலத்துத் திக்குப்பாலகர்களாகிய தேவர்கள் இவன்யார் என்று கேட்க, சிவபெருமான் நாமே அவன் என்று அறிவிக்க, அழகு மிக்க மற்றைத் தேவர்களனைவரும் எதிர் கொண்டழைக்க, கருமை நிறம்பொருந்திய கழுத்தினையுடைய சிவபெருமானை நேரில் தரிசித்தவர் ஆவார் என்றவாறு.

இம் - எனின், பிரத்தியாகாரப் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

பிரத்தியாகாரத்தில் நிற்பார். சிவலோகம் சென்று சிவனைச் சேவிப்பர் என்பது கருத்து. இங்ஙனமன்றிச் சாரூபம் பெறுவர் எனக்கொண்டு இடர்ப்படுவாரும் உளர். சாரூபம் பெற்ற ஆன்மாவைத் திசைகாப்பாளர் இவன் யார் என்று வினவார் ஆதலானும் அஃதுரையன்மை அறிக.

தேவர்கள் எல்லாரும் எனற்பாலது எல்லாம் என நின்றது ஆரிடமாதலின். கார் உறு என்பதில் உறு உவமவுருபுமாம். (88)

## தாரணை

நல்வழி நாடி நமன்வழி மாற்றிடுஞ்
சொல்வழி யாளர் சுருங்காப் பெருங்கொடை
யில்வழி யாளர் இமையவர் எண்டிசைப்
பல்வழி எய்தினும் பார்வழி யாகுமே. 637

இ-ம் - எனின், தாரணைப்பயனிதுவென உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : யோக நூல்களிற் சொல்லப்பட்ட நெறிகளைக் கடைப்பிடிக்கின்றவர்கள் நல்ல வழியாகிய தாரணையை நாட அது நமன் வருகின்ற வழியை அடைக்கும், மற்றும் வளஞ்சுருங்காத பெருங்கொடை இல்லாதவிடத்தில் வாழ்கின்றவர்களாகிய இமையவர்கள் வாழ்கின்ற எட்டுத்திசையில் பல வழிகள் எய்தினும் அவர்களுக்கு அவ்விடங்கள் பூமியைப்போலப் பழகியதாம் என்றவாறு

சொல்வழியாளர் நல்வழி நாட நமன்வழி மாற்றிடும், பெருங்கொடையில்வழியாளர் இமையவர் எண்டிசைப் பல்வழி எய்தினும் (அவை) பார் வழியாம் எனக்கூட்டுக.

சொல்வழி - நூல்களில் சொல்லப்பட்ட நெறி, நல்வழி - நல்ல நெறியாகிய தாரணை. பெருங்கொடையில்வழியாளர் என்றது "ஈவாரும் ஏற்பாரும் இல்லாத வானம்" என்றதை விளக்கிற்று.

சுருங்காப் பெருங்கொடை - பொருட்கொடையைக் குறிப்பித்தது அன்று; ஞானக்கொடையைக்

குறித்து நின்றது. விண் போகபூமியாதலின் அங்கு வாழ்வாராகிய தேவர்கள் தவம் முதலியன இயற்றி, பொறி அடக்கி, ஞானம் எய்தும் வாய்ப்பு என்றும் இலராகலின் இங்ஙனம் கூறப்பட்டது. கொடையில் வழியாளராகிய இமையவர் என இயைக்க. அவர்கள் வாழ்கின்ற எட்டுத்திசை முதலிய எவ்வழி எய்தினும் அவ்வழிகள் யாவும் இவர்களுக்குப் பார் வழியாம் என்க. "யாதும் ஊரே" என்பது கருத்து. (89)

தியானம்

தூங்கவல் லார்க்குந் துணையேழ் புவனமும்
வாங்கவல் லார்க்கும் வலிசெய்து நின்றிட்டுத்
தேங்கவல் லார்க்குந் திளைக்கும் அமுதமுந்
தாங்கவல் லார்க்குந் தானிட மாமே, 638

இம் - எனின், தியானப்பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பாற்கடலில் தூங்கவல்லராகிய திருமாலுக்கும், ஒன்றற்கொன்று துணையான ஏழுலகங்களையும் படைக்கவல்லவனாகிய பிரமனுக்கும், தான் ஒருவனே வலிமையுடனின்று அழிக்கவல்ல அரனுக்கும், உண்ணப்படுகின்ற அமுதத்தைத் தாங்கவல்ல தேவர்களுக்கும் தியானிப்போனாகிய தானே இடமாம் என்றவாறு.

தன்னிடமாமே எனப் பாடங்கொண்டு இவர்களுக்கெல்லாம் இடம் தியானிப்பவனாகிய தன்னிடம் ஆம் எனலுமாம். வாங்குதல் - படைத்தல். தேங்குதல் - அழித்தல். (90)

## சமாதி

காரிய மான உபாதியைத் தான்கடந்
தாரிய காரணம் ஏழுந்தன் பாலுற
வாரிய காரண மாயத் தவத்திடைத்
தாரியல் தற்பரஞ் சேர்தல் சமாதியே 639

இம் - எனின், சமாதியினியல்பும் பயனும் உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : காரிய உபாதிகள் ஏழையும் அகன்று, காரண உபாதிகள் ஏழையும் பொருந்தி, பரம்பரையாக வரும் நீண்ட காரணம் கெட. தவத்தில் ஒழுங்கான தற்பரம்பொருளைச் சார்தலே சமாதியின் பயனும் என்றவாறு.

காரிய உபாதி ஏழ் - ஆன்மாக்களுக்கு ஆணவமல மறைப்பால் விளைந்த உபாதிகள் ஏழு. அவையாவன. இறைமையின்மை, அற்ப அறிவுடைமை, அளவுபட்ட தன்மை, மாயையோடு கூடியதன்மை, சிறிதாற்றலுடைமை, சுதந்திரமின்மை, காணுமை என்பன. இவற்றை வடநூலார் முறையே அநீசத்துவம், கிஞ்சிஞ்ஞத்வம், பரிச்சின்னத்துவம், மாயாசகித்துவம், அற்பசக்தித்துவம், பராதீனத்துவம், அபரோக்ஷத்வம் என்பர். இவ்வேழுபாதிகளையும் அகன்று என்பதாம். கடத்தலாவது சமாதியாளர்க்குச் சீவபோதம் கழலுதலின் சீவோபாதிகளும் நீங்குவனவாயின.

ஆரியகாரண உபாதி ஏழு — சிறந்த அல்லது ஆரியனுகிய சிவனுடையதான காரண உபாதிகள்

ஏழு. அவையாவன : இறைமை. முற்றறிவுடைமை எங்குந்தாறுதல். இயல்பாகவே மாயையின்மை, வரம்பிலாற்றல், தன்வயத்தறுதல், ஒன்றியுணர்தல் என்பன. இவற்றை வடநூலார் முறையே ஈசத்துவம், சர்வஞத்வம், வியாபகத்துவம், மாயாரகிதத்வம், சர்வசக்தித்வம், சுதந்திரத்வம். பரோக்ஷத்வம் என்பர்.

வாரிய காரணம் மாய - தொடர்ந்து வருகின்ற காரணமாகிய மாயை கெட. தாரியல்-ஒழுங்கான. தார்-ஒழுங்கு. தற்பரம்-தானே மேலானசிவம். (91)

## 11. அட்டமாசித்தி

அட்டமாசித்தி என்பது தவத்தால் எய்தக்கூடிய எட்டுவகையான பேறுகளாம். அவை அணிமா முதலியன. இவற்றின் பெயரும் முறையும் பின்னர்த் தனித் தனியே விதந்து கூறப்படும். இவையெட்டின் பொது இயல்பை முப்பத்தொரு மந்திரங்களால் உணர்த்துகின்றார் ஆசிரியர்.

### பரகாயப்பிரவேசம்

பணிந்தெண் டிசையும் பரமனை நாடித்
துணிந்தெண் டிசையுந் தொழுதெம் பிரானை
அணிந்தெண் டிசையினும் அட்டமா சித்தித்
தணிந்தெண் டிசைசென்று தாபித்த வாறே. 640

இம் - எனின், எங்கும் இறைவனைக் கண்டு அட்டமாசித்திகளை எய்துக என்றல் நுதலிற்று.

இ - ள்: எட்டுத்திசைகளிலும் வணங்கி, அங்கங்கு இருப்பவராக உறுதிகொண்டு தொழுது எல்லாத் திசைகளிலும் பெருமானையே அணிசெய்து கூறி, அதனால் அட்டமாசித்திகளிற்றங்கி அவைகளை எட்டுத் திசைகளிலும் நிலைபெறுவித்த விதம் இது ஆகும் என்றவாறு.

எண்டிசையும் பரமனைப் பணிந்து என்பது, இயமமுதல் பிரத்தியாகாரம் வரையுள்ள உறுப்புக்களை உணர்த்தின. எங்ஙனம் எனின் விரதமும் புலனொடுக்கமும் மன ஒடுக்கமும் ஆகிய இவை வாயிலாக இறைவனுடைய சிறப்பியல்பு (சொரூப இலக்கணம்) தெரியும் என. 'காருறு கண்டனை மெய்கண்டவாறே' என்றதால் முன்னர்க் குறிப்பித்தின்ராதலின் சிவனே முதல்வன் எனத் தெளிந்து பணிந்தவாறும்.

துணிந்து தொழுது என்பன முறையே தாரணை தியானங்களைத் தெரிவித்தன. எங்ஙனமெனின் 'எண்டிசைப் பல்வழி யெய்தினும் பார்வழியாமே' என்றும், 'ஏழ்புவனமும் துணைவாங்க வல்லார்' என்றும் அருளினமையின் தாரணை தியான நிலைகளில் நிற்பார் எத்திசையிற் செல்லினும், அது பூமிபோற் பழகியதாக ஏழு புவனங்களும் படைக்கு மாற்றலையும் எய்துவர் என்றமையான் என்க.

எம்பிரானை எண்டிசையும் அணிந்து அட்டமாசித்தி தணிந்து, எண்டிசைச் சென்று தாபித்தவாறே என்பது சமாதிகூறியது. காரிய உபாதியைக் கடந்து காரண உபாதியாய்த் தற்பரஞ்சேர்தல் சமாதி

யாதலின் ஈசத்துவம் சார்ந்துநிற்கும் இந்நிலை யதனை உணர்த்திற்றாதல் காண்க. இவ்வண்ணம் இயமாதி சமாதி யந்தமான யோகங்களினின்றார் அட்டமாசித்தி அடைவர் என்பது கருத்தாம்.

பணிதல் - தன்முனைப்பு அடங்குதலாகிய ஆணவ வாட்டம். துணிதலும் தொழுதலும் சிவனே முழு முதற்கடவுள் என்ற சிவஞானப்பேறு. அணி தலும் தணிதலும் சிவயோகம். தணிதல் - தங்கு தல். அணாதல் - இறைவன் வியாப்பியமாய் தான் ஏகதேச வியாபகமாய் அடங்கி நிற்றல். அணி அணி பவனிடத்தில் ஏகதேசமாக விளங்குதல்போல ஆன்மா இறைவனிடம் அடங்கித் தோன்றல். (92)

பரிசறி வானவர் பண்பன் அடியெனத்
துரிசற நாடியே தூவெளி கண்டேன்
அரிய தெனக்கில்லை அட்டமா சித்தி
பெரிதருள் செய்து பிறப்பறுத் தானே. 641

இம் - எனின், இறைவனடிகாணின் அட்டமா சித்திகளும் எளியவென்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: தேவர் முதலான அனைத்துயிர்களின் தன்மையையும் அறிந்துகொள்கின்ற பண்பனாகிய இறைவன் திருவடியே சரண் எனக் குற்றமற நாடி மிகத்தூய்மையான பரவெளியைக் கண்டேன்; ஆத லால் அடியேற்கரியது ஒன்றும் இல்லை; அட்டமா சித்திகளையும் அடியேற்கு அருளி அடியேனுடைய பிறவியை நீக்கினான் என்றவாறு.

வானவர் பரிசு அறி பண்பன் எனக் கூட்டுக. வானவரைக் கூறவே ஏனைய தாவரமீறுன ஆன்ம வர்க்கங்களும் கொள்ளப்படும். எல்லா உயிர் களையும் இருந்தநிலையில் இருந்தே அறிதல். சிவ னுடைய முற்றறிவுக்கும் வரம்பிலாற்றலுக்கும் இயல்பாம். சிவனுடைய திருவடியென நாடிக் கண்டது பரவெளியாக இருந்தது என்றது அவனடி பரவெளியே யாதலின் என்க. அங்ஙனம் பர வெளியைக் கண்ட எனக்கு அரிய தொன்றுமில்லை என்பதாம். (93)

குரவன் அருளிற் குறிவழி மூலம்
பரையின் மணமிகு சங்கட்டம் பார்த்துத்
தெரிதரு சாம்பவி கேசரி சேரப்
பெரிய சிவகதி பேறெட்டாஞ் சித்தியே. 642

இம் - எனின், குருவின் உபதேசப்படி யோக நெறி நின்று, அட்டமாசித்தி அடையலாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : குருவருளால் அவன் சுட்டிக்கூறிய நெறியே மூலாக்கினியைப் பராகாயத்தின்கண் கூட்டுதலால் விளையும் மிக்க துன்பத்தைக்கண்டு. சாம்பவி கேசரி யோகங்களைப் பொருந்த. எல்லா வற்றிலும் சிறந்த சிவகதியும் அட்டமாசித்திப் பேறும் ஆம் என்றவாறு.

குரவன் - ஞானுசாரியன். குறி - அவன் குறித்த நிலை. மூலம் பரையின் மணம் மிகு சங்கட்டம் - மூலக்கனல் பராகாயத்தின்கண்ணே கூடுதலால் விளைந்த மிக்க துன்பம். மணம் - கூட்டம்.

சாம்பவி ; இது அநாகத சக்கரத்திலிருக்கும் சிவத்தினிடம் சித்தத்தையும் வாயுவையும் ஒடுக்கி அடங்கி இருக்கச் செய்வது. ஒருமனப்பட்ட யோகி. உட்குறிப்புடன் இன்பவடிவினனாகிய இறைவனையே கண்டு, விழிப்பும் மூடுதலும் இல்லாத பார்வையுடனிருத்தல் என்று சாண்டில்யம் கூறுகிறது.

கேசரி என்பது சுழுமுனையாகிய சூனியத்தில் அதாவது புருவமத்தியில் சகல ஆகாயங்கட்கும் சம்பந்தமிருப்பதால் ஆகாய சமுதாயத்தில் பிராணன் ஒடுங்க உண்டாகும் அநுபவமாம். சுருங்கக்கூறின் சாம்பவிக்கு வெளிதிருட்டியால் வெளி அவஸ்தையாகிய சங்கட்டமும், கேசரிக்கு புருவ நடுப்பார்வையால் உள்ளவஸ்தையாகிய சங்கட்டமும் உண்டாம். அவற்றை வென்று இரண்டற்றுத் தியானிக்கின் சிவகதியும், அட்டமாசித்திகளும் அடையும்என்பதாம்.சாம்பவிநிலையினரையே சேக்கிழார் பெருமானார் விழித்தகண் குருடாய்த் திரியும் வீரர் எனக் குறித்தனர் இவையிரண்டும் யோகமாகவும், முத்திரைகளாக்வும் யோக நூல்களில் வழங்கப்படுகின்றன. (94)

காயாதி பூதங் கலைகால மாயையில்
ஆயா தகல வறிவொன்ற னாதியே
ஓயாப் பதியதன் உண்மையைக் கூடினால்
வீயாப் பரகாயம் மேவலு மாமே. 643

இ-ள் - எனின். மண்முதற் குடிலையீறான மாயையினீங்கிய ஆன்மா அரனையடையின், அழியா உடலை அடையலாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஆகாயம் முதலான பூதங்களும், கலை காலம் முதலாயினவும், மாயையுமாகிய இவற்றில் ஆய்ந்து தோயாது அகன்ற அவ்வொன்றுபட்ட அறிவு இடைவிடாமல் அநாதியே ஆன்மாவோடு தொடர்புடைய பரசிவத்தின் உண்மையோடு கலந்தால், என்றும் அழியாத மேலான உடலை மேவலாம் என்றவாறு

காயாதி பூதம் - ஆகாயம், காற்று. தீ. நீர். நிலம் முதலான பூதங்கள் காயம் – ஆகாயம் என்பதன் முதற்குறை. இதனை இங்ஙனம் கொள்ளாது உடல் கருவி கரணங்கள் உயிர் என உரைத்தாரும் உளர். அவர்களைப் பின் பற்றி, சென்றவழிச் செல்வோராகப் பலரும் உரை வகுத்தனர். அவை பொருந்தாமையுணர்க.

கலை, காலம் என்பன வித்யா தத்துவங்கள் ஏழனையும் குறித்து நின்றன. மாயையில் – சுத்த மாயா காரியமாகிய சிவதத்துவங்கள் ஐந்தனையும், ஆயாது அகல என்றது தத்துவங்களை ஆய்ந்து அவற்றுள் தோயாது நீங்க என்றதாம்

அறிவொன்று – ஒன்றறிவு; ஒன்றினும் பற்றுற ஆன்மா. ஆன்மாவை அறிவென்றது பண்பாகு பெயர். அநாதியே ஓயாப் பதி – அநாதிசம்பந்த முடைய பரசிவம். வீயாப் பரகாயம் – அழியாத நித்திய சரீரம். தத்துவ தாத்துவிக வாசனையறச் சிவம் பிரகாசிக்கும்: அது பிரகாசிக்க முத்திநிலை எய்தலாம் என்பது கருத்து. (95)

இருபதி னாயிரத் தெண்ணூறு பேதம்
மருவிய கன்ம மாமந்த யோகந்
தருமிவை காய உழைப்பாகுந் தானே
அருமிரு நான்காய் அடங்குமா சித்திக்கே. 644

இ-ம் - எனின், கன்மயோகங்கள் காய உழைப்பு; அவை அட்டாங்க யோகத்துள் அடங்கும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பொருந்திய கன்மயோகம் இருபதினாயிரத்தெண்ணூறு பேதங்களையுடையது. அவைகள் உடல் உழைப்பேயாகும். அவை அட்டாங்கயோகத்துள் அடங்கி, அட்டமாசித்திகளை அளிப்பதாம் என்றவாறு.

இருபதினாயிரத் தெண்ணூறு என்பது பல என்னும் பொருளில் வந்தது என்பர் சிலர். முழு எண்ணைக் கூறாமல் எண்ணூறு உடன்சேர்த்து உரைத்திருப்பதனால் கன்மயோகம் இருபதினாயிரத் தெண்ணூறாக இருக்கலாம் என்று ஊகிக்கப்படுகிறது. உண்மை யோகநூல்களைக் கொண்டு துணிய வேண்டுவது.

கன்மமாம் அந்தயோகம் - கன்மயோகம், மந்தயோகம் என்பாரும் உளர். கன்மயோகங்கள் அனைத்தும் உடலுழைப்பே.

அட்டாங்யோகத்துள் கன்மயோகங்கள் அடங்கு முறையாவது: கன்மயோகங்களின் பிரிவாகிய சிரவண மனனங்கள் நியமத்திலும், துதி ஸ்மரண பூஜைகள் பரம்பரையினால் சமாதியிலும் அடங்கும்

என்று பாதஞ்சல யோக சூத்திரத்துக் கூறப் பெற்றுள்ளது. இவ்வாறே ஏனையவும் அடங்கும் முறைகளை அவ்வந்நூல்களின் துணைக்கொண்டு ஆய்தல்வேண்டும். (96)

மதிதனில் ஈராறும் மன்னுங் கலையின்
உதய மதுநா லொழியவோ ரெட்டுப்
பதியுமீ ராறுண்டு பற்றறப் பார்க்கில்
திதமான ஈராறு சித்திக ளாமே. 645

இம் - எனின், பன்னீராண்டுப் பிராணாயாமம் பழகின் சித்திகளை எய்தலாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : சந்திரநாடியாகிய இடகலையிலே பன்னிரண்டங்குல அளவாய் இழுக்கப்பெறும் பிராணனில் (பிங்கலை வழியாக) வெளிப்படுதல் நாலங்குல அளவு போக, எட்டங்குல அளவு உள்ளே தங்கும். இதனைப் பன்னிரண்டாண்டு நிஷ்காமியமாகப் பார்க்கில் உறுதியாக அட்டமா சித்திகளை அடையலாம் என்றவாறு.

மதி — இடகலை. கலை - பிராணகலை; என்றது பிராணவாயுவை. ஈராறு உம்மைத்தொகை; எட்டு என்பது பொருள். இதன் விரிவு மேலே பிராணாயாமத்தில் 'கூடமெடுத்துக் குடிபுக்க மங்கையர்' என்ற திருமந்திரத்துக் கூறப்பெற்றது, (97)

நாடும் பிணியாம் நஞ்சனஞ் சூழ்ந்தக்கால்
நீடுங் கலைகல்வி நீள்மேதை கூர்ஞானம்
பீடொன்றி னல்வாயாச் சித்திபே தத்தின்
நீடுந் துரங்கேட்டில் நீண்முடி வீராறே. 646

இம் - எனின், இதுவும் யோகத்திற்குரிய கால வரை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நமது உறவினர் சூழின் பிறவிப்பிணியாம். மிக்க கலை, கல்வி, நுண்ணறிவு, நிறையறிவு, பெருமை இவை ஒன்றினால் அட்டமாசித்திகள் அடையா. மிக்க பொறுமை, ஆசிரிய உபதேசம் இவற்றால் எய்துவன இவ்வியோகம். சித்தி எய்துதற்கு உரியகாலம் பன்னிரண்டாம் என்றவாறு.

நம் சனம் – நமக்கு உறவான மக்கள். தேக சம்பந்தமான உறவினரிடம் விளையும் பற்று மறு பிறவிக்கு வித்தாம் ஆதலின் பிணியாம் என்றருளினர். பிணி – பாசம்.

கல்வி முதலியன தருக்கிற்குக் காரணமாதலின் அவற்றால் மனமடங்காமையின் சித்திகள் வாயா வாயின. பின்னர் அவை விளையுமுபாயம்யாவையோ வெனின் குரு உபதேசம் கேட்டலும் உற்ற நோய் நோன்றலாகிய பொறையுமாம். சித்திக்குங் காலஎல்லை பன்னீராண்டு என்பதாம் (98)

ஏழா னதிற்சண்ட வாயுவின் வேகியாந்
தாழா நடைபல யோசனை சார்ந்திடுஞ்
சூழான ஒரெட்டில் தோன்று நரைதிரை
தாழான ஒன்பதிற் றுன்பர காயமே. 647

இம் – எனின், ஆண்டுகள் தோறும் வளரும் சித்தி வகைகளைத் தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஏழாவது ஆண்டில் சண்டமாருதம் போன்றவேகத்தையுடையவனாவன் நடைதளராமல்

பல யோசனை செல்லும் வன்மைகிட்டும். சூழ்ந்த எட்டாம் ஆண்டில் நரைதிரை தோன்றா. தங்குதலை யுடைய பத்தாம் யாண்டில் பரகாயம் விளையும் என்றவாறு.

ஏழு, எட்டு, ஒன்பது முதலியன தவம் பயிலும் ஆண்டின் எல்லைகுறித்து நின்றன. ஏழாண்டு பழகின் வாயுவேகமாக நெடுந்தூரம் செல்லும் ஆற்றல் உண்டாம். இவ்வண்ணமே எட்டா மாண்டில் நரைதிரையுண்டாகா; ஒன்பதாம் ஆண்டில் அழியா உடல் உண்டாம். (99)

ஈரைந்திற் பூரித்துத் தியான உருத்திரன்
நேரொன்று பன்னொன்றில் ஈராறும் எண்சித்தி
ஈரொன்று மேலேழ் கீழேழ் புவிச்சென்று
ஓரொன்று வியாபியாய் நிற்றலீ றாறே 648

இ - னின் : இதுவுமது.

இ - ள் : பத்தாம் யாண்டில் அகமும் புறமும் நிறைந்து, தியானிக்கத்தக்க உருத்திரர்களைத் தொகையான் ஒத்த பதினொராம் யாண்டில் அட்ட மாசித்திகள் விளையும், பன்னீராண்டில் சிறப்புப் பொருந்திய மேல் ஏழு, கீழ் ஏழு என்று விதிக்கப் பெற்ற உலகங்களில் சென்று, சிந்தித்தல் பொருந் திய எங்கும் நிறைபொருளாய் நிற்றல் உண்டாம் என்றவாறு.

பூரித்து – நிறைந்து. உருத்திரன் நேர் பன்னொன்று – உருத்திரர்களை ஒத்த பதினொன்று என்ற எண். ஓர் ஒன்று – வியாபியாய் – ஏகதேச

வியாபியாக அன்றி ஒவ்வொருலகத்தும் வியாபித்த பொருளாய் சாத்தன் சாத்தனூரில் இருந்தான் என்றவழிக் கயிலையில் இலன் என்றது போலன்றி எங்கும் நிறைபொருளாய் நிற்றல். (100)

தானே அணுவுஞ் சகத்துந்தன் நோன்மையும்
மானுக் ககனமும் பரகாயத் தேகமுந்
தானுவ தும்பர காயஞ்சேர் தன்மையும்
ஆனுத வுண்மையும் வியாபியு மாம்எட்டே. 649

இம் - ளின், அட்டமாசித்திகள் இவையெனல் நுதலிற்று.

இ — ள் : தானே அணிமாவும், உலகமாகிய மகிமாவும், கனமுடைமையான கரிமாவும். எல்லா வற்றையும் அடக்கியுமமையாத ஆகாயமாகிய லகிமாவும், அழியா உடலையடைதலாகிய பிராத்தி யும், தானே யாதலாகிய பராகாயத்தையடையும் ஆற்றலாகிய பிராகாமியமும், அமையாத உண்மை யாகிய ஈசத்துவமும் வியாப்பியமாகிய வசித்துவமு மாகிய எட்டும் சித்திகளாம் என்றவாறு.

சங்கற்பமாத்திரத்தால் தன் தன்மையைக் கெடுத்தலால் பரமாணுவைப்போல உடல் நுண்மை யாதலாகிய அணிமாவை, 'தானே அணுவும்' என்ற பகுதியால் உணர்த்தினர்.

பிரகிருதியைப் பூரித்தலால் ஆகாயம் முதலியன போல உடல் பெரிதாதல் மகிமா. இதனையே 'சகத்தும்' என்றது. சகம் பெரியது. அதுபோலப் பருத்தல்.

மிக்க லகுத்துவம் உடைய பஞ்சு முதலானவை மலைபோலக் கனமுடைமையாகிய கரிமா. இதனைத் 'தன் நோன்மையும்' என்ற பகுதியால் குறித்தது. (நோன்மை – திண்மை.

மலைபோன்றவை பஞ்சுபோல இலேசாதலாகிய லகிமா 'ஆணுக் ககனமும்' என்பதனாற் காட்டப் பெற்றது. ஆகாயம் எல்லாவற்றையும் அடக்கி யிருப்பினும் பஞ்சைக்காட்டிலும் மிக மென்மை யானது உணர்க.

எல்லாம் முன்னிற்றல் பிராத்தி. அதாவது பூமியிலிருந்து கொண்டே சந்திரனைத் தீண்டுதல் போலச் சேய்மைக்கண் உள்ளனவற்றையும் அணித்தாக அடையப் பெறுதல். இது 'பரகாயத் தேகம்' என்ற பகுதியாற் குறிக்கப்பெற்றது.

நினைத்ததை நினைத்தபடி முடித்தல் பிராகா மியம். நீரில் மூழ்குவதும், நிலத்திலும் மூழ்கி யெழும்புதலும் போல்வன. இது தானவதும் என்பதாற் குறிக்கப் பெற்றது. தானவதாவது தான் எல்லாவற்றிலும் காணப்பெறுதல்.

பூதபௌதிகங்களைப் படைத்தலாதி தொழிலி யற்றுதலாகிய ஈசத்துவம் 'பரகாய ... ... சேர் தன்மையும்' என்பதன் குறிப்பு. பரகாயம்–மேலான உடல். இப்படைத்தலாதியன இறைவன் செய்யும் பஞ்சகிருத்தியங்கள் போன்றனவல்ல; விசுவாமித்ர சிருஷ்டி போன்ற ஏகதேசம் விளங்கும் ஆற்றலே. முத்தான்மாக்க ளாயினும் சிவத்தைப் போல அவ் வாற்றல் என்று மில்லாமையைச் சாத்திரங் கொண்டு துணிக.

உலகச் சூவாதீனம் செய்தலாகிய வசித்துவம் 'ஆனாத உண்மை' என்றதால் அறிவிக்கப்பட்டது. தான் எல்லாப் பொருளிடத்தும் கலந்து இருக்கும் தன்மை. (101)

தாங்கிய தன்மையுந் தானணுப் பல்லுயிர்
வாங்கிய காலத்து மற்றோர் குறையில்லை
யாங்கே எழுந்தோம் அவற்றுள் எழுந்துமிக்
கோங்கி வர்முத்தி முந்திய வாரே. 650

இம் - எனின், உயிர்கள் என்றும் பிரணவத் தியானஞ் செய்யின் முத்தி சித்திக்கும் என்ப துணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சிவயோகியாகிய தான் அணுத்தன்மை யெய்திப் பலவுயிர்களையும் தாங்கிய காலத்தும். அவற்றை வாங்கித் தம்மிடம் ஒடுங்கியகாலத்தும் ஓர் மாற்றமில்லை. தவசித்திபெற்ற உயிர்களாகிய அவற்றுள் அப்போதே மேலெழுந்த ஓம் என்னும் நாதம் (உச்சிவரை) எழுந்து மிகுந்து உயர்ந்து சென்ற விதமே முத்திமுற்பட்டவாறும் என்றவாறு.

தான் அணு - சிவயோகத்திற் றலைப்பட்ட ஆன்மாவாகிய தான் பரமாணுவினும் நுண்ணணு வாகி என்பது. இது அணிமா கூறியது. பல்லுயிர் தாங்கிய தன்மையும் - பல உயிர்களையும் படைத்துக் காத்த இயல்பும். தாங்குதல் – காத்தல். அதற்கு இன்றியமையாத படைத்தலையும் உணர்த்தி நின்றது.

பல்லுயிர் வாங்கிய காலத்தும் 'வைத்துவாங்கு வாய்' என்புழிப்போல வாங்குதல் ஒடுக்குதலா

யிற்று. குறை - மாற்றம். இறைவன் ஐந்தொழிலை யாற்றுகினும் விகாரியாகாததுபோலத் தவத்திற் றலைப்பட்ட ஆன்மாவும் ஈசத்துவம் பெறுதலின் இவனும் நிர்விகாரியே யாவன் என்றவாறும்.

அவற்றுள் ஆங்கே எழுந்த ஓம் மிக்கு எழுந்து ஓங்கியவா முத்தி முத்தியவாறு எனக் கூட்டிப் பொருள்கொள்க. தன்னை ஓம் என்று தியானித்தலை, ஞானசொரூபமாகிய சிவத்தினிடத்தில் ஓமென்று உன்னைத் தியானிக்க என்னும் பொருள் தரும்.

ब्रह्मणेत्वामहंस ओमित्यात्मानं युंजीत।

என்னும் பகுதியும், ஓம் என்று தன்னைத் தியானிக்க என்னும் பொருள் தரும்,

ओमित्येवं ध्यायेथ आत्मनि।

என்னும் பகுதியும் கொண்டு துணிக. எழுந்தோம் என ஒருசொல்லாக்கி ஈண்டைக்கு இயையாத பொருள் கூறி இடர்ப்படுவாரும் உளர். மேலும் அந்தயோக சிகோபநிஷத்தே, அங்ஙனம் பிரணவ வடிவாகத் தன்னைத் தியானிப்பவன் முக்தனுகிருன்

देहद्वयं विहायासु मुक्तोभवति बंधनात्।

என்பதை, என்றும் விளக்குகிறது. இக்கருத்து ஓங்கியவா முத்தி முந்தியவாறே என்பதை நமக்கு விளக்கும் சாதனமாகிறது. (102)

முந்திய மூந்நூற் றறுபது காலமும்
வந்தது நாழிகை வான்முத லாயிடச்
சிந்தைசெய் மண்முதல் தேர்ந்தறி வார்வலம்
உந்தியுள் நின்று வுதித்தெழு மாறே, 651

இம் - எனின், ஐம்பூதங்களுக்கும் உரிய காலமா மாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: முன்னர்க் கூறப்பட்ட முன்நூற்றறுபது விநாடியும், அமைய வந்ததாகிய நாழிகைகளை ஆகாய முதலாகக்கொண்டு இடவும் எண்ணப்படுகின்ற மண் முதலாகக்கொண்டு தெளிந்து அறியவும் கூடியவர்கள் உந்திக் கமலமாகிய மணிபூரகத்தினின்று சோதி தோன்றிப் பிரமரந்திரம் வரையெழுதலை அறியவல்லார் ஆவர் என்றவாறு.

காலம் - விநாடி. விநாடி அறுபது கொண்டது ஒரு நாழிகை. ஆறு நாழிகை முந்நூற்றறுபது விநாடி. இதனால் பகல் முப்பது நாழிகையையும் பிரிக்கஐந்து பகுதியாகும் பகலில் சூரிய உதய தொடங்கி ஆறுநாழிகை ஆகாயகாலம். பின்னர்ந் அம்முறையே வாயுக்காலம், தேயுக்காலம், அப்புக் காலம், பிருதிவிக்காலம் என இவற்றைப் பகுக்க என்பதாம். சூரியன் மறைவு தொடங்கி அவ்வாறே ஒடுக்க முறையாக பிருதிவிக் காலம் முதலாக ஐம்பூதக்காலம் அமைதலை அறிக. இப்படி அறிவார் உந்திமுதல் பராகாயம் வரை சோதி விளங்குதலை யுணருந் தூயோராவர் என்பதாம். (103)

சித்தந் திரிந்து சிவமய மாகியே
முத்தந் தெரிந்துற்ற மோனர்சிவ முத்தர்
சுத்தம் பெறலாக ஐந்தில் தொடக்கற்றோர்
சித்தம் பரத்தில் திருநடத் தோரே; 652

இம் - எனின், சிதம்பரத்தில் திருநடனம் புரிவார் இவரே என்றல் நுதலிற்று.

இ - ள்: புலன்களில் பொறிவழியே சென்று பற்றிய சித்தம் மாறுபட்டுத் திரும்பி, சிவமயமாகி, மோட்சத்தை ஆராய்ந்து அடைந்த மோனநிலையினராகிய சிவத்தோடு கூடியவர்களாகிய முத்தர்கள், தூய நிலை அடைவதற்காக ஐம்மலங்களிலும் தொடர்பற்றோர் சிதாகாயத்தில் திருநடனம்புரிவோர் ஆவர் என்றவாறு.

முத்தம் – முத்தி; அம்விகுதி பெற்றது. சுத்தம் பெறலாக – சுத்தான்மாவாக ஆதற்காக. ஐந்து - ஐந்து மலங்கள். ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி என்பன அவை. இவற்றுட் டொடக்கற்றோர் - இவற்றில் தொடர்பற்ற பெரியோர்கள்.

சித்தம்பரம் – ஞானாகாயம்; சித்தம்பரம் என எதுகை நோக்கி விரிந்தது. சித்தம்பரத்தில் திருநடத்தோர் எனப் பிரித்து, தொடக்கற்றோரது சித்தமானது பரத்தில் கூத்தாடுந் தன்மையராவர் எனினுமாம். (104)

ஒத்தஇவ் வொன்பது வாயுவும் ஒத்தன
ஒத்தஇவ் வொன்பதின் மிக்க தனஞ்செயன்
ஒத்தஇவ் வொன்பதில் ஒக்க இருந்திட
ஒத்த வுடலும் உயிரும் இருந்ததே. 653

இ - ம் - எனின், உடலும் உயிரும் ஒத்து நீடு வாழும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : தம்முள் மிகாமலும் குறையாமலும் சமமான ஒன்பது வாயுக்களும் தம்முள் ஒத்தன. இந்த ஒத்த ஒன்பது வாயுக்களில் தனஞ்சயன் என்னுங் காற்று சிறந்ததாம், இவ்வாயுக்கள் ஒன்பதும் ஒன்பது நாடிகளில் சமமாக இருக்க உடலும் உயிரும் தம்முள் ஒத்து நெடுங்காலம் இருந்தனவாம் என்றவாறு.

பத்து வாயுக்களில் தனஞ்சயன் சுழுமுனை யாகிய நடுநாடியில் சஞ்சரிப்பது ஆதலால் அது நீங்கி நின்ற பிராணன், அபானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், உதானன் என்ற ஒன்பது வாயுக்களும், இடகலை, பிங்கலை, சிகுவை, புருடன், காந்தாரி, அத்தி அலம்புடை, சங்கினி, குகு என்ற ஒன்பது நாடிகளிலும் பொருந்த உடல் உயிரோடு ஒன்றி நீடுவாழும் என்பதாம். (105)

இருக்குந் தனஞ்செயன் ஒன்பது காலின்
இருக்கும் இருநூற் றிருபத்து நான்காய்
இருக்கு முடலி லிருந்தில வாகில்
இருக்கும் உடலது வீங்கி வெடித்ததே. 654

இ-ம் – எனின் தனஞ்செயன் என்னும் காற்று இருக்குமிடமும் இன்றியமையாயும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஒன்பது காற்றைப்போலவே தனஞ்சயன் என்னும் காற்றும் அதற்குரிய நடுநாடியில் இருக்கும். மாயாகாரியமாக இருக்கும் இருநூற்றிருபத்துநான்கு புவனங்களிலும் இருக்கும் உடலில் இக்காற்று இல்லையாயின், இருக்கும் இவ்வுடல் வீங்கி வெடித்துவிடும் என்றவாறு.

இருபத்துமூன்றாய் எனவும் பாடம். (106)

வீங்குங் கழலை சிரங்கொடு குட்டமும்
வீங்கும் வியாதிகள் சோகை பலவதாய்
வீங்கிய வாதமுங் கூனு முடமதாம்
வீங்கு வியாதிகள் கண்ணின் மருவியே, 655

இ-ம் – எனின், இதுவும் தனஞ்சயன் திரிபால் விளைவன உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: வீங்குகின்ற கழலை, சிரங்கு, குட்டம், வீக்க வியாதிகள், சோகை பலவாய்ப்பருத்த வாதம், கூன், முடம், கண்ணில் சேர்ந்து வீங்கும் வியாதிகள் முதலிய பலவும் தனஞ்சயன் திரிபால் உண்டாம் என்றவாறு (107)

கண்ணில் வியாதி யுரோகந் தனஞ்செயன்
கண்ணிலிவ் வாணிகள் காச மவனல்லன்
கண்ணினிற் கூர்மன் கலந்தில ஞதலாற்
கண்ணினிற் சோதி கலந்ததும் இல்லையே. 656

இம் - எனின், இதுவும் தனஞ்சயன், கூர்மன் இவ்வாயுக்களின் செயல் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஆயுமிடத்து தனஞ்சயன் என்னுங் காற்று திரிபு அடையின் வியாதியாம் இவ்வார்த்தைகள் விளக்கமுடையன. நல்லோனாகிய அவன் கண்ணில் கூர்மன் என்னும் வாயு கலந்திலனாதலால், கண்ணில் ஒளி கலந்ததுமில்லையாம் என்றவாறு.

கண்ணில் - ஆராயுமிடத்து. கண்ணில் - மாறுபடின். கன்றின் என்பதன் மரூஉ. வாணி - பேச்சு அல்லது உரை, காசம் - ஒளி. பிரகாசம் என்பதில் உபசர்க்கமாகிய 'பிர' என்பது குறைந்துவந்தது. கண்களிற் கூர்மன் கலத்தலாலேயே ஒளி உண்டாகின்றது என்பதாம். (108)

நாடியின் ஓசை நயனம் இருதயந்
தூடி யளவுஞ் சுடர்விடு சோதியைத்
தேவருள் ஈசன் திருமால் பிரமனும்
ஓவற நின்றங் குணர்ந்திருந் தாரே. 657

இம் - எனின், சுழுமுனை நாததரிசனம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நடுநாடியின் ஓசையாகவும், கண்கள் இதயம் இவற்றிலும் ஒளிவிட்டு விளங்குகின்ற சோதி வடிவத்து இறைவனை, தேவருள் தலைவர்களாகிய பிரமா, விஷ்ணு, ருத்திரர்கள் இடைவிடாது உணர்ந்திருந்தனர் என்றவாறு.

அவர்களைப்போல ஆன்மாக்களும் உணரத்தக்கவர்கள் என்பது குறிப்பெச்சம். தூடி என்பது தூரி

ஏனை எதுகை நோக்கி நீண்டது. துடி - எட்டுவிநாடி கொண்ட கால அளவு. ஒவற - இடைவிடாமல். எட்டு விநாடிக்காலம் ஒளிவிடுகிற சோதியை இடைவிடாது உணர்தல் எங்ஙனம் எனின், மீட்டும் மீட்டுந் தோன்றச் செய்து தரிசித்தலாம். (109)

ஒன்பது வாசல் உடையதோர் பிண்டத்துள
ஒன்பது நாடி யுடையதோ ரோரிடம்
ஒன்பது நாடி ஒடுங்கவல் லார்கட்கு
ஒன்பது வாசல் உலைநல வாமே. 658

இம் - எனின், ஒன்பது நாடிகளையும் ஒக்க அடைக்கவல்லார்க்கு உடல் அழியாது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஒன்பது வாயில்களை உடைய பிண்டமாகிய உடலில், ஒன்பது நாடிகளையுடைய இடத்தில் அந்நாடிகள் ஒடுங்கத் தவம்செய்ய வல்லார்களுக்கு ஒன்பது வாசலையுடைய உலைக்களமாகிய உடல் நன்மை எய்தும் என்றவாறு.

உடலில் ஒன்பது நாடிகளும் அடங்கின் உடலுக்கு அழிவின்றாம் என்பது கருத்து. ஒன்பது வாயில்கள்: கண், செவி, வாய், மூக்கு, குதம், குய்யம் என்ற ஒன்பதுமாம். ஒன்பது நாடி முன்னர்க் கூறப்பட்டது. ஒன்பது நாடி அடைக்கவே ஒருநாடி திறக்கும். அந்நாடியே சுழுமுனையாகிய நடுநாடி. உடலை ஒன்பது வாசல் உலையென உருவகித்தார், உலையுள் இரும்பு பதனுறுதல்போல உடலுளையுள் உயிரிரும்பு வினைப் போகங்களைத் துய்த்து ஆணவ

மாக நீங்கிப் பதப்படுத்தப்படுதலின். ஒன்பது நாடியுடையதோரிடம் - ஒன்பது நாடிகளும் வந்து கூடுகின்ற நாற்சந்தியாகிய புருவ நடு. அங்கே ஒன்பது நாடிகளும் தொழிற்படாது மடங்கச் செய்யின் நடுநாடி மட்டும் திறக்கும்; அதனால் உடலுக்கு என்றும் அழிவில்லை என்றவாறும். (110)

ஓங்கிய அங்கிக்கீழ் ஒண்சுழு னைச்செல்ல
வாங்கி இரவி மதிவழி ஓடிடத்
தாங்கி உலகங்கள் ஏழுந் தரித்திட
ஆங்கது சொன்னோம் அறிவுடை யோர்க்கே. 659

இம் - எனின், விபரீத கரணியை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சிறந்த அங்கியாகிய குண்டலினியின் கீழே சுழுமுனை நாடி செல்லச்செய்து, சூரியகலையில் இயங்கும் பிராணனைச் சந்திரகலையில் ஓடத் தடுத்துச் செலுத்தி, உலகங்கள் ஏழையுந் தாங்குக என்று யோக ஞானமுடையார்க்குச் சொன்னோம் என்றவாறு.

குண்டலினி மூலாதாரத்து இருப்பது. சுழுமுனை புருவமத்தியிலிருப்பது. இதனைத் தலைகீழாக நின்று சுழுமுனையைக் குண்டலினித்தானத்தில் செலுத்த பிங்கலை நாடியாகிய வலது நாசி வழியாக இயங்குகிற பிராணன் இடைகலையாகிய இடது நாசியில் இயங்கத்தொடங்கும். உலகங்கள் என்றது மூலாதாரம் முதல் துவாதசாந்தம் வரையுள்ள ஏழு ஆதாரங்களையும். ஏழு ஆதாரங்களும் முறையே சத்திய லோகம், வைகுந்தம், கைலாயம், சிதாகாசம், பரா

சுச்சம் முதலான உலகங்களாக உருவகிக்கப்படுதலின் இங்ஙனம் உணர்த்தினார். தரித்திட என்பது அகரவீற்று வியங்கோள் வினைமுற்று. தரித்திடுக என்பது பொருள். அறிவுடையோர்க்குச் சென்றோம் என்றதனால் யோகஞானம் சிறிதும் இல்லார் இதனைத் தெரிந்து அவதியுறற்க என எச்சரித்தவாறும்.

விபரீதகரணியாவது, பூமியில் சிரத்தையூன்றி இரண்டு கைகளாலும் இடுப்பைப் பிடித்துக் கொண்டு. பிடரியும் தோள்களும் பூமியிற்பொருந்த மேலே காலை நீட்டி முதல்நாள் கணநேரமும், பின் நாட்களில் ஒவ்வொரு கணநேரம் கூட்டியும் ஓர் யாமம்வரை இருக்கப் பழகுதலாம்.

अधश्शिराश्चोर्ध्वपादः क्षणंस्यात्प्रथमेदिने ।
क्षणाच्चकिंचिदधिक मभ्यसेच्च दिनेदिने ॥

என்னும் யோகதத்வோபநிஷத்தாலும் இக்கருத்து விளக்கமுறும். இதனால் பிராப்த கன்மங்கள்கூட தன் வலி குன்றுகின்றது; காலனையும் வெல்லலாம்.

याममात्रंतु योनित्य मभ्यसेत्तु कालजित् ।

என்று யோக உபநிஷத்தும்,

कर्मणःसंक्षयावहः ।

என்று விஷ்ணுதர்மமும் கூறுகின்றன. இவற்றைச் சாதகன் குரு முன்னிலையில் அவர் உபதேசப்படியே இருந்து செய்யவேண்டும்; நூலறிவுமட்டும் அமையாது என அறிக.

உலகேழும் தரித்திட என்பதற்கு இவர்களை உலகமேழுந் தாங்க, அதாவது உலகம் ஏழினும் இவர்கள் செறிந்திட என உரைகாண்பார் சிலர். அது இவ்விபரீத கரணிக்கு இயையாமையின் பொருந்தாது என்க. (111)

தலைப்பட்ட வாறண்ணல் தையலை நாடி
வலைப்பட்ட பாசத்து வன்பிணை மான்போல்
துலைப்பட்ட நாடியைத் தூவழி செய்தால்
விலைக்குண்ண வைத்ததோர் வித்தது வாமே. 660

இம் - எனின், நடுநாடியைத் தூய்மைசெய்தலால் வரும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : தராசுமுள்ளைப்போலச் சமனுகவுள்ள நடுநாடியைத் தூய்மையான வழியாகச் செய்து (அதன் வழியே பிராணனை இயங்கச் செய்யின்) வலையிலுள்ள கயிற்றில் அகப்பட்ட வலிய பெண் மானைப்போலப் பெரிய பெருமான் பிராட்டியை விரும்பிச் சேர்ந்தவிதம் இதுவாம். இவ்வண்ணம் சிவசக்திகளைக் கூடச்செய்யும் யோகியர் நிலை விலைக்கு விற்கவும் உண்ணவும் ஆகச் சேமித்த விதைநெல்லை ஒக்கும் என்றவாறு.

துலைப்பட்ட நாடியைத் தூவழிசெய்தால் மான்பிணைபோல அண்ணல் தையலை நாடித் தலைப் பட்டவாறு (ஆம்) (இது) விலைக்கு உண்ணவைத் ததோர் வித்ததுவாகும் எனக் கொண்டு கூட்டுக.

துலைப்பட்ட நாடி — சுழுமுனையாகி புருவ நடு: தூவழி செய்தலாவது, இடகலை பிங்கலை வழியாகப்

பிராணனை இயங்காது தடுத்து இதுவே நல்லவழியாக இயங்கச்செய்வது. அங்ஙனம் செய்யின் புருவ நடுவாகிய ஆஞ்ஞாசக்கரத்தில் சக்தியோடு கூடிய சிவம் எழுந்தருளியிருப்பதைக்கண்டு மகிழலாம். அம்மகிழ்ச்சி தனக்கும், உலகிற்கும் பயன்படும் என்பார் விலைக்கும் உண்ணவும் ஆகச் சேமித்த வித்துவாம் என்றருளினர். (112)

ஓடிச்சென் றங்கே ஒருபொருள் கண்டவர்
நாடியி னுள்ளாக நாதம் எழுப்புவர்
தேடிச்சென் றங்கே தேனை முகந்துண்டு
பாடியுள் நின்ற பகைவரைக் கட்டுமே. 661

இ - னின், உட்பகைகளை வெல்லும் உபாய முணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பிரமரந்திரம் வரையில் விரைந்து சென்று ஒப்பற்ற பரம்பொருளைக் கண்டவர்கள், சுழுமுனை நாடியினுள்ளே பரநாதத்தை மேலோங்கச் செய்து, அதனைக் கேட்டுக்கொண்டே யிருப்பார்கள். மேலும் ஆராய்ந்து அங்கே உண்டாகின்ற அமுதத்தையும் உண்டு, உடலாகிற பாசறைக்கண் வலியுடனின்ற உட்பகைவர்களைச் சிறைப்படுத்துவர் என்றவாறு.

ஓடிச்சென்று என்றது மூலாதாரத்தினின்று குண்டலினியோடு மேலேறி விரைந்து சென்று என்பதாம் அதாவது பிராணாயாமத்தால் மூலக் கனலை எழுப்பி முதற்பொருளோடு கொண்டு சேர்த்து என்பது கருத்து ஒரு பொருள் — தன்னோ

யொத்த இரண்டாம் பொருள் இல்லாத பரசிவம். நாடி – சிறப்புப்பற்றிச் சுழுமுனையையே உணர்த்திற்று. நாடிவகையைப்பற்றி முன் கூறப்பட்டது. தேன் – சகஸ்திராரமாகிற பிர்மரந்திரத்தில் தியானயோகத்தால் ஊறும் இனிய ரசம். முகந்து உண்டு என்பன தேனின் மிகுதியுணர்த்தின. (112)

பாடி – பாசறை. ஈண்டு உடலை உணர்த்தியது பகைவராவார் காமம் குரோதம் மோகம் மதம் மாற்சரியம் என்ற குணப்பகைவர் அறுவரும் இந்திரியங்களாகிற பகைகள் ஐந்துமாம். கட்டும் என்றது உயிராகிய தனக்குக் கேடுசேராதவாறு தடைப்படுத்துவன் என்பதாம். (113)

கட்டிட்ட தாமரை நாளத்தில் ஒன்பது
மட்டிட்ட கன்னியர் மாதுடன் சேர்ந்தனர்
தட்டிட்டு நின்று தளங்களி னூடுபோய்ப்
பொட்டிட்டு நின்று பூரண மானதே. 662

இ-ம் – எனின் பூரணசத்தியின் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஒன்பது சக்திகளும், இதழ்கள் பந்தித்துள்ள தாமரைத்தண்டில் இதழ்கடோறும் நிலைத்து நின்று, அவ்விதழ்களின் வழியாகச்சென்று பராசத்தியோடு சேர்ந்தனர். அங்ஙனம் ஆஞ்ஞா சக்கரத்தில் அவர்கள் நின்றநிலைபேறே பூரணசக்தியாயிற்று என்றவாறு.

ஒன்பது கன்னியர்கள் தாமரை நாளத்தில், தட்டிட்டு நின்று தளங்களின் ஊடுபோய் மாதுடன்

சேர்ந்தனர்; பொட்டிட்டு நின்றது பூர்ணமானது எனக் கூட்டிப் பொருள் காண்க.

கட்டு இட்ட தாமரை – இதழ்கள் கட்டியுள்ள தாமரை. நாளம் – தண்டு. நாளம் என்று உருவகித்தது நடுநாடியாகிய சுழுமுனையை. மட்டு – தேன். கன்னியர் – வாமை. சேட்டை முதலிய நவசக்திகள். மாது – பராசக்தி. தட்டு – இதழ்.

மூலாலாரம் முதலிய ஆறுதாரங்களிலும் உள்ள தாமரையிதழ்களில் உள்ள சக்திகள், குண்டலினி தியானம் செய்பவர்கட்கு அவ்விதழ்களைக் கடந்து சென்று, ஆஞ்ஞாசக்கரமாகிய புருவநடுவிலுள்ள சக்தியோடு கலந்து நிற்கின்றநிலை பூரணசக்தி எனப்படும் என்ற உண்மை உணர்த்தியவாறு.

மொட்டு – புருவநடு. (114)

பூரண சத்தி எழுமூன் றறையாக
ஏரணி கன்னிகள் எழுநூற்றஞ் சாயினர்
நாரணன் நான்முக ளாதிய ஐவர்க்குங்
காரண ளாகிக் கலந்து விரிந்ததே. 663

இம் - எனின், சக்திகள் பஞ்சமூர்த்திகளுக்கும் காரணமாகி நூற்றைந்து பேதமாக விரிந்தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : மேற்கூறப் பெற்ற பூரணசக்தியானவள் இருபத்தொருமுறையாக அழகு மிக்க நூற்றைந்து கன்னிகளாயினர். நாரணன் நான்முகன் முதலான ஐந்து மூர்த்திகட்கும் காரணராகி அவருடன் கலந்து விரிந்துநின்றனர் என்றவாறு.

பூரண சக்தியானது இருபத்தொரு பிரகாரத்தால் தனித்தனியே பஞ்சமூர்த்திகளுடன் கலந்து 21 × 5 = 105 கன்னிகளாயினர் என்பது. (115)

விரிந்து குவிந்து விளைந்தஇம் மங்கை
கரந்துள் எழுந்து கரந்தங் கிருக்கிற்
பரந்து குவிந்தது பார்முதற் பூதம்
இரைந்தெழு வாயு விடத்தில் ஒடுங்கே, 664

இ(ள்) - எனின், விரிந்த சக்தி ஒடுங்கும்முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இவ்வண்ணம் விரிந்து பின்னர் ஒடுங்கி பலவகைப் போகங்களையும் விளையச்செய்த இப்பரா சக்தி மறைந்து சிவத்தினுட் சிறந்துதோன்றி மறைந்து ஒடுங்கியிருப்பின், பூமி முதலாக விரிந்து ஒடுங்கிய இப்பூதங்கள் யாவும், ஒலித்தெழுகின்ற வாயுவாகிய நாதத்தினிடம் ஒடுங்கும் என்றவாறு.

ஒடுங்கே என்பது ஒடுங்குமேஎன்பதன் விகாரம். சிவத்தினிடமிருந்து பிரிந்த சத்தி சிவத்திடமே ஒடுங்கின் பார்முதல் பூதங்களும் நாதத்தில் ஒடுங்கும். ஆதலால் சக்தியின் விரிவே எல்லாமென்பது கருத்து. (116)

இடையொடு பிங்கலை என்னும் இரண்டு
மடைபடு வாயுவு மாறியே நிற்குந்
தடையவை யாறெழுந் தண்சுட ருள்ளே
மிடைவளர் மின்கொடி தன்னில் ஒடுங்கே, 665

இ - ம் - எனின், பிராணனியங்குமுறையும், அதனால் விளையுந் தீமையும், அதனை வெல்லும் உபாயமும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இடகலை பிங்கலை என்ற இருமடைகளிலும் ஓடுகின்ற பிராணன் மாறுபட்டே நிற்கும். அப்போது ஆன்ம விளக்கம் மேலோங்கவிடாது தடையாயிருக்கிற ஆறு பகைகளும் தலை தூக்கி நிற்கும். ஆதலால் யோகியாகிய நீ குளிர்ந்த ஒளிப் பொருளாகிய மதியுள் பின்னி வளர்ந்திருக்கின்ற மின்னற்கொடி போன்ற குண்டலினியில் மனம் ஒன்றி நிற்பாயாக என்றவாறு.

பிராணனைத் தன்னியக்கப்படிவிடின், காமமாதி பகையாறும் தலைதூக்கிநின்று வருத்தும் ஆதலால் பிராணனை மடைமாறிப் பாய்ச்சிக் கட்டுப்படுத்தினால் காமாதிகளைக்கட்டுப்படுத்தலாம். அதற்குற்ற உபாயம். பிராணனைச் சுழுமுனை வழியாக ஏற்றிச் சகத்திராரத்தில் உள்ள மதிமண்டலத்தில் குண்டலினி சக்தியோடு கூடச் செய்வ தொன்றே என்பது கருத்து, (117)

**ஒடுங்கி ஒருங்கி உணர்ந்தங் கிருக்கின்**
**மடங்கி மடங்கிடும் வாயு வதனுள்**
**மடங்கி மடங்கிடு மன்னுயி ருள்ளே**
**நடங்கொண்ட கூத்தனை நாடுகின் றேனே. 666**

இம் - எனின், பிராணாயாமம் செய்த உயிருள் கூத்தனையும் கண்டுமகிழலாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : அங்ஙனம் ஒடுங்கி மனம் ஒருமைப் பட்டு உணர்ந்து அங்கிருப்பின், பிராணன் மடங்கிக் கட்டுப் பட்டு நிற்கும். அதனுள் விஷய சுகங்களிலீடு படாது மடங்கி அடங்கிக் கிடக்கும் ஆன்மாவின் உள்ளே ஆனந்த நடனம் செய்கின்ற நடராசப் பெருமானைத் தேடுகிறேன் என்றவாறு.

ஒடுங்குதல் — புறம்போகவிடாது நிலைக்கச்செய் தல். ஒருங்குதல் - ஒன்றனையே பற்றச்செய்தல். உணர்தல் — அங்ஙனம் பற்றிய பரம் பொருளையே அறிந்து அநுபவித்தல், அங்கு இருக்கின் - சித்தம் சிவமாக்கியிருக்கின். பிராணன் கட்டுப்பட உயிர் ஓட்டம் தடைப்படும்; அங்ஙனம் ஆன்ம வியாபகம் மடங்கியபோது ஆனந்தக் கூத்தன் அந்த ஆன்மா வினிடமாக விளங்குவன்; அவனைத் தரிசிக்கலாம் என்பது கருத்து. (118)

நாடியின் உள்ளே நாதத் தொலியுடன்
தேடி யுடன்சென்றத் திருவினைக் கைக்கொண்டு
பாடியுள் நின்ற பகைவரைக் கட்டிட்டு
மாடில் ஒருகை மணிவிளக் கானதே. 667

இம் - மனின், அங்ஙனம் குண்டலியோகம் சித்திக்கின் தூண்டாவிளக்காய்த் தோன்றலாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : சுழுமுனை நாடியின் உள்ளே நாத வொலியோடு ஆதாரங்களின் வழியே தேடிச்சென்று அங்குத் திருமகளாகிய பராசத்தியைக்கூடி, பாசறையுள் நிற்கின்ற பகைவர்களைக் கட்டி,

பெருமையையுடைய ஒன்றியிருக்கையாகிய அது தூண்டாவிளக்காகத் தோன்றிற்று என்றவாறு.

நாடி - சுழுமுனை. அத்திரு என்றது பராசத்தியை. எவனுக்குப் பராகாசத்துச் சத்திதரிசனம் கிட்டுகின்றதோ அவன் உட்பகையாறனையும் வெல்வான் என்பதாம். மாடில் - பெருமையையுடைய; மாடு இல் - பெருமையில்லாத எனலுமாம், ஒருகை - ஒன்றுதலான ஒழுக்கம்; அதாவது ஒன்றியிருக்கை. மணிவிளக்கு - இரத்தினதீபம்; என்றது தூண்டாவிளக்கை. (179)

அணிமாதி சித்திக ளானவை கூறில்
அணுவில் அணுவின் பெருமையின் நேர்மை
இணுகாத வேகார் பரகாய மேவல்
அணுவத் தனையெங்குந் தானாத லென்றெட்டே. 668

இ - னின், அட்டமாசித்திகள் இவையெனத் தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்; அணிமா முதலான சித்திகளைச் சொல்லுமிடத்து, அணுவிலணுவாதலும், பெரியதிற் பெரிதாதலும், அசைக்கவும் இயலாத கனமுடையதாதலும், விரும்பின எய்தலும், எங்கும் தானாதலும், பரகாயம் புகுதலும், உயிர்கட்குத் தலைவனாதலும், எங்கும் வியாபித்திருத்தலும் ஆகிய எட்டுமாம் என்றவாறு.

அணுவில் அணு - அணுக்களிற் சிறிது பரமாணு, அதற்கும் சிறிதாதல், சங்கற்பத்தால்

இயற்கையை வென்றமையால் தேகம் சூட்சும மாதலாம். இது அணிமா கூறியது.

பெருமையின் - பெரியதிற் பெரியதாதல். பிரகிருதியைப் பூரித்தலால் ஆகாயாதிகளைப்போலத் தேகம் பெரியதாதல். இது மகிமா கூறியது.

இணுகாத நேர்மை - அசைக்க முடியாத தன்மைத்தாதல்; என்றது பஞ்சு முதலியனபோல நொய்யன வாகாமல் இரும்புபோலக் கனமாதல். இது கரிமா,

வேகார் நேர்மை - புகைபோல நொய்தாதல். கனமாயின பஞ்சுபோல நொய்தாகச்செய்தல். இது லகிமா கூறியது. வேகு - புகை.

பரகாயம் மேவல் - மேலுள்ள ஆகாயத்தைத் தீண்டுதல், பூமியிலிருந்துகொண்டே விரல் நுனியால் சந்திரனைத் தொடுதல். இது பிராத்தி கூறியது.

மேவல் - எல்லாப் பூதங்களிலும் வியாபித்து எழுதல். நீரில்போல விண்ணிலும் மண்ணிலும் மூழ்கியெழும்புதல். இது பிராகாமியம் கூறியது.

அணு அத்தன் ஐ - உயிர்கட்கெல்லாம் கர்த்தாவாதல். பூத பௌதிகங்களைப் படைத்தலாகிய பஞ்சக் கிருத்தியம் பண்ணுகை. இது ஈசத்துவம் கூறியது.

எங்கும் தானுதல் - எல்லாவற்றையும் வசியஞ் செய்து எங்கும் தானாக இருத்தல். இது வசித்துவம்

கூறியது. இவ்வண்ணம் அட்டமா சித்திகளையும் முறையே காண்க. இங்ஙனமன்றி வேறு கூறி எட்டையும் விளக்கமுடியாமல் இடர்ப்படுகின்ற உரைகளும் இதுகாலை சிலவுள. தேர்ந்து தெளிக. (120)

எட்டா கியசித்தி யோரெட்டி யோகத்தாற்
கிட்டாப் பிராணன் செய்தாற் கிடைத்திடும்
ஒட்டா நடுநாடி மூலத்த னல்பானு
விட்டான் மதியுண்ண வும்வரு மேலதே. 669

இம் - எனின், அட்டாங்க யோகத்தால் பிராணனை அடக்கி ஆண்டால், அட்டமா சித்திகளை எய்தலாம் என்றருள்செய்தல் நுதலிற்று.

இ - ள்: அட்டாங்க யோகத்தால், வேறு எவ் வகையாலும் அடக்க முடியாத பிராண வாயுவை அடக்கி ஆண்டால், அட்டமா சித்திகளையும் அடையலாம். மூலாதாரத்திலுள்ள குண்டலினி சத்தியானது, தாமரை முகுளம்போன்ற சுழுமுனை நாடி வழியாகச் சூரியக்கிரந்தியைத் தாண்டினால், அதற்கு மேலதாகிய சந்திரக்கிரந்தியிலுள்ள அமிருதவாருணியை உண்ணவும் கிட்டும் என்றவாறு

மூலாதாரம் அக்கினி மண்டலமும், இதயம் சூரிய மண்டலமும். புருவநடு சந்திரமண்டலமுமாதலின், குண்டலினி பிராணாயாமத்தால் நடுநாடி வழியாக அக்கினிமண்டலத்தினின்று கிளம்பி, சூரிய மண்டலத்தையும் தாண்டி, புருவ நடுவை அடையுமாயின் அதற்கும் மேலதாகிய சந்திரமண்டலத்து அமுதத்தை உண்ணலாம் என்பது கருத்து. (121)

சித்திக ளெட்டன்றிச் சேரெட்டி யோகத்தாற்
புத்திக ளானவை எல்லாம் புலப்படுஞ்
சித்திகள் எண்சித்தி தானுந் திரிபுரைச்
சத்தி அருள்தரத் தானுள வாகுமே. 670

இ·ம் - எனின் , அட்டாங்க யோகத்தால், அடையப்பெறும் வேறு பயன்களையும் விளக்குதல் நுதலிற்று.

இ - ள்: பயிலப்பெறுகின்ற அட்டாங்கயோகத்தால். முற்கூறப்பட்ட அட்டமாசித்திகளே அன்றி ஞானங்களாக உள்ளவை அனைத்தும் வெளிப்படும். சித்திகளோ ஒவ்வொன்றும் எவ்வெட்டுவகையாம். இவை அனைத்தும் தானேயாகிய திரிபுரையின் கருணையின் தரத்தால் விளைவனவாம் என்றவாறு.

புத்திகள் ஆனவையெல்லாம் - ஞானவிளக்கத்திற்கு வாயிலாய ஆன்ம அறிவை ஓரளவு விளக்கி நிற்கும் ஆயகலைகளறுபத்துநான்கின் ஞானத்தையும். ஞானம் ஒன்றாயினும் கலை வேறுபாட்டால் பன்மையாகக் கூறப்பெற்றது. புலப்படும் என்றது தானாகவே விளங்கும் என்றவாறும்.

சித்திகள் எண்சித்தி : அட்டமாசித்திகளும் பொருந்தும் ஆன்மாக்களின் இடவேறுபாட்டால் ஒவ்வொன்றும் எட்டாக அறுபத்துநான்காம் ஆதலின் இங்ஙனம் கூறப்பெற்றது. இதனை,

"ஐசுவரியம் அணிமா மகிமா முதல் எட்டு வகைப்படும். அவற்றுள், அணுவினும் அதிசூக்கும வடிவுற்று நிற்றல் அணிமா வென்னுஞ் செல்வம்

மேருவினும் மிகப்பெரிய வடிவுற்று நிற்றல் மகிமா வென்னுஞ் செல்வம்.

சேறு முதலியவற்றின் இயங்கினும் அழுந்துதலின்றிக் காற்றினுங் கடுநடைத்தாய் மெல்லிய வடிவுற்று நிற்றல் இலகிமா வென்னுஞ் செல்வம்.

மனத்தான் விழையப்பட்டன அனைத்தும் விழைந்தவாறே பெறுதல் பிராத்தி யென்னுஞ் செல்வம்.

சங்கற்பமாத்திரையான் ஆயிரம் மகளிரைப் படைத்து அவ்வாயிரமகளிரோடும் ஆயிரம் வடிவாய் நின்று கிரீடித்தல் பிராகாமியமென்னுஞ் செல்வம்.

பிரமன் முதலியோர் மாட்டுந் தன்னாணை செலுத்தி அவராற்பூசிக்கப்படுதல் ஈசத்துவ மென்னுஞ் செல்வம்

உலகமுழுவதையுந் தன்வசமாக்குதலும், உலகத்தை உண்டாக்குதலும் வசித்துவமென்னுஞ் செல்வம்.

விடயங்களை நுகர்ந்தும் அவற்றிற் றொடக்குண்ணாமை கரிமாவென்னுஞ் செல்வம்.

இவ்வெண்வகைச் சித்தியுள் முன்னைய மூன்றும் உடம்பானும், பின்னையவைந்தும் மனமுதலியவற்றானும் பெறப்படுவன வென்று உணர்க.

பேய்களுக்கு இவ்வெட்டும் நிலவுலகத்தை வியாபித்துக் கூறியவாறே உள்ளன. அரக்க ருலகத்துள்ளார்க்கு நீருலகத்தையும் வியாபித்து இருமடங்கும், இயக்க ருலகத்துள்ளார்க்குத் தீயுலகத்தையும் வியாபித்து மும்மடங்கும், காந் தருவ வுலகத்துள்ளார்க்கு வாயுவுலகத்தையும் வியாபித்து நான்மடங்கும், இந்திர வுலகத் துள்ளார்க்கு ஆகாயவுலகத்தையும் வியாபித்து ஐந்து மடங்கும், சோமலோகத்துள்ளார்க்கு மனத் தினையும் வியாபித்து ஆறுமடங்கும், பிரசாபதி யுலகத்துள்ளார்க்கு ஆங்காரத்தையும் வியாபித்து எழுமடங்கும், பிரமலோகத்துள்ளார்க்குப் புத்தியை யும் வியாபித்து எட்டுமடங்கும் ஏற்றமா யுள்ளன வாகலான். எண்வகைச் செல்வமும் இங்ஙனம் ஒரோவொன்று எவ்வெட்டாய் விரியான் அறுபத்து நான்காமெனக் கொள்க.''

எனவரும் சிவஞானமாபாடியங் கொண்டும் அறிக.

இங்ஙனன்றி எழுத்திலக்கணம் முதலாக அவத் தைகளில் செலுத்துதலீருகக் கூறப்பட்ட அறுபத்து நான்கு சித்திகள் என்பாரும் உளர்.

தானும் திரிபுரை சத்தி — தானாகவே எழுந் தருளியிருக்கின்ற திரிபுரை; என்றது சத்திமட்டு மாக எழுந்தருளியிருத்தலை உணர்த்திற்று.

தரத்தான் உளவாகும் - திரிபுரை, அந்தந்த ஆன்மாக்களின் பரிபாகநிலைக்கு ஏற்பச் செலுத்துங் கருணையான் விளைவதாம் என்பது. (122)

அணிமா

எட்டிவை தன்னோ டெழிற்பரங் கைகூடப்
பட்டவர் சித்தர் பரலோகஞ் சேர்தலால்
இட்டம துள்ளே இருக்கல் பரகாட்சி
எட்டு வரப்பு மிடந்தானின் றெட்டுமே. 671

இம் – எனின், சித்தரியல்பும், அவர்கள் உறுபயனும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இந்த எட்டுச் சித்திகளோடு, அழகினையுடைய பரஞானமுங் கைவரப் பெற்றவர்களே சித்தராவார். இவர்கள் பரலோகமும் அடைதலால்: விருப்பத்தின் வண்ணம்இருத்தலாகிய சிவதரிசனம் செய்து இருப்பின், எட்டினை வரம்பாகவுடைய சித்திகள் இவர்கள் இருக்குமிடத்தில் வந்து சேரும் என்றவாறு.

எட்டிவை என்றது, அதிகாரத்தான் அணிமாதி அட்டசித்திகளை உணர்த்திற்று. எழில் பரம் - அழகுகளனைத்தினும் பேரழகாகிய பரஞானம். சித்திகள் அளவில் நின்றவர் சித்தராகார்; மேலே பரஞானத்தையுங் கூடினவர்களே சித்தராவார் என்பதாம்.

அவர்கள் சேருமிடம் பரலோகமாகிய சிவலோகமாம். அங்குச் சென்று அவர்கள் விருப்பப்படி, சுதந்திரர்களாக எஞ்ஞான்றும் சிவதரிசனம் செய்து கொண்டு சிவபோகத்தழுந்தியிருத்தலே பரகாட்சியாம். அங்ஙனம் பரகாட்சி பெறுகின்ற சித்தர்களிருக்கும் இடம் தேடி அட்டமாசித்திகளும் தாமேவ்லியவந்தடையும் என்பதாம். இங்ஙனன்றிச்

சித்திகளளவில் நின்றவர்கள் சித்திகளைத் தேடிப் போகத்தக்கவர்கள்; அவற்றையும்வென்று கீழ்ப் படுத்திப் பரஞானம் பெற்றவர்களே சித்திகளைத் தம்வயப்படுத்தியவர்கள் ஆவார்கள் என்பது கருத்து. (123)

மந்தர மேறு மதிபானு வைமாற்றக்
கந்தாய்க் குழியிற் கசடற வல்லார்குத்
தந்தின்றி நற்கா மியலோகஞ் சார்வாகும்
அந்த வுலகம் அணிமாதி யாமே. 672

இம் — எனின், அணிமாதிகளை அடைந்தார் இன் புலகு எய்தலாம் என்றல் நுதலிற்று.

இ - ள் : உடலாகிய மேருவை ஏறுகின்ற இடகலை பிங்கலைகளை மாற்றி, கட்டுத்தறிபோல அசைவற்று, அமுதஞ்சுரக்கும் ஊற்றிலே குற்றமற இருக்க வல்லார்க்கு, இந்த அமுதப்பேறேயன்றி நல்ல இன்பவுலகும் சார்தல் ஆகும். அவ்வுலகும் இச்சித்திகளாலே எளிதில் எய்தலாம் என்றவாறு.

மந்தரம் என்றது உடலை. ஏறு மதி பானுவை மாற்ற — உச்சுவாசமாக உள்ளே ஏறிச்செல்லும் பிராண வாயுவை மதியாகிய இடகலையிலிருந்து சூரியகலையாகிற பிங்கலைக்கு மாற்ற இவ்வண்ணம் மடைமாறிப் பாய்ச்சுதலைப் பிராணயாமப் பகுதியில் விளக்கியது கொண்டு தெளிக.

கந்தாய்; கந்து - நடுதறி, நடுதறிபோல அசைவற்றிருந்து. இதுவும் முன்னர் விளக்கப்பெற்றது. குழியென்றது மதிமண்டலத்துள்ள அமுதநிலையை.

குழியின் - அமுதநிலையால். கசடு அற வல்லார்க்கு - உயிர்க் குற்றங்களாகிய ஆணவம் முதலியன நீங்கி விளக்கமுறுவார்க்கு.

தந்தது இன்றி எனற்பாலது எதுகைநோக்கித் தந்தின்றி என விகாரப்பட்டு நின்றது. தந்தது - அமுத உணவும் அட்டமாசித்திப் பேறும்.

நற்காமியலோகம் சார்வாகும். - நல்ல விரும்பத் தக்க இன்பவுலகம் சார்தலுமாகும். சார்வார்க்கு எனவும் ஒரு பாடம் உண்டு. அப்பாடத் திற்கு அங்ஙனம் சார்கின்ற சித்தர்க்கு அந்த உலகங்கள் அணிமாதி சித்திகளால் விளையும் எனக் கூட்டிப் பொருள்கொள்க. (124)

முடிந்திட்டு வைத்து முயங்கிலோ ராண்டில்
அணிந்த அணிமாகை தானும் இவனுந்
தணிந்தவப் பஞ்சினுந் தானொய்ய தாகி
மெலிந்தங் கிருந்திடும் வெல்லவொண் ணாதே. 673

இம் - எனின், அணிமாசித்தியை வெல்லுகின்ற உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இவ்வண்ணம் மதிமண்டலத்திருந்து அமுதமானது பானுமண்டலத்தில் இறங்காதவாறு அடக்கிவைத்து, யோகத்து அழுந்தியிருக்கில், ஓராண்டிற்குள்ளாக, நூல்களால் புகழ்ந்து கூறப் பட்ட அணிமாவானது கைவசமாகிவிடும். கைவந்த சித்தனும். மெலிந்த அழகிய பஞ்சைக்காட்டிலும் நொய்யனாகி மெலிந்து இருப்பன்; அவனை வெல்ல முடியாது என்றவாறு.

அங்கு அசை

அமிருதவாருணியைப் புருவநடுவாகிய மதி மண்டலத்திலிருந்து கீழிறங்காதவாறு பாதுகாத்து ஓராண்டு யோகஞ்செய்தால் அணிமா சித்திக்கும் என்றுகூறி, அதன்மேல் லகிமாவும் கைவரும் என மேலதற்கும் தோற்றுவாய் செய்தவாறு. (125)

## லகிமா

ஆகின்ற வத்தனி நாயகி தன்னுடன்
போகின்ற தத்துவம் எங்கும் புகலதாய்ச்
சாய்கின்ற காலங்கள் தன்வழி நின்றிடின்
மாய்கின்ற வையாண்டின் மாலகு வாகுமே. 674

இ-ம் - எனின், லகிமா சித்திக்கும் உபாயமும் காலமும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மேன்மேலும் ஆன்மாக்களுக்கு ஆக்கமேயுதவும் அந்த ஒப்பற்ற தலைவியாகிய திருவருட் சத்தியுடன், செல்கின்ற எல்லாத் தத்துவங்களிலும் அச்சத்தியே தாரகமான துணையாய்க் கொண்டு, அத் தத்துவச் சேட்டைகள் ஒடுங்குகின்ற எல்லை வரை சத்திவயப்பட்டு நிற்கின், நடக்கின்ற ஐந்து ஆண்டுகளுக்குள் மிக்க மென்மையாகிய லகிமா சித்திக்கும் என்றவாறு.

ஆகின்ற அத்தனி நாயகி — திருவருட்சத்தி. ஆன்மாக்களுக்கு எவ்வெவ்வகையில் ஆக்கமளிக்கலாம் என்ற நோக்குடனேயே இருப்பதால் ஆகின்ற நாயகி என்றருளியது.

தத்துவங்களில் தலைப்பட்டு அலையும்போதும் ஆன்மா தக்க துணையாகிய திருவருள் சத்தியோடு செல்லின் தத்துவ வலையில் சிக்காது தத்துவங்களை வென்று, ஐந்து ஆண்டிற்குள்ளாக நொய்தின் நொய்தாகிய லகிமா சித்தியைப் பெறும் என்பதாம். சாய்கின்ற காலம் – வலியொடுங்கும் காலம். தன் என்றது அந்த அருட்சத்தியை. மாய்கின்ற ஐயாண்டு என்பது காலம் அழியுந்தன்மைத்து என அதன் இயல்பை அறிவித்தவாறு. (126)

மாலகு வாகிய மாயனைக் கண்டபின்
தானொளி யாகித் தழைத்தங் கிருந்திடும்
பாலொளி யாகிப் பரந்தெங்கு நின்றது
மேலொளி யாகிய மெய்ப்பொருள் காணுமே. 675

இ – எனின், லகிமாவின் பயன்கூறி, மேலதற்குத் தோற்றுவாய் செய்தல் நுதலிற்று.

இ – ள் : லகிமா சித்தியைப்பெற்று அழகிய தலைவனைத் தரிசித்தபின், தானும் ஒளியாய் விளங்கி அந்தப் பரஞ்சோதியுள் இருப்பன். இவ்வண்ணம் பால்போன்ற குற்றமற்ற ஒளிப்பொருளாய் எங்கும் பரந்து நின்ற ஆன்மா, எல்லாவற்றிற்கும் மேலான ஒளிப்பொருளாகிற சிவபரம்பொருளைத் தரிசிக்கும் என்றவாறு.

மாலகு ஆகி அம் ஆயனைக் கண்டபின் எனக் கண்ணழிவுசெய்க. ஆயன் - தலைவன். ஒளியாகித் தழைக்கும் என்றதும், பாலொளியாகி என்பதும் மேல்வரும் மகிமாசித்திக்குத் தோற்றுவாய் செய்த வாறும்.

சுயஞ்சோதியாகிய சிவச்சோதியுள் வியாப்பிய மாய் சூரிய ஒளியுள் விளக்கொளிபோல அடங்கி யிருந்து எங்கும் வியாபகமாய் அதனைத் தரிசித்து இருக்கும் என்பதாம். (127)

## மகிமா

மெய்ப்பொருள் சொல்லிய மெல்லிய லாளுடன்
தற்பொரு ளாகிய தத்துவங் கூடிடக்
கைப்பொரு ளாகக் கலந்திடு மோராண்டின்
மைப்பொரு ளாகு மகிமாவ தாகுமே. 676

இம் – எனின், மகிமா சித்திக்குங்காலம் உணர்த் துதல் நுதலிற்று.

இ - ள் : உண்மை ஞானத்தை உணர்த்தியருளிய திருவருட் சத்தியுடன் 'தத்' என்று குறிக்கப்படு பொருளாகிய சிவம்கூட, மறைந்த பொருளாகும் மகிமாவானது ஓராண்டில் உள்ளங்கையில் உள்ள பொருள்போலக் கலந்திடும் என்றவாறு.

மெய்ப்பொருள் – உண்மை ஞானம். திருவருட் சத்தியின் துணையாலேயே உண்மை ஞானம் உயிர் கட்கு விளைதலின் இங்ஙனம் மெய்ப்பொருள் சொல்லிய மெல்லியலாள் என்றருளினர்.

தற்பொருளாகிய தத்துவம் – அது என்று குணங்குறிகளின்றிச் சுட்டுவகையான் ஓரளவு உணர்த்தப்படு பொருளாகிய உண்மைப் பொருள் சேர. தத்துவம் என்றது ஈண்டுச் சிவத்தை.

மகிமாசித்தி மறைந்த பொருளாய், தன்னை யுடையானையும் மறைக்க முற்படுதலின் கைப்பொரு ளான மகிமா எனப்பட்டது.

கைப்பொருள் – உள்ளங்கையிலுள்ள ஒரு பொருள். அதுபோல மகிமா ஓராண்டில் கலந்திடும் என இயைக்க (128)

ஆகின்ற காலொளி யாவது கண்டபின்
போகின்ற காலங்கள் போவது மில்லையாம்
மேனின்ற காலம் வெளியுற நின்றபின்
தானின்ற காலங்கள் தன்வழி யாகுமே. 677

இம் – எனின். மகிமா சித்தியுற்றோர் காலதத்துவத் தையும் வென்றவராவர் என்றல் நுதலிற்று.

இ – ள் : நாடோறும் நமக்காகின்ற பிராண வாயு ஒளிவடிவானதைக் கண்டபின். அழிகின்ற ஆயுட் காலங்கள் அழிவதும் இல்லையாம். இனி வரக் கடவ ஆயுட்காலத்திற்கு வெளியே தான் நின்றபின், எஞ்சி யுள்ள காலதத்துவமனைத்தும் தன் வழியாம் என்றவாறு.

பிராணனை ஒளிவடிவாகக் கண்டபின், காலம் அழிதலில்லை; அங்ஙனம் காலத்தைக் கடந்து நின்ற பின், காலதத்துவும் சித்தனாகிய ஆன்மாவின் ஆணை வழி அடங்கி நடக்கும் என்பது கருத்து.

கால் ஒளியாதல்: சுழுமுனை வழியாகப் பிராண னியக்கம் தொடங்கின் மூலக்கனலோடு செல்லு மாகலின், பிராணவாயு ஒளிவடிவுண்டாயதாயிற்று என்பதாம்.

போகின்ற காலங்கள் – ஆயுள் என்ற பெயரால் அழிகின்ற நாட்கள். நடுநாடி வழியாகப் பிராணன் இயக்கந் தொடங்கியமையின் இவ்வுடம்பிற்கு அழிவில்லையாதலின் போவதுமில்லையாம் என்றருளினார். மேல் நின்ற காலங்கள் வெளியுறத் தான் நின்ற பின் எனக் கூட்டி எஞ்சிநின்ற ஆயுளுக்குப் புறம் பாகத் தான் கடந்து நின்றபின் எனப் பொருள் கொள்க. காலங்கள் தன்வழியாகும் – காலதத்துவமும் இவன் ஏவல்வழி நடக்கும். (129)

தன்வழி யாகத் தழைத்திடு ஞானமுந்
தன்வழி யாகத் தழைத்திடும் வையகந்
தன்வழி யாகத் தழைத்த பொருளெல்லாந்
தன்வழி தன்னரு ளாகிநின் றானே. 678

இம் – எனின், மகிமாசித்தன் அனைத்துப் பொருளும் தன்னாற் செழிக்கத் தான் சிவனருள் வடிவாக திகழ்வன் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : மகிமாசித்தி பெற்றவன் வாயிலாக ஞானங்கள் செழித்தோங்கும்; உலகம் தழைத்தோங்கும்; அங்ஙனம் தழைத்த பொருள்களெல்லாம் தன் வசப்பட்டு நிற்கத் தான் சிவனருள் வசப்பட்டு நின்றான் என்றவாறு.

எல்லாம் இவன்வழி நிற்க, இவன் அருள்வழி நிற்பன் என்பதாம். (130)

## பிராத்தி

நின்றன தத்துவ நாயகி தன்னுடன்
கண்டன பூதப் படையா னவையெலாங்
கொண்டவை யோராண்டு கூட இருந்திடில்
விண்டது வேநல்ல பிராத்திய தாகுமே. 679

இம் - எனின், பிராத்தி சித்திக்குமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இவ்வுலகில் நிலைபெற்றுள்ளனவாகிய தத்துவங்கள் அனைத்தும், பராசத்தியுடன் பூதப் படையானுகிய பரமசிவன் படைத்தனவாம். அவைகளனைத்தையும் தாரணை செய்து ஓராண்டு அவைகளுடன் கூட இருந்திடில், அவற்றை வென்ற அச் செயலே நல்ல பிராத்தியாகும் என்றவாறு.

நின்றன தத்துவம் - நிலைபெற்றுள்ளனவாகிய தத்துவங்கள் ; என்றது மண்முதல் குடிலையீருன தத்துவங்களை. இவையனைத்தும் பூதப்படையானுகிய சிவம் சக்தியோடு கூடிப் படைத்தனவே யாதலின், அவற்றுள் மயங்காது இறைவன் படைப்பு ஆன்மாக்களாகிய நம்து வினைப்போகத்தின் பொருட்டு விளைவிக்கப் பெற்றன் என்றறிந்து அவற்றின் வர்தனை தன்னைத் தாக்காது பாதுகாத்துக்கொள்ளும் தாரணைப் பயிற்சியை ஓராண்டுக் காலம் செய்யின், தத்துவசுத்தி உண்டாம் ; அவைகள் தன்னைவிட்டுப் பிரியும் ; அப்போது தாத்துவிகங்களாகிய பொருள்களனைத்தையும் ஒருசேர அடையும் பிராத்தி சித்திக்கும் என்பதாம்.

இம்மந்திரத்திற்கு இங்ஙனமன்றித் தத்துவங்கள் யாவும் திரோதானசக்தியுடனின்றன ; காணப்படுகின்ற பூதக் கூட்டங்கள் எல்லாம் தாரணையுடன் கூடவிருந்தால் ஓராண்டுப் பயிற்சியுள் எண்ணிய எல்லாம் திண்ணமாகக் கைகூடும் என்று ஒன்றோடு ஒன்று தொடர்பில்லாத உரை வகுத்தலும் உண்டு. ஆய்ந்து நல்லது காண்க. 131

கரிமா

ஆகின்ற மின்னொளி யாவது கண்டபின்
பாகின்ற பூவிற் பரப்பவை காணலாம்
மேகின்ற காலம் வெளியுற நின்றது
போகின்ற காலங்கள் போவது மில்லையே. 680

இம் - னின், கரிமாசித்தியாலும் காலத்தை வெல்லலாம் என்றல் நுதலிற்று.

இ - ள் : யோகப்பயிற்சியில் காணப்படும் மின்னல் போலும் ஒளியைக் கண்டபின், பரந்து நிற்கின்ற பூமியின் பரப்பையும் காணலாம். மேவுகின்ற கால தத்துவம் வெளிப்பட்டுப் புறம்பாக நின்றது ; கழிகின்ற காலங்களும் கழியமாட்டா என்றவாறு.

ஆகின்ற மின்னொளி — யோகப்பயிற்சியில் விளைகின்ற மின்னல் போலும் குண்டலினியின் ஒளி. பாகின்ற பூவிற் பரப்பவை — பரந்து விளங்குகின்ற பூமியின் பரப்பவை. பரப்பவை என்பது பரப்பாகிய அவையென ஒருபொருளை உணர்த்தும் இருபெயர்ச் சொல். பாவுகின்ற என்பாலது

பாகின்ற என விகாரப்பட்டு நின்றது. பூவின் பரப்பு என்பதற்கு ஆயிரவிதழ்த்தாமரை எனப் பொருள்கோடலும் ஒன்று.

மேகின்ற காலம் - மேவுகின்ற காலம்; திதி வார நட்சத்திரங்களாக மேவுகின்றகாலம் என்பாரும் உளர். சித்தனை வந்துமேவ இருக்கின்ற காலங்கள் என்பதே சிறந்த பொருளாதல் தேர்க. இவனை வந்து பொருந்த இருக்கின்றனவாகிய எதிர்காலங்கள் இச்சித்தனை வந்து பொருந்தாதே விலகிநின்றன; அங்ஙனமே போகின்ற காலங்களும் போகாமல் நிலைத்துநின்றன என்பதாம். இதன் கருத்து இறப்பும் எதிர்வுமின்றி எல்லாம் நிகழ் காலமாகக் கண்டு நித்தியனாவான் என்பதாம். (132)

போவதொன் றில்லை வருவது தானில்லை
சாவதொன் றில்லை தழைப்பது தானில்லை
தாமத மில்லை தமரகத் தின்னொளி
யாவது மில்லை யறிந்துகொள் வார்க்கே. 681

இ - ம் - எனின், சித்தர்களாகிய ஞானியர்க்கு ஆம் பயன் இவையெனல் நுதலிற்று.

இ - ள் : அழிவதும் இல்லை; ஆவதும் இல்லை; இறப்பதும் இல்லை; பிறப்பதும் இல்லை; தாமத முதலிய முக்குணங்களும் இல்லை; உட்டொளையாகிய சுழுமுனையில் இனிய ஒளி விளைவதும் இல்லை என்றவாறு.

ஒன்றுமில்லை என்றது ஞானியர் திரிபுடிபேத மற்று இருத்தலின் வேற்றுமையின்றி அவ்வே

தானுய நெறியில் நிற்பர் என்பதாம். தாமதம் எனவே உபலக்கணத்தால் ஏனையவும் கொள்க. தமர் - தொளை. இன்னொளியாவதும் இல்லை-ஒளியே யுண்டாகாது என்பது பொருளன்று; ஒளியே தானுயிருத்தலின் வேறில்லை என்றவாறும். (133)

அறிந்த பராசத்தி யுள்ளே அமரில்
பறிந்தது பூதப் படையவை யெல்லாங்
குறிந்தவை யோராண்டு கூட இருக்கில்
விரிந்தது பரகாய மேவலு மாமே. 682

இம் - எனின், இதுவுமது.

இ - ள்: யோக நிலையால் அறிந்த சிற்சத்தி ஆன்மாவினிடமாக அனவரதமும் எழுந்தருளி யிருக்கப்பெறின், பூதக்கூட்டம் எல்லாம் பறிந் தோடிப்போம். சித்திகளாகிய அவற்றைக் குறித்து ஓராண்டு சிற்சத்தியோடு இருக்கப்பெறின் மலக் கட்டற்று வியாபகத்தை அடைந்த ஆன்மா பரகாயப்பிரவேசம் செய்தலுமாம் என்றவாறு.

அறிந்த பராசத்தி - ஆன்மாவால் யோகப் பயிற்சியால் அறியப்பெற்ற சிற்சத்தி; அன்றி ஆன்மாவின் பரிபாகநிலையையறிந்த சிற்சத்தி எனலுமாம். உள்ளே - ஆன்மாவின் உள்ளே. அமரின் - விரும்பி எழுந்தருளியிருக்கப்பெற்ருல்.

பூதப்படை அவை - பூதக் கூட்டங்களாகிய பௌதிகங்களும் பூதங்களும். பறிந்தது என ஒருமை முடிபேற்றது, படை தொகுதியொருமை யாதலின்.

அவை குறித்து என மாற்றுக. கூட - சிற்சத்தி யோடு கூட. விரிந்தது என்றது வியாபக நிலையடைந்த ஆன்மவை யுணர்த்திற்று. பரகாயம் மேவுதல்–கூடு விட்டுக் கூடுபாய்தல். குறிந்தவை என்பது குறித்தவை என்பதன் விகாரம். (134)

## பிராகாமியம்

**ஆன விளக்கொளி யாவ தறிகிலர்**
**மூல விளக்கொளி முன்னே யுடையவர்**
**கான விளக்கொளி கண்டுகொள் வார்கட்கு**
**மேலை விளக்கொளி வீடெளி தாநின்றே. 683**

இம் - எனின், ஒளி தரிசனம் செய்பவர்களுக்கு வீடெளிதாம் என்றல் நுதலிற்று.

இ - ள்: ஆன்மாவினிடமாக விளக்குப்போல ஒளியமைந்திருத்தலை அறியமாட்டார், மூலாதாரத்திலே விளக்கொளிபோன்ற மூலக்கனலை முன்னமே யுடையவர்கள் உயிர்கள். அதனை, எங்கும் கூட்டமான விளக்கொளியாகத் தரிசித்திருப்பவர்களுக்கு, எல்லாவற்றிற்கு மேலதான பரசிவவொளியும், அதனாற் கிடைக்கும் வீடும் மிக எளியதாம் என்றவாறு.

ஆன் + அ = ஆன-பசுவினுடையதான; அதாவது ஆன்மாவினுடைய. ஆன்மாக்கள் அநாதியே ஞானமுடையவர்கள் : ஆனால் ஞானம் மலத்தால் மறைப்புண்டு இருத்தலின் அதனை அவர்கள் அறியமாட்டாராயினர். அதுவே பசு ஞானமாய், தன்னை உணரச் சிறிது துணையாயிருப்பது. அதனைத் துணைக்

கொண்டு முறையே தடையை அறிதலாகிய பாச ஞானத்தையும், தடையை வென்று அவனருளால் எய்த இருக்கின்ற பதிஞானத்தையும் எய்தவேண் டும், அங்ஙனமாகவும் ஆன்மாக்கள் தனக்கு ஞானம் உண்டு என்பதைத் தடையான் உணரமாட்டார் ஆயினர். இவர்கள் அனைவரும் மூலக்கனலாகிய விளக்கொளியை அநாதியே படைத்தவர்கள். மூலக் கனலை மூலையிலேயே வைத்திராமல் சுவாதிஷ் டானம் முதலிய வெளியிடங்களாகிய காடுகளில் வரச்செய்து ஆஞ்ஞையில் கூட்டமான விளக்கொளி யாகத் தரிசிப்பவர்க்கு, மேன்மையான சிவச்சோதி யும் வீடும் எளிதாம் என்பது கருத்து. கானம்- கூட்டம்; காடாகிய இடங்களுமாம். (135)

### ஈசத்துவம்

நின்ற சதாசிவ நாயகி தன்னுடன்
கண்டன பூதப் படையவை எல்லாங்
கொண்டவை யோராண்டு கூடி யிருந்திடிற்
பண்டையவ் வீசன தத்துவ மாகுமே. 684

இம் - எனின், ஈசத்துவம் எய்தும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் :ஆகாயமாகிய சூட்சும பூதத்தை ஆதார மாகக்கொண்டு வீற்றிருக்கின்ற சதாசிவநாயகி யுடன், புலனாகும் ஏனைய காற்று அனல் நீர் நில மாகிய நுண்பூதங்களின் கூட்டத்தையும். அவற்றின் தெய்வங்களாகிய மகேசன் உருத்திரன் அரி அயனா கிய கூட்டத்தையும் அங்கங்கே அமைத்து. ஓராண்டு யோகம் செய்யின் பழமையான ஈசத்துவம் எய்து மென்றவாறு.

நின்ற என்ற பெயரெச்சத்திற்கு ஏற்ப ஆகாயத்தை இடமாகக் கொண்டு என்ற சொற்கள் வருவித்துரைக்கப்பட்டன. சதாசிவநாயகி என்றது சதாசிவத்தைச் சத்தியாகக் கண்டது.

கண்டன-இந்திரியகோசரமான அதாவது புலன்களுக்குப் புலப்படுகின்ற. பூதப்படை – ஆகாயம் ஒழிந்த மற்றைய பூதங்களின் தொகுதி. பூதங்களின் தொகுதி எனவே அவற்றின் தெய்வங்களான மகேசன் முதலியோரும். கொள்ளப்பெறுவர். யோகி தன்னுடலிடமாகப் பஞ்சபூதங்களையும். அவற்றின் தெய்வங்களையும் அவ்வவற்றிற்குரிய தானங்களில் அமைத்து ஓராண்டு யோகம் இருக்கின் ஈசத்துவம் எய்தலாம் என்பதாம். (136)

ஆகின்ற சந்திரன் தண்ணொளி யாயவன்
ஆகின்ற சந்திரன் தட்பமு மாயிடும்
ஆகின்ற சந்திரன் தன்கலை கூடிடில்
ஆகின்ற சந்திரன் தானவ னாமே. 685

இம் – எனின், மதிமண்டலங் கண்டவன் மதியாகவே விளங்குவன் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: ஆஞ்ஞாசக்கரமாகிய மதிமண்டலத்தில் பேரொளியைக்கண்ட யோகி அங்கே காணப்பெறுகின்ற சந்திரனுடைய குளிர்ந்த ஒளியாவன்; குளிர்ச்சியாவன்; சந்திரனுடைய கலைகளும் கூடப்பெற்று மதியாகவே விளங்குவன் என்றவாறு.

இங்ஙனமன்றி, சந்திரனுடைய ஒளியாக விளங்குபவன், தட்பமும் ஆவன், கலைகள் சேர்ந்து சந்திர

னேயாவன் எனலுமாம். தண்ணளியாயவன் என்றும் ஒரு பாடம் உண்டு. அடுத்துத் தட்பம் என வருதலின் அப்பாடம் பொருந்தாமை அறிக. (137)

தானே படைத்திட வல்லவ னாயிடும்
தானே யளித்திட வல்லவ னாயிடும்
தானே சங்காரத் தலைவனு மாயிடும்
தானே யிவனெனுந் தண்மைய னாமே. 686

இம் - எனின், ஈசத்துவமடைந்த யோகி இறைவனேயாவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஈசத்துவம் அடைந்த யோகி படைக்கவும், காக்கவும், அழிக்கவும் வல்லவனுவான்; தானே சிவமாய், தண்ணளியோடிருப்பன் என்றவாறு. (138)

தண்மைய தாகத் தழைத்த கலையினுள்
பண்மைய தாகப் பரந்தஐம் பூதத்தை
வண்மைய தாக மறித்திடில் ஓராண்டின்
மென்மைய தாகிய மெய்ப்பொருள் காணுமே. 687

இம்-எனின், ஐம்பூதங்களையும் வென்றால் மெய்ப்பொருள் காணலாம் என்றல் நுதலிற்று.

இ - ள் : குளிர்ச்சியாக விளங்கும் கலைகளில் பலவாகப் பரந்துபட்டு விளங்கும் ஐம்பூதங்களையும் உறுதியாகக் கட்டுப்படுத்திவைத்தால் ஓராண்டுப் பயிற்சிக்குள்ளாக மிக மேன்மையான உண்மைப் பொருளை உள்ளவாறறியலம் என்றவாறு.

பன்மை வன்மை என்பன எதுகை நோக்கிப் பண்மை வண்மை என்றாயின. மென்மை யென்பது மேன்மை யென்பதன் குறுக்கல். ஐம்பூதங்களையும் வெல்லின் மெய்ப்பொருள் ஆகிய சிவதரிசனமாம் என்றவாறு. (139)

## வசித்துவம்

மெய்ப்பொரு ளாக விளைந்தது வேதெனின்
நற்பொரு ளாகிய நல்ல வசித்துவங்
கைப்பொரு ளாகக் கலந்த உயிர்க்கெலாந்
தற்பொரு ளாகிய தன்மைய னாகுமே. 688

இ்ம் – எனின், வசித்துவத்தின் இயல்புணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நற்பொருள் என்று பாராட்டப்பெறும் நல்ல வசித்துவத்தின் உண்மைப் பொருளாக விளைந்தது எதுவெனின், கையின்கண் உள்ள பொருள் போலக் கலந்த உயிர்களனைத்திற்கும், சிவமேயான தன்மையனாக இவன் விளங்குவன் என்றவாறு.

நற்பொருளாகிய நல்ல வசித்துவம் மெய்ப் பொருளாக விளைந்தது ஏது எனின். கைப்பொரு ளாகக் கலந்த உயிர்க்கெலாம், தற்பொருளாகிய தன்மையன் ஆகும் எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

கைப்பொளாகக் கலந்த உயிர்க்கெலாம்: எல்லா உயிர்களும் உள்ளங்கையி லடங்கிய பொருள் போலச் சிவனுக்கு ஆம் ஆதலின் இங்ஙனம் கூறினர். இதுவே வசித்துவம், அங்ஙனம் அடங்கிய உயிர்

கட்கு வசித்துவ சித்தி பெற்ற இவன் சிவம்போன்ற தன்மையனுவான் என்பதாம். தற்பொருள்-சிவம். (141)

தன்மைய தாகத் தழைத்த பகலவன்
மென்மைய தாகிய மெய்ப்பொருள் கண்டிடின்
பொன்மைய தாகப் புலன்களும் போயிட
நன்மைய தாகிய நற்கொடி காணுமே. 689

இ - னின், வசித்துவம் எய்தியபின் விளையும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சிவமாந்தன்மை பெற்றுச் சிறப்புற்ற அந்நாளில், வசித்துவ சித்தன் மிக மிக நுணுக்க மாகிய உண்மைப்பொருளை அறியின், உடல் பொன் வண்ணமாக. புலன்கள் வலியொடுங்கிப்போக, நன்மை விளைதற்காக நல்ல கொடிபோலும் சத்தியைக் காண்பன் என்றவாறு.

தன்மையதாக என்றது முன்மந்திரக் கருத்தை அநுவதித்து நின்றது. தழைத்த பகல் அவன் எனப் பிரிக்க. அவன் என்றது வசித்துவ சித்தனை, அங்கும்சித்தி பொன்விலங்குபோல வந்து இடையீடு செய்யுமாதலின் கண்டிடின் என்று செயின் என்னும் எச்சத்தாலியம்பினர். பொன்மையதாக என்பதற்கு உடல் என்னும் எழுவாய்வருவிக்க. போயிட - வலிகுன்றிப்போக. நற்கொடி - சிற்சத்தி, நன்மையது ஆகிய - நன்மையாகிய அது ஆவதற்காக, ஆகிய என்பது செய்திய என்னும் வாய்பாட்டு வினைஎச்சம். அது, காணும் என்ற வினைகொண்டது. அன்றியும் பெயரெச்சமாக்கிக் கொடிக்கேற்றலும் உண்டு. (141)

நற்கொடி யாகிய நாயகி தன்னுடன்
அக்கொடி யாகம் அறிந்திடின் ஓராண்டு
பொற்கொடி யாகிய புவனங்கள் போய்வருங்
கற்கொடி யாகிய காமுக னாமே. 690

இ - எனின், இதுவும் வசித்துவம் எய்தியவன் நிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நல்கொடியாகிய நாயகி தன்னுடன் - நல்ல மின்னற்கொடிபோன்ற தலைவியாகிய குண்டலி சத்தியோடு, அக்கொடி ஆகம் ஓராண்டு அறிந்திடின் - அழகிய கொடிபோலும் பராசத்தியை மனத்தகத்து ஓராண்டுக்காலம் தியானிக்கின். பொற்கொடியாகிய புவனங்கள் - பொன்மயமான (இரண்யமயமான) முட்டையினின்று தோன்றிக் கிளைத்த உலகங்கள் அனைத்தினும். போய் வரும் - சென்று மீளும், கல் கொள் தி ஆகிய காமுகன் ஆமே - சிகிமுகிக் கற்குள் திகழும் தீப்போல மறைந்து நின்று சமயத்து வெளிப்படுகின்ற விருப்பத்தை உடையவனாவன் என்பது பதவுரை.

நாயகி தன்னுடன் அக்கொடி ஆகம் அறிந்திடின் என்றதால் நாயகி வேறாயும் அக்கொடி வேறாயும் இருத்தல் உணரப்படும். ஆகவே நாயகி என்றது குண்டலி சத்தியையும், கொடி திருவருட் சத்தியையும் உணர்த்தியதாகக் கோடலே இயைபுடையதாம்.

பொற்கொடியாகிய புவனங்கள் : நீரைப் படைத்து அதில் பொன்மயமான வீரியத்தைவிட அதுவே பொன்மயமான அண்டமாயிற்று ; அவ்

வண்டத்தில் எல்லா உலகங்களும் அடங்கியுள்ளன என்பது வரலாறு. ஆதலின் பொன்னண்டத்தின் கொடியாக (கிளையாக) உள்ள உலகமனைத்தும் என்றுரைக்கப்பட்டது.

சிகிமுகிக் கல்லுள்ளே விளங்கும் தீ கரந்து நின்று காலத்தில் வெளிப்பட்டு உபகாரப்படுதல் போல, வசித்துவ சித்தியுடையவனும் விருப்பத்தை வென்று ஆற்றலை மறைத்து நின்று வேண்டியபோது பிறருக்கு உபகாரப்படுவன் என்பதாம். கற்கொள் தீ யென்பது கற்கொடி என எதுகை நோக்கி விகாரப்பட்டது. ஆகவே சித்திபெற்றவன் தான் சித்தன் என்பதைப் பிறரறியா வண்ணம் ஒழுகும் இயல்பினன் என்பது கருத்து.

நல்ல கொடிபோன்றவளாகிய சதாசிவ நாயகி யுடன், அந்தக் கொடிபோன்ற சத்தியை ஓராண்டுக் காலம் இதயத்து இடைவிடாது எழுந்தருளச் செய்து தியானிக்கின், பொன்போலும் சக்திவடி வான எல்லாப் புவனங்களிலும் போய் மீளும் தன்மைவாய்ந்த, கல்லினுட் பொருந்திய தீயாகிய காமுகனுவான் என்றும், திருவருளாற்றலை ஓராண் டுத் தியானத்தாற் பெற்றவர் எல்லாவுலகங் களிலும் போய்வரும் ஆற்றலைப் பெறுவர். அங்ஙனம் போய்வரினும் கற்கொடி போன்ற உரனுடைய உள்ளமுடைமையை விரும்புவான் என்றும் உரைப்பர் சிலர். இவற்றின் இயைபு அறிந்து ஏற்பன கொள்க. (142)

காமரு தத்துவ மானது வந்தபின்
பூமரு கந்தம் புவனம தாயிடும்
மாமரு வுன்னிட மெய்திடு மானனாய்
நாமரு வும்மொளி நாயக மானதே. 691

இ-ள், இதுவும் அதன் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மான் அன்னாய் - மானை ஒத்தவனே! கா மரு தத்துவமானது வந்தபின் - மேற்சுட்டிய வண்ணம் காமம் மருவிய உண்மையானது கைவந்த பின், பூ மரு கந்தம் புவனமது ஆயிடும் - கந்த மருவிய பூமியும் ஏனைய புவனங்களும் உனக்கு வசமாயிடும், மற்றும், நாம் மருவும் ஒளி நாயக மானது-நாம் நித்தியானந்த வாழ்விற்காக மருவத்தக்க தனித்தலைமைப் பேரொளியாகிய சிவமானது மா மருவு உன்னிடம் எய்திடும் - பெருமை தங்கப் பெற்ற சித்தனாகிய உன்னிடம் தாமே வலியவந்தடையும் என்றவாறு.

மான்அன்னாய் என்பது மான் அனாய் எனத் தொகுத்தல் விகாரம் பெற்றது. மான் வாயுவை வென்று இருத்தல் போலச் சித்தன் பிராணவாயுவைக் கட்டுப்படுத்தி வென்றிருத்தலின் மானனாய் என்று விளித்தார். மானை வாதாசனன் என்னும் வழக்கு வடமொழியுள்ளும் விளங்குதல் ஓர்க.

காமம் மரு தத்துவமானது வந்தபின்; காமம் மரு என்பது விகாரப்பட்டு காமரு என்றாயிற்று. முன் திருமந்திரத்தில் காமுகனாமே என்றவர் அதனையே அநுவதித்துக் காமரு என்றார். இதன்

பொருள் அங்ஙனம் விரும்பப்படுகின்ற புவனங்களனைத்திலும் போய் வருகின்ற உண்மை கைவந்ததும் என்பதாம். இங்ஙனமன்றி உரிச்சொல்லாகக் கொண்டு அழகிய தத்துவம் என உரைப்பாரும் உளர். இதனாற் பொருட்சிறப்பின்மை மட்டுமின்றி மந்திரங்கடோறும் அந்தாதித் தொடையான் அநுவதித்துக் கூறும் ஆசிரியர் மரபிற்கும் ஏலாமை ஓர்க.

கந்த மரு பூம் புவனமது ஆயிடும்; நாற்றத்தைச் சேர்ந்த பூமியும், ஏனைய பூதங்களின் புவனங்களும் வசமாயிடும் என்பதாம். புவனம் தொகுதியொருமை யாதலின் அது என்னும் பகுதிப் பொருள் விகுதி பெற்றது.

நாம மருவும் ஒளி நாயகமான் து மா மருவு உன்னிடம் எய்திடும் எனக் கூட்டி முற்கூறியவாறு பொருள்கொள்க.

இங்ஙனமன்றி வேறுரைகண்டு விளங்கா அடி ஒன்றனை நழுவவிடுத்து இல்லைப் தோன்றுந்து இடர்ப் படுவாரும் உளர். (143)

நாயக மாகிய நல்லொளி கண்டபின்
தாயக மாகத் தழைத்தங் கிருந்திடும்
போயக மான புவனங்கள் கண்டபின்
பேயக மாகிய பேரொளி காணுமே. 692

இ-ள்: சிவசத்தியாகிய பேரொளியைக் கண்டவன், ஏனையவற்றை நோக்கான் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : எல்லாவற்றிற்கும் தலைமையான சிவச் சோதியைத் தரிசித்தபின்பு. அந்த ஒளியையே தாய் வீடாகக்கொண்டு மகிழ்ச்சியுடன் அங்கே வீற்றிருக்கும். எல்லாப்புவனங்களிலும் சென்று கண்டபின், ஏனைய பிரகாசங்களுக்கு இருப்பிடமாகிய ருத்திரன் முதலிய ஒளிகளைப் பெரிதென்று காணுமே; காணாது என்றவாறு.

அமுதம் உண்பவன் நஞ்சு விரும்பாதவாறு போல நல்லொளி கண்டவன் அங்கேயே தழைத்திருப்பானேயன்றித் தாழ்ந்து பிசாசபுவனங்களிலுள்ள ஒளிகளை நோக்கான் என்பது கருத்து.

அகமான புவனங்கள் போய்க்கண்டபின் - பூமிக்கு மேலுள்ள இடமான புவனங்களைக் கண்ட பிறகு. பேய் அகமாகிய பேரொளி – பிசாசலோக வாசிகளான ருத்திர பிசாச கணங்களுக்குப் பிருதிவி தத்துவத்துள்ளிருக்கும் புவனங்களை வியாபித்த அணிமாதி எட்டுக் குணங்களும் உண்டாதலின் அவற்றைப் பெரிதெனக் கொண்டு அதனைக்காணார் என்பதாம். காணுமே என்றதில் ஏகாரம் ஈற்றசையன்று; எதிர்மறைக்கண்ணது.

இங்ஙனமன்றிப் பேயகம் என்பதனைப் ‘ பேசு அகம் ’ என்பதன் போலியாகக் கொண்டு புகழ்ந்து கூறப்படுமிடம் எனப் பொருள்கொள்ளுவாரும், தன் வழிச் செலுத்தும் பேய்போன்ற திருவருள் ஆற்றல் என்பாரும் ஆகப் பலவாறு உரை கூறுவர். அணிமாதிகள் எட்டும் பூலோகத்திற்கு மேலாகப் பிசாசலோகம் முதற்கொண்டு பிரமலோகபர்யந்தம்

மேன்மேலும் இரட்டிப்பாய் அறுபத்துநாலு குண மாக விளங்கும் என்று ஆகமங்கள் கூறுதலை ஆய்ந்து பொருள்கொள்க. (145)

பேரொளி யாகிய பெரியவவ் வேட்டையும்
பாரொளி யாகப் பதைப்பறக் கண்டவன்
தாரொளி யாகத் தரணி முழுதுமாம்
ஓரொளி யாகிய காலொளி காணுமே. 693

இம் - எனின், இதுவுமது.

இ-ள்; பெரிய ஒளியாகிய பராசத்தி எழுந்தருளியுள்ள பெரிய அழகிய தாமரையாகிய சகஸ்திராரத்தைப் பார்க்கும் அளவினதாகிய ஒளியாகத் துணுக்கற்றுக் கண்டவன், நீண்ட ஒளிபோல விசுவ வியாபியாக இருப்பன்; அவன்பிராணனை ஒளிவடிவாகக் காணுவன் என்றவாறு.

ஏடு-இதழ்; ஆகுபெயரான் தாமரையை உணர்த்திற்று. பெரிய ஏடு என்ற குறிப்பு ஆயிர இதழ்த் தாமரையை. பிரமரந்திரத்தில் சோதி காணும் போது துணுக்குண்டாமாதலின் அஃதின்றிக் காணவல்ல வலியோன் என்றது. தார் ஒளி - நீண்ட ஒளி. தரணிமுழுதும் ஆம் - விசுவம் முழுதும் வியாபித்து இருப்பான். (145)

காலொ டுயிருங் கலக்கும் வகைசொல்லிற்
காலது அக்கொடி நாயகி தன்னுடன்
காலது ஐஞ்ஞூற் றொருபத்து மூன்றையுங்
காலது பெண்மண்டிக் கொண்டுஇவ் வாறே. 694

இ-ள் - எனின், உடலுள் நாடியனைத்திலும் நாயகி வியாபித்துள்ளமை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : பிராணவாயுவோடு ஆன்மா விரவும் உயரத்தை உரைக்கின், எங்கும் நிறைந்துள்ள அழகிய கொடி போன்ற பராசத்தியுடன் ஐந்நூற்று பதின்மூன்று நாடிகளையும் வழியாகக்கொண்டு பெண்ணாகிய சத்தி நிறைந்துள்ளவிதம் இவ்வாறும் என்றவாறு.

பிராணவாயுவும் ஆன்மாவும் கலந்து இயங்கும் உபாயத்தை உணர்த்தின் சத்தி 513 நாடிகளில் கலந் தியங்கும் கருணையால் என்பது கருத்து. கால் - வழி யாகிய நரம்பு. பெண் – சத்தி. காலது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி (146)

ஆறது வாகும் அமிர்தத் தலையினுள்
ஆறது ஆயிர முந்நூற் றொடஞ்சுள
ஆறது வாயிர மாகு மருவழி
ஆறது வாக வளர்ப்பதி ரண்டே. 695

இ-ம் - எனின், அமுத ஆற்றைப் பெருக்குபவரிவர் என்றல் நுதலிற்று.

இ-ள் ; ஆறுவது ஆதாரமாகும் அமுதநிலையும் மதிமண்டலமும் ஆகிய தலையில், ஆயிரத்து முந்நூற்றைந்து வழிகளாகிய நாடிகளுள்ளன. இவைபோல வழிகள் மேலும் ஆயிரமாகும். அத்தகைய அரிய வழியின்வாயிலாக அமுதத்தைப் பெருக்குவன சிவமும் சத்தியுமாகிய இரண்டுமே யாம். என்றவாறு.

ஆறு நான்கனுள் முன்னது, ஆறு என்னும் எண்; இரண்டாவதும் மூன்றாவதும் வழி; நான்காவது வாயில். இரண்டு எண்ணுகுபெயராக மதிமண்டலத்து வீற்றிருக்கும் சிவசத்திகளை உணர்த்திற்று. ஆயிரம் என்பது பலவென்னும் பொருளது. (147)

இரண்டினின் மேலே சதாசிவ நாயகி
இரண்டது கால்கொண் டெழுவகை சொல்லில்
இரண்டது ஆயிரம் ஐம்பதோ டொன்றாய்த்
திரண்டது காலம் எடுத்ததும் அஞ்சே. 696

இ-ம் — எனின், இதுவுமது.

இ - ள் : அக்கினி மண்டலமும் சூரியமண்டலமுமாகிய இரண்டற்குமேல் சந்திரமண்டலத்தில் இறைவி இடகலை பிங்கலையாகிய இருவழிகளைக் கொண்டு மேலெழும் வகையைச் சொல்லின் அந்த இரு நாடிகளும் ஆயிரத்தைம்பத்தொன்றாய். ஐந்து நாழிகை வெளிப்போந்தது என்றவாறு.

இரண்டு, அஞ்சு முதலிய எண்ணுப் பெயர்கள் ஆகுபெயராக இடநோக்கி மண்டலங்களையும், நாடிகளையும், நாழிகைகளையும் உணர்த்தின. இடகலை பிங்கலை நாடிகளின் வழியாகப் பிராணனியங்கும் போது பல கிளைநாடிகளில் வியாபிப்பதால் அவற்றுட்பெரிய நாடிகளையே சுட்டி எண்கொடுத்து ஓதினர். (148)

அஞ்சுடன் அஞ்சு முகமுள நாயகி
அஞ்சுடன் அஞ்சது வாயுத மாவது
அஞ்சது வின்றி இரண்டது வாயிரம்
அஞ்சது காலம் எடுத்துளும் ஒன்றே. 697

இ-ம் - எனின், பிராணவாயுவின் இயக்கஎண் இத்துணைய என்றுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பத்துத் திருமுகங்களையுடைய சதாசிவ நாயகியாகிய சிவசத்திக்குப் பத்து வாயுக்களும் ஆயுதமாவன. அவற்றுள் ஓரஞ்சு நீங்க நின்ற மற்றைய ஐந்துள் பிராணனாகிய ஒன்று இடகலை பிங்கலையாகிய இரண்டாய் ஐந்து நாழிகைக்கு ஆயிரமூச்சாக இயங்குதலை அறிந்து உள்ளப்படும் என்றவாறு.

அஞ்சுடன் அஞ்சு முகம் உள நாயகி - இறைவற்குப் பத்துத் திசைகளும் முகமாதலின், அவனைப் பிரியாத சத்தியும் பத்துமுகமுள நாயகி எனப்பட்டார். இறைவி ஆன்மாவை வியாபித்துநின்று தசவாயுக்களாகிய ஆயுதங்களைத் தாங்கிநின்று இயக்குகின்றாள் என்றது, பிராணன் முதலான வாயுக்களைக் கொண்டு ஆன்மாவைத் தொழிற்படுத்துகின்றாள் என்பதை விளக்கிற்று.

அஞ்சுடன் அஞ்சது ஆயுதமாவது என்பதை ஆயுதமாவது அஞ்சுடன் அஞ்சது என மாற்றிப் பொருள் கொள்க. ஐந்து ஐந்தாகப் பிரித்துக் கூறியது பின்னர் அடுத்த அடியில் நாகன் முதலிய வாயுக்கள் ஐந்தையும் அஞ்சதுவின்றி என்று விலக்க இருத்தலின்.

பின்னிரண்டடிக்கும், அஞ்சது இன்றி ஒன்று இரண்டது அஞ்சதுகாலம் ஆயிரம் எடுத்துளும் எனக் கொண்டுகூட்டி, நாகன் முதலிய வாயுக்கள் ஐந்தும் இன்றி, முதலாவதாகிய பிராணன், இடகலை

பிங்கலை யென்னும் இரண்டாய், ஐந்து நாழிகைக் காலத்துள் ஆயிரத்து நூற்றிருபத்தைந்து சுவாச மாக இயங்குதலை ஊன்றியறிந்து உள்ளப்படும் எனப் பதவுரை கொள்க.

பத்து வாயுக்களும் ஆன்மாவை உடலிடமாக வைத்து இயக்குதற்குக் கருவியாகப் பயன்படுதலின் ஆயுதம் என உருவகிக்கப்பட்டது. அஞ்சது இரண்டது என்பவற்றுள்ள அது என்பன பகுதிப்பொருள் விகுதி. பிராணன் இயங்கும்போது, நாசியின் இரண்டு துவாரத்தானும் ஓரோர் பாரிசத்து ஐந்து நாழிகையாகக் கொண்டு ஒருமாத்திரையில் நூற்றுப்பன்னிரண்டரைச் சுவாசமாக இயங்குதலின் ஐந்து நாழிகைக்கும் ஆயிரத்து நூற்றிருபத்தைந்து சுவாசமாயிற்று. திருமூலதேவநாயனர் ஆயிரம் என்றது ஒரு பெருந்தொகையை மட்டும் குறிப்பிட்டு, சொச்சைத்தை விலக்கிக் கூறியது. ஆயினும் ஆயிரத்து நூற்றிருபத்தைந்து எனக் கொள்க.

எடுத்து – சிறப்பித்து எண்ணி. உளும் என்பது உள்ளும் என்பதன் விகாரம். உள்ளப்படும் எனச் செயப்பாட்டு வினையாகப் பொருள் கொள்க.

இந்த மந்திரத்திற்கு அதிகார இயைபும் சொற்றொடர்பும் பொருளியைபும் இன்றி உரையெழுதினேரும் உளர். அது பொருந்தாமையை ஊன்றி உண்மை துணிக. (149)

ஒன்றது வாகிய தத்துவ நாயகி
ஒன்றது கால்கொண் டூர்வகை சொல்லிடின்
ஒன்றது வென்றிகொள் ஆயிரம் ஆயிரம்
ஒன்றது காலம் எடுத்துளும் முன்னே. 698

இ - ள்: தனிப்பரம்பொருளான தத்துவநாயகி யான திருவருட்சத்தி, ஒன்றான நடுநாடியை வழி யாகக் கொண்டு இயங்கும் வகையைச் சொல்லின், தனித்த வெற்றிகொண்ட ஆயிரமாயிரமாக ஒரு நாழிகையுள் இயங்குவதை எடுத்து உள்ளப்படும் என்றவாறு.

இம் - எனின், பிராணவாயு சுழுமுனை வழியாக இயங்குதலின் வியாபகம் உணர்த்துதல் நுதலிற்று.

திருவருட் சத்தியோடு ஒருங்குவைத் தெண்ணப்பெறுவது வேறு ஒன்றின்மையின் ஒன்றதுவாகிய தத்துவநாயகி என்றார். தத்துவ நாயகி என்றது தத்துவங்கள் அனைத்திற்கும் தலைமை பூண்டுள்ள மாயைக்கும் தலைவி என்பது மாம். ஒன்றது கால் - நடுநாடியாகிய ஒன்றான வழி. கால் — வழி. ஊர்வகை – ஊர்ந்து செல்லும் தன்மை.

ஒன்றது வென்றி — இணையிலா வெற்றி. ஆயிரம் ஆயிரம் என்பது பன்மைகுறித்து நின்றது. எடுத்துளும் என்பதற்கு முன் உரைத்தாங்கு உரைக்க. (150)

முன்னெழும் அக்கலை நாயகி தன்னுடன்
முன்னுறு வாயு முடிவகை சொல்லிடின்
முன்னுறும் ஐம்பத்தொ டொன்றுடன் அஞ்சுமாய்
முன்னுறு வாயு முடிவகை யாமே. 699

இம் - என்னின், கலைநாயகியுடன்மேலெழும் பிராண னது காலைஎல்லையை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : முற்பட்டு எழுகின்ற அந்தக் கலைகட் கெல்லாம் தலைவியாகிய திருவருட்சத்தியோடு, முன் னுதல் உற்ற பிராணன் முடியுமுறையைச் சொல் லின், முந்நூற்றைம்பத்தாறாய் மக்களால் எண் ணப்படுகின்ற ஆயுள் முடிவுவகைக்கு உபாயமாம் என்றவாறு.

முன் எழும் அக் கலைநாயகி: பிராணனோடு முற் பட்டு எழுகின்ற குண்டலினியாகிற திருவருட்சத்தி. அதனுடன் முன்னுறுவாயு முடிவகை சொல்லிடின்— அக் குண்டலினியோடு முற்பட்டு எழுகின்ற பிராணன் முடியும் உபாயத்தை உரைக்கின். குண்ட லினியும், பிராணனும் சாதகனிடம் தான்முந்தி தான்முந்தியெனப் போட்டியிட்டு எழுகின்றன என்பதாம்.

முன்னூறும் ஐம்பதொடு ஒன்றுடன் அஞ்சுமாய்- ஓராண்டுக்குரிய முந்நூற்று ஐம்பத்தாறு நாட்க ளாய். முந்நூறும் என்பது முன்னூறும் என எதுகை நோக்கி விகாரப்பட்டது. முன்னுறு ஆயு- எண்ணப்படுகின்ற ஆயுட்காலம். ஆண்டுகளாக ஆயுள்முடிவாக ஆகின்றது பிராணன் என்று விளக் கியவாறும். (151)

ஆய்வரும் அத்தனி நாயகி தன்னுடன்
ஆய்வரு வாயு அளப்பது சொல்லிடில்
ஆய்வரும் ஐஞ்ஞூற்று முப்பதொ டொன்பது
ஆய்வரு வாயு வளப்புள் ளிருந்ததே. 700

இ-ள்: ஆராய்தற்குரியதாக வருகின்ற பிராண வாயு, ஆய்ந்துணர்தற்கரிய அந்த ஒப்பற்ற பராசத்தியுடன் கலந்திருக்கின்ற நிலையைச் சொல்லின், ஆகிவருகின்ற ஐந்நூற்று முப்பத்தொன்பதாக வருகின்ற பிராணன் ளைப்பத்துடன் விளங்கிற்று என்றவாறு.

இம் - எனின், பிராணவாயுவினியக்கம் ஐந்நூற்று முப்பத்தொன்பது என்றல் நுதலிற்று.

பராசத்தியோடு பிராணன் கலந்து விளங்குவதைச் சொல்லின் ஐந்நூற்று முப்பத்தொன்பது என்னும் அளவுடையதாம் என்பது கருத்து. (152)

இருநிதி யாகிய எந்தை யிடத்து
இருநிதி வாயு இயங்கு நெறியில்
இருநூற்று முப்பத்து மூன்றுடன் அஞ்சாய்
இருநிதி வாயு இயங்கும் எழுத்தே. 701

இம் - எனின், பிராணன் இயங்கும் நாடிகள் இனைய என்றல் நுதலிற்று.

இ-ள்: இருவகைச் செல்வமாகிய சிவபெருமானிடத்து எழுந்த ஆணையின்வண்ணம் பெருநிதியாகிய பிராணன் இயங்குகின்ற வழியில் இருநூற்று முப்பத்து மூன்றும். அத்தகைய பெரிய செல்வமாகிய பிராணனுடன் இயங்குகின்ற அக்கரங்கள் அஞ்சாம் என்றவாறு.

இருநிதியாகிய எந்தை - சங்கம் பதுமம் என்னும் அளவினதாகிய பெரிய செல்வம்போன்ற

எம் தந்தையாகிய இறைவன். இடத்து என்றது ஆணைவழியே என்னும் பொருள் தந்து நின்றது.

இருநிதி வாயு - பெரிய செல்வமாகிய பிராணன். இடை பிங்கலையாகிச் செல்வம்போன்ற பிராணன் என்றுமாம். இயங்கு நெறி இருநூற்று முப்பத்து மூன்றும் எனவும், அவற்றோடு வாயு இயங்கும் எழுத்து அஞ்சாம் எனவும் இயைத்துப் பொருள் கொள்க. அஞ்சு அகார உகார மகார நாதம் விந்து என்பன. (153)

எழுகின்ற சோதியுள் நாயகி தன்பால்
எழுகின்ற வாயு இடமது சொல்லில்
எழுநூற் றிருபத் தொன்பா னதுநாலாய்
எழுத்துடன் அங்கி இருந்ததிவ் வாறே. 702

இம் - எனின், அக்கினிமண்டலத்து இத்துணை நாடிகளிற் பிராணன் இயங்கும் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மேலெழுகின்ற மூலாக்கினியோடு விளங்குகின்ற சத்தியினிடமாக எழுகின்ற பிராண வாயுவின் இடத்தைக் குறிக்குமிடத்து. எழுநூற்று இருபத்து ஒன்பதுமாம். அது நான்கு சிறந்த நாடிகளின் வழியாக எழுந்து அக்கினிமண்டலத்து மேற் கூறியவண்ணம் வியாபித்து இருந்தது என்றவாறு.

சோதியுள் நாயகி - சோதியாகிய உள்ளெழுகின்ற சக்தி என்றவாறும். அவள்பால் வாயு எழுதலாவது அவளுடன் மற்றைய கிரந்திகளைப்பேதித்து எழுதல்.

அக்கினிமண்டலம், நாடியின் கீழ்ப்பாகத்துத் திரிகோணமாயிருக்கிறது. காய்ச்சிய சாம்பூநதப் பொன்னிற முள்ளாதாய் மனிதர்களுக்கு முக்கோண மாயும் விலங்குகளுக்கு நாற்கோணமாயும் பட்சி களுக்கு வட்டமாயும் இருக்கும். அதன் மத்தியில் எப்போதும் அக்கினி சிகை பரவியிருக்கின்றது. அக்கினிசிகை விருத்தியினுலாவது. வெப்ப முடைமையினுலாவது மேலெழுந்து அபானவாயு வோடு கிளம்பிப் பிராண வாயுவைப் பொருந்து கிறது. இவ்வண்ணம் மிகக் கொழுந்துவிட்டெரி யும் அக்கினியால் தூண்டுகின்ற குண்டலினி தடியாலடிக்கப்பட்ட பாம்புபோலச் சீறி எழும்பி, நிமிர்ந்து, சுழுமுனையிற் புகுகின்றது; அப்போது அதனுற்றலாகிய வெப்பம் எழுநூற்றிருபத் தொன்பது நாடிகளாற்சென்று பரவுகின்றது என்பது யோக குண்டலினி உபநிஷத்திலும், சாண்டில்யோப நிஷத்திலும் கூறப்பட்டுள்ளது இவற்றை,

देहमध्ये शिखिस्थानं तप्तजांबूनदप्रभम् ।
त्रिकोणन्तु मनुष्याणां चतुरस्रञ्चतुष्पदाम् ॥
मण्डलन्तु पतंगानां सत्यमेतद्ब्रवीमिते ।
तन्मध्येतु शिखातन्वी सदातिष्ठति पावके ॥
ततोयातो वन्हयपानौ प्राणमुष्ण स्वरूपकम् ।
तेनात्यन्ते प्रदीप्तस्तु ज्वलनो देहजस्तथा ॥
तेनकुण्डलिनीसुप्ता संतप्तासंप्रबुध्यते ।
दण्डाहता भुजगीव निश्वस्य ऋजुतां व्रजेत् ॥

இம்மேற்கோள்களான் அறிக. நாலாய் எழுந்து - அக்கினி, அபானன், குண்டலினி, பிராணன் என்ற நான்காய் எழுந்தது. (154)

ஆறது கால்கொண் டிரதம் விளைத்திடும்
ஏழது கால்கொண் டிரட்டி இறக்கிட
எட்டது கால்கொண் டிடவகை யேற்றபின்
ஒன்பது மாநிலம் ஒத்தது வாயுவே. 703

[ இப்பாடலின் உரை விளங்கவில்லை ] (155)

சந்திரன் சூரியன் தற்பரன் தாணுவிற்
சந்திரன் தானுந் தலைப்படுந் தன்மையைச்
சந்தியி லேகண்டு தானுஞ் சகமுகத்
துந்திச் சமாதி யுடையொளி யோகியே. 704

இம் - எலின், யோகியின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இடகலையும் பிங்கலையும் பரசிவமாகிய தாணுவின் மதிமண்டலமும் ஆகிய மூன்றினும் தலைப் பெய்யுந் தன்மையைப் புருவமத்தியாகிய சந்தியிற் கண்டு. தியானிப்பானும் தியானிக்கப் படுபொருளும் ஒன்றான உயர்ந்த சமாதியால் பெற்ற ஒளியுடையவனே யோகியாவான் என்றவாறு,

தற்பரன் தாணுவிற் சந்திரன் – பரசிவமாகிய தாணு எழுந்தருளியுள்ள மதிமண்டலம்; என்றது சுழுமுனையின் உச்சியை. ஆகவே, தியானிப் போனும் தியானப் பொருளும் வேறாகாத சகமுகத் தில் உயர்ந்த சமாதியையுடைய ஒளியோடுகூடிய

யோகியே இடகலை, பிங்கலை, சுழுமுனை இவை கலந்திருக்குந் தன்மையைப் புருவ மத்தியாகிய சந்திப்பிற் கண்டு தானுவன் என்பது கருத்து. சகமுகம் – கூடவேயிருத்தல். (156)

அணங்கற்ற மாதல் அருஞ்சன நீவல்
வணங்குற்ற கல்விமா ஞான மிகுத்தல்
சிணுங்குற்ற வாயர் சித்திதாங் கேட்டல்
நுணங்கற் றிருத்தல்கால் வேகத்து நுந்தலே 705

மரணஞ் சரைவிடல் வண்பர காயம்
இரணஞ் சேர்பூமி இறந்தோர்க் களித்தல்
அரணன் திருவுரு வாதன்மூ வேழாங்
கரனுறு கேள்வி கணக்கறிந் தோனே. 706

இம் – எனின் யோகியர் செயல் உணர்த்துதல் நுதலின.

இ - ள் : ஆசையொழிதலும், அரிய பந்து சனங்களைப் பிரிந்திருத்தலும் பணிவுடைய கல்வியனுதலும், பரஞானமிகுதலும், சிணுங்கிய வாயினராதலும், சித்திகளைப்பற்றிச் சிரவணம் செய்தலும், அசைவற்றிருத்தலும், பிராணனை மேலாதாரங்கட்குச் செல்லும்படித் தூண்டுதலும், மரணத்தையும் கிழத்தனத்தையும் விடுதலும். வளப்பமான பரகாயப்பிரவேசமும், சுவர்க்கத்தை இறந்தவர்கட்களித்தலும். தமக்கு அரணுவானுகிய சிவன் திருவுருவத்தைத் தாம்பெறுதலும், இருபத்தொரு கிரணங்களையுடைய சிவசூரியனுடைய புகழ்களைக் கேட்டலுமாகிய இவைகளின்

கணக்கினை அறிந்தோனே யோகியாவான் என்றவாறு.

அணங்கு வருத்துந்தன்மைவாய்ந்த ஆசை. அற்றமாதல் – அதற்குச் சோர்வுவிளைப்பவனாதல், அஃதாவது ஆசையகற்றல்.

அருஞ்சனம் - தமக்கு இன்றியமையாதவர்கள் என்று கருதப்பெறும் மனைவி மக்கள் முதலிய குருதித் தொடர்புடைய சனங்கள். அவர்கள் யோகத்திற்கு இடையூறு செய்பவர்களாதலின் அவர்களை அறவே நீங்கி வாழ்தல் வேண்டும் என்பது.

வணங்குற்ற கல்வி – பணிந்த படிப்பு. கல்வியால் செருக்கு விளையும். அங்ஙனமன்றி ஆன்று அவிந்து அடங்கிய படிப்பினராதல் வேண்டும் என்பது முனைப் படங்கிய இடத்தே முதல்வன் தோன்றுவனாதலின் இதனைக் கூறினார்.

மா ஞானம் - பெரிய ஞானம். இச்சிறப்பு ஏனைய பாச பசு ஞானங்களை ஒழித்துநின்றது. பரஞானம் என்பது பொருள். அதனை மிகுத்தல் ஆவது என்றும் எக்கணமும் அதனில் பிரியாதிருத்தல்

சிணுங்குற்றவாயர் – நின்றும். கிடந்தும் நடந்தும் " நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே " என்றவண்ணம் ஸ்ரீ பஞ்சாக்கரத்தைச் சிணுங்குகின்ற வாயையுடையராதல். சிணுங்குதல் – முணுமுணுத்தல்.

சித்திதாம் கேட்டல் - சித்திகளைப் பற்றி ஆராய்தல். கேட்டல் – விசாரித்தல். நம்மின் மிக்கா ரோடு யோக சித்திகளைப்பற்றி ஆராய்ந்து தந்நிலை யையும் அவரனுபவத்தையும் ஒப்பநோக்கி உயர வழிவகுத்தல்.

நுணங்கற்று இருத்தல் - சித்தம் சலியாது நிலை யாயிருத்தல்,

கால் - பிராணன். வேகத்து நுந்தல் – பிரம கிரந்தி முதலியவற்றில் தடைபடாது வேகமாகப் பிரமரந்திரம் செல்லும் வகையில் செலுத்துதல்.

மரணம் விடல் - இயல்பாகவரும் மரணத்தைத் தவிர்த்துத் தாம் வேண்டும்போது பிரமரந்திரத்தின் வழியாகப் பிராணனை வெளிப்படுத்தும்உபாயத்தை மேற்கொள்ளல்.

நரை விடல் – கிழத்தனம் அகறல். சிறைவிடல் எனப் பாடங்கொண்டு பிறப்பாகிய சிறையை மீட்டும் எய்தாவண்ணம் விடுதல் என்பாரும் உளர்.

வண் பரகாயம் - எல்லா உயிர்களிடத்தும் வியா பித்திருத்தலே பரகாயப்பிரவேசமாதலின் வளப்ப மான பரகாயப்பிரவேசம்செய்தல் என்றார். ஐம்பூத ஆற்றலையும் வெல்லுதலே பரகாயத்தின் முதற்படி ஆதலின் அவற்றை வெல்லுதலைப்பற்றிக் கூறியதாம்.

இரணம் சேர் பூமி பொன்மயமான பூமி; சொர்க்கம். உறவு முதலிய முறை பற்றாது இறந்

தோர் அனைவருக்கும் தன் யோகப்பயனால் சொர்க்க மளித்தல்.

அரனன்—பாதுகாவலாகிய பரமன். அவன் திரு வுருவாதல் — பரமனைப்போல் திருவுருத்தாங்கி யிருத்தல்.

மூவேழாம் கரன் உறு கேள்வி - சிவசூரியனைப் பற்றிய வரலாறுகளையே கேட்டல், சிவனைச் சூரிய னாக உருவகித்தமைக்கேற்பச் சூரியனுக்குள்ள ஏழு நிறங்களும் தம்முட் கலப்பால் ஒவ்வொன்றும் மூன்றாக இருபத்தொன்றாயின என்க, இதுவன்றி, வெண்மை செம்மை பொன்மை என்ற மூன்று நிறங் களும் உறழப்பெறுதலால் இருபத்தொன்றான கிரணம் என்பாரும் உளர். (157. 158)

ஓதம் ஒலிக்கும் உலகை வலம்வந்து
பாதங்கள் நோவ நடந்தும் பயனில்லை
காதலில் அண்ணலைக் காண இனியவர்
நாதன் இருந்த நகரறி வோரே. 707

இ-ள் - எனின், நாதனிருக்கும் நகரறிவார் இவர் என்றுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள், கடல் ஒலிக்கும் உலகை வலம்வந்து கால்கடுக்க நடந்தும் விளைவதொரு பயனில்லையாம். அன்போடு இறைவனைத் தரிசிக்க, இனியராகிய காண்போர் இறைவன் எழுந்தருளியிருக்கும் இடத்தை அறிந்தோர் ஆவர் என்றவாறு.

ஓதம் - பெருக்கு; ஆகுபெயராய்க் கடலையுணர்த் திற்று. ஓதம் ஒலிக்கும் உலகு - கடல் புடைசூழ்ந்த

உலகம். தீர்த்த யாத்திரை, தலயாத்திரை, பூப் பிரதட்சிணம் என்று நடந்தும் பயனில்லை; இறைவனை அன்போடு தரிசித்தலே சிறந்தது. அங்ஙனம் தரிசித்தவர்களே இறைவனின் இருப் பிடத்தை அறிந்தவராவர் என்பதாம். இறைவன் அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையாதலின், பக்தி வலையிற் படுவோனாதலின் இவ்வண்ணம் அருளினர். இனியவர் என்பதை இறைவற் காக்கு வாரும் உளர். அங்ஙனம் கொள்ளின் அற்வோரே என்பதற்கு எழுவாய் வருவிக்க வேண்டியதோடு அன்றி இனியவர் என்பதற்கு முடிபு இல்லாமையும் நோக்குக: (159)

மூல முதல்வேதா மாலரன் முன்னிற்கக்
கோலிய ஐம்முகன் கூறப் பரவிந்து
சாலப் பரநாதம் விந்துத் தனிநாதம்
பாலித்த சத்தி பரைபரன் பாதமே. 708

இம் - எனின், மூலாதாரமுதல் பத்தாதாரங்களி லும் வீற்றிருப்பார் இவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மூலமுதல்வனாகிய கணபதியும், பிரமா வும், திருமாலும், உருத்திரனும் ஆகிய இவர்கள் மூலாதாரம் முதல் முன்னேநிற்க, அதற்கு மேலிட மாகக் கோலப்பெற்ற அநாகதத்தில் சதாசிவமும் அதற்குமேல் முறையே, அவர் கூறுகிய அந்த பர விந்துவும், பெருமைமிக்க பரநாதமும், தனிவிந்து வும், தனிநாதமும், காத்தருள்செய்யும் சத்தியாகிய பரையும், பரசிவன் பாதமும் ஆகிய இவர்களாம் என்றவாறு.

பத்து ஆதாரங்களாவன மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம் விசுத்தி, தாலு, ஆஞ்ஞை, பிரசுக்கு மேற்றலம், துவாதசாந்தம் என்பன. இவற்றின் தெய்வம் முறையே கணபதி, பிரமன், திருமால், உருத்திரன், சதாசிவன், மனோன்மணி, பரநாதம் பரவிந்து, தனிநாதம் தனிவிந்து, பரன், பரை என்பவர்கள். இவ்வாறு ஆகமத்துக் கூறப்பட்டதைத் திருவுளம்பற்றி இவ்வண்ணம் அருளினார்கள். சித்தாந்த சாராவளி சிறிது மாற்றத்துடன் தெரிவிக்கும். (160)

ஆதார யோகத் ததிதே வொடுஞ்சென்று
மீதான தற்பரை மேவும் பரனொடு
மேதாதி யீரெண் கலைசெல்ல மீதொளி
ஓதா அசிந்தமீ தானந்த யோகமே. 709

இ - னின், ஆனந்த யோகமாவது இதுவென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மேற்றிருமந்திரத்துக் கூறியவண்ணம், தசாதார யோகங்களில் அந்தந்த ஆதாரங்களுக்கு அதிதெய்வமாக இருப்பவர்களோடு கூடிச்சென்று, எல்லாவற்றிற்கும் மேலான தற்பரையாகிய சத்தியும், அவளால் விரும்பப் படுபவராகிய சத்தனும் ஆகிய இவர்களோடு மேதை முதலிய பதினாறு கலைகளிலும் பயில மேலே தோன்றும் பேரொளியாகிய மதிமண்டலத்து உரையும் மனமுங்கடந்து நிற்கின்ற இதுவே ஆனந்த யோகமாம் என்றவாறு.

மேதாதி ஈரெண்கலை செல்ல மீதொளி-ஞானம் முதலான பதினாறுகலைகளும் எங்கும் பரவ விளங்கும் மீதொளியாகிய மதிமண்டலம். இதனையே

**मेधादिकलोपेतं प्रचण्डमार्ताण्डोपमं ब्रह्मादिकारण त्यागक्रमेण लयान्तमुच्चरन् सर्वकर्त्तारम् निष्कलं शिवं ज्ञानानन्दमयं स्वरूपप्रकाशं**

என்று சிந்திக்க என்று ஆகமம் கூறும் இதனால் மேதை முதலிய கலைகளோடு நிஷ்கள சிவத்தைப் பொருந்துதலை ஆனந்தயோகம் என்பது அறிவிக்கப் பெற்றது. (161)

மதியமும் ஞாயிறும் வந்துடன் கூடித்
துதிசெய் பவரவர் தொல்வா னவர்கள்
விதியது செய்கின்ற மெய்யடி யார்க்குப்
பதியது காட்டும் பரமன்நின் றானே. 7.0

இ - ளின், வானவர் நிலை எய்துவாரும் மெய்யடியாரும் இவரெனல் நுதலிற்று.

இ - ள் இடகலையும் பிங்கலையும் இணைந்து நின்று சிவனைத் தோத்திரிப்பவர்கள் வானவராவர். விதிப்படி பிராணனைக் கட்டுப்படுத்திச் சுழுமுனை வழியாக மேலேற்றிப் பிராணனை அடக்கி ஆளுகின்ற உண்மையடியார்க்கு நிலையான வீட்டைக் காண்பிக்கும் பரமன் இருந்தான் என்றவாறு.

இடகலை பிங்கலைவழியாக அளவுபோல் உச்சுவாச நிச்சுவாசம் செய்வார்கள் வானவராவர்.

பிராணனை அடக்கி ஆளுகின்ற மெய்யடியார்க்கு இறைவனே முன்னின்று அவர்கள் இருத்தற்குரிய இடத்தைக் காட்டுவன் என்பது கருத்து.

விதியது செய்தல் - அடக்கி ஆண்டுக் கட்டளை யிடுதல் பிராணனை அடக்கி ஆளுதலாவது யோகியின் விருப்பப்படி சமாதியின் நிலைக்க வாயுவை வசப் படுத்துதல். பதி – இடம். (162)

கட்டவல் லார்கள் கரந்தெங்குந் தாறுவர்
மட்டவிழ் தாமரை யுள்ளே மணஞ்செய்து
பொட்டெழக் குத்திப் பொறியெழத் தண்டிட்டு
நட்டுநின் றார்க்கு நமனில்லை தானே. 711

இ - னின், பிராணாயாமஞ் செய்வார் எய்தும் பெரும்பயன் விதுவென்றல் நுதலிற்று

இ—ள்: பிராணனைக் கட்டவல்லவர்கள் எங்கும் மறைந்து எப்பொருளினும் விளங்குவர். பிராணன் தேன்மிகத் தாமரைக்குள்ளே மணத்தையுண்டாக்கி, பிரமரந்திரம் தொளைபடக்குத்தி. தீப்பொறி மேலே எழும்பத் தண்டவடிவாய் நட்டமாகச் சரியாமல் நிமிர்ந்திருப்பார்க்கு நமன் வாரான் என்றவாறு.

எங்கும் தாறுதல் – ஈசத்துவம் எய்தல். எங்கும் எப்பொருளிலும் எஞ்ஞான்றும் தான் கலந்திருக்கக் காண்டல்.

மட்டு – தேன்; அமுததாரை. மட்டவிழ் தாமரை – அமுத ஊற்றுடைய ஆயிர இதழ்த் தாமரையாகிய ஆஞ்ஞை. அங்கே மணஞ்செய்த லாவது அந்த இடத்தின் அதிதேவதையோடு

கூடியிருத்தல். தாமரையாக உருவகித்தமைக்கேற்ப மணஞ்செய்து என்றது.

பொட்டு – உச்சிக்குழி. பிராணன் மூலாக்கினியோடு பிரமரந்திரத்தைச் சென்று தாக்க அது திறக்கு மாதலின் பொட்டெழக் குத்தி யென்றார்.

பொறியெழத் தண்டிட்டு : பிரமரந்திரம் திறந்ததும் அதன் வழியாகப் பேரொளி வெளிப்படு மாதலின் தீப்பொறியாகிற சோதி வெளிப்படத் தண்டாகாரமாய். தண்டு இடுதல் – தண்டம்போல் இருத்தல்.

நட்டிடுவார் - நட்டமாகக் கீழ் ஞான்றுவிழாமல் இருப்பார். இதனை முன்னருங்காண்க. (163)

## 12. கலை நிலை

அஃதாவது சூரியகலை, சந்திரகலை, அமுதகலையாகிய கலைகளின் நிலையினை உணர்த்துவது, அட்டமா சித்தியை அடைந்தார் அந்நிலையிற் றாழாது, சித்திகளையும் வென்று சிவமாம் பெரும்பேறு எய்தக் கலைகளை நிலைபெறுத்துதல் இன்றியமையாத செயலாதலின் அட்டமாசித்தியின் பின் இது வைக்கப்பெற்றது.

**காதல் வழிசெய்த கண்ணுதல் அண்ணலைக்**
**காதல் வழிசெய்து கண்ணுற நோக்கிடிற்**
**காதல் வழிசெய்து கங்கை வழிதருங்**
**காதல் வழிசெய்து காக்கலு மாமே. 712**

இ-ள். புருவநடுவை நோக்கிக் கலையை நிலைக்கச்செய்க என்றுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அன்பையே தன்னையடையும் உபாய மாகத் தந்த நெற்றிக்கண்ணையுடைய இறைவனை, முறையாக அன்பு செய்து கண்களிரண்டும் ஒன்றி நோக்கின், மோதுதலால் வழி உண்டாக்கிக் கொண்டு கங்கை பாயும்; அதனை அன்புகொண்டு காக்கலும் ஆம் என்றவாறு.

இறைவன் நினையுமா நினைத்தாலன்றி ஆன்மாக்கள் நினைக்குந்தன்மையில்லாதன ஆதலின், அவன் அன்பினைத் தந்தாலன்றி நாம் அன்பு செய்ய முடியாது ஆதலின் காதலை வழியாகச் செய்த கண்ணுதல் என்றார். இறைவன் பரமயோகி யாகிய நெற்றியிற் கண்படைத் திருக்கின்றான்; அதுபோல நீங்களும் புருவமத்தியிற் கண்ணுற நோக்கிக் காதல் செய்க என மேல்வருங் கருத்தை நன்கு விளக்கியவாறு.

இடகலை பிங்கலை நாடிகளைக் கங்கை யமுனை களாக உருவகித்தல் யோகநூன்மரபு. இதனை,

गङ्गा यमुनयोर्मध्ये बालरण्डा तपस्विनी ।
बलात्कारेण गृह्णीयात्तद्विष्णोः परमंपदम् ॥

என்னும் ஹடயோகப் பிரதீபிகையானும் உணர்க. கங்கையென ஆறாக உருவகித்தமைக்கு ஏற்ப வழி தரும் என்றாரேனும் கங்கையாகிற இடகலை தடை பட்டுச் சுழுமுனையாகிய வழியைத்தரும் எனபதுன் பொருளாகக் கொள்க. காதல் – காதுதல், மோதுதல்

அங்ஙனம் காதுதலையே உபாயமாகச் செய்து. காக்கலும் ஆம் - நிலைபெறுதலும் ஆம் என்பதாம். கங்கை வழிதரும் என்பதற்கு அமுதம் பெருகும் என்பாரும் உளர். (164)

காக்கலு மாகுங் கரணங்கள் நான்கையும்
காக்கலு மாகுங் கலைபதி னாறையும்
காக்கலு மாகுங் கலந்தநல் வாயுவும்
காக்கலு மாகுங் கருத்துற நில்லே. 713

இ-ம் - எனின், காக்கத்தகுவன இவையெனல் நுதலிற்று.

இ—ள் : அந்தக்கரணங்கள் நான்கையும் காத்தலுமாம். குண்டலினியோடு கலந்த பிராணனைக் காத்தலுமாம். அதனால், கருத்தைப் புறம்போகவொட்டாது காத்தலுமாம், அதனால், சாதகனாகிய புருவமத்தியத் தானத்திலேயே நிலைத்து நிற்பாயாக என்றவாறு. (165)

நிலைபெற நின்றது நேர்தரு வாயு
சிலைபெற நின்றது தீபமும் ஒத்துக்
கலைவழி நின்ற கலப்பை அறியின்
மலைவறி வாகும் வாகும் வழியிது வாமே. 714

இம் - எனின், மருளறும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ— ள் : சுழுமுனையில் செல்லும் வாயு நிலை பெற நின்றது. விளக்கொளியைப்போன்றும் அசையாத மலையைப் போன்றும் நின்றது. உன்மனையாதி கலைகளின் வழியே சத்தி சிவத்தைக் கலந்துநின்ற

கூட்டத்தை அறியின், மயக்கமானது நீங்க ஞானம் விளையும்; இதுவே நிலைபெறும் உபாயமாம் என்ற வாறு.

நேர் - நடுநாடியாகிய சுழுமுனை, சிலைபெற - மலையைப்போல. பெற - உவம உருபு, தீபம் ஒளிக்கும், சிலை அசையாத்தன்மைக்கும் உவமம். மலைவு அறவு ஆகும் - ஐயமாகிய மருள் நீங்க அருண்ஞானம் விளையும். (166)

புடையொன்றி நின்றிடும் பூதப் பிரானை
மடையொன்றி நின்றிட வாய்த்த வழியில்
சடையொன்றி நின்றஅச் சங்கர நாதன்
விடையொன்றி லேறியே வீற்றிருந் தானே. 715

இ்ம் - எனின், விசுத்தித்தானத்து இறைவன் வீற்றிருக்கும் நிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : எங்கும் நிறைந்துள்ள, பூதங்களுக்குத் தலைவனாகிய பராகாயத்தை, மடைகளாகிய நாடிகளில் மாறிச்செல்லாது (பிராணன்) நடுநாடியில் ஒன்றிநிற்க வாய்த்த வழியில் சடையோடுகூடிய அந்தச் சங்கரனாகிய தலைவன், இடபம் ஒன்றிலேறி வீற்றிருந்தான் என்றவாறு.

பராகாயமாகிய மதிமண்டலத்துப் பொருந்த வாய்த்த வழியாகிய சுழுமுனையில் விசுத்திசக்கரத்துச் சங்கரன் இடபாரூடராகக் காட்சியளித்தார் என்பது கருத்து. புருவமத்தியில் இறைவன் சதாசிவன் மனோன் மணியாக எழுந்தருளியிருத்தலின் இங்ஙனம அருளினார். விடையேறியிருத்

தலாவது விஷ்ணுகிரந்தியைத் தாண்டியிருத்தல். இதனையே புராணங்கள், திருமாலாகிய இடபத்தைப் பெருமான் ஊர்வதாக உரைக்கும்.

பூதப்பிரான் - ஏனைய நான்கு பூதங்களுக்கும் ஒன்று தலுக்கிடமாய் விரிந்து இடங்கொடுக்கும் ஆகாயம். ஈண்டுப் பராகாயமாகிற ஆஞ்ஞையை: மேலவன் என்பாரும் உளர். (167)

இருக்கின்ற காலங்கள் ஏதும் அறியார்
பெருக்கின்ற காலப் பெருமையை நோக்கி
ஒருக்கின்ற வாயு வெளிபெற நிற்கத்
தருக்கொன்றி நின்றிடுஞ் சாதக னாமே. 716

இ-ம் - எனின், சாதகனியல்பினை உணர்த்துதல் நுதலிற்று

இ-ள்: தாம் பிராணனைக் கட்டிச் சமாதியிலிருக்கின்ற காலங்களை அறியாராய் இனிப் பெருக இருக்கின்ற காலத்தின் பெருமையை நிர்நோக்கி, சுழுமுனையின் வாயிலாக ஒன்றுபட்டியைகின்ற பிராணன் பரவெளியாகிய சகத்திராரத்தைப் பொருந்தச் செருக்கொன்றி நிற்பவன் சாதகனாம் என்றவாறு.

சமாதியிலிருக்கின்ற காலமும், தானும் அறியப்படின் அது உண்மையான சமாதியன்றாம் ஆதலின் அதனையறியார் என்று அருளியது.

பெருக்கின்ற காலம் - இனிப் பெருக வாழ இருக்கின்ற காலம். ஒருக்கின்ற வாயு - ஒருவழிப் பட்ட அதாவது ஆயாமப்படுத்தப்பட்ட பிராணன்.

வெளி - பிரமரந்திரமாகிய மதிமண்டலம். இதுவே பராகாயபுமாம். தருக்கு ஒன்றி — யாமார்க்கும் குடியல்லோம் என்பது முதலிய சுத்தாகங்கார விளைவாகிய தருக்கு. இது மேல்வினைக்கு வித்தாகாதது, தருக்கின்றி எனவும் பாடம். (198)

சாதக மானஅத் தன்மையை நோக்கியே
மாதவ மான வழிபாடு செய்திடும்
போதக மாகப் புகலுறப் பாய்ச்சினுல்
வேதக மாக விளைந்து கிடக்குமே. 717

இ-ள் - எனின், சாதகன் எய்தும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள் : இவ்வண்ணம் சாதகமான அத்தன்மையை யாராய்ந்து. பெரிய தவமான வழிபாட்டைச் செய்யும் சிவயோகி, தமது பிராணனைக் கபாலத்திலுள்ள ஆயிர இதழ்த் தாமரையினுள்ளாகப் புகச் செலுத்தினுல் குளிகைபோல விளையும் என்றவாறு.

மா தவமான வழிபாடு—அகண்டமான சமாதி. செய்திடும் என்பது செய்திடும் அவன் என்றவரை பொருள்கொள்ளக் கிடத்தல்காண்க. போது அகம்-தாமரைப்பூவின் உள்ளிடம். வேதகம் — இரும்பைப் பொன்னுக்கும் இரத குளிகை. விளைந்து கிடக்குமே யென்றது அதன் மிகுதி உணர்த்திற்று (169)

கிடந்தது தானே கிளர்பயன் மூன்று
நடந்தது தானேஉள் நாடியை நோக்கிப்
படர்ந்தது தானே பங்கய மாகத்
தொடர்ந்தது தானேஅச் சோதியுள் நின்றே. 718

இம் - எனின், மேலதனை வேறொருவாற்றான் விளக்குதல் நுதலிற்று.

இ-ள்: அங்ஙனம் விளைந்துகிடந்த பயன் இம்மையின்பமும் மறுமையின்பமும் வீடும் என மூன்றும். உள்நாடியாகிய சுழுமுனையை நோக்கி நடந்ததாகிய பிராணன் சகத்திராரத்திற் போருந்த, அச்சோதிமூலத்துள் நின்றே தொடர்ந்ததாம் என்றவாறு.

கிடந்ததுதான் தொடர்ந்ததுதான் என்பவற்றுள் தான் இரண்டும் அசை. கிளர் பயன் - மேன்மேலும் கிளர்ந்து விளைகின்றபயன்; அவை இம்மை, மறுமை இரண்டுங்கடந்த வீடு இவற்றின் பயன். அறம் பொருள் இன்பம் என்பாரும் உளர். இவை மூன்றும் இம்மையின்பி லடங்குதலின் சிவயோகத்தின் பயன் இவை மட்டுமல்ல என ஓர்ந்து எண்ணுக.

உள்நாடி - சுழுமுனை. தான் - பிராணன். பங்கயத்தின்கண் என ஏழாவது விரிக்க. அச்சோதி உள்நின்று தொடர்ந்தது எனப் பிரித்துக் கூட்டி, முற் கூறியாவாறு, தாமரைக் கண்ணுகிய பிராணனை. மூலத்தீ மூலாதாரத்துண்ணின்றும் தொடர்ந்து சென்றது எனப் பொருள் கொள்க. (170)

தானே எழுந்தஅத் தத்தவ நாயகி
ஊனே வழிசெய்தெம் உள்ளே யிருந்திடும்
வானோர் உலகீன்ற அம்மை மதித்திடத்
தேனே பருகிச் சிவாலய மாகுமே. 719

இ-ம் - எனின், மேற்கூறியவண்ணம் எழுந்த மூலக்கனல் செய்யும் உபகாரத்தை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : இவ்வண்ணம் தானேதானாய் எழுந்த தத்துவநாயகியாகிய குண்டலினி சத்தியானவள், இவ்வுடலில் வழி செய்து கொண்டு எமக்குள்ளாகவே எழுந்தருளியிருப்பள். தேவருலகையும் பெற்ற தாயாகிய சத்தி திரட்டித்தர. தேன் போன்ற அமுத மாரியை யுண்டு, சிவயோகியின் உடல் சிவாலயமாகும் என்றவாறு.

தானே எழுந்த என்றது கருணை மிகுதியைக் காட்டிற்று. குண்டலினியை முன்னர்ச் சோதியாக உருவகித்தவர் ஈண்டுச் சத்தியாக உருவகித்தார். ஊன் - உடல்; ஆகுபெயர். வழிசெய்தலாவது இடகலை பிங்கலைகளை அடைத்து நடுநாடியைத் திறப்பித்தல். மதித்திட - கடைந்து திரட்டித்தர. தேன் - மதிமண்டலத்தூறுகின்ற அமுதம். சிவாலய மாகும் - சிவனோடுலயமாகும் தானமாம் இவ்வுடல் என்பது. " ஊனுடம் பாலயம் " ( 1823 ) என்றதும் காண்க. (171)

திகழும் படியே செறிதரு வாயு
அழியும் படியை அறிகில ராரும்
அழியும் படியை அறிந்தபின் நந்தி
திகழ்கின்ற வாயுவைச் சேர்தலு மாமே. 720

இ-ம் - எனின், பிராணனது ஒடுக்கத்தை யறியின் சிவத்தைப் பொருந்தலாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : விளங்குர்வண்ணர் செறிகின்ற பிராணன் ஒடுங்குதலை யாரும் அறிகிலர். அதனை அறிந்த பின்பு மதி மண்டலத்து விளங்கும் வாயுவைச் சேர்தலும் புரிவர் என்றவாறு.

வாயுகட்டுப்பாடின் நுண்மை விளக்கமுமாதலின் திகழும்படியே செறிதரு வாயு என்றனர். அறியும் படியை — நடுநாடியின் வழியே மேற்சென்று மதி மண்டலத்து ஒடுங்கும் முறையை. நந்தி — சிவம். சிவம் வாயுவைச் சேர்தலாவது மதிமண்டலத்துப் பரசிவத்தோடு பிராணன் தாடலைபோல் அடங்கிச் சிவன் வசமாக இருத்தல். நந்தி சேர்தலுமாமே என நந்தியை வினைமுதலாகக் கூறியது உயிர்க்கு என்றும் சுதந்திரமின்மையின் (172)

சோதனை தன்னில் துரிசறக் காணலாம்
நாதனும் நாயகி தன்னிற் பிரிவுநாள்
சாதக மாகுங் குருவழிப் பட்டு
மாதன மாக மதித்துக்கொள் வீரே. 721

இம் - எனின், சிவயோக சித்தியின் அடையாளம் அறிவித்தல் நுதலிற்று.

இ — ள் : யான் கூறுவதைச் சோதனைகள் செய்து குற்றமறக் காணலாம். உடலுக்கு நாதனாகிய பிராணன் குலேசையாகிய குண்டலினியை விட்டுப் பிரிகின்ற நாளில் சிவயோகசமாதி சாதகமாகும். இதன் முறைகளைக் குருவின் வழியிலே நின்று, பெரிய செல்வங்கிடைத்தாற்போலப் போற்றிக் கொள்ளுங்கள் என்றவாறு

'தேசியுந் தேசனும் தன்னிற்பிரியும் நாள்'(723) எனப் பின் வருதலுங் காண்க

நாதன் – பிராணன், உடலுக்குத் தலைவனுதலின் 'ஊர்க்குத் தலைமகன்' என்று முன்னரும் கூறியமை காண்க. நாயகி – குண்டலினி. பிராணன் குண்டலினியைப் பிரிதலாவது சுழுமுனையின் வாயிலைக் குண்டலினி அடைத்துக்கொண்டிருக்கும்; சத்தி சாலன முத்திரையால் இரண்டுநாழிகை அளவு மேலெழுப்ப அது சுழுமுனைவாயிலை விடுகிறது; உடனே பிராண வாயு சுழுமுனையையடைகிறது; இதன் விரிவைக் குரு முகமாகக்கேட்டுப் பெருஞ் செல்வம் பெற்றோர் போலக் போற்றிக்கொள்ளுங்கள் என்பது கருத்து.

இங்ஙனமன்றிச் சிவபெருமான் அமிழ்த வண்ணன்; அவன் மறைப்பாற்றலாகிய ஆதியின்கண் வீழாது குருவாய் வெளிப்படுவன்; அவன் வயப்பட்டொழுகினுல் திருவருட்பே றெய்தலாம் என்பர் சிலர். அமுதமயமான சிவம் சூரியமண்டலத்தில் உள்ள சத்தியில் வீழ்ந்து பிரியுநாள் குருகாட்டிய நெறியினின்று போற்றுங்கள் என்று வேறுசிலரும் கூறுவர். அவற்றின் இயைபை அறிந்தாய்ந்து நல்லன கொள்க. (173)

**ஈராறு கால்கொண் டெழுந்த புரவியைப்**
**பேராமற் கட்டிப் பெரிதுண்ண வல்லிரேல்**
**நீரா யிரமும் நிலமாயி ரத்தாண்டும்**
**பேராது காயம் பிரான்நந்தி ஆணையே.** 722

இ-ம் - எனின், அழியா யாக்கையைப் பெறலாம் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : கங்கையும் யமுனையுமாகிய இரண்டு ஆறுகளையும் வழியாகக் கொண்டு மேலெழுந்த குதிரையாகிய பிராணனை நடுநாடியை விட்டுப் பெயராமல் தடுத்து, பெரிதும் வெளிப்படாத வண்ணம் நுகர வல்லீராயின், அப்பு மண்டலத்தும் பிருதுவிமண்டலத்தும் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாயினும் உடலழியாது; சிவன் மேலாணை என்றவாறு.

ஈர் ஆறு - இடகலை பிங்கலைகள். இவற்றைக் கங்கை யமுனையென்று ஈராறுகளாக உருவகித்தமை முன்னரும் உணர்த்தப்பெற்றது. பாவி என்றது தாவிக் குதித்தோடும் பிராணவாயுவின் உச்சுவாச நிச்சுவாசங்கள் பேராமற் கட்டுதலாவது நடுநாடியின் உச்சியிலேயே அசையாது நிறுத்துதல். பெரிதுண்ணுதலாவது இழுக்குங் காற்றில் காற்பங்கு வெளிப்பட்டு முக்காற்பங்கு நுகர்தல். நிலத்துள்ளும் நீருள்ளும் ஆயிரம் ஆயிரமாண்டுகள் ஆழ்ந்திருந்தாலும் உடலழியாது என்பதாம்.

பிராணாயாமியின் உடல் எத்தனையாண்டு புதையுண்டிருப்பினும் அழியாது என்பது கருத்து. (174)

ஓசையில் ஏழும் ஒளியின்கண் ஐந்தும்
நாசியின் மூன்றும் நாவில் இரண்டும்
தேசியுந் தேசனுந் தன்னிற் பிரியுநாள்
மாசறு சோதி வகுத்துவைத் தானே. 723

இ-ம் - எனின், இறைவன் நமக்குச் செய்த உபகாரம் இவையென உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: குற்றமற்ற சோதியாகிய சிவபெருமான் பிராணனும் குண்டலினியாகிய மாயையும் தம்முட் பிரியுங்காலத்து, ஓசையாகிய தன்மாத்திரையி னின்று சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம், சரித்தல். சேர்க்தலாகிய ஏழும், ஒளியாகிய தன்மாத் திரையினின்று ரூபம், ரசம், கந்தம், வெப்பம், தகித் தல், என்று ஐந்தும் நாசியாகிய பொறியின், தன்மாத்திரையினின்று கந்தம் இடகலை பிங்கலை யாகிய இயக்கம் இரண்டு ஆக மூன்றும், நாவின் தன்மாத்திரையிலிருந்து ரசம், வசனமாகிய இரண்டுமாகப் பிரித்து வைத்தான் என்றவாறு.

தேசு - ஒளி: பிராணன். தேசி - ஆன்மா. ஆன்மா மாயையிற் பிரிகின்ற காலத்துத் தத்துவங்க ளனைத்தையும் அவற்றுள் மூலமறிந்து அதாவது தத்துவ தரிசனம் செய்து போங்கால், ஆகாய நுண் பூதத்தினிடமாக முற்கூறிய ஏழும் ஒளிவடிவாகிய தேயுப்பூதத்தினிடமாக உருவமாதிஐந்தும், நாசியா கிய பொறியின் குணமாய் பிருதிவியின் தன்மாத் திரையாய கந்தமும் உச்சுவாசமாய செயலிரண்டும் ஆக மூன்றும் நாவாகிய பொறியின் தன்மாத்திரை யாகிய ரசம் வசனம் இரண்டும் ஆகிய இவைகளையே கண்டிருக்க இறைவன் அருள் செய்வனாதலின் இவ்வண்ணம் அருளினார் (175)

## 13. சரீரசித்தியுபாயம்

ஆன்மா நால்வகை நெறிக்கணின்று நாதனரு ளால் நற்கதிபெறத் துணையாக இருப்பது இச்சரீர மாதலின் அதனை நெடுங்காலம் வைத்துப் பாலித்து அந்நெறியிலே செலுத்துதற்கேற்ற உபாயத்தை

உயிர்கள் உணர்ந்துகொள்ள வேண்டுவது மிகமிக இன்றியமையாதது. ஆதலின் அட்டமாசித்தி களையும் அதன் காரணமாகிய அட்டாங்க யோகங் களையும் அறிவித்த ஆசிரியர் அடுத்து, சரீரசத்தி உபாயங்களை உணர்த்தத் தொடங்குகின்றார். அதிகார இயையும் இதனானே விளங்கும்.

உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே. 724

இம் - எனின், உடம்பை வளர்த்தலின் இன்றி யமையாமையை உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : உடம்பழியின் உயிரும் நீங்கும். உடல் வலிகுன்றினோர் உறுதியான ஞானமும் சேரமாட் டார். ஆதலால் உடம்பைப் பேணும் உபாயத்தை உணர்ந்தேன்; உடம்பை வளர்த்தேன்; உயிரையும் வளர்த்தேன் என்றவாறு.

பஞ்ச பௌதிகமான உடம்பு தன் தன்மை கெட்டு அழிந்தால், உடம்பைக் கருவியாகக்கொண்டு வினைப்போகங்களைத் துய்த்து ஞானம் எய்த வந்த உயிரும் இவ்வுடம்பை விட்டுப் பிரியும். கருவி அழிந்தபின் காரியம் நிறைவேறுவது எங்ஙனம்? ஆதலால் உடம்பை யாதொரு தீங்கும் புகுதாதே பேணினேன், அதனால் உயிர் தனது தன்மையாகிய ஞானத்தில் திளைத்து உயர்ந்தது என்பது கருத்து. (176)

உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண் டானென்று
உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே. 725

இ - ளின்; இதுவுமது.

இ - ள் : முன்னே உடம்பைக் குற்றமுடையது என்று இகழ்ந்திருந்தேன். இந்த உடம்புக்குள்ளே யிருக்கிற சிறந்ததொரு பெருளைக் கண்டேன். எல்லா வகையினும் உயர்வுற உயர்ந்தவனாகிய சர்வேசுரன் இவ்வுடம்பையே கோயிலாகக் கொண்டு எழுந்தருளியிருக்கின்றான் என்பதை அறிந்து, யான் உடம்பைப் பாதுகாக்கிறேன் என்றவாறு.

இழுக்கென்றிருத்தல் - இவ்வுடம்பு நிலையாதது, குற்றக் கொள்கலம்; இரத்தம் மலம் இவற்றின் உறையுள்; பொல்லாப் புழுக்குரம்பை என்றெல்லாம் எண்ணியிருத்தல்.

உறுபொருள் - கருணையால் தானேவந்து பொருந்திய உயர்ந்த பொருளாகிய சிவம். இதனை அடுத்தஅடியில் உத்தமன் என்று அநுவதித்தார்; பின் 'ஊனுடம்பாலயம்' என்பர் ஆதலின், உடம்புளே உத்தமன் கோயில்கொண்டான் என்றார்.

இருந்து என்னும் சொல்லாற்றல் பல்லாற்றானும் எண்ணி ஆய்ந்தாய்ந்து இருந்து என்றவரை பொருள் தருவது. (177)

சுழற்றிக் கொடுக்கவே சுத்திக் கழியுங்
கழற்றி மலத்தைக் கமலத்தைப் பூரித்து
உழற்றிக் கொடுக்கும் உபாயம் அறிவார்க்கு
அழற்றித் தவிர்ந்துடல் அஞ்சன மாமே. 726

*இ - ளின், உடலைச் சுத்தம் செய்யும் முறை உணர்த்துதல் நுதலிற்று.*

*இ - ள் : பிராணவாயுவை இருநாடிகளாலும் சுழற்றிக்கொடுக்கச் சுத்தியாய் அசுத்தம் கழியும். அங்ஙனம் அசுத்தத்தைப்போக்கி, இதயகமலத்தைத் தூயகாற்றால் நிறைவித்து அதனை எழுபத்தீராயிரம் நாடிகளிலும் உழலச்செய்யும் உபாயத்தை அறிபவர் களுக்கு, உடம்பானது, நெருப்பின் வெப்பத்தின் விளையாத மையாகும் என்றவாறு.*

*சுழற்றிக் கொடுத்தலாவது, இடகலை பிங்கலை வழியாக மாறிமாறி இழுத்துவாங்கி இருத்தி விடுதல் அங்ஙனம் செய்யின் நாடிசுத்தமாகும். பின்னர் இதய கமலத்தில் தூய்மையான பிராண வாயுவைப் பூரிக்க வேண்டும்; எல்லாநாடிகளிலும் பரவச் செய்ய வேண்டும். அங்ஙனம் செய்யின் உடல் இருந்த நிலையி லிருந்தே காலதேச வர்த்தமானங்களை எல்லாம் அறியக் கூடிய மைபோல ஆம் என்பது கருத்து. அஞ்சனம் என்பன யாவும் நெருப்பில் வேகவைத் தலால் விளைவனவே : இஃது அங்ஙனமன்று என்பார் உடல் அழற்றிதவிர்ந்த அஞ்சனம் ஆம் என்றருளினர் (178)*

அஞ்சனம் போன்றுட லையறு மந்தியில்
வஞ்சக வாத மறுமத்தி யானத்திற்
செஞ்சிறு காலையிற் செய்திடிற் பித்தறும்
நஞ்சறச் சொன்னோம் நரை திரை நாசமே. 727

இ-ள் - எனின். சிவயோகப்பயிற்சியால் உடற்கு உளதாம் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அந்திக்காலத்து, யோகஞ்செய்யின் மைபோன்ற உடற்கணுள்ள கபநோய் நீங்கும். நண்பகலிற் செய்தால் வஞ்சகத்தன்மை வாய்ந்த வாத நோய் நீங்கும்; விடியற்காலையிற் செய்தால் பித்தம் நீங்கும்; இவ்வுபாயங்களனைத்தையும் உடற்கணுள்ள விஷத் தன்மை நீங்கச் சொன்னோம். அது மட்டுமல்ல; உங்களுக்கு வரவிருக்கின்ற நரை திரைகள் கூட நாசமாம் என்றவாறு,

உடல் என்பதையும். செய்திடில் என்பதையும் அந்தியில் நண்பகலில் முதலிய அனைத்தோடும் ஒட்டுக. வாதத்தை வஞ்சகவாதம் என்றது மருந்தாற் றணிந்ததுபோன்று அடங்கி இருந்து நாடிகடோறும் ஓடிச் சென்று ஊறு விளைத்தலின். ஐ - கபம். செஞ்சிறு காலை - மிக விடியற்காலை. (179)

மூன்று மடக்குடைப் பாம்பிரண் டெட்டுள
ஏன்ற வியந்திரம் பன்னிரண் டங்குலம்
நான்றவிழ் முட்டை யிரண்டையுங் கட்டியிட்டு
ஊன்றி யிருக்க உடலழி யாதே. 728

இம் - எனின், இதுவும் உடலழியாமைக்குபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மூன்று மடக்கினையுடைய பாம்பானது, உச்சுவாச நிச்சுவாசமாகவுள்ள பன்னிரண்டங்குல அளவினதாய்ப் பொருந்திய இயந்திர மாகிய பிராணனைக் கட்டி, தொங்கி விரியும் முதுகும் கழுத்துமாகிய மூட்டுக்கள் இரண்டையும் கட்டி நட்டமாக நிலைத்து நடுவில் ஊன்றியிருக்க உடலழியாது என்றவாறு.

பாம்பு – குண்டலினி, பிரமகிரந்தி, விஷ்ணு கிரந்தி, ருத்திரகிரந்தி என்ற மூன்று முடிச்சுக் களிலும் தடைபடுவதாலின் அதனை மூன்று மடக் குடைப் பாம்பு என்றருளினர். அன்றியும் மூலா தாரத்தில் குண்டலினி இவ்வண்ணமிருப்பதாகலின் அருளியதுமாம்.

இரண்டு - இரண்டென்னும் எண்ணின் வடிவம் உ. எட்டென்னும் எண் வடிவம் அ. உச்சுவாச நிச்சுவாசங்களின் வடிவு உகார அகாரங்கள். இவையே பிரணவத்தின் கூட்டெழுத்துக்கள்.

ஏன்ற – பொருந்திய. இயந்திரம் என்றது பிராண வாயுவை. பன்னிரண்டு அங்குலம் – இயற்கையான மூச்சியக்கம் பன்னிரண்டு அங்குல அளவு.

மூட்டை - முட்டையென முதல் குறுகிற்று. 'முன்நான்று விழாமல் நட்டமிருக்க' என முற் கூறியருப்பதால், நான்றவிழ் மூட்டு என்பன இடுப்பும், கழுத்துமாகிய சந்திகளையே உணர்த்தின. முட்டை யெனக்கொண்டு இடகலை பிங்கலையென் பாருமுளர்.

குண்டலியைப் பிராணனுடன் நான்று விழாமல் நட்டமாயிருந்து, சுழுமுனையில் ஊன்றி யிருக்கச் செய்யின் மரணமில்லையென்பது கருத்து. (180)

நூறும் அறுபதும் ஆறும் வலம்வர
நூறும் அறுபதும் ஆறும் இடம்வர
நூறும் அறுபதும் ஆறும் எதிரிட
நூறும் அறுபது மாறும் புகுவரே. 729

இம் - எனின், இடகலை பிங்கலைகளைக் கட்டியவர் நெடுநாள் வாழ்வர் என்பது உணர்த்துதல் நுதலிற்று..

இ - ள் : நூற்றறுபத்தாறு மாத்திரை பிராணன் வலநாடி வழியாகவும், இடநாடி வழியாகவும் எதிர்த்து இயங்க நூறும் அறுபத்தாறுமாகிய ஆயுள் எல்லையைக் கடந்து வாழ்வர் என்றவாறு.

இடகலைவழியாக நூற்றறுபத்தாறு மாத்திரையும், பிங்கலைவழியாக நூற்றறுபத்தாறு மாத்திரையும், இரண்டையும் அடைத்தவழி நடுநாடி வழியாக நூற்றறுபத்தாறு மாத்திரையும் இயங்க ஆயுள் நீடிக்கும் என்பது கருத்து. மாத்திரை என்பது முழந்தாளை விரையாமலும் தாமதிக்காமலும் ஒரு சுற்றுக் கைவிரலாற் சுற்றிவந்து நொடித்தலாம்.

जानुप्रदक्षिणीकृत्य नद्रुतं नविलंबितम् ।
अंगुलीस्फोटनं कुर्यात् सामात्रा पणगीयते ॥

என்பது யோக தத்துவோபநிஷத். | (181)

சத்தியார் கோயி லிடம்வலஞ் சாதித்தான்
மத்தியா னத்திலே வாக்கியங் கேட்கலாந்
தித்தித்த கூத்துஞ் சிவனும் வெளிப்படுஞ்
சத்தியஞ் சொன்னேஞ் சதாநந்தி ஆணையே. 730

இ-ள்: பிராணாயாம அப்பியாசத்தில் நாத சிரவணமும் திருக்கூத்துத் தரிசனமும் சித்திக்கும் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்; சிவசத்தி யெழுந்தருளிய கோயிலாகிய உடலில், இடகலை பிங்கலை வழியாக பிராணனியக்கத்தைக் கட்டுப்படுத்தலைப் பழகிக் கைவந்து ஆன்மத் தியானத்திலே நாத சிரவணம் செய்யலாம். மேலும் சிலம்பொலியோடு கூடத் திருக்கூத்துச் செய்யுஞ் சிவமும் வெளிப்படுவர்; சத்தியம் சொன்னேம்; சிவன் மேலாணை என்றவாறு.

சத்தியார் கோயில்—சிவசத்தி எழுந்தருளியிருக்கும் கோயில்: என்றது உடலை. சாதித்து ஆன்மத் தியானத்திலே யெனப் பிரித்துப் பொருள் கொள்க. ஆன்மத்தியானம் என்பது தியானிப்போனாகிய தன்னைத் தத்துவங்களின் வேறாகக் காண்டல். வாக்கியம் - நாதவொலி, தித்தித்த கூத்து - தித்த தித்த என்னும் தாள லயத்தோடு கூடிய கூத்து, சிவன் வெளிப்படும் — சிவன் அறிவுக்கறிவாய்ப் புலப்படுவர். இங்ஙனம் தம் அநுபவங் கூறுவார் சிவன் மேலாணை; சத்தியமாகச் சொன்னேம் என்றார். (182)

திறத்திறம் விந்து திகழு மகாரம்
உறப்பெற வேறினைந் தோதுஞ் சகாரம்
மறிப்பது மந்திர மன்னிய நாத
மறப்பற யோகிக் கறநெறி யாமே. 731

இ-ம் - என்ன், ஸோஹம் என்னும் அசபை யுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: திறத்திற்றிறமாகிய விந்து சத்தியினின்றும் தோன்றும் ஹகாரமும், மிகப் பொருந்த தியானிக்கப்பெற்று ஓகாரத்தோடு துஞ்சுவதாகிய ஸகாரமும் ஆகிய இரண்டும் இழுப்பதும் விடுவதுமாக மறிக்கப்படுவது மந்திரமாம். நிலைபெற்ற நாதமாகிய இதனை மறப்பு நீங்க, இதுவே யோகிக்கு அறநெறியாம் என்றவாறு.

திறத்திறம் - மிகத் தூயதான, விந்து -மாயை; அஃதாவது சுத்தமாயையின் காரியமாகிய ஹகாரமும் ஸகாரத்தோடு சேர்ந்த ஓகாரமும் ஆகிய ஸோஹம் என்பதுவே அசபையாம்; இதனை இடைவிடாது தியானிப்பர் யோகிகள்; அவர்கட்கு இதுவே தருமவழியாம் என்பது. இதனையே அப்பர் சுவாமிகள் "என்னுளே உயிர்ப்பாய்ப் புறம் போந்து புக்கு" என்பார்கள். உயிர்ப்பாய்ப் புகுதல் ஸோ என்று உள்ளுக்கிழுக்கப் படுதல். புறம் போதல் ஹம் என்று விடப்படுதல். ஆகவே விடுகின்ற மூச்செல்லாம் அவன் நான் என்னும் பொருளதாகிய ஸோஹம் என்று இழுத்துவிடப் படுதலே மறப்பற இருத்தல். அவனுக்கு வருந்தீமை ஏது? ஆதலின் அறநெறியாமே என்றருளப் பட்டது. (183)

உந்திச் சுழியி னுடனேர் பிராணனைச்
சிந்தித் தெழுப்பிச் சிவமந் திரத்தினல்
முந்தி முகட்டின் நிறுத்திய பானனைச்
சிந்தித் தெழுப்பச் சிவனவ னுமே. 732

இ-ம் - எனின். பிராண அபானன்களை மேலெழுப்பச் சிவனுவென் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: நாபித்தானத்திலிருந்து தோன்றும் பிராணவாயுவை, 'சிவ' என்னும் மந்திரத்தினுல் தியானித்து, மேலெழுப்பி, முதற்கண் அதனைக் கொண்டு உச்சியில் நிறுத்தி, அபானவாயுவை மேலெழச் செய்யின் அந்த யோகி சிவனுவன் என்றவாறு.

சிவமந்திரம் – சிவ என்னும் மந்திரம்; அசபை என்பாரும் உளர். பிராணன் அபானன்களைப் பிரமரந்திரத்தில் எழுப்புவதே சிவமாதற்குரிய உபாயம் என்பது கருத்து. (184)

மாரு மலக்குதந் தன்மே லிருவிரற்
கூரு இலிங்கத்தின் கீழே குறிக்கொண்மின்
ஆரு உடம்பிடை அண்ணலும் அங்குளன்
கூரு உபதேசங் கொண்டது காணுமே. 733

இ-ம் - எனின், சிவமிருக்கும் இடம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: நீங்காத மலம் பொருந்திய அபான வாயிற்கு மேல் இருவிரல் தூரத்திற்கும் கூறக் கூடாத குறிக்குக் கீழே நால்விரல் தூரத்திற்கும்

இடையிலே நிலைத்துத் தியானியுங்கள். ஆறு ஆதாரங்களையுடைய உடம்பில் சிவனும் அங்கு எழுந்தருளியிருப்பன். இது சொல்லக் கூடாத உயர்ந்த உபதேசம். இதனைச் செவ்வனே ஏற்றுக் கொண்டு அதனை அநுபவத்தில் காணுங்கள் என்றவாறு.

ஆறு ஆ உடம்பு – மூலமுதல் ஆறு ஆன உடல்; என்றது ஆறு ஆதாரங்களையுடைய உடல். கூறு உபதேசம் – மிக இரகசியமான உபதேசம். கொண்டு அதுகாணும் எனப் பிரித்துப் பொருள்காண்க(185)

நீல நிறனுடை நேரிழை யாளொடுஞ்
சாலவும் புல்லிச் சதமென் றிருப்பார்க்கு
ஞாலம் அறிய நரை திரை மாறிடும்
பாலனு மாவர் பராநந்தி ஆணையே. 734

இ - னின், சத்தி மண்டலத்துக் கலந்திருப் பார்க்கு நரைதிரை இல்லையெனல் நுதலிற்று.

இ - ள் : நீலநிறமுடைய பராசத்தியோடும் மிகக் கலந்து, அவளே அடைக்கலம் என்றிருப்பார்க்கு, உலகமறிய நரையும் திரையும் இல்லையாம்; பாலனைப் போல இளமையும் பொருந்துவர்; மேலான சிவனாணை என்றவாறு.

நீலநிறமுடைய நேரிழையாள்–சத்தி. நீலநிறம் ஆகாயத்திற்குரியது. ஆகாயமாகிய பிரமரந்திரத்தில் வசிப்பதால் நீலநிறமுடைய பராசத்தி எனப்பட்டது. குறியுங் குணமுமற்ற தூயசத்தி நீலநிறத்தையுடைய ஆகாயத்தை உடையவள் எனலுமாம்.

நீலநிறம் - அந்நிறத்தினையுடைய ஆகாயத்திற்கு ஆகுபெயர். பாலனுமாவர் என்றது வயது குறையும் என்பது பொருளன்று; வலிமை பெறுவர் என்பதாம். (186)

அண்டஞ் சுருங்கில் அதற்கோ ரழிவில்லை
பிண்டஞ் சுருங்கிற் பிராணன் நிலைபெறும்
உண்டி சுருங்கில் உபாயம் பலவுள
கண்டங் கருத்த கபாலியு மாமே. 735

இம் - எனின், இதுவும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : புணர்ச்சி குறையின் உடற்கு அழிவில்லையாம். உடல் சுருங்கின் உயிர் அதனையே இடமாகக் கொண்டு நெடுநாள் நிலைபெறும். உணவு சுருங்கினால் மேனிற்றற்குரிய உபாயங்கள் பலவுளவாம். கழுத்திடம் கறுத்துள்ள சிவனுமாவன் என்றவாறு.

அண்டம் என்றது விதை; ஆண்குறி; கருவியாகு பெயர். அது சுருங்குதலாவது புணர்ச்சிக் காலத்துப் போலச் சேட்டியாது அடங்கியிருத்தல்; அதாவது புணர்ச்சி தவிர்தல் என்பதாம். அதற்கு என்ற சுட்டு உடலை உணர்த்திநின்றது. பிண்டம் — உடல். அது சுருங்குதலாவது விரதங்களானும் தவத்தானும் நுணுகி இறுகி வலியுடையதாதல். உண்டி சுருங்குதலான் விளையும்பயன் பலவாதலின் உபாயம் பலவுள என்றருளினார், உணவு சுருங்கத் தவம் பெருகும்; தவம்பெருக உயிர் நிலைபெறும்; உடல் சுருங்கும்; அது சுருங்கக் காமம் இல்லையாம்; அஃதின்

ருகவேஅழிவேஇல்லையாம்; அப்போது விடமுண்டும் சாவாத காமாரியாக விளங்குவன் என்பதாம், (187)

பிண்டத்துள் உற்ற பிழக்கடை வாசலை
அண்டத்துள் உற்று அடுத்தடுத் தேகிடின்
வண்டுச் சிக்கு மலர்க்குழல் மாதரார்
கண்டுச் சிக்குநற் காயமு மாமே. 736

இம் - எனின், இதுவுமது.

இ - ள் : உடற்கண் பொருந்திய புழைக்கடை வாயிலாகிய குதத்தை அடைத்து, ஆகாயத்தில் அடுத்தடுத்துப் பொருந்தி ஏகின், வண்டுகள் விரும்பும் மலரை அணிந்த கூந்தலையுடைய பெண்களும் கண்டு விரும்பும்படியான நல்லுடலுண்டாம் என்றவாறு.

வாசலை என்பதற்கேற்ற வினைச்சொல் வருவிக்க பெற்றது. அடுத்தடுத்து ஏகின் எனவே குண்டலினி யும் பிராணனும் அடிக்கடிக் கீழிறங்கும்; அவற்றை அடிக்கடி உயர்த்துதல் வேண்டும் என்பதாம்.

பெண்கள் தமக்கு இத்தகைய உடல் அழகு வேண்டும் என விரும்புதற்கேதுவாய உடல் என்பது கருத்து, அன்றி இவ்வளவு பெரிய தவத்திற்குப் பெண்கள் விரும்பும் பேரழ குண்டாதலே பயனும் என உரைகூறல் பொருந்தாதாம். சிறந்தது தெளிக. (188)

சுழலும்பெருங்கூற்றுத் தொல்லைமுன் சீறி
அழலும் இரதத்துள் அங்கியுள் ஈசன்
கழல்கொள் திருவடிக் காண் குறில் ஆங்கே
நிழலுளுந் தெற்றுளும் நித்தலு மாமே 737

இம் – எனின், ஆஞ்ஞாசக்கரத்து இறைவனைத் தரிசிக்கின் எய்தும் பயன் இதுவென்றல் நுதலிற்று.

இ – ள்: மனம்மருளும் பெரிய கூற்றுவனை முன் சினந்து அழல்கின்ற சிவபெருமானுடைய கழலை அணிந்த திருவடியை, தேர்வடிவான ஆஞ்ஞா சக்கரத்தில் விளங்கும் அங்கியிற் கண்டு தரிசிக்கில், அங்கு நீழலைச் செய்கின்ற சித்திரத்தெற்றியுள் எஞ்ஞான்றும் விளங்கலாம் என்றவாறு.

சீறி யழலும் ஈசன், இரதத்துள் அங்கியுள் ஈசன், அவனது கழல்கொள் திருவடி இரதத்துள் அங்கியுள் காண்குறில். ஆங்கே நிழலுளும் தெற்றுளும் ஆம் எனக் கூட்டிப் பொருள்காண்க.

இங்ஙனம் அன்றித் தமக்குத் தோன்றிவாறே, சீறி என்பதற்குச் சீறுவர் எனப் பொருள்கொண்டு எச்சத்தை முற்றாக்கியும், முற்றுக்களை வருவித்துத் தனித்தனி வாக்கியங்களாக்கியும் பொருளுரைப்பர். எளிமையில் முற்கூறியவாறு முடியக்கிடக்கும் இதனை அங்ஙனம் செய்தல் அமையுமோ என்பதாய்க.

தொல்லை - பழமை; துன்பமுமாம். இப்பொருளில் கூற்றுவனால் விளையும் துன்பத்தைத் தொலைத்து என இயைத்துக்கொள்க.

இரதம; ஆஞ்ஞாசக்கரம் முக்கோண வடிவாகத் தேர்போலிருத்தலின் சித்தர் மரபில் அதனைத் தேர் என்று சொல்லுதல் வழக்கம். அத்தேர் நடுவில் ஒரு சோதி உண்டு; அதனுள் இறைவன் திருவடியைத் தரிசிக்கலாம் ஆதலின் 'அங்கியுள் ஈசன் கழல்கொள் திருவடிக் காண்குறில்' என்றருளினர். அங்ஙனம் ஆஞ்ஞையில் திருவருட் சத்தியின் வடிவாகிய திருவடியைத் தரிசிக்கும்போது சிலம்பாகிய பரநாத ஒலி கேட்குமாதலின் அவ்வநுபவத்தையும் உடன் சிந்திக்கவைப்பார் கழல்கொள் திருவடியென்றருளினர்.

நிழலும் தெற்றுளும் நித்தலும் ஆம்: திருவடி தரிசனம் செய்கின்ற சிவயோகி திருவடியின் நிழலிலும், சித்திரத் தெற்றியாகிய மேருவின் உச்சியிலும் விளங்குவன் என்பதாம். தெற்றி – திண்ணை; ஈண்டு 'தெற்று' என நின்று, பிரமரந்திரத்தை உணர்த்திற்று. (189)

நான்கண்ட வன்னியும் நாலு கலையேழுந்
தான்கண்ட வாயுவுஞ் சரீர முழுதொடும்
ஊன்கண்டு கொண்ட வுணர்வு மருந்தாக
மான்கன்று நின்று வளர்கின்ற வாறே. 738

இம் – எனின், ஆன்மாவை மான்குட்டியாக உருவகித்து அது வளர்முறை உணத்துதல் நுதலிற்று.

இ-ள்; நான் தரிசித்த அங்கிவடிவான் சிவமும், நான்கு கலைகளும், ஏழு ஆதாரங்களிலும் தான் கண்ட வாயுவும், உடல்முழுதும் ஊனிலிருந்து

விளைந்த உணர்வுமாகிய இவற்றை உணவாக உட்கொண்டு மான்குட்டி நிலைபெற்று வளர்கின்றது என்றவாறு

நான்கண்ட வன்னி - நான்தரிசித்த சோதி வுருவச் சிவம். ஆன்மாவாகிய என்னை இங்ஙனம் உருவாக்கி உயர்த்திய உபகாரியாகிய சிவம் என்றுமாம்,

நாலு கலை – வியோமரூபி. அநந்தை. நாதை, அநாதை என்பன. வாயு ஏழானவை பஞ்சப் பிராண னும் இடகலை பிங்கலைகளுமாம். (190)

ஆகுஞ் சனவேத சக்தியை அன்புற
நீகொள்ளின் நெல்லின் வளர்கின்ற நேர்மையைப்
பாகு படுத்திப் பல்கோடி களத்தினுல்
ஊழ்கொண்ட மந்திரந் தன்னுல் ஒடுங்கே. 739

இம் - எனின், உயிர் அசபையுள் ஒடுங்குமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : உயிர்கட்கு உதவும் மக்களை அழுந்தி அனுபவிக்கச் செய்யும் திரோதான சக்தியை அன்பு செய்யும்படியாக நீ கொண்டால், நெல்லைப்போலப் பல்குகின்ற தன்மையைப் பகுத்தறிந்து, பல கோடிக் கணக்கான உடலால் முறைமை கொண்ட மந்திரத்தால் ஒடுங்குவாயாக என்றவாறு.

திரோதானசத்தி அருட்சத்தியாக உன்னிடம் அன்பு பொருந்தச்செய்யின், நெல்லைப்போல ஒன்று புல்லாயிரமாக விளையும் பலகோடி உடம்பு

களாலும், அசபாமந்திரம் செபித்து ஒடுங்குவாயாக என்பது கருத்து. அசபாமந்திரமாவது பேசா எழுத்தாகிய 'ஸோஹம்' என்பது. சிகாரம் என்பாரும் உளர்.

சனவேத சத்தி – மக்களை வேதிக்கும் வல்லமையாகிய திரோதானசத்தி. வேதம் - வேதிப்பது. மாற்றுவது. களம் - உடல். சகளம் என்பதிற் போல. (191)

## 14. காலசக்கரம்

காலம் என்பது அருவாய். கருவிகளாக எண்ணபடும் சூரிய சந்திர உடுக்களை இயக்கும் வல்லமையாய் அவற்றைக்கொண்டு நாம் காலமாகிய தன்னை அறிவித்துக்கொள்வதாய், இறப்பு எதிர்வு நிகழ்வென்ற முப்பகுதித்தாய் இருப்பது; வித்தியாதத்துவங்கள் ஏழனுள் இரண்டாவதாக வைத்து எண்ணப்படுவது; சுத்த மாயையின் காரியமாவது. இது சக்கரம்போல முடிவின்றி மாறிமாறி வருவதாகலின் காலசக்கரம் எனப் பட்டது. காலத்தை வெல்லுங் கணக்கறிவானாகிய சிவயோகி அதனியல்பை உணர்ந்தாலன்றி அதனை வெல்லவொண்ணாதாகலின் அதனை உணர்த்திய எடுத்துக்கொண்டார் ஆசிரியர், அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

**மதிவட்ட மாக வரையைந்து நாடி**
**இதுவிட்டிங் கீரா றமர்ந்த அதனாற்**
**பதிவட்டத் துள்நின்று பாலிக்கு மாறு**
**மதுவிட்டுப் போமாறு மாயலுற் றேனே.** 740

இம் - எனின், துவாதசாந்த யோகத்தின் பயன் ஆயலுற்றேன் என நுதலிப்புகுதல் நுதலிற்று.

இ - ள் : சந்திர மண்டலத்திலுள்ள மேருவில் விளங்குகின்ற ஐந்து நாடிகள் கூடுமிடத்தை விட்டு, துவாதசாந்தப் பெருவெளியில் விரும்பியிருந்தமையால், அத் துவாதசாந்த வட்டத்துள் நின்று, பரம பதியாகிய சிவபெருமான், நமக்கருள்செய்யும் மாற்றையும், அதனையுங்கடந்து பரவெளியுட் கலக்குமாற்றையும் ஆராயத்தொடங்கினேன் என்றவாறு.

மதிவட்டம் — சகத்திராரம். மதிமண்டலம். பிரமரந்திரம் என்ற மறு பெயர்களையுடைய ஆஞ்ஞாஸ்தானம். மாகம் - பொன். மாகவரை — பொன்மலை. ஆஞ்ஞாசக்கரத்துள்ள உச்சிக்குழி மேருமலை என்பது சித்தர் மரபு. அங்கேயுள்ள ஐந்து நாடிகள் என்றது பஞ்சகலைகள். ஓம் வியோமவ்யாபினி, வ்யோமரூபி, சர்வவியாபினி, சர்வ வியாபி என்பன. அவற்றையுங் கடந்தால் துவாத சாந்தப் பெருவெளியை அடையலாம். அஃது இறைவன் எழுந்தருளியிருக்குமிடம் ; அங்கே சென்றவுடன் அவனருள் கிட்டும் ; அதில் தோய்ந்து நிற்பின்அதனையுங்கடந்து பரவெளியில் செலுத்தும் அவனருள் என்பது கருத்து. இதற்கு வேறுரை கூறுவாரும் உளர். அது இயைபின்மையை அதனை நோக்கி யாய்க. (192)

உற்றறி வைந்தும் உணர்ந்தறி வாறேழுங்
கற்றறி வெட்டுங் கலந்தறி வொன்பதும்
பற்றிய பத்தும் பலவகை நாழிகை
அற்ற தறியா தழிகின்ற வாறே. 741

இ-ள்: பொறிகளைப் பொருந்தி அறிகின்ற அறிவு ஐந்தும், அவற்ரோடு பகுத்துணர்கின்ற அறிவொன்றும் சேர ஆறும், அவற்றில் அழுந்தி நின்று ஆய்ந்தறியும் அறிவு ஒன்றுசேர ஏழும், ஞானசாத்திரங்களைக் கற்றறியும் அறிவொன்றுடன் எட்டும். அநுபவித்தறிகின்ற அறிவாகிய ஒன்பதாவதும், பிறியாது பற்றிநிற்கும் அறிவாகிய பத்தும் ஆகிய இவற்ருல் பலவகையாக நாழிகை அறுதியிடப்பட்டுள்ளதை அறியாது, உலகம் வீணே அழிகின்றது என்றவாறு.

இம் - எனின். காலத்தை வெல்லும் உபாயம் அறியாமல் காலத்துட்பட்டு அழிகின்ற உலகவர் நிலைக்கு இரங்கி உரைத்தல் நுதலிற்று.

உற்று அறிவு ஐந்து ; இந்திரியங்களைந்தும், புலங்களைப் பொருந்துவதால் விளைந்த அறிவு ; சத்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தமாகிய ஞானங்கள் ஐந்து.

உணர்ந்து அறிவு ஆறு ஏழு - இந்திரிய ஞானங்கள் எல்லா உயிர்களுக்கும் அவ்வவற்றின் இயல்புக்கு ஏற்ப உளவாகலின், மனிதனுக்கு மட்டும் உள்ள சிறப்பு பகுத்தறியும் அறிவே. அது ஆருவது அறிவு. அதனுடன் ஆய்ந்து தோயும் அறிவாகிய அநுபவ ஞானமும் சேர ஏழு.

கற்றறிவு எட்டு - முற்கூறியவற்றோடு சாத்திர ஞானமுங்கூட எட்டாம். அவற்றுடன் நூலறிவை யும் தம் அநுபவத்தையும் கலந்தறியும் அறிவு ஒன்பதாவதாம், அங்ஙனம் அறிந்தபின், பற்றலா வது இறைவன் திருவடிப் பற்றொன்றே என்பதனை அறிந்து, அதனைவிடாது "சிக்கெனப் பிடித்தேன் எங்கெழுந் தருளுவதினியே" என்று பற்றிநிற்கும் ஞானம் பத்தாவதாம். இங்ஙனம் பலவகையாக நாழிகை அறுதியிடப்பட்டதை அறியாமல் அழி கின்றது உலகம் என்பதாம். அற்றது - அறுதிசெய் யப்பட்டது. (193)

அழிகின்ற ஆண்டவை ஐயைஞ்சு மூன்று
மொழிகின்ற முப்பத்து மூன்றென்ப தாகுங்
கழிகின்ற காலறு பத்திரண் டென்ப
தெழுகின்ற ஈரைம்ப தெண்ணாற் றிருந்தே. 742

இம் - னின், மக்களுக்கு வரும் கண்டங்கள் இவையென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : முற்கூறியவண்ணம் அழிகின்ற ஆண்டு கள் இருபத்தைந்து முதல் இருபத்தெட்டு வரையில் ஓரெல்லையும், சொல்லப்படுகின்ற முப்பது முதல் முப்பத்து மூன்றுவரை ஓரெல்லையும், அங்ஙனமே அதற்கு மேல் கழிகின்ற காலம் அறுபத்திரண்டும், அதற்கு மேல் நூறும் ஆம்; அதற்குமேல் வருவன வற்றிற்கு எண்ணில்லையாம் என்றவாறு.

ஆகவே, மனித ஆயுளில், நான்கு கண்டங்கள் உளவாம் என்பது கருத்து. அழிகின்ற ஆண்டு — கண்டம்; அதாவது தேகத்திற்கு அழிவு வரும்

காலம். நூறுக்கு மேல் வரும் கணடத்திற்கு ஆண்டுக் கணக்கில்லை என்பதாம். (194)

திருந்து தினமத் தினத்தினத் தோடுநின்
றிருந்தறி நாளொன் றிரண்டெட்டு மூன்று
பொருந்திய நாளொடு புக்கறிந் தோங்கி
வருந்துத லின்றி மனைபுக லாமே. 743

இ்ம் - எனின், யோகத்திற்கு ஆகா நாட்களிவை யெனல் நுதலிற்று.

இ - ள்: திருந்திய நாளாகிய பிறந்தநாளும், அதனோடு பொருந்தி நிற்கின்ற நட்சத்திரமும் ஆகிய இவைகளில் ஒன்றும், இரண்டும், மூன்றும், எட்டுமாகிய இவைகளன்றி, பொருந்திய நாட்களை நன்கு ஆராய்ந்து வருத்தமின்றி மனைபுகலாம் என்றவாறு

ஜன்ம நட்சத்திரமும், ஜன்மதினமும், அதனை அடுத்த இரண்டாம்நாளும், நட்சத்திரமும் மூன்று எட்டாம் நாட்களும். நட்சத்திரங்களும் நீங்கலாக ஏனைய நாட்களில் பொருத்தம்பார்த்து மனை புகலாம் என்பது கருத்து. பொருத்தமாயினும் மேற்குறித்த நாட்கள் ஆகா என்பதாம். மனை - உடல். மனை புகுதல் – யோகப்பயிசிக்காக ஆருதார தியானம் செய்தல். (195)

மனைபுகு வீரும் மனத்திடை நாடில்
எனவிரு பத்தஞ்சும் ஈரா றதனுல்
தனையறிந்தோ ரட்டுத் தற்குறி யாறு
வினையறி யாது விளங்கிய நாலே. 744

இ – னின் பயில்வார் கொள்ளத்தக்கன இவையென உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : அங்ஙனம் யோகம் பயில்வீர்! உமது மனத்தில் நன்கு ஆராய்ந்து; இருபத்தைந்தாகிய ஆன்ம தத்துவங்களையும், உச்சுவாசமாகிய பன்னிரண்டங்குல மாத்திரையதாகிய பிராணனால் அறிந்து, அதனை உள்ளுக்கிருத்தி, சிவத்தைத் தியானித்திருக்க ஆறுதார தரிசனம் கிட்டும். செயலற்ற நிலையில் விளங்கியன நாலாம் என்றவாறு.

மனைபுகுதல் முன்னர்க் காட்டப்பட்டது. பிருதிவிமுதல் புருடன் ஈறான ஆன்மதத்துவங்கள் இருபத்தைந்தையும் மனத்தால் ஆராய்ந்து என்பதாம். மனம் ஆராய்வது பிராணன் இயங்கும் போதாதலின் ஈராறதனால் தனையறிந்து என்றார். அங்ஙனம் அறிந்தவுடன் அதன் மிகுதியை வளர்க்கத் தோன்றுமாதலின் அவற்றைநீக்கி, இது வரை தத்துவ தரிசனமும், தத்துவ சுத்தியும் கூறியது.

தத் – சிவம். அதனைக் குறிக்கின்ற ஆறுவன ஆறு ஆதாரங்கள். மூலம் முதல் ஆஞ்ஞைவரையில் கூறப்பட்டவற்றுள் தத்பரம்பொருள் கணேசர் முதலான பல வடிவங்களுடன் எழுந்தருளியிருப்பதை முன்னர்க் காட்டினோம்; ஆண்டுணர்க, அங்ஙனம் சிவத்தைக் குறித்து விளங்குமிடங்கள் ஆறும் அதற்கு மேலதாக. வினையறியாது விளங்கிய – தியானம், தியானிப்போன் இரண்டு

மாகிய செயலும் மடங்கிப்போன நிலையில் விளங்கின. துவாதசாந்தத்தில் விளங்கும் சூரிய மண்டலம், சந்திரமண்டலம், அக்கினிமண்டலம், சத்திமண்டலம் என்பன நான்குமாம். இவை செயல் மடங்கிய ஞானசொரூபமாதலின் இங்ஙனம் கூறப்பட்டது. இங்கே சிவம் சூரியமண்டலத்தில் பிரமனும், சோமமண்டலத்தில் விஷ்ணுவும், அக்கினிமண்டலத்தில் ருத்திரனும், சத்திமண்டலத்தில் சிவமும் அதிபதிகளாக விளங்குவர். இவர்கள் பிரகிருதி மாயா புவனவாசிகளாகிய பிரமனாதியரல்லர். ஆறு ஆதாரங்களும் அவற்றிற்குமேல் துவாதசாந்தமும், அதில் நான்கு நிலைகளும் உண்மையைச் சித்தாந்தசாராவளி நன்கு விளக்கும். அதனைத் துணைக்கொண்டு தெளிக. (196)

நாலுங் கடந்தது நால்வரும் நாலைந்து
பாலங் கடந்தது பத்துப் பதினைந்து
கோலங் கடந்த குணத்தாண்டு மூவிரண்
டாலங் கடந்ததொன் றாரறி வாரே. 745

இம் - எனின், லயசிவம் விளங்குமிடமும் அதனை அறிவார் யாருமிலர் என்பதுமுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: அவ்வண்ணம் துவாதசாந்தப் பகுதியாகிய மண்டலங்கள் நான்கையும் கடந்ததும் அம்மண்டலாதிபர்களாகிய நால்வரும் சேர, ஒன்பது வகையான வடிவங்கள் தந்ததும், இருபத்தைந்தாகிய வடிவங்களை ஏற்று, அவற்றையுங் கடந்துள்ள எல்லையற்ற குணங்களால் ஆறு ஆதாரங்

களையும் ஆட்கொண்டு, ஆலகால விடத்தையும் வென்றது மாகிய லயசிவத்தை ஆரறிவார் என்ற வாறு.

முன் திருமந்திரத்தால் உணர்த்தப்பெற்ற நாலையும் ஞாபகப்படுத்த நாலுங்கடந்து எனக் கூறினர். அவற்றிற்கு அதிபதிகளாக விளங்கும் பிரமா, விஷ்ணு, உருத்திரன், ஈஸ்வரன் என்ற நால் வருள்பட சதாசிவன், பிந்து நாதம், சத்தி, சிவம் என்ற ஐந்துடன் நாலஞ்சு பேதங்களைத்தந்து பாலம் ஆற்றைக் கடக்கப் பயன் படுதல்போல இறைவன் நமக்காகமேற்கொண்ட நவந்தருபேதங் கள் ஆணவத் திமிரத்தோடு கூடிய பிறவிக்கடலை நீந்தக் கொடுத்த பாலங்கள்போல்வன, ஆதலால் உவமவாகு பெயராக அல்லது உருவகவணி பற்றிப் பாலம் என்றது. பாலங்கள் தந்தது எனப் பிரிக்க. பத்து பதினைந்து கோலம் – பத்தும் பதினைந்து மாகிய மாகேசுர வடிவங்கள்.

அவற்றைக்கடந்த குணத்து மூவிரண்டு ஆண்டு எனக்கூட்டி, இருபத்தைந்து உருவத் திருமேனி களையும் கடந்துள்ள குணரூபத்தால் ஆதாரங்களில் எழுந்தருளியிருந்து ஆண்டுகொண்டு. ஆலங்கடந் தது ஒன்று – ஆலகால விஷத்தையும்வென்றடக்கிய தாகிய ஒரு பரம்பொருள். அதனை அறிவார் யார் என முடிக்க. (197)

**ஆறும் இருபதுக் கையஞ்சு மூன்றுக்குந்**
**தேறு மிரண்டு மிருபத்தொ டாறிவை**
**கூறு மதியொன் றினுக்கிரு பத்தேழு**
**வேறு பதியங்க ளுள்விதித் தானே.** 746

விதித்த இருபத்தெட் டொடுமூன் றறையாகத்
தொகுத்தறி முப்பத்து மூன்று தொகுமின்
பதித்தறி பத்தெட்டும் பாரா திகளால்
உதித்தறி மூன்றிரண் டொன்றின் முறையே. 747

இம் - எனின், சித்தர் மரபுபற்றிய மாத அளவை கூறுதல் நுதலின.

[ பொருளமைதி நன்கு விளங்கவில்லை. ] (198 199 )

முறைமுறை யாய்ந்து முயன்றில ராகில்
இறையிறை யார்க்கும் இருக்க அரிது
மறையது காரண மற்றொன்று மில்லை
பறையறை யாது பணிந்து முடியே. 748

இம் - எனின், காலமறிந்து ஒழுகுக என்று உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இவற்றை முறைப்படி ஆராய்ந்து. முயன்றிலராகில் யாராலும் இறைவனணுக்கமாகப் பார்க்கும் அற்பமும் இருக்க இயலாது. இவ்வளவு மறைவாகக் கூறிவைத்த காரணம் வேறொன்றும் இல்லை; தம்பட்டமடிக்காமல் வணங்கி முடியுங்கள் என்றவாறு. (200)

முடிந்த தறியார் முயல்கின்ற மூர்க்கச்
இடிஞ்சில் இருக்க விளக்கெரி கொண்டு
கடிந்தனல் மூளக் கதுவவல் லார்க்கு
நடந்திடும் பாரினில் நண்ணலு மாமே. 749

இம் - எனின், காலத்தைவெல்லும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இவ்வண்ணம் மறைத்து வைத்தமையை யறியாதாராய், வீணே முயற்கிக்கின்ற மூடர்கள், அகலிருக்க விளக்கினை ஏற்றி, தடைகளைக் கடிந்து அனல் மேலும் மூளப் பற்றவைக்க வல்லவர்க்கு, அழியு முலகில் அழியாதிருக்கலும் ஆம் என்றவாறு.

இடிஞ்சில் - அகல்; என்றது உடலை. தமது உடலில் பிராணனைக்கொண்டு விளக்கெரியாகிய குண்டலினியை எழுப்பித் தடையாயுள்ள கிரந்திகளைப் பேதித்து. உச்சியில் அனல் மூளும்வண்ணம் பற்ற வைக்கவல்ல சிவயோகியர் மரணமின்றி நெடிதுவாழலாம் என்பது கருத்து. (201)

நண்ணுஞ் சிறுவிர ஞகை மூன்றுக்கும்
பின்னிய மார்பிடைப் பேராமல் ஒத்திடும்
சென்னியின் மூன்றுக்குஞ் சேரவே நின்றிடில்
உன்னி யணைந்திடும் ஓவியந் தானே. 750

இம் - எனின், உன்மனைத் தியானம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அடையப்பெற்ற சிறுவிரல் பருமன் உள்ளதான நாடிகள் மூன்றற்கும் பல நரம்புகளும் பின்னித் திரிகின்ற இதயத்தில் பெயராமல் ஒத்துக் கிடக்கும். அவைகள் தலைக்கண்ணுள்ளனவாகிய சூரிய, சந்திர, அக்கினிமண்டலத்திற்கும் ஒப்ப

நின்ருல் ஓவிய வடிவமான உன்மனுசக்தி கருணை கூர்ந்து அணைவள் என்றவாறு.

இடகலை பிங்கலை சுழுமுனையாகிய நாடிகள் மூன்றும் இதயத்திலுள்ள சுவாசகோசம்வரை நீங்காமல் ஒத்திருக்கின்றன. அவைகள் அந்நிலையிலிருந்தும் மேலெழும்பி பிரமரந்திரத்திலுள்ள மூன்று மண்டலங்களிலும் ஒத்து நிற்குமாயின் உன்மனை வெளிப்படும் என்பது கருத்து.

நாகம்போலச் சுருண்டு கிடத்தலின், மூன்று நாடிகளும் உருவாலும் தொழிலாலும் நாகம் என்ற குறிப்புப் பெயரால் வழங்கப்பட்டன. அந்த நாடியின் பருமன் சிறுவிரல் போன்றும், உருவம் நாண்போன்றும் இருத்தலின் சிறுவிரல் நாண் நாகம் எனப்பட்டது.

பின்னிய மார்பு: பல நாடிகளும் பின்னிக்கிடக்கின்ற மார்பு. இதயத்தில் உள்ள சுவாசயத்தில் நரம்புகள் யாவும் பின்னிக்கிடத்தலின் இங்ஙனம் கூறப் பெற்றது. அவற்ருேடு சிறந்த இந்நாடிகள் மூன்றும் கலந்து சுவாசத்தை இழுத்துக் குருதியைச் சுத்தி செய்து வெளிப்படுதலின் பேராமல் ஒத்திடும் என்றருளினர்.

இவை மூன்றும், சென்னியில் உள்ள மூன்றுக்கும் இணைப்புண்டாய் நிலைபெறுமாயின் உன்மனி (மனோன்மனி) வெளிப்பட்டு அருளுவள் என்பதாம்.

புடை பெயர்ச்சியின்றி, அழகிதாய், தியானிப்பவன் மனத்தைத் தன்வசப்படுத்திப் புறம் போக

விடாமல் பிணைத்து இருத்தலின் ஒவிய வடிவமான உன்மனை என்றார். (202)

ஒவிய மான வுணர்வை அறிமின்கள்
பாவிக ளித்தின் பயனறி வாரில்லை
தீவினை யாமுடல் மண்டல மூன்றுக்கும்
பூவில் இருந்திடும் புண்ணியத் தண்டே. 751

இம் - னின், சுழுமுனை வழியாக உன்மனைத் தியானம்செய்க என்றல் நுதலிற்று.

இ - ள்: ஒவியம்போன்ற தியான ஞானத்தை அறியுங்கள் ; பாவிகள் இதன் பயனை அறிகின்றார்களில்லை. தீவினையால் விளைந்த இவ்வுடற்கண் உள்ள மண்டலங்கள் மூன்றுக்கும் மேலுள்ள ஆயிர இதழ்த் தாமரைப்பூவில் இருக்கும் இப்புண்ணிய நாளமாகிய சுழுமுனை நாடி என்றவாறு.

சுழுமுனை நாடியானது சகத்திரார சக்கரத்தின் தண்டாக, பாவ கன்மத்தால் விளைந்த இவ்வுடலிலுள்ள மூன்று கிரந்திகளையும் வியாபித்து நிற்கும் என்பது பின்னிரண்டடிகளாலும் உணர்த்தப் பெறுகின்றது. (293)

தண்டுடன் ஓடித் தலைப்பெய்த யோகிக்கு
மண்டல மூன்று மகிழ்ந்துடல் ஒத்திடுங்
கண்டவர் கண்டனர் காணார் வினைப்பயன்
பிண்டம் பிரியப் பிணங்குகின் றாரே. 752

இம் – எனின், உண்மை ஞானியரியல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : வீணாதண்டமாகிற முதுகந்தண்டோடு பிணைந்து சென்று பிரமரந்திரத்தை அடைந்த யோகிக்கு சோம சூரியாக்கினி மண்டலங்கள் மூன்றும் மகிழ்ந்து உடற்கண் ஒத்திருக்கும். இந்த உண்மையைக் கண்டவர்களே உண்மை ஞானிகள். இதனை அறியாதார், வினைப்பயன்களை நுகர்வதற்காகக் கிடைத்த உடலம் அழிய மாறுபடுவர் என்றவாறு.

தண்டு – முதுகந்தண்டு. அதனுடன் ஓடுதல் - இடகலை பிங்கலை சுழுமுனை நாடிகள் இதனுடன் மாறிப் பிணைந்தும், நடுவாகவும் மேலே ஓடுதலின் அவற்றோடு தானும் சென்று தியானித்தல். மூன்று மண்டலங்களும், தம்முள் ஒத்துநின்று யோகிக்கு உதவுதலை ஒத்திடும் என்றருளினார்.

பிணங்குகின்றார் – மாறுபடுகின்றார். உடல் பிரிய உணர்வு அற்றுப்போகின்றனர் என்பது. (204)

பிணங்கி அழிந்திடும் பேறது கேள்நீ
அணங்குள ளுதித்த றுறு விரியின்
வணங்குட னேவந்த வாழ்வு குலைந்து
சுணங்கனுக் காகச் சுழல்கின்ற வாறே. 753

இ்ம் - எனின், அவ்வண்ணம் உணரார் நிலைக்கு இரங்குதல் நுதலிற்று.

இ—ள் : அங்ஙனம் மாறுபட்டு அழிந்திடும்பேறு வந்தவழியை நீ கேட்பாயாக. அது வருத்துந் தன்மை வாய்ந்த சூரியனுடைய விரிந்த வழியாம்.

அதனால் அனைவரும் வணங்கத்தக்க வாழ்வும் கெட்டு நாய்க்காகச் சுழல்கின்றபடியாம் என்றவாறு.

அது, அணங்குளன் ஆதித்தன் விரியின் ஆறு எனக்கூட்டி, அவ்வழி வருத்தும் தன்மையுடையனாகிய சூரியனுடைய விரிந்த வழியாம் எனப் பொருள் கொள்க. இன் தவிர்வழிவந்த சாரியை. சூரியன் கதியால் ஆயுள்கழிதலை இங்ஙனம் கூறினார். "நாளென ஒன்று போற்காட்டி உயிரீரும் வாள்" என்ற வள்ளுவர் உரையும் தெளிக.

வணங்கு – வணங்குதல். முதனிலைத் தொழிற் பெயர். வணங்குதலுடனே வந்த வாழ்வு என்றது பலரும்போற்ற வாழ்கின்ற வாழ்வு.

சுணங்கனுக்காகச் சுழலுதலாவது இறந்தபின் நாய் உண்ண உடலைப் பேணிவாழ்தல். (205)

சுழல்கின்ற வாறின் துணைமலர் காணான்
தழலிடைப் புக்கிடுந் தன்னு ளிலாமற்
கழல்கண்டு போம்வழி காணவல் லார்க்குக்
குழல்வழி நின்றிடுங் கூத்தனு மாமே. 754

இம் - எனின், பிரமரந்திர வழியே சிவதரிசனம் செய்க என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : அங்ஙனம் சுழல்கின்றபடியால், இனிய இரண்டான திருவடிமலரைக் காணாதாகி, நெருப்பில் வீழ்ந்து மடியவிருக்கும் உடலாகிய தன்னுள் இலாமல், திருவடியைக்கண்டு மேலே செல்லும் வழியைக் காணவல்லவர்க்கு, பிரமரந்திரமாகிய ஆஞ்ஞையின் வழியே நிலைபெற்ற கூத்தப்பெருமானும் ஆவர் என்றவாறு.

திருவடியைக் காணுமைக்கு ஏது முற்றிருமந்தி ரத்திற் கூறயாங்கு. சுழலுதலாம் என அனுவதித் தது. துணைமலர் – திருவடி. தன் என்றது உடலை.

திருவடியைத் தரிசித்து, மேலாதாரங்களைப் பற்றி உயர்ந்து, உடலைக்கடந்த துவாதசாந்தம் வரையில் செல்லின், திருக்கூத்தனைத் தரிசிக்கலாம்; அவரே அருள் கூர்ந்து வெளிப்படுவர் என்பது கருத்து. குழல் – பிரமரந்திரம். (206)

கூத்தன் குறியிற் குணம்பல கண்டவர்
சாத்திரந் தன்னைத் தலைப்பெய்து நிற்பர்கள்
பார்த்திருந் துள்ளே அனுபோக நோக்கிடில்
ஆத்தனு மாகி யலர்ந்திரு மொன்றே. 755

இம் – எனின், திருக்கூத்துத் தெரிசித்தார் சேரும் பயனிதுவென்றல் நுதலிற்று.

இ – ள் : கூத்தனைக் குறித்துநிற்பதால் விளையும் பயன் பலவற்றையும் கண்டவர்கள். அவனுண்மை யியல்புகளை உணர்த்தும் மெய்ந்நூற்பொருளை அறிந்து அநுபவித்து நிற்பார்கள். சாத்திரவழி நின்று உள்ளே தியானித்து விளையும் அநுபவத்தை அறியின். மிக விருப்புடையனுய் ஏகனுக விளங்குவன் என்றவாறு.

குறியில் - குறித்துணர்தலால், திருவடித் தியானம் சேர்ந்தார் மெய்ப்பொருளறிவு சேர்வர்: சாதகராவர்; அநுபவம் முதிர்ந்து பேரன்பராக அநந்நியபாவம் எய்துவர் என்பது கருத்து. ஆத்தன்

- அன்பன்; ஆப்தன் என்பதன் சிதைவு, அளர்ந் திடும் ஒன்றே என்பதும் பாடம். (207)

ஒன்றில் வளர்ச்சி உலப்பிலி கேளினி
நன்றென்று மூன்றுக்கு நாளது சென்றிடும்
சென்றிடு முப்பதுஞ் சேர இருந்திடிற்
குன்றிடைப் பொன்திகழ் கூத்தனு மாமே. 756

இ-ம் - எனின், அங்ஙனம் அநந்நியமாயிருத்தலின் பயனறிவித்தல் நுதலிற்று.

இ-ள்; அங்ஙனம் ஒன்றியிருத்தலால் விளையும் வளர்ச்சிகள் அளவற்றனவாம். இனிது கேட்க. நல்ல தென்று, ரேசக பூரக கும்பங்களாகிற மூன்ருலும் ஆயுள் கழியும், ஆகையால் அங்ஙனம் கழியும் நாட்கள் உளவாகாமல், முப்பது நாள் பூரண கும்பகஞ்செய்து இருந்தால் மேருமலை உச்சியில் விளங்கும் திருக் கூத்தனுமாவான் என்றவாறு.

ஒன்றில் - ஒன்றிஞல் என வினை எச்சம். மூன்று — ரேசகமாதி மூன்று; இடகலை பிங்கலை சுழுமுனையாகிய நாடி மூன்றுமாம். உச்சுவாச நிச்சுவாசங்களால் நாட்கள் கழியும். அங்ஙனம் கழியுநாட்கள் முப்பது ஒரு சேர கும்பகஞ்செய்து இருக்கின், மேருமலையில் விளங்கும் சிவனும் ஆவர் என்பது. பொன்மேரு என்றது உடலை. கூத்தன் என்றது துவாதசாந்தப் பெருவெளியில் விளங்கும் லயசிவத்தை. (208

கூத்தவன் ஒன்றிடுங் கூர்மை அறிந்தங்கே
ஏத்துவர் பத்தினில் எண்டிசை தோன்றிடப்
பார்த்து மகிழ்ந்து பதுமரை நோக்கிடிற்
சாத்திடு நூறு தலைப்பெய்ய லாமே. 757

இ-ம் - எனின், நூறாண்டு வாழும்முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள் : கூத்தப்பெருமானாகிய பிராணன் பொருந்தும் மேன்மையை அறிந்து பத்திதழ்களையுடைய அந்த அநாகதத்தானத்திலிருந்து மேலே ஏற்றுவர். அங்கே எட்டிதழ்களையுடைய அநாகதத் தானம் தோன்றக். கண்டு மகிழ்ந்து, அத்தாமரையில் வீற்றிருக்கக் கூடிய சிவத்தைத் தரிசிக்கில், நூல்களில் சொல்லிய வண்ணம் நூறாண்டு உடலோடு கூடி வாழலாம் என்றவாறு.

கூத்தவன் என்றது உடலைக் கூத்தாட்டும் பிராணனை. கூர்மை – மிகுதி. மேன்மை நுட்பமுமாம். அங்கு என்ற சுட்டு பத்திதழ்களையுடைய நாபியாகிய மணிபூரகத் தானத்தை உணர்த்திற்று. பத்தினில் – பத்திதழ்களில். ஏத்துவர் - ஏற்றுவர்; அதாவது மணி பூரகத்திலிருந்து மேலும் உயர்த்துவர். ஏற்றுவர் சாற்றிடும் என்பன எதுகை நோக்கித் திரிந்தன.

எண்திசை – எட்டிதழ்த் தாமரையாகிய அநாகதத் தானமாகிய இதயம் தோன்ற அதனைக் கண்டு மகிழ்ந்து, அங்கே வீற்றிருக்கும் மகேசனைத் தரிசிக்கின் நூறுண்டு வாழலாம் என்பது விளக்கியவாறு.

பத்தினில் எண்திசை தோன்றிட என்பதற்கு இருந்து புறப்பட்ட மூலமாகிய பூமியும். எல்லா வற்றிற்குமேலனைத்தும் ஒடுங்க இடந்தந்து நிற்கும் ஆகாயமும் நீங்க, ஏனைய எட்டுத் திசைகளையும் காணில் என உரைகூறலும் ஒன்று. விட்டமையாற் பூமியும், எட்டியுள்ளமையால் அந்தரிட்சமும் புலப் படாதொழிய ஏனைய விளங்கின என்பதாம். (209)

சாத்திடு நூறு தலைப்பெய்து நின்றவர்
காத்துடல் ஆயிரங் கட்டுறக் காண்பார்கள்
சேர்த்துடல் ஆயிரஞ் சேர இருந்தவர்
மூத்துடன் கோடி யுகமது வாமே. 758

இ-னின், நூறாண்டு வாழக்கற்றவர்கள் பல் யுகமும் வாழ்வர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: சொல்லப்பட்ட நூறாண்டு வாழ்ந்தவர் கள், கிடைத்த இவ்வுடலையே காத்து ஆயிரம் ஆண்டு கட்குக் குலையாதவண்ணம் காப்பார்கள். இவ்வண்ணம் ஆயிரம் ஆண்டு வாழ்ந்தவர்கள். பலயுகம் அறிவான் முதிர்ந்து வாழலாம் என்ற வாறு.

நூறு, ஆயிரம் என்பன எண்ணுகு பெயராக ஆண்டுகளை உணர்த்தின. இத்தொகைச் சொற்கள் பலகாலம் வாழலாம் என்பதை உணர்த்தின. (210)

உகங்கோடி கண்டும் ஒசிவற நின்று
அகங்கோடி கண்டு ளயலறக் காண்பர்கள்
சிவங்கோடி விட்டுச் செறிய இருந்தங்கு
உகங்கோடி கண்டடங் குயருறு வாரே. 759

றி-னின், அதற்கு மேலும் அநந்நியமாயிருந்து உயர்வர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : அங்ஙனம் யுகம் பல கண்டு தளர்வற நிலைபெற்று மனத்தால் முடிந்த பொருளாகிய சிவத்தைத் தரிசித்து, அதனுள் பிரிவறத் தான் விளங்கு நிலையைக் காண்பார்கள். பின்பு சிவமாகிய முடிந்த பொருளையும் விட்டு அநந்நியமாயிருக்கும் நிலையைக் கண்டு உயர்வினை அடைவர் என்றவாறு,

ஒசிவு - தளர்வு. அநவரத தியானத்தை அறிவித்தவாறு, அகம் கோடி கண்டு - மனம் முடிந்த இடத்தைக் கண்டு; அதாவது மனமும் கடந்த நிலையை அறிந்து என்பதாம். உள் — சிவத்திற்குள். வியாபகமாகிய சிவபரம் பொருளினுள் தான் ஏகதேச வியாப்பியமாய்த் தாடலை போல அடங்கியிருத்தலைத் தரிசித்து. தான் சிவபரம்பொருளுக்கு வேறுகாதிருக்குந் தன்மையை அறிவார்கள். மனம் கோடி — மனம்முடிந்த இடம்.

சிவம் கோடி விட்டு — சிவமாகிற இறுதியான பொருளையும் விட்டு, வியாபக வியாப்பியமாயிருக்குந் தன்மையையும் கழன்றுபோக, புணர்ச்சி வயத்தால் தன்னைமறந்த தலைவிபோலத் தன்வசமழிந்து. செறிய — வியாபகமாக. இந்நிலையில் பல யுகங்கள் இருந்தவர் உயர்வற உயர்ந்த நலம் எய்துவார்கள் என்பது கருத்து. (211)

உயருறு வாருலகத்தொடுங் கூடிப்
பயனுறு வார்பலர் தாமறி யாமற்
செயலுறு வார்சிலர் சிந்தையி லாமற்
கயலுறு கண்ணியைக் காணகி லாரே. 760

இம் - எனின், இவ்வண்ணமிருந்து பயனுறுவார் இருக்கவும் பலர் அங்ஙனம் ஆயிற்றிலரே என்று இரங்குதல் நுதலிற்று.

இ - ள் : இங்ஙனம் உய்தலை அடைபவர்களே உலகத்தோடும் கூடிய பயனை அடைந்தவராவார். பலர் தாம் இவ்வுண்மையை யறிந்துகொள்ள மாட்டாமையால் கன்மங்களை மேலும் மேலும் ஈட்டுவாராயினர். சிலர் மனமில்லாமையால் கயற் கண்ணியாகிய பெருமாட்டியைத் தரிசிக்காராயினர் என்றவாறு

தாயே தந்தையை அறிவிக்கத் தனயன் அறிந்து அவனிடமிருந்து அறிவும் பொருளும் ஆற்றலும் பெறுகின்றானாதலின், அவன் மனத்தைப் பல வுணர்ச்சிகட்கு இடமாக்கினமையின் முதலிற் றாயை யே அறிகிலனாய்ப் பின்னர் முறையே சிவத்தையும், பரஞானத்தையும் பரபோகத்தையும் உணராதா யினன் என்றவாறு. பரபோகந் துய்த்தவர்களே உடலைக்கொண்டு உலகத்தொடு கூடியிருக்கின்ற பயனைக் கண்டவராவர் என்பதாம். "உடலெடுத் துழலும் ஊமர் ஒன்றையு முணரார்" என்று இரங்கிக் கூறியதும் இப்பொருட்டு. (212)

காணகி லாதார் கழிந்தோடிப் போவர்கள்
நாணகி லாதார் நயம்பேசி விடுவர்கள்
காணகி லாதார் கழிந்த பொருளெலாங்
காணகி லாமற் கழிகின்ற வாறே. 761

இம் - எனின், அநுபவஞானமில்லாதார் அரனைக் காணார் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சிவதரிசனம் செய்யாதார் பிறந்ததன் பயனெய்தாமற் கொன்னே கழிவர். வெட்கமில்லாதார் வீணுகச் சாத்திரநயங்களைப் பேசிப்பேசித் தம்மநுபவத்திற்குக் கொண்டுவராமல் விட்டு விடுவர். சிவதரிசனம் செய்யாதார் கழிந்த பொருள்களனைத்தும் என்ஞான்றும் காண முடியாமல் அழிந்துபோவது இவ்வாறும் என்றவாறு.

சாத்திரங்கள். நயம்படப் பேசுவதற்காக இறைவனுல் அருளிச்செய்யப்பட்டனவல்ல.அறிந்து அநுபவித்து உயர அருளப்பட்டவை. இதனை உணராதாரை நாணமிலார் என எள்ளியவாறு. விடுவார்கள் என்ற சொல்லாற்றல் பயன்படுத்தாது கழிப்பார்கள் என்பதனை விளக்கி நின்றது.

பிருதிவி முதற் குடிலைவரையில் கண்டுகழிக்க வேண்டியிருக்கின்ற அவற்றை அறியாமலே தாமே கால எல்லையிற் கழலவிட்டவர்கள் உண்மைஞானம் எய்தாமையின் எப்போதுமே காணுமாற்றலின்றிக் கழிந்துபோவார் என்பது கருத்து. (213)

கழிகின்ற அப்பொருள் காணகி லாதார்
கழிகின்ற அப்பொருள் காணலு மாகுங்
கழிகின்ற வுள்ளே கருத்துற நோக்கிற்
கழியாத அப்பொருள் காணலு மாமே. 762

இம் - எனின் , சிவதரிசனம் செய்யின் நம்மை விட்டுக் கழிவனவற்றையும் காணலாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: நம்மைவிட்டுப் பிரிகின்ற தத்துவ தாத்துவிகங்களை அறியாதார் வீணே கழிகின்ற மனததுள் அங்ஙனம் கழியாதவண்ணம் கருத்தூன்றித் தியானித்தால், என்றும் அழியாத அப்பொருளாகிய சிவத்தை அறியலாம்; அங்ஙனம் அறியின் நம்மைவிட்டுக் கழிகின்ற தத்துவங்களையும் காணலாம் என்றவாறு.

மலையுச்சியில் நிற்பவர்க்குக் கீழுள்ள பொருட்கள் எளிமையிற் காணப்படுமாறுபோல, தத்துவ தாத்துவிகங்களைக் கடந்து சிவதரிசனஞ் செய்வார்க்கு அவைகள் தம்மைவிட்டு விலகுதல் நன்கு விளங்கும் என்பது கருத்து. மலத்து எழுந்திய புழு அதனை மலம் என்று அறியாதவாறு போலச் சிவங் காணார் கழியும் பொருள்களாகிய தத்துவங்களையும் காணார் என்பதாம்.

கண்ணனன் பிறப்பிலி காணந்தி யாயுள்ளே
எண்ணுந் திசையுடன் ஏகாந்த னயிநந்
திண்ணென் றிருக்குஞ் சிவகதி யாநிற்கும்
நண்ணும் பதமிது நாடவல் லார்கட்கே. 763

இம் - எனின், சிவயோகியார் சேருமிடம் இது வென்றல் நுதலிற்று.

இ - ள்: முக்கண்ணனும், பிறப்பில்பெருமானும், எமக்கு ஆசாரியமூர்த்தியுமாயுள்ள சீபரமேசுரனை ஆவியினுள்ளாக ஆராய்ந்து காண்க. அங்ஙனம் காண்பார்க்கு அவன் எண்ணப்படுகின்ற திசைகளுடன் ஒன்றி, உலகமே தானாக நிற்கும்.

உறுதியாக நிற்கும் சிகார வகாரங்கள் நம்மைவந் தடையும். இதனை ஆய்ந்து அநுபவிக்க வல்லார் கட்கு அடையத்தக்க நிலை யிதுவேயாம் என்றவாறு.

கண்ணன் என்பது, மூக்கன் பல்லன் என்பன போலக் கண்ணிற் சிறப்புடையான் என்னும் பொருளது. கண் மிகுந்திருப்பினும் அது சிறப்புத் தானே! ஆதலால் முக்கண்ணன் கண்ணனெனப் படுதல் பொருந்தும் என்றறிக. நந்தி - ஆசாரியன். உள்ளே ஆய் காண் எனப் பிரித்துக் கூட்டிப் பொருள் காண்க. உள்ளே - ஆன்மாவினிடமாக.

எண்ணுந்திசை – ஒன்று இரண்டு எட்டு பத்து என்று எண்ணப்படுகின்ற திசை. ஏகாந்தன்– ஒன்றாய்க் கலந்து நிற்பவன். திண்ணென்று இருக்கும் சிவ - உறுதியாக ஆன்மாக்களை உய்விப் பேம் என்று திருவுளம்பற்றியிருக்கும் சிகாரமாகிய சிவமும், வகாரமாகிய சத்தியும். கதியா நிற்கும் – அருளால் தாமே வந்து பொருந்தா நிற்கும், 'கதிப் பவரில்லையாநம்'' என்புழிப்போலக் கதித்தல் அடைதல் என்னும் பொருளது.

இதுவே நாடவல்லார்க்கு நண்ணும் பதம் என உறுதியும் கூறியவாறு; (215)

நாடவல் லார்க்கு நமனில்லை கேடில்லை
நாடவல் லார்கள் நரபதி யாய்நிற்பர்
தேடவல் லார்கள் தெரிந்த பொருளிது
கூடவல் லார்கட்குக் கூறலு மாமே. 764

இம் – எனின், பயன் கூறிப் பலரை வழிப் படுத்துக என்றல் நுதலிற்று.

இ – ள் : இவ்வண்ணம் அறியவல்லவர்கட்கு, நமனில்லை; துன்பமிம்லை; இவ்வுலகில் அரசராவர். மேன் மேலும் தெரியவல்லார்கட்கு விளங்கும் பொருளிதுவேயாம், இவ்வுண்மையை உம்முடன் கூடவல்லவர்கட்கும் சொல்லுதலுமாம் என்றவாறு.

நாடவல்லார்கட்கு மரணம் இல்லை, துன்ப மில்லை. அரசபோகத்து வாழலாம். இந்த உண்மை எம்மைப் போலத் தேடவல்லார்கள் தெரிந்த உண்மையாம். இதனை நீங்களும் உங்களுடன் கூட வல்ல பக்குவர்களுக்குச் சொல்லலாம் என்பது கருத்து. (216)

கூறும் பொருளி தகார வுகாரங்கள்
தேறும் பொருளிது சிந்தையுள் நின்றிடக்
கூறு மகாரங் குழல்வழி யோடிட
ஆறும் அமர்ந்திடும் அண்ணலு மாமே. 765

இம் – எனின், சொல்லத்தக்க உண்மை இதுவே யென்றுணர்த்தல் நுதலிற்று.

இ - ள் : நீங்கள் சொல்லத்தக்க பொருள் இது அகார உகாரங்கள். தெளிந்த பொருள்களாகவுள்ள இவை இரண்டும் நும் சிந்தைக்கண் நிலை பெற சொல்லப்படுகின்ற மகாரமாகிய நாதம் சுழுமுனை யாகிய நடுநாடியின் வழியே மேலேறிச் செல்ல, ஆறு ஆதாரங்களிலும் எழுந்தருளியுள்ள சிவம் வெளிப் பட்டுத்தோன்றும் என்றவாறு.

அகாரம் சிவமும், உகாரம் சத்தியும், மகாரம் மலமுமாதலின் முன்னிரண்டும் மனத்திலிருக்க, நாத

மாகிய சுத்தமாயாமலம் பிராணனேடு சுழுமுனை வழியாகப் புருவமத்தியை யடைய அங்கே சதாசிவம் வெளிப்படும் என்பது கருத்து. ஆம் - ஆகும்; தோன்றும் என்பதாம். (217)

அண்ணல் இருப்பிட மாரும் அறிகிலர்
அண்ணல் இருப்பிடம் ஆய்ந்துகொள் வார்கட்கு
அண்ணல் அழிவின்றி உள்ளே அமர்ந்திடும்
அண்ணலைக் காணில் அவனிவ னுகுமே. 766

இம் - எனின், சிவம் எழுந்தருளியிருக்குமிடமும், காண்பார் எய்தும் பயனும் அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் இடத்தை யாரும் அறியமாட்டார். அதனை அறிந்து கொள்வார்களுக்கு, அவன் தோற்றக் கேடுகளின்றி என்றும் ஒருபடித்தாய் எழுந்தருளுவன். அவனை அனவரதமும் தரிசிக்கின் அவனேதானும் என்றவாறு.

தோற்றக்கேடுகள் என்றது மணியுட் சோதி போலவும், பாலினுள் நெய்போலவும் வெளிப் பட்டும் மறைந்தும் நிற்றல். (218)

அவனிவ னுகும் பரிசறி வாரில்லை
அவனிவ னுகும் பரிசது கேள்நீ
அவனிவ னேசை ஒளியினுள் ஒன்றிடும்
அவனிவன் வட்டம தாகிநின் றனே. 767

இம் - எனின், சிவமே தானுந்திறம் தெரிவித்தல் நுதலிற்று.

இ – ள் : சிவன் தானாகும் தன்மையை அறிவார் யாரும் இல்லை. அத்தன்மையை நீ கேட்பாயாக. சிவமும் ஆன்மாவும் ஓசையும் ஒளியும்போல உள்ளே ஒன்றாய் நிற்கும். பின்னர் சிவமும் உயிரும் வட்டமாகிய பிரணவமாகி நிலைபெற்றனர் என்றவாறு.

பிரணவ வட்டத்துள் முதலும் முடிவும் இல்லை யானாற்போல, இவர்களும் முதலும் முடிவுமின்றிக் கலந்திருப்பர் என்பதாம். (219)

வட்டங்க ளேழு மலர்ந்திடும் உம்முளே
சிட்டன் இருப்பிடஞ் சேர அறிகிலீர்
ஒட்டி யிருந்துள் உபாயம் உணர்ந்திடக்
கட்டி இருப்பிடங் காணலு மாகுமே. 768

இம் – எனின், இறைவன் கரும்பினிற்கட்டி போல இனிப்பர்; அவரிருப்பிடம் அறியலாம் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : வட்டங்களாகிற ஆதார சக்கரங்கள் ஏழும் உம்முள்ளே மலரும். அவற்றுள் சிட்டனாகிய சிவனிருக்குமிடத்தைச் சேர அறியீர்கள். ஒன்றித்து நின்று உபாய நிட்டைசெய்யக் கரும்பினிற்கட்டி போல்வான் இருப்பிடத்தை நீவிரும் அறியலாம் என்றவாறு.

வட்டங்கள் ஏழு - ஆறுதாரங்களும் துவாத சாந்தமும். அவற்றை வட்டமென்றது சக்கரவடிவாதலின். சிட்டன் - சிவன், "சிட்டனார்க்கிடமாவது திருநின்றி யூரே" என்பதும் காண்க. ஒட்டி -

பொருந்தி; அதாவது ஒன்றியிருந்து. கட்டி - கருப் பங்கட்டி, ' கரும்பினிற் கட்டிபோல்வார் கடவூர் வீரட்டனாரே '' என்றதும் காண்க, (220)

காணலு மாகும் பிரமன் அரியென்று
காணலு மாகுங் கறைக்கண்டன் ஈசனைக்
காணலு மாகுஞ் சதாசிவ சத்தியுங்
காணலு மாகுங் கலந்துடன் வைத்தே. 769

இம் - எனின், ஆதாரங்களில் அவ்வவ் இறைவர் களைத் தரிசிக்கலாம் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பிரமன் என்றும் அரியென்றும், காள கண்டராகிய ஈஸ்வரன் என்றும், சவாசிவசத்தி யென்றும் தரிசிக்கலாம். அங்ஙனம் தரிசிக்கவே உயிருக்குயிராகக் கலந்துடனாக இருக்கும் வண்ணம் அமைத்தது காணலாகும் என்றவாறு.

மூலாதாரத்திற்குப் பிரமனும், சுவாதிட்டானத் திற்கு அரியும், மணிபூரகம் விசுத்திகட்கு உருத்திர மகேசுரர்களும், அநாகதத்திற்குச் சதாசிவனும் மனோன்மணியும் அதிதெய்வங்களாதலின் இவர் களைத் தரிசிக்கலாம் என்பது கருத்து. (221)

## 15. ஆயுட்பரீட்சை

தமக்கெனப் பால்வரை தெய்வத்தாற் பகிர்ந்து அளிக்கப்பெற்ற காலவெல்லையை அறிந்தாலல்லது அதனைத் தாண்டும் உபாயம் மேற்கொள்ளப் படாமையின் இப்பகுதியால் தமக்குள்ள ஆயுளைத் தேர்ந்துகொள்ளும் முறைகளைத் தெரிவிக்கின்றார் ஆசிரியர். அதிகார இயையும் இதனானே விளங்கும்.

வைத்தகை சென்னியில் நேரிதாய்த் தோன்றிடில்
உத்தமம் மிக்கிடில் ஓராறு திங்களாம்
அத்த மிகுத்திட் டிரட்டிய தாயிடில்
நித்தல் உயிர்க்கொரு திங்களில் ஓசையே. 770

*இம் - ஏனின், ஆயுளை அறியுமுறை உணர்த்துதல் நுதலிற்று.*

*இ - ள் : தலையின்மேல் வைத்த கை சிறுக்கத் தோன்றுமலும், பருத்துத் தோன்றுமலும் நேரிதாய் நிற்பின் உத்தமமாம். பருத்துத் தோன்றின் ஆறு மாதங்களில் மரணமாம். கை யிரண்டுபங்கு பருத்துத் தோன்றினல் நிச்சயம் ஒருமாதத்திற்குள் மரணமாம் என்றவாறு.*

*ஓசை - பிராணன்.* *(222)*

ஓசையும் ஈசனும் ஒக்கும் உணர்வின்கண்
ஓசை யிறந்தவர் ஈசனை உள்குவர்
ஓசை யிறந்தவர் நெஞ்சினுள் ஈசனும்
ஓசை யுணர்ந்த வுணர்விது வாமே. 771

*இம் - ஏனின், சிவாநுபவஞானமிதுவாம் என்று உணர்த்துதல் நுதலின்று.*

*இ - ள் : பிராணனும் சிவனும் ஒன்றிய ஞானத்தில் உயிராகிய தன்னை மறந்தவர் சிவத்தைத் தியானிப்பர். அங்ஙனம் தன்னை மறந்தவர் நெஞ்சில் சிவனும் நாதங்கடந்த ஞானமாய் நண்ணுவன் என்றவாறு.*

*∴ தன்னையும் தலைவனையும் எண்ணுகின்றபோது இரண்டுபட்ட ஞானம். தன்னை விட்டபோது*

தலைவனேயாகிறது. அத்தகைய நெஞ்சில் ஈசன் நாதங்கடந்த நவைதீர்ந்த போதமாய் விளங்குவன் என்பது கருதது. (223)

ஆமே அழிகின்ற வாயுவை நோக்கிடின்
நாமேல் உறைகின்ற நன்மை யளித்திடும்
பூமேல் உறைகின்ற போதகம் வந்திடும்
தாமே யுலகில் தலைவனு மாமே. 772

இம் - எனின். கழிகின்ற வாயுவும் கட்டுப்படின் சிவானுபவம் சீக்கிரம் சித்திக்கும் என்பதுணர்த்து தல் நுதலிற்று.

இ - ள் : வெளிச்செல்கின்ற நாலங்குல வாயுவையும் கண்டு நமக்கே ஆமாறு நோக்கிடின், நாக்கு பிரமரந்திரம் நோக்கி மேற்செல்லுவதால் விளையும் நன்மைகள் உண்டாம். சகத்திராரத்தில் தங்கும் ஞானம் விளையும். உயிரே உலகத்தலைவனுமாவன் என்றவாறு.

உள்ளிழுக்கப்படுகின்ற பன்னிரண்டங் குலத்தில் கழிகின்ற நாலங்குலம் கட்டுப்படின், நாக்கு மேலண்ணத்தின் வழியாக, புருவமத்தி வரை செல்வதால் விளையும் அநுபவம் சித்திக்கும். அதற்கும் மேலதாகிய மதி மண்டலத்துறையும் மகிழ்ச்சியும் ஞானமுமுண்டாம் என்பது. (224)

தலைவ னிடம்வலஞ் சாதிப்பார் இல்லை
தலைவ னிடம்வல மாயிடில் தையல்
தலைவ னிடம்வலந் தன்வழி யஞ்சில்
தலைவ னிடம்வலந் தன்வழி நூறே. 773

இ-னின், நூறாண்டுவாழும் உபாயமுரைத்தல் நுதலிற்று.

இ-ள் : எமது பதியாகிய சிவபெருமானுடைய திருவருளால், பிராணனை இடது வலது நாசிகளின் வழியாக முறைப்படி கட்டுப்படுத்திப் பயில்வார் இல்லையாம். தையலாகிய சத்திநாடியாகிய இடகலையும், தலைவனாகிய சிவபெருமானின் நாடியாகிய பிங்கலையும் தன்வழி இயங்கும் நாழிகைகள் ஐந்தில் பிராணன் இடம் வலம்மாறிச் செல்லுமாயின் ஆஞ்ஞா சக்கரத்திலுள்ள தலைவனிடம் ஒன்றி வன்மையுடன் வாழும் அவன்வழி நூறாண்டாம் என்றவாறு.

தலைவன் இடம் வலம் சாதிப்பார் இல்லை, தையல் தலைவன் இடம் வலம். தன்வழி அஞ்சில். தலைவன் இடம் வலமாயிடில், தலைவனிடம் வலம் தன்வழி நூறே எனக் கூட்டிப் பொருள்கொள்க.

தலைவன் – சிவபெருமான். சாதித்தல் - சாதனை செய்தல், பயிலுதல். தலைவனருளால் பிராணனை இடகலை பிங்கலைவழியாக முறைப்படிக் கட்டுப் படுத்திப் பயில்வார் உலகத்து அரியர். இல்லை யென்றது அருமை உணர்த்தியது,

தையல் இடம், தலைவன் வலம் என்று நிரனிறையாகக்கூட்டி, தையல் நல்லாளாகிய சத்தி நாடி இடநாடியாகிய இடகலையாம்; பரமபதியாகிய சிவபெருமான் நாடி வலது நாடியாகிய பிங்கலை யாம்; இந்த இரண்டு நாடிகளில் இயங்குந் தலை வனாகிய பிராணன் அவ்வைந்து நாழிகை இயங்கும்,

வழியில் இடமும் வலமும் மாறியியங்கில் தலைவ னாகிய பரமபதியிடம் ஒன்றி நின்று, வலத்துடன் தன்வழி நூறாக வாழலாம் என ஒருசொல் வருவித்து முடிக்க.

சூரியோதயம் முதலாக இடகலை பிங்கலைகள் வழியாகப் பிராணன் அவ்வைந்து நாழிகை மாறி யியங்கும் என்பதும், அங்ஙனம் இயங்கும்போது, வெள்ளி முதலிய கிழமைகளில் இடநாடிவழி யாகவும், சனி ஞாயிறு முதலிய கிழமைகளில் வல நாடிவழியாகவும் இயக்கந்தொடங்கும் என்பதும், மாற நடக்கப் பயிற்சி வேண்டும் என்பதும் வார சரத்துள் வகுக்கப்பட்டுள்ளமை கொண்டு தெளிக.

தன் வழி - தனக்கு வினைப்போகத்திற்கு வாயி லாகக்கிடைத்த உடல். நூறு என்பது எண்ணுத் பெயராக நூறாண்டு என்னும் பொருளில் வந்தது.

அஞ்சில் என்பதற்கு அஞ்சு விரலளவு கழியின் என்பாரும் உளர். (225)

ஏறய வாறிலில் எண்பது சென்றிடும்
தேறிய ஏழிற் சிறக்கும் வகையெண்ணில்
ஆறொரு பத்தாய் அமர்ந்த இரண்டையுந்
தேறியே நின்று தெளியிவ் வகையே 774

இ-ம் - எனின்; எண்பதும், அறுபதுமாகிய ஆண்டு கள் வாழும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஆறு விரலளவு பூரகமாகப் பிராணன் இருக்குமாயின் எண்பது ஆண்டு வாழலாம், ஏழு விரலளவு பூரிக்கப்பட்டு நிலையை ஆராயின்,

அறுபது ஆண்டு இருக்கலாம். முற்கூறப்பட்ட இவ்விரண்டு நிலைகளையும் தெளிந்து நின்று இவ் வகை தெளிவாயாக என்றவாறு.

சரம் அதிகாரப்படுதலின் ஆறு என்றது ஆறு விரலளவான பிராணனை உணர்த்திற்று. ஏறிய - பூரிக்கப்பட்ட எண்பது - எண்பது வயது. அங்ஙன மே ஏழுவிரலளவு பூரிக்கப்படுமாயின் அறுபது ஆண்டு வாழலாம் என்பதாம். (226)

இவ்வகை எட்டும் இடம்பெற ஓடிடில்
அவ்வகை ஐம்பதே யென்ன அறியலாஞ்
செவ்வகை ஒன்பதுஞ் சேரவே நின்றிடின்
முவ்வகை யாமது முப்பத்து மூன்றே. 775

இம் - எனின், இதுவும் சரத்தால் வாழும் எல்லை வரையறுத்தல் நுதலிற்று.

இ - ள்: இவ்வண்ணம், எட்டு விரலளவு சரம் இடகலையின் வழியே இயங்குமாயின், ஆயுள் ஐம்பதாண்டேயென அறியலாம். ஒன்பது விரலளவு சேர இயங்குமாயின் முப்பத்துமூன்று ஆண்டுகளேயாம் என்றவாறு.

செவ்வகை – செம்மை, மூவகையாம் அது என்பது எதுகைநோக்கி முவ்வகையாமது என் ஆயிற்று. மூவகை – மூப்படையும் காலம்; அதாவது உயிர் வாழுங்காலம். (227)

மும்மூன்றும் ஒன்றும் முடிவுற நின்றிடில்
எண்மூன்றும் நாலும் இடவகை யாய்நிற்கும்
ஐம்மூன்றும் ஓடி அகல்வே நின்றிடிற்
பன்மூன்றொடீராறு பார்க்கலு மாமே. 776

இம் - எனின், இதுவுமது,

இ - ள் : பத்துவிரலளவு முடிவுபெற சரம் இடவழியாக இயங்குமாயின். இருபத்தெட்டு ஆண்டுகள் வாழலாம். பதினைந்து விரலளவு ஓடி நிற்குமாயின், இருபத்தையாண்டு இருக்கலாம் என்றவாறு.

பன்னிரண்டங்குலத்திற்கு மேல் நீண்டு சரிப்பது கூடாதாகலின் 'அகலவே நின்றிடின்' என்ருர், (228)

பார்க்கலு மாகும் பகல்முப் பதுமாகில்
ஆக்கலு மாகுமவ் வாறிரண் டுள்ளிட்டுப்
போக்கலு மாகும் புகலற ஒன்றினில்
தேக்கலு மாகுந் திருந்திய பத்தே. 777

இதுமுதல் பதின்மூன்று திருமந்திரங்களால் நாடியியக்கமும் பிராணயாமமுமே பிரத்தியாகார முதல் சமாதியீருன ஐவகை நிலைகளாகக் கால வேற்றுமையால் ஆகின்றது என்பதும் உணர்த்துதல் நுதலிற்று

இ - ள்: ஒருநாள் முழுதும். பன்னிரண்டு மாத்திரைக் காலம் வாயுவைப் பூரித்து உள்நிறுத்தி. பத்து மாத்திரையளவை உள்ளே நிறுத்திக் கொண்டு, பூரித்த நாடி ஒன்றின் வழியாகவே இரண்டு மாத்திரையைப் போக்கினுல் (ரேசகம் செய்யின்) அது பிரத்தியாகாரமாம்; இதை அநுபவத்தில் பார்க்கலாம் என்றவாறு.

பகல் முப்பதும், அவ் ஆறிரண்டு உள்ளிட்டு ஆக்கலுமாகுமாகில் ஒன்றினில் புகலறப் போக்கலு

மாகும் திருந்திய பத்து தேக்கலும் ஆகும், இதைப் பார்க்கலும் ஆகும் எனக் கூட்டிப் பொருள்காண்க.

அவ் ஆறிரண்டு உள்ளிட்டு - பன்னிரண்டு மாத்திரையளவு பூரித்து. ஒரு மாத்திரை என்பது மூன்றரை விபல காலங் கொண்டது. அப்படி நாற்பத்து நான்கு விபலம் அதாவது பன்னிரண்டு மாத்திரை காலம் பூரித்து என்பதாம்.

ஒன்றினில் – ஒரு நாசியின் வழியாக; என்றது வாரசரத்தின் வண்ணம் மாறிமாறி இயங்குகின்ற பிராணனை ஒரே நாடியின் வழியாகப் பகல் முழுதும் இயங்கப் பழக்கின் என்பதாம்.

திருந்திய பத்து தேக்கலுமாகும் என்பதால் போக்கலுமாகும் என்பது இரண்டு மாத்திரையென்பது பெற்றாம்.

முன்னர், பிராணாயாம இலக்கணமாக 'ஏறுதல் பூரகம் ஈரெட்டு வாமத்தால்' (568) என இழுக்கும் வாயுவின் நீளம் கொண்டு கூறியது போலாது பூரிக்கும் கால அளவு கொண்டு கூறியது இத்திரு மந்திரம் என உணர்க. (229)

எயிரு நாளும் இயல்புற ஓடிடிற்
பாயுரு நாளும் பகையற நின்றிடும்
தேய்வுற மூன்றுந் திகழவே நின்றிடில்
ஆயிரு வாமென் றளக்கலு மாமே. 778

இ - ள்: முன் மந்திரத்திற் கூறியவாறு, இரு நாள்கள் ஒரு நாடியின் வாயிலாகவே பிராணனியங்கிக் கொண்டிருக்குமாயின். நாள்தோறும் பாயுரு

வாகிய கன்மேந்திரியத்தின் வழியாக வெளிப்படும் பகைவாயுவாகிய அபானன் கீழ்நோக்காது தடைப் படும். இங்ஙனம் இரு வாயுக்களும் இணைந்து மூன்று நாட்கள் நிலைபெறின் ஆயுள் வளர்ச்சியாம். இதனைச் சொல்லவும் வேண்டுமோ என்றவாறு.

ஏய் இருநாளும்-பொருந்திய இருநாட்களிலும். இயல்புற ஓடிடில் - முன் சொன்னவாறு இயல்பாக ஓடின். மடை மாறுது ஒன்றன் வழியாகவே இயங்கின். பாயுரு-மலங்கழிவாயாகிய கன்மேந்திரியம். பாயுரு பகையற என்றது பிராணனுக்கு எதிரியான பாயுருவிலியங்கும் அபானன் கீழ்நோக்காது தடை படுவதை உணர்த்தியவாறும்.

மூன்றும் - மூன்று நாட்களும். தேய்வுற - இவ் விரு வாயுக்களும் ஒன்றுசேர விளங்கிநிற்குமாயின். மூன்றும் திகழுவே தேய்வுற நின்றிடில் எனக் கூட்டுக. ஆயுருஆம் என்று அளக்கலும் ஆமே - ஆயள் வளர்ச்சி யுறும் என்று பிரமாணங்களால் அளந்துகாட்டலும் ஆமோ என்பதாம் (230)

**அளக்கும் வகைநாலும் அவ்வழி ஓடில்**
**விளக்கும் ஒருநாலு மெய்ப்பட நிற்கும்**
**துளக்கும் வகையைந்து தூய்நெறி ஓடில்**
**களக்க மறமுன்றிற் காணலு மாமே. 779**

இ - ள்: இங்ஙனம் அளக்கும் வகையால் நான்கு நாள்கள் அவ்வழியிலே பிராணன் இயங்கின், விளக்கத்தைச் செய்கின்ற சிவம் சக்தி நாதம் விந்து வாகிய நான்கும் உண்மையாகத் தோன்றும்.

ஐந்துநாள் ஓடுமாயின் கலக்கமின்றி முற்றத்தைப் பார்க்கலாம் என்றவாறு.

அளக்கும் வகை – பத்து மாத்திரை நிறுத்தி, இரண்டு மாத்திரை வெளிவிடல். நாலு - நான்கு நாட்கள். அவ்வழி என்றது என்றைக்கு யோகி பிராணுயாமத்தைத் தொடங்கிஞனே அன்று வார சரத்தின்படி பிராணன் எந்த நாடியில் இயங்கத் தொடங்கியதோ அந்த வழியிலேயே என்றவாறு.

விளக்கும் ஒரு நாலு-ஆன்மாவிற்கு ஞானவிளக் கத்தைத் தரும் சிவம் சத்தி நாதம் விந்து என்னும் நான்கு தத்துவங்களும். மெய்ப்பட – உண்மையாக (பிரத்யட்சமாக.)

துளக்கும் வகை – அசையும் வகை. ஐந்து நாள் வரை பிராணுயாமம் முற்கூறியவாறு இயங்கின் உடலில் நடுக்கம் உண்டாம் ஆதலின் இங்ஙனம் கூறிஞர். ஐந்தும்–ஐந்து நாட்களிலும். தாய்நெறி– சுழுமுனை.

கலக்கம் என்பது எதுகைநோக்கிக் களக்கம் என ஆயிற்று. முன்றில் – புருவமத்தியமாகிற முற்றம். (231)

காணலு மாகுங் கருதிய பத்தோடிற்
காணலு மாகுங் கலந்த இரண்டையும்
காணலு மாகுங் கலப்பற மூவைந்தேற்
காணலு மாகுங் கருத்துற ஒன்றே. 780

இ - ள் : முன் திருமந்திரங்களால் காணலாகிய தியானிக்கப்படுகின்ற பத்துநாட்கள் பிராணன்

முற்கூறியவாறு இயங்கின் சிவமும் சத்தியுமாகக் கூடியிருக்கின்ற இருபொருள்களையும் தரிசிக்கலாம். அவ்வண்ணம் கலந்த தன்மையும் மறக்கப் பதினைந்து நாட்கள் சமாதிகூடின் கருத்தினிடமாகப் பொருந்த சிவம் ஒன்றையே தரிசிக்கலாம் என்றவாறு

முதலடி மூன்றுமடிகளிலுள்ள காணலுமாகும் என்பவற்றிலுள்ள உம்மைகள் அசை. கலந்த இரண்டு - சிவசக்திகள். ஒன்று சிவம்.

கலப்பற மூவைந்தும் காணலுமாகுமேல் எனப் பிரித்துக் கூட்டிப் பொருள்கொள்க. கலப்பறக் காணலாவது, சிவமும் சத்தியும் காண்பானாகிய தானும் கலந்திருகின்றோம் என்ற உணர்ச்சியும் மாறச் சிவமாகிய ஒன்றையே அறிதல். (232)

கருதும் இருபதிற் காணஆ றுகும்
கருதிய ஐயைந்தி காண்பது மூன்றும்
கருதும் இருப துடனாறு காணிற்
கருதும் இரண்டெனக் காட்டலு மாமே 781

இ - ள் : கருதப்படுகின்ற இருபது நாட்கள் இயங்கின் ஆறுதார நிலைகள் அறியப்படும். இருபத்தைந்து மாத்திரை அளவு இருபத்தைந்து நாட்கள் இயங்கின் விசுத்தி முதலிய மூன்று நிலைகளாம். இருபத்தாறு நாட்கள் காணின் அநாகதமும் ஆஞ்ஞையுமாகிய இருநிலைகளே அறியப்படும் என்றவாறு.

பிராணுயாமத்தினுல் ஆதாரங்களின் வழியிலே தாரணை சித்திக்கும் முறையும், மேற்போகப்போகக் கீழ்நிலைகள் மறந்து மேல்நிலைகளே காணப்படும் என்பதும் அறிவிக்கப்பட்டன. (233)

காட்டலு மாகுங் கலந்திரு பத்தேழில்
காட்டலு மாகுங் கலந்தெழும் ஒன்றினில்
காட்டலு மாகுங் கலந்திரு பத்தெட்டிற்
காட்டலு மாகுங் கலந்தஈ ரைந்தே. 782

இ — ள் : இருபத்தேழு நாட்கள் இருப்பின், ஆஞ்ஞையாகிய ஒன்றில் சோதியாகிய சிவமொன்றையே காட்டலாம். இருபத்தெட்டு நாளில் ஏழாம் நிலையாகிய துவாதசாந்தப் பெருவெளி காணலாம் என்றவாறு.

ஈரைந்து - இரண்டும் ஐந்தும் ஆகிய ஏழு. ஏழு என்றது ஏழாம் நிலையாகிய துவாதசாந்தப் பெருவெளியை. (234)

ஈரைந்தும் ஐந்தும் இருமூன்றும் எட்டுக்கும்
பாரஞ்சி நின்ற பகைபத்து நாளாகும்
வாரஞ்செய் கின்ற வகையாறஞ் சாமாகில்
ஓரஞ்சொ டொன்றெரன் றெனவொன்று நாளே. 783

இ — ள் : இருபத்தொன்பது நாளாகில், உலகம் அஞ்சுதற்கு ஏதுவாகிய பகையாகப் பத்து நாளிலாகும் வாரம் இயங்குகின்ற, நாள் முப்பதாகில் ஏழு நாட்களாகத் தோன்றும் என்றவாறு.

[ இதன் கருத்து விளங்கவில்லை. ] (235

ஒன்றிய நாள்கள் ஒருமுப்பத் தொன்றுகிற்
கன்றிய நாளுங் கருத்துற மூன்றுகுஞ்
சென்றுயிர் நாலெட்டுஞ் சேரவே நின்றிடின்
மன்றியல் பாகு மனையில் இரண்டே. 784

இ - ள் : ஒன்றிய நாள்கள் முப்பத்தொன்றானால், மனம் பொருந்த கன்றிய நாட்கள் மூன்றாகும். முப்பத்திரண்டு நாட்கள் இயங்குகின்ற பிராணன் ஒன்றி நிற்குமாயின் உடம்பில் இரண்டாம் ஆதாரமாகிய அநாகதமானது சிற்சபையாக விளங்கும் என்றவாறு

முப்பத்தொருநாள் பிராணயாமப் பயிற்சியால் தாரணையில் நிற்பார்க்கு அந்நாட்கள் முழுதும் மூன்றும் நிலையாகிய விசுத்தித் தானத்தில் தாரணை நிலைக்கும்; முப்பத்திரண்டு நாள் தாரணை நிலைக்குமாயின் அநாகத சித்தி விளையும் என்பதாம். அநாகதத்தை மன்றென்றது ஆன்ம அரசன் பரிவாரங்களுடன் நனவில் அங்கிருந்து ஆட்சி செய்வது ஆகலின்,

கன்றியநாள் - தாரணையால் கன்றிப்போன நாட்கள். கன்றுதல் – தியானித்தல், மனை – வீடு ; என்றது உடலை. இரண்டு - இரண்டாம் நிலையாகிய அநாகதம், இரண்டென்றது மேலிருந்து எண்ணிக் கூறியது. (236)

மனையில்ஒன் றுகும் மாதமு மூன்றுஞ்
சுனையில்ஒன் றுகத் தொனித்தனன் நந்தி
வினையற வோங்கி வெளிசெய்து நின்றால்
தனையுற நின்ற தலைவனு மாமே. 785

இ - ள் : மூன்று மாதங்கள் தாரணை செய்யின் ஆஞ்ஞைக்காட்சியாகும். அப்பொழுது பிரமரந்திர மாகிய சுனையில் அமுதமாகிய ஒன்று ஊறும். இவ்வாறு எனது குருநாதனாகிய சிவன் கூறினன். இங்ஙனமாய தொழிலும் அற்றுப்போக உயர்ந்து துவாதசாந்த வெளியில் தியானிக்கின், பசுவாகிய தன்னைத் தயாவோடு பொருந்தநின்ற தலைவனாகிய பதியுமாவன் என்றவாறு.

மூன்றுமாத தியானத்தால் ஆஞ்ஞாசக்கரக் காட்சியுங், அமுதப்பெருக்கும் உண்டாம். இத் தொழிலும் அற்றுப் பரவெளியில் ஏறினல் பதியாக விளங்குவன் என்பது கருத்து.

ஆரு மறியார் அளக்கின்ற வன்னியை
ஆரு மறியார் அளக்கின்ற வாயுவை
ஆரு மறியார் அழிகின்ற அப்பொருள்
ஆரு மறியா அறிவறிந் தேனே. 786

இ - ள் : பரவெளியில் கலந்திருக்கின்ற அக்கினி வாயு ஆகிய இருபூதங்களையும் யாருமறியார். எல்லாவற்றையும் ஒடுக்கி இருக்கிற பொருளாகிய சிவத்தையும் யாரும் அறியார்கள். யான், சிவஞானத்தால் உணர்ந்தேன் என்றவாறு.

அளத்தல் - கலத்தல். துவாதசாந்த வெளியில் கலந்திருப்பன காற்றும் நெருப்புமாகிய இருபூதங் களே யாதலின், அவற்றை யாரும் அறியார் என்றருளினர். அவற்றையும் அழிக்கின்ற பரம் பொருள் அங்கேயுள்ளது; அதனையும் யாரும் அறியார்கள்; யான் அறிவேன் என்றவாறு. (238)

அறிவது வாயுவொ டைந்தறி வாயது
அறிவா யதுதான் உலகுயி ரத்தின்
பிறிவுசெய் யாவை பேணியுள் நாடிற்
செறிவது நின்று திகழு மதுவே. 787

இ - ள் : ஞானவடிவாகிய சிவம், வாயுவைக் கொண்டு எண்ணப்படுகின்ற ஐம்பூத ஞானமாயது. சடமாகிய உலகு உடலும், சித்தாகிய உயிரும் ஆகிய இவற்றின் அறிவாக விளங்குவது. இதனைப் பேத ஞானமன்றிப் பேணி மனத்தால் தியானிக்கின், எங்கும் செறிந்த பொருளாகத் திகழும் என்றவாறு.

அறிவது வாயுவொடைந்து அறிவாயது; உலகு உயிர் அத்தின் அறிவாயது. பிறிவு செயாவகை பேணி உள்நாடின் செறிவது நின்று திகழும் எனக் கூட்டிப் பொருள் காண்க.

வாயுவொடு ஐந்து என்றது அருவுருவப் பூதமாகிய வாயுவினின்று அருவப் பூதமாகிய ஆகாயமும் உருவப்பூதங்களாகிய தீ நீர் நிலம் முதலியனவும் கொள்ளப்படுமாதலின். சிவமேஞானசொருபமான, நுண்பூதங்களிற் செறிந்து இருத்தலின் ஐந்தறி வாயது என்றருளினர்.

பின்னர் சடப்பிரபஞ்சத்திலும், சித்துப் பிரபஞ்சத்திலும் அறிவாக வியாபித்திருப்பதும் அதுவே என்பதுணர்த்த உலகுயிரத்தின் அறிவாயது என்று அருளினர். இதனை இரண்டற்று நின்று பரவெளியில் தியானிக்கின் எல்லாப்பொருளிலும் செறிந்த பொருடானே சிவமாதலை யறியலாம் என்பது கருத்து. (239)

அதுவரு ளும்மரு ளான துலகம்
பொதுவரு ளும்புக ழாளர்க்கு நாளு
மதுவரு ளும்மலர் மங்கையர் செல்வி
இதுவருள் செய்யும் இறையவ னேமே. 788

இ – ள் : இந்த உலகம், செறிந்த பொருளாக விளங்கும் சிவம் அருளிய அருளாலாயது. இங்ஙனம் அறியும், எல்லாம் சிவமாகக்காணும் அநந்நிய ஞானம் படைத்த புகழாளர்களாகிய ஞானியர்க்கு நாளும் மங்கையர் செல்வியாகிய பராசத்தி அமுதம் அளிப்பள் என்று எனது இறைவன் எனக்கு அருள் செய்தான் என்றவாறு.

அது என்றது சென்ற திருமந்திரத்தில் 'செறிவது நின்று திகழும் அதுவே' என்றதாற் சுட்டப்பட்ட பரசிவத்தை. உலகம் ஆன்மாக்கள் ஆகிய நம்முடைய மலத்தை யொடுக்க உபகாரமாக அளிக்கப்பெற்றது என்பது முதலடியின் கருத்து.

பொதுவருளும் புகழாளர் – சிவஞானியர், இது மாடு, இது வீடு இது பொன், இது கல் என்ற விவித ஞானமின்றி எல்லாம் பாசமாகப் பார்த்திருப்பதாகிய புகழை ஆள்பவர்கள் அவர் களே யாதலின் இங்ஙனம் கூறியது.

மங்கையர் செல்வி – பராசத்தி. மது – அமுதம். இறையவன் இது அருள் செய்யும் எனக்கூட்டி, இந்த உண்மையை அருளியவன் இறைவன் எனப் பொருள் காண்க. (210)

பிறப்பது சூழ்ந்த பெருந்தகை நந்தி
குறிப்பது கூடிய கோலக் குரம்பை
பழப்பதி யாவது பற்றறும் பாசம்
அழப்படி செய்வார்க் ககலு மதியே. 789

இ – ள் : இவ்வண்ணம் சிருட்டியைத் திருவுளத் தடைத்த சிவம், மாயையை முதற்காரணமாகக் கொண்டு படைக்கக்கருதிய இந்த அழகிய உடல், உயிர்களுக்கு மிகப்பழைய இடமாகும். ஆகையால் இதனிடம் வைத்த பற்றினை நீக்குங்கள், உம்மைப் பந்தித்து நின்ற பாசங்கள் அழ அதனது வலியை ஒடுக்குவார்க்கு ஞானம் பெருகும் என்றவாறு.

கோலக்குரம்பை பழப்பதியாவது என்றதால் யாக்கை நிலையாமையும், அது வினைப்போகத்தை நுகர்த்த அருளப்பெற்றது என்பதும், ஆதலால் அதன் கண் வைத்த பற்றினை அறுக்க வேண்டும் என்பதும், அங்ஙனம் பற்றறுப்பின் பற்றிற்குக் காரணமாகிய பாசங்கள் விலகும் என்பதும், பாசம் விலக ஞானம் மலரும் என்பதும் விளக்கப் பெறு கின்றன. (241)

## 13. வாரசரம்

சரம் என்பது பிராணவாயுவின் இயக்கம், வார சரம் – இன்னின்ன வாரங்களில் பிராணன் இவ் வண்ணமாக இன்ன நாடியின் வழியாக இயங்கும் என்று அறிதலாம், சரமறிந்து இயற்றப்படும் காரியங்களே இனிது முடிதலும், நன்மையளித்த லும் உடைமையின் இதனை அறிதல் மிக இன்றி யமையாததாகின்றது. இதனை ஏழு திருமந்திரங்க ளால் உணர்த்துகின்றார் ஆசிரியர்.

வெள்ளிவெண் திங்கள் விளங்கும் புதனிடம்
ஒள்ளிய மந்தன் இரவிசெவ் வாய்வலம்
வள்ளிய பொன்னே வளரும் பிறையிடந்
தெள்ளிய தேய்பிறை தான்வல மாமே. 790

இம் - எனின், தேய்பிறை வளர்பிறைகளிலும் இன்னின்ன கிழமைகளிலும் இன்னின்ன நாடியின் வழியாகக் காற்று இயங்கத் தொடங்கும் என்று அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் ; வெள்ளி திங்கள் புதன்கிழமைகளில் இடநாடி வழியாகவும், சனி ஞாயிறு செவ்வாய்க் கிழமைகளில் பிங்கலை நாடியின் வழியாகவும், வியாழக்கிழமையில் வளர்பிறையாயின் இடநாடி வழியாகவும் தேய்பிறையாயின் பிங்கலை வழியாகவும் செல்லவேண்டும் என்றவாறு.

இவ்வியக்கம் சூரியன் உதிக்க ஐந்து நாழிகைக்கு முன்னர் உறக்கத்தைவிட்டு எழுகின்ற காலத்து முதற்கண் இயங்கும் இயக்கமாம். பின்னர், ஐந்து நாழிகைக்கு ஒருமுறை மாறும். நாழிகைக்கணக்கில் யோகநூல்களுள் கருத்து வேறுபாடுண்டு. ஞானசர நூல் என்னும் தமிழ்நூல் மூன்று நாழிகைக்கு ஒரு முறை மாறும் என்று அறிவிக்கும். (242)

வெள்ளி வெண் திங்கள் விளங்கும் புதன்மூன்றுந்
தள்ளி இடத்தே தயங்குமே யாமாகில்
ஒள்ளிய காயத்துக் கூன மிலையென்று
வள்ளல் நமக்கு மகிழ்ந்துரைத் தானே. 791

இம் – எனின், மேற்குறித்தவண்ணம் இயங்குதலால் விளையும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : வெள்ளி திங்கள் புதன் கிழமைகளில் இடநாடியில் பிராணன் தள்ளி யியங்குமாயின். ஒளிபொருந்திய உடலுக்கு அழிவு இல்லை யென்று

என்னுடைய ஆசாரியமூர்த்தி அடியேனுக்கு அறிவித்தார் என்றவாறு. (243)

செவ்வாய் வியாழஞ் சனிஞாயி றேஎன்னும்
இவ்வா ரறிகின்ற யோகி இறைவனே
ஒவ்வாத வாயு வலத்துப் புரியவிட்
டவ்வா றறிவார்க்கவ் வானந்த மாமே. 792

இம் - எனின், இதுவுமது,

இ - ள்: செவ்வாய் வியாழன் சனி ஞாயிறு என்னும் இவ்வாரங்களில், நாடிசரத்தை அறிகின்ற யோகியானவன் இறைவனேயாவான். மாறி யியங்குவதான பிராணனை வலப்பக்கத்தேயே ஓடவிட்டு அங்ஙனம் அறிகின்றவர்களுக்கு அத்தகைய ஆனந்தம் விளையும் என்றவாறு.

வாரம் என்பது அம்கெட்டு வார் என நின்றது. ஒவ்வாத வாயு — மாறியியங்குகின்ற வாயு. இக் கிழமைகளில் பிங்கலையிலே இயங்கவிடின் இறைவனாவன்: அவன் சிவானந்தத்தை நுகர்வன் என்பதாம். (244)

மாறி வருமிரு பான்மதி வெய்யவன்
ஏறி இழியும் இடைபிங் கலையிடை
ஊறும் உயிர்நடு வேயுயி ருக்கிரந்
தேறி அறிமின் தெரிந்து தெளிந்தே. 793

இம் — எனின் சுழுமுனை நாடியினியங்குதலின் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள்: திங்களும், சூரியனுமாகிய இடகலை பிங்கலை நாடிகளில் மாறி யியங்கும் பிராணன்,

இடையில் ஏறிப் பிங்கலையில் இறங்கும். அப்போது பிராணன் நடுநாடியில் ஊர்ந்து செல்லும். அப் பிராணனுடைய உயர்வை மிகத் தெளிந்தறியுங்கள் என்றவாறு.

மதி வெய்யவன் இருபால் மாறிவரும் இடை பிங்கலையிடை ஏறியிழியும் ; உயிர் நடுவே ஊறும் ; உயிர் உக்கிரம் தேறி தெரிந்து தெளிந்து அறிமின் எனக்கூட்டுக.

இதன் கருத்து பிராணவாயு விடியற்காலையிலே தொடங்கியபடியே ஒரே நாடியில் இயங்காது இடைபிங்கலைகளில் மாறி யியங்கும் ; பின்னர் இடைவழியாக ஏறிப் பிங்கலை வழியாக இறங்கும் ; நடுநாடியின் வழியாகவும் ஊர்ந்துசெல்லும்; அவ் வண்ணம் நடுநாடியின் வழியாகச் செல்லும் பிராணனின் சிறப்பை மிகத்தெரிந்து தெளியுங்கள் என்பதாம்.

நடுநாடி வழியாகச் செல்லுங்காலமே தியானம் பூசை முதலிய கடவுட்காரியங்களுக்கு நன்மை பயப் பதாம் ; உலகியலுக்கு உதவாதநாம் ; ஆதலால் உயிர் உக்கிரம் தேறி அறிமின் என்றார். உக்கிரம் - ஆற்றல். இங்ஙனமன்றி உயிருக்கு இரந்து ஏறி அறிமின் எனப்பிரித்து. சுழுமுனையியக்கம் உயிருக்கு உறுதி பயப்படுமென்று சொற்களை வருவித்து உரைத்து, மரபு வழுவி இடர்ப்படுவாருமுளர். அவ்வுரை கொள்ளற்க. ஊரும் என்பது எதுகை நோக்கி ஊறும் என வலிந்து நின்றது. ஏறி- பூரிக்கப்பெற்று. இழியும்-இரேசிக்கப்படும். (245)

உதித்து வலத்திடம் போகின்ற போது
அதிர்த்தஞ்சி யோடுத லாமகன் ருரும்
உதித்தது வேமிக வோடிடு மாகில்
உதித்த விராசி யுணர்ந்துகொ ளுற்றே. 794

இம் - எனின், கலை மாறுகின்றபோது உண்டா கின்ற மெய்ப்பாடும், கலை மாறாமல் ஓடுகின்றதன் பயனும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: பிராணன் தோன்றி வலம் இடம் மாறு கின்றபோது, நடுக்கத்துடன் அஞ்சியோடும். இங்ஙனம் ஓடுதல் அகன்று நிறைந்த உதித்த நாடி யிலே மிகஓடுமாயின் உதித்த இராசியைப்பொருந்தி அறிக என்றவாறு.

பிராணன் கலை மாறியியங்கத் தொடங்கும்போது நடுக்கத்தோடு, அஞ்சி ஓடும்; என்றது உடலில் நடுக்கமும், அச்சமும் தோன்ற மாறும். இந்த நிலை அகன்று உதித்த நாடியிலே நிலைத்து நிறைந்து ஓடு மாயின் பிராணனியக்கம் தொடங்கிய ஒழுங்கினை ஆராய்ந்து அறிக என்பது கருத்து. இராசி - ஒழுங்கு. ஒழுங்கினை அறிதலாவது, உதித்த நாடியில் இயங்குங் கால அளவையும், அதில் செய்யவேண்டிய காரியங்களின் ஒழுங்கையும், அதன் பயனையும் அறிந்து செய்தல். இவற்றின் விரிவை ஞானசரநூல் என்னும் நுலிற் காண்க. 246

நடுவுநில் லாமல் இடம்வலம் ஓடி
அடுகின்ற வாயுவை அந்தணன் கூடி
இடுகின்ற வாறுசென் றின்பணி சேர
முடிகின்ற தீபத்தின் முன்னுண்டென் றுனே: 795

இம் - எனின், சுழுமுனை நாடியில் பிராணனை நிறுத்தத் தீபதரிசனமாகும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : நடுநாடியில் நில்லாமல், இடப்வலமாக மடைமாறிச் சென்று வருத்துகின்ற பிராணனை யோகியானவன் நாடிகள் கூடுகின்ற சந்தியாகிய சுழுமுனையில் இனிய குண்டலினி சென்றுசேர நடுநாடியின் முடிவில் விளக்கொளியின் முன் உண்டு என்று குருநாதன் கூறினான் என்றவாறு.

இடகலை பிங்கலை வழியாகப் பிராணன் இயங்கு கிறபோது உலகியலிற்கிடந்து உலைதல்நேரும். அங்ஙனமாவது பிராணனைக் குண்டலினியோடு நடுநாடியாகிய (கூடியிடுகின்ற ஆறு - நாடிகள் ஒத்தியங்குகின்ற நெறியாகிய) சுழுமுனையிற் செலுத்தின் நடுநாடியினுச்சியில் விளங்கும் தீபத் தின் முன் இருக்கலாம்; அதாவது தீபதரிசனமாம் என்பது கருத்து.

பணி - பாம்பு. அவ்வடிவான குண்டலினியை உணர்த்திற்று. முடிநின்ற தீபத்தின் எனவும் பாடம். தீபத்தின் முன் ஆன்மாவாகிய நீ உண்டு என வருவித்துப் பொருள்காண்க. (247)

**ஆயும் பொருளும் அணிமலர் மேலது**
**வாயு விதமும் பதினா றுளவலி**
**போயம் மனத்தைப் பொருகின்ற வாதாரம்**
**ஆயுவு நாளு முகூர்த்தமு மாமே.** 796

இம் - எனின், ஆயுள், ஆண்டு, மாதம், நாள் முகூர்த்தம் முதலியன சரம்பற்றியே விளைவன என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஆராயப்பெறுவதாகிய பரம்பொருள் பிரமரந்திரத்திலுள்ள ஆயிர இதழ்த்தாமரை மலரின் மேலது. பிராணவாயுவின் வகைகளும் பதினாறுள்ளன. தன்னாற்றல் கெட்ட மனத்தை தாங்குகிற ஆதாரங்களாக ஆயுள், நாள், முகூர்த் தங்கள் இவையாம் என்றவாறு.

வலி போய மனம் என்பது வலிபோயம்மனம் என விரித்தல் விகாரம் பெற்றது. பொருகின்ற - பொருவுகின்ற, தாங்குகின்ற என்பதாம்.

ஆயும் பொருள் - ஆராயப்படும் பொருளாகிய சிவச்சோதி. அணிமலர் மேலது - அழகிய நிரலான ஆயிர இதழ்களையுடைய தாமரை மலர் மேலுள்ளது.

வாயு விதம் பதினாறுள - பிராணவாயு பொருந்தும் ஆதாரபேதங்களால் அவ்வாயுவும் பதினாறாக உள்ளன. பதினாறு ஆதாரங்களாவன :- அங்குஷ்டம், பரடு, முழந்தாள், தொடை, பீஜத்தின் கீழ்நரம்பு, இலிங்கம், நாபி, இருதயம், மிடறு, கழுத்து, நாக்கு, மூக்கு, புருவநடு, நெற்றி, சிரசு, பிரமரந்திரம் என்னுமிவை: இவை ஷோடசாதாரம் எனப்படும். (248)

## 17. வாரசூலம்

நற்காரியங்கட்குப் பயணம் செல்லத்தகாத சூலம் தோன்றிய திக்குகளை உணர்த்தும் இப்பகுதி வார சூலம் எனப்பெறும். சரமுணர்ந்து காரியம் செய்வார்க்கு இதுவும் இன்றியமையாததாதலின் வார சரத்தையடுத்து இரண்டு திருமந்திரங்களால் இதனை உணர்த்துகின்றார்.

வாரத்திற் சூலம் வரும்வழி கூறுங்கால்
நேரொத்த திங்கள் சனிகிழக் கேயாகும்
பாரொத்த சேய்புதன் உத்தரம் பானுநாள்
நேரொத்த வெள்ளி குடக்காக நிற்குமே. 797

இ - ள்: கிழமைகளில் சூலம் வரும் வழியைக் கூறுமிடத்து, திங்களும் சனியும் கிழக்கே சூலமாம். செவ்வாயும் புதனும் வடக்காம். ஞாயிறும் வெள்ளியும் மேற்காம் என்றவாறு. (249)

தெக்கண மாகும் வியாழத்துச் சேர்திசை
அக்கணி சூலமு மாமிடம் பின்னுகில்
துக்கமும் இல்லை வலமுன்னே தோன்றிடின்
மிக்கது மேல்வினை மேன்மேல் விளையுமே. 798

இ - ள்: வியாழக்கிழமை தெற்காகும். சூலம் இடப்பக்கமாகவும் பின்பக்கமாகவு மிருக்கப் பயணம் செல்லுவது நலமாம். வலப்பக்கமும் முன் பாக்வும் இருக்கச்செல்லின் முன் செய்த தீவினைகள் விளையும் என்றவாறு.

இவ்விருமந்திரங்களாலும் சூலத்திற்கு எதிரிலும் வலத்திலும் செல்லுதலாகாது என்பதும், சூலம் இருக்கும் திசைகளும் நாள்களும் இவை என்பதும் உணர்த்தப்பெற்றன. (250)

## 18. கேசரியோகம்

அஃதாவது கேசரி யாசனத்திலிருந்து செய்யும் யோகமாம். கேசரியாசனத்தின் இலக்கணம் முன் 562-வது திருமந்திரத்தாற் கூறப்பட்டது. அதனை இருபத்தாறு திருமந்திரங்களால் உணர்த்திய எடுத்துக் கொண்ட ஆசிரியர் முதற்கண் இருப்பை எடுத்துக் காட்டுகிறார்.

கட்டக் கழன்று கீழ்நான்று விழாமல்
அட்டத்தைக் கட்டி அடுப்பை அணைகோலி
விட்டத்தைப் பூட்டி மேற்பையைத் தாட்கோத்து
நட்ட மிருக்க நமனில்லை தானே. 799

இ—ள்: உடல், கட்டவும் தளர்ந்து கீழே தொங்கி விழாதவண்ணம் அண்ணுக்கில் கட்டி, அடுப்பாகிய குதத்தை அணைகோலி. புட்டமாகிய பின்பக்கத்தை அணையின் மேற்பூட்டி. உடலாகிற மேற்பையைக் கால்களைப் பின்னி மடக்கி. நேராக நிமிர்ந்திருக்க இறப்பில்லையாம் என்றவாறு.

உடம்பு கீழே வளைந்து தொங்காதவண்ணம், அண்ணுக்கை நிமிர்த்தி, அடுப்புப்போல முக்கோண வடிவினதாகிய குதத்தை அணையாகக் கோலிப் பூட்டி, காலைப் பின்னிப் பிணைத்து நேரே நட்டமாக இருக்க அழிவில்லையாம் என்பது கருத்து.

இதனை, பீசத்தின் கீழே சீவனிடத்துக் காற் பரட்டை வைத்து. முழங்கையை முழங்காலில் வைத்து அங்குலியை விரித்து. நாசியைப் பார்த்

திருப்பதாம் என்னும் யோகநூல். அதற்கும் இத் திருமந்திரத்திற்கும் உள்ள வேற்றுமையை ஓர்க (251)

வண்ணான் ஒலிக்குஞ் சதுரப் பலகைமேற்
கண்ணாறு மோழை படாமற் கரைகட்டி
விண்ணாறு பாய்ச்சிக் குளத்தை நிரப்பிட்டு
அண்ணாந்து பார்க்க அழுக்கற்ற வாறே. 800

இம் – எனின், ஆன்மாவை வண்ணானாகவும், நெற்றியைப் பலகையாகவும், சுழுமுனைத் தியானத்தைக் குளத்தை நிரப்புதல்போலவும் உருவகித்துக் கேசரி யோகத்தை விளக்குதல் நுதலிற்று.

இ - ள் : வண்ணான் வெளுக்கும் சதுரப் பலகை மேல் உள்ள வழிகளோடு கூடிய ஆற்றை மோட்டை போகாதவாறு கரைகளைக் கட்டி, மேனோக்கிய வழியாகச் செலுத்திக் குளத்தை நிரப்பிட்டு, அண்ணாந்து பார்க்க. அழுக்கு அற்றுப்போம் என்றவாறு.

வண்ணான் – ஆன்மா. சதுரப்பலகை - நான்கு ஞானேந்திரியங்கள் கூடுமிடமாகிய நீளநாற்கோண வடிவாகிய நெற்றி (புருவநடு). கண்ணாறு-கபாலத் தொளை, மோழைபடாமற் கட்டுதலாவது அதிற் சுரக்கின்ற அமுதப் பெருக்கு பலவழிகளால் ஒழுகி விடாதவாறு நாக்கின் நுனியை நாசித்துவாரத்தின் வழியாகப் புருவநடுவரை கொண்டுசென்று அமுத தாரணை செய்தல். விண்ணாறு பாய்ச்சுதலாவது மேல்நோக்கிப் பிராணனைச் செலுத்துதல். குளத்தை நிரப்புதல் – புருவ மத்தியத்தில் அமுதப்

பெருக்குத் தேங்கச் செய்தல். அண்ணாந்துபார்த்தல் - புருவ நடுவையே பார்த்திருத்தல். அழுக்கு - மலம்.

சிவஞானியர்க்கு, காட்சியெல்லாம் சிவராச யோகமாகவே காணப்படும். அவ்வண்ணமே, திருமூலதேவநாயனார் சிவயோகத்திலிருந்து கலந்த நிலையிலே வண்ணான் ஆடை வெளுப்பதைக் கண்டிருக்கிறார்கள். அச் செயலையும் அவனையும் நிலைக்களனாகக் கொண்டு கேசரியோகத்தின் நிலையை விளக்கியருளினார்கள். (252)

இடக்கை வலக்கை இரண்டையும் மாற்றித்
துதிக்கையால் உண்பார்க்குச் சோரவும் வேண்டாம்
உறக்கத்தை நீக்கி உணரவல் லார்கட்கு
இறக்கவும் வேண்டாம் இருக்கலு மாமே. 801

இ் - எனின், கேசரியோகம் வல்லார்க்கு இறப்பில்லை என்றல் நுதலிற்று.

இ- ள் : இடநாடி பிங்கலைநாடிகள் வழியாகப் பிராணவாயு நுகர்தலைமாற்றி, நடுவிலுள்ள துதிக்கையால் உண்ணவல்லார்க்குச் சோர்வுமில்லை. ஊணுறக்கம் புணர்ச்சி இவைகளை நீக்கித் தியானிக்க வல்லவர்களுக்கு மரணமில்லை; நிலைபேறுண்டாம் என்றவாறு.

துதிக்கை - நடுநாடியாகிய சுழுமுனை, இடக்கை - இடபக்க நாடியாகிய இடகலை. வலக்கை - வலப்பக்க நாடியாகிய பிங்கலை. உறக்கம் எனவே

ஏனைய உயிர்க்குணங்கள் மூன்றும் கொள்ளப்படும் அவையாவன ஆகாரம், நித்திரை, மைதுனம் என்பன. (253)

ஆய்ந்துரை செய்யின் அமுதம்நின் றூறிடும்
வாய்ந்துரை செய்யும் வருகின்ற காலத்து
நீந்துரை செய்யு நிலாமண் டலமதாய்
பாய்ந்துரை செய்தது பாலிக்கு மாறே. 802

இ - ளின் கேசரியோகத்தின் பயன் அமுத நிலையைக் காப்பாற்றிக்கொள்ளுதலே என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ — ள்: ஆராய்ந்து சொல்லுமிடத்து, அமுதம் நிலைபெற்று ஊறும். உரைசெய்யும் அது பொருந்தி வருகின்ற காலத்து, சந்திரமண்டலத்திலிருந்து மிகுதியாகப் பெருகும். இவ்வண்ணம் பாய்வதைக் காப்பதுவே இவ்யோகமாம் என்றவாறு.

இரண்டாமடி முதலுள்ள 'உரைசெய்யும்' என்பதற்கேற்ப மூன்றுமடியிலும், உறைசெய்யும் ஏனற்பாலது எதுகைநோக்கி உரைசெய்யும் என நின்றது.

ஆய்ந்து உரைசெய்யில், அமுதம் நின்று ஊறிடும், உரைசெய்யும் அது பொருந்தி வருகின்ற காலத்து, நிலா மண்டலமதாய் நீந்துரைசெய்யும்; பாய்ந்து உரை செய்தது பாலிக்குமாறு அது எனக் கூட்டிப் பொருள் காண்க. (254)

நாவின் நுனியை நடுவே சிவிறிடிற்
சீவனும் அங்கே சிவனும் உறைவிடம்
மூவரு முப்பத்து மூவருந் தோன்றுவர்
சாவதும் இல்லை சதகோடி யூனே. 803

இ - னின், நீடுவாழு முபாயமிதுவாம் என்றல் நுதலிற்று

இ - ள் : நாவின் நுனியைப் புருவமத்தியில் வீசினால், அவ்விடமே சீவனும் சிவனும் உறைவிடமாம். அங்கே முப்பெருந் தேவர்களும் முப்பத்து முக்கோடி தேவரும் தோன்றுவர்; மரணமில்லை. உடல் நூறு கோடி நீடுவாழும் என்றவாறு.

சிவிறிடில் - வீசினால். நடு - புருவமத்தி, சிவனும் சீவனும் கூடும் இடம் அதுவாம் என்றவாறு.

மூவரும் முப்பத்து மூவரும் - பிரம விஷ்ணு உருத்திரர்களும், முப்பத்து முக்கோடி தேவர்களும் தோன்றுவர்.

ஊன் சதகோடி சாவதுமில்லை - உடல் நூறு கோடி ஆண்டு அழிவதுமில்லை என்பதாம். (255)

ஊனூறல் பாயும் உயர்வரை உச்சிமேல்
வானூறல் பாயும் வகையறி வாரில்லை
வானூறல் பாயும் வகையறி வாளர்க்குத்
தேனூறல் உண்டு தெளிதலு மாமே. 804

இம் - எனின், அமுதமுண்பார் தெளிந்தவராவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று

இ - ள் : ஊனாகிய அமுதம் பாயும் உயர்ந்த மேருமலையுச்சியின்மேல், தேவகங்கை பாயும் உபாயத்தை அறியும் ஞானியரில்லை. அங்ஙனம் அதனை அறிவார்க்கு அமுதூறும்; அறிவுதெளியும் என்றவாறு

ஊனூறல் - ஊனிலிருந்து ஊறும் ஊனீராகிய அமுது. உயர்வரையென்றது உடலை. உடலை மேருவாக உருவகித்தல் சித்தர்மரபு. உச்சி-பிரமரந்திரம்.

வான் ஊறல் – தேவகங்கை. தேவகங்கை யென்றது புருவ மத்தியிலிருந்து பிரமரந்திரம் வரை வியாபிக்கும் நரம்புகளில் ஊறும் உணர்வு நீராம். இது சிவயோகியர்க்குப் புலனாவதாம்.

தேன் ஊறல் - தேன் போலும் இனிய ஊறலாகிய மதியமுதாம். இது பிரமரந்திரத்திலிருந்து குண்டலினி சென்று தாக்க ஊறுவது. இதனை உண்பவர்களுக்கு என்றும் அழிவில்லை; நிலைத்த மகிழ்ச்சியுமாம் (256)

மேலை யணாவில் விரைந்திரு காலிடிற்
காலனும் இல்லை கதவுந் திறந்திடும்
ஞாலம் அறிய நரைதிரை மாறிடும்
பாலனு மாவான் பராநந்தி ஆணையே. 805

இம் - எனின், சுழுமுனை திறக்கும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று

இ – ள் : மேல் அண்ணாக்கில் விரைந்து இடை, பிங்கலையாகிய இருகாற்றையும் செலுத்தின்

அங்ஙனம் செலுத்துவார்க்குக் காலன் இல்லை; கதவு திறக்கும்; உலகம் அறிய நரைதிரையும் மாறிவிடும். இளைஞனு மாவான். இது பரையோடு கூடிய நந்தியின் ஆணையாம் என்றவாறு.

அண்ணு - அண்ணுக்கு. இது அணு என விகாரப் பட்டது. இருகால்-இருவகையான காற்று. என்றது இருநாடிகளின் வழியாகவும் இயங்குகின்ற பிராணன். கதவு - சுழுமுனை நாடியின் வழி. (257)

நந்தி முதலாக நாமேலே யேறிட்டுச்
சந்தித் திருக்கில் தரணி முழுதாளும்
பந்தித் திருக்கும் பகலோன் வெளியாகச்
சிந்தித் திருப்பவர் தீவினை யாளரே. 806

இ-னின், நாக்கைப் புருவமத்தியில் பொருத்தி யிருக்கின் உலகமுழுதும் ஆளலாம் என்றல் நுதலிற்று.

இ - ள் : சிவபெருமானைக் காட்டும் உபகாரம் யுரியும் ஆசான் மூர்த்தியாகக்கொண்டு, அவன் காட்டியவழியே நாவினை மேலே ஏற்றி, புருவமத்தி யாகிய சித்சபையில் சந்தித்திருந்தால் அங்ஙன மிருக்கும் யோகி உலகம் முழுதையும் ஆளுவன். எல்லாவற்றையும் கட்டித் தன்வழி நடத்தும் சூரிய நாடி வழியாகப் பிராணன் வெளியாகச் சிந்தித் திருப்பவர் தீவினையாளர் ஆவர் என்றவாறு.

நந்தி – சிவன். முதலாக – முதல்வனாக; ஆசாரிய மூர்த்தியாக. ஆசாரியன் உதவியின்றிக் கேசரி

யோகம் கைகூடாதாகலின் அவன் காட்ட நாளை மேலே ஏற்றி என்றார். சந்தித்திருக்கின் என இடங் கூறிற்றிலர். அதிகாரத்தால். புருவநடு என்பது போதருதலின்.

பந்தித்திருக்கும் பகலோன் - உலக இச்சையில் அகப்படுத்தி ஆன்ம வியாபகத்தைத் தடுத்து நிற்கும் பிங்கலை வழியாக இயங்கும் பிராணன்.

வெளியாக-வலநாடியின் வழியாக வெளிப்பட. உச்சுவாச நிச்சுவாசஞ் செய்து இருப்பவர்கள் தீவினையாளர்கள் என்பதாம். (258)

தீவினை யாடத் திகைத்தங் கிருந்தவர்
நாவினை நாடின் நமனுக் கிடமில்லை
பாவினை நாடிப் பயனறக் கண்டவர்
தேவினை யாடிய தீங்கரும் பாமே. 807

இம் - எனின், வினையிட்டலை ஒழித்து, தெய்வப் பணிசெய்க என்றல் நுதலிற்று.

இ - ள் : தீவினைகள் தங்களை வெற்றிகொள்ள அறிவு மயங்கியிருந்த ஆன்மாக்கள் நாக்கை ஆராயின் நமனுக்கிடமில்லை. பரந்த வினைகளை ஆய்ந்து அவற்றால் விளையும் பயன்கள் ஒன்றுமில்லாமையை நன்கறிந்த மக்கள் தெய்வப்பணிகளைச் செய்ய அப் பணிகள் அவருக்குத் தீங்கரும்புபோல இனிமை பயப்பதொன்றும் என்றவாறு.

நாவினை நாடலாவது நாவினைப் புருவநடுவிலே வைத்துத் தியானித்தலாகிய கேசரியோகத்திருத்தல்

பா வினை - பரவிய வினை. நாடி - அவற்றையே நுகர்ந்து. தே வினை-சிவத்தொண்டு. ஆடிய-செய்ய. ஆடிய தேவினை என மாற்றிச் செய்த சிவத் தொண்டு எனலுமாம். (259)

தீங்கரும் பாகவே செய்தொழி லுள்ளவர்
ஆங்கரும் பாக அடையநா வேறிட்டுக்
கோங்கரும் பாகிய கோணை நிமிர்த்திட 808
ஊங்கரும் பாகியே ஊனீர் வருமே.

இம் - னின், கேசரி யோகத்தான் அமுதம் உண்ணலாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : இனிய கரும்பையொப்ப இனிமை யாகச் செய்யுந் தொழில்கள் உள்ளன. நாவை, பூமொட்டுப் போலக் குவித்து முழுதும் உயரத்தில் ஏற்றி, கோங்கரும்பு போலுந் தலையையுடைய பாம்பின் கோணலை நிமிர்த்தால் உடல் கரும்பு போல இனிப்புடையதாகி அமுதம் சுரக்கும் என்றவாறு.

உடலும், உள்ளமும் இனிக்கச்செய்யுந் தொழில் கள் உள்ளன. இனித்தலாவது சுவைக்கினித்தலோடு, நன்குறுதலுமாம். புருவ நடுவில் நாவினுனியை மடித்துக் குவித்து நாசியின்வழியாக புருவ நடுவிற்கு ஏற்றின் குண்டலினியென்னும் பாம்பானது மண்ட லித்துள்ள தன்மை நீங்கி அதுவும் புருவத்திற் சென்று சேரும்; அப்போது மதிமண்டலத் திலிருந்து அமுதமானது ஊறும் என்பதாம். (260)

ஊனீர் வழியாக வுண்ணாவை யேறிட்டுத்
தேனீர் பருகிச் சிவாய நமவென்று
கானீர் வரும்வழி கங்கை தருவிக்கும்
வானீர் வரும்வழி வாய்ந்தறி வீரே. 809

இ-ள் - எனின். அமுதநீர் சுரக்கும் வழிவகுத்தல் நுதலிற்று.

இ - ள் : ஊனீர் சுரக்கும் புருவவழியாக. உள் நாக்கை மேலே ஏறவிட்டு, அமுதுண்டு. சிவாயநம என்று, மணமுள்ள அமுதம் சுரக்கும் மதிமண்டலத்து, கங்கைபோலப் பொங்குகிற தேவநீர் வரும் வழியைப் பொருந்தி அறியுங்கள் என்றவாறு.

முற்கூறிய வண்ணம் கேசரியோகத்தில் சிவாய நம என்று தாரணை செய்யும்போது, பிரமரந்திரத்தில்மட்டும் வேர்வையுண்டாகி, கங்கைபோலப் பெருகும்; அந்த அநுபவத்தைக் கண்டறியுங்கள் என்றவாறும்.

இங்ஙனமன்றி மேல்வீட்டிலே நீராகிய கங்கை வருகின்ற வழியாகிய இடகலையில் நீர் சுரப்பதை அறியுங்கள் என்பாரும் உளர். தாரணையில் நின்ற போது மூக்கு நீரும் சுரக்கும் ஆதலின் இதனைக் கூறியதுமாம். (261)

வாய்ந்தறிந் துள்ளே வழிபாடு செய்தவர்
காய்ந்தறி வாகக் கருணை பொழிந்திடும்
பாய்ந்தறிந் துள்ளே படிக்கத வொன்றிட்டுக்
கூய்ந்தறிந் துள்ளுறை கோயிலு மாமே. 810

இ-ம் - எனின், மதிமண்டலத்தில் கோயிலாக்கும் முறை குறித்தல் நுதலிற்று.

இ-ள்: சிவத்தைப் பொருந்தி உணர்ந்து, புருவ நடுவில் பூசித்தவர்களைச் சிவம் மலமாயை கன்மங்களைச் சுட்டெரித்து, சிவஞானமே வடிவாகத் திகழக் கருணைபாலிக்கும். உள்ளே பரவித் தியானித்து, மீட்டும் குண்டலி கீழ்ப்படாத வண்ணம் வாசற்படியில் கதவொன்று இட்டு, குவிந்து தியானிக்க, இறைவன் உள்ளுறையத் தக்க கோயிலாம் இவ்வுடல் என்றவாறு.

சிவம் என எழுவாய் வருவித்து முடிக்க. மீட்டும் குண்டலி கீழ்ப்படாதவண்ணம் என்பது பொருளியைபிற்காக வருவித்து உரைக்கப்பட்டது. படிக்கதவு – வாயிற்படிக்கு இடப்படும் கதவு. வாயில் – பிரமரந்திர வாயிலாகிய சுழுமுனைச் சந்தி. கூய்ந்து – குவிந்து; மனம் ஒருங்கி. அறிந்து என்ற செய்தெனெச்சத்தைச் செயவெனெச்சமாக்குக. (262)

கோயிலின் உளளே குடிசெய்து வாழ்பவர்
தாயினும் நல்லார் தரணி முழுதுக்குங்
காயினும் நல்லவர் காய்த்தவர் தம்முளுந்
தீயினுந் தீயரத் தீவினை யாளர்க்கே. 811

இ-ம் - எனின், இறைவன் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: கோயிற் குடிசெய்து வாழ்பவராகிய இறைவன் அனைத்துலகிற்கும் தாயினும் நல்லவர்; சிலரைச் சினந்தாலும் நல்லவர்; சினக்கப்பட்டவர்களுள்ளும் தீவினையே செய்வார்க்குத் தீயினும் கொடியர் என்றவாறு.

கோயில் - உடலிலுள்ள உள்ளம். 'உள்ளம் பெருங் கோயில்' என்ற மந்திரப்பகுதியும் எண்ணுக. குடி செய்து என்பதால் குடியிருப்பதற் கேலாத பகைக்கூட்டங்களும், மலநிறைவும் இருந்தன. அவற்றை நீக்கிக் குடிசெய்தனர் என்ற கருணைப்புரிவும் உணர்த்துகின்றது.

தரணி முழுதுக்குந் தாயினும் நல்லவர் - உலகமனைத்தும் அவனுடைய கருணையால் வாழ் தலின் தாயினும் நல்லர் என்றருளியது. 'பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்துநீ பாவியேனுடைய ஊனினையுருக்கி உள்ளொளி பெருக்கி உலப்பிலா ஆனந்தமாய தேனினைச் சொரிந்து' என்ற மாணிக்கவாசக சுவாமிகளின் அநுபவமும் இணைத்து எண்ணற்குரியது. (263)

தீவினை யாளர்தஞ் சென்னியி லுள்ளவன்
பூவினை யாளர்தம் பொற்பதி யானவன்
பாவினை யாளர்தம் பாவகத் துள்ளவன்
மாவினை யாளர்தம் மதியினுள் ளானே. 812

இம் - எனின், இதுவும் இறைவன் எழுந்தருளி யிருக்கும் நிலைவேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: மூலாக்கினியை எழுப்பி வினைசெய்வார் களின் சிரத்திலுள்ளவன்; சகத்திராரமாகிய தாமரைப் பூவில் உள்ளவர்களுக்குப் பொன் போலும் தலைவனானவன்; இடைவிடாது பாவனை செய்தலாகிய வினை புரிவாரது பாவகத்தில் உள்ளவன்; பெருவினையாகிய சிவயோகம் செய் வார்க்கு அவர்தம் மதியுள் எழுந்தருளியிருப்பவன் என்றவாறு.

தீவினையாளர் - தீயில் வினைசெய்வார். அதாவது குண்டலினியாகிய மூலாக்கினியை எழுப்பி ஆகுதி செய்வார்; என்றது குண்டலினி தியான யோகிகளை. குண்டலினி சென்று முடியுமிடம் சென்னி யாகலின், சென்னியிலுள்ளார் என்றது "அஞ்செழுத்தால் குண்டலியிற் செய்தோமம் கோதண்டம் பாவகத்தின் ஆண்டான் சேடனார் அங்கு" என்ற சிவஞானபோத வெண்பாவை நோக்குக.

பூவினையாளர் - பூவில் வினைசெய்வார். பூ - சகஸ்திரதளத்தில் உள்ள ஆயிர இதழ்த் தாமரைப்பூ. அதில் சிவத்தைத் தியானிப்பார். பொற்பதி - பொன்றுனை தலைவன்.

பாவினை - பாவிக்கும் வினை; தியானம். பாவகம்-பாவனைமுற்றித் தான் பாவித்த பொருளாதல். தியானிப்பவர்களுடைய பாவகப்பொருளில் உள்ளவன்.

மா வினை - பெரிய தொழில்; என்றது சிவயோகத்தை. மதி - அறிவு; மதிமண்டலமுமாம். (264)

மதியி னெழுங்கதிர் போலப் பதிருய்ப்
பதிமனை நூறுநூற் றிருபத்து நாலாய்க்
கதிமனை யுள்ளே கனைகள் பரப்பி
எதிர்மலை யாமல் இருந்தனன் தானே. 813

இம்-எனின், சிவயோகியரின் சிவானுபவ நிலையை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சந்திரனிடமிருந்து எழும் கலைகளைப் போலப் பதிருய், பதிந்துள்ள மனையாகிய

உடலில் மூலாதார முதல் அநாகதம் வரை இரு நூற்றிருபத்து நான்கு ஒளிக்கதிர்களாய், நடக் கின்ற மனையாகிய உடலுள், கதிர்களாகிய கணை களைப்பரப்பி. எதிர்த்துப் போரிடாதபடி எழுந் தருளினன் என்றவாறு.

பதினாறு ஆய் - விசுத்தித்தானத்து பதினா றிதழ்க் கமலத்துள் ஆய் என்றவாறு.

மூலாதாரம் முதல் அநாகதம் வரை ஒளிவிடும் சூரியகிரணங்கள் இருநூற்று இருபத்து நான்கா தலைத் தெரிவிப்பது, பதிமனை நூறு நூற்றிருபத்து நாலாய் என்பது.

கதி மனை — உயிரிருத்தற்குக் கதியாம் மனையா கிய உடலுள். கணைகள் — அம்பு. அம்பாவது ஊனீராகிய அமுதம், உச்சிமுதல் உள்ளங்கால்வரை அமுதமழையைச் சொரிந்து. எதிர்மலையாமல் - எதிர்த்து வருத்தாமல். ஆன்மாநுபவத்தோடு ஒத்தியங்கி இருந்தான் என்க. (265)

இருந்தனள் சத்தியு மக்கலை சூழ
இருந்தனள் கன்னியு மந்நடு வாக
இருந்தனள் மானேர் முகநில வார
இருந்தனள் தானும் அமுதம் பொழிந்தே. 814

இ-ம் - னின், மதிமண்டலத்துப் பராசத்தியின் விளக்கம் உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : பராசத்தியும், மதிமண்டலத்துப் பதினாறு கலைகளும் சூழ எழுந்தருளினள். அந்த நடுவாகிய புருவ மத்தியில் கன்னியாகிய பராசத்தி

இருந்தனள். மான்போன்றவளாகிய பராசத்தி திருமுக மண்டலத்திலிருந்து நிலவொளி பொழிய அமுதம் பொழிந்து கொண்டு இருந்தனள் என்றவாறு.

இவ்வண்ணம் சத்தியின் விளக்கத்தை வேறு வேருகக்கூறியது தன்னநுபவம் ஒரு காலைக் கொருகால் மிகும் அருமையை அறிவிக்க. (266)

பொழிந்த இருவெள்ளி பொன்மண் ணடையில்
வழிந்துள் ளிருந்தது வான்முத லங்குக்
கழிந்தது போகாமற் காக்கவல் லார்க்குக்
கொழுந்தது வாகுங் குணமது தானே. 815

இ-ள்-எனின்; *அமுததாரணையின் பயன் உணர்த்துதல் நுதலிற்று.*

இ-ள்: கேசரியோகத்தால் உள்ளே வழிந்து எங்கும் பரவியிருந்ததாகிய பெருக்கெடுத்துப் பொழிந்த பெரிய அமுதம் பொன்நிறமான பிருதிவியையடைந்து வீணே கழிந்துபோகாமல் காக்க வல்லவர்களுக்கு என்றும் உடல் கொழுந்தாகும்; இதுவே இவ்வியோகத்தின் பயனும் என்றவாறு.

உள்ளிருந்தது பொழிந்த இருவெள்ளி பொன் மண் அடையில் கழிந்ததுபோகாமல் காக்கவல் லார்க்கு (உடல்) கொழுந்ததுவாகும்; குணம் அது தானே எனக்கூட்டிப் பொருள் காண்க.

இருவெள்ளி என்றது பெருமைதரும் வெண்ணிற மான மதிமண்டலத்தூறும் அமுதமாம். பொன்மண் -பிருதிவிக்கு நிறம் பொன்மையாதலின் இங்ஙனம்

கூறியது. வான்முதல் என்றது பிரமாந்திரமுதல் என்றவாறு. பிருதிவி என்றது மூலாதாரத்தை.

அமுதம் உச்சிமுதல் உடலெங்கும் பரவி, மூலாதாரத்தில் தங்கிறல். அதனைக் கழிந்துவிடாதவாறு பாதுகாக்கவல்ல யோகிகளின் உடல் தளிர்போல என்றும் விளங்குவதாம் என்பது கருதது. (267)

குணமது வாகிய கோமள வல்லி
மணமது வாக மகிழ்ந்தங் கிருக்கில்
தனமது வாகிய தத்துவ ஞானம்
இனமது வாக இருந்தனன் தானே. 816

இ-ள் - எனின், திருவருட் சத்தியோடு கூடின பேர்க்குத் தத்துவ தரிசனம் முதலியன சித்தியாம் என்றல் நுதலிற்று.

இ-ள்: பொருளின் குணம்போல அபின்னையாயிருக்கிற பேரழகுடைய கொடிபோல்வாளாகிய சத்தி திருமணங்கொள்ள, கேசரியோகத்திருக்கின், பேறாகிய தத்துவஞானம் தமக்கு உறவாக யோக சீவன் இருந்தான் என்றவாறு.

குணத்திற்கும் பொருளுக்கும் உள்ள சம்பந்தம் பிரிக்கமுடியாதது. ஆகலின் அதுபோல் குண குணியாக ஆன்மாவினிடம் ஒன்றாய் விளங்கும் திருவருட்சத்தியென்பார், குணமதுவாகிய கோமள வல்லி என்று அருளினர்.

மனமதுவாக என்றது, அச்சத்தி யோகத்தான் வெளிப்பட்டு யோகியோடு என்றும் உடனாய்க் கூடியிருக்க என்றவாறாம்.

தனமதுவாகிய தத்துவஞானம் இனமதுவாக — பெத்தகாலத்து இதுவரை தனம்போலப் போக்கிய மாக இருந்த தத்துவக்கூட்டங்கள், தடைத்தன்மை நீங்கிச் சிவயோகத்திற்குத் துணைசெய்ய. (268)

இருந்த பிராணனும் உள்ளே எழுமாம்
பரிந்தஇத் தண்டுடன் அண்டம் பரிய
விரிந்தஅப் பூவுடன் மேலெழ வைக்கின்
மலர்ந்தது மண்டலம் வாழலு மாமே. 817

இம் - எனின், பிராணனை மதிமண்டலம் வரையிற் செலுத்தும் யோகிக்கு நித்தியத்துவம் உண்டாம் எனல் நுதலிற்று.

இ - ள்: மூலாதாரத்திற்கிடந்த பிராணவாயுவும், உள்ளே நடுநாடியின் வழியாக மேலெழும். உடலைத் தாங்கியுள்ளதாகிய அண்டமுகடாகிய பிரமரந்திரத்தைச்சேர, அங்கே மலர்ந்துள்ள சகத்திரதள பத்மத்துடன் மேலெழவைத்தால், மதிமண்டலம் மலரும்; நீண்டகாலம் வாழலாம் என்றவாறு.

இருந்த பிராணன் — யோகப் பயிற்சியின்மையான் மூலாதாரத்திலேயே சுருண்டு கிடந்த பிராணன். பிராணன் என்றது ஈண்டு ஆன்மாவை. பரிந்த இத்தண்டு என்றது முதுகந்தண்டை. அண்டம் - பிமரந்திரம். பரிய — செல்ல, விரிந்த அப்பூ - யோகத்தான் மலர்ந்த ஆயிரவிதழ்த் தாமரை. மண்டலம் — மதிமண்டலம். கேசரியோகத் திலிருப்பார் நீட எடுத்த உடலுடனேயே வாழ்வர் என்கின்றது இம்மந்திரம். (269)

மண்டலத் துள்ளே மனவொட்டி யாணத்தைக்
கண்டகத் தங்கே கருதியே கீழ்க்கட்டிற்
பண்டகத் துள்ளே பகலே ஒளியாகக்
குண்டலக் காதனுங் கூத்தொழிந் தானே. 818

இ-ளின், ஒட்டியாண பந்தத்தா லுறுபயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மதிமண்டலத்து உள்ளேயே பிராணன் என்றும் பொருந்தியிருக்க ஒட்டியாண பந்தத்தைச் செய்து பிராணன் கீழ்ப்போகாவாறு கட்டினால். பட்டசாலையில் சூரியஒளி விளங்க, குழைக்காதனாகிய கூத்தப்பெருமானும் அசைவற்று விளங்குவார் என்றவாறு.

மன - மன்ன என்பதன் விகாரம்; நிலைபெற என்பது பொருள். ஒட்டியாணம் - ஒட்டியாண பந்தம். சுழுமுனை நாடியில் பிராணன் கட்டுப்பட்டுப் பறப்பதால் இது உட்டியாணபந்தம் எனப் பெயர் பெற்றது. உட்டீயநம் - பறத்தல்.

बद्धेमयेन सुषुम्नायां प्राणस्तुड्डीयतेयतः ।
तस्मादुड्डीयनाख्योयं योगिभिः समुदाहृत ॥

என்னும் யோககுண்டலினி வாக்கியத்தாலும் இதன் பொருள் உணர்க.

ஒட்டியாணபந்தமாவது வயிற்றில் நாபியின் மேற் பாகத்தையும் கீழ்ப்பாகத்தையும் முதுகோடு ஒட்டும் படிப் பின்னிழுத்தலாம். இது குருவினால்

உபதேசிக்கப்பட்ட பின்னரே செய்யத்தக்கது. இதனை ஆறு மாசம் பயின்றால் மரணமில்லை.

उदरे पश्चिमंतानं नामेरूर्ध्वंच कारयेत् ।
उड्डीयानोह्यसौबन्धो मृत्युमातंग केसरी ॥
उड्डीयानंतु सहजं गुरुणाकथितंसदा ।
अभ्यसेत्सततं यस्तु वृध्दोऽपि तरुणायते ॥

எனத் தியானபிந்துவில் கூறப்பட்டுள்ளமையும் ஓர்க. அகத்துக் கண்டு அங்கே கருதி கீழ்க்கட்டில் எனக் கூட்டுக. பண்டகம் பட்டகம் என்பதன் திரிபு. பட்டகம் – இக்காலத்துப் பட்டசாலையென வழங்குவது ஈண்டு பிரமரந்திரத்தை உணர்த்திற்று. பகல் ஒளியாக – சூரியன்போலும் ஒளியை உடையதாக. கூத்து ஒழிந்தான் என்றது பஞ்சகிருத்தியங்களையும் செய்வதாகிய ஆட்டத்தையொழிந்து அந்த யோகியின் சித்தத்துள்ளே ஆனந்தமாகத் தங்கினான் என்பன கருத்து. (270)

ஒழிகின்ற வாயுவும் உள்ளே அமருங்
கழிகின்ற வாயுவும் காக்கலு மாகும்
வழிகின்ற காலத்து வட்டக் கழலைப்
பழிகின்ற காலத்துப் பையகற் றீரே 819

இம் - என்னி, இதுவும் கேசரியோகத்தின் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சகத்திராரத்தில் ஊறி மதியமுதம் வழிகின்றகாலத்து வட்டவடிவான மூலாதாரத்திலுள்ள குண்டலினியை, நடுநாடியின் உட்டுளை வழியாக

ஏற்றி, பழிக்கப்படுகின்ற காலத்து அதன் படத்தை அகற்றுங்கள். அதனுல், ரேசகமாக வெளிப்படுகின்ற பிராணவாயுவும் அங்ஙனம் கழியாது உள்ளே தங்கும். கழிகின்ற ஆயுளையும் கழியாதவண்ணம் காக்கலாம் என்றவாறு.

வழிகின்ற என்ற வினைக்கேற்ப மதிமண்டல மாகிய சகத்திராரத்தின்று என இடம் வருவித் துரைக்கப்பட்டது.

வட்டக்கழலை வட்டவடிவமான பாம்பு. கழலை - ஒருவகைப்பாம்பு. இக்காலை வழலை என வழங்கு கிறது. பழிகின்ற காலத்து - பழிக்கப்படுகிற காலத்து என்பதன் திரிபு, பை - படம். மதிமண்ட லத்து அமுதம் ஊறுகின்ற காலத்து, அது வழிதற்கு ஏதுவாகிய, குண்டிலினியை அடக்கின், பிராணனி யக்கம் தடை படும்; ஆயுள்வளரும் என்பதாம். 271

பையினி னுள்ளே படிக்கத வொன்றிடின்
மெய்யினி னுள்ளே விளங்கும் ஒளியதாங்
கையினுள் வாயுக் கதித்தங் கெழுந்திடின்
மையணி கோயில் மணிவிளக் காமே. 820

இ்ம் - எனின், மூலபந்தத்தால் பிராணுபானன் களை இணைத்து அக்கினிமண்டலத்திலே அக்கினியை எழுப்பு முறையைச் சொல்லுதல் நுதலிற்று.

இ - ள் : உடலுள். மூலாதாரக் கதவாகிய குதத்தை இறுக்கிப்பிடித்தால் உடலுள் ஒளி விளங்கும். வசப்பட்ட பிராணவாயு ஒலித்துக் கொண்டு மேலெழும்; பின், ஆணவாதி மலங்களை

அணிந்த கோயிலாகிய உடம்பில், இரத்தினதீபம் போலச் சிவம் பிரகாசிக்கும் என்றவாறு.

பை - தோற்பையாகிய உடல். படி- பூமியாகிய மூலாதாரம். அதன் கதவு-அதன் வாயிலையடைக்கும் கதவாகிய குதம். ஒன்றிடலாவது அதன் வாயைத் தன் இரு குதிகாலாலும் மறைத்து இறுகச்செய்தல், இதனையே மூலபந்தம் என்னும் முத்திரையாம் என்னும் யோகநூல்கள், மூலபந்த முத்திரையால் குதத்தையிறுக்கி அபானனையும் பிராணனோடு கலக்கச்செய்து, சுழுமுனைவாழியாக மேலெழுப்பன் அது இருதயம் கண்டம் புருவநடு இவற்றைக் கடந்து உச்சியை அடைகிறது. அப்போது ஒளி தரிசனமாம். இதன் விளக்கத்தை, குதியால் யோனியைச் செவ்வையாகப் பிடித்துக் குதத்தைச் செவ்வையாகச் சுருக்கவேண்டும்: கீழ்ச்செல்லும் வாயுவாகிய அபானனை மேலிழுத்தலால் மூலபந்தம் சொல்லப்படுகிறது என்னும் கருத்து அமைந்த,

पार्ष्णिभागेन संपीड्य योनिमाकुञ्चयेत्कुदम् ।
अपानमूर्ध्वं माकृष्य मूलबन्धोऽभिधीयते ॥

என்ற யோகசூடாமணி சுலோகத்தானும்,

अधोगतिमपानंवै ऊर्ध्वगं कुरुतेबलात् ।
आकुञ्चनेनतंप्राहः मलबन्धां ह्ियोगिनः ॥

என்ற யோககுண்டலினி யுபநிஷத் வாக்கியதானும் தெளிக.

மெய்யினினுள்ளே விளங்கும் ஒளியதாம் என்பதன் கருத்தை,

अपाने ऊर्ध्वगेजाते प्रयाते वह्निमण्डलम् ।
तदानल शिखा दीर्घा जायते वायुनाऽऽहता ॥

என்னும் தியானபிந்து சுலோகத்தானும் தெளியலாம்.

கையினுள் வாயு கதித்து அங்கு எழுந்திடின் என்பது இவ்வண்ணம் கையகப்பட்ட வாயுக்கள் ஒலித்து எழின் என்பதை விளக்கிற்று. இக்கருத்து, பிராணாபான வாயுக்களும், நாதவிந்துக்களும் (அநாகதத் துவனியும் அனுஸ்வார ஒலியும்) ஐக்கியத்தை அடைந்து யோகசித்தியைத் தருகின்றது என்னும் பொருள் அடங்கிய,

प्राणापनौ नादविन्दू मूलबन्धेनचैकताम् ।
गत्वा योगस्य संसिद्धि यच्छतोनात्र शंशयः ॥

என்னும் யோக சிகோபநிஷத் வாக்கியத்தாலும் அறியப்படுவதாம்.

மை - மலம். மையணி கோயில் - மலமாயா சமகாரியமான உடல். உடலுக்குள் விளங்கும் இரத்தின தீபமாம் சிவன் என்றவாறு. (272)

விளங்கிடும் வாயுவை மேலெழ உன்னி
நலங்கிடுங் கண்டத்து நாபியி னுள்ளே
வணங்கிடு மண்டலம் வாய்த்திடக் கும்பிச்
சுணங்கிட நின்றவை சொல்லலு மாமே. 821

இ-ள். ஜாலந்திர ஒட்டியாண முத்திரைகளுடன் கேசரியைச் செய்தலால் வரும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : விளங்கும் பிராணனைச் சுழுமுனை வழியாக மேலே கிளம்பத் தியானித்து, சுருங்குகின்ற கழுத்து நாபி இவற்றுள், அனைவரும் வணங்கத்தக்கவாறு மண்டலமாகும்வண்ணம் கும்பகஞ்செய்து, அவ்வத் தானங்கள் வற்றிடும்படிச் செய்ய, அங்கே நிலைபெற்ற அனுபவங்களைச் சொல்லலும் ஆகுமே; ஆகாது என்றவாறு.

விளங்கிடும் வாயு - மூலத்தலத்துள் விளங்கும் பிராணன். மேல் எழ உன்னி - இடநாடி வலநாடி வழியாகவன்றி நடுநாடி வழியாகப் பிரமரந்திரம் செல்லும் சுழுமுனை வழியாக மேல்எழ எண்ணி.

நலங்கிடும் - சுருங்குகின்ற. சுருங்குகின்ற நாபி சுருங்குகின்ற கண்டம் என்பன ஜாலந்திரபந்தமும். ஒட்டியாணபந்தமும் ஆகிய இவற்றை உணர்த்தின.

ஜாலந்திரபந்தமாவது, கழுத்திலுள்ள துவாரத்தைச் சுருக்கி, மார்பின் சமீபத்தில் நாலங்குல மிடையிருக்கும்படி மோவாய்க்கட்டையை ஸ்தாபித்தலாம். இது நாடிகளைக் கட்டுப்படுத்தும்; மதிமண்டலத்தமுதம் கீழே ஜாடராக்கினியில் விழாதவண்ணம் தடுக்கும். இதன் விளக்கங்களை,

कण्ठमाकुञ्च्य हृदये स्थापयेत्चिबुगंदृढम् ।
बन्धोजालंधराख्योयं जरामृत्यु विनाशकः ॥

बन्धाति हि सिराजालं अधोगामिनभोजलं ।
ततोजालंधरोबन्धः कण्ठदुःखौघ नाशनः ॥

என்னும் தியானபிந்து வாக்கியங்களைக்கொண்டும் அறியலாம்.

ஒட்டியாணபந்த முத்திரை யிலக்கணம் முன்னரே உரைக்கப்பட்டது.

வணங்கிடு மண்டலம் வாய்த்திட அனைவரும் வணங்கும் மண்டலமாகிய ஆஞ்ஞை பொருந்த. கும்பிச்சு - கும்பித்து என்பதன் மரூஉ.

உணங்கிட் நின்றவை சொல்லலும் ஆமே - வளர நின்ற அனுபவங்களைச் சொல்லமுடியுமா? முடியாது என்பதாம். அனுபவங்களை.

जालंधरेकृतेबन्धे कण्ठ संकोच लक्षणे ।
नपीयूषं पतत्यग्नौ नचवायुः प्रकुष्यते ॥

என்னும் சுலோகத்தான் அறிக. (273)

சொல்லலு மாயிடு மாகத்து வாயுவுஞ்
சொல்லலு மாகு மண்ணீர்க் கடினமுஞ்
சொல்லலு மாகும் இவையஞ்சுங் கூறிடிற்
சொல்லலு மாந்தூர தெரிசனந் தானே. 822

இம் - எனின், ஐம்பூதங்கள் உடலுள் சேர்வதால் தூரதரிசனமாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று

இ - ள் : சொல்லப்படுகின்ற வானும், வாயுவும், மண்ணும், நீரும், கொடியதான தீயும் ஆகிய இவை ஐந்தும் கூடினால் தூரதிருட்டி உண்டாம் என்றவாறு.

பிராணவாயு, உடலினுள் முழந்தாள்வரையுள்ள பிருதிவி மண்டலத்தும், அதற்குமேல், அடிவயிறு வரையுள்ள அப்பு மண்டலத்தும், அதற்கு மேல் மார்பு வரையுள்ள தேயுமண்டலத்தும், அதற்குமேல் மூக்கினடிவரையுள்ள வாயு மண்டலத்தும், அதற்கு மேல் உச்சி வரையுள்ள ஆகாயமண்டலத்தும் கூடி வியாபித்திருப்பின் தூர தரிசனம் ஆம் என்பது கருத்து.

தூர தரிசனமாகவும் ஐம்பூதத்திலும் பிராணன் வியாபித்தலைப் பிண்டத்தில் தரிசிப்பவன், அண்டத்திலும் நெடுந்தூரத்து நிகழ்ச்சிகளையும் இருந்த நிலையிலிருந்தே அறிவான் என்பதாம். (274)

தூர தரிசனஞ் சொல்லுவன் காணலாங்
காராருங் கண்ணி கடைஞான முட்பெய்தி
ஏராருந் தீபத் தெழிற்சிந்தை வைத்திடிற்
பாரா ருலகம் பகன்முன்ன தாமே. 823

இம் – எனின், தூரதரிசனம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : தூரதரிசனத்தைப் பற்றிச் சொல்லுவேன் நீங்களும் காணலாம். கருமைநிறம் பொருந்திய கண்களையுடைய திருவருட்சத்தியைப் பொருந்துதலாகிய முடிவாகிய ஞானத்தை

மனத்துள் நிறுத்தி, எழுச்சியும் அழகும் நிறைந்த தீபசிகைபோன்ற சிவத்திடத்தில் அழகிய சிந்தையைப் பதித்திருந்தால், பூமியும் ஏனைய உலகங்களும் பகற்காலத்தில், காணப்படுவதுபோல நன்ருய் விளங்கும் என்றவாறு.

காராருங்கண்ணி கடைஞானம் - திருப்பெருகு சிவஞானம்; இது, திருவருட்சத்தி பதிவதால் விளையும் முடிந்த ஞானமாதலின் இங்ஙனங் கூறப்பெற்றது. தீபம் என்றது சிவத்தை. சிவஞானத்தால், சிவத்தைத் தரிசிக்கின் உலகம் முதலியன பகற்காலத்து விளங்குவனபோல விளங்கும்; என்றது, ஆன்மா சிவத்தைச் சார்ந்தபொழுது, இதுவரை ஒன்ருய் ஊடாடிய உலகம் வேருய், தூரியதாய் காணப்படும் என்றவாரும். இது, தத்துவரூபம் முதல் சிவதரிசனம்வரையுள்ள எட்டு அவத்தைகளை அறிவித்ததாம். (275)

முன்னெழு நாபிக்கு முந்நால் விரற்கீழே
பன்னெழு வேதப் பகலொளி யுண்டென்னும்
நன்னெழு நாதத்து நற்றீபம் வைத்திடத்
தன்னெழு கோயில் தலைவனு மாமே. 824

இம் - எனின், சிவயோகமும் சிவபோகமும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : முன்னே எழுகின்ற கொப்பூழுக்குப் பன்னிரண்டு விரலளவிற்குக் கீழே, பகல்போலும் ஒளி ஒன்று உண்டென்று, எல்லாவற்றையும் விலக்கி எழுகின்ற வேதமானது சொல்லுகின்றது. நன்மை எழும்புகின்ற நாதத்தினிடமாக, நல்ல

தீபத்தை வைத்தால் ஆன்மாவாகிய தன்னிடம் எழுகின்ற கோயிலில் சிவம் பிரகாசிக்கும் என்ற வாறு.

நற்றீபம் வைத்திட என்றது. சிவயோகத்தை யும், தலைவனுமாம் என்றது தலைவனை அழுந்தி அனுபவித்தலாகிய சிவபோகத்தையும், உணர்த்தின.

நாபிக்குப் பன்னிரண்டு விரற்கிடைக் கீழே பகல் போலும் ஒளியுண்டென்று வேதங்கள் சொல்லுவதை யாக்ஞவல்கியரும், 'தேகமத்தியில் அக்கினிமண்டலம் சாம்பூநதப் பொன்னிறமுள்ள தாய் மனிதர்கட்கு முக்கோணமாயும், விலங்கு கட்குச் சதுரமாயும். பட்சிகளுக்கு வட்டமாயும் இருக்கிறது; இதன் நடுவில் எப்போதும் அக்கினி சிகை பரவியிருக்கிறது என்று சொல்லுகிறார். இதுவும் அக்கருத்தை நன்கு விளக்குதல் காண்க.

பன்னெழு வேதம்: பன்னி எழுகின்ற வேதம். பன்னுதல் - பலகாலும் சொல்லுதல். நன்னெழு நாதம்; நன்னு எழு நாதம்; உகரம் சாரியை; நன்மை விளைகின்ற நாதத்தானமாகிய புருவமத்தி யில். நற்றீபம் என்றது சிவத்தை. இதனையே அப்பர்சுவாமிகளும்.

"இல்லக விளக்கது இருள்கெடுப்பது
பல்லக விளக்கது பலருங் காண்பது
சொல்லக விளக்கது தூய்மை உள்ளது
நல்லக விளக்கது நமச்சி வாயவே"

என்று அருளிச்செய்வார்கள்.

தன்னெழுகோயில் - ஆன்மாவாகிய தன்னில் எழுகின்ற கோயில். இதனையே திருமூலதேவர் 'உள்ளம் பெருங்கோயில்' என்றது. தீபம் வைக்க - தீபம் பட்ட பொருளெலாம் ஒளிமயமாதல் போலச் சிவத்தீபத்தை ஏற்ற ஆன்மாவும் அதன் மயமாய்ச் சிவமாயிற்று என்பதாம். (276)

## 19. பரியங்கயோகம்

அஃதாவது முழந்தாள்கள் இரண்டின்மேலும் கைகளை நீட்டிப்படுத்துக்கொண்டுயோகிருத்தலாம். பரியங்கம் - கட்டில், கட்டில்மேல் இருந்து போகித் தலையே யோகமாகச் செய்யும் உபாயம் இதுவாம். கேசரியோகம் உணர்த்திய ஆசிரியர், பரியங்கி யோகத்தையும் இருபது திருமந்திரங்களான் உணர்த்திய எடுத்துக்கொண்டார்: அவற்றுள் முதல்திருமந்திரமாகிய இது பரியங்கி யோகத்தின் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

பூசு வனவெல்லாம் பூசிப் புலர்த்திய
வாச நறுங்குழல் மாலையுஞ் சாத்திய
காயக் குழலி கலவி யொடுங்கலந்
தூசித் துளையுறத் தூங்காது போகமே, 825

இ - ள்: பூசத்தகுவனவான மயிர்ச்சாந்து புனுகு கத்தூரிகளைப் பூசி உலர்த்தப்பெற்ற வாசனை யோடு கூடிய கூந்தலில் நறுமலர் மாலையையும் சூட்டிக்கொண்ட, இச்சையால் மனத்தை வெதுப்பு கின்ற பெண்ணோடு கலவியிலே கலந்து ஊசித்துளை யுட் பொருந்த போகம் தளராது என்றவாறு.

காயகுழலி என்றது குண்டலினி சத்தியை. ஊசித்துளை என்றது சுழுமுனையை. குண்டலியைக் கிரந்திகளைத் தாண்டிப் பிரமரந்தரம் வரையிற் கொண்டு போகப் பேரின்பம் விளையும் என்பதாம். குண்டலியைக் காயக்குழலி என்று உருவகித்தமைக் கேற்பக் கலவித்தொழிலுக்குப் பொருந்த, பூசுவன பூசி என்பது முதல், சாத்திய என்பது வரையிலுள்ள அடைமொழிகளைப் புணர்த்தோதினர். (277)

போகத்தை யுன்னவே போகாது வாயுவும்
மோகத்தை வெள்ளியு மீளும் வியாழத்தில்
சூதொத்த மென்முலை யாளுநற் சூதனுந்
தாதிற் குழைந்து தலைகண்ட வாறே. 826

இம் - எனின், ஆன்மாவும் சித்சத்தியும் கூடிப் போகத்தை உன்ன, பிராணன் இயங்காது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: மேற்கூறியவாறு போகத்தை எண்ணப் பிராணவாயு இயங்காது. சூதாட்டக்கருவியை ஒத்த மெல்லிய நகிலை உடையவளாகிய சத்தியும், நல்ல சூதனாகிய சிவனும், மோகத்தை விளைவிப்பதாகிய வெள்ளியும், மீளுந்தன்மை வாய்ந்த வியாழமு மாகிய தாதில் குழைந்து அறிந்தவாறு இப்போக மாம் என்றவாறு.

மென்முலையாள் - சத்தி. சூதன் – சிவன். வெள்ளி – வெண்ணிறமாகிய விந்து. வியாழம் – பொன்னிற மாகிய நாதம். நாதவிந்துக்களாகிய

தாதில் குழைந்து தலைக்கண்டதே போகம். நாத மாகிய சிவமும், விந்துவாகிய சத்தியும் கூடிய நிலையை யோகக்காட்சியில் காண்டலே பரியங்கி யோகப்பயனும். யோகிபாஷையில், விந்துவை ரசமென்றும் நாதத்தைக் கந்தகமென்றும் வழங்குவர். ரசகந்தகங்களின் சேர்க்கையால், போகக்கட்டு ஏற்படுமென்பது வைத்தியநூல் துணிபும் ஒருவாற்றான் அறியக்கிடக்கின்றது. (278)

கண்டனுங் கண்டியுங் காதல்செய் யோகத்து
கண்டலங் கொண்டிரு பாலும் வெளிநிற்கும்
வண்டியை மேற்கொண்டு வானீர் உருட்டிடத்
தண்டொரு காலுந் தளராது வங்கமே. 827

இம் - எனின், இதுவுமது.

இ-ள் · ஜாலந்திர பந்தத்தால் சுருக்கப்பட்ட கழுத்தையுடைய ஆடவனும் பெண்ணும், காதல் செய்கின்ற யோகத்தில், மண்டலித்து இரண்டு பக்கமும் வெளியே நிற்கிற வண்டியை மேலே செலுத்தி ஆகாயகங்கையை உருட்டத் தண்டு ஒருகாலும் தளராது; போகக்கடலின் கரைசேரப் பெரும்புணையாம் என்றவாறு

கண்டன், கண்டி - ஜாலந்திர மந்திரத்தால் இடை பிங்கலை நாடிகளைச் சுருக்கிய ஆணும் பெண்ணும்.

காதல் செய் யோகத்து - விரும்புகின்ற பரியுங்கி யோகத்தில்: புணர்ச்சியில் என்று வேறும் ஒரு பொருள் தொனித்தல் காண்க.

மண்டலங்கொண்டு – மண்டலித்து; மதிமண்டலம், சூரியமண்டலமாகிய இருமண்டலங்களிலும் கடந்து. வட்டமாக ஒருவரை யொருவர் தழுவி என வேறு பொருளும் தொனித்தல் காண்க.

இருபாலும் வெளி நிற்கும் வண்டியை மேற்கொண்டு: வலமும் இடமுமாகிய இருபக்கமும் வெளி நிற்கும் வண்டிகளாகிய இடகலை பிங்கலையைக்கட்டி. மார்பகத்து வெளியாக விம்மி நிற்கும் வட்டமாகிய நகிலைத் தீண்டி என வேறு பொருளும் தொனித்தல் காண்க.

வான் நீர் உருட்டிட: ஆஞ்ஞா சக்கரத்து மதி மண்டலத்து ஊறும் அமுதமாகிய கங்கையை உருண்டு ஓடிவரச்செய்ய; அதாவது அமுதம் பெருக்கி என்பதாம். தூய்மையாகிய பாலொடு தேன் கலந்தாற் போன்ற வாலெயிறு ஊறிய நீரை உருட்டிட என்றும் வேறும் ஒரு பொருள் தொனித்தல் காண்க.

தண்டு ஒருகாலும் தளராது; உடலும் நரை திரையால் தளர்ச்சி அடையாது. ஆண்குறி விந்து கழலாக வரையில் தளர்ச்சியடையாது என்று வேறும் ஒரு பொருள் தொனித்தல் காண்க.

வங்கம் - தோணி. சிவபோகத்தழுந்திச் சிவனடியைச் சேர்தற்குரிய தோணியாம். காமக்கடலை நீந்தி, போகக்கரையை அடைதற்குரிய புணையாம் என வேறும் ஒரு பொருள் கொள்ளக்கிடத்தல் காண்க. ஆகவே இத்திருமந்திரத்தால் சிற்றின்பம் உணர்த்துவார்போலப் பேரின்பம் உணர்த்திச் சகல நிலையில் உள்ளாரையும் சுத்தநிலைக்கு உய்க்க உணர்த்தியதாம் என்று உணர்க. (27)

அங்கப் புணர்ச்சியு மாகின்ற தத்துவம்
அங்கத்தில் விந்து வருகின்ற போகத்துப்
பங்கப் படாமற் பரிகரித்துத் தம்மைத்
தங்கிக் கொடுக்கத் தலைவனு மாமே. 828

இ-ம் - எனின், அமுதைப் பாதுகாப்பத னவசியத் தினை அறிவித்தல் நுதலிற்று.

இ—ள் : குண்டலினி சக்தியோடு கூடுகின்றதன் தத்துவம் ஒவ்வோரங்கங்களிலும் விந்து பரவுகின்ற போகத்திலே, அவ்விந்து சிதறுவண்ணம் காத்து, தம்மிலே தங்கும்படியாகச் செய்ய, அவ்யோகி சிவமாவன் என்றவாறு.

அங்கு அப்புணர்ச்சியும் ஆகின்ற தத்துவம்: அங்கு மேற்கூறப்பட்ட அக்கலவியாகிற உண்மை; அதாவது கண்டனும் கண்டியும் காதல்செய் யோகமாம்.

அங்கம் - உடல். விந்து அங்கத்தில் வருகின்ற போகம் - உச்சியில் ஊறி அங்கம்முழுதும் பரவு கின்ற போகம்.

பங்கப்படுதலாவது கழிந்து சிதறி வீணுதல். பரி கரித்து - காத்து. தம்மைத் தங்கிக் கொடுக்க - தம்மால் தங்கும் வண்ணம் காக்க.

தலைவனும் ஆம்: விந்து க்ஷயமின்மையால், ஒளி பெற்றுச் சிவனேயாவன் என்பதாம். (280)

தலைவனு மாயிடுந் தன்வழி ஞானந்
தலைவனு மாயிடுந் தன்வழி போகந்
தலைவனு மாயிடுந் தன்வழி யுள்ளே
தலைவனு மாயிடுந் தன்வழி அஞ்சே. 829

இ-ம் - எனின், இவ்வியோகத்தால் ஞானியாய்ச் சிவனுவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இங்ஙனம் இருக்கும் யோகி, ஆன்மாவாகிய தன்னிடமே ஞானம் பொருந்தப்பெற்று, சிவ போகந்துய்த்து, தனக்குள் தானே தலைவனாய், ஐந்து பருப்பூதங்கள், நுண்பூதங்கள், தன்மாத்திரைகள் அனைத்தையும் அடக்கி ஆண்டு தலைவனுவன் என்றவாறு.

சிவசத்தியிடம் பதிந்த ஆன்மாவிற்கு மல மறைப்பு நீங்குதலின் தன்வழி ஞானம் என்றது.

ஞானம் பொருந்தியவிடத்து, ஏகனுகி அரன் கழல்செல்லுமாகலின் சிவபோகம் விளைந்தது. அதில் அழுந்தி ' நானிவளாம் பகுதிப் பொற்பாரறிவார் ' என நுகருங்காலத்துச் சிவபரம் பொருளேயாதல் சித்திப்பதாம் அப்போது மாயையும் மாயேயங்களு மாகிய எல்லாம் தன்வசமாயிடும் என்பதாம். (281)

அஞ்சு கடிகைமேல் ஆறுங் கடிகையில்
துஞ்சுவ தொன்றத் துணைவி துணைவன்பால்
நெஞ்சு நிறைந்தது வாய்கொளா தென்றது
பஞ்ச கடிகை பரியங்கி யோகமே. 330

இம் - எனின், இவ்வியோகமிருத்தற்குரிய கால அளவு உரைத்தல் நுதலிற்று.

இ - ள்: ஐந்து நாழிகைக்குமேல் ஆறாவது நாழிகையும் பராசத்தி சிவத்தினிடம் அபின்னமாகத் துயில்வதாகிய இதனால் விளைந்த பயன் மனம் நிறைந்து, வாய்கொள்ளாதிருந்தது; இவ்வண்ணம் ஐந்து நாழிகை யிருப்பதே பரியங்கியோகமாம் என்றவாறு.

ஐந்து நாழிகை கடந்து ஆறு நாழிகையளவும் இருக்கின் அவ்வின்பம் மனநிறைந்து, வாயாற் சொல்ல முடியாததுமாம். ஆறு நாழிகையிருப்பது அதீத அநுபவமாம். ஐந்து நாழிகை இருப்பதே பரியங்கி யோகமாம். புணர்ச்சி யோகமும், அதற்கு மேற்பட்ட அநுபவம் அவசமுமாதல் போல, ஐந்து நாழிகை நுகர்ச்சி யோகமும், அதற்கு மேற்பட்ட ஆறு நாழிகைத் துயில் அவசமும் ஆயிற்று என உணர்க. (282)

பரியங்கி யோகத்துப் பஞ்ச கடிகை
அரியஇவ் வியோகம் அடைந்தவர்க் கல்லது
சரிவளை முன்கைச்சி சந்தனக் கொங்கை
உருவித் தழுவ ஒருவற்கொண் ணாதே. 831

இம் - எனின், பரியங்கியோகம் செய்பவர்களே சிவசத்தியைச்சேர்வர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: பரியங்கியோகத்து ஐந்து நாழிகை இருப்பவர்கட்கல்லாமல், நழுவுகிற வளையலணிந்த முன்கையை உடையவளாகிய சக்கியின் சந்தனம் பூசப்பெற்ற கொங்கைகளை உருகத் தழுவமுடியாது என்றவாறு.

உருகத்தழுவலாவது சத்தியோடு பதிந்திருத்தல்.

ஒண்ணாத யோகத்தை உற்றவ ராரென்னில்
விண்ணார்ந்த கங்கை விரிசடை வைத்தவன்
பண்ணார் அமுதினைப் பஞ்ச கடிகையில்
எண்ணா மெனஎண்ணி இருந்தான் இருந்ததே. 832

இ-ம் - எனின், இவ்வியோகத்தைக்கண்ட ஆசாரியன் யார் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: எளிதில் அடைய ஒண்ணாத இந்த யோகத்தை அடைந்து அறிவித்தவர் யார் எனில், தேவ கங்கையைத் திருமுடிமேல் வைத்தவனாகிய சீகண்ட பரமேசுரன், அழகு நிறைந்த இந்த அமுதத்தை ஐந்து நாழிகையில் எண்ணமாட்டாமல் எண்ணி நுகர்ந்தான்; அவன் இருந்து காட்டியது இதுவாம் என்றவாறு.

எண்ணும் என எண்ணுதலாவது எஞ்ஞான்றும் தைலதாரைபோல இடைவிடாது எண்ணுதல். சீகண்ட சிவன் கைலையின் தெற்குப் பகுதியிலே பரியங்கியோகத்தில் முழந்தாளில் கைகளை நீட்டிக் கொண்டு நிமிர்ந்த முகத்துடன், மூக்கு நுனியில் பார்வையைச் செலுத்தி, தனது திருவருளிற் றிளைத்துக் கொண்டு வீற்றிருக்கிறார் என்பது புராண வரலாறு. (284)

ஏய்ந்த பிராயம் இருபது முப்பதும்
வாய்ந்த குழலிக்கு மன்னர்க்கு மானந்தம்
வாய்ந்த குழலியோ டைந்து மலர்ந்திடச்
சோர்ந்தன சித்தமுஞ் சோர்வில்லை வெள்ளிக்கே

இ - ள் : ஐந்து நாழிகைக்குமேல் ஆறாவது நாழிகையும் பராசத்தி சிவத்தினிடம் அபின்னமாகத் துயில்வதாகிய இதனால் விளைந்த பயன் மனம் நிறைந்து, வாய்கொள்ளாதிருந்தது; இவ்வண்ணம் ஐந்துநாழிகை யிருப்பதே பரியங்கியோகமாம் என்றவாறு.

ஐந்து நாழிகை கடந்து ஆறு நாழிகையளவும் இருக்கின் அவ்வின்பம் மனநிறைந்து, வாயாற் சொல்ல முடியாததுமாம். ஆறு நாழிகையிருப்பது அதீத அநுபவமாம். ஐந்து நாழிகை இருப்பதே பரியங்கி யோகமாம். புணர்ச்சி யோகமும், அதற்கு மேற்பட்ட அநுபவம் அவசமுமாதல் போல, ஐந்து நாழிகை நுகர்ச்சி யோகமும், அதற்கு மேற்பட்ட ஆறு நாழிகைத் துயில் அவசமும் ஆயிற்று என உணர்க. (282)

**பரியங்கி யோகத்துப் பஞ்ச கடிகை**
**அரியஇவ் வியோகம் அடைந்தவர்க் கல்லது**
**சரிவளை முன்கைச்சி சந்தனக் கொங்கை**
**உருவித் தழுவ ஒருவற்கொண் ணாதே.** 831

இம் - எனின், பரியங்கியோகம் செய்பவர்களே சிவசத்தியைச்சேர்வர் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பரியங்கியோகத்து ஐந்து நாழிகை இருப்பவர்கட்கல்லாமல், நழுவுகிற வளையலையணிந்த முன்கையை உடையவளாகிய சக்கியின் சந்தனம் பூசப்பெற்ற கொங்கைகளை உருகத் தழுவமுடியாது என்றவாறு.

உருகத்தழுவலாவது சத்தியோடு பதிந்திருத்தல்.

ஒண்ணுத யோகத்தை உற்றவ ராரென்னில்
விண்ணார்ந்த கங்கை விரிசடை வைத்தவன்
பண்ணார் அமுதினைப் பஞ்ச கடிகையில்
எண்ணு மெனஎண்ணி இருந்தான் இருந்ததே. 832

இம் - எனின், இவ்வியோகத்தைக்கண்ட ஆசாரியன் யார் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : எளிதில் அடைய ஒண்ணுத இந்த யோகத்தை அடைந்து அறிவித்தவர் யார் எனில், தேவ கங்கையைத் திருமுடிமேல் வைத்தவனுகிய சீகண்ட பரமேசுரன், அழகு நிறைந்த இந்த அமுதத்தை ஐந்து நாழிகையில் எண்ணமாட்டாமல் எண்ணி நுகர்ந்தான்; அவன் இருந்து காட்டியது இதுவாம் என்றவாறு.

எண்ணும் என எண்ணுதலாவது எஞ்ஞான்றும் தைலதாரைபோல இடைவிடாது எண்ணுதல். சீகண்ட சிவன் கைலையின் தெற்குப் பகுதியிலே பரியங்கியோகத்தில் முழந்தாளில் கைகளை நீட்டிக் கொண்டு நிமிர்ந்த முகத்துடன், மூக்கு நுனியில் பார்வையைச் செலுத்தி, தனது திருவருளிற் றிளைத்துக் கொண்டு வீற்றிருக்கிறுர் என்பது புராண வரலாறு. (284)

ஏய்ந்த பிராயம் இருபது முப்பதும்
வாய்ந்த குழலிக்கு மன்னர்க்கு மானந்தம்
வாய்ந்த குழலியோ டைந்து மலர்ந்திடச்
சோர்ந்தன சித்தமுஞ் சோர்வில்லை வெள்ளிக்கே. 833

இ-ம் - எனின், இவ்வியோகத்தை ஆணும் பெண்ணும் சேர்ந்திருந்தே செய்யலாம் என்றல் நுதலிற்று.

இ - ள் : பொருந்திய கூந்தலையுடையவளாகிய பெண்ணுக்கும், மன்னனாகிய ஆணுக்கும் பொருந்திய வயது இருபதும், முப்பதுமாம், அப்பெண்ணோடு ஐந்து புலன்களும் மலர, மனம் அழிந்தன: விந்துவுக்கு அழிவில்லையாம் என்றவாறு.

இருபது ஆண்டு நிரம்பிய பெண்ணும் முப்பது ஆண்டு நிரம்பிய ஆணும் கூடும் கூட்டத்துச் செய்யப்படும் பரியங்கி யோகத்தில். ஆனந்தமானது, ஐம்புலன்களும் மலர மனமடங்க விந்துவுக்கு அழிவில்லாதபடி விளையும் என்பதாம். (285)

வெள்ளி யுருகிப் பொன்வழி ஓடாமே
கள்ளத்தட் டானார் கரியிட்டு மூடினார்
கொள்ளி பறியக குழல்வழி யேசென்று
வள்ளிய னாவில் அடக்கிவைத் தாரே. 834

இ-ம்-எனின், விந்துக்ஷயம் நிகழாதவாறு அடக்குமுறை அறிவித்தல் நுதலிற்று.

இ—ள் : வெண்ணிறமாகிய விந்து உருகி, பொன்நிறமாகிய நாதத்திற் கலக்காதபடி, கள்ளத் தட்டானாகிய சிவபெருமான், கரியாகிய (சாட்சி) மனத்தையிட்டு மூடிவைத்தார். அம்மட்டோ ! ஊதுகுழலால் கொள்ளிபறிய ஊதி நாவின் நுனியால் கீழிறங்காதவண்ணம் அடக்கியும் வைத்தார் என்றவாறு.

சுக்கிலம் பெருகிச் சோணிதத்தில் கலக்காதபடி. மனத்தையடக்கி, பிராணுயாமஞ்செய்து, நாசித் துவாரத்திற்கு மேலுள்ள வழியை நாக்கின் நுனியால் அடைத்து அடக்கினுர் என்பது கருத்து. பரியங்கி யோகமுள்ளவன் எவ்வளவு காலம் போகிக்கினும் விந்து நழுவாது என்பதாம். வள்ளியன்-வண்மை யுடையோன். வள்ளியல் எனப் பிரித்து அழகு பொருந்திய என்பாரும் உளர். (286)

வைத்த இருவருந் தம்மின் மகிழ்ந்துடன்
சித்தங் கலங்காது செய்கின்ற ஆனந்தம்
பத்து வகைக்கும் பதினெண் கணத்துக்கும்
வித்தக னுய்நிற்கும் வெங்கதி ரோனே. 835

இம் — எனின், இவ்வண்ணம் செய்யும் போகத்தால், சிவயோகி விளக்கம் பெறுவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இவ்வண்ணம் விந்துக்ஷயம் இல்லாமல் புணரும் இருவரும் தமக்குள் தாமே மகிழ்ந்து, மனங் கலங்காது நுகர்கின்ற இன்பத்தால், யோகி. பத்துத் திசைக்கும் பதினெட்டுத் தேவகணங்களுக்கும் தலைவனுக விளங்கும் சிவசூரியனுவன் என்றவாறு.

மனமடக்கி, விந்து அழியாது போகிக்கும் யோகி சிவசூரியனுக விளங்குவன் என்பது கருத்து. (287)

வெங்கதி ருக்குஞ் சனிக்கும் இடைநின்ற
நங்கையைப் புல்லிய நம்பிக்கோ ரானந்தந்
தங்களிற் பொன்னிடை வெள்ளிதா ழுந்நந்
திங்களிற் செவ்வாய் புதைத்திருந் தாரே. 836

இம் - எனின், பரியங்கி யோகியர் எய்தும்பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: சிவத்திற்கும் அதன்கீழ் நோக்கிய பகுதியிற் காணும் சனிக்கும் இடையில் நிலைபெற்ற மனோன்மணியைத் தழுவிய இறைவனுக்கு ஓர் ஆனந்தம் உண்டாம். அவ்விருவரும் தங்களுக்குள், பொன்னிறமாகிய நாதத்தில் வெள்ளியாகிய விந்து கலப்பதற்கு முன்பு, சிவந்த வாயை மதிமண்டலத்தினிடமாகப் பொருத்தியிருந்தனர் என்றவாறு.

கதிருக்கும் சனிக்கும் இடைநின்ற நங்கை – சூரியனுக்கும் சனிக்கும் இடையில் விளங்கிய திருவருட் சத்தி. கதிர் - சிவம். சனி – உலகத்தைச் சனிப்பிப்பதற்கு முதலாகிய அதோமுகமாயை. நங்கை-மனோன்மணி. அவளைப் புல்குதலாவது, இடைவிடாது தியானித்தலாகிய பரியங்கியோகம். நம்பி என்றது ஆன்மாவை. பொன் - பொன்னிறமாகிய பிருதிவி. வெள்ளி - வெண்மைநிறமான அப்பு. பொன்னிடை வெள்ளி தாழாமுனம் என்றது, பிருதிவி மண்டலத்தில் அப்புமண்டலம் தாழ்வதற்கு முன்பு. திங்களிற் செவ்வாய் புதைத்திருந்தாரே என்றது, வாய்வழியாக மேற்செல்லும் நாசித்துவாரத்தை அடைத்து மதி மணடலத்துத் தங்கியிருந்தார் என்பதாம். இதனால் சூரியகிரந்திக்கும் சனிக்கும் இடையிலே திருவருட் சத்தியைச் சேர்ந்த சிவயோகிக்கு ஓர் வகையான ஆனந்தம் விளைவதாம். இவர்களுடைய கலப்பில், பிருதிவிமண்டலத்து அப்புமண்டலம் தாழ்ந்து இறங்குவதற்கு முன்பு நாதத்தில் விந்து சத்தியை மறைத்து என்றும் மாறாத ஆனந்தத்தில் இருந்தார் என்பதாம்.

இதில் ஞாயிற்றுக்கும் சனிக்கும் இடையில் நங்கையைப் புல்லிய நம்பிக்கு ஒருவகையான ஆனந்தம் விளைந்து அவர்களுக்குள். சுரோணிதத்தோடு சுக்கிலம் கலப்பதற்கு முன்பு திங்கள்போன்ற முகத்தில் சிவந்த வாயைப் புதைத்திருந்தார்கள் என்ற வேறுபொருளும் தோன்றுதல் காண்க. இம்மந்திரத்தில் ஞாயிறு சனி திங்கள் செவ்வாய் வியாழன் வெள்ளி இந்தக் கிரகங்களின் பெயர்களும் வந்திருத்தல் காண்க. (288)

திருத்திப் புதனைத் திருத்தல்செய் வார்க்குக்
கருத்தழ காலே கலந்தங் கிருக்கில்
வருத்தமு மில்லையா மங்கை பங்கற்குந்
துருத்தியுள் வெள்ளியுஞ் சோரா தெழுமே. 837

இம் - எனின். இதுவும் பரியங்கியோகியர்க்குளதாம் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மனநிறைவோடு கூடிய அறிவை, பண்படுத்த வல்லார்க்கு, கருத்தின் அழகாலே கூடியிருக்கப் பெறின் துன்பமே இல்லையாம். பெண்ணை இடப்பாகங்கொண்டவனுக்கும் உடம்பில் விந்து கீழாகாது மேலே எழும் என்றவாறு.

அறிவைத் திருத்தி, அழகோடு கூடியிருந்தால் யோகி பெண்களோடு வாழ்வாராயினும் விந்து நழுவாமையால் (ஊர்த்துவ ரேதஸாக இருப்பதால்) துன்பமே யில்லையாம் என்று யோகப்பயன் கூறியது. திருத்தி - திருப்தி என்பதன் சிதைவு; மனநிறைவு. மங்கைபங்கற்கும் என்றதிலுள்ள உம்மை உயர்வு

சிறப்பு. பெண்களைப்புணர்தல் யோகத்திற்கு இடையூறும் ஆயினும் பரியங்கியோகமாயின் அதனால் நட்டமில்லை என்றவாறு. இங்ஙனமன்றி அதிகாரத்திற்கியைபிலாத வேறு பொருள்கூறி இடர்ப்படுவாருமுளர். துருத்தி – உடல். வெள்ளி சோருதல் - விந்து நழுவுதல். எழும் என்றது ஊர்த்துவரேதஸாக மேலெழும் என்பதாம். (289)

எழுகின்ற தீயின்முன் னேகொண்டு சென்றிட்டால்
மெழுகுரு கும்பரி செய்திடும் மெய்யை
உழுகின்ற தில்லை ஒளியைய அறிந்தபின்
விழுகின்ற தில்லை வெளியறி வார்க்கே. 838

இம் – எனின், இதுவுமது.

இ - ள்: மேல்நோக்கி எழுகின்ற மூலாக்கினியின் முன்னே குண்டலினிசக்தியைக் கொண்டுபோனால். மெழுகைப்போல உருகும் தன்மை யெய்துகின்ற உடலை, சோதியைக்கண்டபிறகு வருத்தவேண்டுவது இல்லையாம், ஆஞ்ஞா சக்கரத்திற்குமேல் துவாத சாந்தப் பெருவெளியை அறிந்தபேருக்கு உடல் விழாதாம் என்றவாறு.

எழுகின்ற தீ – மூலத்தில் முடங்கிக் கிடக்கின்ற நிலையிலிருந்து மேல் ஆஞ்ஞாசக்கரத்தை நோக்கி எழுகிற மூலக்கனல். கொண்டுசென்றால் -குண்டலினியை எழுப்பிக்கொண்டு சென்றால். குண்டலினிக்கு ஆதாரமான உடல் மெழுகுபோல உருகும் அப்போது ஊன் உருகுதற்குக் காரணமான ஒளி தரிசனம் உண்டாம். இதனையே மாணிக்கவாசக சுவாமிகள் 'ஊனினையுருக்கி யுள்ளொளிபெருக்கி

உலப்பிலா ஆனந்தமாய தேனினைச் சொரிந்து' என்றருளியதும் காண்க. உழூதல் - முயற்சித்தல் (வருத்தல்). (290)

வெளியை அறிந்து வெளியி னடுவே
ஒளியை அறியி னுளிமுறி யாமே
தெளிவை அறிந்து செழுநந்தி யாலே
வெளியை அறிந்தனன் மேலறி யேனே. 839

இம் – எனின். பராகாய தரிசனத்திற்கு மேற் சிறந்தது ஓரனுபவமும் இல்லையாம் என உபதேசித்தல் நுதலிற்று.

இ – ள் : அங்ஙனம் வெளியையறிந்து, அதன் நடுவிலே விளங்கும் ஒளியை, மனம் மடங்காத வண்ணம் அறிந்ததால் குருவருளால் தெளிந்த அனுபவத்தைப் பெற்று, பராகாய தரிசனம் செய்தேன்; அதற்கு மேலதாக யானொன்றும் அறிந்திலேன் என்றவாறு.

பரியங்கியோகத்திலிருந்து, துவாதசாந்தப் பெரு வெளியில் சோதிதரிசனம்செய்து, தெளிந்த ஞானம் பெற்று, பராகாய தரிசனம்பண்ணினேன்; அதற்கு மேலதாக ஒன்றையும் கண்டிலேன் என்பதாம். (291)

மேலாந் தலத்தில் விரிந்தவ ர்ரெனின்
மாலாந் திசைமுகன் மாநந்தி யாயவர்
நாலா நிலத்தி னடுவான வப்பொருள்
மேலா யுரைத்தனர் மின்னிடை யாளுக்கே. 840

இ-ம் — எனின் பராகாயத்து விளங்குபவர் பரசிவம் என்றல் நுதலிற்று.

இ - ள் : ஒன்றிற்கு ஒன்று மேலான இடத்தில் விளங்குகின்றவர் யார் என வினவி அறியலுறின், திருமாலும், திசைமுகனும், எனது ஆசாரியனாகிய சிவனும் ஆகிய இவர்கள் ஆவார்கள். இதற்கு மேற்பட்ட நாலாவது இடத்தில் அப்பொருள் நடுவாக விளங்கும், மின்போன்ற இடையினையுடைய பராசத்திக்கு இடம் அதற்குமேல் உள்ளதாம் என்று உரைத்தனர் என்றவாறு.

மேலாந்தலம் - ஒன்றற்கொன்று மேலாக விளங்குகின்ற இடம். மூலாதாரம் திசைமுகன். அதற்குமேல் சுவாதிட்டானம் திருமால். அதற்குமேல் மணிபூரகம் உருத்திரன். மா நந்தி — எமது முதலாசாரியனாகிய சீகண்டருத்திர சிவம். அதற்குமேல் அநாகதம் ஈசன், நாலாம் இடம் என்றது அநாகதஸ்தானத்தை, இது இதயஸ்தானமாதலின் நடு எனப்பட்டது. நடுவான பொருள் மகேசன். மேலாய் - அதற்குமேலுள்ளதாகிய ஆஞ்ஞையில் ஒளிவடிவாகப் பராசக்தி விளங்குகிறாள் ஆதலின் இங்ஙனம் கூறப்பட்டது. (292)

**மின்னிடை யாளுமின் னாளனுங் கூட்டத்துப்**
**பொன்னிடை வட்டத்தின் உள்ளே புகப்பெய்து**
**தன்னொடு தன்னைத் தலைப்பெய்ய வல்லிரேல்**
**மண்ணிடைப் பல்லூழி வாழலு மாங்கே** 841

இ-ம் — எனின், மதிமண்டலத்து விளங்கும் சிவசத்திகளோடு ஆன்மாவாகிய தன்னையும் கலக்கப்

பழகுவார் நெடுங்காலம் வாழலாம் என்றல் நுதலிற்று.

இ - ள் : மின்னலையொத்த இடையினையுடையாளாகிய சக்தியும் அவளை ஆள்பவனாகிய சிவமும், ஆகிய இருவரையும் கூட்டத்துடன், பொன் போன்ற ஆகாயத்துள் தங்கச்செய்து, அச்சிவத்தோடு ஆன்மாவாகிய தன்னையும் கலந்திருக்கப் பயிலுவீராயின், இவ்வுலகத்து நெடுங்காலம் வாழலாம் என்றவாறு

மின்னிடையாள் – சக்தி. மின்னாளன் – சத்தன். என்றது ஆஞ்ஞாசக்கரத்து விளங்கும் சத்தியோடு கூடிய ஹம்ஸமாகிய பரசிவம். வட்டம் - வட்டவடிவான ஆகாயம். பொன்னிடைவட்டம் - பொன்மயமான ஆகாயம். ஆகாயம் புகைநிறமுடையது. ஆயினும் ஈண்டுக் கூறியது ஞானாகாயமாதலின் அதனின் வேறெனக உணர்க. தன்னொடு – சிவத்தொடு. தன்னை - ஆன்மாவை. தலைப்பெய்ய வல்லிரேல் கூட்டவல்லிரேல்; என்றது அருமை விளக்கிநின்றது. ஊழியென்றது காலப்பன்மை விளக்கிநின்றது. (293)

வாங்க லிறுதலை வாங்கலில் வாங்கிய
வீங்க வலிக்கும் விரகறி வாரில்லை
வீங்க வலிக்கும் விரகறி வாளரும்
ஓங்கிய தன்னை உதம்பண்ணி னாரே. 842

இம் – எனின். முறையறிந்து பிராணாயாமஞ் செய்தலின் பயன் இதுவெனல் நுதலிற்று.

இ - ள் : பிராணவாயுவை உள்ளுக்கிழுத்தலாகிய பூரகமும், வெளியிலிறுத்தலாகிய ரேசகமும்,பூரகத்தால் பூரித்த காற்றைத் தடுத்து நிறுத்துதலாகிய கும்பகமும் ஆகிய இவற்றின் உபாயத்தை அறிவார் யாரும் இல்லையாம். இதனை அறிந்தவர்கள். தவத்திற் சிறந்த் தன்னை ஆகுதிபண்ணினவராவர் என்றவாறு.

வாங்கல் - பூரகம். இறுதல் - ரேசகம். வீங்கல் - கும்பகம். ஓங்கிய தன்னை - விதிப்படியான பிராணாயாமத்தால் தவத்திற் றலைசிறந்த தன்னை. உதம் - ஹுதம் என்பதன் திரிபு. ஹுதம் - ஓமம் செய்யப்பட்டபொருள். தன்னை உதம் செய்தல் - உயிராகிய தன்னை ஓமஞ்செய்யப்பட்ட பொருளாகச் செய்தல்; அதாவது ஆத்மாகுதி செய்தல் என்பதாம். தன்னை ஆத்மாகுதி செய்துவிட்டால் தன்செயலற்று எல்லாம் சிவச்செயலாகத் திகழுமாதலின் இங்ஙனம் கூறினார். யுதம் என்பதனை அயுதம் என்பதன் முதற்குறையாகக் கொண்டு தன்னை அயுதகாலம் வாழ்வதாகப் பண்ணினார் என்றலும் ஒன்று. (294)

உதமறித் தங்கே ஒருசுழிப் பட்டாற்
கதமறிந் தங்கே கபாலங் கறுக்கும்
இதமறிந் தென்றும் இருப்பாள் ஒருத்தி
பதமறிந் தும்முளே பார்கடிந் தானே. 843

இ - ள், ஆத்மாகுதி செய்தலின் பயன் அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : இவ்வண்ணம் ஆத்மாகுதி செய்து ஆஞ்ஞையில் உள்ள சக்கரத்துள் பொருந்தின், வழி தெரிந்து, அங்கே கபாலம் கறுக்கும்; பராசத்தி இவ் வியோகிக்கு இதமாவது யாதென்று ஆராய்ந்து அங்கேயிருந்து அருள்புரிவாள். உங்களுடைய பரிபாக நிலையை அறிந்து பாசஞானத்தைக் கடிந்து பரஞானத்தை அளிப்பள் என்றவாறு.

சுழி - சக்கரம். ஒருசுழி - ஒப்பற்ற சக்கரமாகிற ஆஞ்ஞை. கதர் - வழி. அடைவிப்பது என்பது அதன் பகுதிப்பொருள். வழியறிந்து கபாலம் கறுத்தலாவது. நரையில்லை என்பதாம். இதம் - இன்பம். ஒருத்தி என்றது பராசத்தியை. பதம் - ஆன்மாவினுடைய மலபரிபாகமும், இருவினை யொப்புமாகிய பரிபாகநிலை. பார் கடிதல் - பாராதி கட்குக் காரணமாகிய மாயைகளையும், அது உபாதானமாகி அகற்றும் மலத்தையும் நீக்கியும் வன்மை வாட்டியும். (295)

பாரில்லை நீரில்லை பங்கயம் ஒன்றுண்டு
தாரில்லை வேரில்லை தாமரை பூத்தது
ஊரில்லை காணும் ஒளியது ஒன்றுண்டு
கீழில்லை மேலில்லை கேள்வியிற் பூவே. 844

இ - னின், யோகத்தின் பயனை ஞானவியல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பூமியும் இல்லை தண்ணீரும் இல்லை ; ஆனல் தாமரைப்பூவொன்று உண்டு. அரும்புமில்லை வேரும் இல்லை; தாமரை பூத்திருக்கிறது. ஊரு மில்லை உலகமுமில்லை; ஆனல் அறியப்படுகின்ற

ஒளிமட்டும் உண்டு. கீழுமில்லை, மேலுமில்லை. இங்ஙனமிருப்பதொருபொருள் யாதோவெனின், சிவஞானமாகிய செந்தாமரைப்பூவாம் என்றவாறு.

தாமரை, சேறும் நீரும் இருந்தால் முளைக்கும். அது அரும்பும் வேருமிருந்தால் வளர்ந்து பூக்கும். ஆதாரமாகிய இடமிருந்தாற்றான் ஒளியாகிய ஆதேயம் உண்டு. பூ என்ற பொருளுண்டானால் அதற்குக் கீழும் மேலுமாகிய பகுதிகள் உண்டு; இதற்கு அவை யொன்றும் இல்லையாம் என்றபடி. சிவஞானமாகிய செந்தாமரைக்கு இவை யொன்று மில்லையாம்; ஆனாலும் அது பூத்துச் சிவமணம் கமழும் என்பதாம். தார் – அரும்பு (296)

## ௨௦. அமுரிதாரணை

அமுரி, சிவநீர் என்பன ஒருபொருட்கிளவிகள். இது உடலிற் சுரந்து உவருடையதாகக் கழிவது, அமுரிகற்பம் எனப் பதினெண்சித்தர் பாடலிலும், வைத்தியநூல்களிலும் விளக்கப் பெற்றுள்ளது, பித்தம் மிகுதியாக இருத்தலால் முதல் அமிர்த தாரையையும் சாரமற்றதாயிருத்தலால் கடைசி அமிர்ததாரையையும் விட்டு மத்திய தாரையானது கொள்ளத்தக்கது. 'எவன் சிவாம்பு என்று அமரவாருணியைக் குடிக்கிறானோ, நசியம் செய்கிறானோ அவன் அமுரிதாரணை செய்தவனாகிறான்' என்று,

अमरीं यः पिबेन्नित्यं नस्यं कुर्वन् दिनेदिने ।
वज्रोलिमभ्यसेत्सम्यगमरोलीति कथ्यते ॥

சிவசங்கிதை கூறுவதாலும் அறிக. அதனைத்தரிக்கும்

முறையை உணர்த்துவது அமுரிதாரணையாம். பரியங்கி யோகத்தில் விந்துக்கட்டுப்பாட்டை நன்கு விளக்கிய நாயனார், இப்பகுதியில் ஆறுதிரு மந்திரங்களால் அமுரி தாரணையை உணர்த்து கின்றார்.

உடலிற் கிடந்த வுறுதிக் குடிநீர்க்
கடலிற் சிறுகிணற் றேற்றமிட் டாலொக்கும்
உடலில் ஒருவழி ஒன்றுக் கிறைக்கில்
நடலைப் படாதுயிர் நாடலு மாமே. 845

இ‌ம் - எனின், அமுரியின்னதெனவும், அதனைத் தரிப்பதின் பயனும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : இவ்வுடலிற் கிடந்த உறுதியளிப்பதாகிய குடிநீர் கடலில் சிறுகிணறு தோண்டி ஏற்றமிட்டு இறைத்தால் அதனை ஒத்ததாக இருக்கும். இவ்வுடலில் ஒரு வழியாக, ஒன்றுக்கு இறைத்தால் உயிர் கலங்காது. உயிரை அழியாமல் அறிந்து காக்கலுமாம் என்றவாறு.

உறுதிக்குடிநீர் என்றது உடலில் ஊறும் சிறுநீரை. இதனைச் சிவநீர், அமரி, அமுரி, அமுதநீர் என்றெல்லாம் சித்தர்கள் வழங்குவர். அது ஊறுமிடமும், சுவையும் உணர்த்தக் கடலில் என்றும், சிறுகிணறு என்றும், அது வெளிப்படும் வாயிலை ஏற்றம் என்றும் குறித்தார்கள். ஒருவழி ஒன்றுக்கு இறைக்கில் – ஒருகையளவு பிடித்து வாய்வழியாக வெயிற்றுக்கு இறைக்கில் என்பதாம். இப்பயிற்சியை இடைவிடாது இயற்றத் துன்பமில்லை. உயிரைத் தேடியறிதலும் பாதுகாத்தலுமாம் என்றவாறு.

தெளிதரும் இந்தச் சிவநீர் பருகில்
ஒளிதரு மோராண்டில் ஊனமொன் றில்லை
வளியுறும் எட்டின் மனமும் ஒடுங்கும்
களிதருங் காயங் கனகம தாமே. 846

இ-ம் — எனின், இதுவும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : தெளிந்த இந்தச் சிவநீரைப் பருகினால் ஓராண்டிற்குள் ஒளிதரும்; அழிவில்லை. பிராணனாகிய அகாரமும் மனமும் ஒடுங்கும்; மகிழ்ச்சியை விளைவிக்கும். உடல், பொன்மயமாகும் என்றவாறு.

வளியுறும் எட்டு—பிராணவாயுவாகப் பொருந்திய எட்டின் தமிழ்வடிவாகிய ‘ அ ’ காரம். (298)

நூறு மிளகு நுகருஞ் சிவத்தினீர்
மாறும் இதற்கு மருந்தில்லை மாந்தர்கள்
தேறில் இதனைத் தெளியுச்சி கப்பிடின்
மாறும் இதற்கு மறுமயி ராகுமே. 847

இ-ம் — எனின் இதுவும் உட்கொள்ளும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நூறு மிளகளவு சிவநீரை அருந்துங்கள். இதற்கு மாறான மருந்தொன்றுமில்லையாம். ஆராயின் இதனைத் தெளிந்த உச்சியில் அப்பினால், இதற்கு நரைமாறும்; கருமையாகிய மறுவோடு கூடிய மயிர் தோன்றும் என்றவாறு.

‘ நூறு மிளகு நுகரும் சிவத்தினீர்’ என்பதற்கு ஒருகையளவு சிவநீரோடு ஒவ்வொரு நாளைக்கு ஒவ்

வொரு மிளகாக அதிகப்படுத்தி நூறு மிளகுவரை யில் உண்ணுக என சிலசித்தநூல்கள் கூறுகின்றன. இதன் பயன் நரை மாறுதலும், மயிர் கறுத்தலு மாம். (299)

கரையருகேநின்ற கானல் உவரி
வரைவரை என்பர் மதியிலா மாந்தர்
நுரைதிரை நீக்கி நுகரவல் லார்க்கு
நரைதிரை மாறும் நமனுமங் கில்லையே. 848

இம் - எனின்; இதுவுமது.

இ - ள்: கரைக்குப் பக்கத்திலிருக்கின்ற கான லிலுள்ள உப்புநீரை நீக்கு நீக்கு என்பவர்கள் அறி வற்ற மக்கள்; இதன் நுரையையும் திரையையும் நீக்கி அருந்தவல்லவர்கட்கு நரையுந் திரையும் மாறும்; நமனு மில்லை என்றவாறு. (300)

அளக நன்னுத லாயோ ரதிசயங்
களவு காயங் கலந்தஇந் நீரிலே
மிளகு நெல்லியும் மஞ்சளும் வேம்பிடில்
இளகும் மேனி இருளுங் கபாலமே. 849

இம் - எனின், இதுவுமது.

இ - ள்: கூந்தலையும் நல்ல நெற்றியையு முடைய பெண்ணே! ஓர் அதிசயம் உண்டு. உடலில் களவாகக் கலந்திருக்கின்ற இந்த நீரிலே மிளகு, நெல்லி, மஞ்சள், வேம்பு இவற்றைக் கூட்டி யிடித்த சுண்ணத்தைச் சேர்த்து உண்டால் மேனி மெதுவாகும்; தலைகறுக்கும் என்றவாறு.

காயம் களவு கலந்த இந்நீர் என்றது சலநீர். உடலில் எங்கும் பரவியிருந்து சுரப்பியில் மறைந்து ஊறுவதாதலின் காயத்தில் களவாகக் கலந்த நீர் என்றருளிது, (301)

வீர மருந்தென்றும் விண்ணோர் மருந்தென்றும்
நாரி மருந்தென்றும் நந்தி அருள்செய்தான்
ஆதி மருந்தென் றறிவார் அகலிடஞ்
சோதி மருந்திது சொல்லவொண் ணாதே. 850

இ - னின், அமுரிதாரணையின் உயர்வை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: வீரமருந்தென்றும், தேவரமுதம் என்றும் சக்தி அமுதமென்றும் எனது குருநாதனாகிய நந்தி அருள்செய்தான். இதனை முன்மையான மருந்து என்று அறிவார்கள் சோதிமருந்தாகிய இதனை அகலிடத்தார்க்குச் சொல்லக்கூடாது என்றவாறு.

உலகத்தார்க்கு உரைக்க வொண்ணாது என்றது. இதன் அருமையும் பெருமையும் அறியாமையால் எள்ளி நகையாடுவர் என்பது கருதியாம். (302)

## ௨௧ சந்திரயோகம்

எய்து மதிக்கலை சூக்கத்தி லேறியே
எய்துவ தூலம் இருவகைப் பக்கத்துள்
எய்துங் கலைபோல ஏறி இறங்குமாந்
துய்யது சூக்கத்துக் காலத்த காயமே 851

இ-ம் - எனின், சூக்கும சந்திரகலையின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : பிராணவாயு எய்தும் சந்திரநாடியின் வழியாகவே நுட்பமாகப் பூரிக்கப்பெற்று, இடகலையால் பூரிக்கப்பெற்ற, பிங்கலையால் ரேசிக்கப்படும் சந்திரகலை சூரியகலைகள் தூலமாக இயங்குதல் போல பூரகரேசகமாம். இவ்வண்ணம் சூக்குமமாக இயங்குகின்ற இதுவே தூயது. இதனால் உடல் நெடுங்காலம் இருப்பதாம் என்றவாறு.

சந்திரகலையாகிய இடநாடி வழியாகவே மிகச் சூட்சுமமாகப் பிராணன் பூரிக்கப்பெற்றும், வெளியிடப்பெற்றும், இடைநாடி வழியாகப் பூரிக்கப் பெற்றுப் பிங்கலைவழியாக ரேசிக்கப்படுவது போல இயங்கிக்கொண்டேயிருக்கும். அப்போது உடல் தூய்தாகும் என்பதாம். தூலத்துள் இருநாடி வழியாகவும் இயங்குவதுபோல. சூட்சுமத்துள் இடநாடி வழியாகவே இயங்கிக்கொண்டிருக்கும். அது சந்திர யோகமாம். அதனால் சரீரசுத்தமுண்டாம் என்றவாறு

இதற்கு வேறு உரைகூறி இடர்ப்படுவாரும் உளர். அவர் கூறும் உரையால் இவ்வதிகாரப் பொருள் இயையாமை தெளிக. (303)

ஆகின்ற சந்திரன் சூரியன் அங்கியுள்
ஆகின்ற ஈரெட்டோ டாறிரண் டீரைந்துள்
ஏகின்ற வக்கலை யெல்லா மிடைவழி
ஆகின்ற யோகி அறிந்த அறிவே. 852

இம் - எனின், எல்லாக்கலைகளையும் இடைகலை வழியாக இயங்க அறிபவனே சந்திரயோகியாவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இந்தவுடம்பினுள் ஆகின்ற சந்திரன், சூரியன், அக்கினி இம்மூன்றற்கும் முறையே ஆகின்ற பதினாறு, பன்னிரண்டு பத்து ஆக இயங்குகின்ற கலைகளையெல்லாம் இடைநாடியாகிய மதியின் வழியாகவே இயங்கச்செய்கிற யோகி அறிந்தனவே அறிவாம் என்றவாறு.

இடை பிங்கலை சுழுமுனைவழியாக இயங்கும் கலைகள் எல்லாவற்றையும் சந்திரகலைவழியாக இயங்கச் செய்பவனே சந்திரயோகியாம்; அவனறிந்த ஞானமே ஞானமாம் என்பது கருத்து. இடைவழி - இடைகலை வழியாக. இடா என்ற ஆரியச்சொல்லின் சிதைவு இடை. (304)

ஆறுற தாங்கலை ஆதித்தன் சந்திரன்
ஆறு நலங்கினர் ஞாலங் கவர்கொளப்
பேறுங் கலைமுற்றும் பெருங்காலி லீரெட்டு
மாறுக் கதிர்கொள்ளு மற்றங்கி கூடவே. 853

இம் - எனின், சூரியகலையை மதிக்கலையின்வழியாகச் செலுத்துவதால் விளையும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பன்னிரண்டு கலைகளையுடைய சூரியனைச் சந்திரன் வழியாகும்படி, வருந்திப் பயின்றவர் உலகமனைத்தும் கவர்ச்சிகொள்ள. பிராணவாயுவில் இடகலையும் பிங்கலையுமாகிய பதினாறு கலைகளும்

மாறாக. அக்னிகலைகளையும் சேர்த்துக் கலைகள் முழு தையும் சந்திரனாகிய கதிரேகொள்ளும் என்றவாறு.

ஆதித்தன் சந்திரனாக நலங்கினார்க்(கு) பெருங்காலி லீரெட்டும் மாறு(க) மற்றங்கிகூட, பேறுங்கலை முற்றும், கதிர் கொள்ளும் எனக் கூட்டிப் பொருள் காண்க.

சூரியகலைகளையும் சந்திரநாடி வழியாக இயக்கி னார்க்கு, இடபிங்கலை வழியாக எப்போதும் போலியங்கும் பிராணனும் மாறாக, அக்கினி கலை யாகிய பத்துங் கூட, எல்லாக்கலைகளும் சந்திரனாகிய கதிர்கொள்ளும் என்பதாம், அதாவது சந்திர யோகம் செய்வார்க்கு, எல்லாக் கலைகளும் அதன் வழியதாகும் என்பது கருதது. (305)

பத்தும் இரண்டும் பகலோன் உயர்கலை
பத்தினொ டாறும் உயர்கலை யான்மதி
ஒத்தநல் அங்கிய தெட்டெட் டுயர்கலை
அத்திற னின்றமை ஆய்ந்துகொள் வீரே. 854

இம் – எனின், கலைகளின் தொகையும் வகையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : சூரியகலை பன்னிரண்டாகும்; மதி யினது உயர்ந்த கலை பதினாறு ஆகும்; அக்கினி கலை அறுபத்து நான்காகும், அவ்வாறாகக் கலைகள் நின்றமையை அறிந்து கொள்ளுங்கள் என்றவாறு.

ஏனைய கலைகளைச் சந்திரகலையுள் சூக்குமமாயும் தூலமாயும் செலுத்தும் சந்திரயோகத்தினிலக்கணம்

கூறும் திருமந்திரங்களின் பின் வகையையும் தொகையையும் கூறியது தொகுத்துச் சுட்டல் என்னும் உத்தியால் என்க. (306)

எட்டெட் டனலின் கலையாகும் ஈராறுட்
சுட்டப் படுங்கதி ரோனுக்குஞ் சூழ்கலை
கட்டப் படுமீரெட் டாகு மதிக்கலை
ஒட்டப் படாஇவை ஒன்றோடொன் றாகவே. 855

இ-ம் - எனின், மூவகை முப்பத்தெட்டுக்கலைகளையும் ஒன்றோடொன்று ஒட்டப்படாது என்பதுணர்த்தல் நுதலிற்று,

இ - ள் : இம்மூவகைக் கலைகளாகிய இவை ஒன்றோடொன்று ஒட்டப்படா என்க என்றவாறு.

பின்வரும் பல மந்திரங்களில் 'எட்டெட்டும்' 'எட்டெட்டு' என வருதலானும் அக்னிகலை 64 என்று பொருள் செய்யாவிடின் 'தொண்ணூற்றொடாறும்' (856) என்னுந்தொகை நிறைவேறாமையானும் எட்டெட்டனலின் என்னும் பாடமே சிறந்ததாம்.

ஒன்றோடொன்று ஒட்டப்படா என்றது, இம்மூவகைக் கலைகளும் மூவகைத் தானத்துத் தனித்தனியே இயங்குவன; இவற்றை ஒன்றோடொன்று கலத்தல் ஆகாது என்பதாம். அங்ஙனமாயின், 'அக்கலையெல்லாம் இடைவழி ஆகின்ற யோகி அறிந்த அறிவே' (852) என்பதனோடு முரணுதோ எனின், அந்த முப்பத்தெட்டுக் கலைகளையும் இடகலை வழியாக இயங்கச் செய்க என்பதேயன்றி, ஒன்றை ஒன்று கலக்கச்செய்க என்பது அன்று. (307)

எட்டெட்டும் ஈராறும் ஈரெட்டுந் தீக்கதிர்
சுட்டிட்ட சோமனில் தோன்றுங் கலையெனக்
கட்டப் படுந்தார கைக்கதிர் நாலுள
கட்டிட்ட தொண்ணூற்றொ டாறுங் கலாதியே. 856

இ - னின், தொண்ணூற்றாறு தத்துவங்களும் இம்மூவகைக் கலைகளினின்று உண்டாவனவே என்றால் நுதலிற்று.

இ - ள் : அறுபத்துநான்கும், பன்னிரண்டும், பதினாறுமாகிய தீயும், கதிரும், வருத்துகின்ற கோபனுமாகிய மூன்றிலும் தோன்றுகின்ற கலைகள் என்றும் அவற்றோடு சேர்க்கப்படுகின்ற நட்சத்திரக் கிரணங்கள் நாலும் உள்ளன; இவ்வண்ணம் கட்டப் பட்ட தொண்ணூற்றாறு தத்துவங்களும் இக்கலை களையே முதலாகக்கொண்டு தோற்றுவனவாம் என்றவாறு.

இவற்றின் விளக்கமும் அநுபவமும் தெரியச் சாதனங்கள் கிடைத்தில; திருவருள் கூட்டுவிப்பின் தெரிந்து தெரிவிக்கலாம். (808)

எல்லாக் கலையும் இடைபிங் கலைநடுச்
சொல்லா நடுநாடி யூடே தொடர்மூலஞ்
செல்லா எழுப்பிச் சிரத்துடன் சேர்தலால்
நல்லோர் திருவடி நண்ணிநிற் போரே. 857

இ - னின், எல்லாக்கலைகளையும் முற்கூறப் பட்ட நால்நாடிகளின் வழியாகக் கீழ்ப்போகாத வண்ணம் தடுத்து, சூக்குமா சந்திரகலையின் வழி

யாக மேலெழுப்பின் திருவடியடையலாம் என்பது ணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: எல்லாக்கலையும், இடை பிங்கலை இவற்றின் நடுவிலே யுள்ளதாக நடுவென்று சொல்லப்படும் சுழுமுனையல்லாத சூட்சும நடுநாடி வழியாகத் தொடர்ந்துள்ள மூலாதாரத்திற்குச் செல்லவிடாமல் மேலெழுப்பி, பிரமரந்திரத்துடன் சேர்த்தலால், நல்லயோகியர் சிவனடியைச் சேர்ந்துறைவர் என்றவாறு.

'நடுச்சொல்லா நடுநாடி' என்றது நடுவென்று பேசப்படும் சுழுமுனையல்லாத நடுநாடி, அதாவது சூட்சும சந்திரகலை. அது புருவமத்தியிலிருந்து பிரமரந்திரமாகிய மதிமண்டலம்வரை வியாபித்திருப்பது. அதன் வழியாகப் பிராணனை உயர்த்துதலே சந்திரயோகம். அதில் சித்திபெற்றோர் திருவடிசேர்வர் என்பதாம். (309)

**அங்கியிற் சின்னக் கதிரிரண் டாட்டத்துத்**
**தங்கிய தாரகை யாகுஞ் சசிபானு**
**வங்கியத் தாரகை யாகும் பரையொளி**
**தங்கு நவசக்ர மாகுந் தரணிக்கே.** 858

இம் – எனின், நவசக்கரமாவது இன்னதென்றல் நுதலிற்று.

இ - ள்: அங்கியிற் கூறுபட்ட நுண்கதிர்கள் இரண்டும் விளக்கம்பெற்ற காலத்து இரண்டு நட்சத்திரங்களைப்போல விளங்குவதாம், அவையே

இருபாலும் உள்ள சந்திரமண்டலமும் சூரியமண்டலமுமாம். பிரமரந்திரத்தில் கூட்டமாக விளங்கும் நட்சத்திரத் தொகுதிகள் யாவும் பராசத்தியின் ஒளியாம். இவை பூமியிலுள்ளார்க்கு நவசக்கரமாம் என்றவாறு.

அக்கினிக்கலையானது கூறுபட்டு இருதாரகைகள் போல நீள ஒளியுடையதாம். அது சூரிய மண்டலமும் சந்திரமண்டலமுமாம். மேலே விளங்குந் தாரகைக் கூட்டங்களே பரை ஒளியாம் என்றவாறு. *(310)*

தரணி சலங்கனல் கால்தக்க வானம்
அரணிய பானு அருந்திங்கள் அங்கி
முரணிய தாரகை முன்னிய ஒன்பான்
பிரணவ மாகும் பெருநெறி தானே. 859

இ - ள் - எனின், எல்லாம் பிரணவத்தினின்று விளைவன எனல் நுதலிற்று.

இ – ள் : பூமி, நீர், நெருப்பு, காற்று, இவற்றிற்கெல்லாம் இடமாகிய வானம், அழகிய சூரியன், வருகின்ற சந்திரன், அக்கினி, மாறுபட்ட நட்சத்திரங்கள் ஆகிய இவை ஒன்பதும் பிரணவத்திலிருந்து உண்டாகும் பெரிய நெறிகளாம் என்றவாறு.

பிரணவமாகிய சூக்குமத்திலிருந்து உண்டான தூலப்பொருள்களாம் இவை என்பது. *(311)*

தாரகை மின்னுஞ் சசிதேயும் பக்கத்துத்
தாரகை மின்ற சசிவளர் பக்கத்துத்
தாரகை பூவிற் சகலத்தி யோனிகள்
தாரகைத் தாரகை தானுஞ் சொரூபமே. 860

இ-ள்னின், தாரகையாமாறு இதுவென்ல் நுத லிற்று.

இ - ள் : தேய்பிறையில் தாரகை ஒளிவிடும்; வளர்பிறையில் தாரகை ஒளிவிடாது. தாரகை யாவது பூமியில் சகல ஆன்மாக்களாகத் தோன்று தலாம். ஆன்மா சிவமாக விளங்கும் சொரூபமே தாரகையுள் தாரகையாதலாம் என்றவாறு.

தாரகை - நட்சத்திரம். நட்சத்திரம்போல ஒளி விடும் இதனைத் தாரகையென்றது உபசாரம். வளர் பிறை தேய்பிறை என்றது கலாதிகளால் சிறிது அறிவுவிளக்கம்பெற்ற காலத்தையும் அல்லாக் காலத்தையும், சகலநிலையைத் தாரகை என்ற போது, அந்தநிலையில் தன்னையறிதல் தானுஞ் சொரூபத்தில் இருந்தபோதன்றிக் கூடாமையின் அந்நிலையைத் தாரகைத்தாரகை என்றருளி னார்கள். (312)

முற்பதி னைஞ்சின் முளைத்துப் பெருத்திடும்
பிற்பதி னைஞ்சிற் பெருத்துச் சிறுத்திடும்
அப்பதி னைஞ்சும் அறியவல் லார்கட்குச்
செப்பரி யான்கழல் சேர்தலு மாமே. 861

இ-ள் - எனின், சந்திரயோகம் வளர்பிறை தேய்பிறைக்கு ஏற்ப வளர்ச்சியும் தேய்வும் உடைய தென்றல் நுதலிற்று.

இ-ள் : முதல் பதினைந்து நாட்களில் தோன்றி வளரும் ; பின் பதினைந்து நாட்களில் வளர்ந்து தேயும். இதனை உணர்பவர்கள் சொல்லுதற்கரிய ஸ்ரீ பரமேசுவரன் திருவடியைச் சேர்வார்கள் என்பதாம்.

இதிலும் பூர்வபக்கம் அபரபக்கம் என்றது, சுவானுபவ சித்திபெருகுங் காலத்தையும், நுணுகுங் காலத்தையும். அபரபக்கம் என்றது அடியோடு தேய்ந் தழிவதையன்று ; நுணுகுதலை என்க. கலை ஞானம் விரிந்து பரஞானமாகச் சுருங்கிய காலத்து சிவன்கழல் சேரலாம் என்பது கருத்து. (313)

அங்கி எழுப்பி யருங்கதிர் ஊட்டத்துத்
தங்குஞ் சசியால் தாமம் ஐந் தைந்தாகிப்
பொங்கிய தாரகை யாம்புலன் போக்கறத்
திங்கள் கதிரங்கி சேர்கின்ற யோகமே. 862

இ-ள் - எனின், சந்திரயோகத்தின் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : அக்கினி மண்டலத்துக் குண்டலினி யாகிய அங்கியை எழுப்பி, அரிய சூரிய மண்டலத்துக் கிரணங்களின் ஊட்டத்தால், மேலே தங்கியுள்ள சந்திரனால் ஆஞ்ஞைவரையுள்ள இடம் இருபத்தைந்தாகி, ஒளிமிக்க தாரகையாகிற புலன்களின்வழியே செல்லாதவாறு, திங்களும் கதிரோ

னும் அங்கியும் ஆகிய மூன்றும் தம்முள்சேர்கின்ற யோகம் இதுவாம் என்றவாறு.

அங்கி - மூலாதாரத்திலுள்ள குண்டலினி. கதிர் - சூரியகிரந்தி, ஊட்டத்து - அதனைச்சேர்த்து அதனைப் பேதித்தலால் உளதாகிய வளத்தால். ஊட்டம் - வளம். தங்கும் சசி - ஆஞ்ஞாசக்கரமே இறுதியாகக் குண்டலினி சென்று தங்கும் இடமாத லின் தங்கும் சசி என்றது. தாமம் - இடம் ஐந்தைந் தாகி - சுவாதிட்டான முதல் உள்ள தானங்கள் ஒவ்வொன்றும் அவ்வைந்தாகி; என்றது ஒவ்வொரு ஆதாரத்திலும், ஏனைய (சுவாதிட்டான மணிபூரகம் சுவாதிட்டான விசுத்தி, சுவாதிட்டான அநாகதம், சுவாதிட்டான ஆஞ்ஞை என்பன முதலியனவாக) ஐந்துநிலைகள் உளதாதலின் இங்ஙனம் கூறியது, தாரகையாம் புலன் - நட்சத்திரங்களைப்போலச் சிவனருள் இல்லாதவழி அறிவு விளக்கந்தரும் புலன் களில். போக்கு - போதல். இதுவே திங்கள் கதிர் அங்கிசேர்கின்ற யோகமாம் என்பது (314)

ஒன்றிய ஈரெண் கலையும் உடலுற
நின்றது கண்டு நினைக்கிலர் நீதர்கள்
கன்றிய காலன் கருத்துழி வைத்தபின்
சென்றதில் வீழ்வர் திகைப்பொழி யாரே. 863

இம் - எனின், பதினாறு கலைகளும் உடற்கண் இருப்பதையறியார் மூடர்கள் என்றல் நுதலிற்று.

இ - ள் : உடற்கண் ஒன்றிய பதினாறுகலைகளும். உடற்கண் பொருந்தி நின்றதை அறியார்கள் நீசர்

கள் சினந்த காலன் இவர்கள் அழிவை மனத்தில் எண்ணிய பின், மயங்கிய விட்டிற்பூச்சிபோலக் காலன்வாயிற் சென்று வீழ்வார்கள்; மயக்கருர் என்றவாறு.

ஒன்றிய – ஒன்றுபட்ட, ஈரெண்கலை – பதினாறு கலைகள்; என்றது பிராணாயாம மாத்திரை என்பர் சிலர். கலையென்றது ஈண்டு சோடச ஆதாரத்தும் விளங்கும் ஞானவிளக்கத்தை. நீதர் – நீசர் என்பதன்போலி, கன்றியகாலன் – கன்றுதலன்றி வேறொரு உபாயத்தையும் அறியாத காலன். கன்றுதல் - சினத்தல். அதில் – அவன் சினத்தில். வீழ்வார் - தானே வலியச்சென்று வீழ்வர். விளக்கில் விழும் விட்டிற் பறவைபோல என்பதாம். (315)

அங்கி மதிகூட வாகும் கதிரொளி
அங்கி கதிர்கூட வாகும் மதியொளி
அங்கி சிவத்தினிற் கூடவத் தாரகை
தங்கி யதுவே சகலமு மாமே. 864

இம் - எனின், சூரியஒளி தாரகையொளி இவை விளையும் முறையும், பயனும் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : அக்கினியானது சந்திரகலையைக்கூட, சூரியஒளி உண்டாம்; அது கதிரொளியைக்கூட, சந்திரஒளியுண்டாம், அது அநாகத சக்கரத்திலுள்ள சிவத்தினிடம் கூட ஐந்துமுனைகளோடுகூடிய நட்சத்திரஒளியாம். அதில் தங்கியதே எல்லாப் பயனும் விளையும் என்றவாறு.

அங்கி மதியோடு கூடலாவது இடகலையின் வழியாக, குண்டலினி மேல்நோக்கி நடத்தல்; அப்போது சூரியன் ஒளிபோல, ஓர் ஒளி தோன்றும்; அதனையே கதிரொளி என்றது அங்ஙனமே இந்நிலை மாறி அங்கி கூடுவதால், மதியின் ஒளியும், தாரகையின் ஒளியும் உண்டாதலறிக. மூலக்கனலானது இடை பிங்கலை வழியாகக் கலந்து இயங்கும்போது, சூரியச் சோதியும் சந்திரச்சோதியும்; அறுகதமாகிய சுழுமுனையின் உச்சியிலிருக்கும்போது, தாரகைவடிவான சோதியும் தரிசனந் தரும் அத்தரிசனம் நிலைக்கில் எல்லாக்காரியமும் இனிது முடியும் என்பதாம். (316)

ஈராறு பெண்கலை எண்ணிரண் டாண்கலை
பேராமற் புக்குப் பிடித்துக் கொடுவந்து
நேராகத் தோன்றும் நெருப்புற வேபெய்யில்
ஆராத ஆனந்தம் ஆனந்த மானதே. 865

இம் - எனின், ஆனந்தம் விளைவிக்கும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பெண்கலைகள் பன்னிரண்டாம்; ஆண் கலைகள் பதினாறும்; இவை இரண்டையும் மாறிப் போகாதவாறு நிறுத்திச் சுழுமுனையின் வழியாக மேலோங்கிநிற்கும் மூலக்கனலில் பெய்தால், அது அமையாத ஆனந்தம் ஆனந்தமாயிற்று என்றவாறு.

சூரியகலை சந்திரகலைகளை முறையே பெண்கலை ஆண்கலை என்றது. இவ்விருநாடிகளின் வழியாக இயங்கும் பிராணனை நடுநாடியின் வழியாக மேல்

ஏறிச் செல்லும் குண்டலினியோடு சேர்த்தால் அதுவே பேரானந்தமாம் என்றவாறு. (317)

காணும் பரிதியின் காலை இடத்திட்டு
மாணும் மதியதன் காலை வலத்திட்டுப்
பேணியிவ் வாறு பிழையாமற் செய்வீரேல்
ஆணி கலங்காதவ் வாயிரத் தாண்டே. 866

இ-ம் - எனின் இடகலை பிங்கலைகளை மாறிப் பயில்வதால் விளையும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : சூரியகலையாகிய காணப்படுகிற பிங்கலை வழியாக இயங்கும் காற்றை இடகலைவழியாக இயங்கச் செய்தும். சந்திரகலையாகிய இடகலை யால் இயங்கும் காற்றை வலப்பக்கமாகிய பிங்கலை வழியாக இயங்கச் செய்தும், இம் முறையில் தவறு ஏற்படாவண்ணம் பாதுகாத்து ஒழுகுவீராயின் ஆயிரம் ஆண்டு இவ்வுடலாகிய ஆணி கலங்காது நிலைபெறும் என்றவாறு.

பரிதியின்கால். மதியதன்கால் என்பவை பிங்கலைஇடகலை வழியாகஇயங்கும் பிராணவாயுவை உணர்த்தி நின்றன. காணும்பரிதி என்றது சாதகர்க்குச் சோதியாய்த் தோன்றும் இயல்புபற்றி. அங்ஙனமே மாணும் மதி என்றது, அனுபவமாய் மாட்சிமையாகி இன்புறுத்தலின் என்க. பிழையாமல் பேணி என்று உடன்பாட்டானும் எதிர்மறையானும் கூறியது, அதன் இன்றியமை யாமையையும் அருமையையும் விளக்கியவாறு. (318)
ஆணி - உடல்.

பாலிக்கும் நெஞ்சம் பறையோசை ஒன்பதில்
ஆலிக்கும் அங்கே அமரர் பராபரன்
மேலைக்கு முன்னே விளக்கொளி யாய்நிற்குங்
காலைக்குச் சங்கு கதிரவன் தானே. 867

*இ-ள்,* இதுவும் அனுபவம் சித்தித்ததை அறியும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

*இ-ள்:* இவ்வண்ணம் அருளிச்செய்கின்ற அனுபூவத்தால் மனமானது பறையோசையைப்போல நவத்துவாரங்களிலும் ஒலித்துக் கொண்டேயிருக்கும். அப்போது புருவநடுவில், நமக்கு முன்னே, சிவம் விளக்கொளியைப்போலக் காட்சியளிக்கும், சூரியகலை, சந்திரகலைபோல, வெப்பம் நீங்கித் தட்பமாம் என்றவாறு.

பாலிக்கும் நெஞ்சம் - சந்திரயோகத்தினை மேற்கொள்ளும் மனம். ஒன்பது – எண்ணுகு பெயராக நவத்துவாரங்களையும் உணர்த்தி நின்றது.

சந்திரயோகத்தி லிருப்பார்க்கு முதல் அனுபவம், நவத்துவாரங்களிலும் பறையோசை கேட்டல்; அதற்கு மேல் அனுபவம் தீபஜோதி போலச் சிவ தரிசனம் செய்தல்; அதனால் விளையும் அனுபவம் சூரியனும் சந்திரன்போல குளிர்ந்து இன்பூட்டுதல். (319)

கதிரவன் சந்திரன் காலம் அளக்கும்
பொதிரவ னுள்ளே பொழிமழை நிற்கும்
அதிரவ னண்டம் புறஞ்சென் றடர்ப்ப
எதிரவ னீச னிடமது தானே. 868

இ-ம்- எனின், இவ்வியோக அனுபவத்தைச் சந்திர சூரியர்கள்மேலிட்டு அனுபவமாக அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : சூரியனும் சந்திரனும் காலத்தை அளப்பனவாம். இவ்விரண்டையும் மறைத்து வைத்திருக்கின்ற சாதகனுக்குள்ளே பொழிகின்ற மழை போல்வதாகிய அமுதமும் நிலைபெற்றிருக்கிறது. ஆதலால் அதிர்ச்சியுண்டாக வளப்பமான இந்த உடம்பாகிய அண்டத்திற்குமேல், துவாதசாந்தத்திற் சென்று பிராணனை நிறுத்த ஈசன் எதிர்ப்படுவன்; அதுவே சர்வேசுவரன் எழுந்தருளி இருக்கும் இடமாம் என்றவாறு.

உச்சுவாச, நிச்சுவாசமாக ஆயுட்காலத்தை வரையறுக்கும் இடகலை பிங்கலைகளை மறைத்துள்ள சாதகனுடைய உடம்பினுள்ளே பொழிந்து குளிர்விப்பதாகிய மழைபோன்ற அமுதம் நிலைபெற்றிருக்கிறது; அதில் அதிர்ச்சியுண்டாக உடலுக்கும் பன்னிரண்டு அங்குலம் அப்பாற்பட்ட துவாதசாந்தத்தில் பிராணனைக்கொண்டு தியானிக்க, இறைவன் எதிர்ப்படுவன்: அதுவே இறைவன் விளங்கும் இடமாம் என்பது கருத்து. (320)

உந்திக் கமலத் துதித்தெழுஞ் சோதியை
அந்திக்கு மந்திர மாரும் அறிகிலார்
அந்திக்கு மந்திர மாரும் அறிந்தபின்
தந்தைக்கு முன்னே மகன்பிறந் தானே. 869

இம் - எனின், மூலக்கனலை அடக்குமுறையும், அதனால் விளையும் அனுபவமும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: உந்திக்கமலத்தில் உதித்து மேல்நோக்கி எழுகின்ற மூலக்கனலை அடக்கும் மந்திரத்தை யாரும் அறியமாட்டாதாராயினர். அதனை அவர்கள் அறிந்த பிறகு, தகப்பனுக்கு முன்னே மகன் பிறந்த அதிசயத்தை அறிந்தவர்களாவார்கள் என்றவாறு.

தந்தைக்கு முன்னே மகன் பிறந்தான் என்றது விசுத்தி அநாகதங்களில் விளங்குகின்ற சிவம், சத்தி மனோன்மணி சதாசிவம் ஆகிய தந்தையர்க்கு முன்னே மூலாதார முக்கோண நடுவில், பிரணவப் பிள்ளையார் காட்சியளிப்பர் என்பதை அறிவித் தவாறு. (321)

**ஊதியம் ஏதும் அறியார் உரைப்பினும்**
**ஒதியும் ஏதும் அறியாத ஊமர்கள்**
**ஆதியும் அந்தமும் அந்திக்க வல்லிரேல்**
**வேதியன் அங்கே வெளிப்படுந் தானே,** 870

இம் - என்னி, இதுவும் மூலமும் முடிவும் அந்தித்தலின் பயன் அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: பரிபாகமுற்ற சகலான்மாக்களிடத்து வைத்தகருணையால் நாம் இப்பேருண்மையை எளிதாக உரைப்பினும், அவர்கள் அதன்பயனை அறியார்; சொல்லியுந் தெரியாதவர்கள், ஊமையர் களாய் மூலாதாரம் தொடங்கி ஆஞ்ஞாசக்கரம்வரை மூலக்கனலை அடக்கியாள வல்லமையுடையர்களாக நீங்கள் ஆனால் வேதங்களை அருளிச்செய்தவனாகிய சர்வேசுரன் அங்கே வெளிப்பட்டருளுவன் என்ற வாறு.

மூலாதாரம் தொடங்கித் துவாதசந்தம்வரை ஆறும் கடந்த நிலைகளில், பிரணவத்தோடு கூடிய திருவைந்தெழுத்தையும் சிவச் சோதியையும் தியானித்தால் துவாதசாந்தப் பெருவெளியில், நூறுகோடி சூரியப் பிரகாசம் உள்ளதாகச் சிவம் காட்சிவழங்கும் என்பதாம். வேதியன் என்றது ஞானசொரூபியாதலை விளக்கிற்று. (322)

பாம்பு மதியைத் தினலுறும் பாம்பினைத்
தீங்கு கதிரையுஞ் சோதித் தனலுறும்
பாம்பு மதியும் பகைதீர்த் துடன்கொளீஇ
நீங்கல் கொடானே நெடுந்தகை யானே. 871

இ-ம் - எனின், வேறொருவாற்றான் மேலதை விளக்குதல் நுதலிற்று.

இ-ள்: பாம்பு சந்திரனைத்தின்னும். அப் பாம்பையும் கனற்றித் தீங்குசெய்யும் கதிரோனையும் ஆராய்ந்து அங்குசென்று பற்றும் பாம்புக்கும் மதிக்கும் பகையை நீக்கி, ஒன்றுகூட்டி என்றும் நீங்காமல் இருத்துவோன் பெருந்தகையோனவன் என்றவாறு.

பாம்பு – குண்டலி. மதி – மதிமண்டலமாகிய சகத்திராரம். பாம்பு மதியைத் தினலுறுதலாவது குண்டலி சகத்திராரம் வரையெழுந்து பற்றுதல். மூலக்கனல் குண்டலியோடு. சூரியக்கிரந்தியையும் தாண்டிச் செல்லப் பயிலின், குண்டலி சகத்திராரத்தில் முரண்பாடவிந்து தங்கும். இவ்வண்ணம் என்றும் நீங்காமல் செய்பவனே பெருந்தகையோனாகிய சிவயோகியாவன் என்பது கருத்து. (323)

அயின்றது வீழ்வன வுந்துயில் இன்றிப்
பயின்ற சசிவீழ் பொழுதில் துயின்று
நயந்தரு பூரணை உள்ள நடத்தி
வியந்தரு பூரணை மேவுஞ் சசியே. 872

இ-ம் - எனின், கிரகணத்தைக்கொண்டு, சந்திர யோகானுபவத்தை விளக்குதல் நுதலிற்று.

இ-ள் : விழுங்கிய சந்திரனை விடுதலை செய்யு மளவும் துயில்துறந்து பழகிய சந்திரன் அத்த மிக்குங் காலத்துத் தூங்கி, மனத்தை எப்போதும் மதிமண்டலத்தின் பூரணப் பிரகாசத்திலேயே நிலைத்திருக்கச் செய்யும் என்றவாறு.

அயின்றது வீழ்வளவும் துயிலின்றி; மதிமண்ட லத்துச் சென்றுபற்றிய குண்டலினிசத்தி அதனோடு ஒன்றுபட்டு மயங்குமளவும், விழிப்பாய் இருந்து கிரகணம் விடும்வரையில் தூக்கமில்லாமல் இருந்து என்றும் வேறுபொருள் தோன்றுதல் காண்க.

பயின்ற சசி வீழ்பொழுதில் துயின்று என்பது இங்ஙனம் பழகிய மதிமண்டலத்திலிருந்து அமிழ்து பொழிகின்ற காலத்தில் அதனை உண்டு ஆனந்தா தீதத்தில் அழுந்தி, சந்திராத்தமனத்தில் தூங்கி என்றும் வேறு பொருள் தோன்றுதல் காண்க.

நயந்தரு பூரணை உள்ளம் நடத்தி; பேரின் பத்தை விளைக்கும் பரிபூரணப் பொருளாகிய பரசிவத்திடத்திலேயே மனத்தை ஒன்றச்செய்து பூரணை திதியில், மனத்தை நடத்தி எனவும் வேறு பொருள்படுதல் காண்க.

சசி வியந்தரு பூரணை மேவும்-ஆன்மா வியாபகமாயிருக்கிற பூரணப் பொருளிடத்தில் தாமும் பூரணத் தன்மையைப் பொருந்தும் ; சசி-சந்திரன். சசம் - முயல். அதனைக் களங்கமாகப் பெற்றவன் சந்திரன்.

அதுபோல ஆணவமலம் வலியொடுங்கினாலும், வாதனையாகத் தாக்க அதனால் களங்கமுற்ற ஆன்மாவை விளக்கிநின்றது இச்சொல். வியம்-பெருமை அகலம். வியந்தரு பூரணை மேவும் என்றது, அத்தகைய ஆன்மா சிவபூரணத்துள் ஒன்றி நிற்கும் என்பதாம். (324)

சசியுதிக் கும்அள வுந்தியி லின்றிச்
சசியுதித் தானேல் தனதூண் அருந்திச்
சசிசரிக் கின்றள வுந்துயி லின்றிச்
சசிசரிப் பின்கட்டன் கண்டுயில் கொண்டதே. 873

இம் - எனின், இதுவுமது.

இ - ள்: சந்திரன் உதிக்குமளவும் தூக்கத்தை ஒழித்து, உணவையருந்தி, அச்சந்திரன் சஞ்சரிக்கும் அளவும் தூக்கம் கொள்ளாதபடி அது அத்தமித்த பின் தூங்குவானும் என்றவாறு.

சசிஉதித்தல் - மதிமண்டலத்து பூரணனோடு கூடி பூரணத்துவம் எய்திநின்ற ஆன்மா, அந்நிலையிலேயே அழுந்தியிருந்து ஆனந்தத்தை அனுபவிக்கும்வரையில் மலவாதனை தாக்குண்ணாதவாறு இருத்தலே துயிலொழிந்திருத்தலாம்.

தனது ஊண் அருத்துதல் - மதிமண்டலத்தில் ஊறும் அமிழ்தை அருந்துதல். சசி சரிக்கின்றளவும் துயிலாமல் என்றது சந்திர கலையில் பிராணன் இயங்கும் வியவகார தசையில் சோம்பலின்றி என்பதாம்.

சசி சரிப்பின் - சந்திரன் சரித்தலுக்குப் பின்; அதாவது அத்தமித்தபின். சரி - சரித்தல்; முதனிலைத் தொழிற்பெயர். கட்டன் - கட்டுதலை யுடையவன். கட்டு - ஆயாமம்; அஃதாவது பிராணயாமப் பயிற்சியுடையவன் என்பதாம். கண் துயில் கொண்டது - பொறி புலன்களை அடக்கி ஒன்றிலேயே ஒன்றி நின்றது. (325)

ஊழி தரியா திருக்கின்ற யோகிகள்
நாழிகை யாக நமனை அளப்பார்கள்
ஊழி முதலாய் உயர்வார் உலகினில்
தாழவல் லார்இச் சசிவண்ண ராமே. 874

இ - னின், யோகியரின் ஆற்றலுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஊழ்வினையைத் தாங்காதிருக்கின்ற சந்திரயோகியர்கள், நாழிகையைக் கருவியாகக் கொண்டு நமனையே அளந்துவிடுவார்கள். இவ்வுலகத்தில், ஊழிகளுக்கெல்லாம் முதல்வனாகிய இறைவனைப்போல உயர்ந்து விளங்குவார்கள். அவனடியில் இடைவிடாது தாழவல்லவர்கள் சந்திரனைப் போல அமுதமயம் ஆவர்கள் என்றவாறு.

ஊழி – விதி. ஊழ் - முறைமை; அதனுடையது ஊழியாகலின். ஊழி தரியாதிருக்கின்ற யோகிகள் விதியை வென்றவர்களாதலின் இங்ஙனம் கூறப்பட்டது. நமன் நாழிகையைத் துணைக்கொண்டு நம்மை அளப்பவன். அதனால் அவன் காலன் எனப் படுவான். அவனையே காலத்தைக் கருவியாகக்கொண்டு யோகியர்கள் அளக்கின்றார்கள் என்றது காலனை வென்றவர்கள் என்றபடி.

ஊழி – ஊழிக்காலம். ஊழிமுதல் - சங்காரகாரணன். தாழவல்லார் – தோயவல்லவர்கள். சிவனருளில் என இடம் வருவித்து உரைத்துக்கொள்க. சசிவன்னர் - சந்திரனைப்போல அமுதமயமானவர். (326)

தண்மதி பானுச்சிச் சரிபூமி யேசென்று
மண்மதி காலங்கள் மூன்றும் வழிகண்டு
வெண்மதி தோன்றிய நாளில் விளைந்தபின்
தண்மதி வீழ்வளா விற்கண மின்றே. 875

இ - ளின், சந்திரயோகத்தால் சந்திரனைத் தரிசித்தபின் விளையும் அனுபவம் பெரிதென்றல் நுதலிற்று,

இ-ள் : சூரியகிரந்தி சந்திரகிரந்திகளைப் பிளந்துகொண்டு,உச்சிவழியாகிய நிலத்தே சென்று, உலகத்தாரால் மதிக்கப்படுகிற இறப்பு நிகழ்வு எதிர்வு என்ற மூன்று காலங்களையும் வென்று, அவைவரும் வழியைக்கண்டு, ஆஞ்ஞாசக்கரத்தில், மதிமண்டலத்தைக்கண்ட காலத்தில், அதிலிருந்து, விளைந்து

விழுகின்ற அமுதத்தின் அளவிற்குக் கணக்கில்லை யாம் என்றவாறு.

நடுநாடி வழியாக குண்டலினியோடு பிராணன் மேலேறுகின்றபோது, சூரியகிரந்தி சந்திரசிரந்தி களைப் பிளந்துகொண்டு உச்சியாகிய ஆஞ்ஞையில் சேருகிறது என்பது யோகநூல் துணிபாதலின் 'தண்மதி பானு உச்சிச்சரிபூமியே சென்று' என்று அருளியது. சரி வழி; சஞ்சரித்தலுக்கு இடந் தருவதாதலின்.

காலங்கள் மூன்றையும் வழி காணுதலவேது, காலங்களையும் அவற்றிற்குக் காரணத்தையும் ஆராய்தல்; அதாவது வெல்லுதல். வெண்மதி தோன்றிய நாளில் - மதிமண்டலம் புறப்பட்ட காலத்து. வீழ்வு அளவில் கணம் இன்றே - வீழ்தலை யுடைய அமுதின் அளவுக்குக் கணக்கில்லையாம். கணம் — கணித்தலையுடையது (327)

வளர்கின்ற ஆதித்தன் தன்கலை யாறும்
தளர்கின்ற சந்திரன் தன்கலை யாறும்
மலர்ந்தெழு பன்னிரண் டங்குலம் ஓடி
அலர்ந்து விழுந்தமை யாரறி வாரே. 876

இம் - எனின். சூரியகலை சந்திரகலைகள் பன்னி ரண்டங்குலம் ஓடி, மதிமண்டலம் மலர்ந்ததை யறிவார் பெரியர் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : வளர்கின்ற சூரியகலை ஆறும் தேய் கின்ற சந்திரகலை ஆறும் விரிந்து எழுந்து, பன்னி

ரண்டங்குலம் மேற்சென்று, சகத்திராரத்து அலர்ந்து விழுந்ததை யாரறிவார் என்றவாறு.

வளர்தலும் தேய்தலுமில்லாத சூரியனை. வளர்கின்ற ஆதித்தன் என்றது, அபரபக்கம் சூரியனுக்கு உரியதாகலின்; அபரபக்கத்து விளக்கத்தையுடைய ஆதித்தன் என்றவாறும். ஆதித்தன் தன் வளர்கின்ற கலையாறும் எனக்கூட்டிக் கலைக்கு அடையாக்கலுமாம். அதிலும் இவ்வையம் உண்டாதற்கு உரியதே என எண்ணி ஒழிக,

தளர்கின்ற சந்திரன் – தேய்பிறைச்சந்திரன். 'கண்டிப்பர் நால்விரல், கூடிக்கொளில் கோல ஐந்தெழுத்தாமே' என்ற திருமந்திரத்தில் கூறியதை விளக்கி, மேலும் எவ்வளவு கூடவேண்டும்? கூடி எங்கே நிறுத்தவேண்டும்? என்பதை விளக்குவது 'ஆதித்தன் தன்கலை ஆறும், சந்திரன்கலை ஆறும், ஆகப் பன்னிரண்டங்குலம் ஓடி அலர்ந்து விழுந்தமை' என்ற இப்பகுதி. அலர்ந்து விழுந்தமை அறிவார் யார் ? மலர்ந்து தங்கியமையை அறிவார் யார்? என்பது, இங்ஙனமன்றி பன்னிரண்டங்குலம் வெளிச்சென்று கழிந்தமையை என ரேசகத்தைக் கூறிற்று என்பாரும் உளர். சந்திர யோகத்து ஓடு கின்ற வாயுவை உயரத்துப் பிடித்தலையே கூறுகின்ற அவ்வுரை பொருந்தாமை இன்றாராதலின் ஈண்டு அறிக. (328)

ஆமுயிர்த் தேய்மதி நாளே யெனல்விந்து
போம்வழி எங்கணும் போகாது யோகிக்குக்
காமுற இன்மையிற் கட்டுண்ணு மூலத்தில் 877
ஓம்மதி யத்துள்விட் டுரையுணர் வாலே.

இம் - எனின், விந்துகட்டும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வளர்ச்சியுறுகின்ற உயிர்க்கு அபரபக்கம் என்று சொல்லப்படுவது விந்து போம்வழியெங்கும் போகாதிருப்பதாம். ஏதுவென்னென்றால் யோகிக்குக் காம இச்சை இல்லாமையாலும், ஓங்காரத்தை மதி மண்டலமாகிய ஆஞ்ஞையில் வைத்துத் தியானிக்கும் தியானத்தாலும் மூலாதாரத்திலேயே விந்து கட்டுப்பட்டு நிற்கும் என்றவாறு.

ஆன்மாவுக்குத் தேய்மதி நாளாவது, சூரியகலை விஞ்சி, விந்துவெளிப்படும் வழிகளால் வெளிப்படாது. காம இச்சையின்றி மூலாதாரத்திலே கட்டுண்டிருக்கும் காலமாம். அப்போது யோகி பிரணவத்தை மதிமண்டலத்து வைத்து அதையே செபித்துக்கொண்டு, தியானித்துக் கொண்டு இருப்பன் என்பது கருத்து. ஓம் மதியத்துள் வைத்து எனப்பிரிக்க. (329)

வேறுறச் செங்கதிர் மெய்க்கலை யாறொடுஞ்
சூறுற நான்குந் தொடர்ந்துற வேநிற்கும்
ஈறிலி னன்கலை யீரைந்தொ டேமதித்
தாறுட் கலையுள் அகலுவா வாமே. 878

இம் – எனின், உவா நாளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: தனித்து இயங்குகின்ற சூரியகலை ஆறோடு கீழ்ப்புறம் நோக்கிச் செல்வதான நான்கு

கலைகளையும் இயைந்து இனமாக நிற்கும்படி முடி வில்லாத சூரியகலை பத்தோடு சந்திரனுடையதான ஆறுகலைகள் கூட அது அகன்ற உவா நாளாகும் என்றவாறு.

சூரியகலை பத்து சந்திரகலை ஆறு அடங்கியிருப் பதே உவா என்றபடி,

சூரியகலைகள் பத்தென்றது, கீழும் மேலுமாகச் செல்லும் கலைகள் பத்துமாம். கூறு – கீழ்ப்புறம். இனன்-சூரியன். ஈரைந்து என்று இரண்டு ஐந்தாகப் பிரித்ததே மேற்கூறியாங்கு இயங்கும் முறைபற்றி யென்க. (330)

உணர்விந்து சோணி உறவினன் வீசும்
புணர்விந்து வீசுங் கதிரிற் குறையில்
உணர்வும் உடம்பும் இவையொக்க நிற்கில்
உணர்வும் உடம்பும் ஒருக்கால் விடாவே. 879

இ-ள் – எனின், சூரியகலை குறையில் உளதாகும் கேடு உணர்த்துதல் நுதலிற்று

இ-ள்: உணரப்படுவதாகிய விந்துவானது சுரோணிதத்தைப் பொருந்த சூரியகலையை வீசுவ தாம். புணர்ச்சிக் காலத்துச் சூரியகலை வன்மை குறையின் விந்து மிகுதியாகக் கழியும். மனனுணர் வும், உடம்புமாகிய இவ்விரண்டும் ஒத்ததன்மை யில் நிற்குமாயின் அவ்வுணர்ச்சியும் உடம்பும் விந் துவை ஒருக்காலும் நழுவவிடாது என்றவாறு.

விந்து - சுக்கிலம், சோணி-சுரோணிதம். சூரிய கலை, வன்மை குறையுமானால் விந்து மிகுதியாகக்

ஆதலால் மனத்தைக் கீழ்ப்போகாதவாறு காத்தும், உடம்பை மிகுதியாக அலட்டிக் கொள்ளாமலும். காப்பாற்றின் விந்துநட்டம் இல்லையாம் என்றவாறு (331)

விடாத மனபவ னத்தொடு மேவி
நடாவு சிவசங்கின் நாதங் கொளுவின்
கடாவிடா ஐம்புலன் கட்டுண்ணும் வீடு
படாதன இன்பம் பருகார் அமுதமே. 880

இ-னின், மனமும் பிராணனும் அடங்குதலால் ஆம்பயன் உணர்த்ததுல் நுதலிற்று.

இ-ள்: பற்றிவிடாத மனமானது பிராண வாயுவோடு கலந்து எம்மையெல்லாம் நடாத்துகின்ற சிவனது சங்கின் ஓசை போலும் ஓசையோடு கலந்து மேவுமாயின் முரட்டுத்தனத்தை விடாத ஐந்து புலன்களும் தம் எண்ணப்படிப் போகாமல் கட்டுப்படும்; இன்பம் என்றும் நீங்காது; பருகத் தக்க அமுதம் ஆம் என்றவாறு.

யோகி மேவிக் கொளுவின் புலன் கட்டுண்ணும்; இன்பம் வீடுபடாதன; பருகார் அமுதம் என முடிக்க. மனபவனம் - மனமும் பிராணனும். பவனம் - காற்று, பிராணனும் மனமும் ஒடுங்கிய போது உள்ளுக்குள் சங்கத்தொனி கேட்கும். கடாவிடா ஐம்புலன் - தனது முரட்டுத் தனத்தை விடாத ஐம்புலன்கள். எந்தப் பொருளையும் உசாவி அறியவொண்ணுதபடி, விஷயசுகத்தில் ஈடுபடுத்தி நிற்கும். புலன்கள் என்றும் ஆம். கடாவுதல் - உசாவுதல். (332)

அமுதப் புனல்வரு மாற்றங் கரைமேற்
குமிழக்கத் தற்சுட ரைந்தையுங் கூட்டிச
சமையத்தண் டோட்டித் தரிக்கவல் லார்க்கு
நமன்இல்லை நற்கலை நாள்இல்லை தானே. 881

இம் - எனின், சந்திரயோகியர்க்குச் சாக்காடில்லை யென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: சிவாமுதமாகிய நீர் ஊறிவருகின்ற ஆற்றங்கரையின்மேல் குமிழி உண்டாக, சுடர்கள் ஐந்தையும் ஒன்றுகூட்டி, சமைக்கப்பட்ட தண்டாகிய வீணாதண்டினூடே செலுத்தி மேல்நிலையில் தரிக்க, வல்லவர்களுக்கு நமன் இல்லை; நல்ல கலை உண்டாம்; அவர்களுக்கு இறுதிநாளும் இல்லை என்றவாறு.

அமுதப்புனல் - மதிமண்டலத்து அமுதமாகிய நீர். ஆற்றங்கரை என்றது இடை பிங்கலை சுழுமுனை யாகிய ஆறுகளின் இருமருங்கினையும். கற்சுடர் ஐந்து - சிவம், சத்தி, நாதம், பிந்து, சீவன் ஆகிய ஐந்து ஒளிகளையும். சமை அத்தண்டு - குண்டலினி இடையறாது செல்லுதற்குப் படைக்கப்பட்ட வீணாதண்டும். ஓட்டி - அதன் ஊடாக உள்ளே செலுத்தி. நற்கலை ஆம் என ஒரு சொல் வருவித்து முடிக்க. (333)

உண்ணீ ரமுத முறுமூ றலைத்திறந்
தெண்ணீர் இணையடித் தாமரைக் கேசெலத்
தெண்ணீர்ச் சமாதி யமர்ந்துதீ ராநலக்
கண்ணுற் றெருடேசென்று கால்வழி மாறுமே. 882

இம் – எனின், சந்திரயோகத்தின் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : உண்ணத்தக்க நீராகிய அமுதம் ஊறுகின்ற ஊற்றைத் திறந்து தெளிந்த நீர் மேனியினை உடையதாகிய திருவடித்தாமரையிற் செல்ல, மிகத் தெளிவாகிய சமாதியிலிருந்து என்றும் நன்மை மாறாத ஞானக்கண்ணின் வழியாக மேற்சென்று காற்று இயங்கும் வழியை மாற்றிக்கொள்ளுங்கள் என்றவாறு.

சந்திரயோக முறையால் சமாதியிருப்பின். சிவாமுதத்தைத் திருவடித்தாமரையிற் செலுத்தலாம் என்பது கருத்து.

ஊறல்-ஊற்று ; கண் ஆறு – ஞானக்கண்ணாகிய வழி. (334)

மாறு மதியு மாதித்தனு மாறின்றித்
தாறு படாமல் தண்டோடே தலைப்படில்
ஊறு படாதுடல் வேண்டும் உபாயமும்
பாறு படாஇன்பம் பார்மிசைப் பொங்குமே. 883

இம் – எனின், இதுவுமது.

இ-ள் : இங்ஙனம் மடைமாறிச் செலுத்தப்படுகின்ற சந்திரகலையும் தம்முள் மாறில்லாமல் பிரிவில்லாதபடி முதுகந்தண்டோடு மேற்சென்று மதிமண்டலத்துட் பொருந்துமாயின் உடலழியாது ; யோகத்திற்கு வேண்டிய உபாயங்களும் சிதறிப்போகபூமியில் இன்பம் பொங்கும் என்றவாறு.

தாறு - பிரிவு . பாறுபடுதல் - சிதறுதல்,

இடகலை பிங்கலை வழியாக அன்றி நடுநாடியின் வழியாகப் பிரமரந்திரத்திற் சென்று நிலைத்திருக்குமாயின் உடலுக்கழிவில்லை; யோக உபாயங்கள் சித்தியாம்; என்றும் இன்பம் பெருகும் என்பது கருத்து (335)

திருமந்திரம் - முதல் மூன்று தந்திரம்

பஞ்சாக்ஷரதீபம் என்னும் உரையுடன் முற்றிற்று.



உ

சிவமயம்

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

## பாயிரம்

[ எண் - பக்க எண் ]

# முதல் தந்திரம்

# இரண்டாம் தந்திரம்

## மூன்றாம் தந்திரம்

---

## மூன்றாம் தந்திரம்

உ
சிவமயம்

சிவநேயச் செல்வரீர் !

திருக்கயிலாய பாம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

இருபத்துமூன்றாவது குரு மகாசந்நிதானம்

**சீர் வளர் சீர் சிவப்பிரகாச பண்டாரச்சந்நிதி அவர்கள்**

திருவுளப்பாங்கின் வண்ணம்

நிகழும் திருவள்ளுவர் - ஆண்டு 2024, மெய்கண்டார் - ஆண்டு 771, சீமுக - ஆண்டு மார்கழி-மாதம் 27-ஆம் நாள் ( 11—1—94 ) செவ்வாய்க்கிழமை முதல் திருவள்ளுவர்- ஆண்டு 2025 தை - மாதம் 7 அசுவதி நாள் ( 20—1—94 ) வியாழக்கிழமை வரை

ஆதீனக் குருமுதல்வர்

**அருள்திரு நமசிவாய மூர்த்திகள் மகரத்தலைநாள் குருபூசை விழா**

சிறப்பாக நடைபெறும். விழா நாட்களில்

**அப்பர் சுவாமிகள் தேவாரத்தில் சமய விளக்கம் பற்றிய விரிவுரைகள்**

வேணுவனலிங்க விலாசத்திலும் ( கொலுமண்டபம் )

கலைநிகழ்ச்சிகள் அம்பலவாணர் கலையரங்கத்திலும் நிகழும்.

20—1—94 வியாழக்கிழமையன்று குருபூசை நிகழ்வுறும்.

அன்பர்கள் அனைவரும் கலந்துகொண்டு குருவருளும் திருவருளும் பெற்று இன்புற விரும்புகின்றோம்.

இங்ஙனம்,

திருவாவடுதுறை,
20—12—93.

**காறுபாறு - வைத்தியநாதத் தம்பிரான்.**

முதல் திருநாள் | 11—1—94 | செவ்வாய்க்கிழமை

காலை மணி 5-30 - 6-00 கொடியேற்றம்.

திருமுறை விண்ணப்பம் ; "தேவார இசைமணி"
மாலை மணி 5-00 திரு. சு. சம்பந்த தேசிகர்
திருமுறைப் பணியாளர்: அருள்மிகு மகாலிங்கசுவாமி திருக்கோயில்
திருவிடைமருதூர்,

வரவேற்புரை : ,, 6-00 புலவர் தவத்திரு. சுயம்புநாதத் தம்பிரான்
திருவாவடுதுறை

சிறப்புரை ; ,, 6-10 திரு. V. வேலுசாமி, B. Sc.,
ஆணையர், நகராட்சி அலுவலகம் - மயிலாடுதுறை.
"பெரும்புலவர், நல்லாசிரியர்"

சொற்பொழிவு ; ,, 6-40 திரு. பழநி. கிருஷ்ணன், M. A.,
தூத்துக்குடி
"அடைந்தவர்க்கு அன்பர்போலும்"

மகிழ்வுரை ; ,, 3-00 திரு. S. பாலச்சந்திரன், M. A., M. Ed.,
தலைமை ஆசிரியர், ஆதீனம் நடுநிலைப்பள்ளி, திருவாவடுதுறை

குருமரபு வாழ்த்து ; ,, 8-10

---

கலை நிகழ்ச்சி ; இரவு மணி 8-15 நாகசுவர இன்னிசை
வானொலி புகழ், நெல்லை, திரு. V. செல்லப்பா திருநெல்வேலி

## இரண்டாம் திருநாள் 12—1—94 புதன்கிழமை

திருமுறை விண்ணப்பம் ; ' திருமுறைக் கலாநிதி '

மாலை மணி 5-00 திரு. சொக்கலிங்க தேசிகர்,
திருமுறைப் பணியாளர்:
அருள்மிகு மாயூரநாத சுவாமி திருக்கோயில், மயிலாடுதுறை

வரவேற்புரை ; ,, 6-00 தவத்திரு. மீனாட்சிசுந்தரத் தம்பிரான்
திருவாவடுதுறை.

'' பாரதி காவலர் ''

சிறப்புரை : ,, 6-10 டாக்டர் திரு. K. இராமமூர்த்தி, D. Litt., D. cul., Dip. in Journalism.
ஆசிரியர், '' அம்மன் தரிசனம் '' சென்னை.

சொற்பொழிவு ; ,, 6-40 டாக்டர் திருமதி. சு. சிவகாமசுந்தரி
பேராசிரியர், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.
'' ஐவகையால் நினைவார்பால் அமர்ந்து தோன்றும் ''

மகிழ்வுரை ; ,, 8-00 புலவர் திரு. சி. மகாலிங்கம், M. A., B. Ed.,
தலைமைத் தமிழாசிரியர், ஆதீனம் மேனிலைப்பள்ளி,
திருவிடைமருதூர்.

குருமரபு வாழ்த்து ; ,, 8-10

---

கலை நிகழ்ச்சி ; இரவு மணி 8-15 நாகசுவர இன்னிசை

திரு. N. S. சுவாமிநாதன், B. Com..
பேராசிரியர், ஸ்ரீ சத்குரு சங்கீத வித்யாலயம், சங்கீதக் கல்லூரி, மதுரை

மூன்றும் திருநாள் 13—1—94 வியாழக்கிழமை

| | | |
|---|---|---|
| திருமுறை விண்ணப்பம் ; | | " தமிழ்மறை இன்னிசைப் பண்மணி " |
| | மாலை மணி 5-00 | திரு. T. M. விசுவலிங்க ஓதுவார்<br>திருவாவடுதுறை |
| வரவேற்புரை ; | ,, 6-00 | புலவர் தவத்திரு. சுயம்புநாதத் தம்பிரான்<br>திருவாவடுதுறை |
| சிறப்புரை ; | ,, 6-10 | திரு. V. பாலுசாமி, B. E., M. I. E.,<br>கண்காணிப்புப் பொறியாளர்,<br>பொதுப்பணித்துறை - தஞ்சாவூர். |
| சொற்பொழிவு ; | ,, 6-40 | முனைவர் திரு. சு. சாமிஐயா, M. O. L., Ph. D.,<br>தமிழியல்துறைத் தலைவர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்,<br>அண்ணாமலைநகர்.<br>" அவ்வுருவாய் நிற்கின்ற அருளும் தோன்றும் " |
| மகிழ்வுரை ; | ,, 8-00 | திரு. க. முருகையன், M. A., B. Ed.,<br>தலைமை ஆசிரியர், ஆதீனம் நடுநிலைப்பள்ளி, திருவிடைமருதூர் |
| குருமரபு வாழ்த்து : | ,, 8-10 | |

---

கலை நிகழ்ச்சி ; இரவு மணி 8-15 பொம்மலாட்டம்

ஸ்ரீ முருகன் சங்கீத பொம்மலாட்ட சபா
கும்பகோணம்.

# மகாவித்துவான் நினைவுப் பரிசு வழங்கல்

திருஞானசம்பந்த சுவாமிகள் பதிகம் அருளி, தம் தந்தையார் சிவவேள்வி செய்யத் திருவாவடுதுறை அருள்மிகு மாசிலாமணிப் பெருமானிடம் பசும்பொன் ஆயிரம் கொண்ட உலவாக்கிழி பெற்ற அற்புத நிகழ்ச்சி, பெருமான் ரதசப்தமி விழாவின் ஐந்தாம் திருநாளில் ஐதிக விழாவாக நடைபெற்று வருகிறது.

இவ்விழா நாள் ஆதீன மகாவித்துவான் திரு. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் நினைவு நாளும் ஆகும். சீர்வளர்சீர் குரு மகாசந்நிதானம் அவர்கள் மகாவித்துவான் பிள்ளையவர்களின் இனிய நினைவுச்சின்னமாக அவர்கள் திருவாவடுதுறையில் வசித்த வீடு இருந்த இடத்தில் புதுமையாக அழகிய மாளிகையை அமைப்பித்து **1993**-ஆம் ஆண்டு அந்நாளில் திறப்பு விழா நிகழ்த்தியருளினார்கள்.

மேலும், பொற்கிழி வழங்க அவ்விழா நாளில் தமிழ் முதறிஞர் ஒருவர் சிறப்பிக்கப்பெற வேண்டும் என மகிழ்ந்து ஆதீனப் புலவர் திரு. ஆ. சி. முருகையனார் **M. A.,** அவர்கட்கு அருள்திரு நமசிவாய மூர்த்திகள் ஆசிக் கவசமாகப் பட்டாடை போர்த்தி, ஆயிரம் வெண்பொற்காசுகள் வழங்கி வாழ்த்தியருளினார்கள்.

இவ்வாண்டு **14—1—94** அன்று இரவு அருள்திரு நமசிவாயமூர்த்திகள் பூசை நிறைவில் சீர்வளர்சீர் குரு மகாசந்நிதானம் அவர்கள், மகாவித்துவான் பிள்ளையவர்களின் நூல்களை ஆய்வுக்குரிய பொருளாகக் கொண்டு 'டாக்டர்' பட்டம் பெற்றவர்களும் திருச்சி தூயவளவனார் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவருமாகிய பேராசிரியர் திரு. ப. ஆறுமுகம் **M. A., Ph. D,** அவர்கட்கு மகாவித்துவான் பிள்ளையவர்கள் நினைவுப் பரிசு வழங்கி ஆசியருளுகிறார்கள்.

நான்காம் திருநாள் 14—1—94 வெள்ளிக்கிழமை

| | | |
|---|---|---|
| திருமுறை விண்ணப்பம் ; | | " தமிழ்மறை இன்னிசைப் பண்மணி " |
| | மாலை மணி 5-00 | திரு. T. M. சபாபதி ஓதுவார்<br>திருவாவடுதுறை |
| வரவேற்புரை ; | ,, 6-00 | தவத்திரு. மீனாட்சிசுந்தரத் தம்பிரான்,<br>திருவாவடுதுறை. |
| சிறப்புரை ; | ,, 6-10 | திரு. மு. பிச்சையா,<br>மக்கள் தொடர்பு அலுவலர்,<br>செய்தி, மக்கள் தொடர்பு அலுவலகம், நாகப்பட்டினம். |
| சொற்பொழிவு ; | ,, 6-40 | முனைவர் திரு. ப. ஆறுமுகம், M. A., Ph. D.,<br>தமிழ்த்துறைத் தலைவர்,<br>தூய வளவனூர் கல்லூரி, திருச்சி.<br>" வேண்டுவார் வேண்டுவதே ஈவான் " |
| மகிழ்வுரை ; | ,, 8-00 | திரு. K. வீராசாமி, M. A., B. Ed.,<br>தமிழாசிரியர்,<br>ஆதீனம் மேனிலைப் பள்ளி, திருவிடைமருதூர். |
| குருமரபு வாழ்த்து ; | ,, 8-10 | |

கலை நிகழ்ச்சி ; இரவு மணி 8-15 முருகன் பொம்மலாட்ட சபா, கும்பகோணம்.

ஐந்தாம் திருநாள் 15—1—94 சனிக்கிழமை

| | | |
|---|---|---|
| திருமுறை விண்ணப்பம் ; | மாலை மணி 5-00 | " திருமுறை இன்னிசைமணி "<br>திரு. ந. சோமசுந்தர ஓதுவார்<br>திருமுறைப் பணியாளர், அருள்மிகு ஆத்மநாதசுவாமி திருக்கோயில்,<br>திருப்பெருந்துறை. |
| வரவேற்புரை ; | ,, 6-00 | புலவர் தவத்திரு. சுயம்புநாதத் தம்பிரான்<br>திருவாவடுதுறை. |
| சிறப்புரை ; | ,, 6-10 | டாக்டர் திரு. A. தசரதன்<br>ஓலைச்சுவடித்துறைத் தலைவர்,<br>ஆசியவியல் ஆய்வு நிறுவனம், சென்னை. |
| சொற்பொழிவு ; | ,, 6-40 | புலவர் திரு. சொக்கலிங்கசுவாமி<br>தஞ்சாவூர்.<br>" சைவநெறி விளக்கும் தமிழ்ச்சுவடிகள் " |
| மகிழ்வுரை ; | ,, 8-00 | திரு. சு. நாராயணசுவாமி, M. A.. B. Ed.,<br>ஆசிரியர், ஆதீனம் நடுநிலைப்பள்ளி, திருவிடைமருதூர். |
| குருமரபு வாழ்த்து ; | ,, 8-10 | |

| | | |
|---|---|---|
| கலை நிகழ்ச்சி ; | இரவு மணி 8-15 | திருமுறை இசை<br>ஸ்ரீ பாகம்பிரியாள் மாதர் கழகம்,<br>தூத்துக்குடி. |

ஆறும் திருநாள் 16—1—94 ஞாயிற்றுக்கிழமை

| | | |
|---|---|---|
| திருமுறை விண்ணப்பம் ; | | 'தேவார இசைமணி' |
| | மாலை மணி 5·00 | திரு. ந. சொக்கலிங்க ஓதுவார்,<br>திருமுறைப் பணியாளர்,<br>அருள்மிகு வேதகிரீசுவரர் திருக்கோயில், திருக்கழுக்குன்றம். |
| வரவேற்புரை ; | ,, 6·00 | தவத்திரு. விசுவநாதத் தம்பிரான்,<br>ஆதீனக் கிளை மடம், (மெய்கண்டார் மடம்) காஞ்சிபுரம். |
| சிறப்புரை ; | ,, 6·10 | திரு. கு. தாமோதரன்<br>துணை இயக்குநர், தொல்பொருள் ஆய்வுத்துறை - சென்னை. |
| சொற்பொழிவு ; | ,, 6·40 | முனைவர் திரு. செ. இராசு,<br>பேராசிரியர்: கல்வெட்டுத்துறை,<br>தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சை.<br>'செப்பேடுகள் சொல்லும் சிவநெறிச் செய்திகள்' |
| மகிழ்வுரை ; | ,, 8·00 | திரு. வை. சிவராமன், M. A., M. Ed.,<br>தலைமை ஆசிரியர்,<br>ஆதீனம் மேனிலைப் பள்ளி, திருவிடைமருதூர், |
| குருமரபு வாழ்த்து ; | ,, 8-10 | |

| | | |
|---|---|---|
| கலை நிகழ்ச்சி ; | இரவு மணி 8-15 | இசைச் சொற்பொழிவு :<br>'முத்தமிழ் வித்தகர்'<br>திரு. K. குணபூஷணம்,<br>வேலூர்.<br>"அழகைத் துறந்த அணங்கு"

ஏழாம் திருநாள் 17—1—94 திங்கட்கிழமை

திருமுறை விண்ணப்பம் ; 'தேவார இசைமணி''

மாலை மணி 5-00 திரு. திருஞானசம்பந்தமூர்த்தி ஓதுவார்,
திருமுறைப் பணியாளர்,
அருள்மிகு சந்திவிநாயகர் திருக்கோயில், திருநெல்வேலி.

வரவேற்புரை : ,, 6-00 தவத்திரு. மாசிலாமணித் தம்பிரான்,
ஆதீனக் கிளை மடம், புளியங்குடி.

'சிலைமீட்ட செம்மல்'

சிறப்புரை : ,, 6-10 முனைவர். திரு. இரா. நாகசாமி,
முன்னாள் இயக்குநர்,
தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை,

சொற்பொழிவு : ,, 6-40 முனைவர். திரு. N. சேதுராமன்,
உரிமையாளர் : ராமன் & ராமன்,
கும்பகோணம்.
'' கல்வெட்டுகள் காட்டும் சைவ சமயம் ''.

மகிழ்வுரை : ,, 8-00 திரு. S. இராதாகிருஷ்ணன், M. A., M. Ed.
தமிழாசிரியர்,
ஆதீனம் மேனிலைப் பள்ளி, திருவிடைமருதூர்.

குருமரபு வாழ்த்து : ,, 8-10

கலை நிகழ்ச்சி ; ,, 8-15 பரத நாட்டியம் : நிருத்திய சுதா குழுவினர், சென்னை.

எட்டாம் திருநாள் 18—1—94 செவ்வாய்க்கிழமை

திருமுறை விண்ணப்பம் ; "தேவார இசைமணி"

மாலை மணி 5-00 திரு. V. பாலசுப்பிரமணிய ஓதுவார்
திருமுறைப் பணியாளர், அருள்மிகு தாயுமானவர் திருக்கோயில்,
திருச்சிராப்பள்ளி.

வரவேற்புரை : ,, 6-00 தவத்திரு. சுந்தரமூர்த்தித் தம்பிரான்
ஆதீனக் கிளைமடம் (அருள்திரு. மெய்கண்டார் சமாதித் திருக்கோயில்)
திருவெண்ணெய்நல்லூர்.

சிறப்புரை ; ,, 6-10 திரு. K. சுப்பையா, இ. கா. ப,
துணை காவல்துறைத் தலைவர், திருச்சி சரகம்.

"சொல்லின் செல்வர்"

சொற்பொழிவு : ,, 6-40 திரு. கி. நடராசன், M. A., M. Phil.,
பேராசிரியர், பெரியார்-ஈ. வே. ரா. கல்லூரி,
திருச்சிராப்பள்ளி.

"கரும்பினில் கட்டி போல்வார்"

மகிழ்வுரை : ,, 8-00 திரு. S. மோகன், M. A., M. Phill.,
தமிழாசிரியர், ஆதீனம் மேனிலைப்பள்ளி, திருவிடைமருதூர்.

குருமரபு வாழ்த்து : ,, 8-10

---

கலை நிகழ்ச்சி : ,, 8-15 நாட்டிய நாடகம் : "திருமூலர் திருமந்திர மாலை"
அபிநய நாட்டியாலயா சென்னை.

ஒன்பதாம் திருநாள் 19—1—94 புதன் கிழமை

| | |
|---|---|
| திருமுறை விண்ணப்பம் : | ' தேவார இசைமணி ' |
| மாலை மணி 5-00 | திரு. பூபாலன் ஓதுவார் |
| | திருமுறைப் பணியாளர், கந்தகோட்டம், காஞ்சிபுரம். |
| வரவேற்புரை : ,, 5-30 | புலவர் தவத்திரு. சுயம்புநாதத் தம்பிரான் |
| | திருவாவடுதுறை. |
| சிறப்புரை 5-40 | திரு. A M. சுவாமிநாதன், இ. ஆ. ப. |
| விழா மலர் வெளியிடுபவர்., 5-45 | அரசு செயலர், கூட்டுறவுத்துறை. |
| விழா மலர் : | திருமந்திரம் முதல் மூன்று தந்திரங்கள் - பஞ்சாட்சரதீப உரையுடன் ((மூன்றும் பதிப்பு) |
| விழா மலர் முதற்படி பெறுபவர் | முனைவர். திரு. ஔவை நடராசன், |
| ஏற்புரை : 6-15 | துணைவேந்தர்: தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர். |
| சொற்பொழிவு : ,, 6-45 | ' நாவுக்கரசர் ' |
| | முனைவர். திரு. சோ. சத்தியசீலன், M. A., Ph.D., |
| | முன்னாள் முதல்வர், உருமு தனலட்சுமி கல்லூரி, திருச்சிராப்பள்ளி |
| | " இடர்தனைக் களிய வேண்டில் இறைவனை ஏத்துமின் " |
| மகிழ்வுரை : ,, 8-00 | ஆதீனப்புலவர் |
| | திரு. ஆதி. முருகவேள், M, A., |
| குருமரபு வாழ்த்து : ,, 8-10 | ஆசிரியர் 'சிவநெறி' திருச்சிராப்பள்ளி |

கலை நிகழ்ச்சி : இரவு மணி 8-15 இன்னிசை : ஆதீன இசைப்புலவர்,

டாக்டர். திரு. சீர்காழி. ஜி. சிவசிதம்பரம், M. D. சென்னை

## குருபூசைத் திருநாள்

காலை மணி 7-35 நமசிவாயமூர்த்திகள் தோத்திர நூல்கள் பாராயணம்
ஆதீனம், ஆதீனத் திருக்கோயில் திருமுறைப் பணியாளர்கள்.

" 10-30 குருபூசை

" 11-40 " கணையாழி வழங்கல் "

1993-ஆம் ஆண்டு 12, 10-ஆம் வகுப்புகளுக்கான அரசுப் பொதுத் தேர்வுகளில் அதிக மதிப்பெண்கள் பெற்ற திருவிடைமருதூரிலுள்ள திருவாவடுதுறை ஆதீனம் மேனிலைப் பள்ளி மாணவ மாணவியர்க்கு கணையாழிகள் வழங்கி ஆசியருளல்.

நண்பகல் " 12-00 மாகேசுவரபூசை

இரவு " 8-30 கலை நிகழ்ச்சி

ஆதீன வித்துவான், நாதபிரம்மம்
திரு. குன்னக்குடி வைத்தியநாதன் குழுவினர் – வயலின் இன்னிசை

இரவு " 10-30 பட்டணப்பிரவேசம்

---

சிவாலய வழிபாடு முதலாய சைவ ஒழுக்கம் உடையவர்களுக்குச் சிவதீட்சை வழங்கலும் சிவபூசை எழுந்தருளுவித்தலும் ஆதீனத் திருமடாலயத்தில் 10—3—94 மகா சிவராத்திரி நாளில் நிகழும்.

